உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீ நீலகண்டசிவாசாரியர்

அருளிய

பிரமசூத்திர

# சிவாத்துவித சைவபாடியம்.

---

இது

## காசிவாசி. செந்திநாதையரால்

தமிழில் மொழிபெயர்த்து

தேவிகோட்டை

ம-ா-ா-ஸ்ரீ அரு. அரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி

தமது

திருமங்கலம்

செந்திநாதசுவாமி யந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

---

பிலவங்கஹு ஐப்பசிமீ

௧௯௦௭.

ௐ

# உபோற்காதம்.

---o---

ஸ்ரீவேதவியாசமுனிவர்பிரான் அருளிய பிரமசூத்திரத்துக்கு ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் வரைந்தருளிய சைவபாடியம் சைவசித்தாந்தத்துக்கு ஓர் பேரரணாய் ஓங்கியது. இது அத்தியாயங்களும், பாதங்களும், அதிகரணங்களும் தம்முள்ளே இயைபுவாய்ப்பச் சிறப்புற அமையப்பெற்றது. சூத்திரங்களைத் தொடர்ந்து பொருட்டிரிவுபடுத்தாது சத்தியார்த்தஞ் செய்யுந் திட்பம் படைத்தது. மகார்த்தங்களையுடைய அளவிறந்த நியாயங்கள் பொதியப்பெற்ற பொற்பினைத் தன்னுள்ளே கொண்டு நிற்பது. எளிதாய லளித மொழிகளாற் றொடுக்கப்பெற்ற பெருமையிற் சிறந்தது. சுருங்கிய சொற்களிலே விரிந்தபொருள் பொதியப்பெற்ற நுட்பம் வாய்ந்தது. சிவரத்தினமாகிய சிவசப்தங்களால் மிகுதியும் புனையப்பெறும் பொலிவினையுற்றது. திராவிடவேதங்களாகிய தேவாரதிருவாசகமுதலிய அருட்பாக்களின் உண்மைப் பொருள்களைத் தன்னுள்ளே விளங்கக் காட்டுமியற்கையுடையது. சைவசித்தாந்த சாஸ்திர தத்துவப்பொருள்களைத் தன்னுள்ளே இலங்கவைக்குந் தர்ப்பண நிகர்த்தது. "செவிச்செல்வம் செல்வத்துட் செல்வம்" என்று வாழ்த்துமாறு, கேட்போர் செவிகளையெல்லாம் மாதுரியத்தினால் நிறைத்து ஆனந்தபாஷ்பம் உகுப்பச் செய்வது. சம்சார துக்க சாகரத்துழலும் மாநுடரை முத்திக்கரை நண்ணுவிக்கும் ஓர் அரும் புணையாய்ப் பொலிந்தது. வறியார்க்கு மகாநிதி வாய்த்தாற் போல, முமூட்சுக்களுக்குத் தன்மீது பேரன்பு மீதூரச் செய்யுமியல்பினையுடையது. எக்காலமுந் தன்னைச் சிரவணஞ் செய்தலாதி ஞானபூசையிற் றலைப்பட்டோரை நிதித்தியாசன ஞானயோகத்தில் முதிர்ந்துநிற்க உந்துவது. எவ்வுலகுக்கும் மேலாகிய சிவபுரத்தின்கண்ணே தேகவியோககாலத்தில் நீடு வாழச்செய்வது. இத்துணைப் பெரிய அரியபாடியம் வடமொழியிலிருப்பதால் இதன் மேன்மை யாவரும் அறிதல் கூடாமையின், இதனைத் தமிழ்வசனநடையில் மொழிபெயர்த்து அச்சிலேற்றிப் பிரகடனஞ் செய்ய வேண்டுமென்னும் ஆசையினால் மீதூரப்பெற்றேம். அறிவினாலும், பொருளினாலும், மற்றெவ்வாற்றானும் வலி குன்றிய எம்போலியர்க்கு அங்ஙனம் பிரகடனஞ் செய்தல் பெரிதும் கஷ்டமாயவிடத்தும், "பாருக்குளே கலியுகத்திலே கண்கண்ட பரமதெய்வமும்," "செந்தின் மேய வள்ளிமணாள" ருமாகிய செந்திநாதசுவாமியின் திருவருள்வன்மையால் இது முற்றுப்பெற்றதெனச் சிவநேயர் யாவரும் உணர்ந்துகொள்வாராக.

அங்கங்கே மொழி பெயர்ப்புக்களிற் பிழைகள் நுழைந்திருப்பின், அவற்றை அன்பர்கள் எமக்குத் தெரிவிப்பார்களாயின், இரண்டாம் முறை அச்சிடுங்கால் திருத்தி அச்சிடுவிப்பேம்.

இப்பாடியத்தில் அங்கங்கே மொழி பெயர்ப்பில் நேர்ந்த பிழைகளைத் திருத்தி மிகுதியும் உதவிபுரிந்த மதுரையைச் சார்ந்த பழங்கானத்தம் பிரம்மஸ்ரீ சே. சேஷாசாஸ்திரியாரவர்கட்கு யாம் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேம்.

திருப்பரங்குன்றம், }
பிலவங்கஹு ஐப்பசிமீ } ஸ்ரீகாசிவாசி—செந்திநாதையர்.

# குறிப்புவிளக்கம்.

இரு. சங்
இரு. வே } =இருக்குவேதம்

இலிங். உத்=இலிங்கபுராணம் உத்தர பாகம்

ஈசா=ஈசாவாசியோபநிடதம்

ஐத=ஐதரேயோபநிடதம்

கட=கடோபநிடதம்

கண்.சா=கண்ணுவசாகை(பிருகதாரணியோபநிடதம்)

கந். உமை=கந்தபுராணம் உமைவருபடலம்

கந். அன=கந்தபுராணம் அனந்தன் சாபநீங்கு படலம்

கவு. த=கவுதம தருமசூத்திரம்

காமி.மந்=காமிகாகமம் மந்திராவதாரப் படலம்

கூர்=கூர்மபுராணம்

கேந=கேநோபநிடதம்

கைலா=கைலாசசங்கிதை

கைவ=கைவல்லியோபநிடதம்

கௌஷீ=கௌஷீதகிப்பிராம்மணம்

சங்=சங்கராசாரியர் சூத்திரபாடியம்

சங்.சம்=சங்கரசங்கிதை சம்பவகாண்டம்

சங். த=சங்கரசங்கிதை தக்ஷகாண்டம்

சத. பி=சதபதப்பிராம்மணம்

சாந்=சாந்தோக்கியோபநிடதம்

சுவே=சுவேதாசுவதரோபநிடதம்

சௌ=சௌரபுராணம்

தென். சிவ.போ=தென்மொழிச் சிவஞானபோதம்

தை.
தைத். ௧ } =தைத்திரீயோபநிடதம் சிக்ஷாவல்லி

தைத். ௨=தைத்திரீயோபநிடதம் பிரமானந்தவல்லி

தைத். ௩=தைத்திரீயோபநிடதம் பிருகுவல்லி

தைத். சங்=யசுர்வேதம்

நன்=நன்னூல்

பவுட்=பவுட்கராகமம்

பா. வி=பாணினி வியாகரணம்

பா
பார. அநு } =பாரதம் அநுசாசனி பருவம்

பிரு=பிருகதாரணியோபநிடதம்

பிர=பிரசிநோபநிடதம்

பெரி. கண்= பெரியபுராணம் கண்ணப்பநாயனார் புராணம்

மகா
மகாநா. } =மகாநாராயணோபநிடதம்

ம. ஆ=மகாபாரதம் ஆதிபருவம்

மநு=மநுஸ்மிருதி

ம. து=மகாபாரதம் துரோணபருவம்

முண்=முண்டகோபநிடதம்

மைத்=மைத்திராயணோபநிடதம்

யசுர். வே=யசுர்வேதம்

வட. சிவ. போ=வடமொழிச் சிவஞானபோதம்

வரு=வருணபத்ததி

வாயு. ச. பூ
வாயு. பூ } =வாயுசங்கிதை பூருவபாகம்

வாயு. உத்=வாயுசங்கிதை உத்தரபாகம்

வி=வித்தியேசுவரசங்கிதை

வே. சூ=வேதாந்தசூத்திரம் (பிரமசூத்திரம்)

☞ **இலக்கம்** என்று குறிக்கப்படுவன உபநிடத உபக்கிரமணிகையினும், பிரமசூத்திர உபக்கிரமணிகையினுங் குறிக்கப்பட்டவைகளேயாம்.

சிவமயம்.

---

### பிரமசூத்திர

# சிவாத்துவித சைவபாடியம்

அருளிய

## ஸ்ரீ நீலகண்டசிவாசாரியர்.

---

## பிரமசூத்திரம்.

---

"சிவபெருமான் பிரமா விஷ்ணு என்னும் இருவரையும் விளித்து, நீவிர் இருவரும் முறையே மநுவும் வியாசருமாகத் துவாபரயுகங்கடோறும் உதித்து, வரையறைப்படாத வேதங்களையும் சாஸ்திரங்களையும் (உபநிடதங்களையும்) சுருக்கி, கலியுகத்திலே அறிவு சுருங்கிய மானுடர் அறிவுக்கேற்றவாறு (அந்தக்) கன்மத்தையும் பிரமத்தையும் விதிக்குஞ் சாஸ்திரங்களைச் சூத்திரரூபமாக மற்றைய இருடிகளோடியைந்து விரைந்து செய்யுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தனர்.

தாநுவாச மஹாதேவ: ப்ருஹத்கம்பீரயா கிரா| விஷ்ணோ விதே யுவாம் பூத்வௌ த்வாபரே த்வாபரே யுகே| வ்யாஸோ மநுஶ்ச ஸம்பூய வேதஶாஸ்த்ரே உபே யுவாம்| ஸம்க்ஷிப்ய காலம் ஸம்ப்ராப்ய நந்தே தே யதா ந்ருணாம்| கலியுகே க்ஷுத்ரே பத்தி விஹீநாநாம் கர்மணோ யுகே| கர்மப்ரஹ்மவிதாத்ருணாம் ஶாஸ்த்ராணாம் ஸூத்ரவத்தாநா| ருஷிபி: ஸஹிதாவத்ய ஶீக்ரம் கார்யத மர்ஹத| (சங். சம். உ. கஅ—உக)

என்று கூறப்பட்டது. ஆகவே, சிவபெருமான் ஆஞ்ஞாபிக்க, விஷ்ணு தமக்குரிய பல கலைகளுள்ளே ஓர் கலைகொண்டு வியாசராகத் திருவவதாரஞ் செய்து பிரமசூத்திரஞ் செய்தருளினர்.

பிரமசூத்திரஞ் செய்யுமாறு ஆஞ்ஞாபித்தவர் சிவபெருமான். இவ்விஷயத்தை உணர்த்திய கந்தபுராணமும் சிவபுராணத்ததே.

𑌅𑌥𑌾𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌾 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍀 𑌸𑌂𑌜𑌕𑍇।
(கைலா. ௮. ௮௫)

"அதாதோ பிரம்ம ஜிஞ்ஞாசா" எனப் பிரமசூத்திரத்து முதற்சூத்திரத்தை எடுத்துக்கூறிய கைலாசசங்கிதையும் சைவபுராணத்ததே. சிவபெருமானல் ஆஞ்ஞாபிக்கப்பட்ட விஷ்ணுவும் (௯௫௯-ஆம் இலக்கத்திற்) கூறப்பட்டவாறு சைவரே. சூத்திரஞ் செய்த முனிவராகிய வியாசருஞ் சைவரே. அவரால் இயற்றப்பட்ட பிரமசூத்திரமும் (௯௭௯—௪௯௮-ஆம் இலக்கம் வரையிற் கூறப்பட்டவாறு) சிவபரத்ததேயாம்.

## சிவாசாரியர்.

𑌗𑍌𑌰𑌵𑌾𑌦𑍇𑌵 𑌸𑌂𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌶𑌿𑌵𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌤𑌃।
𑌸𑍍𑌵𑌯𑌮𑌾𑌚𑌰𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌆𑌚𑌾𑌰𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌤𑍍𑌯𑌪𑌿। 𑌆𑌚𑌿𑌨𑍋𑌤𑌿 𑌚
𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑍇𑌨 𑌚𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 (இலிங். உத். ௨௦. ௧௧, ௨௦)

"கவுரவமாயிருத்தலினற் சிவாசாரியர்க்கு குரு என்னும் இப்பெயர் எய்திற்று; மற்றோர் பிரகாரத்தால் அன்று; தாம் நன்னெறிக்கண் ஒழுகிப் பிறரையும் நன்னெறிக்கண் ஒழுகச் செய்கின்றமையானும், சாஸ்திரார்த்தங்களை (இதயத்திலே) தொகுத்துவைத்தலானும் ஆசாரியர் எனப்படுகின்றனர்" என்று இலிங்கபுராணத்திற் கூறப்படுகின்றது.

𑌬𑌿𑌂𑌦𑍋 𑌸𑍍𑌤𑍁𑌕𑍍𑌷𑍋𑌭𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌭𑌵𑌕𑌾𑌲𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌂 𑌵𑌿
𑌦𑍍𑌯𑍇𑌶𑌾𑌦𑌿 𑌸𑌾𑌦𑌾𑌖𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾 𑌈𑌶𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌕𑌾𑌲𑌸𑍍𑌤𑌥𑌾 𑌕𑍍𑌷𑌿𑌤𑍌। 𑌈𑌶𑍍𑌵𑌰
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 𑌸𑌦𑌾𑌦𑌿𑌨𑍍𑌯𑍋𑌹𑍇𑌨 𑌜𑌾𑌤𑍇𑌶 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁 𑌸𑌂𑌭𑌵𑌾𑌤𑍍 𑌶𑍍𑌰𑍀𑌕𑌣𑍍𑌠
𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌷𑍁 𑌯𑌾𑌤𑌿 𑌨𑌾𑌶𑍇 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌰𑌯𑍇।

"நிஷ்களசிவத்தினின்று உதித்த சதாசிவர் பிந்துக்ஷோபஞ் செய்த காலத்து, சைவகாயத்திரி உண்டாயிற்று; இந்தக் காயத்திரியினல் அதிட்டிக்கப்பட்டது சைவசந்தானம்; மேலும், அவ்விந்துக்ஷோபகாலத்திலே வைந்தவசரீரிகளாகிய *வித்தியேசுரர் எண்மர் உதித்தனர்; இவருள்ளே ஈசுரதத்துவத்தினராகிய அனந்தேசுரராற் பிரமாண்டமத்திய கைலாசாதிபதித்துவத்தோடு ஸ்ரீகண்டருத்திரர் உதித்தனர்; ஸ்ரீகண்டருத்திரரினின்று விஷ்ணுவும், விஷ்ணுவினின்று பிரமாவும், இவரினின்று இந்திராதி தேவரும்

* வித்தியேசுவரர் எண்மராவார் அனந்தர், சூக்குமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி எனவிவர்.

உற்பத்தியாயினர்; மீட்டும் ஸ்ரீகண்டருத்திரரினின்று துருவாசர் உதித்தனர்; இவரோடு ஸ்ரீகண்டராலே தீக்ஷிக்கப்பட்ட இருடிகள் கவுசிகர், காசிபர், பாரத்துவாஜர், கவுதமர், அகஸ்தியர் என்னும் ஐவர். இவர்களுக்கும் இவர்கள் சீடர்களாகிய சநற்குமாரர், சநகர், சநாதனர், சநந்தனர் என்போர்க்கும் பாரதவருஷத்துப் பரதகண்டத்திலே முக்கியமாகிய கதம்பவிருக்ஷத்தினுல் அலங்காரமுற்ற ஆமர்த்தகம் எனப் பெயரிய ஆச்சிரமம் ஒன்று துர்வாசரால் ஸ்தாபிக்கப்பட்டது" என்று சித்தாந்தசாராவளியிற் கூறப்படுகின்றது.

அநாதிசைவ ஆதிசைவோ மஹாசைவஸ்ததா பர:। அநு
சைவோ(அ)வாந்தரசைவஸ்து ஸ சைவஸ்து ஸதாசிவ:। ஆதிசைவோ
த்விதீயஸ்து ஸ ஸிவப்ராஹ்மண: ஸ்ம்ருத:। ஆதௌ ஸதாசிவேநை
வ தீக்ஷித ஸ்வாதிசைவக:। கௌசிக: காஸ்யபஸ்சைவ பாரத்வா
ஜோ(அ)த கௌதம:। அகஸ்த்யஸ்சைவ பஞ்சைதே பஞ்சவக்த்ரேஷு
தீக்ஷிதா: (கார. பூரு. உகூ. க—ச)

(அநாதிசைவர், ஆதிசைவர், *மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர் என்னும் ஐவருள்ளே) அநாதிசைவர் சிவபெருமான், இவர் சதாசிவர் எனப்படுவர்; ஆதிசைவர் சிவப்பிராமணர்; இவர்கள் சதாசிவராலே தீக்ஷிக்கப்பட்ட கவுசிகர், காசிபர், பாரத்துவாஜர், கவுதமர், அகஸ்தியர் என்னும் ஐவர்" என்று காரணுகமங் கூறுகின்றது.

சதாசிவமூர்த்தியுடைய ஐம்முகங்களினின்றும் தீக்ஷிக்கப்பட்டவர் கவுசிகர் முதலாயினோர் என்று இங்கே கூறி, மேலே ஸ்ரீகண்டமூர்த்தியால் உபதேசிக்கப்பட்டவர் கவுசிகர் முதலாயினோர் என்று கூறினமை மலைவாம் பிறவெனின், ஆகாது;

தத்ஸத்யாயிஷ்டித ப்ரஸவத்த்வேந ரவி விஹித:। தஸ்மாத் நாமா
தத்ரைவ ஸ்ததாயுக் கரணக்ஷம:। தத்ஸர்வ்யவ்யவஹாரஸ்ச தஸ்மாஜ்ஞ
வசிவாமக: (வாயு. பூரு. கஉ, கூ, எ)

"பரமசிவனுக்குரிய எல்லாப் பெயர்களும் வடிவமும் தொழிலும் பெற்றுடையர் ஸ்ரீகண்டருத்திரர்" என்று வாயுசங்கிதோபப்பிருங்கணங் கூறு

---

* மகாசைவராவார் பிரமாவின் முகத்திற்றோன்றிய வைதிகப்பிராமணருள்ளே சிவதீக்ஷைபெற்றவர்; அநுசைவராவார் சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும்; அவாந்தரசைவராவார் சிவதீக்ஷை பெற்ற சூத்திரர். பிரவரசைவராகிய சிவதீக்ஷை பெற்ற அநுலோமரும், அந்தியசைவராகிய சிவ தீக்ஷை பெற்ற மற்றையோரும் உபலக்ஷணயினுற்றழுவப்படுவர்.

மாறு, இவர்க்குஞ் சதாசிவர் என்னும் பெயரும், ஐம்முகங்களும், பிறவும் உளவாம் என்று கோடற்பாற்றுமாதலின்.

பெயரினால் ஒற்றுமையுடையரேனும் சிவசிருஷ்டர்களாகிய கவுசிகர் முதலாயினோரும் வேறு ; பிரமசிருஷ்டர்களாகிய கவுசிகர் முதலாயினோரும் வேறு.

இந்தச் சிவசிருஷ்டர்களாகிய கவுசிகர் முதலிய ஐந்து இருஷிகோத்திரத்தில் ஜனித்துச் சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆசாரியாபிஷேகம் பெற்றவர்களே சர்வாதிகாரிகள் என்றும், உத்தமோத்தம சிவாசாரியர்கள் என்றும், பரார்த்தப்பிரதிஷ்டை பரார்த்தபூசைகள் செய்தற்கு உரியவர்கள் என்றும், மற்றையோர் அதற்கு உரியரல்லர் என்றும், அதனால் அவர்களே வேதாகம விற்பன்னர்களாகிக் கிருதகிருத்தியர்களாய் முப்பொழுதுஞ் சிவலிங்கத்தை அர்ச்சித்தலான் முப்போழுதுந் திருமேனி தீண்டுவோர் என்றும் சொல்லப்படுவர். இவர்களை, "முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்க்கடியேன்" என்று ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனாரும்,

நெறிவார் சடையரைத் தீண்டிமுப் போதுநீ டாகமத்தி
னறிவால் வணங்கியர்ச் சிப்பவர் நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே.

என்று நம்பியாண்டார்நம்பியும்,

செப்பலருந் தவமுடைய செம்மையாளர்
சிறுகாலே மலர்வாவி திகழமூழ்கி
யொப்பிறு நீறணிந்து நியதியாற்றி
யோவாமே யைந்தெழுத்து முரைத்துமேன்மைத்
தப்பில்சிவா கமவிதியா லின்பாலன்பாந்
தன்மையா னன்மையாந் தகையாரென்று
முப்பொழுதுந் திருமேனி தீண்டவல்ல
முறைமையார் பிறவிதெறுந்திறமையாரே.

என்று உமாபதிசிவாசாரியசுவாமிகளும்,

தெரிந்துணரின் முப்போதுஞ் செல்கால நிகழ்காலம்
வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்
விரும்பியவர்ச் சனைகள்சிவ வேதியர்க்கே யுரியனவப்
பெருந்தகையார் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ.

என்று சேக்கிழார்நாயனாரும் துதித்தமை காண்க.

மேலே கூறிய ஆமர்த்தகமடத்தினின்று புஷ்பகிரி, கோளகி, இரணபத்திரம் என மூன்று மடங்கள் பிரிந்தன. ஆமர்த்தகமுதலிய நான்கு மடங்கட்கும் சநற்குமாரர் முதலிய நால்வரும் அதிபதிகளாயினர்.

ஆமர்த்தகமடத்துக்கதிபதி சநற்குமாரர்; அதற்குக் கதம்பவிருக்ஷம் உள்ளது; அவர் சந்ததியார் அம்மடத்துக்கதிபதிகளாயினர்.

புஷ்பகிரிமடத்துக்கதிபதி சநகர்; அதற்கு அர்ச்சுனவிருக்ஷம் உள்ளது; அவர் சந்ததியார் அம்மடத்துக்கதிபதிகளாயினர்.

கோளகிமடத்துக்கதிபதி சநாதனர்; அதற்கு ஜம்புவிருக்ஷம் உள்ளது; அவர் சந்ததியார் அம்மடத்துக்கதிபதிகளாயினர்.

இரணபத்திரமடத்துக்கதிபதி சநந்தனர்; அதற்கு வடவிருக்ஷம் உள்ளது; அவர் சந்ததியார் அம்மடத்துக்கதிபதிகளாயினர்.

கோதாவரிதீரத்திலே மந்தரகாளீசுவரத்தைச் சூழ்ந்து அவ்வாமர்த்தக முதலிய * நான்கு மடங்களும் இருந்தன.

## ஸ்ரீ நீலகண்டசிவாசாரியர்.

இந்நான்கு மடங்களுக்கு அதிபதிகளாயிருந்த சிவத்துவிஜர் எனப்படும் சிவாசாரியர் வகுப்பைச் சார்ந்தவர் பிரம சூத்திர சிவாத்துவித சைவபாடியஞ் செய்த ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்.

ஶ்ரீதுர்வாஸா: பைங்கலாசார்ய உக்ரஜ்யோதி ஸத்ய
ஜ்யோதி ஶிவாசார்யகா:। ஶ்ரீகண்ட ஶ்ரீவிஷ்ணுகண்ட ஸோமபோஜ
வித்யாகண்டோ ஜ்ஞாநகண்டோ நீலக:। ஜ்ஞாதாஶேஷ ஶ்ருதஸ்ம்ருத்யாகம
ஸூத்ரார்த்தாஶேஷ க்ஷோணிகா ந்யுத்புஷ்பமௌள:। ஜ்ஞாதாநந்தஶ்ச
தாநாநுஷ்டாநாத் நந்தாந்தே †தேஶிகேந்த்ரா ந்ருஸிம்ஹநாத(வரு.)

"துருவாசர், பைங்கலசிவாசாரியர், உக்கிரஜ்யோதிசிவாசாரியர், சத்தியஜ்யோதிசிவாசாரியர், ஸ்ரீவிஷ்ணுகண்டசிவாசாரியர், வித்தியாகண்டசிவா

---

* இங்ஙனம் எகான்மவாதாசாரியர்களுக்கும் புஷ்பகிரி முதலிய மடங்கள் இருந்தனவாக அறியப்படுகின்றது.

† ஶிவஹஸ்தம் ஸமுத்ஸ்ருஜ்ய ஶிரஸா ஶ்ரீமதி தேஶிக:।
ஶிவபாவம் ஸமாபந்ந ஶ்ரீவாசார்ய தூதிஶேஷு।
(வாயு. உத். கஎ. கூ)

என்னுஞ் சுலோகத்தினால் தேசிகர் என்பதும் சிவாசாரியர்க்கு மற்றோர் பெயர்.

சாரியர், இராமகண்டசிவாசாரியர் பெயர்களோடு ஸ்ரீகண்டசிவாசாரியருடைய பெயரும் ஒருங்கு காணப்படுகின்றது.

கூர்மபுராண பூருவபாகத்து ஐம்பத்துமூன்றும் அத்தியாயத்தினும், இலிங்கபுராண பூருவபாக ஏழாம் அத்தியாயத்தினும், (௩எஉ-ஆம் இலக்கத்திற் கூறப்பட்டவாறு) வாயுசங்கிதையினுங் காணப்படும் சுவேதர் முதலிய யோகாசாரியர்களுள்ளே முதற்கணின்ற சிவாவதாரரூப சுவேதாசாரியரே ஸ்ரீநீலகண்டசிவாசாரியருடைய ஆசாரியர். இவ்வுண்மை பாடியத்து முதற்கண்ணும் இறுதிக்கண்ணும் அச்சுவேதாசாரியரை ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் வழிபட்டிருத்தலானும், அது பின்னர்ச் சிவார்க்கமணிதீபிகையில் விளக்கப்பட்டமையானும் அறியப்படும். இவர் இன்ன இடத்திலே, இன்ன காலத்திலே அவதரித்தார் எனப் புலப்படவில்லை. அங்ஙனமாகவும், கோகர்ணத்திலே ஏகான்மவாதியாரோடு வாதஞ் செய்தனர் என்று சங்கரதிக்விஜயத்திற் கூறப்படுகின்றது. இது விசுவசிக்கற்பாலதொன்றன்று.

நீலகண்டபாடியத்து (௩. ௩. ௩உ) ஆஞ் சூத்திரபாடியத்திறுதியினும், (௪. உ. க௩) ஆஞ் சூத்திரபாடியத்திறுதியினும் "கேசித்" (கெவிக) என்றற்றொடக்கத்தனவாகவும், (௪. ௩. க) ஆஞ் சூத்திரபாடியத்திறுதியின் "நிரங்வயோபாசகாநாம்" (நிரநயொவாஸகாநாஂ) என்றற்றொடக்கத்தனவாகவும், (சிவார்க்கமணிதீபிகையில் ௩. ௩. ௩உ. ஆஞ் சூத்திரபாடியத்திறுதியில் "கேஷாஞ்சித்" (கெஷாஂவிக) என்றற்றொடக்கத்தனவாகவும்) வரையப்பட்டவை பிரக்ஷிப்தவாக்கியங்களேயாம். இவை ஏகான்மவாதிகளாலே தம்மதச் சார்பாக நமது பிரமசூத்திர சைவபாடியத்திறுதிகளிலே முன்பின் பாடியக் கருத்துக்கு முற்றும் விரோதமுறப் புகட்டப்பட்டன என்பது ஒருதலையாம். இஃதிங்ஙனமாயின், ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் அவ்வேகான்மவாதியார் காலத்திருந்து, கோகர்ணத்திலே அவரோடு வாதித்து அபசயப்பட்டிருப்பாரேல், அச்சிடப்படாதனவாய், கைகளினல் மிகச் சிரமத்தோடு எழுதப்பட்டுச் சேமிக்கப்பட்டுச் சிற்சிலவாய்க் கிடந்த சைவபாடிய ஏடுகள் அக்காலத்தில் ஏகான்மவாதவைரிகளாலே துவம்சஞ் செய்யப்படாது உயிரோடு விடுபட்டிருப்பனவாமோ!! ஆகலின், நமது சிவாசாரியர் ஏகான்மவாதியார் காலத்துக்கு முற்பட்ட நீடியகாலத்திருந்தார் என்றும், அக்காலத்திலே நீலகண்டபாடியம் மிகுத்துப் பரந்து படிக்கப்பட்டிருந்தன என்றும், அதனாலேதான் மேலே கூறியவாறு கரலிகிதசைவபாஷ்யப் பிரதிகளுட் புகட்டுரை வாக்கியங்கள் இயைக்க வேண்டி நேர்ந்தன என்றும் அநுமானிக்கப்படுகின்றது. இந்நீலகண்டபாடியத்தை ஏகான்மவாதியார் படித்துப் பார்த்து அதின் உண்மைப்பொருள்களை நன்கு அறிந்துகொண்ட பின்னர்த்தான், ஏகான்மவாதச் சார்பாகத் திரித்து அப்பாடியத்தைக் கண்டித்தவர்போலக்

காட்டுதற்கு ஒவ்வோர் அத்தியாயத்து ஒவ்வோர் பாதத்தினும் சிற்சில சூத்திரங்களைப் பிளந்தும், சிற்சிலவற்றை ஒழித்தும், சிற்சிலவற்றைப் புதிதாகப் படைத்தும், சிற்சில அதிகரணங்களை நீட்டியும், சூத்திரங்களுக்கு ஒவ்வாத் திரிபர்த்தங்கள் செய்தும் ஏகான்மவாதபாடியஞ் செய்தனர்.

கங்காதீரத்திலே ஏகான்மவாதியாரோடு *வேதவியாசர் வாதஞ்செய்து, அவ்வேகான்மவாதியாரை இந்த வியாசர் வாதத்திலே எட்டுநாள் வரையும் செயிக்கமாட்டாதவராயவிடத்தும், அவ்வேகான்மவாதியார் வேண்டுகோளுக்கிசைந்து அவ்வியாசர் அவர் பாடியத்தை ஒரு முகூர்த்தத்துள்ளே உற்றுநோக்கி, "சங்கரரே! நீவிர்போலும்!! இன்றேல் எமது கருத்தினை உள்ளவாறு இங்ஙனம் வெளிப்படுத்தலாற்றீர்! இதனைப் பார்த்ததினால் எமது சந்தேகங்களும் ஒழிந்துபோயின" என்று சங்கரவிஜயத்திற் கூறப்படலான், வேதாந்தசூத்திரத்துக்கு ஏகான்மவாதியார் செய்த பாடியமே மெய்ப்பொருள் பொதிந்த தென்பது ஏகான்மவாதிகள் கருத்து.

இராமாநுசாசாரியர் தாம் பிரமமீமாஞ்சைக்கு வைணவபரமாகப் பாடியஞ் செய்தற்குப் போதாயனவிருத்தி வேண்டும் என்று எங்குந் தேடி அகப்படாமையின், அவர் சாரதாபீடத்துக்குப் போக, அங்கே சரசுவதி அதனை எடுத்துக்கொடுக்கப்பெற்று, அதனை ஒருதரம் விமரிசித்து, பின்னர் அவ்விருத்தியின் தாற்பரியத்தை அநுசரித்துப் பாடியஞ் செய்தனர் என்றும், சில காலங்கழித்த பின்னர்த் திக்குவிஜயஞ் செய்து அங்கங்குள்ள வித்துவான்களைச் செயித்துவிட்டுச் சாரதாபீடத்துக்குச் செல்ல, சரசுவதி வாசலிற் பிரத்தியக்ஷமாகி அந்தரதிகரணத்து (க. க. உக)ஆஞ் சூத்திரபாடியத்தில் உதகரிக்கப்பட்ட

கஸ்²யாஸம் புண்டரீக மேவாக்ஷிணீ |

என்னும் இம்மந்திரத்தின் பொருள் என்னை என்று இராமாநுஜரை வினவ, அதற்கு இராமாநுசர் "கம் என்றால் ஜலம், கபி என்றால் அந்த ஜலத்தைக் கிரணங்களினாற் பானஞ் செய்கின்ற சூரியன், கப்பியாசம் என்றால் அந்தச் சூரியனால் மலர்ந்த தாமரைப் புஷ்பம், இதனை ஒத்த நேத்திரங்களையுடையவர் சூரியமண்டலமத்தியிலிருக்கும் நாராயணர்" என்று அர்த்தஞ் சாதிக்க, அதனைக் கேட்ட சரசுவதி, "நீவிர் இந்தச் சுருதிக்கு வாஸ்தவார்த்தங் கூறினமையின், உமக்கு ஸ்ரீபாடியகாரர் என்னும் திருநாமம் ஆகுக என்றும், இவர் சாதித்த ஸ்ரீபாடியத்தைத் தாம் சிரசில் வைத்துக்கொண்டு இதற்கு ஸ்ரீபாடியம் என்று திருநாமம் ஆகுக என்றும் பெயரிட்டனர்" என்றுங்

* இந்த வேதவியாசர் கற்பித வேதவியாசரன்றி பிரமசூத்திரமருளிய **வியாச**ரல்லரென்பது திண்ணம்.

கூறப்படுகின்றது. அதுகொண்டு, வைணவர் விசிட்டாத்துவித பாடியத்துக்கு ஸ்ரீபாடியம் என்னும் திருநாமம் உண்டாயிற்றென்றும், அதனால் இராமாநுசபாடியமே மெய்ப்பொருள் பொதிந்ததென்றும் வைணவர் கொள்வர்.

கம்பிபதி ரஶ்மிபி꞉ பிபதீதி கபி ராதித்ய꞉। தேநாபிகஸிதம் புண்டரீகம் யதா ஶோபதே ததா பரமேஶ்வரஸ்ய நேத்ர த்வயம்।

"நீரைக் கிரணங்களினாற் குடிக்கின்றமையிற் சூரியன் கபி எனப்படும்; இந்தச் சூரியனால் விகசிதமாய் தாமரை பிரகாசிக்குமாறு போல, சிவபெருமானுடைய இரு கண்களும் பிரகாசிப்பனவாயின" என்று (க. க. உக)ஆம் சூத்திர சைவபாடியத்தில் உண்மைப் பொருள் செய்தவர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர். இச்சிவாசாரியர் செய்த பொருளையே இராமாநுசர் படித்து ஞாபகத்தில் வைத்துப் பாடியஞ் செய்து, "கப்பியாசம்" (சா. க. கூ. எ) என்றற்றொடக்கத்தவற்றுக்கு யாது பொருள்? என்று வினவிய சரசுவதிக்கு அப்பொருளை ஒப்பித்தனர் எனலே யுக்தம்.

---

## சங்கராசாரியர் இராமாநுஜாசாரியர்களுக்கு
# ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்
## முற்பட்டவர்.

---

இராமாநுசர்க்குப் பிற்பட்டவர் நீலகண்டசிவாசாரியர் என்றும், அதுகொண்டுதான் அந்நீலகண்டசிவாசாரியர் பாடிய ஆரம்பத்து ஐந்தாஞ் சுலோகத்தினும், பாசுபத்தியதிகரணத்து (உ. உ. ௬அ) ஆஞ் சூத்திரபாடியத்தினும் "பூருவாசாரியர்" என்று வரைந்தமையான் அது அவர்க்கு முற்பட்டிருந்த இராமாநுசரையும் சங்கராசாரியரையும் குறித்ததாம் என்றும் வைணவரும் ஏகான்மவாதிகளுங் கூறின், அது பொருந்தாது. "பூருவாசாரியர்" என்று ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் உரைத்தமை சங்கராசாரியர்க்கு ஆசாரியர்களாய் முற்பட்டிருந்த ஏகான்மவாதப் பிரவர்த்தகர்களையேயன்றி மற்றியாரையும் குறித்ததன்றாம். (ச. உ. கஉ) ஆஞ் சூத்திரத்துக்கு ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் மத்தியந்தினசாகை கொண்டு வித்துவானுக்குத் தலைநாடிவாயிலாக உற்கிரமணம் உண்டென்று கூறிய பொருளைச் சங்கராசாரியர் மறுத்தற்கு அந்தச் சூத்திரத்தை இரண்டாகப் பிளந்து, முற்பாதிச் சூத்திரத்தினால் அந்நீலகண்டசிவாசாரியர் வித்துவானுக்கு உற்கிரமணம்

உண்டென்று கூறிய பொருளைப் பூருவபக்ஷமாக நிறுத்தி, பிற்பாதிச் சூத்திரத்தினால் வித்துவானுக்கு உற்கிரமணம் இல்லை என்று சித்தாந்தஞ் சாதிக்கப்போந்தனர். சங்கராசாரியர் பிளந்த சூத்திரங்களை ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் கூறியவாறு இராமாநுசர் ஒன்றாய் இயைத்து, சங்கராசாரியர் கூறிய பொருளைக் கண்டித்து ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் கூறிய பொருளையே ஸ்தாபித்துவிட்டனர். இராமாநுசர்க்குப் பிற்பட்டவர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியரேயாமாயின், இவர் இராமாநுசர் எடுத்தாண்ட உபநிடதவாக்கியங்களை உதகரித்து, தாமுஞ் சங்கராசாரியரைக் கண்டித்திருப்பார். சங்கராசாரியர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியரைக் கண்டிக்கப்போந்தமையினாலும், சங்கராசாரியரை ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் கண்டிக்காமையானும் இவ்விருவருள்ளும் முற்பட்டவர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியரே.

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் சீவான்மாவுக்கும் சிவபெருமானாகிய பரமான்மாவுக்கும் பேதம் உண்டென்று சாதிக்க, சங்கராசாரியர் கடாகாச மகாகாசங்கொண்டு அவ்விருவரையும் அபேதமாக்கப்போந்தமையானும்,

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் உமையம்மையாரைச் சிற்சத்தி என்றும், அவரைச் சிவபெருமானுக்குக் குணமும் சொரூபமுமாயுள்ளார் என்றும் கூற, சங்கராசாரியர் அவ்வுமையம்மையாரை மாயாசத்தி என்றும், சடசத்தி என்றும் கூறிப்போந்தமையானும்,

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் பரமவியோமத்தை (ஆகாசத்தை) சிதம்பரத்தின் பெயராய்க் கொள்ள, சங்கராசாரியர் அவ்வியோமத்தை மாயை, அவ்வியாகிருதம், அவித்தை, ஜடசத்தி என்று கூறினமையானும்,

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் அத்துவா என்றதற்கு அறுவித அத்துவா என்று (ச. ந. கரு) ஆம், (ச. ச. உஉ) ஆம் சூத்திரபாடியங்களிற் கூற, சங்கராசாரியர் அந்த அத்துவாவுக்குச் சம்சாரகதி என்று பொருள் செய்ய நேர்ந்தமையானும்,

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் சிவகுணங்கள் ஆன்மாவிற் பதிதலையே சிவசாமியம் என்று உபப்பிருங்கணப்பிரகாரம் கூற, சங்கராசாரியர் கடாகாச மகாகாசம்போலக் கூடஸ்தனும் பிரமமும் ஐக்கியமாதலே பரமசாமியம் என்று உரைத்தலானும் சங்கராசாரியர்க்கு முற்பட்டவர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர். மேலும்,

𑌯𑌤𑍋 𑌵𑌾𑌚𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌹 ।
𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌨 𑌬𑌿𑌭𑍇𑌤𑌿 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌨 ।

என்று (தைத். உ. ச, கூ) ஆங் கூறிய மந்திரத்தின் பொருள்

யஸ்மா ஂதா௵சா நிவ஢த்தெ஢ஂஜெ அ௵ராப்ய மநஸா ஸஹ ।
ஆநந்஦ம் தஸ்ய யொ வெத்தி ந ஭யம் தஸ்ய குத்ரசித் ।

"மனசும் வாக்குஞ் செல்லமாட்டாது எங்கிருந்து மீண்டுவிடுகின்றனவோ, அந்தச் சிவபெருமானுடைய ஆனந்தத்தை எவன் அநுபவிக்கின்றனோ அவனுக்கு யாண்டும் பயமில்லை" என்று (சங். த. கஉ. சஅ) னும், இங்ஙனம் இந்தப்பொருளே (வித். சங். க. க0—கஉ. னுங், கைலா. அ. சு. எ. னும், வாயு. பூ. உ. ௫௫—௫சு. னும், வாயு. உத். ௫. எஎ—அ0) னும் உபப்பிருங்கணமாகக் கூறப்பட்டிருக்க, இந்தச் சுலோகங்களுக்கெல்லாம் மாறுபட,

யதொ வாசொ நிவர்த்தந்தெ நிமித்தாநாமபாவதஃ ।
நிர்விஶெஷெ ஶிவெ ஶப்஦ஃ கதம் தெவாஃ ப்ரவர்த்ததெ ।
விஶெஷம் கஂசி஦ாஶ்ரித்ய யதா ஶப்஦ஃ ப்ரவர்த்ததெ ।
(பிரமகீதை. ௫. சுச, சு௫)

"தேவர்களே! சப்தத்துக்கு நிமித்தமின்மையின் எங்கிருந்து வாக்குகள் மீண்டுவிடுகின்றனவோ, அந்த நிர்விசேடமாகிய (நிர்க்குண) சிவத்திலே சப்தமானது எங்ஙனம் பிரவர்த்திக்கும்? விசேடத்தை (சத்திவிசேஷத்தைச்) சிறிதுபற்றியன்றே சப்தம் பிரவர்த்திக்கின்றது" என்று பொருள் பொதிந்த கற்பனு சுலோகங்கள் பிரமகீதையிற் புகுத்தப்பட்டிருக்கின்றன. ஒரு நிமித்தத்தைக்கொண்டே சப்தம் பிரவர்த்திக்கின்றதென்றும், ஓர் நிமித்தமின்மையால் நிர்விசேட (நிர்க்குணப்) பிரமத்தில் எங்ஙனம் சப்தம் பிரவர்த்திக்கும்? என்றும், அதுபற்றி மேலே குறித்து உதகரிக்கப்பட்டது சவிசேஷப் பிரமத்தைப் பற்றியதாம் என்றும், இந்தச் சவிசேடப்பிரமத்திலேதான் சப்தம் பிரவர்த்திக்கும் என்றுங் கூறி, அப்பிரமகீதையிற் குறிக்கப்பட்ட நிமித்தாநாமபாவதஃ (நிமித்தாநாமபாவதஃ) என்பதை நிமித்தாபாவாத் (நிமித்தாபாவாத்) என்று (தைத். உ. ச. கு) ஆம் மந்திரபாடியத்தினும் புகட்டி வரைந்து, சவிசேடப்பிரமத்தைப்பற்றிக் கூறிய ஸ்ரீநீலகண்டசிவாசாரியரைக் கண்டிக்கத் துணிந்தனர். ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் சத்தி குணங்களால் விசேடிக்கப்பட்ட (சவிசேஷ) சகுணப்பிரமத்தைக் கூறினர் என்றும், தாம் நிர்விசேட (நிர்க்குண) பிரமத்தைக் கூறினர் என்றும் புலப்படுத்தலானும், (எஅ-ஆம் இலக்கத்தின்) "சிவேதிவாசம்" (ஶிவெதிவாசஂ) என்னும் வாசிஷ்டலைங்க சுலோகத்துக்கு மூலமாய், நீலகண்டசிவாசாரியரால் "அக்கினிகோத்திராதிகரணத்தில்" முண்டகோபநிடதத்தினின்று அபிவா (அஂபிவா) என்றற்றொடக்கத்ததாயுள்ள மந்திரம் எடுத்து உதகரிக்கப்பட்டவிடத்தும், அம்முண்டகோபநிடத மந்திரம் பின்

னிருந்தவரால் உபநிடதத்தினின்று தொலேக்கப்பட்டமையானும், அந்த (எஅ-ஆம் இலக்கத்தின்) கீழ்ச் சங்கரசங்கிதையினின்றும் வாயுசங்கிதையினின்றும் உதகரிக்கப்பட்ட உபப்பிருங்கண சுலோகங்களுக்கிணங்க நீலகண்டசிவாசாரியரால் (சுவே. சூ. ௨0)ஆம் மந்திரம் மாறுபடாது சைவபாடியத்து உதகரிக்கப்பட்டிருந்தவிடத்தும், அம்மந்திரத்திலே சிவபெருமானே நேரே குறிக்கும் சிவசப்தம் தொலேக்கப்பட்டுத் தேவசப்தம் புகட்டி வைக்கப்பட்டமையானும், இன்னேரன்ன பிற நியாயங்களானுஞ் சங்கராசாரியர்க்கு முற்பட்டவர் நீலகண்டசிவாசாரியர் என்பது தெள்ளிது.

மத்துவாசாரியர் சந்நியாசியாகி இமாசலத்துள்ள வியாசரை வணங்கப் போனர் என்றும், அவருக்கு வியாசர் ஞாநோபதேசஞ் செய்து வேதங்களுக்கும் சூத்திரங்களுக்கும் தமது சொந்த அபிப்பிராயார்த்தத்தை உலகினர்க்குப் பிரகடனஞ் செய் என்று அவர்க்கு ஆஞ்ஞாபித்தனர் என்றும், அங்ஙனம் மத்துவாசாரியர் பாடியங்கள் செய்தனர் என்றும் மத்துவமதத்தினர் கூறுவர். இதனல் மத்துவபாடியப்பொருளும் வியாசரது சொந்த அபிப்பிராயம் என அம்மதத்தினர் வாக்கினுற் பெறப்படுகின்றது ; படவே, வியாசர் ஏகான்மவாத பாடியத்துக்கும் மத்துவபாடியத்துக்கும், சரசுவதி இராமாநுசபாடியத்துக்குமாகப் பிரசம்சாவாக்குகள் கொடுத்தமை மாத்திரத்தோடமையாது,

> வ்யாஸொக்தவிஷ்டஸூத்ராணாං த்வைதவாக்யார்த்தநாං ஶிவே|
> அத்வைத மேவ ஸூத்ரார்த்தං ப்ராஹ்மண்யேந கரிஷ்யதி|

"சிவையே! (சீவான்ம பரமான்மாக்களேக் கூறும்) வியாசரருளிய துவித வாக்கிய சூத்திரங்களுக்கு அத்துவைதந்தான் சூத்திரார்த்தம் என்று பிரமாணமாகச் (சங்கராசாரியர் பாடியஞ்) செய்வார்" என்றற்ருெடக்கத்தனவாக ஓர் சிவனும் பார்ப்பதிக்கு அருளினதாகச் சிவரகசியத்திற் புகட்டப்பட்டிருக்கின்றமையின், அச்சிவனும் ஏகான்மவாத பாடியத்தை ஒப்புக்கொண்டனராகச் சித்திக்கின்றது. (ரு௱எ—ரு௱எ0-ஆம் இலக்கவரையிற் கூறப்பட்டவாறு) சகுணம், நிர்க்குணம், அத்தியாசிரமம் என்னும் மூன்று பாவனைகளுள்ளே இறுதி அத்தியாசிரமத்தில் முற்றற்பாலனவாகிய வேதார்த்தங்களே இரண்டாவது நிர்க்குணேபாசனையிலே முற்ற,

> அய ஏவஹி வெதாந்தா நாவரः பராவஸ்திகாः|
> ந்ருண்ணாதி வரஶரம் தத்வம் ஸத்ய ஏவ ந ஸம்ஶயः|
> அய ஏவ ஹி வெதாந்தா நாவரः பராவஸ்திகாः|
> அந்யா ச ஸாரா ஸத்யம் ஶங்கரா ஏ ஜது வதிஷ்யதி|

"தேவர்களே! இதுதான் வேதார்த்தம், இதற்கு மேலானதில்லை; சத்தியமாகச் சம்சயம் இல்லை என்று தீயிற் காய்ச்சிய மழுவைப் பிடிக்கின்றேன்; இதுதான் வேதார்த்தம், இதற்கு மேலானதில்லை; தேவர்களே! இதற்கு வேறாக ஒன்றிருக்குமேல் சத்தியமாய் என் தலை அறுந்துவிழும்" என்று பிரமகீதையிற் பிரமாவைக் கள்ளச் சத்தியத்துக்கு ஆளாக்கிக் கற்பனா சுலோகம் புகட்டிய வீரரைச் சார்ந்தோர் சிவரகசியத்தில் அங்ஙனம் கற்பனா சுலோகம் இயைத்துவைக்க மறந்துவிடுவாரோமோ!! சிவன் கூறியதாக உரைக்கப்பட்ட கற்பனா சுலோகத்தினால் வேதாந்த சூத்திர முழுமையும் சீவான்மா பரமான்மா என்னும் இரண்டையும் நித்தியமென உரைக்கும் துவிதவாக்கியமுடைத்தென்பது (கற்பனா சிவன் உரைத்த உரையால்) ஏகான்மவாதிகளுக்கும் கருத்தாய் முற்றியது. அந்தக் கற்பனா சிவனுக்கு உள்ளவாறு துவிதான்மவாத பரமாயுள்ள வியாச சூத்திரங்களில் வெறுப்பும், அசத்தியமுற ஏகான்மவாதபரமாகத் திரிக்கப்பட்ட சூத்திரார்த்தத்தில் விருப்பும் நேர்ந்தமைக்குக் காரணம் பாவவிசேஷந்தான்!!

மூன்று பாடியங்களும் ஒன்றுக்கொன்று விரோத முறுவனவாக, சிவனும், வியாசரும், சரசுவதியும் அம்மூன்று பாடியங்களையும் சத்திய பாடியங்கள் என்று எங்ஙனம் அங்கிகரித்தனரோ? ஆகலின், "வியாசர் கருத்திது," "சிவன் கருத்திது," "சரசுவதி கருத்திது" என்று சங்கரதிக்விஜயாதிகளினும், சிவரகசியத்தினும், பிறவிடங்களினும் தத்தம் பாடியங்களை மெய்யெனச் சாதிக்குமாறு எழுதிவைத்தவையனைத்தும் துதிபரமாகிய அர்த்தவாதங்களாம் என்று யூகிக்க. இராமாநுசரும் போதாயனவிருத்தியைப் பார்த்து வரைந்தோம் வரைந்தோம் என்று புறத்தே எழுதி, நீலகண்டபாடியத்தை அந்தரங்கத்திற் பார்த்தே தமது பாடியத்தைச் சரிப்படுத்திக்கொண்டனர். "நீலகண்டபாடியத்துக்கும் இராமாநுசபாடியத்துக்கும் சில பேதங்கள் இருக்கின்றன" என்று ஓர் வைணவரும் எழுதிவைத்தமையாலும் அறியப்படும்.

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் பிரமமீமாஞ்சாசூத்திரத்துக்கு எழுதிய பாஷ்யம் சிவாத்துவிதபாஷ்யம் எனப்படும்; இந்தச் சிவாத்துவிதப் பெயர்

ஶிவாத்³வைதமிதி க்²யாதம் ப்³ரஹ்மஸூத்ரார்த²பா⁴ஷ்யகம்।
ஸித்³த⁴ம் யத் தேன தே³வோ(அ)யம் ஶிவாத்³வைதகு³ரு: ஸ்ம்ருத:।

(கைலா. ௧0. ௬௬, ௬௭)

கைலாச சங்கிதையிற் காணப்படுகின்றது.

மேலே கூறியவாற்றால், இராமாநுசாசாரியர் சங்கராசாரியர் முதலியோர்க்கெல்லாம் பிரமசூத்திர சைவபாடிய கர்த்தாவாகிய நீலகண்டசிவாசாரியர் முற்பட்டவரேயாம்.

ஸ்ரீகாசிவாசி—செந்திநாதையர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உபநிடத உபக்கிரமணிகை.

---

𑌅𑌸𑍍𑌯 𑌮𑌹𑌤𑍋 𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌃𑌶𑍍𑌵𑌸𑌿𑌤𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌦𑍃𑌗𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌸𑍍𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌥𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌃 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌉𑌪𑌨𑌿𑌷𑌦𑌃 (பிரு. ச. ச. க0; சு. ரு. கக)

(க) "இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், இதிகாசம், புராணம், வித்தை, உபநிடத முதலியவைகள் பரம்பொருளினது சுவாசம்" எனப் பிருகதாரணியத்தினும்,

𑌈𑌶𑌾𑌨𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 (மகா. கஎ. ரு)

(உ) "வித்தைகள் அனைத்துக்கும் (கர்த்தா) ஈசானர்" என மகோப நிடதத்தினும்,

𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌭𑌿𑌨𑍍𑌨𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌨𑌾𑌮𑍍 |
𑌆𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌵𑌿𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌚𑍍𑌛𑍂𑌲𑌪𑌾𑌣𑌿𑌰𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 ||

(வா. ச. பூ. க. உச)

(ங) "பல மார்க்கமுடைய இந்தப் பதினெண் வித்தைகளுக்கும் சாக்ஷாத்தாக முதற்கர்த்தாவாயுள்ளார் சூலபாணியாகிய சிவபெருமான் என்று சுருதி கூறுகின்றது" என ஸ்மிருதியினும் காணப்படுகின்றது. ஆகலின், புராணங்களை அருளினவர் சிவபெருமான் என்பது வெளிப்படை. இந்தச் சிவபெருமான் சாத்துவிக இராசச தாமச குணங்களையுடைய பிர கிருதி எனப்படும் தமசைக் கடந்த உமாசகாயர் என்று கைவல்லியோப நிடதம் கூறுகின்றது. இந்த அம்பிகாபதியானவர் சாத்துவிக, இராசச, தாமசங்களையுடைய விஷ்ணு, பிரமா, உருத்திரர் என்னும் மூவர்க்கும் துரியராவர்.

𑌤𑍍𑌰𑌯𑌸𑍍𑌤𑍇 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌜𑌾𑌤𑌾𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍 | 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌗𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌹𑍇𑌤𑌵𑌃 | 𑌪𑌿𑌤𑍍𑌰𑌾 𑌨𑌿𑌯𑌮𑌿𑌤𑌾𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌤𑍍𑌰𑌯𑍋𑌽𑌪𑌿 𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 𑌕𑌰𑍍𑌮𑌸𑍁 | 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌗𑍇 𑌹𑌰𑌿𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍇 𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑍍𑌸𑌂𑌹𑌰𑌣𑍇 𑌪𑍁𑌨𑌃 | 𑌤𑌥𑌾𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑍋

ந்யாதிராயாஸிநः। தபஸா தோஷயித்வா ஸ்வம் பிதரம் பரமேஶ்வரம்। ப்ரஹ்மநாராயணௌ பூர்வம் ருத்ரः கல்பாந்தரே ऽஸ்ருஜத்। கல்பாந்தரே புநர்ப்ரஹ்மா ருத்ரவிஷ்ணூ ஜகந்மயः। விஷ்ணுஶ்ச பகவாந் ருத்ரம் ப்ரஹ்மாணமஸ்ருஜத் புநः। நாராயணம் புநர்ப்ரஹ்மா ப்ரஹ்மாணஞ்ச புநர்பவः। ஏவம் கல்பேஷு கல்பேஷு ப்ரஹ்மவிஷ்ணுமஹேஶ்வராः। பரஸ்பரேண ஜாயந்தே பரஸ்பரஜயைஷிணः। தத்தத்கல்பாந்தவ்ருத்தாந்தமதிக்ருத்ய மஹர்ஷிபிः। தாநி தாநி ப்ரணீதாநி விதுஷாம் தத்ர நமோஹ்யதி (வா. ச. பூ. கக. கச—உக)

(ச) "இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய இவ்வுலகத்திற் சிருஷ்டி திதி சங்காரங்களுக்கு ஏதுவாகிய காரணன்மாக்கள் மூவரும் மகேசுவரரினின்று நேராக உதித்தனர்; பிரமா படைப்பினும், அரி அளிப்பினும், உருத்திரர் அழிப்பினுமாக மூவரும் முத்தொழிலினும் பிதாவினால் முதற்கண்ணே நியமிக்கப்பட்டனர்; அங்ஙனம் நியமிக்கப்படினும், ஒருவரோடொருவர் பொறாமைமேற்கொண்டு, தம்முண் மேம்படக் கருதினோராய், உருத்திரர் தமது தாதையாகிய சிவபெருமானைத் தவத்தினால் மகிழ்வித்து ஓர் கற்பத்திலே பிரமன் நாராயணர் என்னும் இருவரையும் படைத்தனர்; பின்பு பிரமா மற்றோர் கற்பத்தில் நாராயணர் உருத்திரர் என்னும் இருவரையும் படைத்தனர்; பின்பு விஷ்ணு (மற்றோர் கற்பத்திலே) உருத்திரர் பிரமா என்னும் இருவரையும் படைத்தனர்; இங்ஙனம் கற்பந்தோறும் பிரமா, விஷ்ணு, உருத்திரர் என்பார் ஒருவரை மற்றொருவர் வெல்ல நினைந்து ஒருவர்பால் ஒருவர் பிறக்கின்றனர்; பெரிய இருஷிகள் அவ்வக்கற்ப விருத்தாந்தங்களைக்கொண்டு அவ்வச்சரித்திரங்களைக் கூறினர்; அறிவினையுடையான் அவைபற்றி மோகமெய்தான்" என்று சிவபுராணத்திற் கூறப்பட்டவாறு பிரம விஷ்ணு உருத்திரர் என்னும் மூவருடைய மான்மியத்தை மிகுத்துக் கூறும் இயற்கையுடையது அந்தந்தக் கற்பம். இது நோக்கியே,

யஸ்மிந்கல்பே து யத்ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா। தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே। அக்நே ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்த்யதே। ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதிகம் ப்ரஹ்மணோ விது:। ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம் ச நிகத்யதே। ஸாத்விகேஷு ச கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே:।

(ரு) "எந்தக் கற்பத்திலே எந்தப் புராணம் பிரமாவினாற் கூறப்பட்டதோ, அந்தந்தக் கற்பத்தின் மான்மியம் அந்தச் சொரூபத்தோடு

வர்ணிக்கப்படுகின்றது; அக்கினியுடையவும் உருத்திரருடையவும் மான்மியம் தாமசகற்பங்களினும், பிரமாவின் மான்மியம் இராசச கற்பங்களினும், சரசுவதியுடையவும் பிதிர்களுடையவும் மான்மியம் சங்கிர்ண கற்பங்களினும், விஷ்ணுவுடைய மான்மியம் சாத்துவிக கற்பங்களினும் கூறப்பட்டன" என்று சிவபுராணங்களுள் ஒன்றாகிய மற்சபுராணம் கூறுமாற்றான், தாமசகற்பத்திலே (துரிய உருத்திரராகாத காரிய) உருத்திரருடைய மான்மியம் மற்றிருவரினும் மிகுத்தும், சாத்துவிக கற்பத்திலே விஷ்ணுவின் மான்மியம் மற்றிருவரினும் மிகுத்தும், சங்கீர்ண கற்பத்திலே சரசுவதியுடையவும் பிதிர்களுடையவும் மான்மியம் மிகுத்துங் கூறப்பட்டிருக்கின்றன என்றோர்க.

(௬) சரசுவதியின் புராணம் தனிப்புராணமாகாது சங்கிர்ண கற்பத்திலே புராணமத்தியிற் கூறப்பட்டாற் போல, தாமசகுண காரிய ருத்திரர் முதலாயினோர் மான்மியங்கள் துரியமூர்த்தியாகிய சிவபெருமான் முதலாயினோர் புராணமத்திகளில் மிகுத்துக் கூறப்படுவனவாம்.

(எ) ஒவ்வோர் இருதுவிற் பனிமுதலாயின மிகுத்தும், வருஷாகாலத்தில் மேகம், மின்னல், இடி முதலியன மிகுத்தும் நிகழுமாறு போல, அத்தந்தச் சாத்துவிகாதி கற்பங்களிலே அவ்வவ் விஷ்ணுவாதி தேவருடைய மான்மியம் மிகுத்துக் கூறப்படும் என்பதே பொருளாம்.

த்யாநந்தபஸ்ததா ஜ்ஞாநம் த்ருஷ்ட்வா தேஷ்வேவ யோகிந:| ஆராத்ய கிரிசம் மாஞ்ச யாந்தி தத்பரமம் பதம்|

(அ) "தியானம், தபம், ஞானம் என்பனவற்றை யோகிகள் அக்காலங்களிற்றானே எய்தப்பெற்று என்னையும் சிவபெருமானையும் ஆராதித்து அப்பரம பதத்தினை எய்துகின்றனர்" என்று சாத்துவிக கற்பங்களைப் புகழ்ந்தெடுத்தோதும் கூர்மபுராண வசனமும் அவ்வுண்மையை வலியுறுத்துமென்க. சாத்துவிக கற்பத்திலே சாத்துவிக குணம் மேலிடப் பிரமா விஷ்ணு புராணங்களைக் கூறினர்; தாமச கற்பத்திலே தாமசகுண மேலிடப் பிரமா சிவபுராணங்களைக் கூறினர் என்றற்றொடக்கத்தனவாகத் தப்புரைவிடுத்துச் சிவபுராணங்களை அப்பிராமாண்ணியப் படுத்தத் துணிதல் கூடாது; மற்ச புராண சுலோகங்களிலே பிரமாவுக்குச் சாத்துவிக குணமேனும் தாமசகுண முதலியவேனும் மேலிட்டு அவ்வப் புராணம் கூறினர் என்றமைக்குப் பதப்பிரயோகம் யாதுமின்மையின்.

ஸங்கீர்ணாஸ் ஸாத்விகாச்சைவ ராஜஸாஸ் தாமஸாஸ்ததா| கீர்த்திதாஸ்து புராணேஷு ...| ஸாத்விகேஷு ச கல்பேஷு

ஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே: | தாமஸேஷு மஹேசஸ்ய ராஜஸேஷு ப்ரஜாபதே: | ப்ரஹ்மா விஷ்ணு: ஹர: ப்ராஹ்மணா: | நாநேந தேஷாமாதிக்யம் ந்யூநதாவா கதஞ்சந |

(௯) "பிரம விஷ்ணு உருத்திர சம்பந்தமாகிய கற்பங்கள் எண்ணிறந்தன ; மெய்யுணர்வினையுடைய முனிவர்களால் (அவ்வவர் மான்மியம்) கூறப்பட்டன ; சாத்துவிக கற்பத்திலே விஷ்ணுவின் மான்மியம் அதிகமும், தாமச கற்பங்களிலே உருத்திரருடைய மான்மியம் அதிகமும், இராசச கற்பத்திலே பிரமாவுடைய மான்மியம் அதிகமுமாகக் கூறப்பட்டன ; ஓரிடத்திற் பிரமாவும், ஓரிடத்தில் விஷ்ணுவும், மற்றோரிடத்தில் உருத்திரருமாக ஒருவர்க்கொருவர் உயர்வு தாழ்வின்றித் துதிக்கப்படுகின்றனர்" என்று கூர்ம புராண முதலிய கூறலின், பிரமா தாமசகுண மேலிடப் பிரமை முதிர்ச்சியினாற் கூறப்பட்டன தாமச வசப்பட்ட சிவபுராணங்கள் என்று கூறுவது பித்துரை என்று மறுக்க.

யோ ப்ரஹ்மாணம் விதாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை |

(௧௦) "சிவபெருமான் பிரமாவைப் படைத்து, அவருக்கு வேதங்களையும் உபதேசித்தனர்" என்னுஞ் சுருதியிற் கண்ட (சகார) எச்ச உம்மையினாற் புராணங்களும் உபதேசிக்கப்பட்டன என்று பெறப்படும்.

யோ மாம் விதயே பூர்வம் ஜ்ஞானம் ப்ரஹிணோதி ச | யத்ப்ரஸாதான்மயா ப்ராப்தம் ப்ராஜாபத்யமிதம் பதம் | ப்ரஹ்மாணம் விதயம் பூர்வம் ஸ்ருஷ்ட்வா தஸ்மை மஹேஶ்வர: | தத்தவாநவிலாந் வேதாநாத்மஸ்தாந் ஸம்ஸ்திதாந் |

(௧௧) "சிவபெருமான் என்னை முதற்கண்ணே படைத்து ஞானத்தை உபதேசித்தனர் ; அவர் அருளினாலே இந்தச் சத்தியலோக பதம் எனக்கு எய்திற்று" என்றும், "சிவபெருமான் பிரமாவைப் படைத்து, அவர் அறிவின்கண் (இப்போது உள்ள) சமஸ்த வேதங்களையும் உபதேசித்தனர்" என்றும் கூர்ம புராணத்தினும்,

ஈஶ்வரஸ்ய ஈஶ்வராந்நித்யாத்ஸர்வம் ப்ராதுரபூதியம் | அஸ்ய ஜக்முஷ: ஶாஸ்த்ராணி மஹாதேவோ மஹேஶ்வர: | ......... புராணம் யஜ்ஞஶாஸ்த்ரம் விஷ்ணோர்ஹ்யதாஸ்த்ரதஸ்ஸ | தஸ்மாச்சேஷாஶ்ச விஷ்ணோ தா யஜுஸ்ஸம்ஹிதா: | தஸ்மாச்சேஷாஶ்ச விஜ்ஞேயா: புராணா யஜுஸ்ஸம்ஹிதா: |

(கஉ) "சூலபாணியும், மகாதேவரும், மகேசுவரருமாகிய சிவபெருமான் சமஸ்த சாஸ்திரங்களையும் படைத்தனர்; (அந்தச் சாஸ்திரவித்தைகள் வேத வேதாந்த முதற்) புராணம் தருமசாஸ்திரம் இறுதியாயுள்ள பதினான்காம்; பத்தும் பதினெட்டுமாகிய புராணங்கள் தருமசங்கிதைகள் எனவும், யஞ்ஞசங்கிதைகள் எனவும் படும்" என்று மகாபாரதத்தினுங் கூறப்படலான், புராணங்களையெல்லாம் முதற்கண்ணே அருளிய பிரணேதா சிவபெருமான் என்றும், சிவபெருமானினின்று பெறப்பட்ட வேதபுராணங்களை இருஷிகளுக்குப் பிரகடனஞ் செய்த பிரவக்தா பிரமா என்றும், புராணங்கள் பதினான்கு வித்தைகளுள் ஒன்று என்றும், அவை தருமசங்கிதை எனப்படும் என்றும் அறியக்கிடந்தன. ஆகலின், பதினெண் புராணங்களுள்ளே எப்புராணங்களும் (பிரக்ஷிப்த அத்தியாயங்களேனும் சுலோகங்களேனும் இல்லாவிடத்து) அப்பிராமாண்ணியப்படுத்தப்படுவனவன்று.

தெந வொக்ஷ (ச. ரு. கoக)

என்னும் பாணினிசூத்திரத்திலே காணப்படும் "புரோக்தம்" என்னும் பதம் பிரகடனஞ் செய்தலின் மேற்றாதல் போல, மற்ச புராணத்திலே பிரமாவினாற் "புரோக்தம்" (கூறப்பட்டது) என்றதும் அப்பொருண் மேற்றும். ஆகவே, சிவபெருமானாற் சுவாசம் போல எளிதானே அருளிச் செய்யப்பட்ட வேத இதிகாச புராணாதிகளைப் பிரமா தமது சீடர் முதலாயினோர்க்கு உபதேசித்தனர் என்பதே பொருளாம்.

(கரு) உபநிடதத்திலே சில பாகங்கள் சிவபரமாகவும், சில பாகம் ஏகான்மவாதபரமாகவும், சில பாகம் விஷ்ணுபரமாகவும், பிறர் பரமாகவும் இருப்ப, அங்ஙனம் புராணங்களும் சிவபரமாகவும், ஏகான்மவாதபரமாகவும், வைஷ்ணவபரமாகவும், பிறர் பரமாகவும் அவ்வவ்வுபநிடதங்களுக்கியைந்து பொருள் கொடுத்தலான்

வெகாஷாநி பூராணாநி வெதாமெூகாஷ ஸஂஶயஃ ।

(கச) "வேதங்களும் புராணங்களும் ஏகார்த்தமுடையன" என்று மகாபாரதம் கூறுகின்றது. சாவதி பிரகிருதி தத்துவப்பொருள் பொதிந்த ஏகான்மவாத, விண்டுவாத உபநிடதங்களினும், நிரவதி சிவதத்துவார்த்தப் பொருள் பொதிந்த *உபயான்மவாதோபநிடதங்கள் உயர்வொப்பிறந்து ஓங்கிச் சிறந்து நின்றாற்போல, சாவதிதத்துவப்பொருள் பொதிந்த ஏகான்மவாத, விண்டுவாத புராணங்களினும் நிரவதிதத்துவப்பொருள் பொதிந்த

* பரமான்மா சீவான்மா என்னும் இரண்டின் வாதம்.

உபயான்மவாத சிவபுராணங்கள் உயர்வொப்பிறந்து ஓங்கிச் சிறந்து நிற்பன வாம்.

ஏகோ ஹ வை நாராயண ஆஸீந் ந ப்ரஹ்மா நேஶாநஃ |

(௧௫) "பிரமா இல்லை, உருத்திரர் இல்லை, நாராயணர் ஒருவரே இருந்தனர்" என்று இராமாநுசபாஷ்யத்தினும் (௨. ௨. ௫௯)

யம் காமயே தம் தமுக்ரம் க்ருணோமி தம் ப்ரஹ்மாணம் தம்ருஷிம் தம் ஸுமேதாம் |

(௧௬) "எவனை விரும்புகின்றேனோ அவனைப் படைக்கின்றேன்; நான் உக்கிரனையும் (உருத்திரனையும்), இருஷியும் புத்திமானுமாகிய பிரமாவையும் சிருட்டிக்கக் கூடும்" என்று மத்துவபாடியத்தினும் (௨. ௨. ௫௭) உதகரிக்கப்பட, மகாபாரதத்தினும் சுபாலோபநிடதத்தினும் "நாராயணர் கோபத்தினின்று உருத்திரர் பிறந்தனர்" என்றும், அந்த உருத்திரரே பிரமாவின் நெற்றியினின்று (மற்றோர் கற்பத்திலே) புதல்வராய் உதித்தனர் என்றும், இவர் ஸ்தாணுருத்திரர், நீலலோகிதருத்திரர் எனப் படுவார் என்றும், (துரிய சிவனார்க்குரிய) பசுபதி, சர்வர், பவர், உருத்திரர், உக்கிரர், பீமர், ஈசானர், மகாதேவர் என்னும் அஷ்டநாமங்கொண்டு இவரை இவர் தந்தையாராகிய பிரமா விளித்தனர் என்றும் இருக்குவேத சாங்காயனப் பிராம்மணத்தினும், வாசசநேய சதபதப் பிராம்மணத்தினும் கூறப்பட்டிருப்பதான், இந்த உருத்திரர் சைவரால் வழிபடப்படும் துரிய உருத்திரர் அன்று; கிருஷ்ணர் அர்ச்சுனர் இருவரும் பாசுபதாஸ்திரத்தின் பொருட்டுக் கைலாசத்துக்குச் சென்ற அமையத்து,

ததஃ பார்ஶ்வே வ்ருஷாங்கஸ்ய ப்ரஹ்மசாரீ ந்யவர்த்தத | பிங்காக்ஷஸ்தபஸஃ க்ஷேத்ரம் பலவாந் நீலலோஹிதஃ |

(௧௭) "சிவபெருமானுடைய ஓர் பக்கத்தினின்ற பிரமசாரியும், பிங்கல நேத்திரரும், தபசுக்கு ஸ்தானமாயினரும், பலவானுமாகிய நீலலோகிதர் வந்தனர்" என்று துரோணபருவத்தினும் காணப்படலானும், அஃதன்றி

வைஷ்ணவேஷு புராணேஷு யோऽபகர்ஷஸ்து ஶ்ரூயதே | ந து ருத்ரஸ்ய ஸௌம ஹரஸ்யாஸ்ய கிஞ்சிதேவ கேவலம் |

(௧௮) "வைஷ்ணவ புராணங்களிலே எந்த உருத்திரர் அபகர்ஷமுடையராய்த் தோற்றுகின்றாரோ, அந்த உருத்திரர் இந்தத் துரிய சிவனா

ரது கேவலம் விபூதியாம் (காரியமூர்த்தியாம்)'' என்று பராசர புராணாதிகளினும் காணப்படலானுமாம். ஆகலின், சுருதிகளில் உருத்திரர்க்கு அபகர்ஷம் காணுமிடத்தும் அங்ஙனமே பொருள் கொள்க.

இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ருஂஹயேத் | பிபேத்யல்பச்ருதாத்வேதோ மாமயம் ப்ரஹரிஷ்யதி (ம. ஆ. க. உகூச, உகூரு)

(கக) “இதிகாச புராணங் கொண்டு வேதத்தை உபப்பிருங்கணம் செய்ய வேண்டும்; அற்பக்கேள்வியினையுடையான் தனக்குத் தீங்கு விளைப்பான் என்று வேதம் பயப்படுகின்றது'' என்று மகாபாரதத்தினும், இங்ஙனம் வாயுசங்கிதை முதலிய புராணங்களினும் கூறப்படுகின்றது.

அப்யர்ஹிதம் பூர்வம் |

“(துவந்துவசமாசத்தில்) அதிமுக்கியமாயது முதற்கண்ணே வரவேண்டும்'' எனப் பதஞ்சலியார் (உ. உ. ௩ச) ம் சூத்திர வார்த்திகத்திற் கூறினமையான், இதிகாசமே புராணத்தினுஞ் சிறந்தது என்றும், அதனாற் புராணத்துக்குமுன் இதிகாசம் வைக்கப்பட்டதென்றும், அந்த இதிகாசம் பாரதமே என்றும் பூருவபக்ஷஞ் செய்யின், அது பொருந்தாது:

அஜாத்யதந்தம் (உ. உ. ௩௩)

என்னும் பாணினி சூத்திரத்தில் உயிர் எழுத்தை முதலினும் அகரத்தை இறுதியினும் கொண்டு முடிகிறபதம் முதற்கண்ணே வைக்கப்படல் வேண்டும் என்று கூறப்படலானும், இந்நியாயங்கொண்டே

லக்ஷணஹேத்வோ: க்ரியாயா: (௩. உ. கஉகூ)

பாணினியார் தாமே சூத்திரஞ் செய்தமையானுமாம். ஆகலின், இதிகாசமும் புராணங்களும் பிரமாணத்தினற் சமானமுடையன.

ஶைவேஷு ஹி புராணேஷு ஶ்ரேஷ்டாந்யஷ்டாதஶாஸ்வபி | யத்ராவரோக்ஷம் ப்ரத்யக்ஷம் ஸாக்ஷாத்ப்ரத்யக்ஷரூபிணீ | ஸதாம் வஞ்சிதோ ஜைமிநி ஸஞ்சிதை: ஸமஞ்சிதை: ஸுராஸு | க்ரியாதபோ ஜபஸ்நாந ஜ்ஞாநாத்ஸிந்தோ: | ஶைவவதோ ஸூதஶ்ரேஷ்டேநோ யத்ஸ்வ வாமோ ஶிக: | பரோக்ஷபரோக்ஷஞ ஜ்ஞாநம் யத்ர ச மோக்ஷதம் | புராணம் ஸ்காந்தமீஶாநம் யத்தத்ர ஹி ஶ்ருதிசோதிதம் |

யோகஶாஸ்த்ரேஷு வேதேஷு ப்ரோக்தம் ஶ்ருதிரேவ நஃ | பரமோ
யோக பர்யந்தோ யோகஃ ஶ்ருதிஶிரோகதஃ | ஸ சாயம் பரோ யோகஃ
பரயோகஸ்ய ஸாதனம் | யோகஶாஸ்த்ராதிஷு ஸாக்ஷாத் ஸம்யக் வேதேஷு
ப்ரும்ஹிதஃ | தத்ராசேஷ்யாம் யஃ பரோ யோகஃ ஶ்ரேஷ்டானுஷ்டான ஸம்ஹி
தஃ | இதிஹாஸ புராணாப்யாம் கிஞ்சித் உபப்ரும்ஹிதஃ | ஶைவாக
மேஷு ஸம்பூர்ணஸ்ஸாங்கோபாங்க விஸ்தரஃ | ஸம்ஸ்காராதிகாரஸ்ச
ஸம்யக் தத்ரைவ ப்ரும்ஹிதஃ |

(உ0) "சைவமே பரம்தருமம் என்றும், அதுவே முக்கியமாக அனுஷ்டிக்கற்பாலதாம் என்றும், அச்சிவதருமத்திலேயே சாக்ஷாத்தாக வீடளிக்கும் சிவபிரானுர் அபரோக்ஷமாக அறியப்படுகின்றனர் என்றும், கன்மயாகம், தபயாகம், சேபயாகம், தியானயாகம், ஞானயாகம் என்னும் அநுத்தரமாகிய ஐவகைப் பருவங்களால் (பிரிவினுல்) கிரமமாகப் பிரிவுறுவது அந்தப் பரதருமம் என்றும், சோத்தரமாகிய அப்பருவங்களாலேதான் சித்தமாயது அபரதருமம் என்றும், பரோக்ஷஞானம் அபரோக்ஷஞானம் என்னும் இரண்டும் மோக்ஷத்தைக் கொடுப்பனவாம் என்றும், பரதருமம் அபரதருமமாகிய இரண்டும் வேதங்களிற் கூறப்பட்டன என்றும், தருமசாஸ்திரங்களிற் கூறப்படும் பொருள் அனைத்துக்கும் வேதமே பிரமாணம் என்றும், யோகத்தை முடிவாகக் கொண்ட பரதருமம் உபநிடதங்களிலே அமைந்தது என்றும், பரதருமத்துக்குச் சாதனமாயுள்ளது இந்த அபரதருமம் என்றும், (மனு) தருமசாஸ்திர முதலியவைகளினுல் அது நன்கு சாங்கமாக உபப்பிருங்கணஞ் செய்யப்படும் என்றும், முதற்கண் உள்ளதும் முக்கியமாய் அநுஷ்டிக்கற்பாலதாம் எனக் கூறப்பட்ட (யோகபரியந்தமுள்ள) பரதருமம் இதிகாசபுராணங்களினுற் பிரயாசையோடு உபப்பிருங்கணஞ் செய்யப்படும் என்றும், அது பின்னர்ச் சிவாகமங்களினுற் சாங்கோபாங்க விஸ்தாரமாகச் சம்ஸ்கார அதிகாரத்தோடு நன்கு உபப்பிருங்கணஞ் செய்யப்படும்" என்றும் வாயுசங்கிதையிற் கூறப்படலான், யோகபரியந்தமே முக்கிய உபநிடதங்களிற் கூறப்பட்டிருக்கின்றது என்றும், அவ்வுபநிடதங்கள் இதிகாசபுராணங்களானும் சிவாகமங்களானும் உபப்பிருங்கணஞ் செய்யப்படும் என்றும் பெறப்படுகின்றது.

உபநிடதம் இதிகாசபுராணங்களால் மிகு பிரயாசையோடு உபப்பிருங்கணஞ் செய்யப்படும் என்றும், அது பின்னர்ச் சைவாகமங்களினுற் சாங்கோபாங்கமாய் ஷடத்துவசுத்தியாகிய சம்ஸ்கார அதிகாரத்தோடு நன்ருக உபப்பிருங்கணஞ் செய்யப்படும் என்றும் மேலே வாயுசங்கிதை கூறுமாற்றுல் உபநிடதங்கள் சூத்திரமாக, புராணங்கள் உபப்பிருங்கண

மாகவும், சைவாகமங்கள் மகோபப்பிருங்கணமாகவும் கொள்ளப்படும். படவே,

ஸாமாந்யம் வேதஜாலம் யச்சைவம் வைசேஷிகம் வச: |

(உக) உபநிடதங்கள் சூத்திரம்போலப் பொதுவுற நிற்றலாற் சாமானியசுருதி என்றும், சைவாகமங்கள் பாஷ்யம்போற் சிறப்புற நிற்றலால் விசேஷசுருதி என்றும் மோகசூரோத்தரத்திற் கூறப்பட்டது. அங்ஙனமாயின்,

சைவாகமோ த்விதா ஜ்ஞேய: ச்ரௌதோ ஸ்ரௌதஸ்ச ஸுவ்ரத:| ச்ருதிஸாரமய: ச்ரௌத: ஸுதந்த்ர இதரோமத:| ஸ்வதந்த்ரோ தசதா பூர்வம் ததாஷ்டா தசதா புந:| காமிகாதி ஸமாக்யாபி: ஸித்தஸித்தாந்தஸம்ஜ்ஞித:| ச்ருதிஸாரமயோ யஸ்து சதகோடிப்ரவிஸ்தர:|

பூருவபக்ஷம்—“சிரௌதம் என்றும், அசிரௌதம் என்றும் இருபிரகாரமாகச் சைவாகமம் நினைக்கப்படும்; சுருதிசாரமயமாயுள்ளது சிரௌதம்; சுவதந்திரமாயுள்ளது இதரம் (மற்றது, அஃதாவது அசிரௌதம்) என்று கொள்ளப்படும். முற்பத்தும் பிற் பதினெட்டுமாகிய இருபத்தெட்டுச் சுவதந்திராகமம் காமிக முதலிய பெயர்களோடு முடிந்த சித்தாந்தம் என்று பெயர் பெறும். சுருதிசாரமயமாயுள்ளது நூறு கோடி விரிவினையுடையது” என்று வாயுசங்கிதை கூறலான், காமிகாதி ஆகமங்கள் சுவதந்திராகமங்கள் என்றும், அசிரௌதமாகிய அவைதிகம் என்றும் கொள்ளப்படும். அங்ஙனங் கொள்ளப்படின்,

வேதாந்தஸாரஸர்வஸ்வம் புராணம் ச்ராவயாமி ந:|
(வி. ச. நி; வா. உத். க. கக)

(உஉ) “வேதாந்தசார நிதியாயது புராணம்” என வித்தியேசுவர சங்கிதையினும் வாயுசங்கிதையினுங் கூறப்பட்டவாறு,

வேதஸாரமிதம் தந்த்ரம் தஸ்மா வைதிக மாசரேத்|

(உங) “இந்த ஆகமம் வேதசாரம்; ஆகலின், வைதிகத்தை அநுசரிக்க”

வேதாந்தார்த்தமிதம் ஜ்ஞாநம் ஸித்தாந்தம் பரமம் சுபம்||

(உச) “இந்த வேதாந்தப் பொருளாகிய ஞானம் பரமசுபமாகிய சித்தாந்தம்” என மகுடாகமத்தினும்,

ஸித்தாந்தம் வேதஸாரத்வாத் |

(௨௫) "சித்தாந்தம் வேதசாரமாயிருத்தலின்" எனச் சுப்பிரபேதாகமத்தினுங் கூறப்பட்டவைகளுக்கெல்லாம் அவ்வாகமங்கள் அவைதிகமாய் விரோதமுறுமே என ஆக்ஷேபிக்கின்,

சித்தாந்தம்—கூறுதும். அங்ஙனம் அச்சுலோகங்கட்குப் பொருள் கொண்டவர் தவறுண்டனர்; மேலே கூறிய வாயுசங்கிதாசுலோகங்கட்கு அவ்வாறுபொருள் செய்தவர்கள் சப்தார்த்தஞானமுடையரன்றிச் சாத்திரவிஷயஞானமில்லாதவராகலின். அச்சுலோகப் பொருள் வருமாறு:—

(௨௬) ஶைவாகமோऽபி த்³விவித⁴꞉ ஶ்ரௌதோऽஶ்ரௌதஶ்ச ஸம்ஸ்ம்ருத꞉=அந்தச் சைவாகமமும் சிரௌதம் அசிரௌதம் என இருதிறப்படும்; ஶ்ருதிஸாரமய꞉ ஶ்ரௌத꞉=சுருதிசாரமாயுள்ள சிரௌதமானது; ஸ்வதந்த்ர இதரோ மத꞉=சுவதந்திரமும் இதரமுமாகக் கொள்ளப்படும்; ஸ்வதந்த்ரோ த³ஶதா⁴ பூர்வம் ததா²ஷ்டாத³ஶதா⁴ புந꞉ காமிகாதி³ ஸமாக்²யாபி⁴ ஸித்³த⁴ஸித்³தா⁴ந்தஸம்ஜ்ஞித꞉=சுவதந்திராகமமானது முன்னர்ப் பத்தும் பின்னர்ப் பதினெட்டுமாய் (இருபத்தெட்டுக்) காமிகாதி பெயர்களோடு முடிந்த சித்தாந்தம் எனப் பெயர் பெறும்; ஶ்ருதிஸாரமயோ யஸ்து ஶதகோடிப்ரவிஸ்தர꞉=சுருதிசாரமயமாயுள்ள இதரமானது (மற்றது) நூறுகோடி விரிவினதாகும் என்று பொருள் கோடற் பாற்று;

ஶ்ரௌதாஶ்ரௌதவிபே⁴தே³ந த்³விவித⁴ஸ்து ஶிவாக³ம꞉ | ஶ்ருதிஸாரமய꞉ ஶ்ரௌதஸ்ஸ புநர்த்³விவிதோ⁴ மத꞉ | ஸ்வதந்த்ர இதரஶ்சேதி ஸ்வதந்த்ரோ த³ஶதா⁴ புரா | ததா²ஷ்டாத³ஶதா⁴ பஶ்சாத் ஸித்³தா⁴ந்த இதி கீ³யதே | இதரஶ்ஶ்ருதிஸாரஸ்து ஶதகோடிப்ரவிஸ்தர꞉ |

(௨௭) "சைவாகமம் சிரௌதம் அசிரௌதம் என இருவகைப்படும்; சுருதிசாரமாயுள்ளது சிரௌதம்; அது பின்னர்ச் சுவதந்திரமும் இதரமும் (மற்றதும்) என இருவகைப்படும்; சுவதந்திரமானது முன்னர்ப் பத்தும் பின்னர்ப் பதினெட்டுமாய்ச் சித்தாந்தம் என்று கூறப்படும்; சுருதிசாரமாயுள்ள இதரமானது (மற்றது) நூறுகோடி விரிவினையுடையதாகும்" என்று சனற்குமாரசங்கிதையானது வாயுசங்கிதாசுலோகத்தின் சப்தங்களைத் தொடர்ந்து இங்ஙனம் பொருள் கோடல் வேண்டும் என்று வழிதிறந்துவிட்டமையின். ஈண்டுச் சிரௌதாகமம் இவை என்று கூறி, அசிரௌதாகமத்தையுற்றுக் கூறுதொழிந்தமை காபாலம், இலாகுளம், பாசுபதம், சாக்தம், பைரவம், பாஞ்சராத்திரம், காளாமுகமுதலிய அசிரௌதாகமங்

களை ஈண்டு எடுத்தாளவேண்டியதோரவகாசமின்மையானும், அவை கூர்ம புராணமுதலியவற்றிற் கூறப்படலானுமாம். இது கொண்டு காமிகாதி ஆகமங்களை அசிரௌதம் என்றும், அவைதிகம் என்றும் வைரிகள் ஏற்றும் தூஷணைகள் அவற்றை எட்டுணையும் பற்றுவாம். வேதோக்தமாகிய விபூதி, உருத்திராக்ஷம், பிராசாதம், பஞ்சாக்ஷரம், பதிபசுபாசம் என்பவற்றைக் காமிகாதி ஆகமங்கள் நிரூபித்தலின், இவை சிரௌதம் எனவும், சுருதியிலே பிரதிபாதிக்கப்படாத ஆலயநிர்மாணம், பிரதிஷ்டை, உற்சவ முதலியவைகளை அவ்வாகமங்கள் சுவதந்திரமாக எடுத்து விரித்துரைத்தலாற் சுவதந்திரம் எனவும் கூறப்படும்; ஆகலின், உபநிடதங்கள் இதிகாசபுராணாகமங்கள் கொண்டு பொருட்படுத்தற்பாலன.

(உஅ) ஈச, கேன, கட, பிரசின, முண்டக, மாண்டூக்கிய, ஐதரேய, தைத்திரீய, சாந்தோக்கிய, பிருகதாரணிய, கௌஷீதகிப்பிராம்மண, டகோபநிடத, பிருகச்சாபால, சரப, ஜாபால, கைவல்லிய, காலாக்கினிருத்திர, சுவேதாசுவதர, மைத்திராயண, அதர்வசிரசு, அதர்வசிகை முதலிய உபநிடதப் பொருள்களை ஆதாரமாகக் கொண்டு வேதாந்த சூத்திரம் கிளர்ந்தமையானும், இவ்வுபநிடதங்களிற் பலவற்றையே மற்றைப் பாடியகர்த்தாக்கள் தத்தம் பாடியங்களில் எடுத்தாளுகின்றமையானும், இவ்வுபநிடதங்களே ஏகான்மவாத விண்டுவாதோபநிடதங்களினும் உற்கிருஷ்டமாய்ச் சிறந்தன. இவற்றுள்ளே அதர்வசிரசு என்னும் பெயர் கௌதமதரும சூத்திரத்து (கக. கஉ) ஆம், போதாயனதருமசூத்திரத்து (ஙு. க௦. க௦) ஆம், அதன் பொருள் இலிங்கபுராணம் (உத். கஅ) ஆம், ஆதித்திய புராணத்து இரண்டாம் அத்தியாயத்தினும், அதர்வசிகைப்பொருள் (கைலா. க௦. ஙுஉ) ஆம், (வா. பூ. உ. உகூ) ஆம், சுவேதாசுவதரப்பொருள் (வா. பூ. ச) ஆம், (கூர். பூ. கச) ஆம், (சௌ. உஎ) ஆம், கைவல்லியோபநிடதப் பொருள் மானவ புராணத்து ஆறும் அத்தியாயத்தினும், வேதாந்தசூத்திரத்து "ஆசீநாதிகரண" த்தினும் குறிக்கப்பட்டிருத்தலின் இவற்றை நவீனோபநிடதம் என்பார் மதி விரிவிலதாமெனவிடுக்க.

ஏவம் ஸம்சோதிதோ ருத்ரோ மாதவேந முராரிணா | சகார மோஹஶாஸ்த்ராணி கேஶவோऽபி ஶிவேரித꞉ | காபாலம் லாகுலம் வாமம் பைரவம் பூர்வபஶ்சிமம் | பாஞ்சராத்ரம் பாஶுபதம் ததாந்யாநி ஸஹஸ்ரஶ꞉ |

(உகூ) "முராரியாகிய மாதவரால் உருத்திரர் கேட்கப்பட்டும், உருத்திரராற் கேசவர் தூண்டப்பட்டும் காபாலம், இலாகுளம், சாக்தம், பைரவம், பாஞ்சராத்திரம், பாசுபதமுதலிய ஆயிரக் கணக்காக மற்றைய

மோகசாஸ்திரங்களை இருவருஞ் செய்தனர்" என்று (கூர். பூ. கசு)ற் கூறப்பட்டுள்ளது. பாசுபதம் மோகசாஸ்திரமாய்விடின், பின் அது பிரமாண மாதல் எங்ஙனமெனின்,

நிர்மிதம் ஹி மயா பூர்வம் வ்ரதம் பாஶுபதம் பரம்। குஹ்யாத் குஹ்யதமம் ஸூக்ஷ்மம் வேதஸாரம் விமுக்தயே। வேதமூர்த்திரஹம் விப்ரா நான்யஶாஸ்த்ரார்த்தவேதிபி:। ஜ்ஞாயதே மத்ஸ்வரூபம் து முக்த்வா வேதம் ஸநாதநம்। வாமம் பாஶுபதம் ஸோமம் லாகுளம் சைவ பைரவம்। அஸேவ்யமேததுக்தம் ஹி வேதபாஹ்யம் ததேதரம்।

(ந.௦) "மறைவினும் அதிமன்றவாய், சூக்குமமாய், வேதசாரமாய், சுபமாயுள்ள சிரௌதபாசுபதமானது எம்மால் (உருத்திரரால்) இயற்றப்பட்டது; இந்தப் பாசுபதயோகம் முமூட்சுக்களாலே சேவிக்கற்பாலது; வேதவிருத்தமாகிய வாமம், பாசுபதம், சோமம், இலாகுளம், பைரவம் என்னும் அன்னியசாஸ்திரங்களும் இவ்வுலகின்கண் மயக்கும்பொருட்டு எம்மாற் செய்யப்பட்டன, இங்ஙனம் வேதபாகியமாகக் கூறப்பட்டது சேவிக்கற்பாலதன்று" எனக் (கூர். உத். ந.அ)ற் கூறப்பட்டிருப்பதாற் பாசுபதமானது சிரேளதபாசுபதம் எனவும், அசிரேளதபாசுபதம் எனவும் இருதிறப்படும் என்றும், இந்த அசிரௌத பாசுபதத்தில் நகுலீசபாசுபத முதலியவும் அடங்கும் என்றும் ஓர்க.

அத ஏதத³தி⁴கரணம் கேவலேஶ்வரநிமித்தகவாதி³ஹிரண்யக³ர்ப⁴யோக³ஸ்ம்ருʼதி விஷய இதி வயம் வதா³ம: । அதோ ஹிரண்யக³ர்பா⁴க³ம நிராஸநபர இத³மதி⁴கரணமிதி யுக்தம் ।

(நக) "இந்தப் பசுபதி அதிக்ரணம் ஈசுவரரை நிமித்தகாரணமாகக் கூறும் * இரண்ணியகருப்ப யோக ஸ்மிருதியைப்பற்றியதேயாமாதலின், அது இரண்ணியகருப்பாகமத்தை நிரசிக்கும் பொருட்டுப் போந்ததாமெனல் யுக்தம்" என நீலகண்டசிவாசாரியர் தமது "பாசுபத்தியதிகரண"த்திற் கூறுகின்றனராதலின், சிரௌதபாசுபதாகமம் கண்டிக்கப்படவில்லை என அறியற்பாற்று. ஸ்ரீஉமாபதிசிவாசாரிய சுவாமிகளும் அவ்வதிகர

---

* ஹிரண்யக³ர்போ⁴ யோக³ஸ்ய வக்தா நாந்ய: புராதந: ।
"யோகமார்க்கத்தைப் பிரகடனஞ் செய்தவர் பழையோராகிய இரண்ணியகருப்பரன்றிப் பிறரன்று" எனப் பாரதங் கூறுகின்றது.

ணத்திற் கண்டிக்கப்பட்டது நிரூடபாசுபதமன்றிச் சித்தாந்த சைவாகம மன்றென்று பவுட்கரவியாக்கியையிற் கூறினர்.

माहेश्वरास्तु मन्यन्ते कार्यकारणयोगविधिदुःखान्ताः पञ्च पदार्थाः पशुपतिनेश्वरेण पशुपाशविमोक्षायोपदिष्टाः पशुपतिरीश्वरो निमित्तकारणमिति वर्णयन्ति ।

(௩௨) "காரியம், காரணம், யோகம், விதி, துக்கமுடிவு என்னும் ஐந்து பதார்த்தங்களும் பசுவின் பாசத்தை அறுக்கும்பொருட்டுப் பசுபதியீசுவரராற் கூறப்பட்டன என்றும், பசுபதியாகிய ஈசுவரரே நிமித்த காரணர் என்றும் (சைவர்கள்) கொள்கின்றனர் என்று சங்கராசாரியரால் வேதாந்தசூத்திர பாடியத்திலே (௨. ௨. ௩௭) கண்டிக்கப்பட்ட பாசுபதம் நகுலீசபாசுபதம் என்றும்,

तत्र कार्याणि पृथिव्यादीनि पञ्च तत्त्वानि रूपादयः पञ्च गुणाः श्रोत्रादि दशविधानि करणानि ज्ञानेन्द्रियाणि पञ्च कर्मेन्द्रियाणि पञ्च मनोबुद्ध्यहङ्काररूपाणि त्रीण्यन्तःकरणानीति त्रयोदशविधानि । ध्यानादि रूपो योगः । धर्मार्थव्यापारो विधिः । स च व्रतद्वारभेदेन द्विविधः । भस्मस्नान भस्मशयनोपहारादि व्रतम् । [illegible] प्रसिद्धे । उपहारः षड्विधः । हसित गीत नृत्त हुडुक्कार नमस्कार जपभेदेन । तत्र हसितमट्टहासः गीतं गान्धर्वशास्त्रप्रकारेण । हुडुक्कारो जिह्वा तालुसंयोगान्निष्पाद्यमानो वृषनादसदृशो नादः । जपनमस्कारौ प्रसिद्धौ । द्वाराणि क्राथन स्पन्दन मन्दन शृङ्गारण अवितत्करण अवितद्भाषणभेदेन षड्विधानि । असुप्तस्यैव सुप्तलिङ्गप्रदर्शनं क्राथनम् । वाताभिभूतस्येव शरीरावयवानां कम्पनं स्पन्दनम् । उपहतपादेन्द्रियस्येव गमनं मन्दनम् । रूपयौवनसम्पन्नां कामिनीमवलोक्यात्मानं कामुकमिव यैर्विलासैः प्रदर्शयति तच्छृङ्गारणम् । कार्याकार्य विवेक विकलस्येव लोकनिन्दितकर्मकरणमवितत्करणम् । व्याहतापार्थकादि शब्दोच्चारणमवितद्भाषणम् । दुःखान्तो द्विविधः । अनात्मकः सात्मकश्च । अनात्मकस्तु सर्वदुःखानामत्यन्तोच्छेदः । सात्मकस्तु दृक्क्रियाशक्तिलक्षणमैश्वर्यम् ।

(௩௩) "அங்கே காரியங்கள் என்றவை பிருதிவிமுதலிய ஐந்து தத்துவங்களும் ரூபமுதலிய பஞ்சகுணங்களுமாகிய பத்துமாம் என்றும், காரணங்கள் ஞானேந்திரியம் ஐந்தும் கன்மேந்திரியம் ஐந்தும், மனம் புத்தி அகங்காரம் என்னும் அந்தக்கரணம் மூன்றுமாகிய பதின்மூன்றுமாம் என்றும், தியான முதலிய ரூபமே யோகம் என்றும், தர்மார்த்தவியாபாரம் விதி என்றும், இது விரதம் துவாரம் என இருவகைப்படும் என்றும், பஸ்மஸ்நானம் பஸ்மசயனம் உபகாரமுதலியன விரதமாம் என்றும், பஸ்மஸ்நானமும் பஸ்மசயனமும் பிரசித்தம் என்றும், உபகாரம் அறுவிதப்படும் என்றும், அவை ஹாசம், கீதம், நிருத்தம், உடுக்காரம், நமஸ்காரம் செபம் என்பனவாம் என்றும், இவற்றுள் ஹாசம் அட்டகாசம் என்றும், கீதம் காந்தருவசாஸ்திரப் பிரகாரமாயுள்ளது என்றும், உடுக்காரமாவது நாக்கை உதடுகளோடு மருவி உண்டாக்கும் இருஷபநாதத்தொனி என்றும், செபநமஸ்காரம் என்பன பிரசித்தம் என்றும், துவாரங்களாவன காயனம், ஸ்பந்தனம், மந்தயானம், சிருங்காரணை, தத்காரணம், தத்பாஷணம் என அறுவகைப்படும் என்றும், இவற்றுள் நித்திரை செய்யாதவனாய் நித்திரைக் குறியைக் காட்டலே காயனம் என்றும், வாதநோயாற் பீடிக்கப்பட்டான் போலச் சரீர அவயவங்களை நடுங்கச் செய்தலே ஸ்பந்தனம் என்றும், நொந்த காலுடையான் போலப் போதல் மந்தயானம் என்றும், ரூபயௌவனமுடைய காமுக ஸ்திரியைப் பார்க்கும் காமுகன்போல விலாசங்களினாற் காட்டும் ஒழுக்கம் சிருங்காரணை என்றும், காரியாகாரிய விவேக விகற்பமற்றவன் போல உலகத்தினால் நிந்திக்கப்படும் கர்மகரணமே தத்காரணம் என்றும், கூறொணாத அப்பிரயோசன மொழிகளை உச்சரித்தலே தத்பாஷணம் என்றும், அநான்மகம் சான்மகம் என இருதிறப்படுவது துக்கத்தின் முடிவு என்றும், சகல துக்கங்களையும் மிகுதியும் ஒழித்துவிடலே அநான்மகம் என்றும், ஞானக் கிரியா சத்தி பல இலக்ஷணமுடைய ஐசுவரியமே சான்மகம் என்றும்" அப்பயதீக்ஷிதர் தமது வேதாந்த கற்பதரு பரிமளத்தினும், வித்தியாரணியர் தமது சர்வதரிசன சங்கிரகத்தினுங் கூறியிருக்கின்றனர். இதனால் அச்சங்கராசாரியரால் அசிரௌத நகுலீச பாசுபதம் கண்டிக்கப்பட்டதன்றி வைதிக சைவபாசுபதம் கண்டிக்கப்பட்டதன்று.

தத்ராநுஸாரிண ஸூத்ரவிவ்யா:। காயாரா: காரணா வா: வாஸவதா ஸ்ரூவாஸ்ரூதி ஸவெல்வெசெத வெஷவிரஞாம ............ஸூயந்தி। யதாஹ: காயாரா: ஈஙிகா ஷட்கதக்ஷஜ: வாஈஉராவிஶாரஷ:। ஹஹாஸநஸ்ய ஈத்ராநம யாக்வா நிவர்ண ஶூந்தி। தயாகாஜாஈவா கவி கவாவாதஹொஜந ஶவஹஸ்

(உ௩உ) எங்கும் வியாபகராயினாரை இங்ஙனம் ஓர் இடத்துள் வரையறுத்துத் தியானித்தல் பழுதாமெனின், அன்று; அவர் கொண்ட வடிவம் உபாசகர்பொருட்டாம் என்றும், கடத்துள் அடங்கிய ஆகாயம் உபாதிவசத்தினாற் சிறிதாயினும், சொரூபத்தினாற் பெரிதாம் என்று (வே. சூ. க. உ. எ) ல் நிரூபிக்கப்பட்டிருக்கின்றமையின், சிவபெருமான் பிண்டம் அண்டம் இரண்டினும் உபாசிக்கற்பாலர் என்று பெறப்படுகின்றது. பிண்டம் என்றது பிரமபுரமாகிய சரீரம், அண்டம் என்றது பிருதிவிமுதற் சிவதத்துவாந்தமீறாய முப்பத்தாறு தத்துவபுவனங்கள் அடங்கிநின்ற உலகம்.

(உ௩௩) தகராகாசம் என்றதில் தகரம் என்றது சிறுமையையும் ஆகாயம் என்றது அம்பலத்தையும் உணர்த்துதலின், தகராகாசமானது சிற்றம்பலம் எனப்படும். எங்ஙனமெனின்,

தகராகாசம்=தகரம் + ஆகாசம்
=சிறுமை+அம்பலம். இது நன். க௩௫-ம், க௩௬-ம்
=சிற்றம்பலம் என்றாயிற்று. [சூத்திரப்பிரகாரம்

வடமொழியிலே ஸ்ரீ என்பதுபோல, தமிழிலே திரு என்னும் பலபொருளொருசொல் மேன்மையுடைய எப்பொருட்கும் விசேடணமொழியாகி அவற்றிற்கு முன்னர் மகிமைப்பொருளை உணர்த்திவரும். வடமொழியில் ஸ்ரீதகராகாசம் எனற்பாலது தென்மொழியிலே திருச்சிற்றம்பலம் எனப்படுகின்றது.

(உ௩௪) (திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார் என்னும்) மூவர் (அருளிய) தேவாரமும், ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அருளிய திருக்) கோவை திருவாசகமும், திருமூலநாயனார் (அருளிய) திருமந்திரமுமாகிய இவை தங்கருத்தெலாம் திருச்சிற்றம்பலத்திலே நிறீஇ நிற்பனவாக, (திருவள்ளுவ) தேவர் (திருக்) குறளும், (சிவபெருமானருளிய) திருநான்மறை முடிவும் (உபநிடதங்களும்), வேதவியாசமுனிவர் (அருளிய) வேதாந்த சூத்திரமும் ஆகிய இவைகளும் திருச்சிற்றம்பலத்திலேயே தங்கருத்தெலாம் நிறீஇ நின்றவென்று உணர்த்துவாராய் ஔவையார்

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்.

என்றருளிச் செய்தார்.

# தேவர் குறள்.

(உருரு) மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்.

ஈண்டு மலர் என்றது தகரபுண்டரீகத்தின் மேற்று. "தகரபுண்டரீகமிசை ஏகினான்" எனவே, அது "தகரபுண்டரீகத்துள்ளேயுள்ள தகராகாயத்தின் கண்ணே ஏகினான்" எனச் (சாந். அ. க. க) சுருதிப்பிரகாரம் பொருட் படுத்தப்படும். ஏகினான் என்றது ஆதிபகவன் மேற்று. ஆதிபகவன் என்றது உமையோடியைந்த பகவானாகிய சிவபெருமான் மேற்று.

அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாய்நின்ற சிவத் துக்குச் சகளம், சகளநிஷ்களம், நிஷ்களம் என முத்திறத் திருமேனிக ளுண்டென்றும், சகளத் திருமேனியுடையார் மகேசுவரர் எனவும், நிஷ் கள சகளத் திருமேனியுடையார் சதாசிவர் எனவும், நிஷ்களத் திருமேனி யுடையார் சிவன் எனவுங் கூறப்படுவர் என்றும்,

ஶக்திஸ் ஶிவஸ்ய ஸ்யாத் தாதாத்ம்யஸ்ய மநோந்மநீ। மஹேஶஸ்ய ஷவாநீ ஸ்யா தக்திரேவ த்ரயா மதா (காமி. மந். கருசு)

(உருசு) காமிகாகமத்திலே "மகேசுவரருடைய சத்தியார் பவானி எனவும், சதாசிவனுடைய சத்தியார் மனோன்மனி எனவும், சிவனுருடைய சத்தியார் ஆதி எனவும் திருநாமமுறுவர் என்றுங்" கூறப்படுகின்றது. ஞானயோகஸ்தானமாய தில்லை எல்லைக்கண்ணாராகிய சிவனாரது சத்தி ஆதி எனப்படுவாராதலின்,

> ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினா
> லோதிய வொண்பொரு ளெல்லா—முரைத்ததனாற்
> றூதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
> வேதமே மேதக் கன.

என்று சங்கப்புலவருள் ஒருவராகிய பெருஞ்சித்தனார் கூறியாங்கு, வேதப்பொருள்களையெல்லாம் குறள் வெண்பாக்களினாலருளினோராய், வேதாகமப்பொருள்களெல்லாம் உணர்ந்தோராயுள்ள திருவள்ளுவநாயனார் விஷ்ணு, தேவர், இருடிகண்முதலிய பலர்க்கும் செல்லும் பகவன் என்னும் மொழியை அங்ஙனமாகவொட்டாது சிவபெருமானுக்கே ஈண்டுச் செல் லுமாறு, உமையம்மையாரை உணர்த்தும் ஆதி என்னும் விசேஷணமொழி யைப் புணர்த்தி ஆதிபகவன் என்றனர். ஆதலின், ஆதிபகவன் என்றது

சாந்தோக்கிய கைவல்லிய உபநிடதங்களிற் கூறப்பட்ட கிருஷ்ணபிங்களராகிய உமாசகாயனை உணர்த்திற்று.

சாந்தோக்கியத்திற் கூறப்பட்டவாறு, தகரபுண்டரீகத்துள்ளேயுள்ள ஆகாயத்துள்ளே "ஏகினன்" என்றவாறு கூறாது "ஆகாயத்தை" விடுத்து மலரைமாத்திரங்கொண்டு "மலர்மிசையேகினன்" என்று கூறினமை சுருங்கிய சொல்லால் விரிந்த பொருளைக் கூறும் அழகுபற்றியாம்; இமாசலத்துள்ளார் ஒருவர் "காசிக்கப்புறத்துள்ளார் இராமநாதர்" என்றவிடத்து இடையிற் சிதம்பரமில்லை என்று கொள்வாருண்டா? அதுபோல மலருக்குமேல் "ஏகினனை" க் கூறியவிடத்தும், திருச்சிற்றம்பலமாகிய தகராகாயம் தகரபுண்டரீகத்ததெனக் கோடற்பாற்று. இத்திருக்குறள் கைவல்லியோபநிடதப்பொருளைத் தொடர்ந்து அருளிச்செய்யப்பட்டது; இரண்டினும் மலராகிய இதய புண்டரீகமும் ஆதிபகவனாகிய உமாசகாயரும் பிரதிபாதிக்கப்பட்டிருத்தலின்.

சேர்ந்தார் என்றது ஆவிருத்தியதிகரணத்திற் (ச. க. உ) கூறப்பட்டவாறு திருச்சிற்றம்பலத்தின்கண்ணேயுள்ள சிவனோரோடு ஒற்றுமையுற இடையறாது சோஹம்பாவனையாகிய சிவோஹம்பாவனை செய்தலின்மேற்று.

"நிலம்" என்றது சாந்தோக்கியாதி உபநிடதங்களிலே பிரதிபாதிக்கப்பட்ட பிரமலோகமாகிய சிவலோகத்தின் மேற்று.

ஞானயோகிகள் மகாமாயோற்பன்ன விசுத்தகாரியகரணர்களாய் (தைத். உ. க. னும், சாந். அ. கஉ. ங) னுங் கூறப்பட்டவாறு, நிரதிசய பிரமானந்தத்தோடு மற்றைய வேட்ட போகங்களையும் நீடு துய்த்து வாழ்வார் என்றுணர்த்துவாராய் வள்ளுவநாயனர் "நீடுவாழ்வார்" என்றனர்.

# திருநான்மறைமுடிவு.

## இருக்குவேதம்.
## சுவேதாசுவதரோபநிடதம்.

ஜசொ zக்ஷரெ வாமெ வ்யோமந்யஸ்மிந்தேவா கயிவிஶ்வ நிஷெஷுஃ। யஸ்தந்ந வெட கிஂருசா கரிஷ்யதி ய ஊத்தத்விஃஸ்த ஊமெ ஸமாஸதெ।

(உஙஎ) "மூன்று வேதங்களின் நிதியாய்ப் பெரியோர் பற்றிநிற்கும் பரமாகாயத்ததாயுள்ள அழியாப் பொருளை அறியாதவனெவனே,

அவனுக்கு அவ்வேதத்தினுற் பயன் என்? அதனை அறிபவர்களே கிருதார்த் தராயமர்ந்தனர்'' என்று (இரு. வே. க. கசுச. ௩கூ. னும், சுவே. ச. அ) னும்,

## தைத்திரீயோபநிடதம்.

யொ வெஃ நிஹிதம் ஶுஹாயாம் வாமெ வொ்மந் ஸொ ஸுதெ ஸவா் காமா ஸஹ ஷ்ரஹ்மணா விவஸ்திதா॥

(உ௩அ) இதய குகைக்கண்ணதாகிய பரமாகாயத்தில் இருக்கும் (சச்சி தானந்த பிரமத்தை ) எவன் அறிகின்றனே, அவன் சர்வஞ்ஞதையுடைய பிரமத்தின் ஆனந்தத்தோடு சமஸ்த வேட்ட போகங்களையுந் துய்க்கின்ற னன்'' என்று (வே. சூ. ௩. ௩. சO)ற் கூறப்பட்டவாறு (தைத். உ. க)னும்,

ஸெஷா ஶாநவீ வாமணீ விஃவா வாமெ வொ்மந் ப்ரதிஷ்டிதா॥

(உ௩கூ) ''பரமாகாயத்திலே நிறுத்தப்பட்ட அந்த வித்தை (வருணன் கூற) பிருகுவாருணியினுல் அறியப்பட்டது'' என்று (தைத். ௩. சு) னும்,

## கடோபநிடதம்.

ஸொஸ்வநஃ வாரமாவொ்நாதி தஸ்ரிஷெ்ணாஃ வாமம் வசூ॥

(உசO) அவன் (அறுவித) அத்துவாவின் கரைக்கண்ணதாகிய அந்தப் பரப்பிரமத்தின் பரமாகாய சிவபதத்தை அடைகின்றனன்'' என்று (வே. சூ. ச. ச. உஉ. னும், ச. ௩. கசு) னுங் கூறப்பட்டவாறு, (கட. ௩. கூ) னும்,

## பிருகதாரணியோபநிடதம்.

ய ஷஷொஜஹ்ரிஷய ஆகாஶ ஸூஸ்திஂமெதெ ஸவஸ்ய வஶீ ஸவஸ்யெமாந ஸவஸ்யாயிவதிஃ॥

(உசக) ''எது இதயத்துள் ஆகாசமாயிருக்கின்றதோ, அதில் அனைத் தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் ஈசானரும், அனைத்துக்கும் அதி பதியுமாயினர் அமர்கின்றனர்'' என்று (பிரு. சு. ச. உஉ) னும்,

தஸ்ரி நஷஷரெ ஶாமிகாகாஶ ஓதஸ்ர வொ்ாதஸ்ர॥

(உசஉ) ''கார்க்கியே! அந்த அக்ஷரப்பிரமத்திலன்றே ஆகாயம் குறுக்கும் மறுக்குமாய் உற்றது'' என்று (பிரு. ரு. அ. கக) னும்,

## சாந்தோக்கியோபநிடதம்.

அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேஶ்ம தஹரோऽஸ்மிந்நந்தராகாஶஸ்தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம் |

(௨௪௩) "பிரமபுரம் என்னும் இதிலே தகரபுண்டரீக வீடு உள்ளது; இதிலே தகராகாசம் உள்ளது; இந்தத் தகராகாசத்துக்குள்ளேயுள்ளது நாடற்பாற்று; அறியற்பாற்று" என்று (சாந். அ. க. க) னும்,

ஸர்வாணி ஹ வா இமாநி பூதாந்யாகாஶாதேவ ஸமுத்பத்யந்தே ஆகாஶம் ப்ரத்யஸ்தம் யந்தி|

(௨௪௪) "ஆகாயத்திலிருந்து இப்பூதமனைத்தும் உற்பத்தியாகி, ஆகாயத்தைப் போய் அடைகின்றன" என்று (சாந். க. கூ. க) னும்,

## கைவல்லியோபநிடதம்.

ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விஶுத்தம் விசிந்த்ய மத்யே விஶதம் விஶோகம்| அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம் ஶிவம் ப்ரஶாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம் |

(௨௪௫) "இதயபுண்டரீகத்தைத் தூகளற்ற சுத்தமாகக் கருதி அதன் மத்தியிலே தெளிவுடையராய், சோகமில்லாதவராய், எண்ணப்படாதவராய், வெளிப்படாதவராய், அனந்தரூபராய், சிவனாய், பிரசாந்தராய், அமிர்தராய், பிரமயோனியாயுள்ளாரை .................. தியானித்து" என்றற்றொடக்கத்தனவாகக் கைவல்லியோபநிடதத்தினும்,

## மகாநாராயணோபநிடதம்.

ருதம் ததக்ஷரே பரமே வ்யோமந்|

(௨௪௬) "இந்த அந்தப் பிரமம் அழியாத பரமாகாயத்துள்ளது" என மகாநாராயணத்தினும்,

* தஹ்ரம் விபாப்மம் பரவேஶ்மபூதம் யத்புண்டரீகம் புரமத்யஸம்ஸ்தம் | தத்ராபி தஹ்ரம் ககநம் விஶோகஸ் தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்||

---

* தஹ்ரம் விபாபம் பரவேஶ்மபூதம் என்று பாடாந்தரமுண்டு.

(உ௪௭) "(பிரம)புரமத்தியிலே இருப்பதாய்ப் பாவமிலதாயுள்ள தகர புண்டரீக வீடு என எதுவுண்டோ, அதிற் சோகமிலதாகிய தகராகாசம் உள்ளது; அதனுள் உள்ளது உபாசிக்கற்பாற்று" என்று மகாநாராயணத்தினும்,

## முண்டகோபநிடதம்.

𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃।

(உ௪௮) "திவ்ய பிரமபுரத்திலே உள்ள ஆகாயத்திலே ஆன்மா (சிவபெருமான்) அமர்ந்தனர்" என (முண். உ. உ. எ) னும்,

## அதர்வசிகோபநிடதம்.

𑌶𑌂𑌭𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑌮𑌧𑍍𑌯𑍇 𑌧𑍍𑌯𑍇𑌯𑌃।

(உ௪௯) "சிவபெருமான் ஆகாயமத்தியிற் தியானிக்கற்பாலர்" என்று அதர்வசிகையினும்,

## பிரசிநோபநிடதம்.

𑌸 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌘𑌨𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌪𑍁𑌰𑌿𑌶𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌮𑍀𑌕𑍍𑌷𑌤𑍇।

(உ௫0) "அவன் இந்தச் சீவகனராகிய (இரணியகருப்பரினின்றும்) உற்கிருட்டராகிய (நாராயணர்க்கும்) பரமாய்த் (தகரபுண்டரீக) புரிக்கணுள்ள புருஷரைச் (சிவனுரைக்) காண்கின்றனன்" என்று (பிர. ௫. ௫) னும்,

## மாண்டூக்கியோபநிடதம்.

𑌅𑌮𑌾𑌤𑍍𑌰𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍋𑌽𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑍋𑌪𑌶𑌮𑌃 𑌶𑌿𑌵𑍋𑌽𑌦𑍍𑌵𑍈𑌤 𑌏𑌵𑌮𑍋𑌂𑌕𑌾𑌰𑌃।

(உ௫௧) "அளவில்லாதவராய், வாக்கிந்திரிய வியவகாரத்துக்கெய்தாதவராய், சமஸ்தப் பிரபஞ்சோபசாந்தராய், அத்துவிதராய், துரியராய், ஓங்காரராய் நின்ற சிவபெருமான்" என்றவிடத்துக் கூறப்பட்ட சிவபெருமான் நிவிர்த்திகலாசக்கரம், பிரதிஷ்டாகலாசக்கரம், வித்தியாகலாசக்கரம், சாந்திகலாசக்கரம் என்னும் நான்குக்கும் மேலாய் (௯0-ம் இலக்கத்திற்) கூறப்பட்ட சாந்தியதீத அத்துவாதீத பரமாகாய துரியமூர்த்தியாம் என்பது போதர மாண்டூக்கியோபநிடதத்தினுங் கூறப்பட்டிருக்கின்றது.

## ஈசாவாசியோபநிடதம்.

(உருஉ) ஈசாவாசியோபநிடதத்து முதன் மந்திரத்திற் கூறப்பட்ட ஈசரும் அச்சிவபெருமானையே உணர்த்திற்று.

## கேநோபநிடதம்.

(உருங) கேநோபநிடதத்திற் கூறப்பட்ட உமை பிருகதாரணிய சாந்தோக்கியாதி உபநிடதங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட பரமாகாயமாம்.

## தைத்திரீயோபநிடதம்.
## கண்ணுவசாகை.
## சதபதப்பிராம்மணம்.

(உருச) (தைத். உ. அ. னும், கண். சா. சூ. ங. ஙஉ, ஙங) னும் மநுஷ்யானந்தமுதல் ஒன்றுக்கொன்று மேன்மேலாகக் கூறி உயர்த்திக் கொண்டுபோய் முடித்த பதினொராவது பிரமானந்தம் (சத. பி. கச. சூ. சூ. க. னும், பிரு. ரு. சூ. க) னும் பிரதிபாதிக்கப்பட்டு, பிருதிவி சலில வாயு அந்தரிக்ஷலோக கந்தருவலோக ஆதித்தியலோக சந்திரலோக நக்ஷத்திரலோக தேவலோக இந்திரலோக பிரஜாபதிலோகம் என்னும் லோகங்களையெல்லாம் கடந்த பிரமலோகமாகிய சிவலோகத்தின்பாலதாம் என்றும்,

## ஐதரேயோபநிடதம்.
## அதர்வசிரோபநிடதம்.

(உருரு) இந்தப் பிரமலோகத்தையே ஐதரேயமும் அதர்வசிரசும் (ஐத. ரு. சூ. னும், சூ. ச) னும் சுவர்க்கலோகம் என்றுங் கூறியவாம் என்க.

(உருசூ) (தகரா) காசம் நுட்பமாய்விடின் பிரமபுரமாகிய சரீரத்துள் மாத்திரம் அடங்கிய தொன்ருய்விடுமே எனின், அன்று;

ஸ ஹோவாச யதூர்த்⁴வம் கா³ர்கி³ தி³வோ யத³வாக் ப்ருதி²வ்யா
யத³ந்தரா த்³யாவாப்ருதி²வீ இமே யத்³பூ⁴தஞ்ச ப⁴வச்ச ப⁴விஷ்யச்சே
த்யாசக்ஷத ஆகாஶ ஏவ ததோ³தஞ்ச ப்ரோதஞ்சேதி।

(பிரு. ரு. அ. எ)

(உருஎ) "கார்க்கியே, வானத்துக்கு மேலும் பூமிக்குக் கீழுமாக வானம், பூமி, இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்பவற்றை அடக்கிக் குறுக்கும் மறுக்குமாய், அமைந்ததெதுவோ அது ஆகாயத்தில் (அமர்ந்தது)" என, (அரைமாத்திரையிலடங்கும்மடி யகலமளக்கிற்பாரில்லாவடி * என்றவாறு) கூறப்பட்டிருத்தலின், அந்த ஆகாயம் அனைத்துக்கும் மேலாய் அளவுட் படாது விரிந்துபோந்தமை உணரற்பாற்று. இங்ஙனம் வேதாந்த சூத்திரத்துக்கு ஆதாரமாய் நின்ற ஈசகேநாதி உபநிடதமனைத்தும் ஆகாசம் பரமாகாசம் எனப்படும் தகராகாசத்தில் தங்கருத்தெலாம் நிறீஇ நின்றமை வெளிப்படை.

## மூவர் தமிழ்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்.

(உருஅ) கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.

வருமாந்தளிர்மேனிமாதோர்பாகமாந்
திருமாந்தில்லையுட் சிற்றம்பலமேய
கருமானுரியாடைக்கறைசேர்கண்டத்தெம்
பெருமான்கழலல்லாற்பேணாதுள்ளமே.

கோலமாயநீண்மதிற்கூடலாலவாயிலாய்
பாலனாயதொண்டுசெய்துபண்டுமின்றுமுன்னையே
நீலமாயகண்டனேநின்னையன்றிநித்தலுஞ்
சீலமாயசிந்தையிற்றேர்வதில்லைதேவரே.

பொன்றயங்கிலங்கொளிந்நலங்குளிர்ந்தபுன்சடை
பின்றயங்கவாடுவாய்பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினாய்கூடலாலவாயிலாய்
நின்றயங்கியாடலேநினைப்பதேநியமமே.

### பெரியபுராணம்.

ஒன் றுவே றுணர்வு மில்லே ஞெழிவற நிறைந்த கோல
மன்றினுன் மறைக ளேத்த மானுட ருய்ய வேண்டி

* திருவதிகை, திருவடித்தாண்டகம். எ.

நின்றுநீ யாடல் செய்கை நினைப்பதே நியம மாகு
மென்றுபூம் புகலி மன்ன ரின்றமிழ்ப் பதிகம் பாட.

## திருநாவுக்கரசுநாயனார்.

---

(உருகூ) வில்லைவட்டப்படவாங்கியவுணர்தம்
வல்லைவட்டம்மதின்மூன்றுடன்மாய்த்தவன்
றில்லைவட்டந்திசைகைதொழுவார்வினை
யொல்லைவட்டங்கடந்தோடுதலுண்மையே.

பெரியபுராணம்.

பரவுந் தில்லை வட்டத்துப் பயில்வார் பைம்பொ னம்பலத்து
ளரவும் புனலுஞ் சடையாட வாடு வார்கூத் தாராமை
விரவுங் காதன் மிக்கோங்க வேதம் படியுந் திருப்படிக்கீ
ழிரவும் பகலும் பணிந்தேத்தி யின்பஞ் சிறக்கு மந்நாளில்.

## ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார்.

---

(உகூ0) பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற
னூரூரன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா
னாரூரன்றம்பிரானாரூரன்மீகொங்கிலணிகாஞ்சிவாய்ப்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமன்றே.

பெரியபுராணம்.

அத்திருப் பதியை யணைந்துமுன் றம்மை யாண்டவர் கோயிலுட் புகுந்து
மெய்த்தவர் சூழ வலங்கொண்டு திருமுன் மேவுவார் தம்மெதிர் விளங்க
நித்தனார் தில்லை மன்றுணின் றாட னீடிய கோலநேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார்.

## முனிமொழி.

---

(உகூக) வேதாந்த சூத்திர நீலகண்டபாடியத்து ஜன்மாதிகரணத்தினும் (க. க. உ), ஆகாயப்பிராணாதிகரணத்தினும் (க. க. உரு, உச), சர்வத்திரப்பிரசித்தாதிகரணத்தினும் (க. உ. க), அக்ஷராதிகரணத்தினும் (க. ரு. கூ, க0), ஈக்ஷதிகர்மாதிகரணத்தினும் (க. ரு. கஉ), தகராதிகரணத்தினும் (க. ரு. கரு—உஉ), பிறவிடங்களினும் ஆங்காங்கே தகராகாயவிஷயம் கூறப்பட்டிருத்தல் சிவார்க்கமணிதீபிகையினால் நன்கு புலப்படும்.

# திருக்கோவையார்.

(௨௯௨) எனும்பாலணியிறையம்பலத்தோனெல்லைசெல்குறுவோர்
நலம்பாவியமுற்றுநல்கினுங்கல்வரைநாடரம்ம
சிலம்பாவடிக்கண்ணிசிற்றிடைக்கேவிலைசெப்பலொட்டார்
கலம்பாவியமுலையின்விலையென்னீகருதுவதே.

(இ—ள்) சிலம்பா, எனும்புகளால் அலங்கரிக்கும் இறைவர், திருச்சிற்றம்பலத்தின்கண்ணார், அவரது (சிற்றம்பலத்தில்லை) எல்லைக்கண்ணே அவரை அருண்ஞானத்தினால் வியாபித்தணுகுதற்குக் கருதும் சீவன் முத்தராயினரது நன்மைபரந்த (பிருதிவி முதற் சிவதத்துவாந்தம் வரையுமுள்ள) பிரபஞ்சமனைத்தையும் நீ கொடுப்பினும், எம்முடைய தமராகிய கல்வரைநாடர் வடிவகிர்போலும் கண்ணையுடையாளது சிறிய இடைக்கே விலையாகச் சொல்லுதல் இயையார், கலம்பரந்த முலையின் விலையாக யாதனை நீ கருதுவது? ஒன்றற்கும் அவர் உடம்படார்; என்பதாம்.

## பெரியபுராணம்.

அறிவி னெல்லை யாயதிருத் தில்லை யெல்லை யமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப் பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்
செறியு ஞான போனகர்வந் தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார்.

# திருவாசகம்.

(௨௯௩) எம்பிரான் போற்றி வானத் தவரவ ரேறு போற்றி
கொம்பரார் மருங்குன் மங்கை கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
யும்பரா போற்றி யென்னை யாளுடை யொருவ போற்றி.

# திருமந்திரம்.

(௨௯௪) விம்மும் வெருவும் விழுமெழு மெய்சோருந்
தம்மையுந் தாமறி யார்கள் சதிர்கெடுஞ்
செம்மை சிறந்த திருவம் பலக்கூத்து
ளெம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே.

இங்ஙனம் திருக்குறண்முதலிய நூல்களிலிருந்து ஒவ்வோர் பிரமாண மாத்திரம் ஸ்தாலீபுலாக நியாயங்கொண்டு எடுத்துக் காட்டினம். மற்ற வைகளை முன்பின் மலைவற ஆராயவல்ல பெரியோர் திருச்சிற்றம்பலத்தி லேயே எப்பொருள்களுங் கோவைபட்டிருத்தல் காணவல்லுநராவர்.

ஜ்ஞாநம் க்ரியா ச சர்யா ச யோகஶ்சேதி ஸுவ்ரதாஃ।
சதுஷ்பாதஃ ஸமாக்யாதோ மம தர்மஃ ஸநாதநஃ॥
(வாயு. உத். கக. ௩O)

தத்ராகதஃ பரோ யஸ்து ஶ்ரேயாஞ்சாஸ்தா சதுர்விதஃ।
தேஷு பாஶுபதோ யோக ஶிவம் ப்ரத்யக்ஷயேத்த்ருவம்॥
(வாயு. பூ. உஅ. கஎ)

(உசுரு "சரியை கிரியை யோகம் ஞானம் எனச் சிவபுண்ணியம் நால்வகைப்படும்; அவற்றுட் பாசுபதயோகம் உறுதியாய்ச் சிவபிரானு ரைப் பிரத்தியக்ஷமாக்கும்" என்று வாயுசங்கிதை கூறலானும், அந்தப் பாசுபதயோகத்தையே நீலகண்டசிவாசாரியர் கன்மயாகம் தபயாகம் ஜப யாகம் என்னும் இந்த மூன்றுக்கும் மேற்பட்ட ஞானதியானம் (ஞான யோகம்) என்றும், இது பிரமசொரூபத்தை அடைதற்கு நேரே ஹேது வாயுள்ளதென்றும் அக்கினிகோத்திராதிகரணத்தில் (ச. க. கசு) கூறினராக, சைவசித்தாந்த சந்தானு சாரியருள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியர் தில் லைச் சிற்றம்பலத்தை ஞானயோகஸ்தானம் என்பாராய்

பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி
யிறந்தில மிரண்டு முத்தி யின்பமும் பின்ப தாநா
முறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தான மாமாற்
செறிந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரியலாமே

என்றருளிச் செய்தனர்.

ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் என்னும் முத்திறத் தத்துவங்களுள்ளே அதோபாக ஆன்மதத்துவத்தினின்ற ஏகான்மவாதியார் அக்கிரபாக சிவதத்துவத்தின்பாலராம் திருச்சிற்றம்பலவரை மந்தபுத்தி யினர் உபாசனையின்பொருட்டுள்ளார் என்று தூஷித்தலானும், அங்ங னம் வைணவருக்கும் அத்திருச்சிற்றம்பலம் உருசிக்காமையானும், சமஸ்த சாஸ்திரப்பிரதிபாதிதமாகிய திருச்சிற்றம்பலமானது சைவசமயிகளுக்கே ஏற்புடைத்தாய் வாய்த்த பெருஞ் செல்வமாயிற்றென்க.

(உசுசு) "இருடி வாமதேவர் நான் மனுவாயினேன் சூரியனுயினேன் என்றனர்; இங்ஙனம் நான் பிரமமாகின்றேன் என்று அறிபவன் (பாவிக்கிற

வன்) எல்லாமாயாகின்றனன்; தான் வேறு தேவதை வேறெனக்கொண்டு அன்னியமாய்த் தேவதையை வழிபடின் அவன் அறிந்தவனாகான்" என்று (பிரு. ௩. ௪. ௧௦) கூறுகின்றமையின், துவிதபாவனையொழிந்து அத்துவித பாவனை செய்பக்கடவன். "தேவனென்றோ, இராஜனென்றோ, நானே ஈதெல்லாம் என்றோ தியானிக்குங்கால், அவன் ஆசை துறந்தவனாய், அபகத பாப்மத்துவகுணமுடையனாய், பயமிலனாயாகின்றான். அவன் மனைவியினால் ஆலிங்கனஞ் செய்யப்பட்டவிடத்தும் யாதும் அறியானாய், (அருள்) ஞான பரமான்மாவினாற்றழுவப்பட்டு, உள்ளும் புறம்பும் அறியாது நிற்கின்றனன் (எனவே, பரமானந்தமடைந்து நிற்கின்றனன்)" என்று (பிரு. ௬. ௩. ௨௦, ௨௧) ற் கூறப்படுகின்றது.

பி⁴ந்நே தே³ஹே ஶிவோ பூ⁴த்வா ஶிவயோக³ஸமந்வித:|
ஶிவாநந்த³ மநுபூ⁴யாபி அவிபா⁴கா³ய கல்பதே|

(௨௬௭) "பின்னமாகிய தேகத்திலே சிவகுணங்களோடியைந்து சிவனாகிச் சிவானந்தம் அநுபவித்து வேறுபடாதிருக்கின்றனன்" என இரௌரவாகமத்தினுங் கூறப்பட்டிருக்கின்றது. பரமான்மாவைக் (குருப் பிரசாதத்தினாற்) கண்டு, கேட்டு, நினைந்து, அறிந்தால் இஃதெல்லாம் அறியப்பட்டதாயிற்று என (பிரு. ௬. ௫. ௬) பிரமபாவனை கூறி, சைந்தவ வுப்புக்கட்டியானது உள்ளும் புறமுமின்றி எல்லாம் இரசகனமாயிருத்தல் போல, இந்தப் பரமான்மாவும் உள்ளும் புறம்புமாகியவெல்லாம் (அருண்) ஞானகனமாயிருக்கின்றதென்று (பிரு. ௬. ௫. ௧௩) னும்,

அவிநாஶீ வா அரே (அ)யமாத்மா அநுச்சி²த்தித⁴ர்மா|

(௨௬௮) "இந்தப் பரமான்மா நாசமிலாததும் சேதிக்கப்படாதது மாகிய குணத்தையுடையது" என்று (பிரு. ௬. ௫. ௧௪) னும், "அங்கே துவிதமாயிருந்தாலன்றோ ஒருவன் ஒன்றைப் பார்ப்பதும், ஒருவன் ஒன்றை மணப்பதும், ஒருவன் ஒன்றை உருசிப்பதும், ஒருவன் மற்றொருவனை வாழ்த்துவதும் பிறவும் நிகழும்; அவன் பிரமபாவனையினால் எல்லாம் பிரம மாய் இருக்குங்கால், அவன் மற்றொன்றைப் பார்ப்பதெங்ஙனம்! மணப்ப தெங்ஙனம்! உருசிப்பதெங்ஙனம்! வாழ்த்துவதெங்ஙனம்! கேட்பதெங்ஙனம்! பரிசிப்பதெங்ஙனம்! அறிவதெங்ஙனம்!" என்று (பிரு. ௬. ௫. ௧௬) னுங் கூறியதூஉம் அப்பரமானந்தநிலைபற்றியேயாம். மேலும், பிரமபாவனை (தைத். ௩. ௧௦. ௪, ௫, ௬)னும், (முண். ௩. ௧. ௨, ௩) னுங் கூறப்பட்டிருக்கின்றது.

ஶிவோ த்³ரஷ்டா ஶ்ரோதா வ்யாபகம் விஶ்வவிக்³ரஹ:| யஶ்ச வேதா³ஹமேவேதி ஸ ஏவ ஶிவதாம் வ்ரஜேத்|

(உசுகூ) "சிவன் வேறு தான் வேறு என்னுந் துவிதபாவனை யொழிந்து சிவமே நான் என்னும் அத்துவிதபாவனையை எப்போதும் பயில்க" என்று சர்வஞ்ஞானோத்தரங் கூறியதூஉம் மேலே கூறிய சுருதிப் பொருளையேயாம்; இந்தச் சிவானந்தநிலையில் நிற்பவன் ஒன்றைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் பார்ப்பதில்லை என்றற்றொடக்கத்தனவும் ஆனந்த மேலீட்டினால் அவன் மனசு பிற விஷயம்பற்றிக் கவரப்படாதென்பதை உணர்த்தின. பெத்தாவஸ்தையில் ஆன்மாவேனும், மற்றைச் சடப்பொருளேனும் அறிவித்தால் அறிவதுங் காட்டினாற் காண்பதும், இயக்கினால் இயங்குவனவுமாயிருத்தலால், அறிபவரும், காட்டுபவரும், இயக்குபவரும் பரப்பிரமசிவனார் என்று பிருகதாரணியத்து அந்தரியாமிப்பிராம்மணங் கூறிற்று.

ஏஷ ஹ்யேவாநந்தயாதி।

(உஎ0) "இவரே ஆனந்தத்தை விளைவிக்கின்றாரன்றோ" என்று (தைத். உ. எ) னும்,

ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி।

(உஎக) "இவன் ஆனந்தத்தை அடைந்து ஆனந்தமாகின்றனன்" என்று (தைத். உ. எ) னும்,

ப்ரஹ்மரஸம் லப்த்வாநந்தீ பவதி நாந்யதா॥

(உஎஉ) "பிரமானந்தத்தை அடைந்து ஆனந்தமாகின்றனன்; மற்றோர் பிரகாரத்தால் அன்று" என்று சிவாகமத்தினுங் கூறப்பட்டது. இங்ஙனம் சர்வஞ்ஞதாதி குணங்களையுடையவனாய் விளங்குதலே சிவத்துவம் எனப்படும்.

வித்யயா தத்விநாஶேந ஸாயுஜ்யம் யாதி நாந்யதா।
அத ஸாயுஜ்யம் தயோ ஸாக்ஷாத் ஶைவம் ஏவ ந சேதரத்॥

(உஎங) "வித்தையினாலே அவித்தை நீங்கியவிடத்துத் தானே சித்தித்த ஐக்கியமே சிவேசுரர்க்கு எய்துகின்றது; அதுதான் சாமியம் என்று பிரமகீதையிற் புகுத்திய சுலோகமும், அதன் தாற்பரிய தீபிகையும், ஏகான்மவாதியார் (முண். ங. க. ங)ற் பொறித்த உரையும் கற்பனைகளாம் என்பது பின்வரும் பிரமாணங்களாற் சித்திக்கின்றது.

ஸவ்ருக்ஷகாலாக்ருதிபி: பரோऽந்யோ யஸ்மாத் ப்ரபஞ்ச: பரிவர்ததேऽயம்।
தர்மாவஹம் பாபநுதம் பகேஶம் ஜ்ஞாத்வாத்மஸ்தமம்ருதம் விஶ்வதாம॥

(உஎச) "முற்றறிவு, வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், தன்வயமுடைமை, பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, இயற்கையுணர்வினனாதல், தூயதேகமுடையனாதல் (என்னும் எண் குணங்களை) அடைபவன் சிவத்துவத்தைப் பெறுகின்றான்" என்று சர்வஞ்ஞானோத்தரங் கூறுகின்றது.

ஶாஸ்த்ரா த்த்ஸுணா ஸர்வே ஸங்க்ராமந்தே ததாத்மநி|
வுண்யவுருஷஸம்வகா த்வுண்யா நீவ ததோ ந்ருதம்|
வுண்யம் ஸங்க்ராமதே வும்ஸா ஶித்யாதி வசநாத் ஸ்ஹுடம்|
தயா ச ஶிவவந்முக்தா ஸர்வஜ்ஞத்வாதி யாதிநாம்|
ஜத்யேவம் முணஸங்க்ராந்த ஸாம்யவக்ஷா நிரூபிதம்|

(உஎரு) "சிவபெருமானிலிருந்து அக்குணமனைத்தும் அப்போது ஆன்மாவிற் சங்கிரமிக்கின்றன; புண்ணியபுருஷசம்பர்க்கத்தினாற் புண்ணியங்கள் ஒருவனுக்கு எய்துமாறு போல என்றற்றொடக்கத்தவற்றால் வெளிப்படை; அங்ஙனமே சிவபெருமானைப் போல முக்தராயினோரும் சர்வஞ்ஞத்துவாதி குணங்களையுடையராகின்றனர்; இங்ஙனம் குணங்கள் ஆன்மாவிற் சங்கிரமிக்கும் என்னும் சாமியபக்ஷம் நிரூபிக்கப்பட்டது" என்று சித்தாந்தவிவேகத்தினும்,

யஸ்யைதே அஷ்டாசத்வாரிம்ஶத்ஸம்ஸ்காரா அஷ்டௌ சாத்மகுணா ஸ ப்ரஹ்மண ஸாயுஜ்யம்|

(உஎசு) "எவனுக்கு இந்த நாற்பது சம்ஸ்காரங்களும் பரமான்மாவின் (சர்வஞ்ஞதாதி) எண் குணங்களும் எய்துகின்றனவோ, அவன் பிரமத்தின் சாயுச்சியத்தை அடைகின்றனன்" என்று கவுதமசூத்திரத்து எட்டாவது கண்டத்தினும்

(உஎஎ) அஷ்டௌ வர்ணாம் விமாநேந முணாவஷ்டௌ ரசரேத்| ஓம் ஹாம் தந்நி ஸர்வஜ்ஞா ஹவ ஸ்வாஹா| ஓம் ஹீம் தந்நி வரித்ருப்தோ ஹவ ஸ்வாஹா| ஓம் ஹூம் தந்நி அநாதிபோதோ ஹவ ஸ்வாஹா| ஓம் ஹைம் தந்நி ஸ்வதந்த்ரா ஹவ ஸ்வாஹா| ஓம் ஹௌம் தந்நி அலுப்தஶக்தி ஹர்வ் ஸ்வாஹா| ஓம் ஹ: த்ந்நி அநந்தஶக்தி ஹர்வ ஸ்வாஹா என்று(அக். அஅ. சசு)ம் சுலோகத்துக்குப் பின்னும்,

(உஎஅ) தமேவதாம் முணாந்வ்வாந ஶஸ்யா வவா அயேத்| ஸர்வஜ்ஞதா த்ருப்தி ரநாதிபோத ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தஶக்தி|

ஸமாவர்த்திநம் ஸாதகஸ்ய தேநதாம் யாத்யேவ ச என்று (வாயு. உத். கரு. க0க, க0உ) னும் உணர்த்தப்பட்டவாறு

ஆன்மாவிலே சர்வஞ்ஞதைமுதலிய சிவகுணங்கள் பதிதலே சாமியம் என்பது போதர

தேந ஸ்ரீவஸமோ ஹவெத்।

(உஎக) "முக்தன் சிவசமமாகின்றான்" என்று (வாயு. பூ. உ. எசு. னும், உஅ. உஉ) னும்,

ஸாம்யம் ஶிவஸாதநதா।

(உஅ0) "சாதிக்கப்பட்டது சிவசாமியம்" என்று (வாயு. உத். கக. கஉ0) னும்,

(உஅக) ஸ்ருஷ்ட்யாதீந ச நியோஜ்ய ததர வாயா ஶிஷ்யஸ்ய விதூர்திகாம ஸவர்ஜ்ஞவஸாதர்யதநாதிகேதி ஸாதகஸ்ய ஸஂஜ்ஞாநி ச। ஶக்திம் வ்யக்திசேதீதேந விஷயாம் ஷட்கம் குணாநாம் தத ஶ்ராவா ஜ்யாநவத ஸ்ரீவெந ஸத்யஶம் ஶிஷ்யே ததா யோஜயெத்।

என்று சித்தாந்தசாராவளியினுங் கூறப்படுகின்றது. இந்தச் சிவத்துவத்தை உபநிடதங்கள் அமிர்தத்துவம் என்று வழங்குகின்றன.

அம்ருதத்வம் ஹி விந்ததே।

(உஅஉ) "சிவத்துவத்தைத் திளைக்கின்றனன்" என்று (கேந. கஉ) னும்,

ப்ரஹ்மஸம்ஸ்தோ ஂம்ருதத்வமேதி।

(உஅங) "பிரமத்திலே (சிவோஹம்பாவனையினால்) நிறீஇ நின்றோனே சிவத்துவத்தை அடைகின்றனன்" என்று (சாந். உ. உங. க) னும்,

தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி।

(உஅச) "(தலைநாடிவாயிலாக) மேலே போய்ச் சிவத்துவத்தை அடைகின்றனன்" என்று (சாந். அ. சு. சு. னும், கட. சு. கசு) னும்,

அம்ருதத்வஸ்ய து நாஶாஸ்தி வித்தேந।

(உஅரு) "செல்வத்தினாற் சிவத்துவம் எய்தும் என்னும் நம்பிக்கை இல்லை" என்று (பிரு. ச. ச. உ. னும், சு. ரு. ங) னும்,

ஏதாவதரே கல்வம்ருதத்வம் |

(உஅசு) "இவ்வளவுதான் சிவத்துவம்" என்று (பிரு. சு. ரு. கரு) னும்,

ஸ்வர்கலோகா அம்ருதத்வம் பஜந்தே |

(உஅஎ) "சுவர்க்கலோகத்துள்ளார் (சிவலோகத்துள்ளார்) சிவத்துவத்தை அடைகின்றனர்" என்று (கட. க. கங) னும்,

அத தீரா அம்ருதத்வம் விதித்வா |

(உஅஅ) "வித்துவான்கள் சிவத்துவத்தை அநுபவித்து" என்று (கட. ச. உ) னும்,

அம்ருதத்வஞ்ச கச்சதி |

(உஅகூ) "சிவத்துவத்தையும் அடைகின்றனன்" என்று (கட. சு. அ) னும்,

அம்ருதத்வமேதி |

(உகூ0) "சிவத்துவத்தை அடைகின்றனன்" என்று (சுவே. க. சு) னும் கூறப்பட்டிருத்தலான் வேதாந்தாகமாந்தங்களெல்லாம் ஒரே பொருட்பட நின்றவாறு தெள்ளிது.

இங்ஙனம் சிவத்துவம் அடையும் வித்துவானுக்குத் தலைநாடிவாயிலாக உற்கிரமணமுஞ் சிவலோகப் பிராப்தியும் உளவாம்.

(உகூக) "இதயத்துள்ள நூற்றோர் நாடிகளுள்ளே ஒன்று தலைவாயிலாகப் போந்தது. இந்நாடிவாயிலாக (மரணகாலத்தில்) உற்கிரமணஞ் செய்வோன் மேலுலகத்தை (பிரமலோகத்தை) அடைந்து சிவத்துவம் எய்துகின்றனன். மற்றைய நாடிகள் மற்றைய உலகங்களைப் பிறர் (அவித்துவான்கள்) அடைதற்கு உதவாநின்றன" என்று (சாந். அ. சு. ரு. னும், கட. சு. கசு) னுங் காணப்படுகின்றது. படவே, வித்துவான் சிரநாடிவாயிலாகவும், அவித்துவான் மற்றைய நாடிகள்வாயிலாகவும் உற்கிரமிக்கின்றனர் என்றாயிற்று. இங்ஙனம் புறப்படுவார்க்கு உத்தராயணமார்க்கம் தக்ஷிணாயனமார்க்கம் என இரண்டு கூறப்படுகின்றது. உத்தராயணமார்க்கமானது அர்ச்சிராதிமார்க்கம் எனவும், ஒளிமார்க்கம் எனவும், தேவயானம் எனவும், தக்ஷிணாயனமார்க்கமானது தூமமார்க்கம் எனவும் படும். பஞ்சாக்கினிவித்தை அறிந்தவர்களும், வனத்திலிருந்து பத்திஞானம்வாயிலாக உபாசிப்பவர்களும் ஒளியை அடைந்து, இதிலிருந்து பகலை அடைந்து,

இதிலிருந்து பூருவபக்கம் அடைந்து, இதிலிருந்து உத்தராயணமடைந்து, இதிலிருந்து தேவலோகத்தை அடைந்து, இதிலிருந்து ஆதித்தியலோகத்தை அடைந்து, இதிலிருந்து மின்னலை அடைய, அங்கே ஓர் அமானவன் வந்து அவர்களைப் பிரமலோகத்துக்கு நடாத்தச் சென்று அங்கே போய்ப் பெரியோராய் நீடு வசிக்கின்றனர்; அவர்களுக்குப் புநராவர்த்தி இல்லை (மீளுதல் இல்லை) என்றும், வேள்விகளானும், தானங்களானும், தபசுகளானும், உலகத்தை வெல்வோர் தூமமார்க்கம்வாயிலாகப் போய்ச் சந்திரனை அடைகின்றனர் என்றும், அங்கே கன்மம் புசித்து எஞ்சிய கன்மத்தோடு அங்கிருந்து பின்னர்ப் பூமிக்கு மீளுவார் என்றும், இவ்விரு மார்க்கமும் அறியாதோர் பறவை புழு முதலியவைகளாய்ச் செனிப்பார் என்றும் (பிரு. அ. உ. கரு, கசு. னும், சாந். ரு. க0. க—அ. னும், கௌஷீ. க. உ. ங) னுங் கூறப்பட்டிருக்கின்றது.

(உகூஉ) உபகோசலவித்தை கூறியவிடத்துத் தேவயானம் (ஒளிமார்க்கம்) வாயிலாகப் பிரம (லோக)த்தை அடைந்து, மீளத் திரும்புவானல்லன் என ஒளிமார்க்கமாத்திரம்(சாந். ச. கரு. க—சு)ற் கூறப்பட்டுள்ளது.

(உகூங) உத்தரம் தக்ஷிணம் என்னும் இரு மார்க்கங்களையும் சுருக்கிச் சூசித்து, ஆன்மாவை நாடினோர் சிவனூர் (அமிர்தர்) லோகத்தை அடைந்து மீளத் திரும்புவாரல்லர்" என்று (பிர. க. க0) ற் கூறப்பட்டிருக்கின்றது.

(உகூச) இங்ஙனமாக, வித்துவான் ஆப்தகாமனுயாவது, அகாமனுயாவது, நிஷ்காமனுயாவது, பிரம (சிவ) பாவனையினாற் பரமசாமியம் அடைந்து (முண். ங. க. ங), மரணகாலத்திலே தன் ஆன்மாவைப் பிராணன்களெல்லாம் பிரியாது சூழும, தனது உடற்கணுள்ள நூற்றோர் நாடிகளுட் சிறந்த தலைநாடிவாயிலாகப் புறப்பட்டுத் தேவயானம் எனப்படும் உத்தராயணமார்க்கமாகப் போய்ப் பிரமலோகத்தை அடைந்து, புநராவர்த்தியின்றிப் பிரமானந்தத்தோடு சமஸ்த போகங்களையும் துய்த்து நீடு வசிக்கின்றனன் என்பதே எல்லா முக்கிய உபநிடதங்களின் கருத்து. ஈண்டு ஆன்மா போக்கு மீட்சியின்றி இலயமடைவதாக முக்கிய உபநிடதங்களில் ஓர் பிரமாணத் துணுக்கை வாக்கியமேனும் இல்லை.

(உகூரு) சரீரத்துத் தலைநாடிவாயிலாகச் செல்பவன் (வித்துவான் சிவலோகத்தை அடைந்து) அமிர்தத்துவத்தை அடைகின்றனன் என்றும், மற்றவர்கள் (அவித்துவான்கள்) கந்தருவலோக முதலியவைகளுக்கு மற்றைய நாடிகள்வாயிலாகச் செல்கின்றனர் என்றும் (கட. சு. கசு) ற் கூறப்படுகின்றது.

(உகசு) தன் இதயத்துள்ள ஆசைகளெல்லாம் நீங்கப்பெற்று நிஷ்காமனுயுள்ள மனிதன் (வித்துவான்) அமிர்தனுகிப் பிரமத்தைப் போயடைகின்றனன் என்று (கட. சு. கச) கூறுகின்றது, பிரமத்தை அடைகின்றனன் என்றமையால், அவன் சென்ற மார்க்கம் தேவயாணம் (உத்தராயணம்) என்றும், ஆசையறாத வித்துவான்கள் சென்ற மார்க்கந் தக்ஷிணாயனம் என்றும் பெறப்படுகின்றது.

(உகஎ) "வித்துவான் புண்ணியபாவமொழிந்து நிரஞ்சனனாய் (மலமிலனாய்) பரமசாமியத்தை (சிவசாமியத்தை) அடைகின்றனன்" என்று (முண். ங. க. ங) ற் கூறி, "மெய்ப்பொருளால் விரிக்கப்பட்டது தேவயானம் என்றும், ஆப்தகாமர்களாகிய (ஆசைகளில் இனிப்பற்று வேண்டாம் என்று திருப்தி பூண்டவர்களாகிய) இருடிகள் இந்தத் தேவயானம்வாயிலாக அந்த மெய்ப்பொருளாகிய சிவபெருமானது (பரமாகாய) உலகத்தை அடைகின்றனர் என்றும் (முண். ங. க. சு) ற் கூறப்படுகின்றது. இதனாற் சிவபாவனை செய்து சிவப்பிரமத்தினாற் தேவயானம்வாயிலாக ஆப்தகாமர்களாகிய இருடிகள் (வித்துவான்கள்) சிவலோகத்தை அடைகின்றனர் என்று பெறப்படுகின்றது.

(உகஅ) ஜனகவைதேகர் என்பார் யாஞ்ஞவற்கியரை நோக்கி மோக்ஷத்தின்பொருட்டுக் கூறல் வேண்டுமென்று (பிரு. சு. ங. கரு) ல் வேண்ட, யாஞ்ஞவற்கியர் கேவல சகலாவஸ்தைகளை (பிரு. சு. ங. கஅ, ககூ) ல் உணர்த்தி, பிரமாஹம்பாவனை செய்யுமியல்பை (பிரு. சு. ங. உ0) ற் கூறி, (பிரு. சு. ங. உக) ற் சிவோஹம்பாவனை செய்வோனுக்கு (சாந். அ. க. ங) ற் கூறப்பட்ட சர்வஞ்ஞதாதி குணங்களை உணர்த்தும் அபகதபாப்மத்துவாதி எண் குணங்களும் ஆன்மாவிற் பரமசாமியமாய் விளங்குதல் சிவானந்த மிகுதிக்கு வேண்டப்படும் என்பதுணர்த்த அவ்வெண்குணங்களுள் முதற்கணின்ற அபகதபாப்மத்துவத்தை (சர்வஞ்ஞதையை) உணர்த்தி, அந்த ஆனந்தமேலீட்டினால் மனைவி முதலாயினோர் தழுவினும் அவன் அதனை அறியமாட்டான், இவன் ஆப்தகாமனாய், ஆன்மகாமனாய் (பரமான்மாவிற் பற்றுடையனாய்), அகாமனாய் (வேறு பற்றிலனாய்), சோகமிலனாய் இருப்பனென்றுரைத்து, பின்னரும் அந்தச் சீவன்முக்தனுடைய (சுத்தாவஸ்தை) நிலையைப் பலபிரகாரம் (பிரு. சு. ங. உஉ—ஙஉ) வரையும் உணர்த்தி, அவனது ஆனந்தம் பதின்வகை ஆனந்தத்தினும் சிறந்த பரமானந்தமாம் என்று (பிரு. சு. ங. ஙங) ற் கூறி, மரணகாலத்தில்

ஸ்வெ-ந் வூாணா உஹிஸூாயதி
யமெ-தூ தஃ-ஞெ-ராதூாவீ ஹவதி |

(உகூகூ) "பிராணன்களெல்லாம் அவன் ஆன்மாவைச் சூழ்ந்திருக்கின்றன, அவன் ஊர்த்துவமாக உச்சுவாசஞ் செய்பவனுகின்றனன்" என்று (பிரு. சு. ௩. ௩அ)ல் விளக்கினர். இதனுற் பிரமபாவனை செய்து பிரமானந்தமடைந்த வித்துவான் ஆப்தகாமனுய், அகாமனுய், ஆன்மகாமனுயிருப்பான் என்றும், மரணகாலத்தில் அவன் பிராணன்கள் அவன் ஆன்மாவைச் சூழ்ந்திருப்ப, அவன் உயிர் உற்கிரமணஞ் செய்கின்றதென்றும் பெறப்படுகின்றது.

(௩௦௦) (அவித்துவான் விஷயநோக்கி) (பிரு. சு. ச. சு) ற் கூறுமிடத்து, எதிலே ஒருவனுக்கு மனசு பதிந்ததோ, அதனையே தொடர்ந்து அவன் செய்கின்றனன் என்றும், அந்த உலகத்திலே தனது கன்மபயன் அநுபவித்து, சேஷித்து நின்ற கன்மத்தோடு இந்தக் கன்ம பூமிக்கு மீளுகின்றனன் என்றும், இதுதான் பற்றுடையானது (அவித்துவானது) இயற்கை என்றும் (பிரு. சு. ச. சு) ல் முற்பாதி மந்திரம் உணர்த்திற்று; எனவும்

(௩௦க) ஆசை நீங்காத வித்துவான் சரீரத்தை விடுத்து மற்றோர் பிதிரர்வடிவத்தையோ, கந்தருவர்வடிவத்தையோ, தேவவடிவத்தையோ, பிரஜாபதிவடிவத்தையோ, பிறர் வடிவத்தையோ எடுப்பன் என்று அம்மந்திரம் உணர்த்திற்றெனவும், அதனுல் அவன் சென்ற மார்க்கந் தக்ஷிணுயனமார்க்கம் எனவும் பெறப்படும்.

(௩௦உ) வித்துவான் இலக்ஷணங் கூறப்போந்து (பிரு. சு. ச. சு) ற் பிற்பாதி மந்திரம் (வித்துவானுவான்) அகாமனுய், நிஷ்காமனுய், ஆப்தகாமனுய், ஆன்மகாமனுய் உள்ளவனென்றும், "அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை என்றும், பிரமமாகிப் (பிரமசாமியமுற்று) பிரமத்தைப்போய் அடைகின்றனன்" என்றுங் கூறுகின்றது. (பிரு. சு. ௩. உக. னும், முண். ௩. க. ௩, சு. னும், கட. சு. கச) னும் பிரமபாவனையுற்ற வித்துவானுக்கு இலக்ஷணமாகக் கூறப்பட்ட ஆப்தகாமத்துவம், அகாமத்துவம், ஆன்மகாமத்துவம் என்னும் குணங்களுக்கும், ஈண்டு (பிரு. சு. ச. சு) ற் பிற்பாதி மந்திரத்திற் பிரமபாவனையினுற் பிரமசாமியமுற்ற வித்துவானுக்கு இலக்ஷணமாகக் கூறப்பட்ட ஆப்தகாமத்துவம், அகாமத்துவம், நிஷ்காமத்துவம், ஆன்மகாமத்துவமுதலிய குணங்களுக்கும் பேதமேதுமில்லை.

(௩௦௩) (கட. சு. கசு) ல் தலைநாடிவாயிலாகச் செல்லும் வித்துவானுக்கு இலக்ஷணமாகக் (கட. சு. கச) ற் கூறப்பட்ட மந்திரமே ஈண்டு (பிரு. சு. ச. எ) னுமுள்ளது. அவ்வித்துவான்கள் செல்லும் தேவயானமும், அது பிரமத்தினுலாக்கப்பட்டமையும், தேவயானம்வாயிலாக அடையப்படும் பரமநிதானமும் (சிவலோகமும்) கூறும் (முண். ௩. க. சு) ற் காணப்படும் மந்

திரப்பொருள்களே ஈண்டு (பிரு. சு. ச.:அ, கூ) னுங் காணப்படுகின்றன. (பிரு. சு. ௩. ௩அ) ல் தலைநாடிவாயிலாக ஊர்த்துவசுவாசஞ் செய்து போகும் வித்துவானுடைய ஆன்மாவைப் பிராணன்கள் சூழ்ந்து குழு மிக்கிடக்கின்றன என்னும் பொருளே (பிரு. சு. ச. சு) ல்

ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி।

(௩௦ச) "அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்றதற் கும் பொருளாம்.

தேவோ பூத்வா தேவா நப்யேதி।

(தேவோ பூத்துவா தேவா நப்யேதி. பிரு. சு. க. ௩) என்றவிடத்து,

(௩௦ரு) "தேவனாகித் தேவர்களைப் போயடைகின்றனன்" என (பிரு. சு. க. ௩) ல் அப்யேதி என்றதற்குப் போயடைகின்றனன் என்று கூறிய பொருளே, ஈண்டு

ப்ரஹ்மாப்யேதி।

(பிரம்மாப்யேதி. பிரு. சு. ச. சு) என்றவிடத்து,

(௩௦சு) "பிரமத்தைப் போயடைகின்றனன்"என (பிரு. சு. ச. சு)ல் "அப்யேதி" என்றதற்கும் எய்தும் பொருளாம். (அப்யேதி) "அப்யேதி" என்னும் பரஸ்மைபதமானது இடப்பெயர்ச்சியை உணர்த்திற்று. உணர்த்தவே, அது மற்றோர் உலகத்தை அடைதலின் மேற்றுமன்றி இங்கே போக்கு மீட்சியின்றி இலயமடைதலை ஒர்காலும் உணர்த்துமாறின்றும்.

யோ காமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி।

(௩௦எ) எவன் அகாமனாய், நிஷ்காமனாய், ஆப்தகாமனாய், ஆன்ம காமனாய் இருக்கின்றானோ, அவனை விட்டுப் பிராணன்கள் உற்கிரமிப்ப தில்லை என்று மத்தியந்தினசாகா மந்திரம் கூறலான், (௩௦ச-ம் இலக்க) மந் திரமானது அவனுடைய ஆன்மாவைப் பிராணன்கள் சூழ்ந்துகிடக்கின்றன என்று இந்த (பிரு. சு. ௩. ௩அ) ம் மந்திரம் கூறும் பொருளையே தழுவி நின்றது. ஈண்டு (பிரு. சு. ச. சு) ல் ஆறும் வேற்றுமையிற் கூறப்பட்ட (தஸ்ய) "தஸ்ய" (அவனுக்கு) எனப் பொருள்படும் பதத்துக்கு அவனை விட்டு (தஸ்மாத்) "தஸ்மாத்" என்று பொருள் கொள்ள வேண்டு மென்று அம்மத்தியந்தினசாகா மந்திரம் வெளிப்படையாய் விளக்கிக் காட்டிற்று.

(௩௦அ) (பிரு. ௬. ௪. ௬) ன் முற்பாதி மந்திரம் அவித்துவான் விஷயமும், (பிரு. ௬. ௪. எ-ம், அ-ம், ௯-ம்) மந்திரங்கள் (கடம், முண்டகம், சாந்தோக்கிய முதலியவற்றிற் காணப்படும்) வித்துவான் விஷயமுமாகப் போதர, இவ்விரு விஷயத்துக்கும் நடுவே மற்றோர் மகாவித்துவானைக் கண்டு பிடித்து, அவன் அங்கே போக்கு மீட்சியின்றி இலயமடைந்தான் என்றமை விந்தையினும் விந்தையே!!! ஈண்டுப் பிராணன்கள் என்றது வாயுக்களின் மேற்றன்றி ஆன்மாக்களின்மேற்றன்று; ஒருவனுக்கு ஆன்மா ஒன்றேயாதலின். பிராணன்கள் பிரிந்தால் என்! பிரியாதிருந்தாலென்!! சீவான்மா இங்கே இலயமடைவதாக வேதாந்த சூத்திரங்களுக்கு ஆதாரமாய் நின்ற இந்த முக்கிய உபநிடதங்களுள்ளே பிரமாணம் காட்டினலன்றோ ஏகான்மவாதியார் பக்கம் செயம் பெறும்!!! ஏகான்மவாத உபநிடதங்களும் பிரமகீதை முதலியவற்றின் கற்பனை சுலோகங்களும் பிரமாணமாக அங்கீகரிக்கப்படமாட்டா.

(௩௦௯) (பிரு. ௩. உ. ௧௦) ம் மந்திரத்திலே ஆர்த்தபாகர் யாஞ்ஞவற்கியரை நோக்கி, "ஒவ்வொன்றும் மரணத்துக்கு உணவாயிருக்கின்றனவே, மரணம் எந்தத் தெய்வத்துக்கு உணவாகின்றது? என, யாஞ்ஞவற்கியர் (மரணம்) அக்கினிக்கு உணவாகும்; அது சலத்துக்கு உணவாகும் என்றனர், பின் மரணஞ் செயிக்கப்பட்டது."

(௩௧௦) (பிரு. ௩. உ. ௧௧) ம் மந்திரத்தில் ஆர்த்தபாகர் யாஞ்ஞவற்கியரை நோக்கி, "இந்த மனிதன் இறக்கும்போது பிராணன்கள் அவனை விட்டுப் புறத்தே போகின்றனவா? இல்லையா?" என,

யாஜ்ஞவல்க்யோ ழூநெதி ஹோவாச। அத்ரைவ ஸமவநீயந்தே ஸ உச்ச்வயத்யாத்மாய த்யாத்மாதோ ம்ருத: ஶேதே।

(௩௧௧) "யாஞ்ஞவற்கியர் அந்தப் பிராணன்கள் இவனிலே குழுமுகின்றன; அவன் வீங்கி உப்பிச் செத்துக்கிடக்கின்றனன்" என்றனர்.

(௩௧௨) பின்னர் (பிரு. ௩. உ. ௧௨) ம் மந்திரத்தில் ஆர்த்தபாகர் "அப்படிப்பட்ட மனிதன் இறக்குங்கால் அவனை யாது விட்டுப் பிரிவதில்லை" என, "அவன் நாமம் அழிவதில்லை" என்றும், "அந்த நாமமும் முடிவில்லாதது" என்றும், "விசுவதேவர் முடிவில்லாதோர்" என்றும், "அதனால் அவன் அளவிறந்த உலகத்தை அடைகின்றனன்" என்றும் கூறினர்.

(௩௧௩) பின் (பிரு. ௩. உ. ௧௩) ம் மந்திரத்தில் ஆர்த்தபாகர் யாஞ்ஞவற்கியரை நோக்கி, "இந்தப் புருஷன் செத்தபோது அவனது வாக்கு

அக்கினியையும், பிராணன் வாயுவையும், கண் சூரியனையும், மனசு சந்திரனையும், சுரோத்திரம் திக்குகளையும், சரீரம் பிருதிவியையும், இருதயம் ஆகாயத்தையும், சரீரத்து உரோமங்கள் ஒஷதிகளையும், தலை உரோமங்கள் விருக்ஷங்களையும், இரத்தமும் இரேதசும் சலத்தையும் அடையுமாயின், அந்த மனிதன் எதனைப் பற்றுகின்றனன்" என, அதற்கு யாஞ்ஞவற்கியர் "சௌமிய! எனது கையைப் பற்று; நாங்கள் இருவர்மாத்திரமே இதனைப்பற்றி அறியக்கடவேம்; இந்த வினு யாரும் அறிய வாதிக்கப்படுவதன்று" எனக் கூறி, "இருவரும் புறத்தே போய் வாதித்தனர்; வாதித்து நற்கருமத்தினுற் புண்ணியமும், தீக்கருமத்தினுற் பாவமும் எய்தும் எனக் கர்மத்தையே விதந்து பேசினர்; அதன் பின் ஆர்த்தபாகர் பேசாதிருந்தனர்" எனக் கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டு ஆர்த்தபாகர் வினுவியது அவித்துவத்விஷயமே. ஈண்டுக் கூறப்பட்ட வினுக்களினும் விடைகளினும் ஒன்ருயினும் பிரமவித்தியாவிஷயத்தைப்பற்றியதின்று. வினுவிடைகளைப்பற்றிய விஷயங்கள் கிரஹும் அதிக்கிரஹமாகக் கொள்ளப்படும் இந்திரிய விஷயங்களின் இயற்கையும், சலம் அக்கினிக்கு உணவாதலும், மரணகாலத்திற் பிராணன்கள் ஆன்மாவைவிட்டுப் பிரியாமையும், செத்தவன் நாமத்தின் அநுவிருத்தியும், புண்ணியபாவங்களுக்கியைவாயுள்ள கதிப்பிராப்தியுமாம். ஆகலின், பிராணன்கள் பிரிவதில்லை என்றதற்குப் போக்குமீட்சியில்லாத முத்தி எனப் பொருட்படுத்தல் எவ்வாற்ருனும் ஒவ்வா வெற்றுரை என்று மறுக்க.

வித்துவான் அடையும் புநராவர்த்தி கொடாத உலகம் பிரமலோகமாம் (சிவலோகமாம்). ஆகவே,

(௩௧௪) பிரமலோகம்

என்று (சாந். அ. ச. ௩) னும், (பிரு. அ. உ. கரு) னும்,
( ,, அ. கரு. க) னும், (முண். ௩. உ. ௬) னும்,
(பிரு. ௬. ௩. ௩௩) னும், (பிர. க. க௬) னும்,
( ,, ரு. ௯. க) னும், ( ,, ரு. ரு) னும்,

(௩௧௫) சுவர்க்கலோகம்

என்று (பிரு. ௬. ச. அ) னும், (ஐத.ரு. ச) னும்,
அதர்வசிகையினும், (கேந. ௩௪) னும்,
(ஐத. ச. ௬) னும், (கட. க. கஉ) னும்,

(௩௧௬) பிரமதாமம்

என்று (முண். ௩. உ. க) னும், (முண். ௩. உ. ச) னும் கூறப்பட்டிருக்கின்றன. இந்த உபநிடதங்களிலே வித்துவானுல் அடையப்படும்

பிரமலோகம், சுவர்க்கலோகம் எனக் கூறப்படும் பரமஸ்தானம் சிவலோகமேயாம். இதனையே,

தஃ-ஸ்ஹ-ி ஊ-நாநாவொகா நூா௦வொக ஐவெளகிகஃ। வொஐ ஸஹொஐயா யத்ர நித்ய௦ நிவஸதீஸ்வரஃ। தஃ-ஸ்ஹ-ி ஊ-நாநாவொகா ரூ௦ வூராவ்ஹா ந நிவத்ததெ (வாயு. உத். உஎ. சுஉ, சுங)

(ஙகஎ) உன்மனு உலகத்துக்கு மேலுள்ளது அலௌகிகமாகிய சோமலோகம்; உமையோடிசைந்த சோமர் எனப்படும் சிவபெருமான் அந்தச் சோமலோகத்தில் எக்காலமும் வசிக்கின்றனர்; உன்மனு உலகத்துக்கு மேலுள்ள இந்தச் சோமலோகத்தை அடைந்தவன் மீளப் பிறவியிற் செல்வானல்லன்" என்று வாயுசங்கிதோபப்பிருங்கணங் கூறிற்று. அச்சிவலோகத்தை அடைந்து திவ்ய மகாமாயோற்பன்னமாய, ஸ்திரமாய அங்கங்களோடு சரிக்கின்ற சீவன்முக்தர்கள் பிரமானந்தத்தோடு சமஸ்த திவ்ய போகங்களையும் அடைகின்றனர்"என்று (தைத். உ. க)னும், "ஸ்திரீகளோடாயினும், யானங்களோடாயினும், ஞாதிகளோடாயினும் உண்டு ஆடிக்களிக்கின்றனன்" என்று (சாங். அ. கஉ. ங) னும், "ஞானத்தினலே இந்தப் போகங்களைக் கண்டு இரமிக்கின்றான்; அவனுக்கு ஞானமே திவ்ய கண்" என்றும், "பிரமத்தை உபாசித்தவனுக்கு உலகமனைத்தும் போகமனைத்தும் எய்துகின்றன" என்றும் (சாங். அ. கஉ. ரு) னுங் கூறப்பட்டிருக்கின்றது. கார்க்கிப்பிராம்மணத்திற் பிரமலோகம் என்றதைப் பிரமலோகங்கள் என்று பன்மையாற் கூறியது அச்சிவலோகத்தில் அநாசிருதைமுதலிய பற்பல திவ்ய புவனங்களுண்மையான்.

ஏகான்மவாதிகள் ஈசகேநாதி முக்கிய உபநிடதங்களுள்ளே அத்துவித வாக்கியங்களும் (அபேதசுருதிகளும்), துவிதவாக்கியங்களும் (பேதசுருதிகளும்) இருக்கின்றன என்றும்,

ஸதெவ வொஜெூ ஐஈ-ஜுஸீஃ (சாங். சு. உ. க)

(ஙகஅ) "சௌமிய, சத்தாகிய இதுவே முதற்கண் இருந்தது" எனவும்,

ஸகெ ஏவா ஜிதீயஃ (சாங். சு. உ. க)

(ஙகக) "ஏகமே அத்துவிதீயமாயுள்ளது" எனவும் போந்த வாக்கியங்கள் அத்துவித சுருதிகளென்றும்,

யஸ்ய வுராயிவீ ஶரீரஃ (பிரு. ரு. எ. ங)
யஸ்யாத்மா ஶரீரஃ (மத்தியந்தினசாகை)

(ருஉ0) "எவருக்குப் பிருதிவி சரீரமோ," "எவருக்கு ஆன்மா சரீரமோ" என்றற்றொடக்கத்தன துவித சுருதிகள் என்றும், (ருகஅ-ம், ருககூ-ம் இலக்க) வாக்கியங்களை ஆதாரமாய்க்கொண்டு ஏகான்மவாதியார் பாடியஞ் செய்தனர் என்றும், (ரு௨0-ம் இலக்க) வாக்கியங்களை ஆதார மாய்க் கொண்டு விண்டுமதாசாரியர் விசிட்டாத்துவிதபாடியஞ் செய்தனர் என்றும் கூறுவர். (ருகஅ-ம் இலக்கத்து) சத்து என்னும் சப்தத்தின் பொருள் சத்தியும் சிவமுமாம் என்று (கூஅ-ம் இலக்கத்தில்) பிரமாணங் காட்டப்பட்டிருத்தலின், அந்தச் சத்பதம் அடங்கிய சுருதி நிர்விசேடப் பிரமத்தை உணர்த்தாது சத்தி விசிஷ்ட சிவபெருமானையே உணர்த்திற்று. (ருககூ-ம் இலக்கத்து) ஏகம் என்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம். அதற்குத் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்றே, இரண்டில்லை ; என்பதாம்.

இங்ஙனம் ஏகம் என்று சொல்கின்ற நீ அப்பதிப்பொருளின் வேறாகிய பசுவாம். பதியுஞ் சேதனமாக, யானுஞ் சேதனமாக என்னைப் பசுவென்ற தென்னையெனின், நீ மலத்தோடு கட்டுண்டுநின்றமையாற் பசு எனப்பட் டாய் ; அதை,

(ரு௨க) ஏகமேயெனுமிருக்கெனினிருக்கினுட்பொருள்கே
ளேகமேபதிபலவலவெனுமதுகாண்டி
யேகமேயெனச்சுட்டுவானொருவனீங்குளன்வ்
வேகன்போலலனிருண்மலத்தோடுளனிவனே.

என்னுஞ் செய்யுளான் உணர்க.

(ரு௨௨) பண்ணும் அதனின் வேறன்றாய் எண்ணப்படும் இசையும் போலவும், பழமும் அதனின் வேறன்றாய் எண்ணப்படும் சுவையும் போல வும், யாங்கணும் வியாபகமாய முதல்வன்றிருவருள் உயிர்களின் வேற்று மையின்றி நிற்பதாகலான், சுருதிகள் பிரமம் அத்துவிதம் என்று அவ் விடங்களிற் கூறும் ; இது

(ரு௨ரு) பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்னு
தத்துவித மென்றறையு மாங்கு.

என்னும் திருவெண்பாவானும்,

(ரு௨ச) மன்றவேதமத்துவிதமென்றுரைத்திடுமரபா
லொன்றலாற்பொருளில்லையெனினுணர்த்துதுந்தெளிதி

யென்றும்வேறன்மைபுணர்த்துமிக்கிளவியேபிதனு
னின்றவாருயிர்பலவுந்தானாய்நிற்குநிமலன்.

என்னுஞ் செய்யுளானும் அறியப்படும்

(௩உ௫) நஞ்+துவிதம்=அ+துவிதம்
=அத்துவிதம் என்பதின்

நகரத்துக்கு (நஞ்ஞுக்கு) (௧) சாதிருசியம், (௨) அபாவம், (௩) பேதம், (௪) அற்பதை, (௫) அப்பிராசஸ்தியம், (௬) விரோதம் என ஆறு பொருள் உண்டு; இந்த ஆறு பொருள்களுள்ளே சாதிருசியம் (அன்மை), அபாவம் (இன்மை), விரோதம் (மறுதலை) என்னும் மூன்று பொருள்களே ஈண்டு எடுத்தாளற்பாலன. சாதிருசியப்பொருள் சைவசித்தாந்திகளானும், வைதிக பாசுபதயோகிகளானும், வைஷ்ணவரானும், இன்மைப் பொருள் சாங்கியயோகிகளானும் (நிர்க்குணோபாசகர்களானும்), மறுதலைப்பொருள் மத்துவரானும் கொள்ளக்கிடந்தன.

(௩உ௬) அப்பிராமணன் (அப்ராஹ்மண꞉) என்றது பிராமணனுகாமலும், பிராமணனைப்போல (அபேதமாய்) யஞ்ஞோபவீதந் தரிப்பவனுமாயுள்ள க்ஷத்திரியனையாவது வைசியனையாவது சுட்டுவது போல, சீவான்மாவானது பரமான்ம சிவனுரினின்று வேருய் (பேதமாய்), அச்சிவபெருமானைப்போல (அபேதமாய்) சர்வஞ்ஞதாதி குணங்களை எய்தும் என்னும் சாதிருசிய (சாமியப்) பொருளிலே செல்லும் என்பதுணர்த்த (முண். ௩. ௧. ௩) ல்

நிரஞ்ஜந꞉ பரமம் ஸாம்ய முபைதி |

(௩உ௭) "மலநீங்கினவனுய்ப் பரமசாமியத்தை அடைகின்றனன்" என்று கூறப்பட்டது. இந்தச் சாதிருசியப்பொருளே,

(௩உ௮) நஞிவயுக்தமந்யஸத்ருஶாதிகரணே ததாஹ்யர்த்தகதி꞉|

என்று வேதஷடங்கங்களுள் ஒன்றுகிய வியாகரணத்திற் கூறப்பட்டது. படவே, சாதிருசியம் என்றது அன்னிய அபேத (அன்மைப்) பொருளிற் போந்தவாறு தெள்ளிது.

(௩உ௯) "அது நீயாகின்றனை" (தத்துவமசி) எனவும், "அது நானாகின்றேன்" (அகம் பிரம்மாஸ்மி) எனவும், "அது இதுவாகின்றது" (அயமாத்துமா பிரம்ம) எனவும் மூவிடம்பற்றி நிகழும் தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களைக் கேட்டவழி, அது என்பது ஒரு பொருள் நீ என்பது ஒரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொருபொருளாமாறு

யாங்ஙனம் என்னும் ஐயம் நீக்குதற் கெழுந்ததாகலின், அது இதுவாதற் கேதுவாய் அவ்விரண்டற்கும் உளதாகிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருள். இது,

சொன்னதத்துவமசியெனுஞ்சுருதியின்மொழியு
மன்னுகாரணபதியுநானெனவரும்பசுவு
மென்னவேபொருளிருமைகண்டியைந்து வேறன்மை
தன்னைநாட்டியதல்லதுதனியென்றதின்றே.

என்னுஞ் செய்யுளால் அறியப்படும்.

(௬௰) வேதமுடனுகம புராணமிதி காசமுதல்
வேறுமுள கலைக ளெல்லாம்
மிக்காக வத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா வெடுத்து ரைக்கு
மோதரிய துவிதமே யத்துவித ஞானத்தை
யுண்டுபணு ஞான மாகும்

என்றற்றொடக்கத்ததாகத் தாயுமானவர் கூறிய செய்யுளால், "வேதாகம புராணேதிகாசமுதலிய கலைஞானமனைத்தும் மேலாயதாக (முத்திதசையிலே) அத்துவிதமாதற்குரிய துவிதமார்க்கத்தையே விரிவாக எடுத்துக் கூறும், (அத்துவிதமார்க்கத்தையும் துவிதமார்க்கத்தையும் எடுத்துக் கூறும் என்று பொருட்படுத்தல் கூடாதென்பாராய், மீட்டும்) கூறற்கரிய துவிதமார்க்கந்தான் (சீவான்ம பரமான்மாவாம் உபயான்மவாதமார்க்கந் தான்) அத்துவித ஞானத்தை (௬௨எ-ம் இலக்கத்திற் கூறியவாறு) உண்டு பண்ணுமென்று" உரைக்கப்பட்டதன்றி, ஏகான்மவாதிகள் கூறுமாறு வேதாகமாதிகளிலே ஏகான்மவாதமார்க்கமும் உபயான்மவாத மார்க்கமுமாகிய இரண்டும் கூறப்பட்டவென்று பொருட்படுத்தல் கூடாது; பின் அவையனைத்தினும் துவிதமார்க்கமே கூறப்பட்டதென்பது பொருளாம்.

(௬௧) ஏகான்மவாதிகள் "சோகம்" "சிவோகம்" என்று கூற, சைவர்களும் "சோகம்" "சிவோகம்" என்று கூறலின், இருதிறத்தார்க்கும் மகாவாக்கியங்களிலே கருத்தும் பயனும் ஒன்றுமே எனின்; ஆகா. விளையாட்டயரும் சிறுவர் "அதிரசம்" "இலட்டுகம்" என்னும் இனிய உண்டிகளை உண்டதாகப் பாவித்து, தனித்தனி "அதிரசம் உண்டேன்" "இலட்டுகம் உண்டேன்" என்று கூறி, உள்ளபடி "அதிரசத்"தையும் "இலட்டுகத்"தையும் உண்டவர்களோடு சமமாய்க் கூறிவிடின், மண்விளையாட்டுச் சிறுவர் உண்டனவாகக் கூறிய "அதிரச இலட்டுகங்"களுக்கும்,

உள்ளபடி உண்டவர்கள் கூறிய "அதிரச இலட்டுகெங்" களுக்கும் பேதம் வெளிப்படையன்றே. அதுபோல, ஏகான்மவாதிகள் "சோகம்," "சிவோகம்" என்றவைகளுக்குக் கடாகாசத்தையும் மகாகாசத்தையும் ஒன்றென்றாற் போல, கூடஸ்தனையும் பிரமத்தையும் ஒன்றென்று நிருபசரிதவைக்கியங்கொள்வர். சைவர்கள் மந்திரியை இராஜா என்றும், ஆன்மாவைக் கருடன் என்றும் பாவிக்குமாறு போல, ஆன்மாவைச் சிவம் என்று உபசரிதவைக்கியங்கொள்வர். ஆகலின், இருவர்க்கும் மகாவாக்கியங்களிற் கருத்தும் வேறும், பயனும் வேறும் என்றோர்க. இஃதுணர்ந்தே,

अद्वैतशास्त्रोक्तिरियं भावनया सत्यबुद्धिस्तु वा
तादात्म्यतया न वास्तवी । हेतुः स्याद्भावनासक्तिरस्येति
तार्क्ष्यात्मभावनया हि विषं व्यपोहति ।

(௩௩உ) "சுவாமீ, உபநிடதமுடிபுகளால் உம்முடைய உபாசனையிலே அத்துவைதங் கூறப்பட்டது; அதற்கு (ஆன்மா பிரமம் என்னும் இரண்டின் ஐக்கியத்தைக் கூடஸ்தப் பிரம ஐக்கியம் போல) நிருபசரிதவைக்கியமாகக் கூறல் கூடாது; கருடனும் மாந்திரிகனும் தம்முள் வேறுதல் வெளிப்படை; (ஏகவாதசுருதியினர்) அந்த் ஆன்மா கருடனோடு தாதான்மியபாவனையுறலைப் பொய்யென்றாலும், கருடபாவனை விஷத்தை (நீக்காதிருக்கவில்லை) நீக்குகின்றது" என்றனர் அரதத்தாசாரியர். மந்திரிகன் தனது சரீரத்தைக் கருடனாகப் பாவிப்பானல்லன்; பாவிக்குமாறென்னையெனின், அவன் தன் ஆன்மாவைக் கருடனுக்கதிதெய்வமாம் மந்திரரூபமாகப் பாவிப்பன். ஆண்டு,

सर्वे धर्मा आत्मनि सन्ति ।

(௩௩௩) "எல்லாத் தருமங்களும் ஆன்மாவுக்குண்டு" என்று முடிந்த வார்த்தையால், ஆன்மலக்ஷணந் தெரிவித்த சர்வஞ்ஞானோத்தரச் சுருதியானே தற்பாவபாவமாய்ச் சார்ந்ததன்வண்ணமாமியல்புடைய ஆன்மா அந்த மந்திர தர்மதருமியாய் அம்மந்திர சொரூபியேயாவன். அங்ஙனம், பாவனை சத்தியமாதலினன்றே சத்தியபலமாக விஷநிவிர்த்தி காணப்படுகின்றது. அது போல, உபசரிதவைக்கியங்கொண்டு அத்துவித பாவனையால் ஆன்மாக்கள் சிவகுணங்கள் தங்கண் விளங்கப்பெற்றுச் சிவமாயிருப்பனவன்றிக் கெட்டு ஒன்றாயொழியா; அதனாற் பாசம் நீங்குகின்றது. கருடன் நான் என்று நிருபசரிதவைக்கியங் கூறின், விஷம் நீங்குமாறில்லை; அதனால் ஏகான்மவாதிகள் கூறும் நிருபசரிதவைக்கியம் பொருந்தாது. சத்தியபாவனை செய்வோராகிய சைவர்கள் "சோகம்" "சிவோகம்"

என்பவற்றுக்குக் கூறும் உபசரிதவைக்கியமே பொருத்தமாமென்று கடைப்பிடிக்க.

(௩௩௪) ஆகவே, பரமோபநிடதங்களில் யாண்டாயினும் நிர்க்குணப் பிரமவிஷயமென ஒன்று கூறப்படவே இல்லை. மாயாவாதச் சுருதிப்பொருள் களிலே நெடுங்காலம் பழக்கவாடையினல் அடிபட்டுவந்தமையாற் கதாநு கதநியாயங்கொண்டு சிவபெருமானது ஞானசத்தியினும் சர்வஞ்ஞாதி குணங்களினும் பற்றின்றிப் பலர் தங்கருத்துக்கியைய வேதாந்தத்திற் பொதிந்துள்ள உண்மைப்பொருள்களைத் திரித்துப் பொருள் செய்து கெடுகின்றனர், பிறரைக் கெடுக்கின்றனர்.

𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌾𑌯 𑌦𑌧𑍀𑌚𑌸𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌵𑌾𑌟𑍇 𑌽𑌭𑌵𑌾𑌹𑌤𑌾𑌨𑍍। 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾 𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌕𑍍𑌷𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑌕𑍍𑌤𑌾 𑌨𑌶𑌾𑌃। 𑌶𑌿𑌵𑌦𑍍𑌰𑍋𑌹𑌪𑌰𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌂 𑌶𑌿𑌵𑌾𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌪𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌾𑌃। 𑌵𑍇𑌦𑌬𑌾𑌹𑍍𑌯𑌾 𑌶𑌿𑌵𑌭𑌕𑍍𑌤𑌿𑌵𑌿𑌹𑍀𑌨𑌕𑌾𑌃। 𑌨𑌰𑌕𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌪𑌤𑌤𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌜𑌗𑌾𑌮𑌿𑌤𑌾𑌃।

(சங். த. உக. உரு, உசு)ம் சுலோகங்களினும், இவற்றின் பொருளையடக்கிய

(௩௩௫) பேசரியமறைகளெலாம்பராபரனீயெனவணங்கிப்பெரிதுபோற்று
மீசனையுமன்பரையுநீற்றெடுகண்டிகையினையுமிகழ்ந்துநீவிர்
காசினியின்மறையவராயெந்நாளும்பிறந்திறந்துகதிபெறுது
பாசமதனிடைப்பட்டுமறையுரையாநெறியதனிற்படுதிரென்றான்.

என்னும் (கந். அன. ௩எ) ம் செய்யுளினும் கூறப்பட்ட ததீசிசாபமே அதற்குக் காரணம் போலும்!

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌵𑌰𑍁𑌣𑌮𑌗𑍍𑌨𑌿𑌮𑌾𑌹𑍁𑌰𑌥𑍋 𑌦𑌿𑌵𑍍𑌯𑌸𑍍𑌸 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑍋 𑌗𑌰𑍁𑌤𑍍𑌮𑌾𑌨𑍍। 𑌏𑌕𑌂 𑌸𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂 𑌯𑌮𑌂 𑌮𑌾𑌤𑌰𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌮𑌾𑌹𑍁𑌃।

(௩௩௬) "பெரியோர் ஏகராயினரை இந்திரன் என்றும், மித்திரன் என்றும், வருணன் என்றும், அக்கினி என்றும், திவ்ய நல்ல சிறகினையு டைய கருடன் என்றும், யமன் என்றும், மாதரிச்சுவா (வாயு) என்றும் பல நாமங்கொண்டு கூறுவர்" என (இரு. க. கசுச. சசு) ற் கூறப்படுகின் றது. ஈண்டுக் கூறப்பட்ட ஏகர் யார் என ஆராயற்பாற்று ;

𑌸 𑌚𑌾𑌯𑌂 𑌦𑍇𑌵𑍋 𑌯𑌜𑍍𑌞𑍈𑌃 𑌪𑌰𑌯𑌜𑍍𑌞𑍈𑌸𑍍𑌸𑌾𑌯𑌨𑌮𑍍।
𑌯𑌜𑍍𑌞𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌸𑍍𑌵𑌾𑌙𑍍𑌗 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌿𑌤𑌃।

(௩௩௭) "பரதருமத்துக்குத் (தியானயோகத்துக்குச்) சாதனமாக (அடிச் சுருதியாகிய கன்மகாண்டத்திற் கூறப்படும்) அபரதருமம் சாங்கமாக

(மநுமுதலிய) தருமசாஸ்திரங்களினால் நன்கு உபப்பிருங்கணஞ் செய்யப்பட்டது" என்று (வாயு. பூ. உஅ. அ) கூறலான்,

ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸம் அணோரபி ।
ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம் ।
ஏதமேகே வதந்த்யக்நிம் மநுமந்யே ப்ரஜாபதிம் ।
இந்த்ரமேகே பரே ப்ராணமபரே ப்ரஹ்ம ஶாஶ்வதம் ।
(மநு. கஉ. கஉஉ, கஉங)

(ஙஙஅ) (பிரு. ந. அ. கூ. ற் கூறப்பட்டவாறு) சேதனசேதனப்பிரபஞ்சங்களைத் தமது ஆஞ்ஞையினால் ஆளுகின்ற அக்ஷரப்பிரமமும், (கட. உ. உ௦. னும், சுவே. ங. உ௦. னும், மகா. அ. ங) னும், கைவல்லியத்தினுங் கூறப்பட்டவாறு அணுவுக்கணுவாகிய தாதாவும், (முண். ங. க. ங. னும், மைத். சு. கஅ) னுங் கூறப்பட்டவாறு போன்வண்ணராகிய ஈசரும், (சாந். கூ. அ. க. னும், அ. ங. உ) னுங் கூறப்பட்டவாறு சொப்பனத்திலே அடையற்பாலதாகிய சத்தும் (தகராகாசமும்), (பிர. ந. ந. ற் கூறப்பட்டவாறு) புருஷரும், (முண். உ. உ. க) ற் பரமுமாகக் கூறப்படும் ஏகரைச் சிலர் அக்கினி என்றும், சிலர் பிரஜாபதி என்றும், சிலர் இந்திரன் என்றும், சிலர் பிராணன் என்றும், சிலர் சாசுவதமாகிய பிரமம் என்றுங் கூறுவர். இந்த மநுஸ்மிருதியில் எடுத்தாளப்பட்ட அக்ஷரப்பிரம முதலியவெல்லாம் சிவபெருமான்மேலவென்று மேலே நிரூபிக்கப்பட்டமையின், (ஙஙசு-ம் இலக்கத்து) ஏகர் என்றது பிரமமாகிய சிவபெருமான் மேற்று.

விப்ராணாம் தைவதம் ஶம்பு: க்ஷத்ரியாணாந்து மாதவ: ।
வைஶ்யாநாந்து பவேத்ப்ரஹ்மா ஶூத்ராணாம் கணநாயக: ।*

(ஙஙகூ) பிராமணர்களுக்குச் சிவபிரானும், க்ஷத்திரியர்களுக்கு விஷ்ணுவும், வைசியர்களுக்குப் பிரமாவும், சூத்திரர்களுக்குக் கணநாயகருந் தெய்வம்" என்று மநுஸ்மிருதி உபக்கிரமத்திற் கூறினமையின், உபசங்காரத்திற் கூறப்பட்ட பிரமமும் சிவபெருமான் மேற்று. சிவபெருமான் அக்கினி முதலிய பெயர்களாற் கூறப்படுவது இருக்குவேதாதிகளில் மிகப் பிரசித்தம். (வே. சூ. க. ச. உகூ) ஞ் சூத்திரபாடியத்தில் ஸ்மிருதிகளும், இதிகாசங்களும், புராணங்களும் ஒரே பரமான்மாவைக் கூறுது, சில பிரமாவையும், சில விஷ்ணுவையும், சில உருத்திரரையும், சில சத்தியையும், சில அக்கினியையும், சில சூரியனையும், சில வாயுவையும், சில மற்றொன்றையும் பரப்பிரமமென்று கூறுகின்றன என்பதை ஆக்ஷேபித்து நீக்கி, புருஷசூக்தம், சதருத்திரீயம், ஸ்மிருதி, இதிகாசபுராண முதலியவனைத்தும் உமை

* இதன் பொருள் கந்தபுராணம், ததீசிப்படலம், உங. ற் காணப்படுகின்றது.

யோடு கூடிய சிவபெருமானையே உணர்த்தின என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் காண்க.

> 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑍋𑌦𑍍𑌧𑍂𑌳𑌨𑌂 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌵𑍍𑌰𑌤𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌮𑌨𑍀𑌷𑌿𑌭𑌿𑌃।
> 𑌤𑌦𑍍𑌵𑍇𑌦𑌶𑌿𑌰𑍋𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌚 𑌤𑌤𑍍।
> 𑌕𑍇𑌚𑌿𑌚𑍍𑌛𑌿𑌰𑍋𑌵𑍍𑌰𑌤𑌂 𑌪𑍍𑌰𑌾𑌹𑍁𑌃 𑌕𑍇𑌚𑌿𑌦𑌤𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌮𑌂 𑌵𑌿𑌦𑍁𑌃।
> 𑌕𑍇𑌚𑌿𑌤𑍍𑌤𑍁 𑌵𑍍𑌰𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑍂𑌚𑍁𑌃 𑌕𑍇𑌚𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑍍𑌭𑌵𑌮𑍇𑌵𑍋𑌚𑍁𑌃।

(௩௪0) அதர்வசிரசிற் கூறப்பட்டவாறு அக்கினி என்றற்றொடக்கத்த மந்திரங்கொண்டு விபூதி தரித்து, விதிப்படி அநுஷ்டிக்கப்படும் விரதம் பாசுபதவிரதம் எனப்படும்; இந்த விரதம் (முண். ௩. உ. க0) ற் சிரோவிரதம் என்றும், (சுவே. சு. உக) னும், கைவல்லியத்தினும் * அத்தியாசிரமம் என்றும், காலாக்கினிருத்திரத்தில் விரதம் சாம்பவம் என்றும், (தைத். க. கக) ற் பூதி என்றும், (ஈசா. கஎ. னும், பிரு. எ. கநி. க) னும் பஸ்மம் என்றுங் கூறப்படும்.

> 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌷𑌡𑍍𑌭𑌿𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑍇𑌨 𑌭𑌸𑍍𑌮𑌨𑌾।
> 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑍋𑌦𑍍𑌧𑍂𑌳𑌨𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑌿𑌰𑍋𑌵𑍍𑌰𑌤𑌸𑌂𑌹𑍍𑌵𑌯𑌮𑍍।

(௩௪க) "அக்கினி முதலிய மந்திரம் ஆறுங்கொண்டு சுத்தமாகிய விபூதியினுற் சிரோவிரதம் எனப்படும் சர்வாங்கோத்தூளனத்தைச் செய்யக்கடவன்" என்று சௌரசங்கிதையினும்,

> 𑌅𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌦𑍀𑌕𑍍𑌷𑌂 𑌶𑌿𑌰𑍋𑌵𑍍𑌰𑌤𑌂 𑌶𑌿𑌵𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑌰𑍍𑌵𑌤𑌰𑌾𑌜𑌨𑌨𑍍𑌦𑌿𑌨𑌿। 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌨 𑌵𑌿𑌧𑍇𑌯 𑌉𑌦𑌾𑌸𑍀𑌨𑌤𑌾𑌂 𑌤𑍇 𑌤𑍈𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌯𑌾 𑌹𑌿 𑌸𑌮𑌾𑌮𑌨𑌨𑍍𑌤𑌿।

(௩௪உ) சிவபெருமான் உமையம்மையாரை விளித்து, "மலையரசன் புதல்வியே! சிவப்பிரியமாகிய இந்தச் சிரோவிரதம் அதர்வசிரசிலுள்ள நிதியாம்; விபூதி எனப்படும் பாசுபதவிரதத்தை அநுஷ்டித்தலில் உபேக்ஷையாயிருத்தல் கூடாது எனத் தைத்திரீயசாகையினர் எஞ்ஞான்றுங் கூறுகின்றனர்" என்று சிவரகசியத்தினுங் கூறப்படுகின்றது. மேலும்,

> 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। 𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍। 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍍।

* உத்தரதேசத்தார் பாசுபதவிரதம் என்னும் உண்மைப்பொருளையுடைய அத்தியாசிரமம் என்றதைச் சந்நியாசிக்குப் பொருள்படுமாறு அந்தியாசிரமம் என்று சில உபநிடதங்களினும் புராணங்களினுந் திரித்தெழுதுவாராயினர்.

(௩௪௩) சத்தியத்தினின்று தவறற்க; தருமத்தினின்று தவறற்க; நீதியினின்று தவறற்க; விபூதியை அசட்டை செய்யற்க; (பிரணவம், சதருத்திரீயம், அதர்வசிரசு, அதர்வசிகை என்பவற்றைச் செபித்தலாகிய) சுவாத்தியாயத்தினின்றும் வேதாத்தியயனத்தினின்றும் தவறற்க'' என்று (தைத். க. கக) ற் கூறப்பட்டிருக்கின்றது.

ப்ரணவ ஶ்ஶதருத்ரீய ஞ்சா தர்வஶிர ஶ்ஶிவா ।
வஶிகைஷாம் ஜப: ப்ரோக்த ஸ்வாத்யாய இதி கீர்த்தித: ।

(௩௪௪) "பிரணவம், சதருத்திரீயம், அதர்வசிரசு, அதர்வசிகை என்பவற்றின் செபமே சுவாத்தியாயம் எனப்படும்'' என ஆதித்தியபுராணத்துச் சிவயோக நிரூபணத்தினும்,

ஸத்யா த்தர்மாச்ச நீத்யா ச ஸுபஸ்மோத்தூளநாதபி ।
த்ரிபுண்ட்ரதாரணாச்சாபி ஸ்வாத்யாயாத்யயநாதபி ।

(௩௪௫) "சத்தியத்தினின்றும், தருமத்தினின்றும், நீதியினின்றும், பஸ்மோத்தூளனத்தினின்றும், திரிபுண்டரதாரணத்தினின்றும், பிரணவ முதலிய நான்கையுஞ் செபித்தலாகிய சுவாத்தியாயத்தினின்றும், (கன்மகாண்ட) வேதாத்தியயனத்தினின்றும் (நழுவற்க)'' என ஸ்காந்தபுராணத்தினுங் கூறப்பட்டிருத்தலின், தைத்திரீய சிக்ஷாவல்லியிற் கண்ட பூதி என்றதற்குப் பஸ்மம் என்றும், சுவாத்தியாயம் என்றதற்குப் பிரணவம், சதருத்திரீயம், அதர்வசிரசு, அதர்வசிகை என்றும் பொருட்படுத்தப்பட்டமை காண்க.

ஏபிஸ்த்வாஶ்ரமோ யைர்த்ருதோ யைச்சரித ஸ்ஸதா ।
தேஷா மேவ பரம் ஜ்ஞாநம் ஸம்ஸாரச்சேதகாரணம் ।

(௩௪௬) "எவர்களால் இந்த அத்தியாசிரமவிரதம் (பாசுபதவிரதம்) ஆசரிக்கப்படுகின்றதோ, அவர்களுக்கே சம்சாரத்தை நீக்கும் பரமஞானம் எய்தும்'' என்று பிரமோத்தரகாண்டங் கூறுகின்றது.

ஶிரோவ்ரத மிதம் வ்ராதம் ப்ரோக்த உபநிஷத்ஸுவை ।
வைதிகீ விரஜாதீக்ஷா பாபஹந்த்ரீ பாவநாஶிநீ ।
மந்த்ரஸம்ஸ்காரதீக்ஷேதி கதிதேயம் ஶிவாகமே ।

(௩௪௭) "உபநிடதங்களில் இப்பாசுபதவிரதம் சிரோவிரதம் எனப்படும்; இது பாவத்தைப் போக்கவல்ல வைதிக விரஜாதீக்ஷை எனவும், சிவாகமங்களில் மந்திரசமஸ்காரதீக்ஷை எனவுங் கூறப்படுகின்றது'' எனக் காளிகாகண்டத்திற் காணப்படுகின்றது.

ஊஷ்ம விரஜா நலஸ்ய |

(ஙசஅ) "இந்த விரஜாக்கினியில் எய்திய பஸ்மம்" என்று அஙலாகமத்திற் பாசுபதவிரதத்தைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. இராமருக்குத் தண்டகாரணியத்தில் அகஸ்தியமகாமுனிவர் செய்த பாசுபததீக்ஷையும், அப்பாசுபத விரதத்துக்கு உள்ள அத்தியாசிரமமுதலிய பெயர்களும் பதுமபுராண சிவகீதையிற் காணப்படுகின்றன.

வ்ரதம் பாஶுபதம் ப்ரோக்தம் அதர்வஶிரஸி ஶ்ருதம்|
வ்ரதமேதத் ஸமாஸ்தாய ஸ தம் வை நைஷ்டிக: ஸ்ம்ருத:|
ஸோ(அ)த்யாஶ்ரமீ ச விஜ்ஞேயோ மஹாபாஶுபத ஸ்ததா|

(ஙசகூ) "வைதிக பாசுபதவிரதம் அதர்வசிரசிற் கூறப்பட்டது; இவ்விரதத்தை அநுஷ்டிப்பவனுகிய நைஷ்டிகன் அத்தியாசிரமி, மகாபாசுபதன் எனப்படுவன் என்று (வாயு. பூ. உகூ. உ, அங) ஞ் சுலோகங்களிற் கூறப்படுகின்றது.

அஷ்டம்யாம் அஹம் தேந விப்ரேண தீக்ஷிதோ(அ)ஹம் யதாவிதி|

(ஙடுo) "அஷ்டமியில் நான் (கிருஷ்ணர்) விப்பிரரால் (உபமன்னியுவால்) சாஸ்திரோக்தமாகத் தீக்ஷிக்கப்பட்டேன்" என்று (பார. அநு. கச. ஙஎச) ஞ் சுலோகத்திற் காணப்படுகின்றது.

உபமந்யு: தேவகீநந்தநம் கிருஷ்ணம் அதீக்ஷயத் |
உக்தம் ஶிவாகமோக்தம் ச க்ருஷ்ணோ(அ)போதி தந்த்வத:|

(ஙடுக) "உபமன்னியுமுனிவர் தேவகிநந்தனராகிய கிருஷ்ணர்க்குப் பாசுபததீக்ஷை செய்தனர் என்றும், அவ்வுபமன்னியுமகாமுனிவரிடத்திருந்து கிருஷ்ணர் சிவாகமார்த்தங்களை உணர்ந்துகொண்டனர்" என்றும் (சித. உச. ஙச) கூறுகின்றது.

அத ஸ்வம் விரஜாதீக்ஷாம் ப்ரூஹி மே முநிஸத்தம |

(ஙடுஉ) "ஆகலின் முனிசிரேட்டரே, விரஜாதீக்ஷையை எனக்கு அருளுதிர்" என்று இராமர் அகஸ்தியரைப் பிரார்த்தித்து அப்பாசுபத தீக்ஷை பெற்றனர் என்று (சிவகீதை. அத்தி. ங) ற் கூறப்பட்டிருக்கின்றது.

ப்ரஹ்மாத்யா ஹி யதா சக்ரு: ஸர்வே பாஶுபதா: ஸ்ம்ருதா:|

(ஙடுங) "பிரமாமுதலாயினோர் பாசுபதவிரதத்தை அநுஷ்டித்துப் பாசுபதராயினர்" என்று (வாயு. பூ. உகூ, க) ற் கூறப்பட்டிருக்கின்றது;

முதலாயினோர் என்றமையான் விஷ்ணு, மார்க்கண்டேயர், ததீசி, துருவாசர், கவுதமர், ஜாபாலர், ஆதர்வணர், காத்தியாயனர், அகஸ்தியர், ஸ்கந்தர், கணபதி, பிருங்கி, இராமர், உபமன்னியு, கிருஷ்ணர் முதலாயினோர் இந்த விரஜாதீக்ஷை பெற்றனர் என்று ஸ்காந்தபுராண காளிகாகண்டத்திற் கூறப்படுகின்றது. இவ்விரதத்தை அநுஷ்டிக்கும் முறைமை கைலாசசங்கிதையினும், இலிங்கபுராண கூர்ம புராணங்களினும் கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டு அதனை வரையின் விரியுமென்றஞ்சி விடுத்தனம். ஈசகேநாதி உபநிடதங்களிற் கூறப்பட்ட பரவித்தை அநுஷ்டித்தற்கு இந்த விரதம் அங்கமாய் இன்றியமையாது கொள்ளப்படவேண்டும் என்றன்றோ "விபூதியை உபேக்ஷைசெய்யாதொழிக" என்றற்றொடக்கத்தனவாகத் தைத்திரீய, முண்டக, சுவேதாசுவதரோபநிடதங்கள் விதந்து கூறியிருக்கின்றன.

(கூ௫௪) "அதர்வணவேத அத்தியயனஞ் செய்யவேண்டினோர் தீச்சட்டியைத் தலையிலே தரித்தல் வேண்டும் என்பது பற்றியன்றோ சிரோவிரதம் என்று முண்டகோபநிடதங் கூறிற்று; அங்ஙனமாகவும், அதர்வசிரசிலுள்ள பாசுபதவிரதம் என்று பொருள்கொண்டமை பொருந்தாதாம் எனின், அது பொருந்தும்; முண்டகோபநிடதம் முதற்கண்ணே அபரவித்தை பரவித்தைகளைக் கூறி, இறுதியில் அபரவித்தையாகிய அதர்வண வேத அத்தியயனமுரியார்க்கே சாதனமாகத் தாங்கவேண்டிய தீச்சட்டியையும், பரவித்தையாகிய பிரமவித்தை அறிய அதிகாரமுடைய யாவர்க்குஞ் சாதனமாக அநுஷ்டிக்கவேண்டிய அதர்வசிரசிற் பாசுபதவிரதத்தையும் உணர்த்தற்குப் பொதுவுறச் சிரோவிரதம் எனக் கூறினமையான். (கூ௫—கூகஎ-ம் இலக்கவரையிற்) கூறிய நியாயங்களானும், ஈசகேநாதி உபநிடதங்கள் விபூதிமான்மிய பாசுபதவிரதம் உணர்த்துதலினாலும் அவை சைவோபநிடதங்களாம் என்பது.

## மூவிதபாவனை.

---

த்ரிவிதா பாவநா ப்ரஹ்ம ப்ரோச்யமாநா நிபோத மே।
ஏகா மத்விஷயா தத்ர த்விதீயாவ்யக்தஸம்ஸ்ரயா।
அந்யா ச பாவநா ப்ராஹ்மீ விஜ்ஞேயா ஸா குணாதிகா।
ஆஸாமந்யதமாம் பாவநாம் பாவயேத் புத: (கூர். பூ. க)

(கூ௫௫) "இந்திரத்தியும்நர் கூர்மரை (நாராயணரை) நோக்கி, சுவாமி! மூன்று பாவனைகளையும் எனக்கு அருளுக என்று வேண்ட, நாராயணர் முதலாவது பாவனை என் விஷயம் (சகுணவிஷயம்), இரண்டாவது பாவனை அவ்வியக்தம் (நிர்க்குணம்) பற்றியது, மூன்றாவது பாவனை முக்குணங்களைக்

கடந்த பிரம்மபாவனை; இம்மூன்று பாவனைகளுள் ஒன்றை அறிஞன் பாவிக்க" (என்றும்),

## முதலாவது பாவனை (சகுணம்).

அஶக்தஸ்ஸம்ஶ்ரயேதாத்யாம் இத்யேஷா வைதிகீ ஶ்ருதி: (கூர். பூ. க)

"அசக்தன் (சகுணபாவனையாகிய) முதலாவது பாவனையையே ஆசிரயிக்க என வைதிக சுருதி கூறிற்று" என்றும் கூர்மர் இந்திரத்தியும்நர்க்கு மூவித பாவனைகளைத் தொகுத்துக் கூறி, முதலாவது பாவனை இன்னதெனவுரைத்தனர்.

அஶக்தோ வா ஹரம் விஷ்ணும் ப்ரஹ்மாணம் வாப்யுபாஸயேத்।

(௫௬) "அசக்தன் அரனையும் நாராயணரையும் பிரமாவையும் வழிபடுக" என்று கூர்மபுராணத்து இறுதி அத்தியாயத்திற் கூறப்பட்டுள்ளது.

## இரண்டாவது பாவனை (நிர்க்குணம்).

பராத்பரதரம் தத்வம் பரம் ப்ரஹ்மைகமவ்யயம்।
நித்யானந்தம் ஸ்வயம் ஜ்யோதி ரக்ஷரம் தமஸ: பரம்।
ஐஶ்வர்யம் தஸ்ய யந்நித்யம் விபூதிரிதி கீயதே।
கார்யம் ஜகதயாவ்யக்தம் காரணம் ஶுத்தமக்ஷரம்।
அஹம் ஹி ஸர்வபூதாநா மந்தர்யாமீஶ்வர: பர:।
ஸர்க்கஸ்தித்யந்தகர்த்ருத்வம் ப்ரவ்ருத்திர்மம கீயதே।
ஏதத் விஜ்ஞாய பாவேந யதாவதகிலம் த்விஜா:।
ததஸ்ஸ்வம் கர்மயோகேந ஶாஶ்வதம் ஸம்யகர்ச்சய।

(௫௭) "மூலப்பிரகிருதிக்கு (தமசுக்கு) மேலாயும், சோதியாயும், அக்ஷரமாயும், சச்சிதானந்தமாயும், அவ்வியக்தமாயும், பரத்துக்குமேல் அதிபரமாயும், பரதத்துவமுமாயுள்ளது பிரமம்; அதின் ஐசுவரியம் விபூதி எனப்படும்; காரியம் உலகம்; காரணம் சுத்தமும் அக்ஷரமுமாகிய அவ்வியக்தம்; சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாகிய பரமேசுவரன் நான், சிருட்டி திதி சங்காரம் என்னுடைய கிருத்தியமாம்; (குருவுபதேசத்தினாலே) இவ்வாய்மையை உள்ளவாறு அறிந்து கன்மயோகத்தினால் எக்காலமும் வழிபடுக" என்று கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில் இரண்

டாவது பாவனையாகிய நிர்க்குணோபாசனை கூறப்பட்டது. இது அக்ஷர பாவனை எனவும், நிர்ப்பீஜயோகம் எனவும், அபாவயோகம் எனவும் படும்.

𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑌰𑌹𑌿𑌤 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 |

(௩௫௮) "விகற்பம் ஒழிந்த தத்துவமே பரம் எனப்படும்" எனச் சிவபுராணத்தினும்;

𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌵𑍇𑌦𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸 𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌪𑌰𑌮𑍍|
𑌭𑍋𑌕𑍍𑌤𑌾𑌰 𑌮𑌕𑍍𑌷𑌰𑌂 𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 |
𑌆𑌤𑍍𑌮𑌾𑌯𑌂 𑌕𑍇𑌵𑌲𑌃 𑌸𑍍𑌵𑌚𑍍𑌛 𑌶𑍁𑌦𑍍𑌧 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮 𑌸𑌨𑌾𑌤𑌨𑌃|
𑌅𑌸𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌰 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾 𑌚𑌿𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰 𑌸𑍍𑌤𑌮𑌸𑌃 𑌪𑌰𑌃|

(௩௫௯) "போக்தாவும், அக்ஷரமும், புத்தமுமாயுள்ள சாட்சியை அறிஞர்கள் பிரகிருதிக்கு மேலுளதாகக் கூறுகின்றனர்; இவ்வான்மா தனியாயும், சுவச்சமாயும், சுத்தமாயும், சூக்குமமாயும், சநாதனமாயும், சர்வாந்தரியாமியாயும், சின்மாத்திரமாயும், மூலப்பிரகிருதிக்கு மேலாயும் உள்ளது" எனக் கூர்மபுராணத்துச் சாங்கியயோகம் உரைத்த அத்தியாயத்தினும்,

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍍𑌵𑌨𑍁𑌸𑍍𑌯𑍂𑌤𑌮𑍇𑌕𑍇𑌨 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑍇 𑌸𑍂𑌤𑍍𑌰 𑌤𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍀𑌤𑍍𑌯𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 |

(௩௬௦) "அகம் என்னும் பதத்தினுற் குறிக்கப்பட்ட ஆன்மா மணிகளின் நூல்போலத் தொடர்ச்சியாய்ச் சர்வசரீரங்களுக்குள்ளிருந்து நியாமகனுய்ப் பிரகாசிக்குங்கால் அந்தரியாமி எனப்படுவன்" என ஏகான்மவாத சர்வசாரோபநிடதத்தினும்,

𑌅𑌹 𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌹𑌮𑍇𑌵 𑌹𑍍𑌯𑌹𑌂 𑌸𑌦𑌾 |
𑌅𑌹 𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌹 𑌮𑍇𑌵 𑌹𑌿 𑌤𑌤𑍍𑌪𑌰𑌃|
𑌅𑌹𑌮𑍇𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍀 𑌚 𑌅𑌹 𑌮𑍇𑌵 𑌪𑌰𑍇𑌶𑍍𑌵𑌰𑌃|
𑌏𑌵 𑌮𑍁𑌕𑍍𑌤𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑌦𑌾 𑌸𑍍𑌵𑌯𑌮𑍍|

(௩௬௧) "நானே சுத்தான்மா, நானே எப்போதும் நான், நான்தான் நித்தியான்மா, நான்தான் தற்பரன், நான்தான் அந்தரியாமி, நானே பரமேசுவரன் என இந்தப்பிரகாரம் (நிருபசரிதமாய்) எக்காலமும் பாவிக்க" எனரிபுகீதையினுங் கூறப்படலான் இந்த இரண்டாவது பாவனை ஏகான்மவாதிகளுக்குரிய நிர்க்குணபாவனை என்பது எளிதானே அறியப்படும்.

## மூன்றாவது பாவனை (ஞானயோகம்).

---

त्यक्त्वा पुत्रादिषु स्नेहं निर्द्वन्द्वो निष्परिग्रहः।
यस्त्यक्त्वा सर्वकर्माणि परं वैराग्यमाश्रितः।
आत्मन्यात्मानमीक्षेत स्वात्मन्येवाखिलं जगत्।
संप्राप्य भावनामन्त्यां ब्राह्मीमक्षरपूर्विकाम्।
याति परमं योगं येनैकं परिपश्यति।

(௩௬௨) புத்திரராதியரிடத்துள்ள பற்றை அறுத்து நிர்த்துவந்துவனாய், நிஷ்பரிக்கிரகனாய், சர்வகன்மங்களுமொழிந்து மிக்கவைராக்கியமுடையனாய், பரமைசுவரியம் பூண்டவன் (பாசுபதயோகநெறியானே) ஆன்மாவிலே அருட்பராசத்தியோடு பரமான்மாவாகிய சிவபெருமானைக் கண்டு, பின்னர்த் தனக்குப் பரமான்மாவாயுள்ளவரிலே உலகம் எல்லாம் இருப்பனவாக நோக்கி, இங்ஙனம் அக்ஷரபாவனை பூருவமாக (நிர்க்குணோபாசனை வாயிலாக) எய்தும் இந்த இறுதியாகிய பிராம்மிபாவனையை அடைதலாம் பரமயோகத்தினாலே ஏகராகிய சிவபெருமானைக் காண்கின்றனன்'' எனக் கூர்மபுராணம் மூன்றாவது பாவனையை விதந்து கூறிற்று.

न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः।

(௩௬௩) "சிரௌதஸ்மார்த்தக்கிரியையினாலாவது, புதல்வனையுடைமையினாலாவது, பொருளுடைமையினாலாவது, அப்பிரமவித்தை கிட்டாது, பின் இம்மூன்றையும் பரித்தியாகஞ் செய்தலினாற் சிவத்துவம் அடைந்தனர் பெரியோர்'' என உமையாரோடு கூடிய சிவபெருமானது பாவனை உரைக்கும் அத்தியாசிரம கைவல்லியோபநிடதங் கூறுமாற்றானும்,

अनेकजन्मसंसिद्धानां श्रौतस्मार्तानुवर्तिनाम्।
विरक्तानां प्रबुद्धानां प्रसीदति महेश्वरः।

(௩௬௪) "அநேக ஜன்மங்களிலே முற்றிய வைதிக ஸ்மார்த்த கன்மங்களையுடையராய், அதனாற் பற்றற்றவராய், அறிவுடையராய் எய்தினோர்க்கே சிவபெருமான் அருள்பாலிக்கின்றனர்'' என வாயுசங்கிதை கூறுமாற்றானும் மூன்றாவதுபாவனை வலியுறுத்தப்படும். சகுணபாவனை, அக்ஷரபாவனை, பிராம்மிபாவனை என்னும் மூன்றும் முறையே பௌதிகயோகம், சாங்கியயோகம், அத்தியாசிரமயோகம் என மூவகைப்படும். இவ்வுண்மை,

யொகீ ச த்ரிவிதொ ஜ்ஞெயொ பௌதிகஃ ஸாங்க்ய ஏவ ச।
த்ருதீயொ ঽத்யாஶ்ரமீ ப்ரொக்தொ யொகமுத்தமமாஶ்ரிதঃ॥
ப்ரதமா பாவநா பூர்வெ ஸாங்க்யெத்வக்ஷரபாவநா।
த்ருதீயெ சாந்திமா ப்ரொக்தா பாவநா பாரமெஶ்வரீ (கூர். பூ. உ)

(௩௬௫) "யோகி பௌதிகயோகியும், சாங்கியயோகியும், அத்தியாசிரமயோகியும் என மூவகைப்படுவன் எனறும், (கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில்) உபதேசிக்கப்பட்ட நாராயணவிஷயமாகிய முதலாவது சகுணபாவனை பௌதிகயோகம் என்றும், அவ்வியக்த (அக்ஷர) பாவனை சாங்கியயோகம் (நிர்க்குணயோகம்) என்றும், மூன்றுவதாகிய இறுதிப் பிராம்மிபாவனை (பரமேசுவரபாவனை) அத்தியாசிரமயோகம் என்றும் கூறினமை கூர்மபுராண இரண்டாவது அத்தியாய சுலோகங்களான் உணர்க.

ஸாங்க்யம் நாம வெதாந்தவிசாரঃ யொகஶ்ச நிர்குண ப்ரஹ்மொபாஸநம்।

(௩௬௬) "சாங்கியமானது வேதாந்தவிசாரம் எனவும், யோகம் நிர்க்குணப்பிரமோபாசனை" எனவும் சித்தாந்தலேசசங்கிரகத்திற் கூறப்பட்டது.

ஏதத் பாஶுபதம் யொகம் யொகைஶ்வர்யமநுத்தமம்।
அத்யாஶ்ரமமிதம் ஜ்ஞெயம் முக்தயெ கெந ஸுவ்ரதெ।

(௩௬௭) "பாசுபதயோகமானது மோக்ஷத்துக்கு வாய்ந்த ஐசுவரியத்தையுடைய உத்தமமாகிய அத்தியாயசிரமம்" என்று கூர்மபுராணங் கூறுகின்றது. இது இலாகுளம், வாமம், பாசுபதம் என்பவற்றோடு கணிக்கப்படும் அவைதிக பாசுபதம் அன்று. ஏகான்மவாதோபநிடதங்களுக்கியையப் பொருள் கற்பிக்கப்பட்ட ஈசகேநாதி உபநிடதங்களையும் வேதாந்த சூத்திரத்தையும் ஆராய்தலான் இரண்டாவது பாவனைக்குரிய புருஷதத்துவப் பிராப்தியன்றி, மூன்றுவதாகிய சிரௌதபாசுபதயோகமும், அதனுற் பெறப்படும் உண்மைச் சிவப்பேறும் எய்தமாட்டா. மத்துவாசாரியர் செய்த உபநிடத சூத்திரப் பாஷ்யப்பொருள்களும், இராமாநுஜர்கள் செய்த உபநிடத வேதாந்த சூத்திரப்பொருள்களும், சுபாலமுதலிய நாராயணோபநிடதப் பொருள்களும், நாலாயிரப் பிரபந்தப் பொருள்களும், பாஞ்சராத்திரப் பொருள்களும் முதலாவது பௌதிகயோகத்தினும், சங்கராசாரியர் இயற்றிய உபநிடதவேதாந்தசூத்திரபாஷ்ய ஏகான்மவாதப் பொருள்களும், சர்வசார முதலிய மாயாவாதோபநிடதப்பொருள்களும், இவற்றை ஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த கைவல்லியநவநீதம், பஞ்சதசப்பிரகரணம், வாசு

தேவமனனம், ஞானவாசிட்டம், ரிபுகீதை, வேதாந்தசூடாமணி, தத்துவ ராயர் பாடல், விசாரசாகரம், விசாரசந்திரோதய முதலிய ஏகான்மவாத நூற் பொருள்களும் இரண்டாவது சாங்கியயோகத்தினும், நீலகண்டசிவா சாரியரருளிய உபநிடதவேதாந்த சூத்திர மெய்ப்பொருள்களும், (உஅ-ம் இலக்கத்திற் கூறப்பட்ட) உபநிடதங்களின் பொருளை அடக்கிய திராவிட அருட்பாக்களாகிய தேவார திருவாசக முதலியவற்றின் பொருள்களும் மூன்றுவது அத்தியாசிரமயோகத்தினும் முற்றும் என்று கடைப்பிடிக்க.

(ஙசுஅ) சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம் என்னும் முத்திறத் தத்துவங்களுள் அதோபாகத்துள்ள பிரகிருதிதத்துவமுடிவாகப் பாஞ்சராத்திரிகளும் ஏகான்மவாதிகளாகிய மாயாவாதிகளும் ஆராய்ந்து விசாரணை செய்தோராதலின், இவர்க்கு முக்திஸ்தானம் பிரகிருதி புருடதத்துவங்களேயாம்.

𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌾 𑌪𑌾𑌞𑍍𑌚𑌰𑌾𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌹𑌰𑌿𑌮𑍍 ।

(ஙசுகூ) "பாஞ்சராத்திரிகளும் அந்தப் பிரகிருதிசித்தரே; அரியையே பிரகிருதியாக எண்ணுகின்றவர்" என்றும்,

𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌾𑌕𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌸𑌂𑌸𑌿𑌦𑍍𑌧𑌾 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 ।
𑌪𑍌𑌰𑍁𑌷𑍇 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑍇 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌅𑌨𑍍𑌯𑍇 𑌵𑌿𑌪𑍍𑌣𑌾𑌦𑌿𑌨𑌃 ।

(ஙஎ0) "ஏகான்மவாதிகள் பிரதானத்தைக் கடந்துள்ள புருஷதத்துவசித்தர் என்று அறியப்படுகின்றனர்" என்றும் மகோபப்பிருங்கணத்திற் கூறப்பட்டிருக்கின்றமையின், அவ்விருவர் முக்திஸ்தானம் இன்னது இன்னதென அறியக்கிடக்கின்றது.

𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌭𑌾𑌵𑌨𑌾𑌮𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌸𑌾𑌦𑍀𑌮𑌕𑍍𑌷𑌰𑌭𑌾𑌵𑌿𑌤𑌾𑌮𑍍 ।
𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍 𑌪𑌰𑌂 𑌯𑍋𑌗𑌂 𑌯𑍋𑌗𑌿𑌨𑌂 𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌿 ।
𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌮𑍀𑌪𑍍𑌸𑌿𑌤𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌵𑍍𑌯𑍋𑌮𑌾𑌖𑍍𑌯𑌂 𑌪𑌰𑌮𑌾𑌕𑍍𑌷𑌰𑌮𑍍 ।
𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌐𑌶𑍍𑌵𑌰𑌂 𑌯𑌚𑍍𑌚 𑌸𑌾 𑌕𑌾𑌷𑍍𑌠𑌾 𑌸𑌾 𑌪𑌰𑌾 𑌗𑌤𑌿𑌃 ।

(ஙஎக) "அக்ஷரபாவனை (எனப்படும் நிர்க்குணபாவனை) வாயிலாக எய்தும் இறுதிப் பாவனையை அடைந்து, பரமயோகத்தையுடையனாய் ஏகராகிய பரப்பிரமசிவனைக் காண்கின்றனன்; (ஞான) யோகிகளுடைய சிவஸ்தானமானது பரமாக்ஷரமாகிய *வியோமம் (ஆகாயம்) எனப்படும்;

* திருச்சிற்றம்பலம்.

இது ஆனந்தமாகிய சிவனுர் உலகம்; அதுவே எல்லை; அதுவே மேலாகிய முக்திஸ்தானம்'' என்று கூர்மபுராணம் கூறினமையின், இது (௫௭௨-ம் இலக்கத்திற் கூறப்பட்ட), புநராவர்த்திகொடாத சிவலோகம் என அறியற் பாற்று.

ஶ்வேத: ஸுதாரோ மதந: ஸுஹோத்ர: கங்க ஏவ ச। லௌகாக்ஷிஶ்ச மஹாமாயோ ஜைகீஷவ்யஸ்ததைவ ச। ததிவாஹஶ்ச ருஷபோ முநீ ருத்ரோ(அ)த்ரிரேவ ச। ஸுபாலகோ கௌதமஶ்ச ததா வேதஶிரா முநி:। கோகர்ணஶ்ச குஹாவாஸீ ஶிகண்டீ சாபர: ஸ்ம்ருத:। ஜடாமாலீ சாட்டஹாஸோ தாருகோ லாங்கலீ ததா। மஹாகாயஶ்ச ஶூலீ ச தண்டீ முண்டீ ஸ ஏவ ச। ஸஹிஷ்ணு: ஸோமஶர்மா ச நகுலீஶ்வர ஏவ ச। அஷ்டாவிம்ஶதி ஸம்க்யாதா யோகாசார்யா [illegible]।

(௫௭௨) "சுவேதர், சுதாரர், மதனர், சுகோத்திரர், கங்கர், லௌகாக்ஷி, மகாமாயர், ஜைகீஷவ்யர், ததிவாகர், இருஷபர், உருத்திரர், அத்திரி, சுபாலகர், கவுதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசி, சிகண்டி, ஜடாமாலி, அட்டகாசர், தாருகர், லாங்கலி, மகாகாலர், சூலி, தண்டி முண்டி, சகிஷ்ணு, சோமசர்மா, நகுலீசுவரர்'' (வாயு. உத். ௧௦. ௨—௫) என்போர் இருபத்தெட்டு வைதிக பாசுபதயோகாசாரியர்களாம். இவர்கள் ஒவ்வொருவர்க்கு நந்நான்கு சீடராக நூற்றுப்பன்னிரு சீடர் உளர். இந்த நூற்றுநாற்பது ஆசாரியர்களுட் டலைவராகிய சுவேதாசாரியருடைய சீடர் இந்தச் சைவபாடியம் அருளிய நீலகண்டசிவாசாரியர்.

---

# பிரமசூத்திர உபக்கிரமணிகை.

(௩௭௩) ஈசகேநாதி முக்கிய உபநிடதங்களை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த பிரமமீமாஞ்சை எனப்படும் உத்தரமீமாஞ்சையாகிய பிரமசூத்திரம் (வேதாந்தசூத்திரம்)

அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா |

(௩௭௪) "பின்னர், ஆகலின், பிரமவிசார விருப்பம்" என (௧. ௧. ௨) ற் கூறி,

ஜந்மாத்யஸ்ய யத: |

(௩௭௫) "எங்கிருந்து இதின் சிருஷ்டி முதலியன" என (௧. ௧. ௨) ற் சிருஷ்டி முதலியன செய்வது பிரமமென்று அப்பிரமத்தின் இலக்ஷணங் கூறிற்று. சிருட்டி முதலிய என்றமையான்,

ஸ்ருஷ்டி: ஸ்திதி ஸம்ஹார திரோதாநாநுக்ரஹா:|
பஞ்சைவ தே ஜகத்கர்த்ரு ப்ரஹ்மணோ லக்ஷணம் ஸ்ம்ருதம் |

(௩௭௬) "சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்னும் ஐந்தும் பிரமத்தின் கிருத்தியம்" என்று வித்தியேசுவரசங்கிதை (அ. ௨) ற் கூறப்பட்டது. படவே, இக்கிருத்தியம் ஐந்தும் ஏகான்மவாதிகளுடைய கூடஸ்தப் பிரமத்தினின்ருே? இன்றேல் வைணவருடைய நாராயணப் பிரமத்தினின்ருே? இன்றேற் சிவாத்துவிதிகளுடைய சிவதத்துவப்பிரமத்தினின்ருே? உதிக்கின்றவென்றும், இம்மூன்றில் எது வாஸ்தவமாய்ச் சிறந்ததென்றும் முதற்கண் ஆராயற்பாற்று.

(௩௭௭) சூதசங்கிதை சூதகீதை (௨. ௩—௫) ல் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், சப்தாதி ஐந்தும், பூதாதி ஐந்தும், வாயுக்கள் பத்தும், அந்தக்கரணம் நான்கும், அவித்தை ஒன்றும், சீவன் ஒன்றுமாகச் சேர்ந்த முப்பத்தாறு தத்துவங்களுக்குமேற் பரசிவம் (கூடஸ்தப்பிரமம்) அறியப்படுகின்றது. புறக்கருவிப்பாற்பட்ட தசவாயுக்களும் பஞ்சபூதங்களுள் ஒன்ருகிய வாயுதத்துவத்தில் அடங்க, மற்றைத் தத்துவமெல்லாம் பிரசிநோபநிடதத்திற் (௪. ௮) கூறப்பட்ட ஆன்மதத்துவ அதோபாகத்தில் அடங்கிநின்றன. ஆகலின், ஏகான்மவாதிகள் கூறும் உலக சிருட்டி ஆன்மதத்துவத்துக்கு மேற்பட்டிலது.

வரயிவீ சுவ_ூ வ_ரீயத கூவஞெ ஜவி ீயஞெ தெஜொ வாயெள விஷீயதெ வாயு_ாகாமெ விஷீயத கூகாம ஜிதிரியெஷு ஜதிரியாணி தநூாதெரஷு தநூாத்ராணி ஹூதாதௌ விஷீயதெ ஹூதாதி ஜீஹதி விஷீயதெ ஊஹாநவுக்தெ விஷீயதெ சுவ_க்து ஊக்ஷரெ விஷீயதெ சுக்ஷரம தமஸி விஷீயதெ தமஃ வரெ தெவ ஹகீ ஹவதி.

என்னும் சுபாலோபநிடத மந்திரத்தை நோக்குங்கால்,

(ஙஎஅ) நாராயணரினின்று தமசும், அதினின்று அக்ஷரமும், அதினின்று அவ்வியக்தமும், அதினின்று மகானும், அதினின்று பூதாதிகளும், அதினின்று தன்மாத்திரைகளும், அதினின்று இந்திரியங்களும், அதினின்று ஆகாயமும், அதினின்று வாயுவும், அதினின்று தேயுவும், அதினின்று அப்புவும், அதினின்று பிருதிவியும் உதிப்பனவாகப் பெறப்படுகின்றது. இங்ஙனம் சுபாலோபநிடதத்திற் கூறப்பட்ட நாராயணப் பிரமத்தினின்று எய்தும் சிருட்டிக்கிரமமும் மூலப்பிரகிருதிக்குமேற்போந்திலது. ஆகவே, நாராயண சிருட்டியும் ஆன்மதத்துவ அதோபாகத்ததெனப் புலப்படுகின்றது.

(ஙஎக) (சுவே. க. உ. னும், பிரு. சா. ச. கக) னுங்காணப்படும் மந்திரங்களுக்கு உபப்பிருங்கணமாகக் (கைலா. கூ. உகூ—ஙச) ற் காணப்படும் காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருஷன், மாயை என்னும் வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம், சத்திதத்துவம், சாதாக்கியதத்துவம், ஈசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம் என்னும் சிவதத்துவம் ஐந்துமாக (ஆன்மதத்துவத்துக்குமேற்) பன்னிரு தத்துவங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்தப் பன்னிரு தத்துவங்களேனும், மூலப்பிரகிருதிக்கு மேற்பட்ட சூக்குமப்பிரகிருதி பரப்பிரகிருதி என்னும் இரு பிரகிருதிகளேனும், ஏகான்மவாதிகளுடைய சர்வசார முதலிய உபநிடத பாஷ்யங்களிலேனும், அவர்பிரகரணங்களிலேனும், வைணவருடைய சுபால முதலிய உபநிடத பாடியங்களிலேனும், அவர் விண்டு புராணாதிகளிலேனும் காணப்படாமையானும், அவ்விருதிறத்தாரும் தமது கூடஸ்தப்பிரமத்துக்கேனும், நாராயணப்பிரமத்துக்கேனும் முழுமுதற்றன்மையும் சர்வவியாபகத்துவமும் ஏற்றிச் சாதிக்கப்போதல் எவ்வாற்றானும் இயலாது.

ஷவ—ஜகூாதி விஶிஷ் ஊஷ_ாஹியா நாயிகாரணம ஶிவதகூம தெவ ஜகதகாரணம் ஹ்ரவெஜுத்யு_வ்யதெ.

(௩அ0) "சர்வஞ்ஞத்துவாதி குணங்களினால் விசேடிக்கப்பட்டு, பவர் சிவன் முதலிய அஷ்டநாமங்களுக்கு அதிகரணமாயது சிவதத்துவம்; இது ஜகத்காரணமாகிய பிரமம்" என்று நீலகண்டசிவாசாரியர் "ஜந்மாத்தியதிகரண" த்தில் (க. க. உ) வரைந்திருக்கின்றனர்.

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑍇𑌵 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌾𑌧𑌿𑌕𑍍𑌯𑌾𑌤𑍍 𑌬𑍃𑌹𑌤𑍍 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 ।
𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌶𑌿𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌃

(௩அக) "தத்துவங்களனைத்துக்குந் தலைமையாய் வாய்ந்தமையின் நாயகமாய்க் கொள்ளப்படுவதும், தத்துவங்களுக்கெல்லாம் உறைவிடமாயிருப்பதும் சிவதத்துவமே" என்றது காரணாகமமும். ஆகலின், இதினின்று எய்தும் பஞ்சகிருத்தியம் பிரதமமகாசிருஷ்டியாய் முடிய, கீழ் நிலைக்கண்ணதாகிய நாராயணர் முதலியோர் சிருட்டி அவாந்தரசிருட்டியாம் என்று கோடற்பாற்று. இந்த அதிகரணத்திற் பொதுவுறப் பஞ்சகிருத்தியங்கள் கூறப்படினும், (க. ச. உ௩) ற் சிருட்டிகிருத்தியமும், (க. ௩. கூ) ல் திதிகிருத்தியமும், (க. உ. கூ) ற் சங்காரகிருத்தியமும், (௩. உ. ௩எ) ல் திரோபவகிருத்தியமும், (௩. உ. உ௩, க. க. எ) ல் அநுக்கிரககிருத்தியமுமாகப் பஞ்சகிருத்தியங்களும் சிறப்புறக் கூறப்பட்டன.

𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍋 𑌯𑌤 𑌶𑌂𑌭𑍁𑌃 𑌸𑍃𑌜𑌤𑍍𑌯𑌵𑌤𑌿 𑌹𑌨𑍍𑌤𑌿 𑌚 ।
𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑍋𑌽𑌸𑍌 𑌪𑌕𑍍𑌵𑌾𑌨𑍍𑌮𑍋𑌚𑌯𑌤𑌿 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ।
𑌤𑍃𑌪𑍍𑌤𑍋 𑌯𑌤 𑌸𑌦𑌾 𑌦𑍇𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍁𑌗𑍍𑌰𑌾𑌹𑌕𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 ।

(௩அஉ) "சம்புவானவர் சர்வஞ்ஞராயிருத்தலின் படைத்து, காத்து, அழிக்கின்றனர் என்றும், சுவதந்திரசத்தியுடையராதலின் பக்குவர்களைப் பாசத்தினின்று நீக்குகின்றனர் என்றும், எஞ்ஞான்றும் வரம்பிலின்பமுடையராதலின் அநுக்கிரகஞ் செய்கின்றனர் என்றும் வாதுளமகோபப்பிருங்கணங் கூறலான், சிருட்டியாதிகிருத்தியம் செய்யும் பிரமம் சர்வஞ்ஞதாதி குணங்களையுடையதாயிருக்கின்றதென்று நன்கு பெறப்பட்டது. இந்தச் சிருட்டியாதி கிருத்தியங்களுக்கும் காரணமாய்நின்ற பிரமத்துக்கு

𑌆𑌕𑌾𑌶𑌶𑌰𑍀𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 (தைத். க. சு. உ)

(௩அ௩) ஆகாயத்தை (பராசத்தியை) சரீரமாகக் கூறலான்,

𑌨𑌿𑌤𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑍁𑌖 𑌬𑌾𑌹𑍁𑌲𑍍𑌯 𑌨𑌿𑌰𑌾𑌲𑌮𑍍𑌬 𑌜𑌗𑌦𑍍𑌧𑌿𑌤𑍈𑌷𑌿𑌣𑍀
𑌪𑌰𑌃𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌾𑌕𑌾𑌶𑌾 𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌹𑌿 𑌸𑌾𑌽𑌮𑍍𑌬𑌰𑌂 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ।

(ந-அச) "*சமஸ்த ஜகதண்ட ஷண்ட புத்புத சமூக இரத்தினாகர பரப்பிரகிருதிரூப பரமசத்தியே சிதம்பரம் எனப்படும்" என்று சைவபாடியத்திற் கூறப்பட்டது.

வஹார ஹுக்ரு௦ வஸிவத்ரு-ிரெத வ்யூம |

(ந-அரு) என்னும் தைத்திரீயமந்திரத்துக்கு உபப்பிருங்கணம் கூறியாங்கு, நிவிர்த்திகலாசக்கரம், பிரதிஷ்டாகலாசக்கரம், வித்தியாகலாசக்கரம், சாந்திகலாசக்கரம், சாந்தியதீதகலாசக்கரம் என்னும் ஐவகைச் சக்கரங்களுள்ளே ஏகான்மவாதிகளுடையவும், வைணவருடையவும் நிலை பிருதிவிமுதற் பிரகிருதியீறுய்க்கிடந்த தத்துவங்களைமாத்திரம் அடக்கிய பிரதிஷ்டாகலாசக்கரத்தின்பாலதாக, சிவாத்துவிதிகளுடைய பரமாகாசமாகிய பரமவியோமம் பிரதிஷ்டை வித்தை சாந்திகலாசக்கரங்களுக்கு மேற்பட்ட சாந்தியதீதகலாசக்கரத்தின்பாலதாம்.

ஶாஙூா தஉஸூ்ர ஊாலெஹ விஶுகீ ஶூாஙூதீதயா |
யா ஊஹூஃ வாஊ௦ வெ்ாஊ வாவூகூதியொகூஃ |

(ந-அசு) "சாந்திகலைக்கு மேல் அத்துவாவின் முடிவிற் சாந்திய தீதையோடு விசுத்தியானது எய்துகின்றது; பரப்பிரகிருதியோடிசைந்தமையால் அதனைப் பரமாகாயம் என்பர்" என்று (வாயு. பூ. உரு. உஉ) ற் கூறப்பட்டது.

(உஅஎ) ஈக்ஷத்தியதிகரணத்தில் (க. க. ரு—கஉ) உலகத்துக்குக் காரணம் (சாங்கியர் கூறும்) பிரதானமன்று, (சத்தி சிவப்பொருளாகிய) சத்தென்று (க. க. ரு) ம் சூத்திரபாஷ்யத்திலும், (அந்தச் சத்து) (சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவமுடைய) ஆன்மா என்று (க. க. சு) னும், (கoக-ம் இலக்கத்தினும்), அந்தச் சத்தாகிய பரமான்மநிஷ்டனுக்கு மோக்ஷம் எய்துவதென்று (க. க. எ) னும், இந்தச் சத்தை அறிந்தால் எல்லாம் அறிந்தாயிற்று என்று (க. க. கூ) னும், ஆன்மா நித்திராகாலத்திற் சத்திற் போய் ஒடுங்குகின்றான் என்று (க. க. கo) னும், இந்தச் சத்தே (சாங். அ. ந. உ) ற் குறிக்கப்பட்ட தகராகாயம் என்னும் உண்மை (க. ந. கச) ஞ் சூத்திர பாடியத்தினும், இந்த ஆன்மாவாகிய சத்தை ஐங்கலைகளுள் உயர்ந்த சாந்தியதீதகலைப்பாலராகிய (மகா) ருத்திரர் என்று சூத்திரபாடியத்து (க. க. கக) னும் கூறப்படலான், (க. க. க) ம் சூத்திரத்திலே சிருட்டியாதி இல

*"சமஸ்த உலக அண்டங்களின் தொகுதியாகிய குமிழிக் கூட்டங்கள் தோன்றப் பெறும் சமுத்திரமாகிய பரமகாரண பராசத்தியே சிதம்பரம் எனப்படும்" என்பது பொருள்.

க்ஷணத்தினுற் புகழப்பட்ட பிரமம் சத்தென்றும், (பரம) ஆன்மாவென்றும், உருத்திரரென்றும், தகராகாசம் என்றுங் கூறப்படுமென்பது தானே பெறப்பட்டது.

(ரு அஅ) ஆனந்தமயாதிகரணத்தில் (க. க. கரு—கசு) மநுஷ்யானந்த முதலாக ஆனந்தத்தை ஒன்றுக்கொன்று நூறு மடங்காக உயர்த்திக் கொண்டுபோய் முடித்த (ஆனந்த மிகுதிப்பாட்டினுல்) * ஆனந்தமயமாயுள்ளவர் பரப்பிரமசிவபிரான் என்று (க. க. கரு) வும், இங்கே மயம் என்றது அன்னமயம் பிராணமயம் மநோமயம் வரையில் விகாரசப்தத்தினும் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்பவற்றில் மிகுதிப் பொருளினும் சென்றதென்று (க. க. கச) வும், தம் அன்பர்களுக்கு ஆனந்தத்தை விளைவிக்கின்றுர் என்று (க. க. கடு) வும், "சத்திய ஞான அனந்தமாகிய பிரமமே" "உள்ளே உள்ள ஆனந்தமயமாகிய ஆன்மா" என்று தைத்திரீயமந்திரத்திற் கூறப்பட்டதென (க. க. கசு) வும் கூறப்படலான், சிவப்பிரமமாகிய சத்து ஆனந்த மிகுதிக் குணத்தையுடையதென்றும், இந்தச் சிவனுரே சூரியமண்டலத்துள்ள பொன்மயபுருஷராக அந்தரதிகரணத்தில் (க. க. உக, உஉ) கூறப்பட்டாரென்றும், பிராணுகாசபரப்பிரகிருதிரூப பரமாகாசமே சிவபெருமான் என்று (க. க. உரு, உச)ற் கூறப்பட்டதென்றும், பரமாகாயம்(க௦டு-ம் இலக்கத்திற் கூறியாங்கு) பிரமத்துக்குப் பராசத்தியாய் முடிந்ததென்றும், அதனுல் இந்தப் பிரமசூத்திரமுதற்பாதம் முற்றினும் பிரதிபாதிக்கப்பட்ட பிரமம் சகுணப்பிரமமாமன்றி நிர்க்குணப்பிரமம் அன்றுமென்றும் ஓர்க.

(ரு அசு) இந்தச் சகுணப் பிரமத்தை உபாசிப்போர்க்கு எய்தும் பயன் பிரமலோகம் (சிவலோகம்) என்பதுபோதரப் "பிரமலோகத்திருந்து புநராவர்த்தி இல்லை, புநராவர்த்தி இல்லை" என்று (சாந். அ. கடு. க) ற் கூறிய பொருளே பிரமசூத்திரத்திறுதியில் "மீளத்திரும்புதல் இல்லை, மீளத்திரும்புதல் இல்லை" என்று சூத்திரிக்கப்பட்டது.

(ரு கூ0) பிரமசூத்திரமானது (க. க. க) ற் பிரமத்தைச் சகுணமாக உபக்கிரமத்தினும், அந்தப் பிரமத்தை உபாசிப்போர்க்கு எய்தும் பயன் பிரமலோகம் என்று உபசங்காரத்தினுங் (ச. ச. உஉ) கூறுதலாகிய உபக்கிரமோபசங்காரலிங்கத்தினுல், பிரமசூத்திரஞ் செய்த வியாசர் தாற்பரியம் சகுணப்பிரமத்தின்பாலதேயாம்.

ஸவஜ்ஜ ஸ்வஶக்தி ஸ்ரீமூலரோ ஜமுதொ ஜநுஷி தி ஷயகாரணதி தெ(ஜதஸ்யாய ஸ்ய வ்ரதிவாதகக்ஷம ந்யாயவமேவகம வ்ரதிவாதிதம்॥

* ஏகான்மவாத சர்வசாரோபநிடதத்திற் கூறப்பட்ட ஆனந்தமயப் பொருள் ஈண்டுச் செல்லாது.

(ரு௱கூக) "ஜகத்தின் சிருட்டி திதி சங்காரங்களுக்குக் காரணர் சர்வஞ்ஞரும் சர்வசத்திமானுமாகிய ஈசுவரர் என்று நியாயபூருவமாகப் பிரதிபாதிக்கப்பட்டது" என்று ஏகான்மவாதியார் தமது (க. க. கக) ஞ் சூத்திரபாடியத்திற் கூறலான், அவர் கருத்தும் நம் கருத்துக்கியையச் சகுணப்பிரமத்தின்பாலதாயிற்று.

(ரு௱கூஉ) முதற் பத்துச் சூத்திரபாடியமே நியாயபூருவமாகப் பிரதிபாதிக்கப்பட்டதென்று கூறும் அவர் வாயினாற்றானே, எஞ்சிய சூத்திரங்களுள்ளே சிற்சில இரண்டாகப் பிளக்கப்பட்டும், சிற்சில நீக்கப்பட்டும், சிற்சில புதிதாய்ப் படைக்கப்பட்டும், அதிகரணங்கள் அளவுக்கு மேலே நீட்டப்பட்டும், சீவான்மா பொய் என்று திரித்துணர்த்தப்பட்டும், கடாகாய மகாகாயங்கள் புகுத்தப்பட்டும், இரச்சு சர்ப்பங்கள் விரிக்கப்பட்டும், உயர்ந்த சகுணப்பிரமம் நிர்க்குணமெனத் தாங்கொள்ளும் பிரமமாகிய (சீவ) ஆன்மாவுக்குக் கீழென்று தாழ்த்தப்பட்டும், தாழ்ந்த (சீவ) ஆன்மாவானது நிர்க்குணப்பிரமம் எனச் சிவபதிக்கு* மேலாக உயர்த்தப்பட்டும், உடன்பாட்டெதிர்மறைக்குணங்களாற் கூறப்படும் ஒரு பிரமமானது இரு பிரமங்களாகப் பிளக்கப்பட்டும், நியாயபூருவமாகாமற் பாடியம் பிழையற்றுப்போகாதிருக்க இயற்றப்பட்டதெனச் சித்தித்தது.

(ரு௱கூரு) வியாசருக்குச் சகுணப்பிரமமொழிந்து நிர்க்குணப்பிரமத்திலே தாற்பரியமுளதாயின், நிர்க்குணப்பிரமத்தைக் கூறற்கியன்ற நெறியினாலன்றோ முதற்சூத்திரஞ் செய்திருத்தல் வேண்டும்; வியாசருக்கு அமுக்கியம் எனப்பட்ட நிர்க்குணப்பிரமம் ஏகான்மவாதியார்க்கு முக்கியமாயும், அவ்வியாசரால் முக்கியம் எனக் கொள்ளப்பட்ட சகுணப்பிரமம் ஏகான்மவாதியார்க்கு அமுக்கியமாயும் முடிந்ததே!! அந்தோ! அந்தோ!! அந்தோ!!!

(ரு௱கூச) யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேந ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம |

என்னும் தைத்திரீயசுருதியே ஏகான்மவாதியார் உதகரித்த பிரகாரம் (க. க. க, உ) ஞ் சூத்திரங்களுக்கு ஆதாரமாய் நின்றது. "ஆகாய (பராசத்தி) சரீரமுடையது பிரமம்" என்றும், "இந்த ஆகாசம் ஆனந்தமாகாவிடின்" என்றும், "ஆனந்தமுடையது பிரமம்" என்றும் பலபிரகாரமாக அந்தப்

*"ஆண்டவன்றன்னை யடிமை யென்றுரைப்பாரடிமையை யாண்டவனென்பார்
மாண்டகுபதியைப் பசு வென்றும் பசுவைப் பதியென்று மதித்துனையிகழ்ந்தே
தாண்டரு நிரயக் கிடங்கினில் வீழுஞ் சழக்கரோடிணங்குறுவரமே
வேண்டினேனருளாய் கலசைமாநகரின் மேவி வாழ்ந்தருள் பசுபதியே"
என்றார் ஸ்ரீசிவஞானசுவாமிகள்.

பிரமம் தைத்திரீயத்திலே சகுணப்பிரமமாய் நிற்ப, ஏகான்மவாதியார்க்கு நிர்க்குணப்பிரமம் என ஒன்று தைத்திரீயத்துள் எங்ஙனம் வாய்த்ததோ? இந்தச் சகுணப்பிரமசுருதியை விடுத்து, இவர் "இரச்சுவிற் சர்ப்பத் தோற்றம் போல, பிரமத்தோடியைந்த அநிர்வசநீயமாயையில் நின்று உலகத்தோற்றம் எய்தும்" என்று விவர்த்தவாதங் கூறுஞ் சர்வசாரமுதலிய உபநிடத ஏகான்மவாத சுருதியை ஈண்டு உதகரிக்க மறந்ததென்னையோ? இங்கே முதற் சூத்திரப் பிரமம் தனக்கு இலக்கணங் கூறிய இரண்டாஞ் சூத்திரத்தினாலே சகுணப்பாற்பட்டுப்போக, அவர் மீட்டும் உதகரித்தற்கு எடுத்தாளும் மந்திரங்களுக்கு ஆதாரமாய்நின்ற சாந்தோக்கிய முதலிய சுருதிகளெல்லாம் உபநிடத உபக்கிரமணிகையிற் கூறியாங்கு சகுணப்பிரமத்தின்பாற்பட்டமையானும், அவர் ஆன்மா பிரமம் என விசேடணமின்றிக் காணப்படும் சொற்கள் அமைந்த வாக்கியங்களை நிர்க்குணமென நினைந்து எடுத்து விடுப்பாராக, அவைகளெல்லாம் முன் பின் உள்ள சகுணச் சுருதிகளால் நசுக்குண்டு போதலினாலும், இவர் எவ்வுபநிடதத்து எச்சுருதிகொண்டு நிர்க்குணப்பிரமத்தை ஸ்தாபிக்கவல்லுநராவரோ!! சகுணப் பிரமத்தைக் கூறினும் நிர்க்குணப்பிரமத்திலே தாற்பரியம் என்று வெறும் வாயாற் கூறலாமன்றி, பிரமாணசகிதமாய் ஸ்தாபிக்க ஏகான்மவாதிகள் எவரும் வல்லுநராகார்!!!

(௱௯௫) ஏகான்மவாதியார்க்குப் பிரம சூத்திரத்து முதற்கண் நின்ற சிருட்டியாதிக்கு நாயகமாகிய பிரமமே அவர் கருத்துப் பிரகாரம் ஈசுரனாய், கற்பிதமாய்ப் போக, முதற்கோணுதலாற் பின் நின்ற சூத்திரமனைத்துஞ் சகுணப்பிரமப்பாற்பட்டு முற்றும் கற்பிதமாய்க் கோணுதலடைய, வியாச சூத்திரமுழுமையும் நிர்க்குணப்பிரமத்தைக் கூறாமையின், அவர்க்கு அவை வியர்த்தமாய்ப் போயின என்றன்றோ கொள்ளப்படும்!!!

(௱௯௬) சர்வத்திரப்பிரசித்தாதிகரணத்து (௧. ௨. ௧) ல் மநோமயம் (ஞானமயம்) என்றற்றொடக்கத்தனவாகக் கூறப்படுங் குணங்களையுடையவர் சிவபெருமான் என்றும்,

விவக்ஷிதகு³ணோபபத்தேஶ்ச ।

(௱௯௭) "உரைக்கப்பட்ட குணங்கள் பொருத்தமாதலினாலும்" (௧. ௨. ௨) என்னுஞ் சூத்திரத்தினாற் சத்தியசங்கற்பத்துவம் சர்வகாமத்துவ முதலிய குணங்களும் அச்சிவபெருமானுக்கே வாய்ந்த குணங்கள் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

ஸர்வவிஶிஷ்டாஶ்ரயாநாஞ்சைவ ச ।

(௩௯௮) "(அவர்) ஆனந்த குண விசிஷ்டமுடையராகவே கூறப்படலானும்" என்று அந்தராதிகரணத்து (க. உ. கரு) ம் சூத்திரமே நேரே சிவனைச் சகுணரென்று கூறிற்று. ஈண்டு,

கூ ஸுரவஜ வ ஸுரவஜ |

"ஆனந்தம் பிரமம், ஆகாயம் பிரமம்," என்று (சாந். ச. க0. ரு) உதகரிக்கப்பட்ட மந்திரத்துள்ள (வ்ழ) ஆகாயமும் (ககரு-ம் இலக்கத்திற் கண்டவாறு) பராசத்தியின் மேற்றுமதலின், ஆகாயமாகிய பராசத்திவிசிட்டர் சிவபெருமான் என்றும் பெறப்பட்டது. இந்தச் சூத்திரம் ஆனந்தசத்திவிசிட்டமுடையது பிரமம் என நேரே கூறுமையான்,

ஊத வனவ வ ஸு வஜ।

(௩௯௯) (ஆனந்தகுணவிசிஷ்டமுடையராகக் கூறப்படும்) "அந்தநியாயத்தினல், அவர் பிரமம் என்று (க. உ. கசு) வது அடுத்த சூத்திரம் கூறிற்று. ஈண்டு (க. உ. கரு) ல் "ஆனந்த விசிட்டமுடைமையான்" என்று கூறி, அந்த ஆனந்த விசிட்ட குணமுடையது பிரமம் என்று (க. உ. கசு) ற் கூறப்படுமாயின், சூத்திரகாரர் கருத்தும் உபநிடதங்களின் கருத்தும் சகுணப்பிரமத்திலா? நிர்க்குணப்பிரமத்திலா? தாற்பரியம் என்பதை விவேகிகள் எவரும் எளிதில் ஆராய்ப்பாலர்!

அந்தரியாமியதிகரணத்தில் (க. உ. கசு—உக)

ஊஜயு-ரா3யெ[?]ஷெவா2ஷ்ு தஜ3-வுவஷெஶாக (க. உ. கசு)

(௪00) "தேவர்களினும் உலகமுதலியவைகளினும் அந்தரியாமியாய் இருப்பவர் அவரே; அவர் குணங்கள் கூறப்படலான்" என்று சூத்திரம் கூறுதலானும், அங்ஙனம் பாடியத்தினும் அந்தரியாமித்துவாதி குணங்களுடையர் என்றும், அதர்வசிரசிற் கூறப்படும் ஐசுவரியாதி மங்கல குணங்களுடையராதலிற் பகவன் எனப்பட்டனர் என்றுங் கூறப்படலானும், ஈண்டு அந்தரியாமியதிகரண சூத்திரத்தினும் சகுணப்பிரமமே கூறப்பட்டதாயிற்று. "அந்த அக்ஷரம் (பிரமம்) எதனல் உணரப்படுகின்றதோ, அது பரைஞானம்; எது காணப்படாததாய், பற்றப்படாததாய், கோத்திரமிலாததாய்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறும் (முண். க. க. ரு, சு) ம் மந்திரங்களை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த

(௪0க) ஊஶுஶுவாஜி ஶுணகொ யஷெ-ராக்ஷெ: (க. உ. உஉ)

என்னும் சூத்திரம் "பிரத்தியக்ஷமாகாமை முதலிய குணங்களையுடையவர் (சிவபெருமான்); அவர் குணங்கள் கூறப்பட்டமையின்" என்று கூறி, சிவ

பெருமானூர் அம்முண்டகோபநிடதத்திற் கூறப்பட்ட இலக்ஷணகுணங்களை யுடையர் என்று சூசிப்பித்தது. இங்கே அருளினாலன்றிக் காணப்படார், உலகத்துப் பொருள்போலப் பற்றப்படார் என்பதுணர்த்தற்கு அதிருசியர் அக்கிராகியர் என்றும், (கன்மத்தினால் நமக்கு வாய்ந்த கோத்திரமுதலிய இன்மையின்) அகோத்திரர் என்றற்றொடக்கத்தினராகக் கூறப்பட்டனர் என்றுமோர்க.

இந்தச் சூத்திரம் சிவபெருமானைக் குணங்களையுடையர் (குணகஃ) என்று தெளிவாகக் கூறலானும், ஈண்டும் சகுணப்பிரமமே கூறப்பட்டதென்பது வெளிப்படை. அக்ஷரப்பிரமசிவனுக்கு அதிருசியத்துவம் நித்தியத்துவம் வியாபகத்துவமுதலிய குணங்களைக் கூறினதோடமையாது,

ய ஸுவஜ்ஞ ஸுவவிசூ (முண். க. க. கூ)

(சOஉ) அவரைச் "சர்வஞ்ஞர் என்றும், சர்வவித்தென்றும்" அம்முண்டகமானது கூறுகின்றது. ஆகலின், (பிரு. நி. அ. எ—கஉ) ற் கூறப்பட்ட அக்ஷரப்பிரமமும், இந்த முண்டகத்தில் (க. க. நி, கூ) ற் கூறப்பட்ட அக்ஷரப்பிரமமும் ஒன்றும் என்றும், இரண்டும் நிர்க்குணப்பிரமமாகாத ஒரே சகுணப்பிரமமாம் என்றும் அறிக.

அக்ஷராதிகரணத்தில் (க. ௩. கூ—கக)

அக்ஷரமம்பராந்தத்ருதேஃ।

(சOௗ) "அக்ஷரம் ஆகாயம் இறுதியாயுள்ள அனைத்தையும் தாங்குதலான்" என்னும் (க. ௩. கூ) ம் சூத்திரத்தில், அம்பரம் (ஆகாயம்) பராசத்தி என (கOச-ம், கஎ-ம் இலக்கங்களில்) நிரூபிக்கப்பட்டதன்றோ. சமஸ்தப் பிரபஞ்சத்தையும் தாங்கும் ஆகாயமாகிய பராசத்தியார்க்கு நிலையம் அக்ஷரப் பிரமமாகிய சிவபெருமான் என்று பெறப்படலான், இந்தச் சூத்திரமும் சகுணப்பிரமத்தின்பாலதே. ஸ்தூலமன்று அணுவன்று என்றற்றொடக்கத்தனவாக (பிரு. நி. அ. அ) ற் கூறப்பட்டனவெல்லாம் சகுணப்பிரமத்தைச் சாரும் என்பாராய், வியாசர் ஆகாயாந்தமாகிய அனைத்துக்கும் நிலையம் சிவபெருமான் என்றும், அக்ஷரப்பிரமம் பராசத்தி விசிஷ்டமுடையதென்றும் கூறுவாராய், "அக்ஷரப்பிரமமானது ஆகாய (பராசத்தி) இறுதியாகிய அனைத்தையும் தாங்குதலான்"

(சOச) அக்ஷரமம்பராந்தத்ருதேஃ (க. ௩. கூ)

என்று சூத்திரித்தார். இங்ஙனம் கூறுதலோடமையாது (க. ௩. கO) ல் "அந்த அக்ஷரத்தின் பிரசாசனத்தினால் (ஆஞ்ஞையினால்) (க௩நி-ம் இலக்கத்திற் கண்டவாறு) எல்லாம் நடைபெறுகின்றன" என்றும், அங்ஙனம் உல

கம் அனைத்தையும் இயக்கும் ஆஞ்ஞையாகிய பராசத்தியையுடையது பிரமம் என்றும், அது சகுணப்பிரமமாமன்றி நிர்க்குணப்பிரமமன்று என்றும் போதர, அங்ஙனம் வலியுறுத்துவாரய்ச் சூத்திரஞ் செய்தார்.

தகராதிகரணத்தில் (க. ங. கங—உஉ)

ஊஹாப உத்தரேஹ்யஃ (க. ங. கங)

(சoரு) "தகரம் சிவபெருமான்; அடுத்துக் கூறப்படும் குணங்களுண்மையான்" என்று சூத்திரம் கூற, (சாந். அ. க. க) ல் தகராகாயம் கூறப்பட, அடுத்த (சாந். அ. க. ரு) ல் "அபகதபாப்மத்துவாதி" (சர்வஞ்ஞதாதி) எண்குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்தத் தகராகாசமாகிய ஆன்மப் பிரமம் அபகதபாப்மத்துவாதி குணங்களையுடையதென்று சூத்திரமே வெளிப்படையாய்க் கூறுதலான், எல்லாவித்தைகளுள்ளுஞ் சிறந்த தகரவித்தியாகாசப்பிரமம் சகுணப்பிரமம் என்பது தெள்ளிது.

யுாெதஶ்வ ஊஹிெநா zஸ்யாஸ்ஊிஙுவஹெஸ்ஃ (க. ங. கரு)

(சoசு) "இதிலே (தகராகாசத்திலே பிரபஞ்சத்தை) தாங்குதலாகிய அவர் புகழுங் காணப்படலான்"

என்னுஞ் சூத்திரத்தினல் அந்தப் பிரமத்துக்கு மகிமை (புகழ்) என்னும் குணம் கூறப்படுகின்றது. (க. ங. உஉ) ல் தகராகாயத்துப் பரமான்மாவைப் பரமானந்த வடிவினர் என்று ஸ்மிருதி கூறுவதாகப் பிரமாணம் காட்டப்பட்டிருக்கின்றது. (க. ங. உங, உச) பிரமிதாதிகரணத்து (க. ங. உங) ல் உபாசகர்பொருட்டு அங்குஷ்ட அளவினராய் நின்றனர் என்றும், இவர் சிவபெருமான் என்றும், பிரமசூத்திரம் செய்த வியாசர் கருத்துச் சிவபெருமான்மீதன்றி நிர்க்குணப்பிரமத்தின்பாலதன்று என்றும் அறிவுறுத்துமாறு அப்பயதீக்ஷிதர்,

(சoஎ) நிப0ய ஸூத்ராணா0 நி஗மஶிரஸா zய௨o வ்யய யதாவெி ஸ்வேஷா ஹாவ ஸ்வத ஶிவபாரெக வியுஶதா॥ வ ஊ0ஸ0 யொ z0ஹுஷவ்யூத ஊநவெக்ஷ்யாவாநய0 தவெஶாந ஶ்யுதா வாஉ நிரவெஷீ த்வா ஐதி॥

பிறநய மாகும் புருடனங் குட்டப் பிரமிதி தனைவிரும் பாம
லறவனே யுனதீ சானநற் சுருதி யாற்பர மென்றுங்ச் சயித்தோன்
செறியும்வே தாந்தப் பொருளினைத் தெரிக்குஞ் சூத்திரஞ் செய்தவன் கருத்து
மிறைவனின் பெருமை கண்டதே யாகு மென்பரா லாயவல் லவரே.

என்று சிவதத்துவவிவேகத்திற் கூறினர்.

அங்ஙனமாயின், ஏகான்மவாதிகள்பொருட்டு அப்பயதீக்ஷிதர் தாம் எழுதிய சித்தாந்தலேசசங்கிரகத்தினும் பிறவியை அறுப்பது ஏகான்மவாதியார் (சூக்தி) திருவாக்கென்று கூறியிருக்கின்றாரெனின், அது ஒவ்வாது; (ஙடுடு—ஙஎக-ம் இலக்கவரையிற் கூறியாங்கு), சகுணம் (பௌதிகயோகம்), நிர்க்குணம் (சாங்கியயோகம்), அத்தியாசிரமம் (பாசுபதயோகம்) என யோகங்கள் மூன்றென்று கூர்மபுராணம் வெளிப்படையாய்க் கூறி, அவற்றுள்ளே நிர்க்குணபாவனை (சாங்கியயோகம்) இரண்டாவது பாவனை என உரைத்தவிடத்தும், பிரமகீதையில் ஐந்தாம் அத்தியாயத்து நூற்றிருபத்தெட்டாம் சுலோகத்தில் இந்த நிர்க்குணப்பிரமநிலைக்கு மேலாக மற்றோர் நிலையில்லை யென்று பிரமாவானவர் அக்கினி மழுவேந்திச் சத்தியஞ் செய்தார் என்று கூறி அப்பிரமாவைப் பொய்ச் சத்தியத்துக்கு ஆளாக்கியும், நீலகண்டசிவாசாரியர் அருளிய சைவபாடியத்துள்ளும், அப்பயதீக்ஷிதர் எழுதிய சிவார்க்கமணிதீபிகையுள்ளும் புகட்டுரைகள் செய்தும், அத்தீக்ஷித யோகியார் வரைந்த இரத்தினத்திரயபரீக்ஷை, ஆனந்தலகரி, சிவாத்துவைத நிர்ணய முதலிய கிரந்தங்களில் வேண்டியவாறு திரித்துத் திரித்து எழுதியும் வைத்த ஏகான்மவாதக் குழுவினர்க்கு அச்சித்தாந்தலேசசங்கிரகத்து முதற்கண் அங்ஙனம் இயைத்துவைத்தல் அரிதன்றாமாதலின்.

(க. ங. சஉ—சச) அர்த்தாந்தரத்துவாதிவியபதேசாதிகரணத்து,

ஆகாஶோ உர்தாந்தரத்வாதி வ்யபதேஶாத்।

(ச௦அ) (க. ங. சஉ) ல் "ஆகாயம் சிவபெருமான், அவர் பிற வஸ்து முதலியவைகளுக்கு வேறாகக் கூறப்படலான்" என்னுஞ் சூத்திரத்திலே பராசத்தியாகிய ஆகாயமாயுள்ளார் சிவபெருமான் என அறியப்படுகின்றது.

கிருத்சிநப்பிரசத்தியதிகரணத்தில்

ஸர்வோபேதா ச தத்தர்ஶநாத் (உ. க. ங௦)

"அவரது சத்தி அனைத்தையும் கூடிற்று என்று சுருதியிற்காண்டலான்" என்னும் சூத்திரத்தில் அவருக்குச் சத்தியாவார் பராசத்தி என்று (சுவே. சூ. அ) உதகரிக்கப்படலான், அவர் பராசத்தியுடையார் என்று அறியப்பட்டது.

சர்வதர்மோபபத்தியதிகரணத்தில்

ஸர்வதர்மோபபத்தேஶ்ச (உ. க. ஙகூ)

(ச௦கூ) "சர்வகுணங்களும் அவருக்கு இயைதலானும்" என்னும் சூத்திரத்தில், (பிரதானம், அணு, கன்மம், காலமுதலியவற்றுக்கியைபில்

லாத) எல்லாக் குணங்களும் சிவபெருமானுக்கே உரியவெனச் சூத்திரமே கூறுதலான், வியாசர் கருத்து முழுதும் சகுணப்பிரமத்தின்பாலதாம்.

வராஸிஜூாநாத்து திரொஹிதம ததொ ஹ்யஸ்ய ஃவ்யவிவ ஷ்யெள (௩. ௨. ௪) ற்

(௪௧0) "பரத்தின் (சிவனார்) சங்கற்பத்திஞல் அது திரோபவிக்கப் பட்டது" என்றற்றொடக்கத்த சூத்திரத்தில் தியானம் என்றது சங்கற்பத்தின் பெயராய்ப் பிரமத்துக்குக் குணமாயிற்று.

(௪௧௧) உபயலிங்காதிகரணத்தில் (௩. ௨. ௧௧—௨0) சிவபெருமானுக்கு உடன்பாட்டானும் எதிர்மறையானும் கூறப்படும் இரு குணங்கள் சுருதியிற் கூறப்பட்டுள்ளன. "சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என்றும், "சர்வஞ்ஞர்" என்றும், "சர்வகதர்" (சர்வவியாபகர்) என்றும், "சத்தியசங்கற்பத்துவம் சத்தியகாமத்துவம்" என்றும் சுருதிகளிற் கூறப்பட்டனவெல்லாம் உடன்படுமுகத்தாற் கூறப்பட்ட குணங்கள்; "ஸ்தூலமன்று, அணுவன்று, நீட்டமன்று, குறுக்கமன்று" என்றற்றொடக்கத்தனவாகவும், "நிர்க்குணம், நிஷ்கிரியம், நிரஞ்சனம்" என்றற்றொடக்கத்தனவாகவும் கூறப்படுவன எதிர்மறைமுகத்தாற் கூறப்பட்ட குணங்கள்; உடன்பாட்டுக் குணங்களைமாத்திரம் கூறுது எதிர்மறைக்குணங்களைக் கூறியதெற்றுக்கெனின், "சத்தியஞானனந்தாதி" உடன்பாட்டுக் குணங்கள் பிறபொருள்களாற்றொடக்குண்ணும் குற்றம் ஒன்றும் பற்றுது தூயனவாய் நிற்பன என ஸ்திரப்படுத்தற்காம்; "அவர் பிருதிவியில் நின்றூர், அப்புவில் நின்றூர், ஆன்மாவில் நின்றூர், திக்குகளெல்லாம் பிரவேசித்தனர்" என்றற்றொடக்கத்தனவாகப் பிருகதாரணியம், மத்தியந்தினசாகை, அதர்வசிரசு முதலியவைகளிற் கூறப்பட்டவிடத்தும், அவர் ஸ்தூலமாய், அணுவாய், நீட்டமாய், குறுக்கமாய் நிற்கும் உலகத்துச் சடப்பொருள்களையெல்லாம் வியாபித்து நின்றூரேனும், அநாதிமலத்தினையுடைய பசுக்களோடு கலந்து நின்றூரேனும், அச்சடப்பொருள்களின் தூலத்துவமேனும், அணுத்துவமேனும், நீட்டம் குறுக்க முதலியவேனும், பசுக்களின் அஞ்சனமேனும் (மலமேனும்), (சாத்துவிக இராசச தாமச) குணங்களேனும், அப்பசுக்களுக்குரிய தொழில்களேனும் சிறிதும் அவரைத் தொடக்காவென்றுணர்த்தற்குமாமெனக் கொள்க. ஆன்மாக்களுடைய கைகால் முதலியவைகளாய் நின்றூரேனும், இந்தப் பிராரப்த கன்மத்துக்குரிய கைகால் முதலிய அங்கங்கள் அவருக்கு இல்லை என்பவாய் "அபாணி அபாதம்" என்றற்றொடக்கத்தனவாகச் சுருதிகள் புகழ்ந்தன என்றும், அச்சட அசடப்பொருள்களுள்ளே நின்று தாம் இயக்குவாரேனும் அச்சடப்பொருள்களாலேனும் பசுக்களா

லேனும் காணப்படாமலும் கேட்கப்படாமலும் நின்று, தாமே அவற்றை யெல்லாம் காண்டல் கேட்டல் செய்வாராதலின், "அதிர்ஷ்டோ திரஷ்டா அசுருதஃ சுரோதிரா" (அஷ்ரஷ்டோ ஷ்ரஷ்டா அஷ்ருதஃ ஷ்ரோதா) என்று (பிரு. ரு. எ. உ௩) ம் சுருதி கூறிற்றென்றும், பசுக்களுக்குரிய பாவமேனும், ஜரையேனும், மிருத்தியுவேனும், சோகமேனும், பசியேனும், தாகமேனும் அவருக்கு இல்லை என்பனவாய்ச் (சாந். அ. க. ரு) வது சுருதி முதலிய அவருக்கு அபகதபாப்மத்துவாதி குணங்களை விதந்தெடுத்தோதின என்றும், இங்ஙனம் எவ்வகைத் தோஷங்களும் பற்றுமையால், சர்வஞ்ஞதை சத்திய ஞானனந்த முதலிய கல்யாணகுணங்களுக்கெல்லாம் அவர் ஆஸ்பதமாயினர் என்றும் வலியுறுத்தப்படுகின்றன. ஆகலின், உடன்பாட்டு எதிர்மறைக் குணங்களால் ஒரே சகுணப்பிரமமே வேதாந்த சூத்திரத்தினும், அதற்கு ஆதாரமாய் நின்ற உபநிடதங்களினும் பிரதிபாதிக்கப்பட்டதேயாக, நிர்க்குணப்பிரமம் என மற்றோர் பிரமம் முக்கிய உபநிடதங்களினும், வேதாந்த சூத்திரத்தினும் கூறப்பட்டதெனச் சாதிக்கப்போந்தமை முற்றும் வழு! முற்றும் வழு!! அங்ஙனம் ஒன்றுள தென்று கூறுபவரெல்லாம் சுருதிகளுக்கு இதிகாசபுராணங்கொண்டு பொருண்முடிக்காது, அச்சுருதிகளுக்குத் தாமே நேர்ந்தவாறு பொருள் செய்து அவற்றைக் கொன்றவரே யாவர்; ஒரே சகுணப்பிரமம் கூறப்பட்டதென்னும் உண்மையை (௩. உ. கஉ) ஞ் சூத்திரமுதலியவற்றிற் காண்க. (பிரு. ௪. ௩. ௬. னும், ௬. உ. ௪. னும், ௬. ௪. உஉ. னும், ௬. ரு. கரு) னுங் காணப்படும் "நேதி நேதி" என்னும் பிரயோகம் பிரமத்துக்குமேல் மற்றோர் வஸ்து இல்லை என்றுணர்த்தற்காம். இவ்வுண்மை (௩. உ. உக) என்றற்றொடக்கத்த சூத்திரங்களிற் பார்த்துணர்க.

ப்ரகாஶவச்சாவையர்த்யாத் (௩. உ. கரு)ல்

(௪கஉ) பிரகாசம் போன்று அவர் திவ்ய குணங்களுடையர், சிவபெருமானுக்கு நூற்றுக்கணக்காகிய குணங்கள் இருப்பனவாக, அக்குணங்கள் அவர்க்கு இல்லையென்று சாதிக்கத்துணிதல் அக்குணங்களை விதந்தெடுத்தோதிய சுருதிகளையெல்லாம் வியர்த்தமாக்கிவிட்டதாய் முடியுமென்றும், ஆகலின் அநேக கல்யாண குணங்களுக்கு ஆஸ்பதமாயினர் சிவபெருமான் என்றும் அறியற்பாற்று.

ஆஹ ச தந்மாத்ரம் (௩. உ. க௬)

(௪க௩) "சுருதியும் அவரைமாத்திரம் கூறுகின்றது" என்னுஞ் சூத்திரத்தினுல் சத்திய ஞான மனந்தம் பிரமம் என்று அவரையுற்று மாத்திரம்

கூறிய சுருதியானது அடுத்துத் தொடர்ந்து பிரமத்துக்கு அங்கே கூறிய (சர்வஞ்ஞதை) விபச்சித் என்னும் குணத்தை மறுக்கவில்லை; ஆகலின், சகுணப் பிரமமே சூத்திரங்களிற் பிரதிபாதிக்கப்பட்டதென்பதை அது வலியுறுத்துகின்றது.

அதோ(அ)நந்தேந ததா ஹி லிங்கம் (௩. ௨. ௨௫)

(௪௧௪) "அவர் அனந்த குணங்களோடியைந்தவர்; ஆகலின், அவர் இயற்கை" என்னுஞ் சூத்திரத்தினும் கூறப்படும் பிரமம் சகுணத்தின் மேற்று.

அநேந ஸர்வகதத்வமாயாமசப்தாதிப்ய: (௩. ௨. ௩௬)

(௪௧௫) "அதனால் அவருக்குச் சர்வவியாபகம்; ஆயாமமாகிய விஸ்தீர்ணமுதலிய சப்தங்களுண்மையின்" என்னுஞ் சூத்திரம் சிவபெருமானுக்குச் சர்வஞ்ஞத்துவம் சர்வவியாபகத்துவம் என்னும் குணத்தைச் சாற்றுகின்றது.

உபஸம்ஹாரோ(அ)ர்த்தாபேதாத் விதிசேஷவத்ஸமாநே ச (௩. ௩. ௫)

(௪௧௬) "அர்த்தத்திற் பேதமின்மையின் (குணங்களைப்பற்றி) உபசங்காரஞ் (செய்யப்படல் வேண்டும்); விதியின் சேஷங்களிற் போலவே (உபாசனவிஷயத்தினுஞ்) சமானமுமாம்" என்னுஞ் சூத்திரத்தில் உபநிடதங்களிலே தகரவித்தியாசம்பந்தமாகக் கூறப்பட்ட குணங்கள் தகரோபாசனையில் உபசங்கரிக்கப்படல்வேண்டும் என்று கூறுகின்றமையின், உபாசனைகள் அனைத்தினும் பிரமத்தின் குணங்கள் தியானிக்கப்படல்வேண்டும் என்னும் நெறி பெறப்படுகின்றது.

ஆநந்தாதய: ப்ரதாநஸ்ய (௩. ௩. ௧௧)

(௪௧௭) என்னுஞ் சூத்திரம் "முக்கியப்பொருளாகிய பிரமத்துக்கு ஆனந்தாதிகுணங்கள் தியானத்தில் ஒருங்கு கொள்ளப்படல் வேண்டும்" என்று கூறுகின்றது.

ஸைவ ஹி ஸத்யாதய: (௩. ௩. ௩௭)

(௪௧௮) "தேவதை ஒன்றே பேசப்பட்டது; சத்திய முதலிய குணங்கள் கூறப்பட்டமையின்" என்னுஞ் சூத்திரபாஷ்யத்தில் மகாதேவராகிய (தேவதைக்கு) சத்தியமுதலிய குணங்கள் உள்ளனவாகப் பெறப்படுகின்றது.

காமாதீதரத்ர தத்ர சாயதநாதிப்ய: (௩. ௩. ௩௮)

(௪௧௯) "(சத்திய) காமாதி குணங்கள் அங்கங்கே உபசங்கரிக்கற்பாலன" என்று கூறப்பட்டமையின், (பிரு. அ. க. ௫) ல் தகரவித்தியா சம்பந்தமாகக் கூறப்பட்ட சத்தியகாம சத்தியசங்கற்பத்துவாதி குணங்கள் உபசங்கரிக்கற்பாலன என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஆதராதலோப: (௩. ௩. ௩௯)

(௪௨0) என்னுஞ் சூத்திரத்தினல், அவருக்கு உமாசகாயத்துவம், அலுப்தசக்தித்துவம், கிருஷ்ணபிங்களத்துவம், விரூபாக்ஷத்துவ முதலிய குணமனைத்தும் உபாசகன் உபாசிக்குங்கால் உளவாகி, பின் இல்லாது போகவில்லை, அவை எப்போதும் பரப்பிரமத்தை விட்டு நீங்காதன்வாம் என்று கூறப்படுதலின், வியாசசூத்திரமுழுமையும் சகுணப்பிரமத்தையே பிரதிபாதிப்பனவாயின.

(௪௨௧) சூத்திரகாரரும் நீலகண்டசிவாசாரியரும் பிரமத்துக்கு உடன்பாட்டானும் எதிர்மறையானும் கூறிய குணங்களின் உண்மை அறியமாட்டாது, உடன்பாட்டுக் குணங்களாற் கூறப்படுங்காற் சகுணப்பிரமம் என ஒன்றும், எதிர்மறைக் குணங்களோடேனும், வாளா சத்து, பிரமம், ஆன்மா என்று தனிச்சொற்களோடேனும் சுருதி கூறப்படுங்கால் நிர்க்குணப்பிரமம் என மற்றொன்றுமாக இரு பிரமங்கள் உபநிடதங்களினும் வேதாந்த பிரம சூத்திரங்களினும் பிரதிபாதிக்கப்பட்டன என்று ஒரே பிரமத்தை இரண்டாகப் பிளக்கப்போந்தமை ஏகான்மவாதியார்க்கு அடாது. (௩௯௮-ம் இலக்கத்திற்) கண்ட (௧. ௨. ௧௫) ஞ் சூத்திரத்திலே "சுகவிசிட்டமுடையராக (ஆனந்தவிசிட்டமுடையராகக்) கூறப்பட்டமையின் அவர் (சிவபெருமான்) பிரமம்"

(௪௨௨) அத வைவ ஸ ப்ரஹ்ம (௧. ௨. ௧௯)

என்னும் சூத்திரத்தைத் தமது வேதாந்த பிரமசூத்திரத்தினின்று இல்லாதொழியச்செய்தனர். இச்சூத்திரம் நீலகண்டசிவாசாரியருடைய மதத்துக்கு இசைவாயிருத்தலினும், ஏகான்மவாத நிர்க்குணப்பிரமக்காரர்க்கு விரோதமுற்றிருத்தலினும், அவர் அப்பிரமசூத்திரத்தைச் சூத்திர எல்லையினின்று நீக்கிப் பரதேசத்துக்கனுப்பிவிட்டார். இதனாலேனும் சூத்திரங்கள் ஒரு புறமிருப்ப, ஏகான்மவாதியார் மற்றோர் புறமாகப் பாடியஞ் செய்தனர் என அறிஞர் அறியாது போவாரா !!

இதீதம் ப்ரஹ்மஸூத்ராணாம் ஜாத்வய்யம் ஸம்மதம் ஸிவே।
ப்ரகடீக்ருதமாசார்யை: ப்ரணீதே பாஷ்ய வர்த்மநி।

(சஉங) "பிரமசூத்திரம் எனப்படும் வேதாந்த சூத்திரங்களின் தாற்பரியம் சகுணசிவத்திலேயாம் ;இதனை உலகத்துக்குப் பிரகடனஞ் செய்யும் பொருட்டே நீலகண்டசிவாசாரியர் உத்தமமாகிய பாடியத்தை இயற்றினர்" என்று அப்பயதீக்ஷிதர் சிவார்க்கமணிதீபிகை ஆரம்பத்தில் வரைந்திருக்கின்றார்.

விஶிஷ்டாத்வைத ஏவ ஸூத்ரகாரஸ்யாபிப்ராய:।

(சஉச) (சிவசத்தி குணங்களால் விசேடிக்கப்பட்ட) விசிட்டாத்துவிதமே சூத்திரகாரருடைய அபிப்பிராயம்" என்றும் அச்சிவார்க்கமணிதீபிகையுள்ளுங் கூறினர். விசிட்டாத்துவிதம் என்றது சிவாத்துவிதம்; இது "நிலவுலகாயதாதி நிகழ் சிவாத்துவிதாந்தம்" என எல்லாச் சமயங்களினும் உயர்ந்ததாய், அகச் சமயங்களுள் தலையாயதாகிப் பிரமலோகம், உன்மனலோகம், பரலோகம், சுவர்க்கலோகம் எனப்படும் சிதம்பரத்தின் மேலாயிற்று; இந்தச் சிவாத்துவிதமானது தியானயோகம் எனப்படும் ஞானயோகத்தை உள்ளவாறு முக்கிய வேதாந்தங்களுக்கும் சிவாகமங்களுக்கும் மாறுபடாவண்ணங் கூறுகின்றது.

(சஉரு) (க. க. எ. ஹும், க. உ. கக, கஉ. ஹும், க, உ. உக. ஹும், க. ங. உ. ஹும், க. ங. ச. ஹும், க. ங. சா. ஹும், க. ச. உஉ. ஹும், உ. க. உஉ. ஹும், உ. க. உங) ஹுஞ் சீவான்மாவும் பரமான்மாவும் வேறென்று கூறப்படுகின்றது. சீவான்மாவை மித்தை என்று கூறும் மாயாவாதபக்ஷம் (உ. ங. சஅ—ருஉ) ற் கண்டிக்கப்பட்டிருக்கின்றது.

(சஉசா) (உ. ங. கசா) ல் ஞன் என்று சீவான்மாவைக் கூற, ஏகான்மவாதியார் ஞானம் என்று பொருள் செய்தனர். ஞன் என்பது ஞாதாவாகிய ஆன்மாவின்மேற்று. அறிவென்றது குணம்; அறிவினையுடையவன் (ஞன்) குணி என்றோர்க. இங்ஙனமாகவும், ஞன் என்றதற்கு ஏகான்மவாதியார் "அறிவு" என்று பொருள் கூறியது அடாது. பிரமமானது உபாதியினாற் கட்டுண்டு சீவான்மாவாகின்றதென்று கூறல்

சூஹாஸ வஙவ உ (உ. ங. சசா)

(சஉஎ) "ஆபாசமுமே" அஃதாவது (போலி நியாயமுமாம்) என்று நீலகண்டசிவாசாரியர் கூறியிருப்ப, ஏகான்மவாதியார் "சலத்திற் சூரிய விம்பம்போலச் சீவான்மா கற்பிதம்" என்று சூத்திரப் பொருளைத் திரித்துணர்த்தினர். இங்ஙனம் கூறல் அநேக சுருதிகளுக்கு விரோதம் என்பாராய் நீலகண்டசிவாசாரியர்

(சஉ௮) ஸ்ரவஹண வஸவ கஜாநா ஜீவஹாவகஸ்ரெந ஸஹா ஸ்ரீதிவிரொயாதிதொஷவ்ஸதூ உஃவஃாா |

என்று பிரமசூத்திரபாஷ்யத்தில் (உ. ங. சங) வரைந்தருளினர்.

(உஉகூ) ந வாத்ஹாஹெஜவாதிநஃ
ஸஷீகாரஜதயொரிவெகதரஹியாகெவநு|

(சங0) "நாம் இப்பி வெள்ளி என்பவற்றிற்போல, ஒன்றை (சீவான் மாவை) மித்தை என்று கூறும் அத்தியந்த அபேதவாதிகள் (ஏகான்மவாதிகள்) அன்று" (உ. க. உஉ) என்றற் றொடக்கத்தனவாக மாயாவாதத்தைக் கண்டித்திருக்கின்றனர்.

(சஙக) சிவபெருமான் முக்தரால் அடையற்பாலர் என்பது (க. க. எ. னும், க. ங. உ) னும், அம்முத்தர் உபாசனை செய்யுமாறு (ச. க. உ) னும், அவர் சிவசாமியமடைதல் (க. ங. உக) முதலியவற்றினும், சிவபெருமான் அங்ஙனம் உபாசித்துச் சிவசாமியமுறுபவர்களுக்கு ஆனந்தத்தை விளைவிப்பவர் என்பது (க. க. க௫) னும், முக்தர் ஆனந்தம் அடைவர் என்பது (ச. ச. கச. ம், ச. ச. ககூ) னும், அங்ஙனமடைந்த ஆனந்தம் முடிவுகாண்கிலாப் பேரின்பமாகிய பூமா என்பது (க. ங. எ) னும், அவர் எய்தும் உலகம் சிவலோகம் என்பது (ச. ச. உஉ) னும் அறியப்படுகின்றது.

(சஙஉ) இரண்டாம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்திற் பிரதான காரணவாதம், பரமாணுகாரணவாதம், பௌத்தமத நிராகரணம், ஞாஞெ மேயவாதம், விஞ்ஞானமாத்திரவாதம், சர்வசூனியவாதம், சைனமத நிராகரணம், (பசுபதி அதிகரணத்து) இரணியகருப்பமத நிராகரணம் (உ. உ. ங௫—ங௮), பாஞ்சராத்திரமத நிராகரணம் (உ. உ. ஙகூ—சஉ), மாயாவாத நிராகரணம் (உ. ங. சகூ) கூறப்பட்டது.

(சஙங) சீவான்மவிஷயம் (உ. ங. ககூ—௫உ) னும், (ங. க. க—உஎ) னும், (ங. உ. க—க0) னுங் கூறப்பட்டிருக்கின்றது.

(சஙச) நீலகண்டசிவாசாரியர் பசுபதியதிகரணத்தில் இரண்ணிய கருப்பமதத்தைக் கண்டிக்க, ஏகான்மவாதியார் நகுலீசபாசுபதத்தையும், வைணவர் காபாலம் காளாமுகம் என்பவற்றையுங் கண்டித்தனர்; அவை நம்மாலும் கண்டிக்கற்பாலனவாதலின், அது நமக்கும் உடன்பாடே. பாஞ்சராத்திர மதத்தை நீலகண்டசிவாசாரியரும் சங்கராசாரியரும் நிராகரணஞ் செய்ய, அதற்கு உடன்படாது பாஞ்சராத்திரமதம் ஸ்தாபிக்கப்பட்டதென்று வைணவர் கொண்டனர். மாயாவாதத்தை நீலகண்டசிவாசாரியரும்

ணவரும் கண்டிப்ப, அதற்கு உடன்படாது மாயாவாதம் நிறுத்தப்பட்டதென்று ஏகான்மவாதியார் ஸ்தாபிக்கப்போந்தனர். (நீலகண்டசிவாசாரியர், சங்கராசாரியர், *இராமாநுஜாசாரியர்) மூவரும், (நீலகண்டசிவாசாரியர், சங்கராசாரியர்) இருவரும், (நீலகண்டசிவாசாரியர் இராமாநுஜாசாரியர்) இருவரும் முறையே (சைவசித்தாந்தமல்லாத) அவைதிக பசுபதிமதத்தையும், பாஞ்சராத்திரத்தையும், ஏகான்மவாதத்தையுங் கண்டித்தாராதலின் மிகுதிபற்றிக் கண்டனமே ஒப்புக்கொள்ளற்பாலதன்றி, அப்பாசுபதமதமேனும், பாஞ்சராத்திரமதமேனும், ஏகான்மவாதமேனும் ஸ்தாபிக்கப்பட்டதாகக் கோடல் ஒர்காலும் ஒவ்வாது. இரண்டாம் அத்தியாயத்து இரண்டாம் பாதம் மதகண்டனத்துக்கேற்பட்டமையின், பாஞ்சராத்திரங் கண்டிக்கப்பட்டதன்றி ஆங்குப் பாஞ்சராத்திரம் ஸ்தாபிக்கப்படற்குரிய குறியொன்றுஞ் சூத்திரங்களில் இல்லையாம் என்பது வெளிப்படை.

(சடுரு) உடன்பாட்டெதிர்மறைக் குணங்களாற் கூறப்படுஞ் சகுணப்பிரம சோரூபலக்ஷணம் (௩. உ. கக—ச0) ற் கூறப்பட்டிருக்கின்றது. பரப்பிரம உபாசனுகுணங்களின் தொகுப்பு மூன்றும் பாதமுழுதினுங் கூறப்பட்டிருக்கின்றது. மூன்றும் அத்தியாயத்து நான்காம் பாதத்திற் பிரமசரிய கிரகஸ்த வானப்பிரஸ்த சந்நியாச ஆச்சிரமங்களின் இயல்பும், (௩. ச. சஅ, சசு) ல் எல்லா ஆச்சிரமத்தார்க்குமுரிய வைதிகபாசுபத விரத அநுட்டானமும் (௩-ச0—௩-டுச-ம் இலக்கவரையிற் கண்டவாறு) கூறப்பட்டிருக்கின்றன.

(சடுசு) நான்காம் அத்தியாயம் உபாசனைகளின் பயனைக் கூறலிற் பலாத்தியாயம் எனப்படும். இந்த நான்காம் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் உபாசனுப்பிரகாரங் கூறப்பட்டிருக்கின்றது.

(சடுஎ) சூஸீந ஸூஹவாசூ (ச. க. எ) ல் உபாசகர்க்குரிய ஆசன நியமம் கூறப்பட்டிருக்கின்றது. இந்த ஆசன நியமம் கைவல்லியோபநிடதத்திலன்றி மற்றோர் உபநிடதத்திற் கூறப்படவேயில்லை. நீலகண்டசிவாசாரியர் சிவபெருமானை வெளிப்படையாய் உணர்த்தும் அதர்வசிகை முதலிய பரோபநிடதங்களினின்று பிரமாணங் காட்டுங்கால், அந்தப் பிரமாணத்தை நிகர்ப்பப் பிறிதோர் பரோபநிடதத்தினின்று ஏகான்மவாதியரும் வைணவாசாரியரும் பிரமாணம் நிரூபிப்பது வழக்கம். கைவல்லியம், அதர்வசிரசு, அதர்வசிகை முதலிய உபநிடதங்களிலிருந்து பிரமாணம் காட்டாது பிறிதோர் முக்கியோபநிடதத்தினின்று நீலகண்டசிவாசாரியர் நிரூபிப்பின், அதனை மற்றிருவரும் எடுத்து நிரூபிப்பதும் வழக்கம். இங்ஙனமாகவும்,

*இராமாநுஜாசாரியரும் மத்துவாசாரியரும் சகுணநாராயணரிலே தாற்பரியமுடையராதலின், ஈண்டு மத்துவபாடியத்தை வேறாகப் பொருட்படுத்தி யாதுங் கூறினேமல்லேம்.

ஏகான்மவாதியரும் வைணவாசாரியரும் "ஆசனநியம" விதிக்குக் கைவல்லிய சுருதியையொப்ப மற்றோர் உபநிடதத்திற் சுருதி தம் பக்கத்துக்கு இடங்கொடுக்காமையின், பிரமாணம் யாதுங் காட்டாது வாளாவிடுத்தனர். இதனாலேனும் இவ்விருவரும் சூத்திரத்துக்குப் பொருள் செய்வதெல்லாம் ஒவ்வாவென்று நன்று புலப்படவில்லையா?

(சங்அ) நான்காம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்தில் சீவான்மா தேகத்தை விட்டு உற்கிரமணஞ் செய்தலும், மூன்றாம் பாதத்தில் சீவான்மா செல்லும் அர்ச்சிராதிமார்க்கமும், நான்காம் பாதத்தில் சீவான்மாவுக்கெய்தும் பரப்பிரமலோக சிவப்பேறும் கூறப்படுகின்றன.

இனி (உகூஅ—ஙகங-ம் இலக்கவரையில்) கூறப்பட்ட உற்கிரமண விஷயம் ஆராயப்படுகின்றது.

(சஙகூ) (பிருகதாரண்ணியமாகிய) கண்ணுவசாகை (பிரு. சு. ச. உ) ல் அவித்துவான் உற்கிரமணஞ் செய்யுமாறு கூறத்தொடங்கி, (சு. ச. சு) ன் முற்பாதி மந்திரத்தில் "இதுதான் பற்றுடையனாகிய அவித்துவான் விஷயம்" என்று கூறி முடிக்கப்பட்டது; அக்கண்ணுவசாகை (பிரு. சு. ச. சு) ன் பிற்பாதி மந்திரத்தில் பற்றற்ற வித்துவான் விஷயம் கூறப்போந்து "அகாமனாய், நிஷ்காமனாய், ஆப்தகாமனாய், ஆன்மகாமனாய் இருக்கின்றானோ அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை; பிரமமாகிப் பிரமத்தைப் போயடைகின்றனன்" என்று கூறப்பட்டிருக்கின்றது;

(சச0) ப்ரதிஷேதாதிதி சேந்ந ஶாரீராத் ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் (ச. உ. கஉ)

"(வித்துவானுக்கு உற்கிரமணம் இல்லை, இங்கே பிரமப்பிராப்தி அடைந்துவிடுகின்றான் என) மறுப்பின், (வித்துவானுடைய) ஆன்மாவிலிருந்து பிராணேந்திரியங்கள் (பிரிவ) தில்லை (என்பதே பொருளாம்); (அதற்குப் பிரமாணம்) சிலர் சாகையிலே ஸ்பஷ்டமாயிருக்கின்றது" என்பது (ச. உ. கஉ) ம் சூத்திரப்பொருள்; வித்துவானுக்குப் பிராணன்கள் சரீரத்தை விட்டு உற்கிரமிப்பதில்லை என்றும், இங்கே பிரமப்பிராப்தி அடைந்துவிடுகின்றான் என்றும் பிரதிஷேதஞ் செய்யின் (மறுப்பின்), பிராணேந்திரியங்கள் அந்த வித்துவானுடைய ஆன்மாவைப் பிரியாதிருப்ப, அவன் தலைநாடிவாயிலாய்த் தேவயான மார்க்கமாகச் சுவர்க்கலோகம் (பிரமலோகம்) போயடைகின்றான் என்று (பிரு. சு. ச. எ, அ, கூ) ற் கூறப்பட்டிருக்கின்றதன்றோ; அங்ஙனமாயின்,

(சசக) ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி (பிரு. சு. ச. சு)

"அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்னும் மந்திரத்தில் அவனுக்கு (தஸ்ய) என்று சுருதியிற் காணப்படலான், பிராணன்கள் அவனுக்கு உற்கிரமிப்பதில்லை என்று பொருள் கொள்ளல் வேண்டுமே, இதற்கு யாது சமாதானம்? என ஆக்ஷேபிக்கப்புகின், அந்த ஒரே வித்துவான் விஷயத்தை ஒரே பொருள் கொண்ட ஒரே மொழிகளாற் கூறுமிடத்து, மத்தியந்தினசாகையானது பிருகதாரணிய கண்ணுவசாகையிற் காணப்படும் அவனுக்கு (தஸ்ய) என்னும் பதம் நின்றவிடத்து அவனிலிருந்து (தஸ்மாத்) என்னும் ஐந்தாம் வேற்றுமைப் பொருட்பதத்தை ஸ்பஷ்டமாகப் பிரயோகித்தமையின், ஈண்டு பிருகதாரணியத்து அவனுக்கு (தஸ்ய) என்ற பதத்துக்கு அங்ஙனமே ஐந்தாம் வேற்றுமைப் பொருள் கோடல் வேண்டும் என்றுணர்த்த வியாசமுனிவர் சிலர் சாகையில் "ஏகேஷாம்" (ஏகெஷாம்) "வெளிப்படை" (ஸ்பஷ்டம்) என்று சூத்திரித்தனர். அஃதாவது, வித்துவானுடைய சரீரத்திலே பிராணேந்திரியங்கள் சீவான்மாவைவிட்டு உற்கிரமியாது பிரியாதிருப்ப, ஆன்மாவானது ஊர்த்துவநாடி வாயிலாக உற்கிரமிக்கின்றதென்பதே பொருளாம். ஆகலின், அவித்துவானும் வித்துவானும் சரீரத்தை விட்டுப் புறப்படுதலிற் சமமாயினும், அவித்துவான் செல்லும் மார்க்கமும் அடையும் உலகமும் வேறு; வித்துவான் செல்லும் மார்க்கமும் அடையும் பிரமலோகமும் (சிவலோகமும்) வேறு என்பதாம்.

இங்ஙனம் அதன் உண்மைப்பொருள் கண்டுரைத்தவர் நீலகண்டசிவாசாரியர்.

(சசஉ) நீலகண்டசிவாசாரியர் காலத்துக்கு நீடிய காலத்துக்குப்பின் இருந்த ஏகான்மவாதியாருக்கு அந்தப் பொருள் உடன்பாடன்று. இவர்க்கு வித்துவான் உற்கிரமணஞ் செய்யாது இங்கே பிரமத்தில் இலயமாதல் வேண்டும் என்பது பேரவா. அதற்காக அவர் (சசO-ம் இலக்கத்திற்) கண்ட (ச. உ. கஉ) ஞ் சூத்திரத்தை இரண்டாகப் பிளந்தார். இங்ஙனம் சூத்திரத்தை இரண்டாகப் பிளந்துகொள்ளலாம் என்று காட்டற்கு முற்பாதங்களிற் சிற்சில சூத்திரங்களைப் பிளந்து பிளந்து காட்டிப் போந்தனர். பிளந்து முதற்கணின்ற

ப்ரதிஷெயா திதி செஹ ஶாரீராத் (சங். ச. உ. கஉ)

(சசங) என்னும் முற்பாதிச் சூத்திரத்துக்கு, (பிரமத்தை அறிந்த வித்துவானுக்கு உற்கிரமணமில்லை என்று சுருதி) மறுக்கின்றதென்று கூறின், (சுருதியானது பிராணேந்திரியங்கள்) ஆன்மாவிலிருந்து (பிரிவ) தில்லை என்று கூறுகின்றது என (இதனை மறுப்பேம்)" என்று பொருள் செய்துகொண்டு,

ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி (பிரு. சு. ச.சு)

(சசச) "அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்னுஞ் சுருதியைத் தமது கருத்துப் பிரகாரம் ஸ்தாபிக்கவும், வியாசர் கருத்துக்கிசைந்து நீலகண்டசிவாசாரியர் சித்தாந்தஞ் செய்ய மத்தியந்தினசாகைப் பிரமாணத்தைப் பூருவபக்ஷஞ் செய்யவும் தொடங்கினர்; (ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி) "நதஸ்ய பிராணா உற்கிராமந்தி" "அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை என்னுஞ் சுருதியின் பொருள் ஆன்மாவிலிருந்து பிராணன்கள் பிரிவதில்லை" என்பதேயாம் என்றும், (ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி) "நதஸ்மாத் பிராணா உற்கிராமந்தி" அவனிலிருந்து பிராணன்கள் பிரிவதில்லை" என்று மத்தியந்தினசாகை கூறுதலினாலேயாம் என்றும், ஆகலின் இறக்கின்றவனுடைய உயிர் பிராணன்களோடு உடலை விட்டுப் பிரிகின்றதென்றும், நீலகண்டசிவாசாரியர் கூறியவாறு பொருள் கொள்கின்றேம் என்பவர் போன்றுங்காட்டிப் பாடியமியைத்து, பின் இந்த மத்தியந்தினசாகைப் பிரமாணத்தைப் பிற்பாதிச் சூத்திரம் மறுக்கின்றதென்று எடுத்துக்கொண்டனர்; அப்பாதிச் சூத்திரம் வருமாறு:—

(சசரு) ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் (சங். ச. உ. கந)

"ஏனெனின், ஆன்மா உற்கிரமணஞ் செய்வதில்லை என்பது சிலர் சாகையில் வெளிப்படையாயிருக்கின்றது" என்று சூத்திரத்துக்குப் பொருட்படுத்திக் கொண்டனர்.

சிலர் சாகை என ஏகான்மவாதியார் எடுத்துக்கொண்டது பிருகதாரணிய கண்ணுவசாகையேயாம். இதில் (பிரு. ரு. உ. கக) ல்

(சசசு) அத்ரைவ ஸமவநீயந்தே

பிராணன்கள் இவனைவிட்டுப் பிரிகின்றனவா? இல்லையா? என்று ஆர்த்தபாகர் வினவ, யாஞ்ஞவற்கியர் "இவனிலேதான் அவை (பிராணன்கள் குழுமுகின்றன"* என்று கூறினர் என்றும், இதனால் மத்தியந்தினசாகையுடையார் ஐந்தாம் வேற்றுமைப் பொருள் மறுக்கப்பட்டதென்றும், (பிரு. சு. ச. சு) ல் அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை என்று கூறிய பொருள் ஆர்த்தபாகர்க்கு இறுத்த உத்தரத்தினால் நிறுத்தப்பட்டதென்

*சசசு-ம் இலக்க மந்திரமும் பொருளும் இங்ஙனமேயாகவும், ஏகான்மவாதியார் (சங். ச. உ. கந) ற் கண்டவாறு அத்ரைவஸமவலீயந்தே "இங்கே பிராணன்கள் லயமாகின்றன" என்று மந்திரத்தைத் திரித்துக்கொண்டனர்.

றும், அதனால் வித்துவானுக்கு உற்கிரமணமில்லை, இங்கேதான் அவன் பிராணன்கள் இலயமாகின்றன என்றும் சாதித்தனர்.

(சசஎ) இந்த ஆர்த்தபாகர்க்கும் யாஞ்ஞவற்கியர்க்கும் இடையே நிகழ்ந்த வாதத்திற் பிரமத்தை அறிந்த வித்துவான் விஷயமாக யாதும் குறிப்பிடப்படவில்லை. ஆகலின்,

(சசஅ) அயம் புருஷ꞉ (பிரு. நி. உ. கக)

என்று அங்கே கூறப்பட்ட புருஷன் எங்ஙனம் வித்துவானைச் சுட்டிற்றே? "அயம்புருஷ꞉" என்றது ஏகான்மவாதியாருடைய (பிரு. நி. உ. கக) ற் பாடியமே வித்துவான் என்று பாஷித்ததென்பாரேல், ஒரே சகுணப் பிரமத்தைச் சகுணம் என்றும், நிர்க்குணம் என்றும் தவறுண்டு இரண்டாகப் பிளந்தவாறே, பிரத்தியக்ஷத்திற் கிடந்த ஒரு முழுச் சூத்திரத்தையும் தம்பக்கம் சாதிக்க இரண்டாகப் பிளந்த வீரர், அங்கே "புருஷன்" என்ற மொழிக்கு அறிந்தவன், ஞானி, வித்துவான் என்று எழுதி வைக்க மறந்துவிடுவார்தாமோ!! "புருஷ꞉" என்னும் பதத்தினாற் சுட்டப்பட்டவன் அவித்துவானன்றி வித்துவானன்று, இது மேலே (ரு௧௦—ருகரு-ம் இலக்கவரையிற்) கூறியாயிற்று. இது நிற்க. இவர் சூத்திரத்தை இரண்டாகப் பிளந்தமை தவறு. கண்ணுவசாகையிற் கண்ட மந்திரப்பொருளை முற்பாதிச் சூத்திரமாக வரைந்து, அந்த ஒரே கண்ணுவசாகையிற் கண்ட மற்றோர் மந்திரம் முற்பாதிச் சூத்திரத்துக் கண்ணுவசாகைப் பொருளை மறுத்ததேயாமாயின்,

(சசகூ) ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் (சங். ச. உ. கரு)

"சிலர் சாகையில் வெளிப்படை" என்று வியாசமுனிவர் மற்றோர் சூத்திரஞ் செய்தனர் என்றமையும் தவறு. கண்ணுவசாகை முதலியவற்றின் மந்திரப்பொருளை ஸ்தாபித்தற்கு மத்தியந்தினசாகை முதலிய பிறிதோர் சாகையின் மந்திரத்தை உதகரிக்கவேண்டியன்றோ (ஏகேஷாம்) "சிலர் சாகையில்" என்று வியாசமுனிவர் கூறினர். ஒரே சாகைச் சுருதிப் பொருளாற் கண்டித்து நிறுத்தற்குச் சில சாகையினர் என்று கூறும் வழக்கம் சூத்திரகாரர்க்கும் மற்றியார்க்கும் இல்லை. அஃதன்றிச் சூத்திரத்தை இரண்டாகப் பிளந்து ஒன்று முன்னும் ஒன்று பின்னுமாக நிறுத்தி எழுதி வைத்தால், ஒரே கண்ணுவசாகையாயிருப்பினும் குற்றமில்லை என்று நினைந்து அங்ஙனம் செய்தனரோ?

(சரு௦) ஓர் முற் சூத்திரத்தைப் பூருவபக்ஷஞ் செய்ய மற்றோர் பிற் சூத்திரம் வருமாயின், "ஏனெனின்" (ஹி) என்னும் மொழி எய்தமாட்டாது;

ஆனல் (கு) என்னும் மொழியே பிற் சூத்திரத்திருத்தல்வேண்டும்; (ஹி) என்று வைத்தமையாற் பிற் சூத்திரம் முற் சூத்திரத்தை மறுக்கவில்லை என்றன்றோவாயிற்று. சூத்திரம் ஒரு புறமும் பாஷ்யம் ஒரு புறமுமாகச் செய்பவர்க்கு நாம் என் செய்குவம்!!

(சருக) நீலகண்டசிவாசாரியர் கண்ணுவசாகையில் ஆர்த்தபாகர் விஷயம் கண்டு, அது அவித்துவான் விஷயமென்றன்றோ முதற்கண்ணே பொருட்படுத்தாது விட்டனர். வித்துவான் உற்கிரமிப்பதில்லை என்று காட்டுதற்கு, அவ்வேகான்மவாதியார் அவித்துவான் விஷயத்திலிருந்து காட்டிய உதாரணத்தினல் அவித்துவானும் உற்கிரமிப்பதில்லை என்றன்றோ வாயிற்று.

(சருஉ) இவர் இங்ஙனம் (பிரு. சு. ச. சு) கண்ணுவசாகை மந்திரப் பொருளை நிறுத்தவந்த மத்தியந்தினசாகைப் பொருளைப் பூருவபக்ஷஞ் செய்தற்கு (பிரு. ரு. உ. கக) ஆம் (கண்ணுவசாகையின்) மற்றோர் மந்திரப் பொருளைக் கொண்டு, அந்தக்கண்ணுவசாகைப் பொருளை நிறுத்துவாரேல், முற் கூறிய கண்ணுவசாகை (பிரு. சு. ச. சு) ம் மந்திரப்பொருளோடு பின்னர்ச் சித்தாந்தம் என இவர் விடுத்த கண்ணுவசாகை (பிரு. ரு. உ. கக) ம் மந்திரப்பொருளையும் ஒருங்கு சேர்த்து முன் நிறுத்தி, மத்தியந்தின சாகைப்பொருள் கொண்டு நீலகண்டசிவாசாரியர் பக்கநின்று, "அவனது ஆன்மாவைவிட்டுப் பிராணன்கள் பிரியாதிருக்க, அவன் உற்கிரமணஞ்செய்கின்றான்" என்று ஸ்தாபித்துவிடலர்மன்றோ. அங்ஙனஞ் செய்யின் அவ்வேகான்மவாதியாரைத் தொடர்ந்து நிற்குமவரெல்லாம் வாய்ப்பிரமாணம் விடுத்து மற்றெப்பிரமாணங்கொண்டு யாது சமாதானஞ் செய்ய வல்லுநர்! பல சுருதிப் பிரமாணங்கொண்டு ஆன்மாவை விட்டுப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை என்று நம்மால் வலியுறுத்தப்பட்டிருத்தலின், அந்தச் சுருதிப் பொருள்களை இவர் சத்திய உபப்பிருங்கணங்கள் வாயிலாகத் தம் பக்கத்துக்கு உயிர்ப்பித்துக்கொண்டாலன்றோ, சூத்திரத்துக்கும் தமக்கியைந்தவாறு பொருள் திரித்துச் செய்ய வல்லுநராவர்!!

(சருரு) வேதவியாசர் சகுணப்பிரமவிஷயத்தையே முதலாஞ் சூத்திரத்தில் ஆரம்பித்து, சூத்திரங்கடோறும் சகுணப்பிரம விஷயமே கூறி, உபசங்காரத்தினும் சகுணப்பிரமக்காரர் எய்தும் பிரமலோகத்தைக் குறிக்கும் சுருதியை மூலமாகக்கொண்டே சூத்திரஞ்செய்தார். இந்தப் பிரமலோகம் எனப்படும் சிவலோகத்தையே (ருகச—ருகள-ம் இலக்கவரையிற்) கண்டவாறு, சுருதிகளெல்லாம் ஒருங்கு கோஷிப்பனவாக, நிர்க்குணோபாசனையொன்று மறந்தும் கூறாத பரோபநிடதங்களுள்ளும் பிரமசூத்திரங்களுள்ளும் போக்குமீட்சியின்றிப் பிராணன்களெல்லாம் இங்கே லயமடைந்துவிடவேண்டு

மென்று நினைந்து கபடத்தோடெழுதிவைத்தமை இனி ஓர்காலும் தலையெடுக்காது! பிராணன்கள் கூடுகின்றன, குழுமுகின்றன என்றுணர்த்தும் (பிரு. நி. உ. கக) "சமவநீயந்தே" (ஸவநீயந்தே) என்னும் பதத்தையும் (சங். ச. உ. கரு) சமவலீயந்தே (ஸமவலீயந்தே) என்று திரித்து, சூத்திரங்களையும் திரித்து, சூத்திரப்பொருள்களையும் திரித்து, அதிகரணங்களையும் திரித்து, நீலகண்ட சைவபாடியப்பொருளையும் திரித்து இவர் செய்த பாடியம் கதாநுகதநியாயங்கொண்டு அபிமானமாத்திரையினால் இவரைத்தொடர்ந்து நிற்கும் ஏகான்மவாதிகளுக்குத்தான் உவப்பாகும் போலும்!!!

(சஙச) மூன்றும் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் உபாசனைப் பிரகாரமும், இரண்டாம் பாதத்தில் சீவான்மா தேகத்தை விட்டு உற்கிரமணஞ் செய்வதுமாகக் கூறப்படும் சகுணப்பிரம விஷயத்துக்குள்ளே, நிர்க்குணோபாசனையேனும், ஆன்மா இங்கே இலயமாதலாம் பயனேனும் கூறாத சூத்திரங்களுக்குள்ளே தமக்குப் போக்குமீட்சியில்லா முத்தி ஒன்று சித்தித்ததென்று வரைந்து புகுத்தினமை எவ்வளவு விந்தை!! இங்ஙனம் வலிந்து வலிந்து சூத்திரங்களுக்குப் பொருளைத் திரித்துணர்த்திக்கொண்டு போய் (ச. ச. எ) ஞ் சூத்திரம் இவர்க்குத் திரித்துப் பொருள் கொள்ள இடங்கொடாமையான், முக்தர்களுக்கு எய்துவனவாக இவர் ஓர்காலும் உடன்படாத குணங்கள் உண்டென்பாராய்,

(சஙரு) ஸ்வயுஸ்வுவஸ்ரூ உவந்வாஸாஃஙெஸ்ரூ ஜவஜாஃஸ் ஸ்ராஜ ஸெஸ்ரூஷஸ் ஃவஸ்ரூ வெஷ்ரூாஸ்ரூநா ஷவிரொயம் வாஜராயண ஆவாயெஷா உநூதெ |

"உபந்நியாசாதிகளினாற் பெறப்படும் பிரமத்தின் ஐசுவரிய ரூபமாகிய முற்குணம் (ஆன்மாவுக்கு எய்தாதென்று) தவிர்க்கப்படமாட்டாது என்று பாதராயணர் கொள்கின்றார்" என்றனர்; அஃதாவது ஆன்மாவுக்குப் பிரமத்தின் குணங்கள் எய்தும் என்றாராயிற்று. இதில் "வியவகாராபேக்ஷ" என்று ஒருபொடிசேர்த்தார். வியவகாரம் யாதும் ஒழிந்தவிடத்திற் பேசப்படும் முக்தர் விஷயத்தில் வியவகாரம் என்று வாளா எழுதிவிட்ட இவர் வியவகாரப்பொடி பறந்துபோய் விட்டது. இதனால் தாம் எடுத்த நிர்க்குணப் பிரமவிஷயத்தை நீடு சாதிக்க இயலாது இந்தச் சூத்திரத்துக்குள்ளும் சிக்குண்டு போயினர்.

ஸ்ரீகாசிவாசி—செந்திநாதையர்.

சிவமயம்.

## பிரமசூத்திர

# சிவாத்துவிதசைவபாடிய

## அத்தியாயப்பொருள்.

### முதலாம் அத்தியாயம்

சச்சிதானந்தரூபரும், சர்வஞ்ஞத்துவ சர்வசக்தித்துவாதி சுவரூப லக்ஷணமுடையரும், சகல ஜகத்தையும் பிறப்பிப்பவரும், அனைத்துக்கும் வேறானவரும், அனைத்துக்கும் ஆன்மாவானவரும், விரூபாக்ஷத்துவ கிருஷ்ண பிங்களத்துவ நீலகண்டத்துவமுதலிய விசிஷ்ட லீலா மங்கள சுவரூப சுபாவமுடையரும், பவர் முதலிய முக்கிய அஷ்டநாமங்களின் பொருளானவரும், பரமகாருணிகரும், பரப்பிரமமுமாகிய சிவபெருமானிடத்திலே சமஸ்த உபநிடத வாக்கியங்களும், அவற்றின் அநுகுணமாகிய மிருதிகளும் தாற்பரியத்தினாற் சமந்வயமாதலை உணர்த்துகின்றது.

### இரண்டாம் அத்தியாயம்

சிவபெருமானிடத்திலே சமந்வயமாய் நிற்கும் உபநிடத முதலியவற்றுக்கு விருத்தமாக ஸ்மிருதி தர்க்காதிகளினால் எய்திய விரோதம் பரிகரிக்கப்படுதலை உணர்த்துகின்றது.

### மூன்றாம் அத்தியாயம்

உபாசகன், உபாசியன், உபாசனம் என்பவற்றின் பேதங்களையும், ஆச்சிரமதரும பேதங்களையும் விளக்குகின்றது.

### நான்காம் அத்தியாயம்

உபாசனாப்பிரகாரமும், சீவான்மாவின் உற்கிராந்திதசையும், அர்ச்சிராதிகதியும், பிரமமாகிச் சிவத்தை அடைந்த சீவன்முத்தனுடைய நிலையுமாகிய இவற்றை நிரூபிக்கின்றது.

# பாதப்பொருள்.

---o---

முதலாம் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் பரப்பிரம சிவபெருமானைப் பற்றி வெளிப்படைக் குறிகளையுடைய சில வாக்கியங்களின் ஆராய்ச்சியும்,

" " இரண்டாம் பாதத்தில் அதிகம் வெளிப்படையாகாத குறிகளையுடைய சில வாக்கியங்களின் ஆராய்ச்சியும்,

" " மூன்றும் பாதத்தில் வெளிப்படையானவும் வெளிப்படையிலாதனவுமாகிய குறிகளையுடைய வாக்கியங்களின் ஆராய்ச்சியும்,

" " நான்காம் பாதத்தில் வெளிப்படையாகாத சில வாக்கியங்களின் ஆராய்ச்சியும்,

இரண்டாம் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் சாங்கியாதி தர்க்கவிரோத பரிகாரமும்,

" " இரண்டாம் பாதத்தில் பிரதான காரணவாதங்களுள்ளே தர்க்கவிரோதமும்,

" " மூன்றும் பாதத்தில் பூதசிருட்டியின் அவாந்தர விரோதத்தைப் பரிகரித்தலும், சீவான்மா நித்தியத்துவாதி குணங்களையுடையதாக உணர்த்தலும்,

" " நான்காம் பாதத்தில் பிராணன் இந்திரியம் என்பவற்றின் சொரூபமும், பிரமத்தினின்றே அவைகளுக்கு உற்பத்தியாதலும்,

மூன்றும் அத்தியாயத்து முதற்பாதத்தில் சீவான்மா போக்குவரவு செய்தலும்,

" " இரண்டாம் பாதத்தில் சீவான்மாவின் அவஸ்தா நிரூபணமும், பரப்பிரமசிவனார் சொரூபலக்ஷணமும்,

" " மூன்றும் பாதத்தில் வேதத்திலே பலவிடங்களில் உரைக்கப்பட்ட பல்வகைப்பரப்பிரம சிவோபாசனையின் குணோபசங்காரமும்,

" " நான்காம் பாதத்தில் ஆச்சிரமதருமமும்,

நான்காம் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் உபாசனாப்பிரகாரமும்,

" " இரண்டாம் பாதத்தில் சீவான்மாவாகிய உபாசகனுடைய உற்கிராந்திதசையும்,

" " மூன்றும் பாதத்தில் அர்ச்சிராதிகதியும்,

" " நான்காம் பாதத்தில் ப்ரப்பிரம சிவபெருமானை அடைந்தவனுடைய நிலையும் நிரூபிக்கப்படுகின்றன.

---

# அதிகரணப்பொருள்.

## முதலாம் அத்தியாயத்து முதலாம் பாதம்.

(க) ஜிஞ்ஞாசாதிகரணம் (க):—மகாதேசிகரும் சர்வாநுக்கிரகருமாகிய பரப்பிரமசிவனாருடைய அருளாதிக்கியத்தினால் அதிகாரியாவான் பாசபடலம் நீங்கி, பிரத்தியக்ஷமாக்கப்பட்ட நிரதிசயானந்த சொரூபமாகிய அப்பரப்பிரமசிவனாரது சாமியகுண கைவல்லிய இலட்சுமியை அடையுமாறு, அப்பரப்பிரமசிவனை ஆராயவேண்டும் என உணர்த்துகின்றது.

(உ) ஜந்மாத்தியதிகரணம் (உ):—உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில் செய்பவர் சிவபெருமானென்று அப்பரப்பிரமசிவனார் இலக்கணங் கூறுகின்றது.

(ந) சாஸ்திரயோநித்துவாதிகரணம் (ந):—உலகத்துக்குக் காரணர் பரப்பிரமசிவனார் என்பதற்குப் பிரமாணம் என்னை என, வேதாந்தசாஸ்திரங்களாமென்று கூறி, இந்தச் சாஸ்திரங்களுக்கும் கர்த்தா பரப்பிரமசிவனார் என நிரூபணஞ் செய்கின்றது.

(ச) சமந்வயாதிகரணம் (ச):—வேதாந்த வாக்கியங்கள் தாற்பரியலிங்கசம்பந்தத்தினாற் பரப்பிரம சிவபெருமானை உணர்த்துஞ் சாமர்த்தியமுடையன என உணர்த்துகின்றது.

(ரு) ஈக்ஷத்தியதிகரணம் (ரு—கஉ):—சமஸ்தப் பிரபஞ்சத்துக்கும் காரணமாய சத்து என்னும் வஸ்து சேதனமாகிய சிவபரப்பிரமமாமன்றிச் சாங்கியர் கூறும் அசேதனமாகிய பிரதானம் அன்றெனக் கூறுகின்றது.

(சு) ஆனந்தமயாதிகரணம் (கங—கசு):—பிரதானம் பிரபஞ்சத்துக்குக் காரணமாகாதவாறுபோல, சேதனனாகிய சீவான்மாவும் ஆனந்தமயனாகாமையின், அவன் அங்ஙனம் பிரபஞ்சகாரணனாகாதுபோக, சிவபெருமானே ஆனந்தமிகுதியுடைமையின் ஆனந்தமயர் என்றும், அவரே உலக காரணர் என்றுங் கூறுகின்றது.

(எ) இதராநுபபத்தியதிகரணம் (கஎ—உ0):—பிரபஞ்சத்துக்குப் பிரதானமேனும், சீவான்மாவேனும் காரணமாகாதொழிய, சீவசமஷ்டிரூபராகிய இரண்ணியகருப்பரும் (பிரமாவும்) அங்ஙனமாகாரென்றும், அவர் சிவபெருமானுக்குக் கீழ் உள்ளார் என்றும் நிரூபிக்கின்றது.

(அ) அந்தரதிகரணம் (உக, உஉ):—பொற்றாடியோடும், பொற்கேசத்தோடும், இரு புண்டரீக விகசித நேத்திரமும் (ஒரு முகுளித நேத்திரமுமாகச்) சேர்ந்த முக்கண்களோடும், திருநகந் தொடுத்துத் திருமேனி முழுதும் பொன்வண்ணமாய், ஞாயிறு மத்தியில் சாதகர் சம்சாரநோய்க்கு ஔஷதமாய் எழுந்தருளினவர் சிவபெருமானேயன்றி நாராயணர் அன்றென்றும் உணர்த்துகின்றது.

(கூ) ஆகாசாதிகரணம் (உங) }
(க0) பிராணாதிகரணம் (உச) }:—

சிவபெருமானுக்குக் கூறிய உலகத் தோற்ற நிலை இறுதி இலக்ஷணம் (ஜடப்) பிராணாகாச முதலியவற்றுக்குச் செல்லாதென்றும், ஈண்டுக் கூறப்பட்ட பிராணாகாசம் அச்சிவபெருமானினின்று வேறுறாத பரமாகாய பரப்பிரகிருதி ரூப பராசத்தியாமென்றும் உணர்த்துகின்றது.

(கக) ஜ்யோதிரதிகரணம் (உரு—உஅ):—ஞாயிறு மண்டலமத்தியிலே உபாசிக்கற்பாலர் என நிரூபிக்கப்பட்ட அம்பிகாபதியாகிய சிவபெருமான் விசுவரூபியாகத் தியானிக்கற்பாலரென மற்றோர் உபாசனாப் பிரகாரம் உணர்த்துகின்றது.

(கஉ) இந்திரப்பிராணாதிகரணம் (உகூ—ஙஉ):—பரமேசுவரசோரூபமாகவும், இந்திரன், கிருஷ்ணன், வாமதேவன் முதலிய போக்தாக்கள் சரீரமாகவும், பிராணன் முதலிய போக்கியசடரூபமாகவும் உபாசிக்கலாம் என்பதுபற்றி உபாசனை முப்பிரகாரமாகும் என்றும், இவற்றுள் முதற்கட் கூறியது காலவிளம்பமின்றியும், மற்றிரண்டும் காலவிளம்பத்தினும் முத்தி பயக்கும் என்றும் கூறுகின்றது.

## முதலாம் அத்தியாயத்து இரண்டாம் பாதம்.

(க) சர்வத்திரப்பிரசித்தாதிகரணம் (க, உ):—சீவான்மா உபாசிய னல்லன்; அவன் உபாசகன் என்றுணர்த்துகின்றது.

(உ) *சாரீராதிகரணம் (௩—அ):—இரண்ணியகருப்பர்க்கு உபாதானராகிய நாராயணர் உபாசகசிரேட்டர் எனவும், சிவபெருமானே உபாசியர் எனவும் கூறுகின்றது.

(௩) அத்திரதிகரணம் (௯, க0):—சிவபெருமானே சர்வசங்கார கர்த்திருத்துவ இலக்கணமுடையர் என உணர்த்துகின்றது.

(௪) குகாதிகரணம் (கக, கஉ):—சிவபெருமான் இதயகுகைக்கண்ணே சீவான்மாக்களோடு எப்பொழுதும் இயைந்திருக்கின்றனர் என உணர்த்துகின்றது.

(௫) அந்தராதிகரணம் (க௩—க௭):—இதயகுகையில் உபாசிக்கற்பாலராகிய சிவபெருமானுக்கு நேத்திரமும் மற்றோர் உபாசனஸ்தானம் எனக் கூறுகின்றது.

(௬) அநவஸ்தித்தியதிகரணம் (கஅ):—உபாசனையின்பொருட்டு அங்குஷ்ட அளவினராகக் கூறப்பட்ட சிவபெருமான் பிராணுக்கினிஹோத்திரத்தினால் வழிபடப்படும் பிராணரூபராய் நின்றனர் என உணர்த்துகின்றது.

(௭) அந்தரியாமியதிகரணம் (க௯—உக):—சிவபெருமான் பிருதிவி முதலிய அனைத்தினும் வியாபித்திருக்கின்றனர் என உணர்த்துகின்றது.

(அ) அதிருசியத்துவாதிகரணம் (உஉ—உ௪):—சிவபெருமான் பிருதிவிமுதலியவற்றில் வியாபித்திருப்பினும், அவர் அவற்றைப்போலக் காணப்பட்டார் என உணர்த்துகின்றது.

(௯) வைசுவாநராதிகரணம் (உ௫—௩௩):—சிவபெருமான் ஜாடராக்கினிரூபராகப் பிராணுக்கினிஹோத்திரத்தினால் ஆராதிக்கற்பாலர் என உணர்த்துகின்றது.

## முதலாம் அத்தியாயத்து மூன்றாம்பாதம்.

(க) தியுப்புவாதிகரணம் (க—௬):—சிவபெருமான் ஆகாயம் பூமிக்கு ஆதாரமாயுளர் என உணர்த்துகின்றது.

(உ) பூமாதிகரணம் (௭, அ):—சிவபெருமானை அடைதலால் எய்தும் பயன் அந்தமிலாவானந்தம் என உணர்த்துகின்றது.

---

* அநுபபத்தியதிகரணம் எனவும்படும்.

(௩) அக்ஷராதிகரணம் (௯—கக):—சிவபெருமானை அக்ஷரப்பிரமம் என்று கூறுகின்றது.

(௪) ஈக்ஷதிகர்மாதிகரணம் (கஉ):—சிவபெருமான் பிரத்தியக்ஷப்பிரமாணாதீதரேனும், அவர் பரமகாருணிகராதலின் உபாசகர்களுக்குப் புலப்படுகின்றனர் என உணர்த்துகின்றது.

(௫) தகராதிகரணம் (க௩—உஉ):—அவர் தகரபுண்டரீகத்தில் உளராதலையும், அவரை உபாசிக்கும் நெறியையும் உணர்த்துகின்றது.

(௬) பிரமிதாதிகரணம் (உ௩, உ௪):—சிவபெருமான் மனிதர்கள் உபாசித்தற்குரிய அங்குட்டரூப லிங்கவடிவினராய் இதயமத்தியில் உளர் என்றுணர்த்துகின்றது.

(எ) தேவதாதிகரணம் (உ௫—௩உ):—மனிதர்மாத்திரமன்றித் தேவர்களும் சிவோபாசனைக்கதிகாரமுடையர் என உணர்த்துகின்றது.

(அ) அபசூத்திராதிகரணம் (௩௩—௩௯):—பிரமவித்தைக்கு அதிகாரி யாவர் என உணர்த்துகின்றது.

(௯) கம்பநாதிகரணம் (௪0):—சிவபெருமானால் யாவும் பிரவர்த்திக்கின்றன எனக் கூறுகின்றது.

(க0) ஜ்யோதிதர்சனாதிகரணம் (௪க):—முக்தரால் எய்தப்பெறும் பரஞ்சோதிசொரூபர் சிவபெருமான் என உணர்த்துகின்றது.

(கக) அர்த்தாந்தரத்துவாதிவியபதேசாதிகரணம் (௪உ—௪௪):—ஆகாயசப்தவாச்சியர் சிவபெருமானன்றிச் சீவான்மா அன்றெனக் கூறுகின்றது.

## முதலாம் அத்தியாயத்து நான்காம்பாதம்.

(க) ஆநுமாநிகாதிகரணம் (க—எ):—அவ்வியக்தம் என்றது சரீரம், சாங்கியர் கூறும் பிரதானமன்று எனக் கூறுகின்றது.

(உ) சமசவததிகரணம் (அ—க0):—அஜா என்றது (க0௪-ம், கஉ௩-ம் இலக்கங்களிற் கூறியவாறு) சித்ரூபமாகிய மாயாசத்தியன்றிச் சாங்கியர் கூறும் பிரகிருதி அன்றெனக் கூறுகின்றது.

(௩) சங்கியோபசங்கிரகாதிகரணம் (கக—க௫):—“பஞ்ச பஞ்ச ஜநாః” என்றது சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்கள் அன்று எனவும், அவை இந்திரியங்களின்மேலவாம் எனவும் உரைக்கின்றது.

(ச) ஜகத்வாசித்துவாதிகரணம் (கசு—கஅ):—சிவபெருமான் சீவான்மாவுக்கு வேறானவர் எனவும, உலகம் அனைத்தையும் படைத்தவர் அவரே எனவும் உணர்த்துகின்றது.

(ரு) வாக்கியாந்வயாதிகரணம் (கசு—உஉ):—(சீவ) ஆன்மாவிலே சிவபெருமான் (பரம) ஆன்மாவாக இருத்தலின், ஆன்ம சப்தத்தினற் சிவபெருமான் கூறப்படுகின்றனர் என உணர்த்துகின்றது.

(சு) பிரகிருதியதிகரணம் (உரு—உஅ):—சிவபெருமானே உலகத்துக்கு முதற்காரணர் என (க. க. உ) ற் கூறியதை விரித்துணர்த்துகின்றது.

(எ) சர்வவியாக்கியாநாதிகரணம் (உகூ):—கன்மகாண்டத்துப் புருஷசூக்தம், சதருத்திரீயம், மந்திரப்பிராம்மணம், ஸ்மிருதி, இதிகாசபுராணமனைத்தும் பரப்பிரமசிவபெருமானைப் போதிப்பன என உணர்த்துகின்றது.

முதலாம் அத்தியாயத்து நான்கு பாதங்களினும் அதிகரணம் (ருகூ); சூத்திரம் (கருஅ).

## இரண்டாம் அத்தியாயத்து முதலாம்பாதம்.

(க) ஸ்மிருதியதிகரணம் (க, உ):—சாங்கியஸ்மிருதிப் பிரகாரம் சுருதிப்பொருளைத் திரிவுபடுத்தல் கூடாதென உணர்த்துகின்றது.

(உ) யோகப்பிரத்தியுக்தியதிகரணம் (ரு):—பிரதானத்தைக் காரணமாகக் கூறும் இரண்ணியகருப்பஸ்மிருதிப் பிரகாரம் சுருதிப்பொருள் மாற்றப்படுவதன்றென்கின்றது.

(ரு) நவிலக்ஷணத்துவாதிகரணம் (ச—எ):—காரியகாரணம் ஒன்றென்பதில் இழுக்கில்லையென்கின்றது.

(ச) அபீதியதிகரணம் (அ—கஉ):—பிரதானகாரணவாதந் தவிர்க்கற்பாற்றன்றி, பிரபல சுருதிப் பிரமாணசித்தமாகிய சிவப்பிரமகாரணவாதந் தவிர்க்கப்படுவதன்றென்கின்றது.

(ரு) சிஷ்டாபரிக்கிரகாதிகரணம் (கரு):—சாங்கியர் பிரதானகாரணவாதம் போல, கணாதர் அக்ஷபாதர் முதலாயினோர் வாதங்களும் ஒழிக்கற்பாலனவென்கின்றது.

(சு) போக்திராபத்தியதிகரணம் (கச):—சமஸ்த சேதனு சேதனப் பிரபஞ்சத்தைச் சரீரமாகவுடையரேனும், சுவதந்திரராய் நிஷ்களங்க மங்கல சரீரியாயுள்ள சிவபெருமானுக்குப் பரதந்திரனுய்ச் சம்சாரசரீரத்தையுடையனுயுள்ள சீவான்மாவுக்கெய்துந் தோஷமில்லை என்றுணர்த்துகின்றது.

(எ) ஆரம்பணாதிகரணம் (கரு—உஉ):—காரணமாகிய பரப்பிரமசிவ பிரானினின்று அநந்நியமாயுள்ளது காரியமாகிய பிரபஞ்சம் என்றும், அவர் விசுவாதிகர் என்றும் கூறுகின்றது.

(அ) உபசங்காரதர்சநாதிகரணம் (உச, உரு):—சிவபெருமான் அனந்தசத்தியுடையர் என்று கூறுகின்றது.

(கூ) கிருத்சிநபிரசக்தியதிகரணம்(உசு—௩க):—சர்வசக்தியினால் எதனையும் இயற்றும் அவர்க்கு எது கூடும் கூடாதென்றில்லை; எல்லாம் அவரால் இயலும் என உணர்த்துகின்றது.

(க௦) லீலாகைவல்லியாதிகரணம் (௩உ, ௩௩):—சிவபெருமான் லீலாமாத்திரத்தினாற் சிருட்டியாதி செய்கின்றனர் என உரைக்கின்றது.

(கக) வைஷம்மியநைர்க்கிருண்ணியாதிகரணம் (௩ச, ௩ரு):—உலக சிருட்டி செய்யும் சிவபெருமானுக்குப் பாரபக்ஷமும் இரக்கமின்மையும் இல்லை என்கின்றது.

(கஉ) சர்வதர்மோபபத்தியதிகரணம்(௩சு):—பிரதானத்துக்கும், பரமாணுவுக்கும், கன்மத்துக்கும், காலமுதலியவற்றுக்கும் இயையாதனவாகிய குணமனைத்துஞ் சிவபெருமானுக்கே இயைவன; ஆகலின், இவரே உலக சிருட்டி முதலியவற்றுக்குக் காரணர் எனக் கூறுகின்றது.

## இரண்டாம் அத்தியாயத்து இரண்டாம்பாதம்.

(க) இரசநாநுபத்தியதிகரணம் (க—கூ):—பிரதான காரணவாதம் நிஷ்பிரமாணமுடைத்தென நிரூபிக்கின்றது.

(உ) மகத்தீர்க்காதிகரணம் (க௦—கசு):—பரமாணுகாரணவாத வைசேஷிகமதத்தை நிரசனஞ் செய்கின்றது.

(௩) சமுதாயாதிகரணம் (கஎ—உச):—வேதபாகிய பௌத்தமதத்தை நிராகரிக்கின்றது.

(ச) திருஷ்டத்துவாதிகரணம் (உரு, உசு):—ஞாநாநுமேயவாதத்தை மறுக்கின்றது.

(ரு) உபலப்தியதிகரணம் (உஎ—உகூ):—விஞ்ஞானமாத்திர வாதத்தை நிராகரிக்கின்றது.

(சு) சர்வதாநுபபத்தியதிகரணம் (௩௦):—சர்வசூனியவாதத்தை மறுக்கின்றது.

(எ) ஏகஸ்மிந்நசம்பவாதிகரணம் (௩க—௩ச):—சைனமதத்தை நிராகரிக்கின்றது.

(அ) *பாசுபதாதிகரணம்(௩௫—௩௮):—நிமித்தகாரணவாதங் கூறும் இரண்ணியகருப்பமதத்தை நிரசனஞ் செய்கின்றது.

(௯) பாஞ்சராத்திராதிகரணம்(௩௯—௪௨):—பாஞ்சராத்திரமதத்தை நிராகரிக்கின்றது.

## இரண்டாம் அத்தியாயத்து மூன்றும் பாதம்.

(௧) வியததிகரணம் (௧—௭):—ஆகாயத்துக்கு உற்பத்தி உண்டென்கின்றது.

(௨) மாதரிச்சுவாதிகரணம் (௮):—வாயுவுக்கு உற்பத்தி உண்டென்கின்றது.

(௩) அசம்பவாதிகரணம் (௯):—பரப்பிரமசிவபிரானுக்குப் பிறப்பில்லை, மற்றெல்லாவற்றுக்கும் அப்பிறப்பு உண்டென்கின்றது.

(௪) தேஜோதிகரணம் (௧௦—௧௪):—சிவபிரான் தேயுமுதலிய அனைத்துக்குங் காரணர் என்று கூறுகின்றது.

(௫) பாரம்பரியாதிகரணம் (௧௫, ௧௬):—எல்லாம் சிவதத்துவத்தினின்று உற்பத்தியாகின்றமையின், சர்வகாரணர் சிவபெருமான் என்கின்றது.

(௬) சராசரவியபாசிரயாதிகரணம் (௧௭):—சராசரசரீரங்களைப் பிரவேசித்த சிவபெருமான் அவ்வம் மொழிகளால் உரைக்கப்படுதல் முக்கியம் எனக் கூறுகின்றது.

(௭) ஆன்மசுருத்தியதிகரணம் (௧௮):—சீவான்மா சிவபெருமானினின்று உற்பத்தியாகவில்லை என உணர்த்துகின்றது.

(௮) ஞாதிகரணம் (௧௯):—சம்சாரத்தில் சீவான்மா கிஞ்சிஞ்ஞன்; முத்தியில் அவன் சர்வஞ்ஞன்; ஆகலின், ஆன்மா ஞாதா எனக் கூறுகின்றது.

(௯) உற்கிராந்தியதிகரணம் (௨௦—௩௨):—உற்கிராந்தியிற் போக்குமீட்சியுண்மையின், சீவான்மாவுக்கு அணுத்துவம் உண்டென்கின்றது.

(௧௦) கர்த்திரதிகரணம் (௩௩—௩௯):—சீவான்மாவுக்குச் சுவகாரியத்திற் கர்த்திருத்துவமுண்டென்றும், அது புத்திக்கேனும் பிரகிருதிக்கேனும் இல்லை என்றும் உணர்த்துகின்றது.

(௧௧) பராயத்தாதிகரணம் (௪௦, ௪௧):—சீவான்மாவுக்குச் சுவாதீனப் பிரவிருத்தியுண்மையின், விதி நிஷேத முதலிய வியர்த்தமாகா என்கின்றது.

* பத்தியுரசாமஞ்சஸ்யாதிகரணம் எனவும் படும்.

(கஉ) அம்சாதிகரணம் (சஉ—ருஉ):—சீவான்மாவை அம்சம் என்றுரைக்கின்றது.

## இரண்டாம் அத்தியாயத்து நான்காம் பாதம்.

(க) பிராணோற்பத்தியதிகரணம் (க—ங):—பிராணசப்தம் இந்திரியங்களைக் குறிக்காதென்கின்றது.

(உ) சப்தகத்தியதிகரணம் (ச, ரு):—இந்திரியங்கள் பதினொன்று என்கின்றது.

(ங) பிராணாணுத்துவாதிகரணம் (சு):—இந்திரியங்கள் அணுக்கள் என்கின்றது.

(ச) சிரைஷ்டியாதிகரணம் (எ—கக):—பிராணவாயு சீவான்மாவுக்கு உபகாரமாயதென்கின்றது.

(ரு) பிராணாணுத்துவாதிகரணம் (கஉ):—பிராணனை அணு என்கின்றது.

(சு) ஜ்யோதிராதியதிஷ்டாநாதிகரணம் (கங, கச):— இந்திரியங்களுக்கு மேலாகிய சூரியாதிகளுடையவும் சீவான்மாவுடையவும் அதிஷ்டானம் சிவபெருமான் வசத்ததென்கின்றது.

(எ) இந்திரியாதிகரணம் (கரு, கசு):—இந்திரியங்கள் பிராணவிருத்தியினின்று வேறென்கின்றது.

(அ) சம்ஞாமூர்த்திகிலுப்தியதிகரணம் (கஎ—கசு):—முத்திறப்படுத்துஞ் சிவபெருமான், நான்முகப்பிரமாவாகி நாமரூபங்களைச் சிருட்டித்தனர் எனக் கூறுகின்றது.

இரண்டாம் அத்தியாயத்து நான்கு பாதங்களினும் அதிகரணம் (சக); சூத்திரம் (கசகூ).

## மூன்றாம் அத்தியாயத்து முதலாம் பாதம்.

(க) ததந்தரப்பிரதிபத்தியதிகரணம் (க—எ):—சீவான்மா பிறிதோர் சரீரம் எடுக்குங்காற் சூக்குமசரீரத்தோடு செல்கின்றதென்கின்றது.

(உ) கிருதாத்தியயாதிகரணம் (அ—கக):—சீவான்மா சுவர்க்கத்திருந்து கன்மசேடத்தோடு மீளுகின்றான் என உணர்த்துகின்றது.

(ங) அநிஷ்டாதிகாரியாதிகரணம் (கஉ—உக):—பாவிகள் சுவர்க்கத்துக்குப் போவாரல்லர் என்கின்றது.

(ச) தத்சுவாபாவ்யாபத்தியதிகரணம் (உஉ):—சீவான்மா சுவர்க்கத்திருந்து மீளுங்கால் ஆகாயமுதலிய போல் வருகின்றான் என்கின்றது.

(ரு) நாதிசிராதிகரணம் (உங):—சீவான்மா நென்முதலிய தானியத்திலே தாமசமாயும், ஆகாயமுதலியவற்றிலே தாமசமின்றியும் வருகின்றான் எனக் கூறுகின்றது.

(சு) அந்நியாதிஷ்டிதாதிகரணம் (உச—உஎ):—சீவான்மா ரேதசிற் சம்பந்தமாத்திரமுறுகின்றான் எனக் கூறுகின்றது.

## மூன்றும் அத்தியாயத்து இரண்டாம் பாதம்.

(க) சந்தியாதிகரணம் (க—சு):—சிவபெருமானாலே சொப்பன சிருட்டி எய்துவதென்கின்றது.

(உ) ததபாவாதிகரணம் (எ, அ):—சீவான்மா நாடிவாயிலாகச் சென்று சிவப்பிரமத்திலே துயில்கின்றானென்கின்றது.

(ங) கர்மாநுஸ்மிருத்தியதிகரணம் (கூ):—முதற்கண் நித்திரைக்குப் போந்தவனே மீண்டும் விழிக்கின்றான் என்கின்றது.

(ச) முக்தாதிகரணம் (க0):—மூர்ச்சை சுழுப்திக்கு வேறாயதென்கின்றது.

(ரு) உபயலிங்காதிகரணம் (கக—உ0):—சத்தியம் ஞானம் அனந்தம் என உடன்பாட்டானும், நிர்க்குணம், நிஷ்களம், ஸ்தூலமன்று, அணுவன்று என்றற்றொடக்கத்தனவாக எதிர்மறைமுகத்தானுங் கூறப்படும் இரு இலக்ஷணகுணமுடையர் சிவபெருமான் என உரைக்கின்றது.

(சு) பிரகிருதைததாவத்துவாதிகரணம் (உக—உகூ):—சிவபெருமானுக்கு விகார அஞ்ஞான முதலிய அபுருஷார்த்தமொன்றுமின்றிச் சர்வஞ்ஞதாதி பரமபுருஷார்த்த குணங்கள் உண்டென்கின்றது.

(எ) பராதிகரணம் (ங0—ஙச):—சிவபெருமானுக்கு மேலாயினார் யாருமில்லை என்கின்றது.

(அ) அந்நியப்பிரதிஷேதாதிகரணம்(ஙரு, ஙசு):—சிவபெருமானுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்கின்றது.

(கூ) பலாதிகரணம் (ஙஎ—ச0):—சகல தேவதாரூபராய், சமஸ்த கன்மங்களினால் வழிபடற்பாலராயுள்ள சிவபெருமானே பலதாதா என்றுரைக்கின்றது.

## மூன்றும் அத்தியாயத்து மூன்றும் பாதம்.

(க) சர்வவேதாந்தப்பிரத்தியயாதிகரணம் (க—ச):—(முக்கிய) உபநிடதமனைத்தினும் விதிக்கப்பட்ட உபாசனை ஒன்றென்கின்றது.

(உ) உபசங்காராதிகரணம் (ரு):—வெவ்வேறு சாகைகளிற் கூறப்பட்ட சிவனுர் குணங்கள் தகராதி உபாசனைகளில் உபசங்கரிக்கப்படல் வேண்டும் என்கின்றது.

(ங) அந்நியதாத்துவாதிகரணம் (சூ—அ):—சாந்தோக்கிய பிருகதாரணியங்களிற் கூறப்பட்ட உற்கீதவித்தைகள் பெயரிஞல் ஒற்றுமையுடையவேனும், உபாசனையினுற் பேதமுறுகின்றன எனக் கூறுகின்றது.

(ச) வியாப்தியதிகரணம் (கூ):—பிரணவமே உபாசிக்கற்பாற்றென்கின்றது.

(ரு) சர்வாபேதாதிகரணம் (கo):—பிராணேபாசனையில் ஐசுவரியாதி குணங்கள் உபசங்கரிக்கற்பாலன வென்கின்றது.

(சூ) ஆநந்தாதியதிகரணம் (கக):—குணியாகிய சிவப்பிரமம் யாண்டும் அபேதமாகலின், ஆனந்தாதி குணங்கள் உபசங்கரிக்கப்படல்வேண்டும் என உரைக்கின்றது.

(எ) பிரியசிரஸ்துவாதிகரணம் (கஉ, கங):—பிரியசிரஸ்துவாதி குணங்கள் சிவோபாசனையில் உபசங்கரிக்கற்பாலன அன்றென்கின்றது.

(அ) ஆத்தியானுதிகரணம் (கச—கஎ):—அன்னமயமுதலியன அநுசந்தானஞ் செயற்பால்ன அன்றென்றும், சிவனை யொழிந்து பிறரை உபாசிக்கும் உபாசனைகள் சிவத்துவத்தைக் கொடுக்கமாட்டாவென்றும் கூறுகின்றது.

(கூ) காரியாக்கியாநாதிகரணம் (கஅ):—பிராணனுக்கு வாசஸ்த்துவம் கோடற்பாற்றென்கின்றது.

(கo) சமாநாதிகரணம் (ககூ):—வசித்துவாதிகுணங்கள் சத்தியசங்கற்பத்துவாதிகுணங்களினின்று பேதமுறுவன அன்றென்கின்றது.

(கக) சம்பந்தாதிகரணம் (உo, உக):—ஆதித்தியன் கண் என்னும் ஸ்தான சம்பந்தமாக உபாசனை பேதமுறுதலின், வித்தைகள் ஒன்றன்றென்கின்றது.

(கஉ) தர்சயதியதிகரணம் (உஉ):—சாந்தோக்கியத்தினும் தைத்

திரீயத்திலும் கூறப்பட்ட மண்டலவித்தை ஒன்றுமாதலின், உமாபதித்து வாதி குணங்கள் ஈரிடத்தும் உபசங்கரிக்கற்பாலன என்கின்றது.

(கங) சம்பிருதியதிகரணம் (உங):—வைசுவாநராதி உபாசனைக ளில் ஆகாயவியாபகமும் மகாவீரியச்செய்கைகளும் உபசங்கரிக்கப்படல் வேண்டும் என்கின்றது.

(கச) புருஷவித்தியாதிகரணம் (உச):—சாந்தோக்கியத்திலும் தைத் திரீயத்திலும் கூறப்பட்ட புருஷவித்தைகள் பலத்திலும், அவயவங்களிலும் பேதமுறலான் இரண்டும் ஒன்றன்றெனக் கூறுகின்றது.

(கரு) வேதாத்தியதிகரணம் (உரு):—"உண்மைபேசுவேன்" என் றற்றொடக்கத்த தைத்திரீயமந்திரங்கள் வித்தியாங்கங்கள் அன்று எனக் கூறுகின்றது.

(கசு) ஹாநியதிகரணம் (உசு):—வித்துவான் செய்யும் புண்ணிய பாவங்கள் முறையே மித்திரர் சத்துருக்களை அடையுமென்றுரைக்கின்றது.

(கஎ) சாம்பராயாதிகரணம்(உஎ—ங0):—சமஸ்த கன்மங்களினின்று நீங்கிய யோகிகள் விஷ்ணுபதத்தைக் கடந்து, பரமானந்தமய சிவபதத்தைப் பிரவேசிக்கின்றனர் எனக் கூறுகின்றது.

(கஅ) அதிகாரிகாதிகரணம் (ஙக):—ஞானிகளுக்கும் பிராரப்தகன் மம் அநுபவித்த பின் நசிக்கின்றதென்றும், ஆகலின் அதிகாரிகளும் அதி காரம் நீங்கிய பின்னர்த்தான் முத்தியடைகின்றனர் என்றும் உணர்த்துகின் றது.

(ககூ) அநியமாதிகரணம் (ஙஉ):—உபகோசலாதி வித்தைகளை உபா சிப்பவர்க்கு அர்ச்சிராதிகதி நியமமாய் உண்டென்கின்றது.

(உ0) அக்ஷரதியதிகரணம் (ஙங, ஙச):—அக்ஷரப்பிரம சம்பந்தமா கக் கூறப்பட்ட அஸ்தூலத்துவமுதலிய குணங்கள் பரவித்தியோபாசனைக ளில் உபசங்கரிக்கற்பாலன என்று கூறுகின்றது.

(உக) அந்தராபூதக்கிராமாதிகரணம் (ஙரு, ஙசு):—உஷஸ்தவித் தைக்கும் ககோளவித்தைக்கும் பேதமில்லை என்கின்றது.

(உஉ) சத்தியாதியதிகரணம் (ஙஎ):—சத்திய முதலிய குணங்கள் ஆவிருத்தியாய்க் காணப்படுகின்றமையின், சத்வித்தையிற் பேதமில்லை என் கின்றது.

(உங) காமாதியதிகரணம் (ங௮):—சாந்தோக்கியம், பிருகதாரணியம், தைத்திரீயம், கைவல்லியம் என்னும் உபநிடதங்களிற் கூறப்பட்ட தகரவித்தை ஒன்றேயெனக் கூறுகின்றது.

(உச) அலோபாதிகரணம் (ஙகூ):—விசேஷகுணங்கள் சிவப்பிரமத்தினின்று ஓர்காலும் நீங்கா என்கின்றது.

(உரு) தத்வசநாதிகரணம் (ச0):—முக்தரால் அடையப்படும் சிவப்பிரமம் சகுணப்பிரமமென்கின்றது.

(உசு) தந்நிர்த்தாரணியமாதிகரணம் (சக):—யஞ்ஞகன்மங்களில் உபாசனைகள் நியமம் இல்லை என்கின்றது.

(உஎ) பிரதாநாதிகரணம் (சஉ):—சிவபெருமான் ஒருவரேயெனினும், வெவ்வேறு குணங்கள்பற்றி உபாசனை பேதமுறும் என்கின்றது.

(உ௮) லிங்கபஹீயஸ்துவாதிகரணம் (சங):—வித்தைகள் அனைத்தினும் உமையோடிசைந்த பரவஸ்துவானது உபாசிக்கற்பாற்றெனக் கூறுகின்றது.

(உகூ) பூருவவிகற்பாதிகரணம் (சச—ரு0):—அக்கினிரகசியப்பிராம்மணத்திலே, அக்கினிகள் ஞானயஞ்ஞத்துக்கு அங்கமாகின்றன என உரைக்கின்றது.

(ங0) சரீரேபாவாதிகரணம் (ருக, ருஉ):—சிவபெருமானைத் திரிநேத்திரராகத் தியானித்தலில் யாதும் விரோதமின்றெனக் கூறுகின்றது.

(ஙக) அங்காவபத்தாதிகரணம் (ருங, ருச):—உபாசகர் அனைவரானும் விபூதி தரிக்கப்படல் வேண்டும் என்கின்றது.

(ஙஉ) கிரதுவச்சியாயஸ்துவாதிகரணம் (ருரு):—வைசுவாநரவித்தை அம்சமாகவன்று, சமஸ்தமாகவே உபாசிக்கற்பாற்றென்கின்றது.

(ஙங) நாநாசப்தாத்தியதிகரணம் (ருசு):—உபாசனை அனைத்தையும் ஒருங்கு அநுட்டித்தல் கூடாதென்று கூறுகின்றது.

(ஙச) விகற்பாதிகரணம் (ருஎ):—உபாசகனுக்குப் பல உபாசனைகளுள் ஒன்றே அமையும் என்கின்றது.

(ஙரு) யதாகாமாதிகரணம் (ரு௮):—காமியபலங்களை உத்தேசித்த உபாசனைகளுள் ஒன்றையேனும் பலவற்றையேனும் உபாசிக்காலம் என்றுரைக்கின்றது.

(ந-சு) யதாசிரயபாவாதிகரணம் (நிகூ—சுச):—உபாசனைகள் யஞ்ஞ கன்மங்களுக்கு வேண்டும் என்னும் நியமமில்லை என்கின்றது.

## மூன்றும் அத்தியாயத்து நான்காம் பாதம்.

(க) புருஷார்த்தாதிகரணம் (க—கஎ):—பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம் என ஆச்சிரமங்கள் மூன்றுளவென்றும், பலத்தை நோக்காத விகிதகன்மங்களை அங்கமாகக்கொண்டது புருஷார்த்தமாகிய ஞானம் என்றும் கூறுகின்றது.

(உ) பராமர்சாதிகரணம் (கஅ—உ0):—ஆச்சிரமதருமமனைத்தும் சித்தித்தவென்று உணர்த்துகின்றது.

(ந) ஸ்துதிமாத்திராதிகரணம் (உக, உஉ):—உற்கீத முதலியவற்றின் தியானத்துக்கு விதியுண்டென்கின்றது.

(ச) பாரிப்பிலவாதிகரணம் (உந, உச):—உபநிடதங்களில் நேரும் கதைகள் உபாசனுவிதிகளோடிசைந்து, அவைகளைத் துதிக்கும் பொருட்டேயுள்ளன என்கின்றது.

(ரு) அக்நீந்தநாத்தியதிகரணம் (உரு):—ஆச்சிரமத்துக்குரிய தருமங்களைச் செய்வதில் அபேக்ஷையுடையது வித்தை என்கின்றது.

(சு) சர்வாபேக்ஷாதிகரணம் (உசு):—ஆச்சிரமிகள் அனைவர்க்கும் அந்தந்த ஆச்சிரமத்துக்குரிய கன்மங்களோடு வித்தை சேர்ந்திருத்தல் வேண்டும் என்கின்றது.

(எ) சமதமாத்தியதிகரணம் (உஎ):—விவேகமுதல் மோக்ஷவிச்சை பரியந்தமுள்ள பரதர்மங்களெல்லாம் வித்தையை விரும்பும் ஆச்சிரமிகள் அனைவரானும் அநுட்டிக்கற்பாலனவென்கின்றது.

(அ) சர்வாந்நாநுமத்தியதிகரணம் (உஅ—நக):—பிராணனுக்குச் சம்சயம் நேருமிடத்து, வித்துவான் சர்வான்னம் புசிக்க அநுமதியுண்டு என்றும், அஃதொழிந்தகாலத்தில் நிஷித்தாசரணஞ்செய்யில் சிவாஞ்ஞாத்துரோகியாவான் என்றும் கூறுகின்றது.

(கூ) ஆச்சிரமகர்மாதிகரணம்(நஉ—நரு):—வித்தைக்கு இசைவாகிய கன்மாநுஷ்டானகாரியத்தை உணர்த்துகின்றது.

(க0) அந்தராதிகரணம் (நசு—நகூ):—ஆபத்து விஷயங்களில் ஆச்சிரமமில்லாதோர்க்கும் செபமுதலியவற்றால் ஞானம் எய்துகின்றதென்கின்றது.

(கக) தத்பூதாதிகரணம் (சo—சங):—உயர்ந்த ஆச்சிரமங்களினின்று வழுவினோர்க்குப் பிராயச்சித்தாதியினால் வித்தியாதிகாரமின்றென்கின்றது.

(கஉ) சுவாமியதிகரணம் (சச, சரு):—இருத்துவிக்குக்களினாற் செய்யப்பட்ட கன்மபலம் யஜமானனுக்குச் சேர்கின்றதென்கின்றது.

(கங) சககாரியந்தரவித்தியதிகரணம்(சசு):—வித்தையுடையவனுக்கு மவுனவிதி நேர்கின்றதென்கின்றது.

(கச) கிருத்சினபாவாதிகரணம் (சஎ):—ஆச்சிரமிகளனைவர்க்கும் ஞானம் உண்டென்கின்றது.

(கரு) பாசுபதவிரதாதிகரணம் (சஅ, சகூ):—பாசுபதவிரதம் சிவப்பிரசாதத்தைப் பாலிக்கின்றதென்கின்றது.

(கசு) ஐகிகாதிகரணம் (ருo):—இப்பிறப்பிலே வீடுபேறு எய்தவேண்டும் என்னும் நியமமில்லை என்கின்றது.

(கஎ) முக்திபலாநியமாதிகரணம் (ருக):—யஞ்ஞகன்மங்களிற் பேதமுளதாதல் போல, ஞானபலனாக எய்தும் மோக்ஷபலத்திற் பேதமில்லை என்கின்றது.

மூன்றாம் அத்தியாயத்து நான்கு பாதங்களினும் அதிகரணம் (சுஅ); சூத்திரம் (கஅஉ).

## நான்காம் அத்தியாயத்து முதலாம் பாதம்.

(க) ஆவிருத்தியதிகரணம் (க, உ):—சிவோபாசனை பலோதயம் வரையும் ஆவிருத்தி செயற்பாற்றென்கின்றது.

(உ) ஆத்துமாதிகரணம் (ங):—சிவோபாசனை உபாசகனுக்கு முக்தி பாலிக்கின்றதெனக் கூறுகின்றது.

(ங) பிரதீகாதிகரணம் (ச):—சிவபெருமான் குறியிற் சாக்ஷாத்தாக உபாசியராகார் என்கின்றது.

(ச) பிரம்மதிருஷ்டியதிகரணம் (ரு):—விசுவாதிகமாகிய சிவதிருஷ்டியினாலே மனமுதலியவற்றுக்கும் உபாசியத்துவம் உண்டென்கின்றது.

(ரு) ஆதித்தியாதிமத்தியதிகரணம் (சு):—உற்கீத முதலிய கன்மாங்கங்கள் ஆதித்தியன் முதலியோராக உபாசிக்கற்பாலன என்கின்றது.

(சு) ஆசீநாதிகரணம் (எ—க0):—ஒருவன் இருந்தே சிவபிரானைத் தியானித்தல் வேண்டும் என்கின்றது.

(எ) யத்திரைகாக்கிரதாதிகரணம் (கக):—ஏகாக்கிரசித்தத்தைமாத்திரம் சாதகஞ் செய்யும் தியானரூபமாயுள்ள உபாசனைக்குத் திக்தேசகால நியமமின்றென்கின்றது.

(அ) ஆப்பிராயணாதிகரணம் (கஉ):—சீவபரியந்தஞ் சிவோபாசனை இடையீடின்றி அப்பியசித்தல் வேண்டும் என்றும், அதனை இடையில் விடுதல் கூடாதென்றும் கூறுகின்றது.

(கூ) தததிகமாதிகரணம் (கங):—உபாசகர் விஷயத்திற் சகல பாவ கன்மமும் ஒழிந்துபோம் எனவும், பாவப்பயன் துய்க்கப்படாது தொலையாதென்றது அஞ்ஞானிக்காம் எனவும் கூறுகின்றது.

(க0) இதராசிலேஷாதிகரணம் (கச):—வித்துவானுடைய புண்ணியமும் முத்திக்கு விரோதமாய் விரும்பாத பலத்தையுடைமையான், அவனை அது பற்றாது நாசமுறும் என்கின்றது.

(கக) அநாரப்தகாரியாதிகரணம் (கரு):—பேற்றைக் கொடுக்கமுயன்ற பிராரப்த புண்ணிய பாவத்துக்கு நாசமின்றெனக் கூறுகின்றது.

(கஉ) அக்கினிஹோத்திராதிகரணம் (கசு—கஅ):—அக்கினிகோத்திரமுதலிய அநுட்டிக்கப்படல் வேண்டும் என்கின்றது.

(கங) இதரக்ஷபணாதிகரணம் (ககூ):—செனனமரணம் வித்தியாலோபத்துக்கு ஏதுவாயிராதென்கின்றது.

## நான்காம் அத்தியாயத்து இரண்டாம் பாதம்.

(க) வாக்சம்பத்தியதிகரணம் (க, உ):—வாக்காதிகளின் லயம் விருத்தி லயம் எனப்படும் என்கின்றது.

(உ) மநஸ்சம்பத்தியதிகரணம் (ங):—மனசு பிராணனிலே விருத்தி லயம் எய்தும் என்கின்றது.

(ங) பிராணசம்பத்தியதிகரணம் (ச—சு):—சீவான்மாவோடு கூடப் பிராணன்கள் பூதங்களில் இயைகின்றவென்கின்றது.

(ச) அசிருத்தியுபக்கிரமாதிகரணம் (எ):—அர்ச்சிராதிமார்க்கத் தொடக்கத்துக்குமுன் வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் உற்கிராந்தி சமம் என்கின்றது.

(ரு) ததாபீத்தியதிகரணம் (அ—கஈ):—அர்ச்சிராதி வித்துவானுடைய உற்கிராந்தி செய்யும் ஆன்மாவுக்கு இயைந்ததென்கின்றது.

(சு) பரமசம்பத்தியதிகரணம் (கச, கரு):—சம்பத்திவசனத்தினுற் சிவப்பிரமத்திலே பூதங்கள் பிரிக்கப்படாதிருக்கின்றன என்கின்றது.

(எ) ததோகோக்கிராதிகரணம் (கசு):—அவித்துவானுக்கும் வித்துவானுக்குமுள்ள கதி பேதமென்கின்றது.

(அ) இரச்சுமியநுசாரியதிகரணம் (கஎ—உ0):—எப்பிரகாரத்தானும் வித்துவானுக்குச் சிவப்பிராப்தியிலே இரவு, தக்ஷிணாயனம், கிருஷ்ணபக்ஷம் என்னும் நிஷேதமின்றெனவும், எப்போது தேகம் நீங்குமோ அப்போதே சிவப்பிராப்தி உண்டெனவும் உணர்த்துகின்றது.

## நான்காம் அத்தியாயத்து மூன்றும் பாதம்.

(க) அர்ச்சிராதியதிகரணம் (க):—சிவப்பிராப்தி ஒளிமார்க்கத்தினுல் எய்தும் என்கின்றது.

(உ) வாயுவதிகரணம் (உ):—வருஷத்துக்குப் பின்னும் ஆதித்தியனுக்கு முன்னும் வாயு வைக்கற்பாலன் என்கின்றது.

(ஈ) தடிததிகரணம் (ஈ):—வருணுதியர் அர்ச்சிராதிமார்க்கத்தில் வைத்தற்குரியர் என்கின்றது.

(ச) ஆதிவாகிகாதிகரணம் (ச, ரு):—வருணன் முதலியோர் அநுக்கிரகம் பண்ணுவது காரணமாகப் பிரமத்தை அடைவிக்கின்றனர் என்கின்றது.

(ரு) காரியாதிகரணம் (சு—கரு):—அறுவித அத்துவாவையும் கடந்த பதமானது விசுவாதிகராகிய சிவனுர்க்கே பொருத்தம் என்கின்றது.

## நான்காம் அத்தியாயத்து நான்காம் பாதம்.

(க) சம்பத்தியாவிர்ப்பாவாதிகரணம் (க—ஈ):—அபகதபாப்மத்துவாதி குணங்கள் ஆவிர்ப்பவிக்கப்பெற்ற முக்தன் சிவசாமியகுணசொரூபனுகின்றுன் என்கின்றது.

(உ) அவிபாகேநதிருஷ்டத்துவாதிகரணம் (ச):—முக்தனுக்குச் சிவசாமியம் உண்டென்கின்றது.

(ங) பிராம்மாதிகரணம் (ரு—எ):—சிவசாமியமாதலே முக்தனுடைய சொரூபம் என்கின்றது.

(ச) சங்கற்பாதியதிகரணம் (அ, கூ):—சிவசாமியமுற்ற முக்தனுக்குச் சுவாதந்திரியம் யுக்தம் எனக் கூறுகின்றது.

(ரு) அபாவாதிகரணம் (க0—கச):—பரமானந்தத்திற் பிரவேசித்த முக்தர்களுக்குத் துக்கத்தொடர்ச்சி இன்றென்கின்றது.

(சு) பிரதீபவதாவேசாதிகரணம் (கரு, கசு):— முக்தியில் ஞானமுதலிய நிஷேதிக்கப்படுதல் இன்றெனக் கூறுகின்றது.

(எ) ஜகத்வியாபாராதிகரணம் (கஎ—உஉ):—முக்தனுக்கு ஜகத்சிருட்டியாதி வியாபாரம் இன்றெனக் கூறுகின்றது.

நான்காம் அத்தியாயத்து நான்கு பாதங்களினும் அதிகரணம் (ஙங); சூத்திரம் (எசு).

நான்கு அத்தியாயத்துப் பதினாறு பாதங்களினும் அதிகரணம் (கஅக); சூத்திரம் (ருசரு).

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீவேதவியாசமுனிவரருளிய பிரமசூத்திரத்துக்கு

## ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்

இயற்றியருளிய

# சிவாத்துவித சைவபாடியப்

## பிராரம்பம்.

---o---

### நமஸ்காரம் *

ஓஂஓர zஹஂ† வஜாகூ-்ாய ஸொகா_நாஂ ஸிஃஹெ_தவெ।
ஸஹ்ஜா_நஂஜஈஃவாய ஶிவாய வஈஊா_தூ_நெ ॥ ௧ ॥

(இதன் பொருள்) ஓங்காரப்பொருளாயும், சத்திவிசிட்டப்பொருளாயும், (சிவசாக்ஷாத்காரமுடைய) உலகினர்க்குச் சித்திமுக்திகளைக் கொடுத்தற்குக் காரணப்பொருளாயும், சச்சிதானந்தப்பொருளாயும் உள்ள சிவபெருமானும் பரமான்மாவுக்கு நமஸ்காரம்.

‡ ஸ்ரீவேதவியாசமுனிவர் அருளிய பிரமசூத்திரரூபமாயுள்ள வேதாந்த மீமாஞ்சாசாஸ்திரத்துக்கு, ††உலகினர்பொருட்டுப் பாடியஞ் செய்கின்ற ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் இடையறாச் சிவத்தியானத்தினாலே தமக்கு இடையூறு சிறிதும் அணுகப்பெறாராயினும், ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற் பொருட்டுத் தமது வழிபடுகடவுளாகிய சிவபெருமானைத் துதிப்பாராயினர்.

---

* நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம், ஆசி என மங்கலவாழ்த்து மூவகைப்படும். இவற்றைத் தமிழ்நூலார் முறையே வணக்கம், பொருளியல்புரைத்தல், வாழ்த்து என்பர்; இப்பாடியகாரர் மூவகை மங்கல வாழ்த்தையும் முறையே மூன்று சுலோகங்களினாற் கூறுவாராயினர்.

† அஹஂபதஸ்யாகூ-்ஹஃதஶ்ஶக்த்யா_தூா வாஶெஶ்வா:
(கைலா. கக. ௩அ)

“ அகம் பதத்தின் அர்த்தம் சத்தியோடியைந்த சிவபெருமான்.”

‡ சிவார்க்கமணிதீபிகையிலிருந்து எடுத்துரைக்கப்படுவனவாய சில குறிப்புகள்.

†† உயர்ந்தோர்.

மகோபநிடதத்துள்ள தகரவித்தியா சம்பந்தமாகிய "இருதம் சத்தியம் பரம்பிரமம்" என்னும் மந்திரத்தை மீட்டும் மீட்டும் இச்சைவ பாஷ்யத்தில் எடுத்தாளுகின்றனராதலின், இப்பாஷ்ய கர்த்தாவாகிய சிவாசாரியர் தகரவித்தியா நிஷ்டர். "காமாதியதிகரண" த்தினும் (ந. ந. ந-அ) தாமே தகரவித்தையின்மேற் கொண்ட பிரியத்தினுற் பரவித்தைகள் அனைத்தினும் *தகரவித்தையே உத்கிருஷ்டமுடைத்தென்று கூறுகின்றனர்.

பரமான்மா:— தமது சாகையிலே கூறப்பட்ட தகரவித்தையில் உபாசிக்கற்பாலரும், நமஸ்கரிக்கற்பாலருமாய மெய்ப்பொருளைப் பரமான்மா என்னும் விசேஷார்த்த மொழியினுல் ஈண்டு விதந்தருளினர்.

தஸ்யா ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்திதஃ (மகா. கக. கந)

"அந்தச் சிகையின் மத்தியிலே பரமான்மா உளர்" என்று தைத்திரீயத்திற் கூறப்படுகின்றது.

சிவாய:—சிலர் சிவபெருமானுக்கு வேருயுள்ளவர் அந்தப்பரமான்மா என்று கூறிப் பிறரை மயங்கவைக்கின்றனர். அதனுற் சாதுக்கள் மயங்கற்க என்றுணர்த்தச் சிவாய என்னும் மொழி பரமான்மாவை விசேடித்து நின்றது. தகரவித்தியோபாசியராகிய பரமான்மாவானவர் சிவபெருமானே என்று சிவாசாரியர் "சாரீராதிகரண" த்தில் (க. உ. ந—அ) மிகு நிபுணமாய்ச் சாதிக்கின்றனர். அங்ஙனமாயினும், தைத்திரீயத்திற் போற்றப்பட்ட பரமான்மா என்னும் சப்தத்தை விசேடித்துக் கூறும்பொருட்டு, உபக்கிரமத்திலே,

யாதாஃ ப்ரஸாதா ந்மஹிமா நமீஶம் (மகா. அ. ந)

"சிவப்பிரசாதத்தினுலே (சர்வஞ்ஞதை எனப்படும்) மகிமைக்குணத்தையுடைய ஈசரை" என்றும், உபசங்காரத்திலே

விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷிஃ (மகா. கo. ந.)

"விசுவாதிகராகிய உருத்திரர் மகா இருடி" என்றும், உபக்கிரமத்திலே

யஃ பரஸ்ஸ மஹேஶ்வரஃ (மகா. கo. அ)

"எவர் மேலானவரோ, அவர் மகேசுவரர்" என்றும், உபசங்காரத்திலே

உமாபதயே பஶுபதயே (மகா. கஉ. க)

* இது தகராகாய சிதம்பரத்தின் மேற்று.

"ஊர்த்துவவீரியமுடைய விரூபாக்ஷர்" என்றும் (உபக்கிரம உபசங்காரங்களிலே) கூறப்பட்ட ஈசர், உருத்திரர், மகேசுவரர், விரூபாக்ஷர் என்னும் நாமங்களுள் ஒன்றை எடுத்தாளுதல் யுக்தமேயாக,

ஸமேயதி யஸ்மாத் ஸர்வாந் ஸ்வஸ்ரேயஸா ஸமந்ததஃ।
ஸிவ இத்யுச்யதே தஸ்மாத் தேவோ ஸிவஃ ஸ்ம்ருதஃ॥

(ம. து. உ0௬. கஉக)

"மனிதர்க்கு இன்பஞ் செய்ய விரும்பி எப்பொருள்களுக்கும் நித்தியமாய் உபக்கிரமமாயுள்ளதை விருத்தி செய்தலினால், அந்த (மகா) தேவர் சிவன் எனப்படுவர்" என்னும் சுலோகம் "மனிதர்க்கு இன்பஞ் செய்ய விரும்பி" எனப் புருஷார்த்தத்துக்கு உபயோகமாய சமஸ்த முயற்சியையும் விருத்தி செய்து, பிரவிருத்தி செய்தற்குச் சிவபெருமானே காரணர் என்று வியாக்கியானஞ் செய்கின்றமையான், மாணவர்கள் சிவநாமசங்கீர்த்தனஞ் செய்து அதன் பொருளை அறிதல் வாயிலாக, ஆரம்பித்த இந்தச் சைவபாஷ்யபாடம் சிவப்பிரசாதத்தினால் இடையூறின்றி இனிது முற்றுப் பெற்று, அவர்கள் விரும்பிய சகல புருஷார்த்தமும் சித்தியாகுக என உணர்த்தற்கே சிவசப்தமானது எடுத்தாளப்பட்டது.

"தேவாதிகரண"த்திற் (க. ௬. உ௫) கண்ட சூத்திரத்திற் போல

ஸமா ஹ்யஸுரா தேவா மம ஸர்வே ஸுராஸுராஃ।
ஸிவோऽஸ்மி ஸர்வஸத்த்வாநாம் ஸிவத்வம் தேந மே ஸுராஃ॥

"சுரர்களே! இராக்ஷதர் அனைவரும் தேவர் அனைவரும் எனக்குச் சமமே; சமஸ்த சேதனப்பிரபஞ்சங்களுக்கும் சிவத்துவத்தைக் கொடுக்க விரும்புதலாற் சிவன் எனப்படுகின்றேன்" என்னும் மகாபாரதத்துக் கண்ட சிவபிரானார் திருவாக்கினால், மனிதர் மாத்திரமன்றித் தேவர் முதலாயினோருஞ் சிவபிரானை உபாசித்தற்குரியர் என்பது பெறப்படுகின்றது.

இச்சித்தல் எனப் பொருள்படுகின்ற வச என்னும் தாதுவினின்று வர்ணவியத்தியயத்தினாலே சிவ என்னும் சப்தம் சித்திப்பது பாணினிவியாகரணம் (சு. ௬. க0க) ம் சூத்திரத்தினாலாம்.

ஹிம்ஸியாதேர் ஸிம்ஹஸப்தோ வஸ்காந்தேஸ் ஸிவஃ ஸ்ம்ருதஃ।
வர்ணவ்யத்யயதஸ்ஸித்தௌ பஸ்யகஃ கஸ்யபோ யதா॥

"பச்யக" என்பதினால் "கச்யப" என்னும் பதமும், ஹிம்சித்தல் எனப் பொருள்படும் "ஹிசி" தாதுவினின்று "சிம்ம" சப்தமும் வர்ணவியத்தி

யயத்தினால் எய்தினாற்போல, இச்சித்தல் எனப் பொருள்படும் வசதாதுவி னின்று சிவ சப்தமும் எய்தியதென்ப. எனவே, சிவசப்தத்துக்கு இச்சை யுடையர் (அன்புடையர்) என்பது பொருள். இவ்வன்பு எவ்விஷயத்தில் நிகழ்ந்ததாமோவெனின், தேவர் அசுரர் மனிதராயினோர்க்குச் சிவபெரு மான் சிவத்துவஞ் செய்ய அன்புறுதலினால் என மேலே கூறிய மகாபாரத இருஷிவசனத்தினால் உணரற்பாற்று.

பின்னரும் சுபம் எனப் பொருள்படுகின்ற சிவ சப்தமானது சுபத்தைச் செய்கின்றனர் என்னும் பொருளினும் "பசாத்தியச்" பிரத்தியயஞ் செய் தலினாற் போந்தது. இவ்விரு வியுற்பத்தியினாலும் சிவபெருமானுக்குச் சிவ என்னுந் திருநாமம் எய்திற்று. சிவநாமத்தை ஓர் முறை உச்சரித்து விடின் சகல பாவங்களும் ஒழிந்துவிடும். இவ்வுண்மைக்கு,

சுவிவா யஸ்ஞ்ணாஉ ஸ்லிவ ஊதி வாவ0 வசெ தெந ஸஹ ஸ0 வசெதெநஸஹஸ0வஸெ தெந ஸஹ ஹ0ஜீத|*

"சண்டாளனேனுஞ் சிவனெனும் மொழியைச் செப்புவானாயின் அவ னொடு பேசுக, அவனொடு வசிக்க, அவனொடுண்க" (முண். ௩. ௨. ௯) என் னும் முண்டகோபநிடதசுருதியும்,

யதி ஆஷர0 நாம கிரெரிதம் நரணா0 ஸகரூவூஸ0ஹா ஊவ மாஶ ஹந்தி |

"இரு அக்ஷரமாகிய (சிவ) நாமத்தை வாக்கினால் ஓர்முறை உச்சரிப்பின், அது விரைந்து மனிதர் பாவங்களையெல்லாம் நாசமாக்கும்" என்னும் புராணவசனமுமே பிரமாணம்.

விசுாவஸ ஶுரு திரூக்ஷா ரூசெகாஊஶிநீ ஶுரூதெள| ததூ வஹாக்ஷரீ தஸ்ா0 ஶிவ ஊதூக்ஷாரஆயழ|

---

* இம்மந்திரத்தின் உபப்பிருங்கணத்தை (எஅ-ம் இலக்கத்தின்) கீழ்க் காண்க.

யஹாமெ வாமெ0 யொ வா ஶிவ ஊதூக்ஷாரஆயழ| ஸகரு ஜவதி யதாவீ ஜநொ மொக்ஷ0 ஸ விதி (சங். த. ௩௦. ருஅ)

சிவனெனுந் துணைச்சீரெழுத்தினை
நுவலுவோர்கதிநொய்திலெய்துவா
ரவனையெள்ளினுயாரிதாற்றுவா
ரெவனையுய்ந்துதியிழுதைநீரைநீ.

(கந். உமை. ருச)

“பதினெண் வித்தைகளுள்ளும் சுருதி மேலானது; அச்சுருதியுள்ளும் ஸ்ரீருத்திரம் மேலானது; அவ்வுருத்திரத்துள்ளும் ஸ்ரீபஞ்சாக்ஷரம் மேலானது; பஞ்சாக்ஷரத்துள்ளும் சிவ என்னும் ஈரெழுத்துமேலாயிற்று” என்று அபியுக்தர் கூறினர்.

பாவம் அனைத்தையும் தகிக்கும் சிவநாமத்தை முதற்கண்ணே விதந்து கூறினமை மாணவர்களுடைய சிரவணாதிகளில் நிகழும் பாவங்களை அது ஒழித்துவிடும் என்னும் மற்றோர் பயன் நோக்கியாம்.

உபநிடதங்களிலே பிரதிபாதிக்கப்பட்ட தகரவித்தியாப் பிரகரணங்களிற் காணப்படும் ஓம் முதலிய நான்கு விசேஷணங்களினாற் சிவபெருமான் விசேடியராய்க்கொண்டுரைக்கப்பட்டார்.

ஓமிதி ப்ரஹ்ம (தைத். க. அ. க)

“ஓம் என்பது பிரமம்” என்னுஞ் சுருதியினாலும்,

ஹரஸ்ஸர்வஹரணாத்விஷ்ணுர்வ்யாபநாத்
ஸர்வஜ்ஞ நாத் பகவான் ஓமிதி ஸ்மிருதம்।

“அனைத்தையும் சங்கரிப்பவராதலின் அரன் எனவும், வியாபகராதலின் விஷ்ணு எனவும், சர்வஞ்ஞராதலிற் பகவான் எனவும், காப்பவராதலின் ஓம் எனவும் திருநாமங்கள் சிவபிரானுக்குப் போந்தன” என்னும் கூர்மபுராணப் பிரமாணத்தினாலும் ஓம் என்பது பரப்பிரம சிவவாசகமாம்.

அவதேஷ்டிலோபஶ்ச ।

என்னும் உணாதி சூத்திரத்தினாலே, இரக்ஷணார்த்தத்திலுள்ள அவ என்னும் தாதுவுக்கு மந் பிரத்தியயஞ் செய்து, அந்தப் பிரத்தியயத்து அந் என்னும் டிக்கு உலோபஞ் செய்தலால், அது அவ+ம் என நிற்க,

ஜ்வரத்வரஸ்ரிவ்யவிமவாமுபதாயாஶ்ச (பா. வி. சூ. ச. உ0)

என்னுஞ் சூத்திரத்தினாலே, “அவ” என்னுந் தாதுவினுள்ள அகரத்துக்கும் வகரத்துக்கும் தனித்தனி ஊகாரஞ் செய்ய, அது (ஊ+ஊ+ம்) என நிற்குங்கால்,

அக꞉ ஸவர்ணே தீர்க꞉ (பா. வி. சூ. க. கoக)

என்னுஞ் சூத்திரத்தினால் அது ஊம் என நின்று,

ஸாவ-்யா தூ௱ஜ-்யா தூ௱கயொ: (பா. வி. எ. ௩. அச)

என்னுஞ் சூத்திரத்தினற் குணமாகி ஓம் என முடிந்தது. இதனற் "சிவ" என்பது "சிவாய" என நான்காவது வேற்றுமையில் நிற்க, ஓம் என்னும் பதமும் அங்ஙனம் நான்காம் வேற்றுமையில் இருக்கவேண்டுமே எனின், அது

கூ௵நூஜஹே: (பா. வி. க. க. ௩௯)

என்னுஞ் சூத்திரத்தினல், அவ்வியயம் எனப்பட்டு,

௮வ்யயாஊா௵ஸூ: (பா. வி. உ. ச. அஉ)

என்னுஞ் சூத்திரத்தினல் நான்காம் வேற்றுமை உலோபம் எய்தப்பெற்றது.

யஃ வ௱நரொ தஜீ௭ாெ தூ௲ெணொவொ௭ிெதூஹெ ஒெநவாக்ஷ ரெண வாம௱ஷ௭ஹிஜ்ஞாயீத (பிர. ரு. ரு)

"எவன் மும்மாத்திரையுடைய பிரணவவாயிலாகவே பரமபுருஷரைத்தியானஞ் செய்வானே" என்று பிரசிநோபநிடதத்திலே தகரோபாசனையானது பரப்பிரமவாசகமாகிய மும்மாத்திரையுடைய பிரணவங்கொண்டு அநுசந்தானஞ் செய்தல் வாயிலாக இயற்றப்படவேண்டும் என விதிக்கப்படலான், ஆண்டுக் கூறப்பட்ட குணவிசேஷம் தொகுத்து அநுசந்தானஞ் செயற்பாற்றென்று சூசிப்பிக்கப்பட்டது.

அகம்பதார்த்தாய:—ஆன்மாவுக்குப் பிரயோகிக்கற்பாலதாகிய அகம்பதமானது ஆன்மாவுக்கு அந்தரியாமியாய் வேறுபடாததாயுள்ள உபாசகனுடைய பரமாஹம்பாவனைக்கேனும் முக்கியார்த்தத்துக்கேனுஞ் செல்வதாம். இதனல்

ய ஊெஷாஜஹூ-்ஜய ஆகாஸுஸ்ஹிஹெ௲ெத (பிரு. சு. ச. உஉ) "எவர் அந்தர் இதயத்திலே அமர்கின்றனரோ" எனப் பிருகதாரணியத்திற் கூறப்பட்ட தகரவித்தியாப் பிரகரணத்தோடியைந்து,

ஆஹஶெவெஉ௦ ஸவெ-்ாஹ்ஸீதி ௭நூெத ஸொ ஂஸ்ய வாஶொ ஷொகஃ (பிரு. சு. ௩. உ0)

"நானே இஃதெல்லாமாகின்றேன் என்று தியானிக்கின்றனே, அது அவனது பரமலோகம்" என்னும் வாக்கியத்திற் கூறப்பட்ட அகம்பதமானது தியானிக்கின்ற ஆன்மாவினது அந்தரான்மாவினின்று வேறுறாத அகம்பாவனையிலேனும் சிவபெருமானிலேனும் முற்றுதலான், ஆண்டுக் கூறப்பட்ட குணவிசேஷம் உபசங்காரத்தினல் அநுசந்தானஞ் செயற்பாற்றெனச் சூசிப்பிக்கப்பட்டது.

லோகாநாம் சித்திகேதவே:—என்பது தகரோபாசகன் விரும்பிய சமஸ்த உலகப்பிராப்திக்கும் ஹேதுவாயினர் மேற்று.

ய இஹாத்மாநமநுவித்ய வ்ரஜந்த்யேதாம்ஶ்ச ஸத்யாந் காமாந் தேஷாம் ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி(சாங். அ. க. சு)

"எவன் பரமான்மாவையும் இந்தச் சத்திய காமாதி குணங்களையும் அடைந்து இங்கிருந்து புறப்படுகின்றானோ, அவன் சமஸ்த லோகங்களினும் *காமசாரனாய் ஆகின்றனன்" என்று சாந்தோக்கியத்திலே தகரோபாசகன் சமஸ்தலோகத்தையும் அடைதலாகிய பயன் கூறப்படலான், ஆண்டுக் கூறப்பட்ட குணவிசேஷம் உபசங்காரமாய் அநுசந்தானஞ் செயற்பாற்றெனச் சூசிப்பிக்கப்பட்டது.

சச்சிதானந்தரூபாய:—ததாதிமத்யாந்தவிஹீநமேகம் விபும் சிதானந்தமரூபமத்புதம் (கைவ.)

"முதல் நடு இறுதியின்றி ஏகராய், வியாபகராய், சிதானந்தராய், அரூபராய், அற்புதராய்"எனக் கைவல்லியோபநிடதத்திற் சச்சிதானந்தரூபத்துவம் கூறப்படலான், ஆண்டுக் கூறப்பட்ட குணவிசேஷம் உபசங்காரமாக அநுசந்தானஞ் செயற்பாற்றெனச் சூசிப்பிக்கப்பட்டது.

மேலும் ஓம் முதலாகிய நான்கு விசேஷணங்களானும், இந்தச் சாஸ்திரத்திலே கூறப்படுகின்ற நான்கு அத்தியாயங்களிற் பிரதிபாதிக்கப்படும் பொருள்கள்கொண்டு, பரமான்மா விசேடிக்கப்படுகின்றனர்.

ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி। யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத் (கட. உ. கரு)

"எல்லா வேதங்களும் எப்பதத்தைச் சொல்கின்றனவோ, தபங்களெல்லாம் எப்பதத்தைக் கூறுகின்றனவோ, பிரமசரியத்தொழுகுவோர் எப்பதத்தை விரும்புகின்றனரோ, அப்பதத்தைச் சங்கிரகமாக ஓம் என உனக்குச் சொல்கின்றேன்" என்று கடவல்லியுபநிடதம் கூறுதலின், ஓம் என்னும் பதப்பிரயோகம் சமஸ்த வேதாந்தங்களும் பரப்பிரமசிவத்திலே அமைவுறுவனவாயின என உணர்த்திற்று.

மேலும் பிரணவத்தின் அகார உகார மகாரம் என்னும் மும்மாத்திரைகளும் இருக்கு யசுர் சாமம் என்னும் முத்திறரூபமென அதர்வணவேதாதி

*இட்டமாய்ச் சஞ்சரிப்பவன்.

களிலே பிரசித்தம். பிரபஞ்சசாரமுதலியவற்றினும் "அக்கிநிமீளே" (अग्निमीळे) என ஆதி இருக்குவேதத்தில் ஆதியக்ஷரமாகிய அகாரமும், *"யோநிஸ் சமுத்திரோ பந்துః" (योनिस्समुद्रो बन्धुः) என மத்திய வேதமாகிய யசுர்வேதத்தில் மத்திய வருணமாகிய உகாரமும், சமா நம் வரம்" (सामानं वरम्) என இறுதி வேதமாகிய சாமத்தில் இறுதி அக்ஷரமாகிய மகாரமும் ஒருங்கியைந்து வேதங்களெல்லாம் ஓம் என்னும் பதத்தின் பொருளென உணர்த்தின. இதனற் சமஸ்த வேதாந்தங்களும் பரப்பிரமசிவபெருமானிலே சமந்வயமாதல் "நூற்றில் ஐம்பது" † என்னும் நியாயத்தினுற் பெறப்படுகின்றது.

சமஸ்த வேதாந்தங்களினும் சிவபெருமான் பிரதிபாதிக்கப்படுதல் சாக்ஷாத் ஓம் என்னும் பதப்பிரயோகத்தினுற் பெறப்படுகின்றது. அங்ஙனமாயினும், வேதாந்தங்கள் பிரமத்திலே சமந்வயமாதல் வேறு விசேஷணத்தினல் விளங்கற்பாலதாயவிடத்தும், பிரதமபாதத்திலுள்ள "ஓம்நமః" என்னும் பதங்களோடு நான்காம் பாதத்துள்ள "சிவாய" என்னும் பதமியைந்து, ஆறக்கரமாக முடிந்து, ஸ்ரீசடாக்ஷர மகாமந்திரஸ்மரணமும் மாணுக்கர்க்கு எய்துவதாம் என்னும் அபிப்பிராயத்தோடு ஓம் என்னும் பதப்பிரயோகஞ்செய்தமை பிரதமாத்தியாயத்தின் அர்த்தப்பயனைச் சிவாசாரியர் உணர்த்தும்பொருட்டாம்.

சமஸ்தப் பிரபஞ்சாகார சத்திவிசிட்டராகிய சிவபெருமான் அத்துவிதீயமாயிருத்தலின், உள்ளே கணிக்கப்படுவனவாய், துவிதீயாத்தியாயத்திற் கண்டிக்கப்படுவனவாய்க்கிடந்த (சமய) பேதங்களான் வேறுபாடடைவாரல்லர் என்பதுணர்த்த அகம் என்னும் பதம் பிரயோகிக்கப்பட்டது.

மேலும்,

அகம் என்னும் பதம் சமஸ்தப்பிரபஞ்சாகார சத்திவிசிட்ட சிவாத்துவைதவாசகம் என்று சிவாசாரியர் (ச. ச. கஙூ) ற் கூறுகின்றனர்.

தங்கள் பரமான்மாவாகிய சிவபெருமானைப் பார்ப்பவர்களாதலின் லோகர்கள் எனப்படுகின்ற சிவசாக்ஷாத்காரமுடையோர்க்குச் சித்தி முத்திகளாகிய பலத்தைக் கொடுத்தற்குக் காரணராதலின், மூன்ருவது விசேஷணம் புணர்த்தப்பட்டது. அதுபற்றிச் சிரவண மனன உபாசனையின்

---

* இது தைத்திரீய யசுர்வேத இறுதிக்காண்டத்திறுதிக்கண்ணது.

† ஐம்பது வேண்டும் என்ற ஒருவனுக்கு நூறு கிடைத்துவிடின் ஐம்பதும் கிடைத்தது என்பது சித்தித்தது. ஈண்டு ஐம்பது என்பதற்கு உபநிடதங்களும், நூற்றுக்குச் சமஸ்த வேதங்களும் சாமியம். இது வடமொழியில் சதேபஞ்சாசத் நியாயம் எனப்படும்.

பின்னர்ச் சாக்ஷாத்கரிக்கப்பட்ட சிவபிரானே பஞ்சகிருத்திய அதிகாரி யாய் முத்திபாலிக்கின்றனர். அதனால் அவர் முத்திக்குச் சாக்ஷாத் சாதன மாக மூன்றும் அத்தியாயங்கொண்டுரைக்கப்பட்டனர் என்பது பொருள்.

சச்சிதானந்தரூபர்:—(என்னும் நான்காம் விசேஷணத்திற்) கண்ட ஆனந்தரூபம் என்றதினால் நிரதிசயானந்த ரூபமாகிய பிரமாநுபவமானது முத்தான்மாக்களுக்குப் பலத்தைக் கூறும் பலாத்தியாயத்தினாற் கூறப்பட்ட தென்றுணர்த்தப்பட்டது.

## வஸ்துநிர்த்தேசம்.

---

நிஜஶக்தி ஭ித்தி நிர்மித நிகிலஜகஜ்ஜாலசித்ர நிகுரும்ப: ।
ஸ ஜயதி ஶிவ: பராத்மா ஸகலாகம ஸார ஸர்வஸ்வ: ॥ உ ॥

(இ—ள்) தமது பராசத்தியாகிய பித்திகையிலே நிருமிக்கப்பட்ட சமஸ்த (சேதனா சேதனப்) பிரபஞ்சஜால சித்திர சமூகத்தையுடையவரும், சகல வேதாகமசாரநிதியாயினருமாகிய அந்தப் பரமான்ம சிவபிரானார் சர்வோத்கிருஷ்டராகின்றனர்.

## ஆசி.

---

஭வது ஸ ஭வதாம் ஸித்த்யை பராத்மா ஸர்வமங்கலோபேத: ।
சிதசிந்மய: ப்ரபஞ்சோ ஶேஷோ யஸ்யாம்ஶபூதோ ஸ்யே ॥ ௩ ॥

(இ—ள்) எவர்க்குச் சித்தும் அசித்துமாயுள்ள பிரபஞ்சம் முழுமை யும் (சேஷமாய்) அம்சமாயுளதோ, சமஸ்த மங்கல குணங்களினின்று வேறுறாத உமாசமேதரும், உற்கிருஷ்ட இலட்சுமியோடியைந்தவருமாகிய அந்தச் சிவபிரானார் (சைவபாடிய சிரவணஞ் செய்பவர்களாகிய) உங்க ளுக்குப் (பல) சித்தியைக் கொடுப்பாராக.

ஸ புருஷ: க்ருஷ்ணபிங்கல: (மகா. கஉ. க)

"அவர் புருஷரும் கிருஷ்ணபிங்களரும்" எனச் சுருதியிலே பிரசித்தமா தலின், சகல மங்கலமாகிய பராசத்தி எனப்படும் கவுரியோடும் சமஸ்த கல்யாண குணங்களோடும் இயைந்த பரமான்மா எனப்படும் சிவபிரானார் சுரோதாக்களாகிய மாணவர்களுக்கு அநுக்கிரகித்து, விரும்பிய சம்பூர்ண இஷ்டசித்தி எய்துமாறு செய்வாராக. பரா என்பது உற்கிருஷ்டம் என வும், மா என்பது இலட்சுமி எனவும் பொருள்படுதலின், உற்கிருஷ்ட இலட்சுமியோடு கூடினவரே பரமான்மா எனப்படுவர். சர்வோத்கிருஷ்ட

இலட்சுமியுடையார்க்கே விரும்பிய அனைத்தையும் கொடுக்கும் சாமர்த்தியம் உளதாம். (சேதனுசேதன) இருவகைப் பிரபஞ்சம் சிவபிரானுக்கு ஆராதனரூபமாய்ப் போந்தது; சேதனப்பிரபஞ்சமெல்லாம் தத்தம் அதிகாரபூருவமாகச் சிவாராதனரூப ஞானத்தையும் கன்மத்தையும் அநுஷ்டித்துநிற்றல்; அசேதனப்பிரபஞ்சமெல்லாம் அந்த ஆராதனத்துக்கு உபகரணமுதலியவாக உபகரித்துநிற்றல்.

## குருஸ்துதி.

நமஶ்ஶ்ருதிஶிரோநாய நாநாமதவிரோதிநே।
கைவல்யகல்பதரவே கல்யாணகுரவே நம:॥௪॥

(இ—ள்) ஒன்றுக்கொன்று மாறுதல்போலப் பொருள் யோதிக்கும் ஆகமவேதங்களை விரோதமுறாவண்ணம் உபதேசிப்பவரும், முத்தியாகிய கைவல்லியத்தை விரும்பினவர்களுக்குப் பிரசாதிக்கும் கற்பகதருவும், இவ்வுலக இன்பத்தை விரும்பினவர்களுக்குப் பிரசாதிப்பவருடைய குருவுமாகிய சுவேதாசாரியர்க்கு நமஸ்காரம்.

## சூத்திரார்த்தம் நின்மலமானமை.

வ்யாஸஸூத்ரமிதம் நேத்ரம் விதுஷாம் ப்ரஹ்மதர்ஶநே।
பூர்வாசார்யை: கலுஷிதம் ஶ்ரீகண்டேந ப்ரஸாத்யதே॥௫॥

(இ—ள்) சிவத்தை அடைந்த வித்துவான்களுக்கு அந்தப் பிரமமாகிய சிவத்தை (மறவாது) தரிசிப்பித்தலிலே இவ்வியாச சூத்திரம் நேத்திரமாகும்; *பூருவாசாரியர்களால் வியாக்கியானங்களில் மலினமாக்கப்பட்டுப்போன வேதாந்த சூத்திரம் ஸ்ரீநீலகண்டசிவாசாரியராலே (நின்மலமாக) முற்றுவிக்கப்பட்டது.

## சைவபாடியச்சிறப்பு.

ஶ்ரீமதாம் வ்யாஸஸூத்ராணாம் ஶ்ரீகண்டீய: ப்ரகாஶ்யதே।
ஶிவேந பாஷ்யஸந்தர்போ மஹார்தோ நாதிவிஸ்தர:॥௬॥

(இ—ள்) இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களின் பொருளைக்கொண்ட வேதாந்தசூத்திரங்களுக்கு, இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களையும் கண்டத்திலே கொண்ட ஸ்ரீகண்டசைவபாஷ்யகார

* சங்கராசாரியர்க்கு முன்னிருந்த ஏகான்மவாதப் பிரவர்த்தகர்கள்.

ரால் அருளப்பட்டமையின் மகார்த்தமுடைய இந்தப் பாஷ்ய புஸ்தகமானது மதுரமாகவும் சுருக்கமாகவும் பிரகாசஞ் செய்யப்பட்டது.

ஜஃவஸாரோநி யஜூஂஷிஸா ஹி ஸ்ரீரஂரூதா ஸதாஂ௰

(தைத்திரீயப்பிராம்மணம். க. உ. க. உசு)

"ஸ்ரீ என்பது இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களின்மேற்று; அந்தஸ்ரீயானது சத்துக்களுக்கு அமிர்தமாயிருப்பதன்றோ" என்றது சுருதி. எந்த வேதாந்த சூத்திரத்திலே இந்த மூன்று வேதங்களும் மிகுத்து நிகழ்கின்றனவோ, அந்த வேதாந்த சூத்திரத்துக்கு ஸ்ரீமத் என்னும் பெயர் உளதாம். மூன்று வேதங்களையும் கண்டத்திற் கொண்டமையால் ஸ்ரீகண்டர் என்னும் திருநாமம் சிவாசாரியர்க்கு எய்திற்று. சமஸ்த வேதங்களையும் அறிந்தவராகிய வியாசபகவானால் அருளப்பட்ட வேதாந்த சூத்திரங்களுக்கு, அங்ஙனம் சமஸ்த வேதங்களையும் உணர்ந்த ஸ்ரீகண்ட சிவாசாரியர் எழுதிய பாஷ்யமே மிகப் பொருத்தம் என்று கடைப்பிடிக்க.

## சைவபாடியப்பயன்.

ஸவ-ெவெஷாஙஸாரஸ ெஸௌரஹாஸாஜெராதி நாஂ௰
சூய-ாணாஂ ஶிவநிஷாநாஂ ஹாஷ்ரெதநஹாநியிஃ॥எ॥

(இ—ள்) சர்வவேதாந்தசாரமாகிய சுகந்தத்தின் இனிமையினாலே ஆனந்தமடைந்த ஆரியராகிய சிவநிஷ்டர்க்கு இப்பாஷ்யம் மகாநிதியாம்.

நிரதிசயரசரூபமாகிய பரப்பிரமத்தின் தாற்பரியமே ஈண்டுச் சௌரபம் எனப்பட்டது. ஓரிடத்திலேயுள்ள புஷ்பசுகந்தம் அநேக இடத்திலே வியாபகமாயிருக்குமாறு போல, பரப்பிரமசிவபெருமானிலே முற்றுகின்ற வேதாந்ததாற்பரியமாகிய சுகந்தம் குருசிஷ்ய பரம்பராக்கிரமத்தினால் யாண்டும் வியாபித்துள்ளதென்பதாம். ஆகவே, வேதாந்தசாஸ்திரத்தைப் பாரிஜாத விருக்ஷத்துள்ள பூங்கொத்துக்குச் சமானமாகக் கூறுவது உசிதமாம். பாரிஜாதபுஷ்பம் போல வேதாந்த சாஸ்திரமும் தனது பத்தர்களுக்கு மோக்ஷத்தைப் பாலித்தல் மாத்திரமன்றி,

ஸ யதி பிதருலோககாமோ ஹவதி ஸங்கல்பாதேவாஸ்ய பிதரஸ்ஸமுத்திஷ்டந்தி (சாந். அ. உ. க)

"பிதிர்லோகத்தை அடைய விரும்புகின்றவனுடைய சங்கற்பஞானமாத்திரையினாலே அவன் பிதிரர் அவனை எதிர்கொள்கின்றனர்" என்னும் சுருதிப் பிரகாரம் சமஸ்த போகங்களையும் அவனுக்குக் கொடுக்கின்றது. அங்ஙனமே வேதாந்தவிருந்தசார சுகந்த சுவாது மகரந்தத்தை விரும்புவோர்

களாய், சுபாவசித்த வேதாந்த சாஸ்திரத்திலே சிரத்தா தாற்பரியம் செய்பவர்களாய், சிவநிஷ்டர்களாய், சிவபெருமானைச் சதாகாலமும் தியானஞ் செய்யும் ஆரியர்களாய், பூச்சியர்களாயுள்ள உத்தமபுருஷர்களுக்கு இந்தப் பாஷ்யம் மகாநிதியாம். மகாநிதியானது தரித்திரனுக்குப் புலப்பட்டமாத்திரத்தில் மகானந்தத்தை விளைத்துக் கைக்குக் கிட்டியபோது அவனுடைய எண்ணமெல்லாம் முற்றுவிக்குமாறு போல, இந்தப் பாஷ்யமும் மேலே கூறிய சிவநிஷ்டர்க்குத் தரிசனமாத்திரத்தில் அதிக ஆனந்தத்தை விளைத்து, வேதாந்தார்த்த நிர்ணயஞ் செய்யுமிடத்து நிரந்தர சிவத்தியானத்துக்கு உபயோகமாகிய அவரது (சிவபிரானுரது) சமஸ்த கல்யாணகுண சொரூபாதிகளின் உண்மையை உணர்த்துவதாயிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

பிரமசூத்திர

# சிவாத்துவித சைவபாடியம்.

## முதலாம் அத்தியாயம்.

## முதலாம் பாதம்.

---

### (க) ஜிஞ்ஞாசாதிகரணம்.

ஈண்டு உபநிடதமீமாஞ்சை ஆரம்பிக்கப்படுகின்றது. இப்பொழுது இந்த ஆரம்பம் எப்புருஷார்த்தம் பற்றியது? அப்புருஷார்த்தமானது இடையறு விருப்புக்கு ஆஸ்பதமாகிய இன்பத்தை அடைதலாம், இன்றேல் இடையறு வெறுப்புக்கு ஸ்தானமாகிய துன்பத்தை முழுதும் ஒழித்துவிடுதலாம் என்க.

(இவ்வுபநிடத மீமாஞ்சைக்கு) அதிகாரி யாவன்? இதனை அறியவேண்டும் என்பனவாதியாய ஆசையுடையவனே அதிகாரி.

இதன் விஷயம் என்னை? வெளிப்படையாயும் அதிகம் வெளிப்படையாகாமலும் சந்தேகமென்னும் ஊஞ்சல் பற்றி நிகழ்வதே விஷயம்.

எதற்குப் பின்னர் இது ஆரம்பிக்கற்பாற்று? எது எக்காலமும் உபயோகமாய் முற்பட்டு நிகழ்கின்றதோ, (அதற்குப் பின்னர் இது ஆரம்பிக்கற்பாற்று).

இங்ஙனஞ் சிரவணஞ் செய்வோருடைய மனசிலே நிகழ்ந்த சங்கை எனப்படும் முளையை நிர்மூலஞ் செய்யுமாறு சர்வஞ்ஞசிகாமணியாகிய வியாசபகவானால் அருளிச்செய்யப்பட்டது இந்தச்

## சூத்திரம்.

அயாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா (க. க. க)

### (க) பின்னர், ஆகலின், *பிரமத்தை அறிய †ஆசை.

இச்சூத்திரம் ஓர் அதிகரணம். ஈண்டு விஷயம், சம்சயம், பூருவபக்ஷம், சித்தாந்தநிர்ணயம், சங்கதி என்பவற்றுக்கு நிலைக்களமாயது அதிகரணம்.

இங்கே அத (அய) சப்தம் (இன்ன விஷயத்துக்குப் பின்னர் இன்னது ஆரம்பிக்கற்பாற்று) என்னும் அனந்தர அர்த்தத்திற் போந்ததன்றி,

அய யோகாநுஶாஸநம்।

"இப்பொழுது யோகத்தைப்பற்றிய விவரணம் (ஆரம்பிக்கற்பாற்று)" என்னும் யோகசூத்திரமுதலியவைகளிற் கண்ட அத என்பதுபோல, அதிகாரப் பொருண்மேற் போந்ததன்று. அதிகாரம் என்பது ஆரம்பம்.

பிரமத்தை அறியவேண்டும் என்னும் ஆசையானது செயற்பாலதாதலின், அது ஆரம்பிக்கப்படுவதின்றன்றே; அது விஷயத்தின் மேற்கொண்ட ஆசையினால் மாத்திரம் உதிக்கற்பாலது.

ஓங்காரஶ்சாயஶப்தஶ்ச த்வாவேதௌ ப்ரஹ்மண꞉ புரா।
கண்஠ம் பித்வா விநிர்யாதௌ தஸ்மாந்மாங்கலிகாவுபௌ॥

"ஓங்காரம் அத என்னும் இரு மொழிகளும் முன்னரே பிரமாவுடைய கண்டத்தைப் பிளந்து வெளிப்பட்டமையின், அவ்விரு மொழிகளும் மங்கல மொழிகள்" என்னும் ஸ்மிருதிபற்றி, இந்த அத சப்தம் மங்கலப் பொருளிற் கூறப்படுவதன்று; (பிரமத்தை) அறியவிருப்பம் என்பதுபற்றிப் பொருள் பொருந்துமாறின்மையின். சிஷ்டாசாரம் பாதுகாக்கும்பொருட்

---

*ப்ரஹ்மேதி ஶிவஶக்த்யாஸ்து ஸர்வாத்மத்வ விவக்ஷயா।
(கைலா. கக. சO)

"சிவனாதும் சத்தியாரதும் சர்வான்மகத்துவமே பிரமம் என்பது வெளிப்படை" என்று கூறப்படலாற் பிரமம் என்பது சத்தியோடியைந்த சிவபெருமான் மேற்று.

†மொய்ப்பானரம்புகயிறுகழுளையென்புதோல்போர்த்த
குப்பாயம்புக்கிருக்ககில்லேன்கூவிக்கொள்ளாய்கோவேயோ
வெப்பாலவர்க்குமப்பாலாமென்னாரமுதேயோ
வப்பாகாணவாசைப்பட்டேன்கண்டாயம்மானே.
(திருவாசகம், ஆசைப்பத்து, உ.)

டுச் சாஸ்திராரம்பத்தில் மங்கலாசரணம் செயற்பாலதெனின், அதுவும் அத என்று (வாயினால்) அக்ஷரத்தைத் தோனித்தல் மாத்திரையானே சித்திக்கின்றது.

இந்த அத சப்தமானது (ஓர் விஷயஞ் சொல்லி மற்றோர் விஷயஞ் சொல்வதாகிய) பக்ஷாந்தரத்திற் கொள்ளும் பொருளுமுடைத்தன்று; முன்னர் யாதும் கூறப்படாதாக, அதன் பிரசங்கமின்மையின்.

அத என்னும் மொழி போசனமேனும் போதலேனும் செய்தல் என்றமை போல, நியமமில்லாததாய் முன் நிகழ்வதொன்றைக் குறித்ததும் அன்று; இம்மொழி நியமமாய் உள்ளதொன்றைக் குறித்து ஈண்டுக் கூறப்படலான். எவனுக்குச் சம்பத்தியானது அதிகாரிவிசேஷத்தினாற் பிரமவிசாரத்துக்குச் சாதனமாகின்றதோ, அந்தச் சாதனம் முன் உளதாவதாக அறியப்படுகின்றது.

பின்னர் எட்டு வயசுமுதலியவற்றையுடைய பிராமணர் முதலியோரால் உபயோகிக்கப்பட்ட உபநயனசம்ஸ்காரத்தை முற்கொண்டதாயும்,

ஸ்வாத்யாயோ௨த்யேதவ்ய: (தைத்திரீய ஆரணியகம். உ. கரு)

“சுவாத்தியாயம் அத்தியயனஞ் செயற்பாற்று” என்று தனக்கு விதிக்கப்பட்ட பிரகாரம் தினந்தோறும் எய்தப்பெற்றதாயும், நியமமாக வழிபடப்படும் ஆசாரியர் வாயிலாக எய்தும் அக்ஷரக்கிரஹணவடிவமாயும், அர்த்தஞானப்பயனையுடையதாயுமுள்ள வேதாத்தியயனமே பிரமவிசாரத்துக்கு முன் உளதாக உரைப்பது யுக்தம்; தருமம்போலப் பிரமமும் வேதவாயிலாகச்சித்தித்தலின், வேதாத்தியயனஞ் செய்யாதவனுக்குப் பிரமவிசாரங் கூடாதாகலின்.

கேவலம் வேதாத்தியயனத்துக்குப் பின்னர்ப் பிரமவிசாரம் செயற்பாலதோ எனின், அப்பெற்றித்தாய அத்தியயனம் (ஆகுக); அதன் பின்னர்த் தருமவிசாரம் (ஆகுக); அவ்வேதாத்தியயனமின்றித் தருமவிசாரஞ் சித்திக்காமையின். அங்ஙனம் ஆசாரியராலே (சைமினிமுனிவராலே)

அதாதோ தர்மஜிஜ்ஞாஸா (பூருவமீமாஞ்சை. க. க. க)

“பின்னர், ஆகலின், தருமவிசாரவிருப்பம்” எனப் பிரதிபாதிக்கப்பட்டது. முதற்கண்ணே உபாத்தியாயரிடத்து அத்தியயனஞ் செய்த பின்னர்த் தருமவிசாரஞ் செயற்பாற்று; ஆகலின், எதற்குப் பின்னர் இது (பிரமவிசாரம்) ஆரம்பிக்கற்பாற்று? தருமவிசாரத்தின் பின்னர். எங்ஙனம்? நாம் தரும

விசாரம் பிரமவிசாரஞ் செய்யும் (பூருவமீமாஞ்சா உத்தரமீமாஞ்சா) சாஸ்திரங்கட்கு மிகுதியும் பேதஞ் சாற்றுவேமல்லேம்; ஆயின் (அவை) ஒரே (சாஸ்திரம் என்னும்) அபிப்பிராயமுடையேம். தருமவிசாரத்தையும் பிரமவிசாரத்தையும் ஆராதன ஆராத்தியங்களாகப் பிரதிபாதிக்கும் (இரு சாஸ்திரங்களும் முறையே) "பின்னர், ஆகலின், தருமவிசாரவிருப்பம்" (பூ. க. க. க) என்று தொடங்கி, "மீளத் திரும்புதல் இல்லை; சுருதியுண்மையின்" (வே. சூ. ச. ச. உஉ) என முடியும்வரையும் ஒரே சாஸ்திரம். (உத்தர மீமாஞ்சையில்) "பின்னர், ஆகலின், பிரமவிசார ஆசை" என்னும் ஆரம்பமானது பூருவமீமாஞ்சையில்

𑌅𑌥𑌾𑌤𑌃 𑌶𑍇𑌷𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍍 (பூ. ௩. க. க)

"பின்னர், ஆகலின், சேஷலக்ஷணம்" என்றற்றொடக்கத்தவற்றிற்போல, அவாந்தரபரிச்சேதப் பொருண்மேற் போந்தது.

இன்றேல் தருமவிசாரமானது பிரமஞானத்துக்குக் காரணமாதலின், அதனை விசாரித்தற்கு உபயோகமுடையனவாய சுருதிலிங்கமுதலியவும், பிரமாணங்களாகப் பிரதிபாதிக்கப்படும் வேதவிதியும், அர்த்தவாதமும், ஸ்மிருதிமுதலியவும் பிரமவிசாரத்துக்கு உபயோகமாதலின், தருமவிசாரத்துக்குப்பின் பிரமவிசாரஞ்செயற்பாற்று; சாதனமின்றிச் சாத்தியம் பெறப்படாமையின்.

பிரமஞானத்தையுற்றுத் தருமம் சாதனமாங்கால்,

𑌤𑌮𑍇𑌤𑌂 𑌵𑍇𑌦𑌾𑌨𑍁𑌵𑌚𑌨𑍇𑌨 𑌬𑍍𑌰𑌾𑌹𑌮𑌣𑌾 𑌵𑌿𑌵𑌿𑌦𑌿𑌷𑌨𑍍𑌤𑌿 𑌯𑌜𑍍𑌞𑍇𑌨 𑌦𑌾𑌨𑍇𑌨 𑌤𑌪𑌸𑌾 𑌨𑌾𑌶𑌕𑍇𑌨 (பிரு. சு. ச. உஉ; அ. உ. கசு)

"இதனைப் பிராமணர் வேதாத்தியயனத்தினாலும், யஞ்ஞத்தினாலும், தானத்தினாலும், தபசினாலும், விரதத்தினாலும் அறிய விரும்புகின்றனர்" என்னும் பகவதி சுருதியே பிரமாணம்.

கருமமானது பிரமஞானத்துக்குச் சாதனமாயின், தருமமே விசாரிக்கற்பாலதும் அநுட்டிக்கற்பாலதுமாக, இந்தப் பிரமத்தைப்பற்றிய வேதாந்த வாக்கியங்களை விசாரஞ் செய்தலாம் சிரமத்தினாற் போதரும் பயன் என்னை? என்று கூறற்பாற்றன்று, பலத்தை விரும்பாத அதிகாரிக்கு (அந்தக் கருமமானது) பாவமாகிய மலத்தை நீக்கும் சம்ஸ்காரவாயிலாகச் சித்த சுத்தியைப் பிறப்பித்தற்குவாயிலாய்ப் (பிரம) ஞானத்துக்கு ஏதுவாகலின். அங்ஙனம்,

யஸ்யைதே அஷ்டாசிம்ஶத்ஸம்ஸ்காரா: (கவு. த. அ. உச. உரு)

"எவனுக்கு இந்த * நாற்பது சம்ஸ்காரங்களும் (உண்டு)" என்று தொடங்கி,

ஸ ப்ரஹ்மண ஸாயுஜ்யம் ஸாலோக்யஞ் ச கச்சதி

(கவு. த. அ. உச. உரு)

"அவன் பிரமத்தின் சாயுச்சியத்தையும் சாலோக்கியத்தையும் அடைகின்றனன்" என்பதிறுதியாக, கர்ப்பாதான முதலிய சகல கருமங்களும் பாவமலங்களை ஒழிக்கும் சம்ஸ்காரஹேதுவுடையன என அபியுக்தஸ்மிருதி பிரகாசிப்பிக்கின்றது.

(ஆக்ஷேபம்) (யஞ்ஞத்தின்பொருட்டுச்) சாலியின்மீது (ஜலங்கொண்டு) புரோக்ஷித்தலாம் சம்ஸ்காரம் போல, சமஸ்தகருமங்களுக்கும் சம்ஸ்காரம் எய்துமாயின்,

ஸர்வே ஏதே புண்யலோகா பவந்தி (சாந். உ. உங. க)

"இவரெல்லாம் புண்ணியலோகத்தினர் ஆகின்றார்" என்று சுருதியிற் கூறப்பட்ட ஆச்சிரமபலங்களுக்குச் சுவாதந்திரியம் இன்றாய் விடுமாலோ எனின்,

(உத்தரம்) அன்று; (சுவர்க்கமுதலிய) புண்ணியலோகரூபமாகிய பலத்தை அவாவிச் செய்யப்படும் கர்மங்கள் சுவாதந்திரியங்களாயினும், பலத்தை அவாவாது அக்கர்மங்களை அநுட்டித்த புருஷனுக்கு அக்கருமங்கள் சித்தசுத்திமுதலியவற்றைப் பிறப்பித்தற்குக் காரணமாயிருத்தலின்; அங்ஙனமே, அந்தப் புருஷனுக்கு எது ஞானபலமாயுள்ளதோ, அது கருமபலமுமாம்; வ்ரீகிப்புரோக்ஷணமானது அதிர்ஷ்டபலத்தைப் பிறப்பிக்

* நாற்பது சம்ஸ்காரங்களாவன:—(க) கர்ப்பாதானம், (உ) பும்சவனம், (ங) சீமந்தோந்நயனம், (ச) ஜாதகருமம், (ரு) நாமகரணம், (சு) அன்னப்பிராசனம், (எ) சௌளம், (அ) உபநயனம், நான்கு (கூ, க0, கக, கஉ) வேதவிரதங்கள், (கங) சமாவர்த்தனம், (கச) விவாகம், பஞ்சமகாயஞ்ஞம் (கரு) தேவயஞ்ஞம், (கசு) பிதிர்யஞ்ஞம், (கஎ) மனிதயஞ்ஞம், (கஅ) பூதயஞ்ஞம், (ககூ) பிரமயஞ்ஞம், எழு பாகயஞ்ஞம் (உ0) அஷ்டகை, (உக) பார்வணம், (உஉ) சிராத்தம், (உங) சிராவணி, (உச) ஆக்கிரகாயணி, (உரு) சைத்திரி, (உசு) ஆசுவயுஜி, எழு ஹவிர்யஞ்ஞம் (உஎ) அக்கினியாதேயம், (உஅ) அக்கினிஹோத்திரம், (உகூ) தர்சபூர்ணமாசம், (ங0) ஆக்கிரயணம், (ஙக) சாதுர்மாசியம், (ஙஉ) நிரூடபசுபந்தம், (ஙங) சௌத்திராமணி, எழு சோமயஞ்ஞம் (ஙச) அக்கினிஷ்டோமம், (ஙரு) அத்தியக்கினிஷ்டோமம், (ஙசு) யுக்தி, (ஙஎ) சோடசி, (ஙஅ) வாஜபேயம், (ஙகூ) அதிராத்திரி, (ச0) அப்தோர்யாமம் என்பனவாம்.

கத் தர்சபூர்ணமாசயஞ்ஞத்துக்கு அங்கமாய், சுவர்க்கமடைதற்குமுடிவாய் நிலையுறல் போல, கர்மங்கள் ஞானத்துக்கு உபயோகமாய் முத்தி அடைதற்கு முடிவாய் ஒருங்கு நிலையுற்றன. குணகர்மங்களாயிருத்தலின், அக் கர்மங்கள் அங்கங்களாம்.

(ஆக்ஷேபம்) நித்தியம் செயற்பாலனவாய் விதிக்கப்பட்ட ஜ்யோதிஷ்டோமமுதலாயின மற்றோர் முக்கிய பேற்றைக் கொடுப்பதில் விரோதமுறுதலின், அவை சம்ஸ்காரங்களாய் எய்தமாட்டாவோ எனின்,

(உத்தரம்) அன்று; சுவதந்திரவிதிகொண்டு முக்கிய காரணங்களாக விதிக்கப்பட்ட சௌத்திராமணி பிருகஸ்பதிமுதலியன முறையே அக்கினிசயனம் வாஜபேயமுதலிய யஞ்ஞங்களுக்கு அங்கமாயிருத்தல்போல, (ஓர் கர்மத்துக்கு) இரு விதியின் பலத்தினல் ஈரியல்பு சித்தித்தலின். ஆகலின், ஞானோற்பத்திவரையும் கர்மங்கள் அநுட்டிக்கற்பாலன.

(ஆக்ஷேபம்) விவிஷிஷந்தி (பிரு. சு. ச. உஉ)

"அறிதற்கு விரும்புகின்றனர்" என்பதினல் ஞானத்தின்மேல் இச்சை பிறக்கும் வரையும் கர்மம் அநுஷ்டிக்கற்பாற்றே எனின்,

(உத்தரம்) இது சாரமின்று; வாளா இச்சையானது புருஷார்த்தமாகாமையின். ஆகலின் பிரமஞானத்துக்குச் சாதனமாகிய கர்மவிசாரஞ் செய்தபின்னரே, பிரமஞானத்தைப் பிறப்பிக்கும் சாஸ்திராரம்பஞ் செய்தல் மிகவும் உசிதம்.

(ஆக்ஷேபம்) கன்மப் பிரமவிசாரம் என்பவற்றுக்குக் கிரம நியமம் கூறுவது எங்ஙனம் பொருந்தும்? (இரண்டுக்கும்) கர்த்தா ஒருவனேயாமாதலின் எனின், அன்று. ஆகார அங்கத்துக்கும் தர்சபூரணமாச அங்கிக்கும் கர்த்தா ஒருவனேயாயிருத்தல் போல, தர்மவிசார அங்கத்துக்கும் பிரமவிசார அங்கிக்கும் கர்த்தா ஒருவனேயாயிருப்பதா? ஒரு அங்கியாகிய ஆக்கிநேய யஞ்ஞத்தின்பொருட்டுள்ள அநேகாங்கங்களாகிய பஞ்சப்பிரயாஜங்களுக்குக் கர்த்தா ஒருவனேயாயிருப்பதுபோல, மூன்றுவதாகிய அங்கிக்குத் தர்மப்பிரமவிசாரங்களை அங்கமாகக் கொண்டு இவற்றுக்கு ஒருவனே கர்த்தாவாயிருப்பதா? சமசத்திலே ஜலம் புரோக்ஷணம் செய்பவனே யஜமானுடைய பசுகாமனையின் பொருட்டுக் கோதோகனத்திலே ஜலம் புரோக்ஷணம் செய்தற்கு அதிகாரியாயிருத்தல் போல, தர்மவிசாரத்துக்குக் கர்த்தாவாயிருப்பவனே பிரமவிசாரத்துக்குங் கர்த்தாவாயிருப்பதா? ஆக்கிநேயமுதலிய ஆறு யஞ்ஞங்களும் ஒரே சுவர்க்கபலத்தைக்

கொடுப்பனவேயாக, இவற்றுக்கு ஒருவனே கர்த்தாவாயிருத்தல் போல, தருமவிசாரம் பிரமவிசாரம் என்னும் இரண்டும் ஒரே பலத்தைக் கொடுப்பனவேயாக, இவற்றுக்குக் கர்த்தா ஒருவனேயாயிருப்பதா? தருமவிசாரம் பிரமவிசாரம் என்பவற்றுக்கு அங்ஙனம் ஓர் இயைபிருப்பதாகச் சுருதி முதலிய பிரமாணம் பெறப்படவில்லை. ஆகலின், கர்மப் பிரமவிசாரத்துக்குக் கிரமநியமம் பொருந்தாதெனின்,

(உத்தரம்) சுருதிமுதலிய பிரமாணம் இன்றேல், அப்போது அங்ஙனம் (கிரமநியமமின்றி) இருக்கும்.

வித்³யாம் சாவித்³யாம் ச யஸ்தத்³ வேதோ³ப⁴யம் ஸஹ (ஈசா. கக)

"எவன் வித்தை (ஞானம்), அவித்தை (கர்மம்) என்னும் இரண்டையும் அறிகின்றவன்" எனவும்,

தேநைதி ப்³ரஹ்மவித் புண்யக்ருச்ச (பிரு. சு. ச. கூ)

"இந்தக் காரணத்தினாலே பிரமத்தை அறிபவனும் புண்ணியத்தைச் செய்பவனும் (மேலே) போகின்றான்" எனவும்,

ஸத்யேந லப்⁴யஸ்தபஸா ஹ்யேஷ ஆத்மா ஸம்யக்³ஜ்ஞாநேந ப்³ரஹ்மசர்யேண நித்யம் (முண். ந. க. ரு)

"சத்தியத்தினாலும், தபசினாலும், நல்ல ஞானத்தினாலும், பிரமசரியத்தினாலும் நித்தமும் இந்தப் பரமான்மா அடையப்படுகின்றனர்" எனவும் பிறவுமாக ஞானத்தையும் கர்மத்தையுஞ் சேர்த்து விதிப்பனவாகிய சுருதிகள் காணப்படுகின்றன. கர்மத்துக்கும் ஞானத்துக்கும் மோக்ஷபயன் ஒன்றேயுண்மையின், அந்தக் கர்மப்பிரமவிசாரங்களுக்குக் கிரமநியமம் யுக்தம்.

இங்ஙனமாயினும், அத்தியயனவிதி அக்ஷரத்தைப் படித்தல் மாத்திரத்தில் முற்றுவதாயினும், அது (தர்மப்பிரம) விசாரத்துக்குப் பிரவிருத்தியிலதாய் ஒழியாது; ஷடங்கத்தோடு வேதாத்தியயனஞ் செய்தலினாலே முதற்பார்வையினால் உடனே வாக்கியார்த்தமாத்திரம் எய்துவதாகுமாதலின். பின்னர்ப் பிரமத்தின் ஸ்தூலோபாசனையாயுள்ள சோதிஷ்டோமாதிகளை விதிக்கும் வசனங்களுக்கும், சூக்குமோபாசனையாகிய * தகரவித்தையை விதிக்கும் வாக்கியங்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதாபாசவுண்மை நோக்கி, புருஷார்த்தத்தை விரும்பும் புருஷன் கர்மப்பிரமவிசாரத்திற் சுவயமாகப் பிரவர்த்திக்கின்றான். ஆகலின், (கர்மப்பிரம) விசாரத்துக்கு நியமமில்லாமல் இல்லை.

* திருச்சிற்றம்பலம்.

அயமாத்மா ப்ரஹ்ம (மாண்டூக்கியம். உ; பிரு. ச. ரு. கக)

"'இந்த ஆன்மா பிரமம்'' என்னுஞ் சுருதியானது "அயம்'' என்னும் பிரத்தியயத்திஞற் பிரத்தியக்ஷ சித்தமாயுள்ள ஆன்மாவைப் பிரமம் என்று கூறுகின்றது; ஆகலின் இதிற் சந்தேக களங்கப் பிரசங்கம் எற்றுக்கு? இன்னும் விசாரத்தின் பயன் அந்த விஷயஞானமே. ஞானமும் ஞேயத்தின் பரிச்சேதமாம். வேதாந்தவிசாரம் வாயிலாகப் பிறந்த ஞானம் பிரமத்தைப் பரிச்சேதஞ் செய்கின்றதா? அன்று? பிரமத்துக்குப் பரிச்சேதம் கூறின், அது பரிச்சேதங் கடந்திருக்கின்றதென்பதைப் பங்கஞ் செய்யும்; பரிச்சேதம் கூறுதொழியின், பிரமம் உள்ளவாறு விளங்காது. "இதுதான் கடம்'' என்று பரிச்சேதம் கூறுங்கால், அது அறியப்பட்டதாகின்றது; ஆகலின், பிரமவிஷயத்தைப்பற்றிய ஞானமும் எய்தாது; மேலும், (விசாரத்திஞல் எய்தும்) பயன் சிறிதும் காண்கிலேம்; முத்திப்பயனும் இல்லை; அநாதி சித்தமாயுள்ள சம்சாரம் நீக்கக்கூடாமையான் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். எவ்வாற்ருனும் (வேதாந்த) சாஸ்திரம் நன்கு ஆரம்பிக்கற்பாற்று; பிரமம் சந்தேகத்துக்கிடமாய் ஆராயற்பாலதாகிய விஷயமாயிருத்தலிஞலும், அதனை நிர்ணயித்தல் பிரயோசனத்தை விளைத்தலானுமாம். "இந்த ஆன்மா பிரமம்'' என்றற்றொடக்கத்த சுருதிகள் அகங்காரத்திஞற் கட்டுண்ட இந்தச் சம்சாரியைப் பிரமம் என்று சொல்கின்றன; இதனுற்றன் சந்தேகம்.

சமஸ்த கிலேச களங்கமில்லாத நிரதிசய ஞானனந்தாதி சத்திமகிமாதிசயத்தையுடையதே பிரமத்துவம்.

அநாதியாயுள்ள அஞ்ஞானவாசனையிஞற் பற்றப்பட்டு வெளிப்பட்ட நாநாவித அநேக சரீரங்களிற் பிரவேசித்தலும் நீங்குதலுமாகிய வியாபாரத்திஞல் வசப்பட்டு எல்லையில்லாத துக்கத்தைச் சகித்தலே சீவத்துவம்.

ஒன்றுக்கொன்று விலக்ஷணமாயுள்ள (பரமான்மா சீவான்மா என்னும்) இரண்டுக்கும் சுருதிகள் எங்ஙனம் ஒரியல்பு கூறும்? அங்ஙனமாயின், எங்ஙனம் சந்தேகம் இலதாகும்? இன்னும் இங்ஙனஞ் சந்தேகம் நிகழ்கின்றது;

அந்நம் ப்ரஹ்ம। ப்ராணோ ப்ரஹ்ம। மநோ ப்ரஹ்ம। விஜ்ஞாநம் ப்ரஹ்ம (தைத். ங. உ, ங, ச, ரு); ஆதித்யோ ப்ரஹ்ம (சாந். ங. கக. க); நாராயணோ ப்ரஹ்ம।

"அன்னம் பிரமம்,'' "பிராணன் பிரமம்,'' "மனம் பிரமம்,'' "விஞ்ஞானம் பிரமம்,'' "ஆதித்தியன் பிரமம்,'' "நாராயணன் பிரமம்'' என்றற்றொடக்கத்த சுருதிகள் வெவ்வேறு பொருளைப் பிரமம் என்று கூறுகின்றன. இவை

களில் எது பிரமம்? ஆகலின் அநேகபிரகாரமாய்ச் சந்தேகமுண்டாகின்றமையின், பிரமம் விசாரஞ் செய்தற்கு அருகமாகின்றது.

கேட்டல், சிந்தித்தல் முதலியவற்றால் நிச்சயிக்கப்பட்டவரும், பக்தியினாலும், ஞானத்தினாலும் விசேஷமாக எதிர்முகமாக்கப்படுபவரும், பரமகாருணிகரும், மகாதேசிகரும், சர்வாநுக்கிரகருமாகிய பரப்பிரம சிவனாரின் அருளாதிக்கியத்தினாலே இந்த அதிகாரிக்குப் பாசபடலம் நீங்கி, பிரத்தியக்ஷமாக்கப்பட்ட நிரதிசயானந்த சொரூபமாகிய அந்தச் சிவப்பிரமத்தின் *சாமியகுணசாரமாயுள்ள கைவல்லிய இலட்சுமியை (அடைதலே) பிரயோசனமாம்.

இதனால் வேதாந்த சிரவணமானது (ஆராயற்பாலதாகிய) விஷயத்தோடும் பயனோடும் இயைந்துளது. ஞானமானது ஞேயத்தின் பரிச்சேதமாயிருத்தலின், பரிச்சின்னங்கடந்த பிரமம் விஷயமாகாதேயென ஆக்ஷேபமாகக் கூறினமை ஆராய்வில்லாத விலாசத்தினாலேயாம்; பிரமம் இவ்வியல்பிற்று, இது என்று பரிச்சேதம் கூறல் கூடாதாயினும், இலக்ஷணவாயிலாகப் பிறவற்றினின்று வேறுபடுத்தல் மாத்திரத்தினாலே பரிச்சேதம் எய்துமாகலின், யாண்டும் இலட்சியவிஷயத்தை இலக்ஷணவாயிலாகப் பிறவற்றினின்று பிரித்துக் கூறும் ஞானமே பரிச்சேதம் எனப்படும்.

உத்தேசிக்கப்பட்ட பிரமத்துக்கு இலக்ஷணங் கூறி வேதாந்தவாக்கியங்களினாலே நிரூபித்துப் பரீக்ஷிக்குங்கால், சஜாதீய விஜாதீயங்களாய், (பிரம) இலக்ஷணங்கள் இல்லாதனவாயுள்ள மற்றைச் சகல பதார்த்தங்களினின்று பிரிக்கப்பட்டதாய் எதுவுண்டோ அதுவே பிரமம் என அறியற்பாற்று.

ஆகலின் பிரமவிஷயமாயுள்ள இந்தச் சாஸ்திராரம்பம் சமீசீனம். சந்தேகத்துக்கிடனாகாததும், பிரயோசனம் விளைக்காததுமாயுள்ள ஒன்று அறிஞர்க்கு விசாரவிஷயமாகாது. வேதாந்த சாஸ்திர விசாரமானது பிரமாணம், யுக்தி, ஆபாசம், பிரதிபாசம் என்பவற்றுக்குட்பட்டமையின், சந்தேகத்துக்கிடமாய்ப் பிரமம் விசாரத்துக்குரிய விஷயமாகின்றது.

஬்ரஹ்மவிதாப்நோதி பரம் (தைத். உ. க. க)

“பிரமோபாசகன் நிரதிசய †பிரமானந்தத்தை அடைகின்றனன்” எனவும்,

---

*அப்பார்சடையப்பனானந்தவார்கழலே
யொப்பாகவொப்புவித்தவுள்ளத்தாருள்ளிருக்கு
மப்பாலைக்கப்பாலைப்பாடுதுங்காணம்மானாய்.
(திருவாசகம், திருவம்மானை, கக)

†தெள்ளத்தேறித்தெளிந்து தித்திப்பதோ
ருள்ளத்தேறலமுதவொளிவெளி
கள்ளத்தேன்கடியேன்கவலைக்கடல்
வெள்ளத்தேனுக்கெவ்வாறுவிளைந்ததே.
(நாவு., தனித்திருக்குறுந்தொகை, ௬)

𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑌿𑌵𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌮𑍇𑌤𑌿 (சுவே. ச. கச)

"சிவபெருமானை அறிந்து அத்தியந்த அநர்த்த துக்கநிவிர்த்தியை அடைகின்றனன்" எனவும்,

𑌈𑌶𑌂 𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌮𑍃𑌤𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 (சுவே. ந. எ)

"சிவபெருமானை அறிந்து புநராவர்த்திகொடாத பிரமானந்தாநுபவ நிலையுடையராகின்றனர்" எனவும்,

𑌤𑌮𑌕𑍍𑌰𑌤𑍁𑌂 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌵𑍀𑌤𑌶𑍋𑌕𑍋 𑌧𑌾𑌤𑍁𑌃 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑌹𑌿𑌮𑌾𑌨𑌮𑍀𑌶𑌮𑍍 (சுவே. ந. உ0)

"விராகமும் (அப்பிராகிருத) மகிமையுமுடைய சிவபெருமானை ஜகத்துக்குத் தாரகமாகிய அவரது பிரசாதத்தினுற் சோகம் நீங்கினவனுய்க் காண்கின்றனன்" எனவும்,

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌰𑌣𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌚𑍋𑌤𑍍𑌤𑌰𑌾𑌰𑌣𑌿𑌮𑍍। 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌥𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌸𑌾𑌤𑍍 𑌪𑌾𑌶𑌂 𑌦𑌹𑌤𑌿 𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌃 (கைவ. கக)

"(இதயகுகையின்கண்ணே) ஆன்மாவையும், பிரணவத்தையும் முறையே கீழ் அரணியாகவும், மேல் அரணியாகவுங்கொண்டு தியானித்தலாம் *கடைதலினுலே பாசத்தைத் தகிக்கின்றனன் அறிஞன்" எனவும்,

---

* 𑌤𑌿𑌲𑍇𑌷𑍁 𑌤𑍈𑌲𑌂 𑌦𑌧𑌨𑍀𑌵 𑌸𑌰𑍍𑌪𑌿𑌰𑌾𑌪𑌃 𑌸𑍍𑌰𑍋𑌤𑌃𑌸𑍍𑌵𑌰𑌣𑍀𑌷𑍁 𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌃। 𑌏𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇𑌽𑌸𑍌 𑌸𑌤𑍍𑌯𑍇𑌨𑍈𑌨𑌂 𑌤𑌪𑌸𑌾 𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 (சுவே. க. கரு)

"எள்ளில் எண்ணெய் போன்றும், தயிரில் நெய்போன்றும். (வறந்த) நதியில் ஜலம் போன்றும், அரணியில் அக்கினி போன்றும் (யாண்டும் வியாபித்துள்ள) இந்தப் பரமான்மா ஆன்மாவில் அறியப்படுகின்றார்; சத்தியமும் (உறவும்), தபசும் (ஞானமும்) கொண்டு இவன் அவரைக் காண்பானுயின்."

𑌤𑌿𑌲𑍇𑌷𑍁 𑌵𑌾 𑌯𑌥𑌾 𑌤𑍈𑌲𑌂 𑌦𑌧𑍍𑌨𑌿 𑌵𑌾 𑌸𑌰𑍍𑌪𑌿𑌰𑌰𑍍𑌪𑌿𑌤𑌮𑍍।
𑌯𑌥𑌾𑌪𑌃 𑌸𑍍𑌰𑍋𑌤𑌸𑌿 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌾 𑌯𑌥𑌾𑌰𑌣𑍍𑌯𑌾𑌂 𑌹𑍁𑌤𑌾𑌶𑌨𑌃।
𑌏𑌵𑌮𑍇𑌵 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌥𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃।
(வாயு. பூ. ச. எச, எரு)

"திலத்தில் எண்ணெய் போன்றும், தயிரில் அமைந்த நெய் போன்றும் (வறந்த) நதியில் வியாபித்த ஜலம் போன்றும், அரணியில் அக்கினி போன்றும், (பிரபஞ்சம் எங்கும் பரமான்மா வியாபித்துள்ளார்); இங்ஙனம் ஆன்மாவிலே ஆன்மாவுக்குவேறுகிய பரமான்மாவை (ஒருவன்) சத்தியமும் தபசுங்கொண்டு எப்போதும் இயைந்து நின்று காண்கின்றுன்."

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்
மறையநின் றுளன்மாமணிச்சோதியா
னுறவுகோனட் டுணர்வுகயிற்றினன்
முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே.
(நா., தனித்திருக்குறுந்தொகை, க0)

ஜ்ஞாத்வா ஶிவம் ஸர்வபாஶாபஹாநி: (சுவே. சு. கரு; க. அ)

"சிவபெருமானை அறிந்து சமஸ்த (மல மாயா கர்ம) *பாசங்களினின்று வீடுறுகின்றனன்" எனவும் (போந்த) சுருதிகள் அநுசாரமாக, அப்பிரமோபாசனையினாலே இந்த அதிகாரிக்குப் பாசத்தை நீக்குதலாகிய முத்திப் பிரயோசனமும் உண்டென இம்முதல் அதிகரணத்திற் பிரதிபாதிக்கப்பட்டது. (க)

## (உ) ஜந்மாத்தியதிகரணம்.

ஈண்டு நிர்ணயஞ் செய்யப்பட்ட பிரமத்தை நிச்சயஞ் செய்யும் அந்த இலக்ஷணம் என்னை? என விசாரிக்குங்கால், அப்பிரமத்தின் இலக்ஷணத்தை விளக்குவதாகிய இரண்டாவது அதிகரணசூத்திரம் ஆரம்பிக்கின்றனர் பகவான் சூத்திரகாரர்.

ஜந்மாத்யஸ்ய யத: (க. க. உ)

### (உ) எங்கிருந்து இதன் †சிருஷ்டி முதலியன.

இலட்சியம் அறியப்பட்டவிடத்து, அதன் இலக்ஷணம் (வேண்டப்படாது) வியர்த்தமாய் முடிதலினாலும், அவ்விலட்சியம் அறியப்படாதொழியின் அதனை (இலக்ஷணத்தை) ஆராய்தல் பொருந்தாமையானும், ஈண்டு பிரமத்துக்கு இலக்ஷணம் எங்ஙனம் உரைப்பதாகும் என ஆக்ஷேபிக்கற்பாற்றன்று; வேதாத்தியயனவாயிலாக முதற்கண்ணே அறியப்பட்ட பிரமத்துக்கு அது (இலக்ஷணங் கூறல்) யுக்தமாதலின்.

---

*விளையாததொர்பரிசில்வருபசுபாசவேதனையொண்
டளையாயினதவிரவ்வருள்தலைவன்னதுசார்வாங்
களையார்தருகதிராயிரமுடையவ்வவனோடும்
முளைமாமதிதவழும்முயர்முதுகுன்றடைவோமே.
(தேவாரம், திருமுதுகுன்றம், ஞான.,ரு)

செம்மைநலமறியாதசிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்துமுதலாயமுதல்வன்று
னம்மையுமோர்பொருளாக்கிநாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறார்பெறுவாரச்சோவே.
(திருவாசகம், அச்சோப்பதிகம், க)

†"விண்முதல்பூதலமொன்றியவிருசுடரும்பர்கள்
பிறவும்படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை"
(தேவாரம், ஞாந., திருவெழுகூற்றிருக்கை)

"அரியாகிக்காப்பானயனாய்ப்படைப்பா
னரனாயழிப்பவனுந்தானே."
(பதினொராந்திருமுறை, திருக்கைலாசஞானவுலா)

ஜந்மாதி, அஸ்ய, யதஃ என்பது (சூத்திர) பதச்சேதம். *சிருஷ்டி, திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரகம் என்னும் கிருத்தியம் இந்தச் சம்மேளன சமரசமாய சேதநாசேதனரூப பிரபஞ்சவிலாசத்துக்கு எங்கிருந்து உளதாகின்றதோ, அதுவே பிரமம்.

†யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம (தைத். ௩. க. க)

"எங்கிருந்து இவ்வுலகங்கள் பிறக்கின்றனவோ, எதினாற் பிறந்தவை நிலையுறுகின்றனவோ, ஒழியுங்கால் அவை எங்கே பிரவேசிக்கின்றனவோ, அதனை அறிய முயலுதி; அது பிரமம்"

ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேசஸ்ஸம்ஸாரமோக்ஷஸ்திதிபந்தஹேதுஃ (சுவே. சா. கசா)

"பிரதானத்துக்கும் (பாசத்துக்கும்), க்ஷேத்திரஞ்ஞனுக்கும் (சீவான்மாவாகிய பிரமத்துக்கும்) பதியாயுள்ளார் சர்வஞ்ஞதாதி குணங்களையுடைய ஈசர்; அவர் சம்சாரத்தின் மோக்ஷ ஸ்திதி பந்தத்துக்குக் காரணர்"

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்"

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் |
ஏகமேவாத்விதீயம் (சாந். சா. உ. க)

"சௌமிய! சத்தாகிய இதுவே முதற்கண் இருந்தது; ஏகமே அத்துவிதீயமாயுள்ளது"

ருதம் ஸத்யம் பரம்ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்கலம் |
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாய வை நமஃ |
(மகா. கஉ. க)

"இருதமும், சத்தியமும், பரப்பிரமும், புருஷரும், கிருஷ்ணபிங்களரும், ஊர்த்துவவீரியரும், விருபாக்ஷரும், விசுவரூபருமாயுள்ளார்க்கு நமஸ்காரம்" என்றற்றொடக்கத்தவே விஷயம்.

---

* இதற்குப் பிரமாணம் (௩எசா-ஆம் இலக்கத்திற்) காட்டப்பட்டது.

† ஈண்டு சிருஷ்டி, திதி, சங்காரம் என முத்தொழில் கூறி ஐந்தொழில் என்றது மலைவாம் பிற எனின், ஆகாது; திரோபவம் திதியினும், அருள சங்காரத்தினும் அடங்கிநிற்றலின்.

ஈண்டு பிரபஞ்சசிருஷ்டி முதலாயின பிரமத்துக்கு இலக்ஷணமாக எய்துமோ? எய்தாவோ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) எய்தா; சம்பந்தமின்மையின். மேலும்,

ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத் (தைத். ந., சு)

"ஆனந்தம் பிரமம் என அறிந்தான்" என்று கூறியவிடத்து, ஆனந்தம் பிரபஞ்சோற்பத்தி இலக்ஷணமுடையதாக முற்றுகின்றது. மற்றோரிடத்து,

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் (சாந். சு. உ. க)

"சௌமிய! சத்தாகிய இதுவே முதற்கண் இருந்தது" என்னுஞ் சுருதியினுற் "சத்து" ஜகத்காரணமாக அறியப்படுகின்றது.

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என்னுஞ் சுருதியினுல் முடிவிறந்த ஞானமே பிரபஞ்சோற்பத்திக்குக் காரணமாகிய பிரமம் எனப் பிறிதோரிடத்துப் பெறப்படுகின்றது. மற்றோரிடத்து,

யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரிர்ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல: (சுவே. ச. கஅ)

"இருள் உளதாய், பகலும் இரவும் இலவாய், சத்தும் அசத்தும் இலவாய் இருந்தபோது, கேவலம் *சிவபெருமான் ஒருவர் மாத்திரம் உளராயினர்" என்னுஞ் சுருதியிலுள்ள சிவசப்தத்தினுல் உணர்த்தப்படும் வஸ்துவே காரணமாய், அனைத்துக்கும் முன் உளதாம் பிரமமென உணரப்படுகின்றது. ஈண்டு ஆனந்தமுதலியன பிரமம் என்னுமிடத்து, இவையெல்லாம் தனித்தனி பிரமமாதலாம் விகற்பத்தின் பாலனவா? இன்றேல் இவையனைத்தும்

---

* இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவெளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
விருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
மருவியவறுபதமிசைமுரன்மறைவனமமர்தருபரமனே.
(தேவாரம், திருமறைக்காடு, ஞான., எ)
பெருங்கடன்மூடிப்பிரளயங்கொண்டுபிரமனும்போ
யிருங்கடன்மூடியிறக்குமிறந்தான்களேபரமுங்
கருங்கடல்வண்ணன்களேபரமுங்கொண்டுகங்காளராய்
வருங்கடன்மீளநின்றெம்மிறைநல்வீணைவாசிக்குமே.
(தேவாரம், பொது, நாவு., தனித்திருவிருத்தம், எ)

ஆநந்தோ ப்ரஹ்ம (தைத். ௩. ௬)

"ஆனந்தம் பிரமம்" என்று சுருதி கூறுகின்றது.

அந்யோऽந்தர ஆத்மாநந்தமய: (தைத். உ. ரு. க)

"அன்னியமாய் அந்தரமாயுள்ள ஆன்மா *ஆனந்தமயம்" என்று தோற்றுவாய் செய்து,

ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி (தைத். உ. அ. க)

"இது ஆனந்தத்தின் மீமாஞ்சை" என ஆரம்பித்து, அப்பியாசத்தினல் நிரதிசயானந்தத்தைத் தலையானதாகக் கொண்டு

ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த: (தைத். உ. அ)

"அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என நிரூபிக்கப்பட்டது. பரப்பிரமத்துக்குக் குணமாகலின் அதுவே,

ஆநந்தோ ப்ரஹ்ம (தைத். ௩. ௬)

"ஆனந்தம் பிரமம்" எனப் பிரமம் (ஆனந்த) மிகுதியுடைமையின், அங்ஙனம் கூறப்படுகின்றது. அப்பெற்றித்தாகிய ஆனந்தபோகரசத்தையுடையது பிரமமாகலின், அது நித்தியதிருப்தத்துவமுடைத்தெனக் கூறப்படுகின்றது. பிரமத்துக்கு †மனசினலே (ஞானசத்தியினலே) மகானந்தாநுபவம், புறக்கரணவாயிலாக அன்று; இதுபற்றியன்றே,

ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம (தைத். க. சு. உ)
ஸத்யாத்ம ப்ராணாராமம் (தைத். க. சு. உ)
மந ஆநந்தம் (தைத். க. சு. உ)
ஶாந்திஸம்ருத்தமம்ருதம் (தைத். க. சு. உ)

"ஆகாச சரீரம் பிரமம்" எனவும், "சத்தியான்ம பிராணாராமம்" எனவும், "மன ஆனந்தம்" எனவும், "சாந்திசமிர்த்தமமிர்தம்" எனவுஞ் சுருதிகள் கூறின. நாற்புறத்தும் பிரகாசித்தலின் ‡ஆகாயம் சிதம்பரம் எனப்படும்; பூதாகாசம் அன்று, விசேடமின்மையின். சமஸ்த உலக அண்டங்களின்

---

*அழிவிலாவானந்தவாரிபோற்றி (திருவாசகம், போற்றித்திருவகவல், கஙஉ)

†பிரமம் தன் ஆனந்தத்தை அனுபவிக்கும் எனச் சுருதி கூறியது சிவபெருமானுடைய தடஸ்த மூர்த்தங்களுட்டலையாய சிதாகாச பஞ்சகிருத்திய அதிகாரத்தோடுற்ற நிஷ்கள சிவனையுற்றுமாகலின், அங்ஙனம் பொருள்கொண்டமைபற்றி விரோதமின்று; சிவதருமோத்தரத்துச் சிவஞானயோகவியலிலே "பராபரை பரம சூக்கம், அவன் சிவன் பரமசத்தி தனையனுபவிப்ப னூர்ந்தே" என்று (கசு-ஆம்) செய்யுளிற் கூறப்பட்டமையுங் காண்க.

‡இவ்வுண்மை (௯௦௭, ௯௦௯, கசுஉ, உஉக, உஙங, கூச-ஆம்) இலக்கங்களிற்காணப்படும்.

தொகுதியாகிய குமிழிக்கூட்டங்கள் தோன்றப்பெறும் இரத்திநாகரமாகிய பரப்பிரகிருதிரூப பராசத்தியே *சிதம்பரம் எனப்படும். இந்தப் பிரகாசரூபத்தையுடைய பிரமம் ஆகாசசரீரம் (என்று கூறப்படுகின்றது). சிதாகாயம் பரமகாரணமாதல்,

ஸவ-ாணி ஹவா ஐமாநி ஹ-தாநா காஶாதெவ ஸமுத்
ஜ்யுந்தெ ஆகாஶம் ப்ரத்யஸ்தம் யந்தி (சாந். க. கூ. க)

"இச் செந்துக்கள் அனைத்தும் ஆகாயத்தினின்று உற்பத்தியாகின்றன; ஆகாயத்திலே ஒடுங்குகின்றன"

ஆகாஶொ ஹவை நாம நாமரூபயொர்நிவ-ஹிதா।
(சாந். அ. கசு. க)

"நாமரூபங்களாய அனைத்தையுந் தோற்றுவிப்பது ஆகாயம்" என்னுஞ் சுருதிகளினாற் சித்தித்தது.

"சத்தியான்மா" என்றது சத்தாரூபரின் மேற்று; "பிராணாராமம்" என்றதின் பிராணன் அனைத்துக்கும் ஆதாரமாயுள்ள சிதம்பரசத்தியின் மேற்று; சொரூபமாயுள்ள அந்தப் பிராணனிலே எதற்கு (பிரமத்துக்கு) இன்பமுளதோ, அது பிராணாராமம் எனப்படும். புறக்கரணமின்றி மனசில் (ஞானசத்தியில்) ஆனந்தம் எந்தப் பிரமத்துக்கு உளதோ, அது மன ஆனந்தம் எனப்படும். சண்டும் ஆனந்தம் என்றது காரணமாகிய சிதம்பரத்தின் மேற்று. இது பற்றி,

யதெஷ ஆகாஶ ஆநந்தொ ந ஸ்யாத் கொஹ்யேவாந்யாத் கஃ ப்ராண்யாத்
(தைத். உ. எ. க)

"இந்த ஆகாயம் †ஆனந்தமாகாவிடின், யார் உயிர்ப்பார்? யார் பிழைப்பார்?" எனச் சுருதி கூறுகின்றது.

---

*செல்வநெடுமாடஞ்சென்றுசேணோங்கிச்
செல்வமதிதோயச்செல்வமுயர்கின்ற
செல்வர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
செல்வன்கழலேத்துஞ்செல்வஞ்செல்வமே.
(தேவாரம், கோயில், ஞான., இ)

†தானந்தமில்லான்றனை யடைந்தநாயேனை
யானந்தவெள்ளத்தழுத்துவித்தான்காணேடீ
யானந்தவெள்ளத்தழுத்துவித்ததிருவடிகள்
வானுந்துதேவர்கட்கோர்வான்பொருள்காண்சாழலோ.
(திருவாசகம், திருச்சாழல், க0)

பரமாகாயத்தினின்று வேறுஅற்த சிவபிரான் தாமே ஆனந்தத் தேனுயிருந்து முத்தர்களைத் தமது ஆனந்தத்தில் அழுத்தி உய்விக்குமியல்பு நோக்கிச் சுருதி அங்ஙனம் கூறிற்று.

"சாந்திசமிர்த்தமமிர்தம்" என்றது சிவத்துவத்தை அடைதலின் மேற்று; அமிர்தம் என்றது அநாதிமுத்தம் எனப்படும். ஈண்டு சச்சிதாநந்த பரமாகாயரூபமுடைய சிவபெருமான் *சொரூபானந்தத்தைப் புற அந்தக்கரணம் வேண்டாது ஞானசத்தியினாலே அநுபவிக்கின்றனர் என்பது "மன ஆனந்தம்" என்றதினாற் சித்தித்தது. இதுவே சிவபாவனை அடைந்த முத்தான்மாக்கள் புறக்கரணம் வேண்டாது நிரதிசய சொரூபானந்தாநுபவத்தை அடைதற்குச் சாதனமாகிய அந்தக்கரணத்தையுடையரென்பதையும் ஞாபகப்படுத்துகின்றது. ஆகலின், புறக்கரணமின்றிச் சுத்தஞானபோத சத்திரூபமனசினாலே (சிதம்பரசத்தியினாலே) முடிவிறந்த சொரூபானந்த மெய்துவது அநுபவசித்தமாதலின், சிவபெருமான் நித்தியதிருப்தியுடையர் எனப் பெறப்பட்டது. சிவபெருமானுக்கு எக்காலத்தும் பாகிய சம்சார சுக லேசமேனும் இல்லை என்பது பொருள்.

ரு. **அநாதிபோதம்** :—இயல்பாகிய நிரதிசயஞானமே அநாதிபோதம். சொரூபானந்தாநுபவ சாதனமாய அந்தக்கரணஞானம் அநாதிசித்தமே; ஆகலின், அநாதிபோதமுடையர் சிவபெருமான்; சம்சாரத்தினின்று நீக்கும் ஞானம் அநாதியேயுண்மையின். எக்காலத்துஞ் சஞ்சார தோஷத்தை நீக்கி நிற்றலின் "சாந்திசமிருத்தமமிர்தம்" என்றது சுருதி.

சு. **சுவதந்திரத்துவம்** :— பிறரால் ஏவப்படும் இழிவினீங்கித் தனக்கு வேறாயுள்ள வஸ்துக்கள் அனைத்தையும் தன்மாட்டு வசீகரித்து நிற்றலே சுவதந்திரத்துவம்.

ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ (சுவே. க. கூ)

"பிறவாதவராகிய ஞனும் அஞ்ஞனுமாம் இருவரும் (முறையே) ஈசரும், அநீசனுமாம்"

போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா (சுவே. க. கஉ)

"போக்தா (பசு), போக்கியம் (பாசம்), பிரேரிதாரர் (பதி) என்பவற்றை அறிந்து"

விச்வாவிதேந்ரஸ்ய யஸ்து ஸோர்பி (சுவே. ௫. க)

*பற்றியதொடர்பையுமுயிரையும்பகுத்
திற்றெனவுணர்கிலமேதந்தீர்கிலஞ்
சிற்றுணர்வுடையதோர்சிறியம்யாமெலா
முற்றுனதாட்லையுணரவல்லமோ.
(கர். திருவிளையாட்டுப்படலம்-எக)

"வித்தை (பசு), அவித்தை (பாசம்) என்னும் இரண்டையும் ஆளுபவர் மற்றொருவர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் கண்ட பிரகாரம், ஜடம் (அசேதனமாகியபாசம்), அஜடம் (சேதனமாகிய பசு) என்னும் இருவகைப் பிரபஞ்சத்தையுஞ் செலுத்துவதுண்மையின், சிவபெருமானுக்குச் சுவதந்திரத்துவஞ் சித்தித்தது. சமஸ்தவிஷயத்தினுஞ் சுவதந்திரமாயிருத்தலிற் சிவபெருமானுக்குச் சர்வகர்த்திருத்துவஞ் சித்திக்கின்றது.

ரு. அலுப்தசத்தி:—சுவாபாவிகமாகிய சத்தியையுடைமையே அலுப்தசத்தித்துவம். இது பற்றி,

பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச
(சுவே. சு. அ)

"அவரது பராசத்தியானது சுவாபாவிகமாய், ஞானசத்தி, பலசத்தி, கிரியாசத்தி எனப் பலவாறாகக் கேட்கப்படுகின்றது" என்றற்றொடக்கத்தனவே சுருதிப் பிரமாணம். சேதநாசேதனப் பிரபஞ்சரூப சத்திவிசிட்டத்துவம் சிவபெருமானுக்குச் சுவாபாவிகமே; இதனால் ஓர்காலுஞ் சிவபெருமான் *நிர்விசேடர் அல்லர் என்பது சித்தித்தது.

சு, அனந்தசத்தி:—முடிவிறந்த விசேஷசத்தியுடைமையே அனந்தசத்தித்துவம். இம் முடிவிறந்த சத்திகளினாலே சிவப்பிரமமானது பிரபஞ்சத்தை ஆக்கவும் ஆளவும் இயைந்தது. இது பற்றியே,

ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்தூர்ய இமாம்ல்லோகாநீஶத ஈஶநீபி: (சுவே. ந. உ)

"உருத்திரர் ஒருவர் உளர்; (அவர்கள்) இரண்டாவதொன்றைக் கொள்வாரல்லர்; இந்த உலகம் அனைத்தையும் படைப்பனவும் காப்பனவுமாகிய சத்திகளினாலே ஆளுகின்றனர்"

யஸ்ஸர்வாந் லோகாநீஶத ஈஶநீபிர்ஜநநீபி: பரமஶக்திபி:।
(அதர்வசிரசு)

"ஆளுவனவும், படைப்பனவுமாகிய தமது பரமசத்திகளினாலே இவ்வுலகம் அனைத்தையும் ஆளுகின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதிகள் (எழுந்தன). அனந்தசத்தியுடைமையாற் சிவபெருமானுக்கு முடிவிறந்த பிரபஞ்ச சமவாயிகாரணத்துவஞ் சித்திக்கின்றது.

---

*இதனால் உபநிடதப் பிரதிபாதிதமாகிய பிரமம் சகுணப்பிரமமேயன்றி நிர்க்குணப்பிரமம் அன்றெனப் பெறப்படுகின்றது.

அஷ்டநாமாதிகரணம் :—பவர், சர்வர், ஈசானர், பசுபதி, உருத்திரர், உக்கிரர், பீமர், மகாதேவர் என்னும் அஷ்டநாமங்களுக்கும் அதிகரணமாயுள்ள (சிவதத்துவ) வாச்சியர் பரப்பிரம சிவபெருமான். இந்தப் பரப்பிரம சிவபெருமான் சமஸ்த சப்தங்களால் உரைக்கப்படுவாரேனும், பரத்தியல்பை முக்கியமாய் உணர்த்துதலினுற் பவாதி சப்தங்களாற் கூறப்படுகின்றார். (இந்த அஷ்டநாமங்கள் ஒழிந்த) மற்றைய நாமங்களினாலே அச்சிவபெருமான் கூறப்படாதிருத்தலும் இல்லை.

க. பவர் :—எக்காலத்தும் எவ்விடத்தும் உண்மையினுற் பவர் என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்குப் போந்தது; பூ (ஸ-ூ) தாதுவுக்குச் சத்து (உள்ளது) என்னும் பொருளுண்மையின், யாண்டும் வஸ்துவனைத்தையும் ஊடுருவி நிற்குஞ் சத்தின் வடிவம் பிரமமென அறியப்படுகின்றது. இது பற்றி,

ஸதெவ ஸௌமெ்ுுூ ஆஸீதெகமெவாத்விதீயம்।

(சாந். உ. க, தைத். உ. க. சு)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது; (அது) ஏகமாம் அத்துவிதீயம்"

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்

ஸத்யாத்மப்ராணாராமம் (தைத். க. சு. உ)

"சத்தியான்ம பிராணாராமம்

மந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"மன ஆனந்தம்"

ஸந்மஹ: (மகா. கங. உ)

"சந்மஹ" என்றற்றொடக்கத்த சுருதிகள் போந்தன. "சங்கடம்" "சங்படம்" எனச் சமஸ்த வஸ்துக்களினும் ஊடுருவி நிற்றலால், சத்ரூபமாகிய சிவபெருமானே அனைத்துக்கும் உபாதானமாதல் சித்திக்கின்றது; மண்ணோடு கூடிய கட முதலியன மண்ணையே உபாதானமாகக் கொள்கின்றன. ஆகலின், சத்ரூபமாகிய சிவபெருமான் பவசப்தவாச்சியராகின்றனர்.

உ. சர்வர்:—இம்சித்தல் எனப்படும் "சிரு" (ஶ்ரு) என்னுந் தாதுவினின்று பிறத்தலின், அது அனைத்தையுஞ் சங்கரிக்குங் கர்த்தா சிவபெருமானே எனப் பிரதிபாதிக்கின்றது.

தஸ்மாது̆ச்யதே ஸர்வ ஸம்ஹரதே தஸ்மாத் ஶர்வ: (அதர்வசிரசு)

"மகாசங்காரஞ் செய்பவராய், மகாகவளீகரணஞ் செய்பவராயினர்க்கு நமஸ்காரம்"

யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ் உபே பவத ஓதந (கட. உ. உ௫)

"எவர்க்கு (சிவபெருமானுக்கு) பிராமணரும் க்ஷத்திரியருமாகிய இருவரும் உணவாகின்றனர்." என்றற்றொடக்கத்த சுருதிகளாற் சர்வசங்காரஞ் செய்பவர் சிவபெருமான் எனக் கூறப்படுகின்றனர்.

௩. ஈசானர்:—உபாதியிலாத பரமைசுவரிய விசிஷ்டகுணமுடையராகலின் ஈசானர் என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்காயிற்று;

ய இமாந் லோகாநீஸத ஈஸநீபி: (அதர்வசிரசு)

"எவர் இவ்வுலகம் அனைத்தையும் ஆஞ்ஞாசத்திகளினாலே (ஈசசத்திகளினாலே) ஆளுகின்றனரோ" எனச் சுருதி கூறுதலின்.

௪. பசுபதி:—ஈசுவரராயுள்ளார் எவற்றையும் ஆளவேண்டியதுண்மையின், பசுபதி என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்கெய்திற்று. இதுபற்றியே,

*ஈஷாணே ய: பஸூநாம் பஸுபதிர்த்விபதாம் சதுஷ்பதாம் (தைத். சங். ௩. க. ச. ௩)

"நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களைப் பசுக்களுக்குப்பதியாயுள்ளார் ஆளுகின்றனர்" என்றற்றொடக்கத்தனவாகச் சுருதி கூறுகின்றது. பாசசம்பந்தத்தினாற் பசு என்னும் வியவகாரமுண்மையின், பசு என்னுமிடத்துப் பசு பாசம் என்னும் இரண்டுங் கொள்ளக்கிடந்தன. இதுகொண்டு சேதனத்துக்கும் அசேதனத்துக்கும் நாயகர் சிவபெருமான் என அறியப்படுகின்றது.

௫. உருத்திரர்:—சம்சாரரோகத்தைத் திராவகஞ் செய்தலின் உருத்திரர் என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்காயிற்று;

தரதி ஸோகமாத்மவித் (சாந். எ. க. ௩)

"பரமான்மாவை அறிந்தவன் சோகத்தைத் தாண்டுகின்றனன்" எனக் கேட்கப்படலான்.

(சு) உக்கிரர்:—(சூரிய சந்திரர் முதலிய) பேரொளிகளான் அடக்கப்படாமையின், உக்கிரர் என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்காயிற்று;

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம் (சுவே. சு. கச)

"அவ்விடத்திற் சூரியனும் பிரகாசிக்கவில்லை, சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிரகாசிக்கவில்லை" எனச் சுருதி கூறலின்.

எ. பீமர்:—சேதனம் அனைத்துக்கும் பயத்தை விளைக்குங் காரணராயும், அவைகட்கு நியாமகராயுமிருத்தலிற் பீமர் என்னுந் திருநாமஞ் சிவபெருமானுக்கெய்திற்று;

பீஷாஸ்மாத் வாத: பவதே (தைத். உ. அ)

"இவர்க்குப் பயந்தே வாயு வீசுகின்றது" என்றற்றொடக்கத்த சுருதியுண்மையின்.

அ. மகாதேவர்:—மகத்துவமாய்ப் பிரகாசித்தலினால் மகாதேவர் எனச் சிவபெருமான் கூறப்படுகின்றனர். இதுகொண்டே,

அத கஸ்மாதுச்யதே மஹாதேவ: யஸ்ஸர்வாந் பாவாந் பரித்யஜ்ய ஆத்மஜ்ஞாநயோகைச்வர்யே மஹதி மஹீயதே தஸ்மாதுச்யதே மஹாதேவ: (அதர்வசிரசு)

"பின்னர் மகாதேவர் என்று எதுபற்றிக் கூறப்படுகின்றனர்? எவ்வியல்புகளையும் விடுத்து மகத்தாகிய பரமான்மஞானயோகைசுவரியத்தின்பொருட்டுப் பூசிக்கப்படுகின்றமையின் மகாதேவர் எனப்படுவர்" என அதர்வசிரசு கூறுகின்றது. சமஸ்த சம்சாரதோஷமெலாம் அறுத்துச் சமஸ்த மங்கல குணங்களுக்கு ஆதாரமாகச் சிவதத்துவம் என அறியப்படுவதொன்றுண்டோ, அது (ஈண்டு) கூறப்பட்ட இயற்கையினையுடையதாய்ச் சமஸ்தப் பிரபஞ்சத்தையும் படைத்தலாதி கிருத்தியஞ் செய்தற்குக் காரணமாயிருக்கின்றது; அவ்வியல்பினதாய மகிமைவாய்ந்த சிவதத்துவத்திலே பிரபஞ்சத்தின் உபயகாரணத்துவமும் நேர்தலின். அவ்வியல்பினதாய மகத்துவமுடைமையிற் பிரமம் என்று கூறப்படும். அந்தப்பிரமமே சிவபிரான் என்று கூறப்பட்டு ஆனந்தாதி குணமனைத்துக்கும் ஆசிரயமாய்ச் சித்திக்கின்றது. ஆகவின், ஆனந்தாதிகளைத் தனித்தனியே சிவபெருமான் என விகற்பமுறக் கோடல் வியர்த்தம்.

மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத் (சுவே. ச. க0)

"மாயையைப் பிரகிருதி என அறிக" என மாயையானது காரணமாகின்றமை அது சிவனாகவே (வே. சூ. க. ச. க0. ற் கண்டவாறு) வேறுபடாதிருத்தலினாலேயாம்;

மாயிநம் து மஹேச்வரம் (சுவே. ச. க0)

"மாயையுடையராகிய மகேசுவரரை" என்னுஞ் (சுருதி) வாக்கிய சேஷமுண்மையின். சூக்குமசிதசித்விசிஷ்ட பிரமம் காரணமும், ஸ்தூலசிதசித் விசிஷ்ட பிரமமாகிய அதுவே காரியமுமாகின்றது. ஆகலின், பிரபஞ்சோற்பத்தியாதி இலக்ஷணமுடையது பிரமம் என்பது சித்தாந்தம். (உ)

## (ங) சாத்திரயோநித்துவாதிகரணம்.

பதார்த்தஞானமானது இலக்ஷணத்தையும் பிரமாணத்தையும் பற்றியுள்ளது. பிரபஞ்சகாரணர் பரப்பிரம சிவபெருமான் என்பதற்குப் பிரமாணம் என்னே? என,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

ஶாஸ்த்ரயோநித்வாத் (க. க. ங)

### (ங) *சாஸ்திரம் பிரமாணமாயிருத்தலின்.

சாஸ்திரம் பிரமாணமாயிருத்தலிற் பிரபஞ்சோற்பத்தி முதலிய இலக்கணமுடையவர் பரப்பிரமசிவபெருமான்.

பிரபஞ்சோற்பத்திக்குக் காரணராகிய சிவபெருமான் சாஸ்திரவாயிலாகமாத்திரம் எய்தற்பாலரா? இன்றேல் வேறு பிரமாணங்களாற் பெறற்பாலரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவயவத்தோடிசைந்த இப்பிரபஞ்சம் காரியமே. காரியமும் விசித்திரமாயடங்கியிருத்தலின், அது தனக்கு வாய்ந்ததோர் கர்த்தாவையுடைத்தாதல் வேண்டும். கர்த்தா ஒருவர் சர்வஞ்ஞதையுடையராக அநுமிக்கற்பாலர். இந்தக் கர்த்தா சாஸ்திரத்தினுன் மாத்திரம் பெறப்படார்; இவ்விஷயத்திற் சாத்திரம் பிரமாணம் இல்லை; சாஸ்திரம் வேறு பிரமாணங்களாற் பெறவியலாத விஷயத்தைக் கூறலின். பிரபஞ்சகாரணஞ் சாஸ்திரவாயிலாகப் பெறப்படுவதன்றும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிரபஞ்சகாரணராகிய பரப்பிரம சிவபெருமான் வேதாந்தசாஸ்திரமொன்றினுற் பெறற்பாலர்,

நாவேதவிந்மநுதே தம் ப்ருஹந்தம்।

(தைத்திரீயப்பிராம்மணம். ங. கங. சு)

"வேதம் அறியாதவன் அப்பெரும் பொருளை நினைக்க இயலான்" என்றற்றொடக்கத்த சுருதிகளில் வேதாந்தசாஸ்திரமொழிந்து, பரப்பிரமசிவனுரை

*தோதுத்தவனருமறையங்கமாகமம்
வகுத்தவன்வளர்பொழிற்கூகமேவினன்
மிகுத்தவன்மிகுத்தவர்புரங்கள்வெந்தறச்
செகுத்தவனுறைவிடந்திருவிற்கோலமே
(தேவாரம், திருவிற்கோலம், ஞான., சு)

அறிதல் கூடாதெனக் கேட்கப்படலான். அவயவமுடைமையின் (பிரபஞ்சம்) காரியமாய் முற்ற, அதனால் அது தனக்கு வாய்ந்ததோர் கர்த்தாவை யுடைத்தாக அநுமிக்கற்பாற்றென மேலே உரைத்தமை உசிதமன்று; விசித்திரமாகிய தொழில்கள் பூண்ட கோபுரம் பிராசாதமுதலியன அநேக கர்த்தாக்களையுடையனவாகக் காணப்படலான். இதுகொண்டு பிரபஞ்சம் ஒரே முதல்வனைமாத்திரமுடைத்தென அநுமானிக்க இயலாது. அநுமானத்தினால் எய்திய அந்தக் கர்த்தாவும் கர்மமுதலியவற்றிற்றொடக்குண்டவனாக அறியப்படுவன்.

ஏதுவின்பக்ஷதர்மாநுமானவாயிலாகப் பிரபஞ்சத்துக்கு விலக்ஷணமாகக் கர்த்தா ஒருவன் உளனாகச் சித்திப்பானேனும், நிமித்தோபாதான சத்தியோடியைந்த ஒரே கர்த்தா உளன் எனச் சாதித்தல் கூடாது. ஆகலின் வேதாந்தசாஸ்திரமொன்றினாற் பெறப்படுபவரும், அந்த வேதாந்தப் பிரமாணமொன்றினாலே தாபிக்கற்பாலரும் பரப்பிரம சிவபெருமான் எனச் சித்தமாயிற்று.

இன்னும் மேலை அதிகரணத்திற் பிரதிபாதிக்கப்பட்ட பிரபஞ்சோற்பத்திக்கு இன்றியமையாதுள்ள சிவபெருமானுடைய சர்வஞ்ஞதையானது வேதசாத்திரங்கட்கும் காரணமாகச் *சித்திப்பதெனப் பிரதிபாதிக்கப்பட்டதாமென்பர் சிலர்.

ஈண்டுச் சிலேஷார்த்தமுடைய காவியம் போல, இரண்டர்த்தம் கூறுதலைச் சூசிப்பிக்கும் (இந்தச்) சூத்திரத்துக்கு வாக்கியபேதமுதலிய தோஷமின்மையின், பின்னரும் மற்றோர் அதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத்ருக்வேதோ யஜுர்வேதஸ்ஸாமவேதஃ (பிரு. ௪. ௪. ௧0)

"இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம் என்பன இந்தப் பரம்பொருளின் சுவாசம்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறப்படும் விஷயமே ஈண்டு ஆராயற்பாற்று.

சிவபெருமானை வேதத்துக்குக் கர்த்தா எனல் யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது ஒவ்வாதென்பது;

தஸ்மை நூநமபித்யவே வாசா விரூபநித்யயா।

(தைத். சங். உ. ௬. கக. உ)

"பல்வகை வடிவங்கொள்ளும் (அக்கினியே), நித்தியமாயவாக்கினாலே இந்திரனை வணங்குதற்கு உளுற்றுகின்றனை" என வாக்குக்கு நித்தியத்துவஞ்

சாதிக்குஞ் சுருதிக்கு விரோதமுறுதலினாலும், வேதங்கள் சிவபெருமானின் காரியமாயின் (அவை) பௌருஷேயமாய் அப்பிராமாண்ணியப் பிரசங்க முறுதலினாலுமாம். ஆகலின், வேதத்துக்குச் சிவபெருமானைக் கர்த்தா வாகக்கோடல் எங்ஙனமோ எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். வேதத்துக்குச் சிவபெருமானைக் கர்த்தாவாகக் கோடல் யுக்தமே;

அஸ்ய மஹதோ பூதஸ்ய நி:ஶ்வஸிதமேதத்ருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேத: (பிரு. ச. ச. ௧௦)

"இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம் என்பன இந்தப் பரம் பொருளின் சுவாசம்" என்றற்றொடக்கத்த சுருதியினாற் சுவாசம் போல, பரப்பிரம சிவபெருமானிலிருந்து பிரயத்தின மொன்றுமின்றி வேதத்தொகுதி உதித்தன எனப் பெறப்படலானும்,

அஷ்டாதஶாநாமேதாஸாம் வித்யாநாம் பிந்நவர்த்மநாம்।
ஆதிகர்த்தா *ஶிவ: ஸாக்ஷாச்சூலபாணிரிதி ஶ்ருதி:।
(வாயு. பூ. க. உச)

"பல்வகை மார்க்கமுடைய இந்தப் †பதினெண் வித்தைகளுக்குஞ் சாக்ஷாத்தாக முதற்கர்த்தாவாயுள்ளார் சூலபாணியாகிய சிவபெருமான் என்று சுருதி கூறுகின்றது" என்றமையின், வித்தைகள் அனைத்துக்கும் சிவபெருமானே கர்த்தாவாகக் கேட்கப்படலானுமாம். சிருட்டிக்கு முன்னே தம்மிடத்தொடுங்கின வேதங்களைப் பண்டு போலாக, முன் முன் வர்ணங்களைக் கிரமமாக ஒத்தபிரகாரம் இசைத்தருளினமையின், பின் (அவற்றுக்குக்) கர்த்தா சர்வஞ்ஞராகிய சிவபெருமான். இதுபற்றி வேதங்கள் அபௌருஷேயமாயும், சிவபெருமானுடைய காரியமாயும் ஆகின்றன. எவர் விருப்பு வெறுப்புடையரோ, அவர் வசனம் பிரமாணமன்று. சமஸ்த தோஷ களங்கமில்லாதவரும், தடையிறந்த நிரதிசய ஞானப்பிரத்தியக்ஷத்தினாலே முக்காலத்துள்ள பொருள்களையும் நேரே அறியும் விலாசமுடையவரும், சுவதப்பிரமாணமாயுள்ளவரும், பரமேசுவரரும், பரமாப்தரும்,

---

*"கவி" பாடாந்தரம்.

†இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்குவேதங்களும், சிக்ஷை கற்பம் வியாகரணம் நிருத்தம் சோதிடம் சந்தோவிசிதி என்னும் ஆறு அங்கங்களும், புராணம் நியாயம் (கன்மகாண்ட பிரமகாண்டங்களாகிய பூருவ உத்தர) மீமாஞ்சை தருமசாஸ்திரம் என்னும் நான்கு உபாங்கங்களும், ஆயுர்வேதம் தனுர்வேதம் காந்தருவவேதம் அர்த்தவேதம் என்னும் நான்குஉபவேதங்களுமாகிய பதினெண்வித்தைகளுள்ளோ பிரமகாண்டத்தினாலேனும் உபப்பிருங்கண புராணசப்தத்தினாலேனும் சிவாகமம் சங்கிரகிக்கப்படும்.

விரும்பிய அனைத்துமுடையருமாம் சிவபெருமானாகிய பிரமத்தின் வசனம் பிரமாணமே.

ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம் (மகா. கஎ. ரு)

"சமஸ்தவித்தைகளுக்கும் ஈசானர்"

ஸநோ தேவஶ்ஶுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து (மகா. கo. ரு)

"அந்தச் சிவபெருமான் நம்மைச் *சிவஞானத்தினாலே சேர்ப்பாராக" என்னுஞ் சுருதிகளினாற் சிவபெருமானே சமஸ்த வித்தைகளுக்குப் பிரவர்த்தகராதலும் அருண்ஞானத்துக்குக் காரணராதலுங் கேட்கப்படுகின்றது. இதுகொண்டு சமஸ்த வஸ்துக்களையும் பிரகாசிப்பிக்கும் வேதங்களுக்குச் சிவபெருமானே கர்த்தாவாதலின், அவருக்குச் சர்வஞ்ஞதை உண்டென நிச்சயிக்கப்படுகின்றது; அறியாததொன்றைக் கூறல் கூடாமையின். சர்வவியாபகராகிய சிவபெருமான் பொருள்களனைத்தினும் இயைந்து நிற்றலான், அவர்க்குச் சர்வஞ்ஞத்துவஞ் சித்திக்கின்றது. அங்ஙனமாயினும், சர்வவஸ்துக்களையும் விளக்கும் வேதங்களுக்கு அவர் கர்த்தாவாதலும் ஓர் விசேடத்தைக் காட்டுகின்றது. தீபமானது தன்னொளியோடு சம்பந்தமுற்ற இரசமுதலியவற்றை விளக்காது ரூபத்தையே விளக்குமாறு போல, சிவபெருமான் அங்ஙனஞ் செய்வாரல்லர்; பின் அவர் சத்தியோடிசைந்த அனைத்தையும் பிரகாசிப்பிக்கின்றனர்.

(பூருவபக்ஷம்) சிவபெருமானுடைய சர்வஞ்ஞதையானது வேதத்திலே கூறப்பட்ட பொருள்கள் அனைத்தையும் அறிதலே. அங்ஙனமாயின், வேதார்த்தங்களை உணர்ந்த மகா இருஷிகளுக்குஞ் சர்வஞ்ஞத்துவஞ் சித்தமாகின்றது. பின் வேற்றுமை என்னை எனின்,

(உத்தரம்) அன்று; வேதங்களுக்குக் கர்த்தாவாகிய சிவபெருமான் அதிகஞானமுடையர். வியாகரணமுதலியவைகளிலே மிகுந்த அர்த்தங்களை அறிந்த பாணினிமுதலாயினோர் அவ்வியாகரணமுதலியவற்றிற்கு ஆக்கியோர்களாதல் காணப்படுகின்றது. வேதமானது சர்வார்த்தங்களையும் விளக்குமேனும், அனைத்தையும் முக்கியமாய் விளக்கவில்லை; அது சிலவற்றை இலக்ஷணையாகவும், சிலவற்றைச் சாமானியமாகவும், சிலவற்றை

---

*இப்பொருள்படவே "அவனருளாலேயவன்றாள் வணங்கி" (திருவாசகம், சிவபுராணம், கஅ) எனவும், "அப்படியுமந்நிறமுமவ்வண்ணமுமவனருளே கண்ணாகக் காணினல்லால்" (பொது, நாவு., திருவினைத்திருத்தாண்டகம், கo) எனவும், "நின்னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே" (திருவாரூர், திருத்தாண்டகம், க) எனவும் கூறப்பட்டிருக்கின்றது. கoஎ-ஆம் இலக்கம் பார்க்க.

விசேஷமாகவும் (உணர்த்துகின்றது). சிவபெருமானே சர்வசாக்ஷியாய் அனைத்தையும் அறிகின்றனர். வேதத்துக்கும் சிவபெருமானுக்கும் இத்துணைதான் வேற்றுமை கொள்ளப்படுகின்றது.

(ஆக்ஷேபம்) சிவபெருமான் மாத்திரம் வேதத்துக்குக் கர்த்தாவாதல் நியமமில்லை;

ஷஜ்ஹோதா லெவ ஹஂஜ்கா வுஜாவதிசிஜ0 ஸவ- ஜஸூஜக்ஷுஜ லொ யஜ-ஂ0ஷி ஸாசா நி (தைத். பிரா. உ. ரு. உ. ரு)

"ஷட்ஹோத்திரியாகிப் பிரஜாபதி இருக்கு யசுர் சாமங்களாகிய இவை அனைத்தையும் (படைத்தனர்)" என்றற்றொடக்கத்த சுருதிகள் கேட்கப்படலான், இரணியகருப்பர் முதலாயினோரும் வேதங்களுக்குக் கர்த்தாவாகப் பெறப்படுகின்றனரே எனின்,

(சித்தாந்தம்) அன்று; இரணியகருப்போற்பத்திக்கு முன் வேதங்கள் இருந்தமையின்.

யொ ஸுஹ்ஜாணஂ0 விஜயாதி வூஂவ-0 யொ லெவ லெஜா0ஹு வுஹிணொதி தஸெஜூ (சுவே. சு. கஅ)

"பிரமாவை முதற்கண்ணே படைத்து, அவருக்கு வேதங்களை அருளினர்" எனச் சுருதி கூறுகின்றது. எவர் தேவர் அனைவர்க்கும் தலைவராய் இரணியகருப்பர்க்குக் கர்த்தாவாய், இவருக்குச் சமஸ்த வேதங்களையும் உபதேசித்தாரோ, அவரே சர்வாதிகரும், வேதகர்த்தாவும், பரமதேசிகருமாம். இதுபற்றியே,

யொ லெவாநா0 வுலவ0 வாஜவுா்லிஜாயிகொ ருஜெஜா ஹஹஷி- ஹிரணஜுஹ-0 வஜுத ஜாயசா நப ஸ நொ லெவஹுஜயா ஹுஜதுா ஸ0யுநக்து (சுவே. ச. கஉ)

"தேவர்கள் எல்லோருக்கும் முன் உளராய், இரணியகருப்பர் பிறக்க எந்த விசுவாதிகராகிய உருத்திர மகா இருஷி முதற்கண்ணே கண்டனரோ, அவர் நம்மை அருண்ஞானத்தினுற் சேர்ப்பாராக" எனச் சுருதி தெளிவுறக் கூறுகின்றது.

"எவர் மகா இருஷியாயும், வேதகர்த்தாவாயும், சர்வஞ்ஞத்துவமுதலியவற்றாற் சித்தும் அசித்துமாம் பிரபஞ்சத்திற்கு அதிகராயும், பரப்பிரமமாகிய உருத்திரருமாகி, சர்வதேவர்களுக்கும் இந்திரர்களுக்கும் ஆதியா

யும், தம்மது சங்கற்பத்தினுலே காரணமாகிய தம்மிலிருந்து தோன்றுபவரு மாயுள்ள இரணியகருப்பராகிய பிரமாவைச் சிருட்டிகாலத்திலே சர்வ ஞானோபாய சகல வேதோபதேசரூபமாகிய அநுக்கிரகதிருஷ்டியினுல் திரு நோக்கஞ் செய்தாரோ, அந்தப் பரமதேசிகரே சகல சம்சார பாசமாகிய பெரிய அநர்த்தத்தை நிவாரணஞ் செய்தற்குக் காரணமாயும், பரமாமிர்த இலக்குமியை அடையச் செய்வதாய பரமானந்தத்தை விளைப்பதாயும், அத ஞற் பரம மங்கல ரூபமாய் வேதாந்தசாரசமரசஞ் சித்திக்கப்பெறுவதாயு முள்ள ஸ்மிருதி எனப்படுந் தம்மைப்பற்றிய ஞானகலையோடு நம்மையுஞ் சேர்ப்பாராக" என்பதே (மேலே கூறிய) சுருதியின் தாற்பரியம். ஆக லின், சமஸ்த வேதங்களுக்குங் கர்த்தாவாதல் சிவபெருமானுக்குச் சித்தித் தவாறுயிற்று. "வாக்கு நித்தியம்" என்னும் சுருதியானது விரோத முறுது; முன்னரே சத்தாரூபமாயிருந்த வேதங்கள் சிவபெருமானுல் ஆக் கப்பட்டமையின். இங்ஙனம் வேதங்கள் சிவபெருமானுல் அருளப்பட்ட வென்பதும், அவை நித்தியமென்பதும் விரோதமுறுவன அன்றே. (ங)

## (ச) சமந்வயாதிகரணம்.

முதலாம் அதிகரணத்தில் ஆராயற்பாலதாம் விருப்பத்தினுலே பிரதி பாதிக்கப்பட்ட பரப்பிரம சிவபெருமானை அறியும்பொருட்டுப் பிரமலக்ஷ ணம் வேண்டப்பட்டவிடத்து, இரண்டாம் அதிகரணத்தினுலே பிரபஞ் சோற்பத்திரூபமாகிய இலக்ஷணம் கூறப்பட்டது. இதற்குப் பிரமாணம் என்னை என்று வினவ, மூன்றும் அதிகரணத்தினுல் வேதாந்தசாஸ்திரம் அந் தப் பரப்பிரம சிவனை அறிதற்குப் பிரமாணமாதலும், அந்தச் சிவபெருமான் வேதாந்தசாஸ்திரத்துக்கு மூலமாதலும் நிரூபிக்கப்பட்டன. எதனுல் எந் தப் பொருள் மாறுபடாது சித்திக்கின்றதோ, அதுவே அந்தப் பொருட் குப் பிரமாணமாகக் கூறப்படுகின்றது. வேதாந்தவாக்கியங்கள் எங்ஙனஞ் சிவபெருமானைச் சாதிப்பவென ஆக்ஷேபிக்க, (அதற்கு உத்தரமாக) நான் காம் அதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

தத்து ஸமந்வயாத் (க. க. ச)

### (ச) அதனையே *(வேதாந்தம்) ஒரே சம்பந்தமுற இசைக்கின்றமையின்.

தத் (அதனை) என்னும் மொழியானது (ஈண்டு) ஆரம்பித்துக் (கூறிய) பிரமத்தின் மேற்று. "து" என்னும் மொழியினுல் வேத வாக்கியம் அனைத்

*"வேதத்தின்பொருளானை" (திருவன்பார்த்தான்பனங்காட்டூர், சுந்., க) எனவும், "மருவினிய மறைப்பொருளை மறைக்காட்டானை" (திருமாற்பேறு, திருத். தாண்டகம், ரு) எனவும் கூறப்பட்டமையும் ஓர்க.

துந் தொகுக்கப்படுகின்றன. சமந்வய சப்ததாற்பரியத்தினலே சம்பந்தங் கூறப்படுகின்றது.

படவே, "பிரமத்தை வேதாந்த வாக்கியங்கள் தாற்பரிய லிங்க சம்பந்தத்தினல் உணர்த்துகின்றன"

என்பது சூத்திரார்த்தம். இவ்வதிகரணத்துக்குச் சமஸ்த வேதாந்த வாக்கியங்களும் விஷயம்.

வேதாந்த வாக்கியங்கள் பிரமத்தை உணர்த்துவது யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சப்தத்தின் பொருளை உணர்த்துவது யாண்டும் (அவ்விரண்டுக்குமுள்ள) சம்பந்தக்கிரகணத்தை அபேக்ஷித்துள்ளது; சப்தம் அர்த்தம் என்னும் இரண்டின் சம்பந்த ஞானமின்றிப் புருஷனுக்குச் சப்தார்த்த ஞானம் எய்தமாட்டாது. சம்பந்த ஞானமும் விருத்தவியவகாரம் பற்றியது. வியவகாரமும் காரியமொன்றை விஷயமாய்க் கொண்டது. எங்ஙனமெனின், "பசுவைக் கொணர்க," "பசுவைப் பிணிக்க" என்று ஏவுகின்ற விருத்தனுடைய வாக்கியத்தைக் கேட்ட பின்னர், அதனைச் செய்யமுயன்றவனும் ஏவப்பட்டவனுமாகிய விருத்தனை அறிந்து பக்கத்தில் நின்றவன் இம்மொழிகளின் பொருள் என்னை என இங்ஙனம் யோசிக்கின்றான்; எப்பிரகாரத்தினும் இம்மனுஷன் (தான் இன்ன) காரியஞ் செய்யவேண்டும் என்று அறிந்தபின்னர், (அது) செய்யப் பிரவர்த்திக்கின்றனன்; அந்தக் காரிய ஞானமும் (பசுவைக் கொணர்க என்றற்றொடக்கத்த) இவ்வாக்கியத்தினல் உற்பத்தியாயிற்று; அங்ஙனமின்றேல், இந்த (ஆஞ்ஞா) வாக்கியங் கேட்டபின்னர், இவனுக்குப் பிரவர்த்தி எங்ஙனம் பிறக்கும்! பின்னர்ப் பசுவைக் கொணர்ந்து பிணித்தலைக் கண்டபோது இன்னகாரியம் நடந்ததென நிச்சயிக்கின்றான். சப்தத்தின் பொருள் காரியமாயிருத்தலின், (முன்னுளதாமெனச்) சித்தித்த பிரம விஷயத்திலே சப்தத்துக்குப் பிரமாணமில்லை.

மேலும், காரியவிசேஷமாயுள்ள பிரபஞ்சத்துக்குப் பிரமமாகிய விசேடகர்த்தா அனுமானத்தினற் சித்திக்கின்றமையின், இவ்விஷயத்தில் அப்பிராப்த விஷயங்களையுணர்த்தும் வேதாந்தவாக்கியங்கள் எங்ஙனம் பிரமாணமாகும்! இன்றேல் வேதாந்தவாக்கியம் அனைத்தும் விதிகளைக் காட்டுவனவன்றி, பிரமத்தை உணர்த்தா. இந்த இரண்டையும் உணர்த்துமாயின், வாக்கியபேதம் எய்தும். ஆகலின், வேதாந்தவாக்கியங்கள் பிரமத்தை உணர்த்துதல் யுக்தமன்றும் எனின்,

(சித்தாந்தம்) அது யுக்தம்; வேதாந்தவாக்கியங்கள் தாற்பரியலிங்கசம்பந்தத்தினற் பிரமத்தை உணர்த்துஞ் சாமர்த்தியமுண்மையின்.

வியுற்பத்தியானது காரியத்தினின்று பெறப்படுதலாற் சித்தித்த பிரம விஷயத்திற் சுருதியானது பிரமாணமில்லை என்றமை பொருந்தாது; "உனக்குப் புத்திரன் பிறந்தான்" என்றற்றொடக்கத்த சித்தித்த அர்த்த வாக்கியங்களினுஞ் (சப்தார்த்த) சம்பந்த ஞானம் பெறப்படுகின்றமையின். விருத்தவியவகாரத்தினும் அறிபவனானவன் (வியுற்பித்சுவானவன்) தான் முயறற்குக் காரணமாய காரியஞானமானது பதார்த்தஞானத்துக்குப் பின் உளதாகப் பெறப்படலான், ஏவப்பட்ட விருத்தனுடைய பிரேரகவாக்கியம் பதார்த்தஞானத்தைப் பிறப்பிக்கின்றதென நிச்சயிக்கின்றனன். ஆகலின், சித்தித்த பொருள்களினுஞ் சப்தத்துக்கு அபிதானநிச்சயமுண்டு.

இன்றேல், ஈண்டு விருத்தவியவகாரத்தைமாத்திரம் பற்றவேண்டியதென்? வியுற்பத்தி வேறு பிரகாரமாயுஞ் சித்தித்தலின். மாதா முதலாயினோர் பாலர்களுக்குக் கைவிரன் முதலியகொண்டு சந்திரன் பசு முதலியவைகளைக் காட்டி, அந்தந்தச் சப்தங்கள் அந்தந்தப் பொருள்களிலே பிரயோகிக்கப்படுதலை மிருதியும் படிப்பிக்க, அப்பாலர்கள் அந்தந்தப் பொருள்கள் இவை இவை என்று அறிந்துகொள்கின்றார்கள். காவிய நாடகங்களை அறியாதவர்கள் அவற்றை அறிந்த புருஷனை அடைந்து பதச்சேதம் செய்து, இன்ன சப்தத்துக்கு இன்னபொருள் என்று கூற, சப்தம் அனைத்தின் பொருள்களையும் அறிந்துகொள்கின்றார்கள். இங்ஙனஞ் சித்தமாயுள்ள வஸ்துவினும் ஞானமுண்மையான், அங்கே சப்தத்துக்குப் பிரமாணமுண்டு; ஆகலின், வேதாந்தவாக்கியங்களும் பிரமத்தைக் குறித்துப் பிரமாணமே.

பிரபஞ்சம் காரியவிசேடமாயிருத்தலின், விசேஷகர்த்தாவாகிய பிரமமும் அனுமானத்தினாற் சித்திக்கின்றதென்றமை பொருந்தாது; விசித்திரமாகச் செய்யப்பெற்ற இரதம், கோபுரம், பிராசாதமுதலியன (தனித் தனியே) பல கர்த்தாக்களையுடையனவாய்க் காணப்படுதல் கொண்டு அனுமானத்தினால் இந்த உலகம் ஒரே கர்த்தாவையுடையதென்று சாதிக்கக் கூடாமையின். கர்மமுதலியவற்றின் வயத்தனாயிருக்கின்றான் கர்த்தா என்பது அனுமானத்தினால் மேலே கூறப்பட்டமையின், பிரமம் அனுமானத்தினாற் பெறற்பாலதொன்றன்று. மேலும், சுருதியோடியைந்து நிற்றலின் அனுமானமும் பிரமத்தையுற்றுப் பிரமாணம் ஆகுக. எந்த இடத்திலே வாக்கியங்களுக்குத் தாற்பரியமுளதோ, அந்த இடத்திலே அவைகள் பிரமாணம்; பிரத்தியக்ஷாதி விஷயங்களுக்குப் போல, எல்லாப் பொருள்களுக்குமன்று.

வேதாந்தவாக்கியங்கொண்டு பிரமத்தைத் தாற்பரியத்தினால் நிர்ணயஞ் செய்தற்கியன்ற இலிங்கங்கள் எவை எனின், அவை உபக்கிரம உபசங்

காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்பனவாம் என்று கூறுகின்றனர்.

ஆகலின், ஈண்டு உபக்கிரமமுதலிய இலிங்கங்களினால் வேதாந்தவாக்கியங்கள் பிரமத்திலே தாற்பரியமுடையவென நிச்சயஞ் செய்யப்படுகின்றது. எது உபக்கிரமாதிகளினாலே தாற்பரிய நிர்ணயஞ் செய்யப்படுகின்றதோ, அதுவே வேதாந்தவாக்கியங்களின் சிரவணம் என்று கூறப்படுகின்றது.

அஜ்ஞாநப்ரபவம் து:கம் ஜ்ஞாநஸ்ய நிவர்த்தகம்। ஸர்வ வேதாந்தவாக்யாநாம் ச்ரவணம் தத்ப்ரவர்த்தகம்। ச்ரவணம் நாம வாக்யாநாம் வேதிகாநாம் பராத்மநி। உபக்ரமாதிபி: லிங்கைச்சிவே தாத்பர்யநிர்ணய:॥

"அஞ்ஞானத்தினாலாவது துக்கம், அந்த அஞ்ஞானத்தை ஒழிப்பது ஞானம், அந்த ஞானத்தை உதிப்பிப்பது சர்வவேதாந்தவாக்கிய சிரவணம், வேதாந்தவாக்கியசிரவணமானது உபக்கிரமாதிலிங்கங்களினாலே பரத்துக்குமேற்பரராகிய சிவபெருமானிலே தாற்பரியநிர்ணயஞ் செய்கின்றது" என்பது.

வேதாந்தவாக்கியங்களுக்குத் தாற்பரியநிர்ணயம் பிரமமாகிய சிவபெருமானிலேயாமென உணர்த்தும் உபக்கிரமோபசங்காரம் ஒரு இலிங்கம். ஈண்டு தாற்பரியம் என்பது அந்தச் சிவப் பிரமசொரூபோபாசன விஷயம் (பற்றியது); பின் வரும் சுருதிகள் முறையே உபக்கிரமோபசங்காரத்தை உணர்த்துவனவாயின:—

ஸதேவ ஸௌம்யேத³மக்³ர ஆஸீத் (சாந். சு. உ. க)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது" என்பது உபக்கிரமம்.

தத்வமஸி (சாந். சு. க. ரு)

"அது நீயாகின்றனை" என்பது உபசங்காரம்.

யாதா:ப்ரஸாதாந்நதிசாநந்தம் (மகா. அ. ரு)

"சிவப்பிரசாதத்தினாலே அவரது நிரதிசயானந்தரூபத்தை அநுபவிக்கின்றனன்" என்பது உபக்கிரமம்.

ய: பரஸ்ஸமஹேச்வர: (மகா. க0. அ)

"எவர் பரரோ அவர் மகேசுவரர்" என்பது உபசங்காரம். இங்ஙனம் (உபக்கிரமோபசங்காரங்களைப்) பிறவிடங்களினுங் காண்க.

தத்வமஸி।

"அது நீயாகின்றனை"

ஸவெ-ா செவ ரூ: (மகா. கரு. உ)

"எல்லாம் உருத்திரரே"

ஊஂபிகாபதய உமாபதயெ (மகா. கரு. ச)

"அம்பிகாபதியார்க்கு உமாபதியார்க்கு" (நமஸ்காரம்)

யொ செவ ரூஉ ஸஹவாநூஹவஸுவஃ (அதர்வசிரசு)

"எவர் உருத்திரரும் பகவானுமாயினரோ, அவர் பூமி அந்தர சுவர்க்கம்" என்பன அப்பியாசலிங்கம். வேத மொழிந்த மற்றெப்பிரமாணத்தினும் (பிரமம்) அறியப்படாதென்பது அபூர்வதை. பிரமஞானம் பலம். பிரபஞ்சத்தின் பிறப்பிருப்பிறப்பு முதலியன அர்த்தவாதம். உபபத்தியாவது (ஈக்ஷத்தியதிகரணமுதலியவற்றிற் போல உதாகரணத்தினுற் சர்வவேதாந்த வாக்கியங்கள் வியாபகமுடைமையின் எப்பிரமாணத்தையும்) விரோதிக்காவெனல்; இன்றேல் (சென்மாத்தியதிகரணத்திற் கூறியது போல ஜகத்காரணத்துக்கு வேண்டிய) சர்வஞ்ஞதாதி குணங்கள் அமைந்திருத்தல். இந்த இலிங்கங்கள் கொண்டே வேதாந்தவாக்கியங்களுக்குப் பிரமத்திலே தாற்பரியஞ் செயற்பாற்று. வேதாந்தங்கள் கேவலம் பிரமபரமாக இன்று; பின் அவை,

ஆ-த்மா வா அரெ உ்ரஷ்டவ்ய: (பிரு. ச. ச. ரு)

*"ஆன்மாவே காணற்பாற்று" என்றற்றொடக்கத்த சுருதிகள் (பிரம) தியானவிதிபரமாயும் இருப்பனவாக அறியப்படுகின்றன. இந்த இருதிறத்தனவாகவும் வேதாந்தவாக்கியங்கள் பேதமுறுவனவாம் என்று கூறினமை பொருந்தாது; ரூபத்தை விளக்கும் கண்ணினுலே திரவியம் அறியப்படுமாறு போல, விதிபரமாகிய வேதாந்தவாக்கியங்களினுலும் பிரமம் அறியப்படுதலின். வேதாந்தவாக்கியங்கள் உபயபரத்துவமாதல்பற்றி விரோதமில்லை.

(ஆக்ஷேபம்) சாப்தமேபிரமஞானம்; இந்தப் பிரமஞானம்பிரமத்தை உணர்த்துஞ் சுருதிகளினுற் பெறப்படுகின்றது. அங்ஙனமாயின், அந்த விதியினுற் பிரயோசனம் என்னை எனின்,

(உத்தரம்) பிராப்தமாயிருந்தாலும் (அஃதாவது பிரமஞானம் விதிக்கப்பட்டிருந்தாலும்) மந்திராதிகளிலே போல் விதித்தல்பற்றி விரோதமின்று; திரவியங்களையுந் தேவதைகளையும் அறிவிக்கும் மந்திரங்களை உரைக்குங்கால், திரவியமுதலியவற்றின் ஞானம் எய்துமேனும், பின்னர் அனுஷ்டானகாலத்திலே,

* கOக-ஆம் இலக்கம் பார்க்க.

ஃ௦ஞெ ஈநுஷூத்தீவ்யூ॥

“மந்திரங்கொண்டு (திரவியங்களையுந் தேவதைகளையும்) நினைக்கத்தக்கது” என்னும் பிரயோகவிதியானது மற்றோர் ஞானத்தை அனுஷ்டிக்க உணர்த்து கின்றது; அங்ஙனம் ஈண்டுமாம். உற்பத்திவிதி, விநியோகவிதி, அதிகாரவிதி என்பன இன்மையின், பிரயோகவிதியும் இல்லை எனச் சங்கிக்கத்தக்க தன்று. பிரகரணவசத்தால் உற்பத்திவிதியானது அத்தியாகாரத்தினாற் சித்திக்கும்போது, சமமுதலியவற்றைக் கற்பித்து ஆன்மாவைக் காண்க” என விநியோகவிதி எய்துகின்றது. பின்னும் இராத்திரிசத்திரநியாயங்கொண்டு,

ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாஸை: (சுவே. உ. கரு)

“சிவபிரானை அறிந்து பாசங்களனைத்தினின்றும் வீடுறுகின்றான்” என்றற்றொடக்கத்த அர்த்தவாதத்தினாற் பெறப்பட்ட முக்திகாம அதிகாரி கற்பிக்கற்பாலனாகின்றான். ஆகலின், முக்திகாமன் அடக்கமுதலியவுடையனாய்ப் பிரமஞானத்தைப் பெறுக என்பது பிரயோகவிதி.

(ஆக்ஷேபம்) பிரமஞானமானது விதியின்பாலதொன்றன்று.

ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: (பிரு. ச. ச. ரு; சு. ரு. சு)

“ஆன்மா காணற்பாற்று” என்றற்றொடக்கத்தவற்றிலே நித்தியமும், வியாபகமும், நிர்விகாரமும், விசுத்தமாயுமுள்ள பிரமமாகிய ஆன்மாவை விதிசம்பவமாகிய கர்மகாரகமாகக் (காணற்பாலதாம் ஓர் வஸ்துவாகக்) கொள்ளல்கூடாது; பிரமத்துக்கு உற்பத்தியேனும், பிராப்தியேனும், விகாரமேனும் எய்தாமையின். சுவதந்திரபலத்தின் பொருட்டுச் சத்துநியாயங் கொண்டு கர்மகாரகமாகிய இரண்டாம்வேற்றுமையைத் தவிர்த்துக் கருவிப் பொருளாகிய மூன்றும் வேற்றுமையாகத் திரித்து,

ஆத்மநா பஸ்யேத் (பிரு. அ. ச. சு)

“ஆன்மாவினாலே காண்க” என்று விதித்தலும் கூடாது; பேதமுறுதலான். (அக்கினியில் எறிந்தமையால்) சத்துக்களின் பஸ்மீகரரூபமாகிய வேறுபாடு நேர்வதால், அவைகளிற் சப்தத்தினாற் கரணத்துவம் இருப்பினும், பொருளினாற் கர்மத்துவம் உண்டு; இது ஆன்மாவில் எய்தாது. ஆகலின் வேதாந்தம் பிரமஞானவிதிபரம் அன்றாம் எனின்,

(உத்தரம்) அன்று; கர்மத்துக்குரிய பிறப்புமுதலாயின பரமான்மாவுக்கு இன்றேனும், கர்த்தாவிலிருந்து பெறப்படும் மோக்ஷத்தின்பொருட்டு விதித்தல் யுக்தமாமாதலின்.

(ஆக்ஷேபம்) பிராப்தமாயுள்ளதற்கு விதி என்பதொன்று எற்றுக் கெனின்,

(உத்தரம்) பிராப்தமாயுள்ள கர்மம் இடைவிட்டுச் செய்வதாயேனும், இடையீடின்றிச் செய்வதாயேனும் இருக்கின்றது. இவ்விரு பிரகாரமாகவும் நியமவிதி நேர்கின்றது.

(ஆக்ஷேபம்) அவ்வாறிருக்குங்கால், வேதாந்தங்கள் விதிபரமாயிருக்கும்போது பிரமபரமாயிருத்தல் ஒவ்வாது. ரூபத்தை அறியும் கண்ணினாலே திரவியம் (காணப்பட்டாற்) போல, விதிபரமாயுள்ள வேதாந்தங்களாற் பிரமஞ் சித்திப்பதென (முற்) கூறினமை யுக்தமன்று. சம்பந்தமுறுங்கால் ஒவ்வோர் வஸ்துவையும் நிரபேக்ஷமாய்க் குறிப்பதிற் கண்ணனது பிரமாணம்; சப்தம் (சுருதி) அவ்வாறின்று. ஆயின் யாண்டுத் தாற்பரியமுளதோ, ஆண்டுப் பிரமாணம். ஆகலின் வேதாந்த வாக்கியங்களுக்குப் பிரமத்தை உணர்த்துதலும் பிரமஞானத்தை விதிப்பதுமாகிய இரண்டும் எய்தாவாம் எனின்,

(உத்தரம்) அன்று;

ஸமிதோ யஜதி (தைத். சங். க. கூ. க)

"சமித்துக்களை ஓமிக்கின்றான்" என்றற்றொடக்கத்த வாக்கியங்கள் பஞ்சப்பிரயாஜத்தை விதித்தலும் அதின் அனுஷ்டானக்கிரமத்தை விதித்தலுமாகிய உபயபரமாக இருக்கக் காண்டலின். வேதாந்தவாக்கியங்களும் பிரமசொரூபத்தையும் மோக்ஷோபகாரகமாகிய பிரமஞானத்தையும் விதித்தல் யுக்தமே.

(ஆக்ஷேபம்) பிரமம் வேதவாக்கியத்தினாலேதான் அறியப்படுங்கால், அந்தப் பிரமஞானவிதி பிரயோசனமுடைத்தன்று; அந்த ஞானம் பூர்வஞானத்தினாற் சம்பவித்தலான் எனின்,

(உத்தரம்) அன்று; வாக்கியம் வாயிலாகப் பிரமம் பரோக்ஷமாக அறியப்படினும், பிரமசாக்ஷாத்காரத்தின் பொருட்டு ஞானவிதி பொருத்தமாதலின். பேதம் என்னை எனின், சப்தத்தினாலாய ஞானம் சாக்ஷாத்காரஞானத்துக்கு ஹேதுவாகாது; பின் அது உபாசனாரூபஞானமே. இங்ஙனம்,

த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் (கைவ. எ)

"பூதயோனியும், சமஸ்தசாக்ஷியுமாயுள்ளாரைத் தியானித்து முனியானவன் * இருளுக்கு மேலே போகின்றான்"

---

* "அண்டமாரிருளூடுகடந்தும்ப
ருண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே"
(சித்தத்தொகை, திருக்குறுந்தொகை, உ)

என்று ஸ்ரீவாகீசர் இச்சுருதிப்பொருள் தொனிக்குமாறு அருளினர்.

ஜ்ஞாநநிர்மதநாப்யாஸாத் பாசம் தஹதி பண்டித: (கைவ. கக)

"பண்டிதன் தியானங்கொண்டு கடைதலான் மாத்திரம் பாசத்தைத் தகிக்கின்றனன்" என்றற்றொடக்கத்த சுருதிகளினும்,

ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை: (சுவே. கஅ)

"சிவபெருமானை அறிந்து சமஸ்தபாசங்களினின்றும் வீடுறுகின்றனன்"

ஈசம் தம் ஜ்ஞாத்வா அம்ருதா பவந்தி (சுவே. ௩. எ)

"அவ்வீசுவரரை அறிந்து சிவசாமியராகின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதிகளினும்,

ச்ரோதவ்ய: ச்ருதிவாக்யேப்யோ மந்தவ்யச்சோபபத்திபி:|
மத்வா ச ஸததம் த்யேய ஏதே தர்சநஹேதவ:||

"சுருதி வாக்கியங்களினாலே * சிரவணஞ் செய்யத்தக்கது; பொருந்துமாற்றான் மனனஞ் செய்யத்தக்கது; சிந்தித்த பிற்பாடு இடையீடின்றித் தியானஞ் செய்யத்தக்கது; இவை (பிரம) தரிசனத்துக்கு ஏதுக்கள்" என்று ஸ்மிருதியினுஞ் சிரவணமனனத்தினால் எய்திய பேற்றைப் பிரியாதுள்ள நிதித்தியாசனமானது பிரமசாக்ஷாத்காரத்துக்கு நிமித்தம் எனக் கொள்ளப்படுகின்றது; இதுகொண்டு உபாசனரூபமாகிய ஞானமே மோக்ஷபலம் என விதிக்கப்படுகின்றது.

ஆத்மந்யேவாத்மாநம் பச்யேத் (பிரு. சு. ச. உ௩)

"ஆன்மாவிலே (சத்தியோடு கூடப் பரம) ஆன்மாவைக் காண்க (உபாசிக்க)"

சம்புராகாசமத்யே த்யேய: (அதர்வசிகை)

†"ஆகாயமத்தியிலே சம்புவானர் தியானிக்கற்பாலர்"

தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத (சாந். ௩. கச. க)

"இந்த உலகமானது அவரிலே தோன்றி நின்று ஒழிதலைக் கண்டு, ஒவ்வொருவரும் சாந்தமாக அவரை உபாசிக்க"

ப்ராசீநயோக்யோபாஸ்வ (தைத். க. சு. உ)

"பிராசீனயோக்கியனே, உபாசி" என்றற்றொடக்கத்த சுருதிகளினும், அங்ஙனமே

ப்ரஹ்மவிதாப்நோதி பரம் (தைத். உ. க)

---

*"கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே"
(திருப்பிரமபுரம், ஞான., உ)

†இது திருச்சிற்றம்பலத்தின் மேற்று.

"பிரமத்தை அறிபவன் நிரதிசயபிரமானந்தத்தை அடைகின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளினும் பிரமசொரூபமும், (அதன்) உபாசனையும், பயன் முதலாயினவும் உபதேசிக்கப்படுகின்றன. அங்ஙனமின்றேற் சத்திய முதலிய குணங்களுடையதாக விசேடிக்கப்பட்ட பிரமத்தோடு கூடச் சகல காமப்பேறும், அப்படிப்பட்ட பிரமசாக்ஷாத்காரபலமும் எங்ஙனம் சித்திக்கும்! ஆகலின்,

ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்"

ஆநந்தம் ப்ரஹ்ம (தைத். ங. கூ. உஅ)

"ஆனந்தம் பிரமம்"

ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம (தைத். க. சு. உ)

"ஆகாசசரீரம் பிரமம்"

ஸத்யாத்ம ப்ராணாராமம் மந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"சத்தியான்ம பிராணாராமம்; மன ஆனந்தம்"

ஶாந்தி ஸம்ருத்தம் அம்ருதம் (தைத். க. சு. உ)

"சாந்தி சமிர்த்தம் அமிர்தம்"

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்கலம் ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் (மகா. கஉ. க)

"இருதமும், சத்தியமும், பரப்பிரமமும், கிருஷ்ணபிங்களமும், ஊர்த்துவ வீரியமும், விரூபாக்ஷமும்" என்றற்றொடக்கத்த (சுருதிகள்) சத்திய ஞானானந்தரூபமும், சுவான்மாராமமும், சமஸ்த களங்கமில்லாமையும், சகல மங்களமுடைமையும், பராசத்தியை நீங்காதிருக்கும் சபள ரூபமுடைமையாற் கிருஷ்ணபிங்களமும், விரூபாக்ஷமும், திரிலோசனமுமுடையது பரப்பிரமம் என உபக்கிரமாதி தாற்பரியலிங்கங்களினாலே நிர்ணயிக்கப்படுகின்றது.

யோ வேத நிஹிதம் குஹாயாம் (தைத். உ. க.க)

"குகைக்கண்ணே அமர்ந்தவரை அறிபவன்"

ப்ராசீநயோக்யோபாஸ்வ (தைத். க. சு. உ)

"பிராசீன யோக்கியனே, உபாசி"

விஶ்வரூபாய வை நமோ (மகா. கஉ. க)

“விசுவரூபராயுள்ளார்க்கு நமஸ்காரம்” என்றற்றொடக்கத்த சுருதிகளிலே ஞானத்தினின்று வேறாகாத அவருடைய பிரமோபாசனை விதிக்கப்படுகின்றது.

ஸோ ऽஶ்நுதே ஸர்வாந் காமாந் (தைத். உ. க)

“சமஸ்த போகங்களையும் அடைகின்றான்” என்றற்றொடக்கத்த சுருதிகளிலே சகல போகப்பேறுகளும் பிரமானந்தத்தோடு உபாசகர்களுக்கு எய்துகின்றன எனக் கூறப்படுகின்றது. இங்ஙனம் நிஷ்காமமாகத் தான் (செய்யும்) தருமங்களையுடையவனாய், நிஷித்த காமிய கர்மங்கள் இல்லாதவனாய், சுருதி ஸ்மிருதிகளிலே கூறப்பட்ட கர்மானுஷ்டான சம்பன்னனாய், அதனாற் சித்தசுத்தியுடையனாய், சமமுதலியவற்றோடு அனுக்கிரகிக்கப்பட்ட பரமசிவபக்தியுடையனாயுள்ள முமுட்சுவானவன் சுருதிசாரவாயிலாகப் பரப்பிரமம் எனப்படுஞ் சிவபெருமானை அறிந்து அவரைத் தியானிக்க என்னும் ஞானோபாசனா விதி பொருத்தமே. ஈண்டுச் சிவபதத்தை விசேஷணமாகப் பிரயோகித்தமை அது விரூபாக்ஷமுடைய பரமப்பிரமத்தினது பரமவிசுத்திக்கும் மங்கலத்துக்கும் களஞ்சியமாயிருத்தலின் முமுட்சுக்களுடைய உபாசனையின் முக்கிய விஷயத்தை விளக்கும் பொருட்டாம். அங்ஙனம்,

ஶிவ ஏகோ த்⁴யேய꞉ ஶிவங்கர꞉ ஸர்வமந்யத் பரித்யஜ்ய।
(அதர்வசிகை)

“அனைத்தையும் விடுத்து இன்பஞ் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்” என அதர்வசிகையிலே சிவசப்தப்பொருளாம் வஸ்துவே தியானிக்கற்பாலது எனக் கூறப்படுகின்றது. இன்றேற் சம்சாரநிவிர்த்தி எங்ஙனம் எய்தும்! சமஸ்ததோஷகளங்கமின்றி நிரதிசயமங்களத்துக்கு ஆதாரமாயுள்ளதே சிவத்துவம். சிவஞானத்திலே மோக்ஷரூபபலம் கூறப்படுகின்றது.

யதா³ சர்மவ தா³காஶம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா꞉।
ததா³ ஶிவமவிஜ்ஞாய து³꞉க²ஸ்யாந்தோ ப⁴விஷ்யதி।
(சுவே. சூ. உ0)

*“எப்போது மனிதர் ஆகாயத்தைத் தோலாக உடுக்கின்றனரோ, அப்போதுதான் சிவபெருமானை அறியாது துக்கத்தின் முடிவு எய்துவதாகும்”

ஶிவ ஏகோ த்⁴யேய꞉ ஶிவங்கர꞉ ஸர்வமந்யத்பரித்யஜ்ய।
(அதர்வசிகை)

---

* பரசிவனுணர்ச்சியின்றிப்பல்லுயிர்த்தொகையுமென்றும்
விரவியதுயர்க்கீறெய்திவீடுபேறடைதுமென்ற
லுருவமில்விசும்பிற்றோலையுரித்துடுப்பதற்கொப்பென்றே
பெருமறையியம்பிற்றென்னிற்பின்னுமோர்சான்றுமுண்டோ.
(கந். உபதேசப்படலம், உ௫.)

"மற்றெல்லாம் விடுத்து இன்பஞ் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்" என முமுட்சுக்கள் சிவபெருமானை ஒழிந்து பிறர் ஒருவரை அறிதலும் தியானித்தலும் கூடாதெனத் தவிர்க்கின்றது. ஆகலின், சிவபெருமானாகிய பரப்பிரமமே மோக்ஷகாமிகளால் அறியற்பாலதுந் தியானிக்கற்பாலதுமாம். ஆகலின், தாற்பரியலிங்கசமந்வயத்தினால் வேதாந்தங்கள் பிரமபரமாகவும், அதனை உபாசிக்கும் விதிபரமாகவும் இருத்தல் பற்றி விரோதமில்லை. (ச)

## (ரு) ஈக்ஷத்யதிகரணம்.

கூறப்பட்ட பிரமலக்ஷணம் அதிவியாப்தியினாற் பிரதானத்துக்குஞ் செல்லும் என்பதை ஆக்ஷேபித்துச் சூத்திரகாரர் கூறுகின்றார்.

ஈக்ஷதேர்நாஶப்தம் (க. க. ரு)

(ரு) சங்கற்பித்தல் பற்றிச் (சத்து*) அசப்தம் அன்று.

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்

(சாந். சு. உ. க)

ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய।

(சாந். சு. உ. ங; தைத். உ. சு. க)

---

* ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு
(திருக்குறள், ங௩ஏ)

என்பதிற் கண்ட உள்ளது என்பது சாந்தோக்கியத்தினும் (சு. உ. க), அம்மந்திரத்தை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த இந்த (க. க. ரு) ஆஞ் சூத்திரத்தினுங் காணப்படும் சத்தின் மேற்று. இந்தச் சத்து என்பது செம்பொருள் என்பாராய்த் திருவள்ளுவதேவர் (ங௫அ) இல்

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

என்றருளினர். செம்பொருள் யாதென்பாராய், பரிமேலழகியார் "தோற்றக்கேடுகளின்மையின் நித்தியமாய் நோன்மையாற் றன்னை யொன்றும் கலத்தலின்மையிற் றூய்தாய்த் தானெல்லாவற்றையும் கலந்து நிற்கின்ற முதற் பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றி அதனைச் செம்பொருள் என்றார்" என்று பொருள் செய்தமையானும், அப்பொருள்படவே

அநாதிமத்யாந்தமஶேஷகாரணம்
அநந்யஸம்வேத்யமிதீஶ்வரம் ஶிவம்।
அதுலபரிபூர்ணானந்தம் ஶிவ ஜத்யுச்யதே விபு:।

வாயுசங்கிதை சிவபெருமானுக்கு அங்ஙனம் இலக்ஷணம் கூறலானும் செம்பொருள் என்றது சிவனார் மேற்று. மெய்கண்டார் "ஆதல்சத்தாமறிவறியா மெய் சிவன்றாளாம்" என்னுந் திருவெண்பாவால், சத்தென்றது சிவன்றாள் என்றார். பாடியத்திலே சத்து என்றது சிவத்துக்கும் சத்திக்கும் பெயராய்க்கொள்ள, ஈண்டு சிவன்றாள் என்றது மலைவாமேயெனின், ஆகாது; "காலுந்தலையுமறியார் கலதிகள் காலந்தச் சத்தியருளென்பர்" என்று ஸ்ரீமூலர் அருளினமையின்.

"சௌமிய! * சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது; ஏகமே அத்துவிதீயம்; அது அநேக பிரஜைகளை உண்டாக்குவதாய்ச் சங்கற்பித்தது" என்றற்றொடக்கத்த சாந்தோக்கிய சுருதியே விஷயம்.

ஈண்டு ஆதியில் உளதாய், பிரபஞ்சம் அனைத்துக்குங் காரணமாய்க் கேட்கப்படுஞ் சத்து என்னும் பொருள் பிரமமா? பிரதானமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரதானத்தையே ஜகத்காரணமாகக் கூறல் யுக்தம்;

அஜாமேகாம் லோஹித ஶுக்ல க்ருஷ்ணாம் பஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம் ஸரூபாம் (தைத்திரீய ஆரணியகம். கo. கஉ. உகூ)

"பிறவாததாயும், ஒன்றாயும், செம்மை வெண்மை கருமையுடையதாயும், ஒத்த பிரகாரமாய் அநேக பிரஜைகளைத் தோற்றுவிப்பதாயுமுள்ளது" என மற்றோர் சுருதி கேட்கப்படலான். ஈண்டுச் செம்மை முதலிய நிறங்களினாற் சுட்டப்படுகின்ற இராசச சாத்துவிக தாமசரூபத்தையுடைய சாங்கியப்பிரகிருதியே அநேக பிரஜைகளைப் பிறப்பிப்பதாகப் பெறப்படுகின்றது. இவ்வாக்கிய குணாநுசாரத்தினால் ஈண்டுச் சத்து என்னும் சப்தத்தின் பொருள் பிரபஞ்சகாரணமாகிய பிரதானமே. இராசச சாத்துவிககுண முடைமையின் அந்தப் பிரதானத்துக்கு ஜகத்காரண சித்தியின்பொருட்டுக் கிரியாசத்தி ஞானசத்தி சம்பந்தமும் உளதாகின்றது. அசேதனமாகிய பிரதானத்துக்கு ஜகத்காரண பரிணாமம் கூறல் யுக்தம், சேதனராகிய சிவபெருமானுக்கின்று; பரிணாமத்துக்குக் காரணத்தின் விகாரரூபவுண்மையின். இங்ஙனம் நியாயத்தினாலும் சுருதியினாலும் பிரதானமே உலககாரணமாகிய சத்தெனப்படுவதாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அசப்தமாயும், அநுமானிக்கற்பாலதாயுமுள்ள பிரதானமானது உலகத்துக்குக் காரணமாயும் சத்தென்னும் பதத்தினாற் குறிக்கப்படுவதாயுமுள்ள வஸ்துவன்று. பின், அது (சத்து) சேதனமாகிய பிரமமே;

ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய।

(சாந். சு. உ. ந)

"அது அநேகமாவேனாக என்று சங்கற்பித்தது" என்பதிற் சங்கற்பங் கேட்கப்படலான். அசேதனமாகிய பிரதானத்திற் சேதனகுணமாகிய சங்கற்பம் எய்தாது.

பஹ்வீம் ப்ரஜாம் ஜநயந்தீம் ஸரூபாம்।

(தைத்திரீய ஆரணியகம். கo. கஉ. உகூ)

* சத்து, ஏகம், அத்துவிதீயம் என்பவற்றின் பொருள் சைவத்திற் கொள்ளப் படுமாறு (கூஅ-ஆம், ககஅ—ககஉ-ஆம்) இலக்கங்களிற் பார்க்க.

"ஒத்த ரூபமாக அநேக பிரஜைகளைப் பிறப்பிப்பது" எனக் கேட்கப்படலான், சாங்கியப்பிரகிருதிக்கு ஜகத்காரணங் கூறல் அசங்கதம். (க. ச. அ)ஆம் சூத்திரத்திற் சிவபிரானைக் காரணமாகக்கொண்ட பிரகிருதியே அநேக பிரஜைகளைப் பிறப்பிக்கும் என நிரூபிப்பேம். இராசச சாத்துவிக ரூபமாகிய கிரியாசத்தி ஞானசத்தியின் சம்பந்தம் பிரதானத்துக்கென்று கூறின்மை அயுக்தம்; முக்குணமுடைய பிரகிருதியானது தாமசகுணத்தைத் தவிர்த்து இராசச சாத்துவிகங்களோடிசைதல் கூடாமையின். தாமசகுணமானது குறைந்துவிட, இராசச சாத்துவிக குணங்கள் மேற்படுமிடத்து, ஞானக்கிரியாசம்பந்தம் பிரதானத்துக்குளதெனக் கூறற்பாற்றன்று; சாத்துவிக இராசச தாமசகுணங்களின் சாமியாவஸ்தையுடையது பிரகிருதி என அங்கீகரிக்கப்படுதலின். சேதனராகிய சிவபெருமான் ஜகதாகாரமாகப் பரிணமமுற்று விகாரமுறுவர் என்றமை அஞ்ஞானவிலாசம்; நாமரூபவிபாகத்துக்கு அருகமல்லாத சூக்கும சிதசித்சத்தி விசிட்டராகிய சிவபெருமான் காரணர் என்றும், நாமரூபவிபாகத்துக்கு அருகமாகிய ஸ்தூல சிதசித்சத்திவிசிட்டராயிருக்கும்போது அவர் காரியமாதலும் உளவென்று கூறும் எமக்கு அப்பிரசங்க பயம் இல்லையாதலின்.

(ஆக்ஷேபம்) ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத்।
ஏகமேவாத்விதீயம் (சாந். சூ. உ. க)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது; ஏகமேவாத்துவிதீயம்" என்றற்றொடக்கத்தவற்றாற் சத்ரூபமாகிய வஸ்து நிர்விசேஷம் என உறுதியாய்ப் பெறப்படுகின்றது; காரண அவஸ்தையுடைய இந்தச் (சத்து) சூக்குமப்பிரபஞ்சவிசிட்டமுடையதாய் எங்ஙனங் கூறப்படுமெனின்,

(உத்தரம்) சத்தே என உறுதியாய் நிச்சயிக்கப்பட்ட இது விசேஷ குணங்களை நிஷேதிக்கவில்லை; பின் அது அசத்துக் காரணம் அன்றென்பதை நிஷேதித்தது;

அஸத்வா இதமக்ர ஆஸீத்।
ததோ வை ஸதஜாயத (தைத். உ. எ. க)

"அசத்தாகிய இதுவே முதற்கண் இருந்தது; அசத்திலிருந்தே சத்துப் பிறந்தது" என்ற சுருதியைக் கேட்டு அசத்தைக் காரணம் எனல் அஞ்ஞானமுதிர்ச்சியாதலின். மேலும்,

ஸௌம்யேதமக்ர ஆஸீத்।
ஏகமேவா த்விதீயம் (சாந். சூ. உ. க)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது; ஏகமே அத்துவிதீயம்" என்றவிடத்துப் பிரமத்துக்கு விசேஷணம் இல்லை என்பது எங்ஙனம்?

இச்சுருதியில், “ஆஸீத்” (இருந்தது) என்பது கிரியாவிசேஷம். “அக்கிரே” (முதற்கண்) என்பது காலவிசேஷம். “ஏகமேவ” (ஒன்றே) என்னும் நிச்சயம் வேறு அதிஷ்டாதா இல்லை என்பதின்மேற்று. அத்துவிதீயம் என்றமையான் ஜகதுபாதானம் கூறப்படுகின்றது. அதனாற் சர்வஞ்ஞதையும் அனந்தசத்தியும் (பிரமத்துக்கு) உண்டு; சர்வஞ்ஞத்துவமும் சர்வசத்தித்துவமுமின்றிப் பிரமத்துக்கு ஜகத்தின் உபயகாரணம் எவ்வாறாம்! இன்றேல், பிரகிருதிப்பிரத்தியயமாகிய சத்பதமானது ஒரே வஸ்துவின் மேலதாகக் கோடல் யுக்தம் அன்று; சத்பதமானது பிரகிருதியினாலும் பிரத்தியயத்தினாலும் இரு வஸ்துவைப் பிரதிபாதித்தலின். அங்ஙனம்,

ஶக்திஶ்ஶிவஶ்ச ஸச்ச்ப்தப்ரக்ருதி ப்ரத்யயோதிதௌ।
தௌ ப்ரஹ்மஸாமரஸ்யேந ஸமஸ்தஜகதாத்மகௌ॥

“சத்தியும் சிவனும் சத்து என்னும் பதத்தின் பிரகிருதியும் பிரத்தியயமுமாகக் கூறப்பட்டனர்; அவ்விருவரும் பிரமம்; (அவ்விருவரும்) சமரசத்தினாற் சமஸ்த உலகங்களுமாயினர்” என்றது அபியுக்தருக்தி. ஸ்தூல சூக்கும சிதசித் பிரபஞ்சரூபசத்திவிசிட்டராகிய சிவபெருமானே காரியகாரணரூபராய்ச் சத்து என்னும் பதப்பொருளாயுள்ளார் என்பது நிர்ணயம். (ரு).

பின்னருஞ் சூத்திரகாரர் ஆக்ஷேபித்துப் பரிகரிக்கின்றனர்.

கௌணஶ்சேந்நாத்மஶப்தாத் (க. க. கூ)

(கூ) கவுணமெனின், அன்று; ஆன்மசப்தவுண்மையின்.

(ஆக்ஷேபம்) சேதனத்தின் தருமமாகிய சங்கற்பமானது அசேதனமாகிய பிரதானத்துக்கு இல்லாமையின், சேதனராகிய சிவபெருமானே சத்தெனப்பட்டுக் காரணம் என்று பிரதிபாதிக்கப்பட்டார்; இது அசங்கதமே;

தத்தேஜ ஐக்ஷத (சாந். கூ. உ. உ)

தா ஆப ஐக்ஷந்த (சாந். கூ. உ. ச)

“அந்த அக்கினி சங்கற்பித்தது; அந்த அப்புக்கள் சங்கற்பித்தன” என்றற்றொடக்கத்தவற்றில் அசேதனத்தினும் சங்கற்பம் கவுணமாகக் கேட்கப்படுமாறு போல, பிரதானத்தினும் கவுணமாகச் செல்லுமாலோவெனின்,

(உத்தரம்) அன்று: ஆன்மசப்தம் சேதனத்தை உணர்த்துதலானும், “சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது” என்று தொடங்கி,

ஸ ஆத்மா தத்த்வமஸி (சாந். கூ. அ. எ)

“அது ஆன்மா; அது நீயாகின்றனை” என்று உபசங்காரத்திற் கேட்கப்படலானும், தேயு முதலியவற்றினும் சங்கற்பம் கவுணமாகக் கேட்கப்

படாது, அவற்றுக்கு ஆன்மாவாயுள்ள சிவபெருமானாகிய சேதனர் அந்தத் தேயுமுதலியவற்றுக்கு ஆன்மாவாக ஊடுருவித் தொடர்ந்திருத்தலானுமாம். (சா)

(ஆக்ஷேபம்) சங்கற்பத்தைக் கவுணமாகக்கொண்டாலும், அசேதனமாகிய பிரதானத்தைச் சத்ரூபம் என்றும், ஜகத்துக்குக் காரணம் என்றும் கூறல் அடாது; சேதனத்தை உணர்த்தும் அது (சத்து) ஆன்மசப்தங்கொண்டு நிரூபிக்கப்பட்டது. ஆன்மசப்தம் அசேதனமாகிய பிரதானத்தை உணர்த்தவேண்டாம்; பின் சேதனனாகிய ஆன்மாவை ஆன்மசப்தத்தினால் முக்கியமாய்க் கூறலாமே. ஆகலின், சேதனனாகிய ஆன்மாவே ஜகத்காரணமும் சத்துமாம் எனின்.

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

தன்னிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் (க. க. எ)

(எ) (சத்து ஆன்மா அன்று), *சத்தைப் பற்றினோற்கு மோக்ஷம் கூறப்படலான்.

சத்பதப்பொருளைப்பற்றிய தத்துவநிஷ்டனுக்கு மோக்ஷம் கூறப்படுகின்றது;

---

*(க. க. ரு) ஆந் சூத்திரக் குறிப்பிலே சாந்தோக்கியத்துச் சந்தானது சிவன் றிருவடி என்று பொருட்படுத்தப்பட்டமையின், சத்தாகிய இறைவர் திருவடியே பிறப்பறுப்பதும், தொண்டர் துயர்வெயிற்கு நிழலாவதும், முத்திக்கரை நண்ணுதற்கு வாய்ந்த நல்ல புணையாவதும், பிற பற்றுக்களையெல்லாம் அறுப்பதுமாயுள்ளதெனத் திராவிட சுருதிமுதலியன முன்வருமாறு உணர்த்துவனவாயின:—

நாலூர்மயானத்துநம்பான்றனடிநினைந்து
மாலூருஞ்சிந்தையர்பால்வந்தூராமறுபிறப்பே.
(திருநாலூர்த்திருமயானம், ஞாந, ச)

சுழலார்துயர்வெயிற்சுட்டிடும்போதடித்தொண்டர்துன்னு
நிழலாவனவென்றுநீங்காப்பிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகள்கழற்றுவகாலவனங்கடந்த
வழலாரொளியனகாண்கவையாறனடித்தலமே.
(திருவையாறு, நாவு, கக)

செல்லடியேநெருக்கித்திறம்பாதுசேர்ந்தவர்க்கேசித்திமுத்திசெய்வானை
(திருவலிவலம், சுந், உ)

பொழிகின்றதுன்பப்புயல்வெள்ளத்தினின்கழற்புணைகொண்
டிழிகின்றவன்பர்களேறினர்வான்யானிடர்க்கடல்வாய்ச்
சுழிசென்றுமாதர்த்திரைபொரக்காமச்சுறவெறிய
வழிகின்றனனுடையாயடியேனுன்னடைக்கலமே.
(அடைக்கலப்பத்து, ச)

முடிமன்ன ராகின்மூ வுலகம தாள்வ
ரடியன்ன ரின்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற தேவர்க ளீசன்
குடிமன்ன ராய்க்குற்ற மற்றுநின் றாரே.
(திருமந்திரம், திருவடிப்பேறு, கஉ)

தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே।
(சாந். சு. கச. உ)

"அவன் (புண்ணியபாவத்தினின்று) விடுபடாதவரையின், அவனுக்கு அங்கே தாமசமே; பின்னர் அவன் (பரம) சம்பன்னனுவான்" என்றது சுருதி. ஆகலின், பிரதானமும் ஆன்மாவும் சத்பதத்தினுற் சுட்டப்படவில்லை. பிரதானகாரணவாதிகளுக்கும் அப்பிரதானநிஷ்டனுக்கு மோக்ஷம் உண்டெனல் உடன்பாடன்று; அந்தப் பிரதானந் தவிர்க்கப்படவேண்டியதொன்றுகலின். ஆன்மநிஷ்டனுக்கு (மோக்ஷம்) இல்லை,

ஸிவ வஸ்கோ வேஷ்ய ஸ்ரீவஸ்கர ஸ்வவினோதேஸ்ரீவிதஞாத்வர்ஷஸ்வ்।

---

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு
மினையனபலசரக் கேற்றிவினையெனுந்
தொன்மீகாம னுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநக ரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீ னலமந்துதொடரப்
பிறப்பெனும் பெருங்கட லுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற் பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னு நெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படு காயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழா முன்னமலங்கன்
மதியுடனணிந்த பொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்த தெய்வநாயக
தொல்லெயிலுடுத்த தில்லைகாவல
வம்பலர்தும்பை யம்பலவாணநின்
னருளெனு நலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரை சேர்த்துமாசெய்யே.
(கோயினுன்மணிமாலை, கூ)

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.
(உத்தரவேதம். க0)

அப்பொற் பதியி னிடைவேளாண் குலத்தை விளக்க வவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ் சீர்த்திச் சிவனர் செய்ய கழல்பற்றி
யெப்பற் றினையு மறவெறிவா ரெல்லை தெரிய வொண்ணுதார்
மெய்ப்பத் தர்கள்பாற் பரிவுடையா ரெம்பி ராஞர் விறன்மிண்டர்.
(விறன்மிண்டநாயனர்புராணம், ச)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் முதலிய வைதிக சைவசமயஸ்தாபனசாரியர் முதலாயினேர் (க. க. எ-ஆம் பிரமசூத்திரங் கூறியவாறு) சத்தாகிய இறைவன்றிருவடியையே மோக்ஷத்துக்கு வாய்ந்த நந்நெறி எனப் பற்றினர் என்று பெறப்படுகின்றது. இந்தச் சத்தாம் திருவடியையே தேவாரமுதலிய பன்னிரு திருமுறைகளும் மற்றைய வைதிக சைவசாஸ்திரங்களும் யாண்டும் உயிராயும் பொருளாயுங் கொண்டு புகழ்ந்து துதிப்பனவாயின.

"பிற அனைத்தையும் விடுத்து இன்பஞ் செய்வோராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்" என்னுஞ் சுருதிகொண்டு அது நிஷேதிக்கப் படலான். (எ)

பின்னருஞ் சூத்திரகாரர் பிரதானத்தை நிராகரிக்கும்பொருட்டு மிகு ஸ்பஷ்டமாகக் காரணங் கூறுவாராயினர்.

ஹெயகூா வசநாசு (க. க. அ)

**(அ) (சத்தானது பிரதானம் அன்று); சத்துத் தவிர்க் கப்படல்வேண்டும் என வசன மின்மையானும்.**

பிரதானமே ஆண்டுக் கூறப்பட்டதாயின், சத்துக்கு ஹேயத்துவமே கூறப்பட்டிருக்கும்; தத்துவமசி என்றதினால் மோக்ஷகாரணமாகத் தியே யத்துவம் கூறப்படுகின்றது. ஆகலின், பிரதானம் அன்றெனல் யுக்தம். (அ)

மேலும் பிரதானபக்ஷத்தில் விரோதம் என்று சூத்திரகாரர் கூறுவா ராயினர்.

வ்ரதிஜ்ஞா விரொயாசு (க. க. கூ)

**(கூ) பிரதிஞ்ஞைக்கு விரோதமுறலான்.**

மேலுஞ் சத்பதப்பொருள் பிரதானம் அன்று; ஒன்றை அறிந்தால் எல்லாம் அறியப்படும் என்னும் பிரதிஞ்ஞைக்கு விரோதமுறலான். சத் பதப்பொருளாகிய தத்துவஞானத்தினால் இந்தச் சத்தின் காரியமாகிய சமஸ்தசேதன அசேதனப்பொருளின் ஞானமெய்துகின்றது.

யெநாஶ்ருதஂ ஶ்ருதஂ ஹவதி (சாங். சு. க. க)

"கேட்கப்படாதது எதினாற் கேட்கப்படுகின்றது" என்றற்றொடக்கத்தவற் றாற் பிரதிஞ்ஞை செய்யப்படுகின்றது. பிரதான காரணவாதத்தில் இது விரோதம்; சேதனத்துக்குப் பிரதானம் காரணமாதல் ஏலாமையின். (கூ)

(ஆக்ஷேபம்) பிரதானம் காரணமாக அறியப்படுங்கால், சடமாயும் விகாரமுறுதற்கு ஸ்தானமாயுமுள்ள இதன் காரியமெல்லாம் அறியப்படு கின்றன; மண்ணனது அறியப்படலான் காரியமாகிய கடமுதலியன அறியப்படுவது போல்.

ஆகலின், இங்கே யாது விரோதமென ஆக்ஷேபித்து, சூத்திரகாரர் உத்தரமிறுப்பாராயினர்.

ஸ்வாவ்யயாசு (க. க. கO)

**(கO) (ஆன்மா சத்திற்போய்) ஒடுங்குதலான்.**

மேலும், பிரதானஞ் சத்பதப்பொருள் அன்று;

ஸ்வபாந்தம் மே ஸோம்ய விஜாநீஹி யத்ரைதத் புருஷ: ஸ்வபிதி நாம ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி ஸ்வமபீதோ பவதி தஸ்மாதேநம் ஸ்வபிதீத்யாசக்ஷதே (சாந். சு. அ. க)

"சொப்பனத்தியல்பை என்னிடத்து அறிந்துகொள்; சௌமிய! ஓர் புருஷன் நித்திரை செய்யுங்கால் அவன் சத்தோடியைந்தவனாகின்றான்; அவன் தன் (பரம) ஆன்மாவை அடைகின்றான்; ஆகலின் அவன் நித்திரைசெய்கின்றான் என்பர்" எனச் சேதனனாகிய ஆன்மா சத்தோடியைந்து ஒடுங்குகின்றனன் என்று சுருதி யுண்மையின். ஒடுங்குவது என்பதின் பொருள் இலயம். அசேதனமாகிய பிரதானத்திற் சேதனன் இலயமுறுதல் பொருத்தமின்று. ஆகலின், பிரதானம் சத்தன்று. (கo)

சத்பதத்தினாற் சிவபெருமானே பிரதிபாதிக்கப்படுகின்றனர், பிரதானம் அன்றெனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

கதிஸாமாந்யாத் (க. க. கக)

(கக) கதி சமானமாதலின்.

இவ்வுபநிடதத்திற் சத்பதமானது சிவபெருமானுக்குச் செல்லுமாறு போல,

புருஷோ வை ருத்ர: *ஸந்மஹோ நமோ நம: |

(தைத்திரீய ஆரணியகம். கo. உச. சஉ)

"புருஷராவார் மகானாகிய சத்தெனப்படும் உருத்திரரே; நமஸ்காரம்! நமஸ்காரம்!" எனப் பிற சுருதியினும் (சத்தென்பது சிவபெருமானுக்குச்) சமமாய்ச் (செல்கின்றது). ஆகலின், சத்தென்னும் பதத்தினாற் சுட்டப்பட்டவர் சிவபெருமான் என்பது வெளிப்படை. (கக)

இந்தச் (சாந்தோக்கிய) உபநிடதத்திலே வெளிப்படையாகச் சத்பத வாச்சியமாகிய (பரம) ஆன்மாவிலிருந்து எல்லாம் உற்பத்தியாகின்றன வெனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ச்ருதத்வாச்ச (க. க. கஉ)

(கஉ) சுருதியிற் கூறப்படலானும்.

ஈண்டும்,

ஆத்மத: ப்ராண ஆத்மத ஆகாச: (சாந். எ. உசு. க)

*"(பரம) ஆன்மாவிலிருந்து பிராணன்; (பரம) ஆன்மாவிலிருந்து ஆகாயம்" என்று தொடங்கி,

* கoக-ஆம் இலக்கத்திற் பார்க்க.

ஆத்மந ஆகாஶ꞉ ஸம்பூத꞉ (தாங். எ. உகூ. க)

*"(பரம) ஆன்மாவிலிருந்தே இஃதெல்லாம் (உண்டாகின்றன)" என்று கேட்கப்படுகின்றது. ஆகலின், ஜகத்காரணமாய சத்பதப்பொருளாயுள்ளது பிரமமே, பிரதானம் அன்றெனச் சித்தித்தது. (கஉ)

## (கூ) ஆனந்தமயாதிகரணம்.

ஈண்டுச் சிவபெருமானுக்கு இலக்ஷணமாகக் கூறப்பட்டுச் சாஸ்திரமொன்றினால் அறியற்பாலதாகிய ஜகத்காரணம் (சாங்கிய) தாந்திரிகர் பிரதானத்தினுஞ் செல்லுமே என்னும் அதிவியாப்தியை ஆசங்கித்து, சேதனத்துவமுதலியன காரணமாதல்பற்றிப் பிரதானத்தில் அதிவியாப்தியாய்ச் செல்லாதவாறு நிரூபிக்கப்பட்டது. அசேதனமாகிய பிரதானத்திற் போலச் சேதனமாகிய ஆன்மாவினும் அதிவியாப்தியில்லையென்று கூறும் பொருட்டு, மற்றோர் அதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

ஆநந்தமயோ(அ)ப்யாஸாத் (க. க. கரு)

(கரு) (சிவபெருமான்) †ஆனந்தமயர்; அப்பியாசத்தினால்.

---

* சத்பதவாச்சியராய்ப் பரமான்மாவாகிய சிவபெருமான் சிருட்டியாதி கிருத்தியங்களுக்குக் காரணர் என்பது,

படைப்புந்நிலையிறுதிப்பயன்பருமையொடுநேர்மை
கிடைப்பல்கணமுடையான்கிறிபூதப்படையானூர்
குடைப்பாளையின்கமுகின்னெடுபுன்னைமலர்நாற்றம்
விடைத்தேவருதென்றன்றிகுவேணுபுரமதுவே.

(திருவேணுபுரம், ஞாந, உ)

என்னுந் திராவிடசுருதியினாலும் கூறப்படுகின்றது.

† ஆனந்தமிகுதியுடையார் சிவபெருமான் என்று தைத்திரீயத்திற் (உ. க) கூறப்பட்டவாறு, திராவிடசுருதியில்

"ஈறிலாப்பதங்களியாவையுங் கடந்த வின்பமே யென்னுடையன்பே"

(கோயிற்றிருப்பதிகம், க)

எனவும்,

"கருணைக்கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

(திருக்கோத்தும்பீ, கூ)

எனவும்,

"போற்றிநின்கருணைவெள்ளப்புதுமதுப்புவனநீர்தீ"

(திருச்சதகம், சுரு)

எனவும் சிவபெருமான் போற்றப்பட்டார்.

மாயாவாத சர்வசாரோபநிடதத்தில் அன்னமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களும் கூறி, அவை தனித்தனி இன்னது இன்னதென இலக்ஷணமுங் கூறி, இவ்வைங்கோசங்களுக்குமேல் ஆன்மா (நிர்க்குணப்பிரமம்) உண்டென்று உரைக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஐங்கோச அதீதத்திற் கூறப்பட்ட ஆன்மா "வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படவினாவிடை" யினும், இந்தப் பாடிய உபக்கிரமணிகையினும் நிரூபிக்கப்பட்டவாறு மூலப்பிரகிருதிப்பாற்பட்ட சீவான்மாவன்றிப் பரப்பிரகிருதிப்பாற்பட்ட பரப்பிரம சிவனன்றாம் என்றும், இந்தச் சிவதத்துவத்திலுள்ள சிவபிரானே தைத்திரீயத்தி

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத: (தைத். உ. க)

"(பரம) ஆன்மாவிலிருந்தே நிச்சயமாய் ஆகாயம் பிறந்தது" என்று தொடங்கி,

தஸ்மாத்வா ஏதஸ்மாத்விஜ்ஞாநமயாதந்யோऽந்தர ஆத்மாநந்தமய: ।
(தைத். உ. ரு)

"விஞ்ஞானமயத்துக்கு வேறுயுள்ள அந்தரான்மாவானவர் ஆனந்தமயர்" என்று கூறும் பிரமானந்தவல்லியில், அன்னமயாதி கோசத்துள் மறைந்த ஆனந்தமயராகிய (பரம) ஆன்மாவானவர் ஆகாயமுதலிய சகல பூதங்களுக்கும் காரணரென்று கூறப்படுகின்றது.

ஈண்டு ஆனந்தமய ஆன்மா என்றது ஆன்மாவா? சிவபெருமானா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷியின் ஆக்ஷேபம்) ஆன்மா என்பது பூருவபக்ஷம்; ஆன்மாவுக்குரிய குணமனைத்தும் ஈண்டுக் காணப்படுதலின். எங்ஙனமெனின்,

ப்ருதிவ்யா ஓஷதய: ஓஷதீப்யோऽந்நம் அந்நாத்புருஷ:।
(தைத். உ. க)

"பிருதிவியிலிருந்து ஒஷதிகளும், ஒஷதியிலிருந்து அன்னமும், அன்னத்திலிருந்து புருஷனும்" என்றற்றொடக்கத்தவற்றால், ஐந்து அவயவமுடைய சரீரமுதலிய நிரூபிக்கப்படுகின்றன. ஈண்டு அன்னமயம் என்றது சரீரம்; பிராணமயம் என்றது சரீரத்துள் இருக்கும் பிராணன்; மநோமயம் என்றது அதனுள் இருக்கும் மனம்; விஞ்ஞானமயம் என்றது அதனுள் இருக்கும் புத்தி; ஆனந்தமயம் என்றது இவை அனைத்துக்கும் ஆதாரமாகிய ஆன்மாவே. அன்னாதிகளுக்குச் சிரமுதலிய கற்பனை உபாசனையின் பொருட்டே. அன்னாதிகளைப் பிரமமாக உபாசனை செய்தலான் அவ்வவ் வன்னாதிகளின் நிறைவே பயனாகக் கூறப்பட்டது. சம்சாரசாகரதுக்கத்தில் அமிழ்ந்திக்கிடக்கும் ஆன்மா எங்ஙனம் ஆனந்தமயம் என்று கூறப்படுமெனின்,

---

னும் (உ. அ), வேதாந்தசூத்திரத்தினும் (க. க. கரு), சைவபாடியத்தினும் போற்றப்பட்ட அளவறுக்கொணா ஆனந்தமுடையவரென்று அறியற்பாற்று. ஆகலின், ஐங்கோசங்கள் மாயாவாத சர்வசாரம் சிதம்பரவாத தைத்திரீயம் என்னும் இருதிறத்து உபநிடதங்களினும் கூறப்படினும், அவை கருத்தினால் வேறுபடுவனவென்றும், வியாசர் (க. க. கச) ற் கூறியாங்கு, அன்னமயம், பிராணமயம், மநோமயம் என்பவற்றுக்கு மேலாகக் கூறப்பட்ட விஞ்ஞானமயன் (அறிவுமிக்குடைய) ஆன்மா என்றும், ஆனந்தமயர் (ஆனந்தமிக்குடைய) சிவபெருமான் என்றும் பெறப்படலான், ஈண்டு ஏகான்மவாதியார் சர்வசாரோபநிடதப்பிரகாரம் தைத்திரீயோபநிடதப்பொருளை இணக்கித் திரித்து ஆனந்தம் சிறிதும் இலனாய், சிவபிரானால் ஆனந்தம் பெறற்பாலனாய்க் கிடந்த ஆன்மாவில் முடிக்கப்போந்தமை முற்றுந் தவறும். அஃதன்றிச் சிவப்பிரமம் ஆனந்தகுணமுடையதாக வியாசர் சூத்திரஞ் செய்ய, ஏகான்மவாதாசாரியர் அதற்கு ஆனந்தகுணமில்லையென்று சூத்திரத்துக்கு வழுவர்த்தமுரைத்துச் சூத்திரம் ஒருபுறமும் தமது பாடியம் ஒருபுறமுமாக வேறுபட்டுப்போகச் செய்தார்.

(பூருவபக்ஷியின் உத்தரம்) அன்று; ஈண்டு ஆனந்தசப்தம் பரப்பிரம சிவபெருமான் மேற்று;

ஆநஂதொ ஬்ரஹ (தைத். ந. சு. க)

"ஆனந்த(குண)முடையது பிரமம்" என்று கூறப்படலான். மயசப்தம் விகாரப்பொருளை உணர்த்துதலின், சிவபெருமானுடைய காரியமாகிய சீவனே ஆனந்தமயம் என்று கூறப்படுகின்றது. நித்தியசிவத்துவத்தையுடைய சிவபெருமானை ஆனந்தமயமாக அங்கிகரிப்பின்,

அஂநமய ப்ராணமய மநோமய விஜ்ஞாநமய ஆநந்தமய மெ ஶுஂத்ஂதாஂஂ
(தைத். ஆரணியகம். க௦. சுசு. அச)

(பூருவபக்ஷியின் ஆக்ஷேபம்) "எனது அன்னமயம், பிராணமயம், மநோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் சுத்தியாகுக" என்னுஞ் சுத்திப் பிரார்த்தனை வியர்த்தமாகும். ஆகலின், இவ்வானந்தமய ஆன்மா சீவான்மாவே; சிவபெருமான் அன்றெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஆனந்தமயமாகிய ஆன்மா சிவபெருமானே; எங்ஙனம்? இந்த ஆனந்தம் நிரதிசயமுடையதாக அப்பியாசத்தினால் (மீட்டும் மீட்டும்) கூறப்படலான். எங்ஙனம் அப்பியசிக்கப்படுகின்றது?

ஸைஷாநஂதஸ்ய மீமாஂஸா ஭வதி (தைத். உ. அ)

"இது ஆனந்தத்தின் ஆராய்வு" என்று தொடங்கி, விசேடமனிதருடைய ஆனந்தமுதற் பிரஜாபதி ஆனந்தபரியந்தம் அவ்வவ்வானந்தத்துக்கு மேன்மேல் நூறு மடங்காக உயர்த்திக் கூறி,

ஸ ஏகொ ஬்ரஹ்மண ஆநஂதঃ (தைத். உ. அ)

"அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என்பதிறுதியாகப் பிரமானந்தம் நிரதிசயத்தினாலே தலைமை வாய்ந்ததெனை அப்பியசிக்கப்படுகின்றது. இந்த நிரதிசயானந்தக் களஞ்சியம் இந்தச் சம்சாரிக்கெய்தாது.

(சித்தாந்தியின் ஆக்ஷேபம்) நித்தியசுத்தராகிய சிவபெருமான் ஆனந்தமயராயின், சுத்தியின்பொருட்டு அவரைப் பிரார்த்தித்தல் என்னையெனின்?

(சித்தாந்தியின் உத்தரம்) உற்கிருஷ்ட பிரகாசமுடைய சந்திரனை மறைக்கிற முகில் நீங்கியவிடத்து அது தூய்தாய் விளங்குதல் போல, நித்திய சுத்தராகிய அவரைக் காணவொட்டாது மறைக்கும் திரோதானமலம் நீங்குதலே சுத்தியாம். ஆகலின், ஆனந்தமயர் சிவபெருமானே. (கரு)

(ஆக்ஷேபம்) ஆனந்தமே பிரமம் என்று கூறப்படுகின்றது; அதின் விகாரம் ஆனந்தமயம் "மய" என்னும் பிரத்தியயத்துக்கு விகாரார்த்த

முண்மையின். சிவபெருமான் ஆனந்தமயராயின், பிரமத்திருந்து அவ்வீசுவரர் வேறுவர் எனக் கொள்ளப்படுவர். அங்ஙனஞ் சிவபெருமான் விகாரரூபராயின், அவரும் அநித்தியராவர் என்னுஞ் ஆசங்கைக்கு,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

விகாரஶப்3தா3ந்நேதி சேந்ந ப்ராசுர்யாத் (க. க. கச)

(கச) விகாரசப்தமுண்மையின் ஆனந்தமயம் பிரமம் அன்றும் எனின், அன்று; அது *மிகுதிப்பொருட்டாகலின்.

(ஆக்ஷேபம்) அன்னமயமுதலியன அன்னமுதலியவற்றின் விகாரமாதல் போல, ஆனந்தமயமும் ஆனந்தத்தின் விகாரமாம்; விகாரமாயுள்ள கடமுதலியன மண்மயமாதல் போல. ஆகலின், சிவபெருமானுக்கு விகாரமின்மையின் ஆனந்தமயம் ஆன்மாவேயாம் எனின்,

(உத்தரம்) அன்று; ஈண்டு "மய" சப்தம் மிகுதிப்பொருண் மேற்றுமாகலின். அன்னமயம், பிராணமயம், மநோமயம் என்பவற்றிற்றுன் மய சப்தம் விகாரப்பொருளின்மேற்று; விஞ்ஞானமயம் என்றது விஞ்ஞான மிகுதியையுடைய ஆன்மாவின் மேற்று; ஆனந்தமயம் என்றது ஆனந்தமிகுதியையுடைய சிவபெருமான் மேற்று. (கச)

(ஆக்ஷேபம்) எப்பிரகாரத்தினாலேனும் மயசப்தம் விகாரப்பிரகரணத்திற் படிக்கப்படுதலின், விகாரார்த்தம் கோடலே உசிதம் என ஆசங்கிப்ப,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

தத்3தே4துவ்யபதே3ஶாச்ச (க. க. கரு)

(கரு) (அவர்) அதற்கு ஏதுவாகக் கூறப்படலானும்.

ஏஷ ஹ்யேவாநந்த3யாதி (தைத். உ. எ)

"இவர் நிச்சயமாக †ஆனந்தத்தை விளைவிக்கின்றனர்" என உயிர்களையுற்று ஆனந்தத்துக்குக் காரணராதலின் ஆனந்தமயர் என்று கூறப்படுகின்றார். தாம் மிக ஆனந்தமுடைமையினன்றோ, அவர் பிறர்க்கு ஆனந்தத்தை விளைக்கின்றனர். ஆகலின், சிவபெருமானே ஆனந்தமயர். (கரு)

---

*மய சப்தம் (ஆனந்த) மிகுதிப்பொருளிலே சென்றதென்று வியாசர் சூத்திரம் நேரே கூறியவிடத்தும், அதனைப் பொருட்படுத்தாது ஏகான்மவாதியார் அன்னமயாதிகளிற் போல் (ஆனந்த) மயமும் விகாரப்பொருளிற் சென்றதென்றுணரச் சூத்திரார்த்தம் வழுவுறச்செய்தனர்.

† தாம் ஆனந்தக்கடலாதலின் முக்தர்க்கு ஆனந்தம் விளைக்கின்றார் என்பது,

'கோல்மாகரியுரித்தவீரவெரிடுமேனக்கொம்பிளவாமை
சாலப்பூண்டுதண்மதியதுசூடியசங்கரனூர்தம்மைப்

(ஆக்ஷேபம்) ஆனந்தமிகுதியுடைய சிவபெருமான் ஆனந்தமயர் எனக் கூறப்படினும், இவர் பிரமத்தினின்று வேறானவர் எனப் பெறப்படுகின்றது;

ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா (தைத். உ. ரு)

"ஆதாரமாகிய பிரமம் புச்சம்" என்னுஞ் சுருதியிற் சிவபெருமான் தமக்குப் பிரமத்தை ஆதாரமாகக் கொண்டனர் எனப் பெறப்படலான். சிவபெருமானினின்று பிரமத்தை வேறாகக்கொள்ளின், சுவாதந்திரியமின்மையான் பிரமத்துக்கு ஜகத்காரணமாதன்முதலியன அசம்பவமாகும். ஆகலின், ஈண்டு ஆன்மா என்று கோடலே சமீசீனமெனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

மாந்த்ர வர்ணிகமேவ ச கீயதே (க. க. கசு)

(கசு) மந்திரத்திற் குறிக்கப்பட்ட (பிரமம் ஆனந்தமயமாகக்) கூறப்படலான்.

ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க)

---

போலத்தம்மடியார்க்குமின்பளிப்பவர்பொருகடல்விடமுண்ட
நீலத்தார்மிடற்றண்ணலார்சிரபுரந்தொழவினைநில்லாவே.
(திருச்சிரபுரம், ஞான, உ)

எரிநிறைந்தனையசெல்வன்கண்டாயின்னடியார்க்கின்பம்விளைப்பான்கண்டாய்
(திருமறைக்காடு, திருத்தாண்டகம், நாவு, ௫)

தன்னவடிவினவன்புடைத்தொண்டர்க்கமுதநம்பி
யின்னல்களைவனவின்னம்பரான்றனிணையடியே.
(திருவின்னம்பர், நாவு, க)

கல்லைப்பிசைந்துகனியாக்கித்தன்கருணை
வெள்ளத்தழுத்திவினைகடிந்தவேதியனை.
(திருவம்மானை, ௫)

அண்டமுதலாயினனந்தமிலாவானந்தம்
பண்டைப்பரிசேபழவடியார்க்கீந்தருளு
மண்டம்வியப்புறுமாபாடுதுங்காணம்மானாய்.
(திருவம்மானை, க)

தானந்தமில்லான்றனையடைந்தநாயேனை
யானந்தவெள்ளத்தழுந்துவித்தான்காணேடீ
யானந்தவெள்ளத்தழுத்துவித்ததிருவடிகள்
வானுந்துதேவர்கட்கோர்வான்பொருள்காண்சாழலோ.
(திருச்சாழல், க0)

பேச்சற்ற வின்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற வென்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாடந்து மன்னுமே.
(திருமந்திரம், திருவடிப்பேறு. சு)

என்னுந் திராவிட சுருதிகளானும் வலியுறுத்தப்படுகின்றது.

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என்னும் மந்திரத்திற் கூறப்பட்ட அந்தப் பிரமமே,

அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய꞉ (தைத். உ. ரு)

"மற்றோர் அந்தரான்மாவானவர் ஆனந்தமயர்" எனச் சுருதியில் ஆனந்தம் மிகுத்திருத்தலின் ஆனந்தமயம் என்று கூறப்படுகின்றது.

ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா (தைத். உ. ரு)

"ஆதாரமாகிய பிரமம் புச்சம்" என்னுஞ் சுருதியிலுள்ள பிரமம் என்னும் மொழி பிரணவத்தின் மேற்று. அப்பிரணவம் சிவபிரானது வாசகமாதலின், (அது) அவர்க்கு ஆதாரம்.* (கசு)

## (எ) இதரானுபபத்தியதிகரணம்.

---

பிரமமாகிய சிவபெருமானுக்குச் சமந்வயசித்தியினுல் வாய்ந்த ஜகத்காரணத்துவ முதலிய இலக்ஷணம் பிரதானம் ஆன்மா என்பவைகளுக்கு அதிவியாப்தியினுற் செல்லாதென்று தாபிக்கப்பட்டது. இதன்பின் சீவசமஷ்டிரூபராகிய இரண்ணியகருப்பருக்கு ஜகத்காரணத்துவ முதலிய கேட்கப்படுகின்றதே என ஆக்ஷேபிக்க,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

நேதரோऽநுபபத்தே꞉ (க. க. கஎ)

### (கஎ) பிறரும் அன்று; பொருத்தமின்மையின்.

யத꞉ ப்ரஸூதா ஜகத꞉ ப்ரஸூதீ தோயேந ஜீவாந்வ்யஸஸர்ஜ பூம்யாம்। யதோஷதீபி꞉ புருஷாந்பஶூꣳஶ்ச விவேஶ பூதாநி சராசராணி (தைத். ஆரணி. க0. க. க)

"பிரபஞ்சோற்பத்தி எங்கிருந்து உளதாயிற்றோ, அதுவே நீரினுற் பூமியிலே (உயிர்களுக்கு) சரீரத்தைத் தோற்றுவித்தது; அதுவே ஒஷதிகள் வாயிலாகப் புருஷர்களையும், மிருகங்களையும் சராசரப்பொருள்கள் அனைத்தையும் பிரவேசித்தது" என்னும் மகோபநிடதசுருதியே விஷயம்.

ஜகம் அனைத்தையுந் தோற்றுவித்தற்குக் காரணராகக் கேட்கப்படும் புருஷர் சிவபெருமானு? பிறரா? என்பது சந்தேகம்.

---

* இதற்குப் பின்னர்ப் போந்த வடமொழிவாக்கியங்கள் பாடியகாரர் கருத்துக்கு முற்றும் விரோதமுறலின், அவை ஒவ்வாவென்று மொழிபெயர்க்காது தவிர்க்கப்பட்டன. இங்ஙனம் சிவார்க்கமணிதீபிகையினும் இயைக்கப்பட்டிருத்தலின் வைதிக சைவர்கள் அவற்றையும் அறிந்து தவிர்த்துக்கொள்வாராக.

(பூருவபக்ஷம்) இரண்ணியகருப்பர் என்பது பூருவபக்ஷம். எங்ஙனம்? அவருக்கு (ஈண்டுக் கூறப்படும்) குறிகளுண்மையின்.

𑌏𑌕𑌾𑌰𑍍𑌣𑌵𑍇 𑌤𑍁 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍𑌮𑌕𑌃।
𑌭𑍋𑌗𑌿𑌶𑌯𑍍𑌯𑌾𑌗𑌤𑌃 𑌶𑍇𑌤𑍇 𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌗𑍍𑌰𑌾𑌸𑌬𑍃𑌂𑌹𑌿𑌤𑌃॥

"மூவுலகமும் ஒரே சமுத்திரமாய்விட, பிரமாவானவர் நாராயணரூபராய் மூவுலகங்களையும் உண்டு சர்ப்பசயனத்திற் சயனிக்கின்றனர்" என்னும் புராண வசனத்தினுற் பிரமாவுக்குச் சமுத்திர சயனம் பெறப்படுகின்றது.

𑌯𑌮𑌨𑍍𑌤𑌃 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑍇 𑌕𑌵𑌯𑍋 𑌵𑌯𑌨𑍍𑌤𑌿 (தைத். ஆரணி. க௦. க. க)

"எவரைப் பெரியோர் சமுத்திரத்தில் (உள்ளாகத்) தியானிக்கின்றனரோ" என்னுஞ் சுருதியினுல், அவர் இலக்கணம் அறியப்படுகின்றது.

𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌗𑌰𑍍𑌭𑍇 𑌅𑌨𑍍𑌤𑌃 (தைத். ஆரணி. க௦. க. க)

"பிரஜாபதி உள்ளே உள்ள கர்ப்பத்திற் சரிக்கின்றனர்" என (உபநிடத அநுவாகத்தின்) உபக்கிரமத்திலே, அவர் அனைத்தையும் பிரவேசித்தார் எனக் கூறப்படுகின்றது.

𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑍌 𑌧𑌾𑌤𑌾 𑌯𑌥𑌾𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍।
𑌦𑌿𑌵𑌞𑍍𑌚 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌞𑍍𑌚 (தைத். ஆரணி. க௦. க. கச)

"இரண்ணியகருப்பர் முன்போலச் சூரியனையும் சந்திரனையும் ஆகாயத்தையும் பூமியையுஞ் சிருட்டித்தார்" என உபசங்காரத்திற் கூறிய சுருதியும் அவரைக் காரணர் என்று கூறுகின்றது. கூறவே, உபக்கிரமோபசங்காரங் கொண்டு முடித்த இரண்ணியகருப்பருக்கே (அவ்வுபக்கிரமோபசங்காரத்துக்கு) இடையே போந்த சுருதிகள் கூறும் குணங்களுஞ் செல்லாநின்றன. மேலும், இரண்ணியகருப்பரைப் பிரதிபாதிக்கும் பிற இடங்களினும் உபசங்காரஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

𑌅𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌸𑌂𑌭𑍂𑌤𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭 𑌇𑌤𑍍𑌯𑌷𑍍𑌟𑍌।
(தைத். ஆரணி. க௦. க. ௫)

"நீரிலிருந்து இரண்ணியகருப்பர் பிறந்தார் என்பதிறுதியாயுள்ள எட்டு மந்திரங்களினும்" பிரஜாபதியே பிரதிபாதிக்கற்பாலர்;

𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌶𑍍𑌚𑌰𑌤𑌿 𑌗𑌰𑍍𑌭𑍇 𑌅𑌨𑍍𑌤𑌰𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑍋 𑌬𑌹𑍁𑌧𑌾 𑌵𑌿𑌜𑌾𑌯𑌤𑍇।
(தைத். ஆரணி. ௫. க௫. ச௦)

"உள்ளேயுள்ள கர்ப்பத்திலே பிரஜாபதி சரிக்கின்றனர்; பிறவாதவர் அநேகரூபமாய்ப் பிறந்திருக்கின்றார்" என்று காணப்படலானும்,

𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌃 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌗𑍍𑌰𑍇।
(தைத். சங். ச, க, அ, ௫)

"இரண்ணியகருப்பர் முதற்கண் இருந்தார்" என்னும் இடத்தினும்,

ப்ரஜாபதி ர்வை ஹிரண்யகர்ப:|

(தைத். சங். று. ரு. க. உ)

"பிரஜாபதியே இரண்ணியகருப்பர்" எனக் கேட்கப்படலானுமாம். ஆகலின், இரண்ணியகருப்பரே பிரபஞ்சோற்பத்திக்குக் காரண முதலியனவாகப் பிரதிபாதிக்கப்படுகின்றனர் எனின்,

(உத்தரம்) கூறுதும். ஈண்டுச் சிவபெருமானுக்கு வேருக மற்ரோர் இரண்ணியகருப்பர் கூறப்பட்டனரல்லர்; பிரபஞ்சகாரணமாதன் முதலிய சிவபெருமானுர் குணங்கள் இரண்ணியகருப்பர்க்குச் செல்லாமையின்.

யத: ப்ரஸூதா ஜகத: ப்ரஸூதி: (தைத். ஆரணி. கO. க. க)

"எதினின்று பிரபஞ்சோற்பத்தி உளதாயிற்று" என்று தொடங்கி, பிரபஞ்சகாரணராகிய சிவபெருமான்

அத:பரம் நாந்யதணீயஸம் ஹி பராத்பரம் யந்மஹதோ மஹாந்தம்|
யதேகமவ்யக்தமநந்தரூபம் விஶ்வம் புராணம் தமஸ: பரஸ்தாத்||

(தைத். ஆரணி. கO. க. க)

"மகத்துக்கு மகத்தாயும், பரத்துக்குப் பரமாயும், அணுவுக் கணுவாயும், ஒன்ருயும், வெளிப்படாததாயும், அனந்தரூபமாயும், விசுவமாயும், புராணமாயும், தமசுக்கு மேலாயுமுள்ளது" என்றற்ருெடக்கத்தனவாகப் போந்தவற்றில், அவர் சர்வோற்கிருஷ்டராகவும், பிரகிருதிக்கு மேலானவராகவும் அறியப்படுகின்றனர். ஆகலின், இந்த இலக்ஷணம் அண்டத்துட்பட்டிருக்கும் இரண்ணியகருப்பருக்கு (பிரமாவுக்கு)ச் செல்லாது. மேலும்,

ய ஏநம் விதுரம்ருதாஸ்தே பவந்தி|

(தைத். ஆரணி. கO. க. உ)

"எவர்கள் இவரை அறிகின்ருர்களோ, அவர்கள் *அமிர்தராகின்ருர்கள்" என்னுஞ் சுருதி அவரது ஞானத்தினுல் எய்தும் சிவத்துவம் முத்தியாம் என்று கூறுகின்றது. இது இரண்ணியகருப்பர்க்கெய்தாது; சிவபெருமானுக்கு முத்திஹேதுத்துவமே அசாதாரணலிங்கம்;

யதா சர்மவதாகாஶம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா:|
ததா ஶிவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி||

(சுவே. சு. உO)

"எப்போது மனிதர் ஆகாயத்தைத் தோலாக உடுக்கின்ருர்களோ, அப்போது தான் சிவபெருமானை அறியாது (அவர்) துக்கத்துக்கு முடிவு எய்

*உபரிடத உபக்கிரமணிகை சO-ஆம் இலக்கம் பார்க்க.

தம்" என்னும் சுருதி கேட்கப்படலான். உபக்கிரமோபசங்காரத்தினுல் (இரண்ணியகருப்பர்) சித்தித்தார் என்று கூறுவதிற் பயனில்லை. அவர்க்குப் பொருந்துமாறின்மையின், பிரஜாபதி தாதா என்னும் மொழிகள் இரண்ணியகருப்பரை விடுத்து, பிரஜைகளாகிய பசுக்களுக்குப் பதியும், உலகத்தைத் தாங்குபவருமாகிய சிவபெருமானையே பிரதிபாதிக்கின்றன. (தைத். சங். ச. க. அ. ச; தைத். ஆரணி. ௩. க௩. ச0) என்னும் ஈரிடத்தும் சிவபெருமானே பிரதிபாதிக்கற்பாலர்; எங்ஙனமெனின்,

ய ஈரெ சுஷ்ஹ திவஷ்ருதரஷ்ஷ: (தைத். சங்கி. ச. க. அ. ச)

"இருகாலும் நாற்காலுமாயுள்ளவற்றை எவர் ஆளுகின்றாரோ" எனவும்,

ஆதித்யவண0 தமஸ: வரஸ்தாத்

(தைத். ஆரணி. ௩. க௩. ச0)

"தமசுக்குமேலே ஆதித்தியவர்ணராயுள்ளார்" எனவும் சுருதிகள் அவருக்கு (முறையே) விசுவேசுவரத்துவத்தையும் விசுவாதீதத்தையும் இலிங்கமாகக் கூறலான். ஜகத்காரணமுதலியவற்றாற் பிரஜாபதிசப்தவாச்சியர் சிவபெருமானன்றி இரண்ணியகருப்பர் அன்று. (கஎ)

சிவபெருமானுக்கும் இரண்ணியகருப்பர்க்கும் பேதமின்மையின், பிரபஞ்சகாரணம் இரண்ணியகருப்பர்க்கு ஆகலாம் என, அதனை ஆசங்கித்து

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

பேதவ்யபதேசாச்ச (க. க. கஅ)

(கஅ) பேதங் கூறப்படலானும்.

யோதேவாநாம் ப்ரதமம் புரஸ்தாத்விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: ஹிரண்யகர்ப்பம் பஶ்யதஜாயமாநம்।

(தைத். ஆரணி. க0. கஉ. உஅ)

"விசுவாதீதரும் மகர்ஷியுமாகிய உருத்திரர் தேவர்களுள்ளே முற்பட்டவராகிய இரண்ணியகருப்பர் முதற்கட் பிறக்கக் கண்டனர்" என்னும் இம்மகோபநிடதத்திலே, சிவபெருமானுக்கும் இரண்ணியகருப்பர்க்கும் (முறையே) காரணகாரியத்தினுற் பேதமாம் முறைமை கூறப்படுகின்றது. ஆகலின், இரண்ணியகருப்பர்முதலிய பிரபஞ்சம் அனைத்துக்கும் காரணர் சிவபெருமான் என்று சித்தமாயிற்று. (கஅ)

பின்னரும் சூத்திரகாரர் ஆசங்கித்துக் கூறுகின்றனர்.

காமாச்ச நாநுமாநாபேக்ஷா (க. க. கக)

(கக) சங்கற்பமுண்மையானும் அனுமானபேக்ஷையில்லை.

ப்ரஜாபதி ரகாமயத ப்ரஜாஸ்ருஜேய|

(தைத். சங். ௩. க. க. க)

"யான் பிரஜைகளைச் சிருஷ்டிசெய்வேனாக எனப் பிரஜாபதி காமுற்றனர்" என யாண்டும் சுருதிகளிலே உலகசிருஷ்டிவிஷயத்தில் இரண்ணியகருப்பருடைய சங்கற்பம் கூறப்படுகின்றது. அங்ஙனமாயினும், அவர் உலகத்துக்குக் காரணமாதலையுற்று அனுமானபேக்ஷை யுக்தியபேக்ஷை இல்லை; அவரது காமம் (சங்கற்பம்) அவாந்தர சிருட்டி விஷயம் பற்றினமையின். வேதாந்த சூத்திரத்து (உ. ச. கள) லே இந்த இரண்ணியகருப்பரது அவாந்தரசிருஷ்டியும் சிவபெருமானுக்கே உரித்தென்று (சூத்திரகாரர்) கூறுவர். (கக)

அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணி

(சாந். சு. ௩. உ)

"இந்தச் சீவனாகிய ஆன்மாவோடு பிரவேசித்து நாமரூபத்தைப் பேதமுறுத்துவேன்" என இரண்ணியகருப்பரூபமாகப் பிரபஞ்சத்துள்ளே பிரவேசித்த சிவபெருமானே நாமரூபங்களுக்குக் கர்த்தாவாம் எனக் கேட்கப்படுகின்றமையின், இவ்விருவர்க்கும் அபேதமே அங்கீகரிக்கற்பாற்றெனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

அஸ்மிந்நஸ்ய ச தத்யோகம் ஸாஸ்தி (க. க. உ0)

(உ0) ஈண்டு இவருக்கும் அவர் சம்பந்தம் கூறுகின்றது.

ப்ரஹ்மாதிபதி ப்ரஹ்மணோதிபதிः|

(தைத். ஆரணி. க0. உக. ௩கூ)

"பிரமாவுக்கு அதிபதியாகிய பிரமமே அதிபதி" என்னும் இவ்வுபநிடதந்திரத்து மந்திரபாகம் சிவபெருமானுக்கு இந்த இரண்ணியகருப்பர் அதீநராய்ச் சேஷத்துவசம்பந்தமுடையரென்று கூறுகின்றது. ஆகலின், சிவபெருமானே உலககாரணர். இவர்க்கு இரண்ணியகருப்பர் சேஷபூதர் என்று சித்தித்தது. (உ0)

## (அ) அந்தராதிகரணம்.

---

மேலை அதிகரணநியாயங்களினாற் சர்வஞ்ஞரும், நித்தியதிருப்தரும், அநாதிபோதமுடையரும், சுவதந்திரரும், அலுப்தசத்தியினரும், அனந்தசத்தியினரும், சர்வப்பிரபஞ்சோபயகாரணரும், சமஸ்த உபநிடத தந்தி

ரங்களினுற் சமந்வயமாகப் பிரதிபாதிக்கப்படுபவரும், சுவப்பிரகாசமாகிய சமஸ்தப் பிரபஞ்ச விசிட்டாத்துவிதீய சுபாவமுடையரும், சச்சிதானந்த சொரூபரும், சம்சாரமாகிய பாசத்தைச் சேதிக்கும் காரணரும், சித்து அசித்து என்னும் இரண்டுக்கும் வேருனவருமாகிய சிவபெருமானே பரப் பிரமம் என்று சித்தித்தது. சாதகர்களுடைய சம்சாரத்துக்கு ஔஷதமாயும், மனசைச் சமாதானஞ் செய்ய யோக்கியமுடையதாயுமுள்ள அவருடைய வடிவமொன்றை உணர்த்துமாறெழுந்தது இவ்வதிகரணம்.

𑌅𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑍋𑌪𑌦𑍇𑌶𑌾𑌤𑍍 (க. க. உக)

**(உக) உள்ளேயுள்ளார் (சிவபெருமான்); அவர் குணங்கள் கூறப்படலான்.**

𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌶𑍍𑌮𑌶𑍍𑌰𑍁 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌕𑍇𑌶 𑌆𑌪𑍍𑌰𑌣𑌖𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌃 𑌤𑌸𑍍𑌯 𑌯𑌥𑌾 𑌕𑌪𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌮𑍇𑌵𑌮𑌕𑍍𑌷𑌿𑌣𑍀 (சாங். க. சு. சு, எ)

"பொற்றுடியோடும், பொற்கேசத்தோடும், *நகந் தொடுத்து முழுமையும்

---

*சாந்தோக்கியத்திலே (க. சு. சு) கேசாதி பாதாந்தம் பொன்வண்ணராகக் கூறப்பட்டவர் விஷ்ணுவா? சிவபெருமானு? எனின்,

கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன்.
(முதலாயிரம், நாச்சியார்திருமொழி. க. சு)

கடல்வண்ணன்கண்ணன்
(திருவாய்மொழி, ரு. சு. க0)

என்றற்றொடக்கத்தனவாக நாலாயிரப்பிரபந்தத்தினும், அங்ஙனம்

பெருங்கடல்வண்ணனும்பிரமனுமோரா
வருமையரடிநிழல்பரவிநின்றேத்துமன்புடையடியவர்க்கணியருமாவர்.
(திருவிடைச்சுரம், ஞான, க0)

கரியவனுன்முகன்காணவொண்ணுத்
தெரியவன்வளநகர்திருவல்லமே.
(திருவல்லம், ஞான, க)

என்றற்றொடக்கத்தனவாகத் திராவிட சுருதிகளினுங் கூறப்பட்டவாறு, நாராயணர் கருமைத் திருமேனியுடையரேயாக, பிரமாவின் முகத்திற் றேன்றிய (துரிய ருத்திராகாத) ஸ்தாணுருத்திரரைப் புகழ்ந்தவிடத்தும்

பொன்றிகழும்மேனிப்புரிசடையம்புண்ணியனும்
(இயற்பா, முதற்றிருவந்தாதி, க. கஅ)

என்று நாலாயிரப்பிரபந்தத்தினும்,

செம்பொன்னுற்செய்தழகுபெய்தாற்போலுஞ்செஞ்சடையெம்பெருமானேதெய்வம்.
(திருவதிகைவீரட்டானம், அடையாளத்திருத்தாண்டகம், நாவு, க)

அரும்பித்தசெஞ்ஞாயிறேய்க்கும்மடி.
(திருவதிகைவீரட்டானம், திருவடித்திருத்தாண்டகம், நாவு, ச)

பொன்னேர்தருமேனியனேபுரியு
மின்னேர்சடையாயுவிரைக்காவிரியி

பொன்வண்ணமாயும் (கபி எனப்படும்) சூரியனால் விகசிதமாய இரு †புண்டரீகம் போலும் கண்களுமுடையர் இந்த ஞாயிறு மத்தியிலுள்ள இரண்ணிய

னன்னீர்வயனாகேச்சுரநகரின்
மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே.
(திருநாகேச்சுரம், ஞான, க)

பசும்பொன்னிறத்தானைப்பானீற்றானை.
(திருவாலவாய், திருத்தாண்டகம், நாவு, உ)

என்றற்றொடக்கத்தனவாகத் திராவிடசுருதிகளிற் கூறப்படலானும்,

நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய பதயே நம:।

"பொற்புயமுடையார்க்கு, பொன்வண்ணருக்கு, பொன்வடிவினர்க்கு நமஸ்காரம்" என்று தைத்திரீய ஆரணியகம் (௧0. உஉ. ௪0) கூறலானும் பொன்வண்ணமுடையார் சிவபெருமானே என நேரே சுருதிகளாற் பெறப்படுவதேயாக, கரிய திருமேனியுடைய நாராயணர்க் கேற்றுதற்கு இரண்ணியசப்தம் நேரே பொன்னிறமெனப் பொருட்படுத்த இடங்கொடாமையின்,

ஹிரண்ய ஶப்தோ ரமணீயத்வபர:।

"இரண்ணியசப்தம் விரும்பற்பாலதின்மேற்று" என்று இராமாநுஜ வைணவ சூத்திரபாஷ்யத்துக்குப் பிரகாசமாய்ப் போந்த சுருதிப் பிரகாசிகையுடையார் பொருட்படுத்தினமை ஒவ்வாது கவுணார்த்தத்தின் மேலாயிற்று. ஆகலின், சுருதிப்பொருள் பொன்வண்ணராகிய சிவபெருமானுக்கே வாய்ப்புடைத்தாகி கருநிறத்தினராகிய நாராயணர்க்கு வாய்ப்பிலதாயிற்று.

†சாந்தோக்கியத்திற் (க. ௬. எ) கண்ட புண்டரீகம் செந்தாமரையின் மேற்றெனப் பொருட்படுத்தினமை பூருவமீமாஞ்சை (௩. ௩. ௩—அ) ஆஞ் சூத்திர (உ-ஆம்) அதிகரணத்திற் கூறப்பட்ட நியாயங்கொண்டாம். சிவபெருமான் திருக்கண்கள் செந்தாமரைபோற் செந்நிறமுடைமையானன்றோ திராவிட சுருதிகள்

மூளைஞாயிறன்னமலர்க்கண்கண்மூன்றும்.
(திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம், நாவு, ௬)

என்றும்,

செவ்வணமாந்திருநயனம்விழிசெய்தசிவமூர்த்தி
(திருவாரூர், சுந். உ)

என்றுங் கூறின.

"செக்கர்வானச்சடையோன்சேவடிக்கீழந்நாளின்
மெய்க்கணிட்டுச்சக்கரநிபெற்றவிளையாட்டேபோல்"

என்று பழைய திருவாய்மொழிப் பிரதியினும்,

பங்கயமாயிரம்பூவினிலோர்பூக்குறையத்
தங்கணிடந்தரன்சேவடிமேற்சாத்தலுமே
சங்கரனெம்பிரான்சக்கரமாற்கருளியவா
றெங்கும்பரவிநாந்தோணேக்கமாடாமோ.

என்று திருவாசகத்தினுங் கண்டவாறு, நாராயணர் ஜலந்தராசூரன் உடலைப் பிளந்த சக்கரத்தைப் பெறவேண்டிக் காஞ்சீபுரத்திற் சிவபெருமானை நாடோறும் ஆயிரந் தாமரைகளால் அர்ச்சித்துவந்தபோது, ஓர் நாட் கமலப்புஷ்பம் ஒன்று குறைய, தமது கண்ணை இடந்து பூசித்துச் சிவபெருமானிடத்துச் சக்கரப்படை பெற்று,

ஹரிஸ்தே ஸாஹஸ்ரம் கமலபலிமாதாய பதயோ:
யதேகோநே தஸ்மிந் நிஜமுதஹரந் நேத்ரகமலம்।

புருஷர்" என்னுஞ் சாந்தோக்கிய சுருதியே ஈண்டு ஆராயற்பாலதாகிய விஷயம்.

ஞாயிறுள்ளே உள்ள இந்தப் பொன்மயபுருஷர் சிவபெருமானா? இன்றேல் வேறு தேவதா விசேஷமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அனைத்துக்கும் ஆதாரராயும், சர்வவியாபகருமாயுள்ள சிவபெருமானுக்குச் சூரியனுக்குள்ளாதலும், இரண்ணியரூபராதலும் இல்லை. அவர் சுவேச்சையாகக்கொண்ட வடிவமேயாயின், அவருக்கு நியதமாய் முக்கட்டிருமேனி இருக்கவேண்டும். அவ்வடிவம் ஈண்டு இல்லையாயிற்று. "புண்டரீகமேவ மக்ஷிணீ" என்பதினாற் புண்டரீகக் கண்கள் இரண்டே கேட்கப்படுகின்றன. அங்ஙனம் அவர் சுவேச்சையாய் (வடிவங்) கொண்டாலும், தேகமானது சம்சாரிக்குப் போலச் சிவபெருமானுக்குத் துன்பத்தை விளைக்கும். சுவேச்சா சம்பந்தமாய்க்கொள்ளினும், அக்கினிக்குச் சுடுகை சுபாவமன்றோ; ஆகலின், சிவபெருமானுக்குச் சரீரசம்பந்தம் (கூறல்) ஒவ்வாது. அதுபற்றி இவர் மற்றோர் தேவதாவிசேஷமே, சிவபெருமான் அன்றும் எனின்,

(சித்தாந்தம்) அவர் சிவபெருமானே; எதனால்? அவர் குணங்கள் கூறப்படலான்.

---

"தமக்குத் தாமரையை நிகர்த்த கண்வேண்டுமென்று வரம் வேண்டி அதனையும் பெற்றுப் பதுமாக்ஷன் (தாமரைக்கண்ணன்) என்று பிரசித்திபெற்றனர்" என்று புராணங் காரணங் கூறலானும், "அரவிந்தலோசனன்," "புண்டரீகங்கள் போலுங் கண்ணன்" என்று திருவாய்மொழியினும் (கூ. எ. க0; கூ. அ. எ) பிறவிடங்களினுங் கூறப்படலானும், சாந்தோக்கிய சுருதியிற் கண்ட தாமரைக் கண்கள் சிவபெருமான் மேலனவாமென்க.

ஒவஸ்ய ஸவிதுஃமத்யெ யொ ஹமெர்ா நொ யியஃ க்ரொகு|
ஸமொதமாத்கம் வரெண்யம் யிஹீதகஞம் தமஃ |

"தேவ (சிவ) சூரியனுக்கு மத்தியிலேயுள்ள எந்தப் பர்க்கர் எங்கள் அறிவிச்சை கிரியைகளைச் செலுத்துகின்றாரோ, அம்முக்கியப்பொருளாயினாரைத் தியானிக்கின்றேம்" என்று யாஞ்ஞவற்கியர் கூறலானும்,

ஹரஃ ஷுரஹரொ ஹமர்ஃ |

என்று வடமொழிநிகண்டு கூறலானும்,

யஷெஷ ஈமுஜொ ஹமர்ாவெஷா ஸ்ரஹவாதிநஃ |

"இந்த உருத்திரர் பர்க்கர் எனப்படுவர் எனப் பிரமவாதிகள் கூறுவர்" என்று மைத்திராயணோபநிடதம் (கூ. எ) கூறலானும்,

விரிந்தபல்கதிருடையதோர் வெய்யவனடுவட்
பொருந்திவைகியகண்ணுதற்பரமனேபோன்றான்.
(கந், அவைபுகுபடலம், ௬௯)

மாறிலாவருக்கனுப்பண்வைகியபரமனேபோ
லாறுமாமுகத்துவள்ளலலங்குளைப்புரவிமான்றேரேறினான்.
(கந். சூரபன்மன்வதைப்படலம், சஎ)

என்று கந்தபுராணங் கூறலானும்,சூரியனுக்கு மத்தியிலுள்ளார் சிவபெருமானேயாம்.

𑌸 𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑌃। 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌕𑌾𑌮𑌾𑌨𑌾𑌂।
𑌤𑌸𑍍𑌯𑍋𑌦𑌿𑌤𑌿𑌨𑌾𑌮 𑌸 𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌾𑌪𑍍𑌮𑌭𑍍𑌯 𑌉𑌦𑌿𑌤𑌃।
(சாந். க. சு. எ)

“அவர் உலகம் அனைத்துக்கும் இச்சைகள் அனைத்துக்கும் நாயகர்; அவருக்கு உத் நாமம் (போந்தமை) அவர் பாவம் அனைத்துக்கும் மேலே உதித்தமையின்” என்றற்றொடக்கத்த சுருதிகளாற் சமஸ்த லோகங்களுக்கும் இச்சைகளுக்கும் நாயகத்துவமும், சர்வபாவமிலாமையும், பிறவும் சிவ சம்பந்தமாகிய குணங்களாம் என்று பிரதிபாதிக்கப்பட்டன;

𑌏𑌕𑍋 𑌹𑌿 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌯 𑌤𑌸𑍍𑌥𑍁𑌰𑍍𑌯 𑌇𑌮𑌾𑌁𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌨𑍀
𑌶𑌤 𑌈𑌶𑌨𑍀𑌭𑌿𑌃 (சுவே. ங. உ)
𑌅𑌜𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌸𑌰𑍍𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑍍𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌮𑍍 ।
𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌵𑌂 𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌶𑍈𑌃 (சுவே. உ. கரு)
𑌏𑌕𑍋 𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌯𑍋 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 ।
(கட. ரு. கங; சுவே. சு. கங)

“உருத்திரர் ஒருவரே; அவர்கள் இரண்டாவதின் பொருட்டிருந்திலர்; இவர் தமது ஆளுஞ் சத்திகளினாலே இவ்வுலகம் அனைத்தையும் ஆளுகின்றனர்”

“பிறவாதவரும், நித்தியரும், தத்துவமனைத்தானுந் தொடக்குண்ணாத தூயருமாகிய சிவபெருமானை அறிந்து சர்வபாசங்களினின்றும் வீடுறுகின்றான்”

“ஒருவர் அநேகருக்கு இச்சைகளை நியதஞ் செய்கின்றனர்”

என்றற்றொடக்கத்தனவாகக் கேட்கப்படலான். சர்வாதாரரும், சர்வ வியாபகருமாயினார்க்கு ஞாயிறுள்ளேயாதல் பொருந்தாதென்றமை விரோதமின்று. சர்வாதாரரும் சர்வவியாபகருமாயுள்ள சிவபெருமான் அன்பர்களை அநுக்கிரகிக்கும் பொருட்டு ஓர் பொன்வடிவங்கொண்டு ஞாயிறு மண்டலத்துள்ளார். சரீரமுடைமையின், எம்மனோர்க்குப் போலச் சிவ பெருமானுக்குச் சம்சாரதோஷத் தொடக்கில்லை. அவருக்குச் சரீரசம்பந்தமுளதாதலையும், சமஸ்தபாவமிலாமையையும் பகவதியாகிய சுருதியே பிரதிபாதிக்கின்றது. யாம் சுருதிப் பிரமாணத்தையே சரணகக் கொண்டேம்; யுக்தியைப் பெரிதும் மதிப்பேமல்லேம். தீயும் தன்னோடு சம்பந்தமுற்ற அதிபலமுடைப் பொருள்களைத் தகிக்கமாட்டாது. திரிநேத்திரராகிய சிவபெருமான் (கபி எனப்படும்) சூரியனால் விகசிதமாய இரு புண்டரீகம்போலும் கண்களை உடையர் எனக் கூறினமை செந்தாமரையை நிகர்த்த நிறத்தைக் காட்டுவதற்காகவன்றி மூன்றாவது கண் இல்லை என்று காட்

டப்போந்ததன்று; முப்புதல்வர்களையுடையராம் பிராமணர் ஒருவரை யுற்று, (அவர்) இரு புதல்வர் அக்கினிதுல்லியர் எனின், இரண்டு என்னும் எண்ணானது மூன்றாவது புதல்வர் இல்லை என்று மறுக்கவில்லை; பின் அது இரு புதல்வரையும் அக்கினிதுல்லியர் என்று உணர்த்துதன் மேலாயிற்று; அங்ஙனம் ஈண்டுமாம். நீரைக் கிரணங்களினாற் குடிக்கின்றமையிற் சூரியன் (கபி எனப்படும்). இந்தச் சூரியனால் விகசிதமாய செந்தாமரை பிரகாசிக்கு மாறுபோல, சிவபெருமானுடைய இரு கண்களும் பிரகாசிப்பனவாயின; (அவரது) மூன்றாவது நேத்திரம் முகுளிதசுவபாவமுடையது; மலர்ந்த தாமரையை ஒவ்வாது; முகுளித தாமரையை நிகர்த்துள்ளதென்பது அபிப்பிராயம். (உக)

(ஆக்ஷேபம்)

அஸௌ யோ zவஸவ-்தி நீலக்ரீவோ விலோஹிதஃ ।
உதைநம் கோபா அத்ருஶந்நத்ருஶந்நுதஹார்ய-்ஃ ।
உதைநம் விஶ்வா பூ-தாநி ஸத்ருஷ்டோ ம்ருடயாதி நஃ ।

(தைத். சங். ச. ரு. க. ௩)

“(சூரியமண்டலத்துள்ளிருந்து உதயாஸ்தமனஞ் செய்விக்கும் பொருட்டுச் சிவபிரான்) பிரவிருத்திக்கின்றனர்; இவர் நீலகண்டமும் செந்நிறமுமுடையர்; (* ஆதித்தியரூபராகிய) இவரைக் கோபாலரும், உதகம் எடுக்கும் மடவோரும் கண்டார்கள்; அவரைக் (கோமகிஷாதி) செந்துக்களும் பார்க்கின்றன; அவ்வியல்பினராகிய அவர் (அகக் கண்ணுக்குப்) புலப்படின், அவர் எங்களுக்கு ஆனந்தத்தை விளைவிப்பாராக” என்னுஞ் சுருதியினால், நீலகண்டராகிய சிவபெருமான் சமஸ்த செந்துக்களுக்கும் பிரத்தியக்ஷமாயிருக்கின்றனர் என அறியப்படுகின்றாராக,

ஸ்வாபாஹித மண்டலஸ்த்ரிநேத்ர ரவிஃ ।

“தன் ஒளியினால் வியாபித்த மண்டலத்தையுடைய முக்கட் சூரியன்” என்றற்றொடக்கத்த அபியுக்தவசனத்தினால், சூரியன் மூன்று கண்களையுடையதாக அறியப்படலானும், ஆதித்தியனே பிரபாமண்டலத்துள்ள முக்கண்ணுடைய சிவபெருமான்; இன்றேல் நீலகண்டமும் முக்கண்களும் சூரியனுக்கு எங்ஙனம் கூறப்படும்.

அஸாவாதித்யோ ப்ரஹ்ம (சாந். ௩. கக. க)

* அருக்கன்பாதம்வணங்குவரந்தியி
னருக்கனாவானரனுருவல்லனோ
விருக்குநான்மறையீசனையேதொழுங்
கருத்தினைநினையார்கன்மனவரே.

(ஆதிபுராணத்திருக்குறுந்தொகை, நாவு, அ)

“இந்தச் சூரியன் பிரமம்” என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, (சூரியன்) பிரமமாகவும் கூறப்படுகின்றது. ஆகலின், சூரியனுக்குள்ளிருப்பவராகச் சுருதியிற் கூறப்பட்டு மண்டலத்துள்ளிருக்கும் ஆதித்தியமூர்த்தியே இரண்மயபுருஷர் எனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

ஹெஃவவ்யவஷெஶாஞ்ஞா ந்யஃ (க. க. உஉ)

**(உஉ) பேதம் கூறப்படலானும் அவர் வேறு.**

ய ஆதிஹெத்ய திஷ்டனாதித்யாஷ்ரொ யமாதிஹெ்யா நவெஃ யஸ்யா திதய ஸ்ரீரம ய ஆதித்யமஷரொ யமயதி வஷ த ஆத்மாஷயம்மிரூ ஷ்தஃ (பிரு. ரு. எ. கூ)

“எவர் சூரியனுக்கு வேறாய், சூரியனுக்குள்ளே உள்ளார்; இவரை ஞாயிறு அறிந்திலதோ, எவருக்கு ஞாயிறு சரீரமோ, எவர் ஞாயிற்றுள்ளேயிருந்து அதனைச் செலுத்துகின்றனரோ, அவரே உனது ஆன்மாவும், அந்தரியாமியும், அமிர்தருமாம் (சிவனுமாம்)” என்னுஞ் சுருதியில் (அவ்விருவர்க்கும்) பேதங் கூறப்படலான், பொன்வண்ணராகிய சிவபெருமான் சூரியமண்டலத்தபிமானியாகிய இந்தச் சேதனரூப ஆதித்தியமூர்த்தியினும் வேறுவர். ஈண்டு அமிர்தசப்தம் சிவபெருமான் மேற்று;

வஊதாநி ஹவா அஶ்ருதஸ்ய நாமஹெயாநி (ஜாபா. ரு)

“இவைகளே அமிர்தத்தின் பெயர்கள்” எனச் சதருத்திரீயத்தைப் புகழுங்கால் (அங்ஙனம்) ஜாபாலோபநிடதம் கூறலின். சூரியனல் அவர் அறியப்படாமை முதலிய குணங்களுண்மையின், ஆதித்தியனுக்கு வேறாயினர் சிவபெருமான் என்றே கூறப்படுகின்றார். ஆகலின், சேதனனாகிய ஆதித்தியனினும் *பொன்வண்ணராகிய சிவபெருமான் வேறு.

நீலக்ரீவோ விலோஹிதஃ (தைத். சங்கி. ச. ரு. க. ரு)

“நீலகண்டரும் செந்நிறமுடையரு” மாகக் கூறப்பட்ட காளகண்ட சிவபெருமானே ஆதித்தியனுக்குள்ளிருப்பவராகப் பிரதிபாதிக்கப்படுகின்றனர்; சூரியனுக்குள்ளிருக்கும் உயிராதலின், அவர் அந்தச் சூரியசப்தத்தினாற் கூறப்படுகின்றார்.

---

* பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி பொலிந்திலங்கு
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம்வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
வென்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமாகிய வீசனுக்கே.

என்னுஞ் சேரமான்பெருமாணாயனார் திருவாக்கும் சிவபெருமான்றிருமேனியைப் பொன்வண்ணமென்று கூறிற்று.

(ஆக்ஷேபம்) சூரியனுக்குள்ளிருக்கும் நீலகண்டர் சிவபெருமான் அன்று; பின் அவர் நாராயணரே. அங்ஙனம்,

ஜெ்யயஸூதா ஸவி-த்ரூஜணூவெஷூவத்தி-்் நாராயணஸூாஸிஜாஸ-ந ஸஹிவிஷ்டீ |

"சூரியமண்டலமத்தியினராகிய நாராயணர் கமலாசனத்திருப்பவராக எக்காலமுந் தியானிக்கற்பாலர்" என உலகினர் யாண்டும் படிக்கின்றனர். அவர்க்கே புண்டரீகாக்ஷித்துவயசம்பந்தம் (கூறுவது) யுக்தம்; அவர் புண்டரீகாக்ஷர் எனப் பிரசித்தமுண்மையின். வேறுபிரகாரமாகப் பிரதிபாதனஞ் செய்தலாம் பிரயாசை எற்றுக்கென ஆக்ஷேபிப்பின்,

(உத்தரம்) அன்று; இரண்மயபுருஷரிற் சம்பந்தமுடையனவாகக் கூறப்படுஞ் சிவபெருமானுடைய விசேஷலிங்கங்கள் நாராயணரிற் பொருந்துமாறின்மையின். சூத்திரவிஷயமாய்ச் சந்தேகத்துக்கிடமாகிய இந்த வாக்கியம் சந்தேகத்துக்கு இடனாகாத வேறு வாக்கியங்கொண்டு நிர்ணயித்தல் யுக்தம்.

சூஜிதெ்ா வா ஸஷ ஸதநூணூஜவதி |

(தைத். ஆரணி. க0. கச. ௩க)

"இந்த ஆதித்தியனே இந்த மண்டலத்தைத் தகிக்கின்றான்" என்றற்றொடக்கத்தனவாக மகோபநிடதத்திற் கூறப்படுகின்றது.

ய ஸதஸிநூணூமெzஜீ-்ஜீ-்வ்ஷெதெ |

(தைத். ஆரணி. க0. கச. ௩க)

"இவன் இந்த மண்டலத்திலே ஒளியைக் காலுகின்றான்" எனச் சூரியமண்டலப்பிரகாசத்தை உரைத்தும்,

ய ஸஷ ஸதஸிநூணூமெ zஜீ-்ஷி வுரஷஃ|

(தைத். ஆரணி. க0. கச. ௩க)

"இந்தச் சூரியமண்டலத்திற் புருஷர் இவர்" என மண்டலாபிமானியாகிய ஆதித்தியமூர்த்தியை உரைத்தும்,

யஸஷொzஸராஜிதெ்ா ஹிரணூயஃ வுரஷஃ|

(சாந். க. சு. சு)

"இவர் ஆதித்தியனுக்கு அந்தரியாமியாயுள்ள இரண்மயபுருஷர்" என ஆதித்தியாந்தரியாமியாய் (ஆதித்தியமூர்த்திமானயுள்ள) இரண்மயபுருஷரைக் கூறியும்,

சூஜிதெ்ா செவ தெஜ ஓஜொ ஬லஂ யஶஃ|

(தைத். ஆரணி. க0. கரு. ௩உ)

“ஆதித்தியன்றான் தேஜசும், உரமும், பலமும், கீர்த்தியும்” என்றற்றொடக்கத்த சுருதியினால், அந்த ஆதித்தியரூபமுடையாரது (சிவபெருமானது) விபூதியைக் கூறியும்,

ஸஷ ஷுருஷ ஸஷ ஹ-ூதா-நாமயிவதிஃ।
(தைத். ஆரணி. க0. கசு. ௩உ)

“இவர் புருஷர்; இவர் பூதங்களுக்கு அதிபதி” என்பதினால் அவரைப் பூதபதியாக நிர்த்தேசஞ் செய்து, பின்னரும் (இவர்) எவ்வியல்பினராகிய புருஷர் என்று வினவ,

ஸவெ-ா ூெவ ரு-ஜுஃ।
(தைத். ஆரணி. க0. உச. சஉ)

“எல்லாம் உருத்திரரே” என்று தொடங்கி,

நமோ ஹிரண்யவாஹவெ ஹிரண்யவதயெ உஂவிகாவதய உமாவதயெ (தைத். ஆரணி. க0. உஉ. ச0)

“இரண்ணிய பாகுவினர்க்கு, இரண்ணியபதியாயினர்க்கு, அம்பிகாபதியார்க்கு, உமாபதியார்க்கு (நமஸ்காரம்)” என உபசங்கரிக்கப்பட்டது. இச்சுருதியில் (அவரது) பாகுவைப் பொன்னிறமாகக் கொள்ளவே, உபலக்ஷணையினாற் (சிவபெருமான்) பொற்றிருமேனியுடையர் என்பது தாற்பரியமாயிற்று. ஆகலின், பொன்போலும் மேனியையுடைய உமாபதியார் ஆதித்தியனுக்கு மத்தியிலிருப்பவராகச் சித்திக்கின்றார்; ஈண்டு நீலகண்டத்துவம் உமாபதித்துவமுதலிய விசேஷலிங்கம் சிவபெருமானுக்கன்றி மற்றையோர்க்குப் பொருந்தாமையின். புண்டரீகத்தை ஒத்த கண்ணுடைமை சாதாரணலிங்கம்; நாராயணர் ஒழிந்த மற்றைப் பொருட்கும் (இயைவதாகக்) காணப்படலான். கமலலோசனை நாரி எனவும், கமலலோசனன் புருஷன் எனவும் வழங்கப்படுகின்றது. (இரு லிங்கங்கள் ஒருங்கு கூறப்படுங்கால்) விசேடலிங்கத்தினாற் சாமானியலிங்கம் பாதிக்கப்படும். “சூரியனுள் இருக்கும் தெய்வமாக நாராயணர் எப்பொழுதுந் தியானிக்கற்பாலர்” என்னும் இலௌகிகவசனம் கவுணமே. ஆகலின், இரண்ணிய துல்லியரூபரும், திரிலோசனரும், நீலகண்டரும், உமாபதியும், சமஸ்த லோக காமேசுவரரும், சர்வபாபத்தொடக்கிலாதவரும், பகவானுமாகிய சிவபெருமானே ஆதித்தியனுக்குள்ளே இருப்பாரும், சாவித்திரியினாற் பிரதிபாதிக்கப்படுபவரும்; முமூட்சுக்கள் அனைவர்க்கும் தியேயப்பொருளாயுமுள்ளார் என்று சித்தித்தது. (உஉ)

(கூ) ஆகாசாதிகரணம்.
(கO) பிராணுதிகரணம்.

சர்வஞ்ஞதாதி குணங்களையுடைய பரப்பிரமசிவனுரது பரமமங்கலத்துக்கு ஆஸ்பதமாய் உபாசிக்கற்பாலதாம் வடிவத்தை உரைத்து, அந்த இலக்ஷணத்துக்கு நாமரூடிவசத்தினுற் பிறிதோரிடத்தில் அதிவியாப்திபற்றி ஆசங்கை உண்டாக, அதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

ஆகாஶஸ்தல்லிங்காத் (க. க. உங)
அத ஏவ ப்ராண꞉ (க. க. உச)

**(உங) ஆகாயம் (பிரமம்), அதின் இலிங்கமுண்மையின்.**
**(உச) அந்த நியாயத்தினுற் பிராணன் (பிரமம்).**

ஸர்வாணி ஹவா இமானி பூதானி ஆகாஶாதேவ ஸமுத்பத்யந்தே ஆகாஶம் ப்ரத்யஸ்தம் யந்தி (சாங். க. கூ. க)

"இப்பூதமனைத்தும்* ஆகாயத்திருந்தே உற்பத்தியாகின்றன, ஆகாயத்துக்கு மீள்வனவாயின" எனவும்,

ஸர்வாணி ஹவா இமானி பூதானி ப்ராண மேவா பிஸம்விஶந்தி ப்ராணமப்யுஜ்ஜிஹதே (சாங். க. கக. ரு)

"இப்பூதமனைத்தும்* பிராணனிலே ஒடுங்குகின்றன; பிராணனிலிருந்தே அவை உதித்தன" எனவும் போந்த சாந்தோக்கிய சுருதியே ஈண்டு ஆராயக்கிடந்த விஷயம்.

ஈண்டுச் சமஸ்த பூதங்களுக்கும் உற்பத்தி பிரளயங்களைப் பிரதிபாதிப்பனவாய "பிராணன்" "ஆகாயம்" என்னும் மொழிகள் சிவபெருமானைப் பிரதிபாதிப்பனவா? இன்றேற் பூதாகாயம் பிராணவாயு என்பனவற்றைப் பிரதிபாதிப்பனவா? என்பது சந்தேகம்.

ப்ராணாத்த்யேவ கல்விமானி பூதானி ஜாயந்தே ப்ராணேந ஜாதானி ஜீவந்தி ப்ராணம் ப்ரயந்தி (தைத். ங. ங)

"இப்பூதமனைத்தும் பிராணனிலிருந்தே பிறந்தன; பிராணனுற் பிறந்தன நிலையுறுகின்றன; பிராணனை நோக்கிச் செல்வனவாயின" என்றற்றொடக்கத்த சுருதி யுண்மையானும்,

* ஆன்மதத்துவம் இருபத்துநான்குமடங்கிய மலினப்பிரபஞ்சமும், வித்தியாதத்துவம் எழும் அடங்கிய மிசிரப்பிரபஞ்சமும், சிவதத்துவம் ஐந்துமடங்கிய சுத்தப்பிரபஞ்சமும் அனைத்தும் என்றதினுற் றழுவப்படும்.

ஆகாஶாத்வாயு: (தைத். உ. க)

"ஆகாயத்தினின்று வாயு" என்றற்றொடக்கத்த சுருதி யுண்மையானும், பிராணனுக்கும் ஆகாயத்துக்கும் சகல பூதகாரணத்துவம் கூறப்படுதலின், அவ்விரண்டுமே ஈண்டு பிரதிபாதிக்கற்பாலன எனின்,

(உத்தரம்) கூறுதும். பிராணாகாயசப்தவாச்சியர் சிவபெருமானே; சர்வகாரணத்துவமுதலியன அவர்க்கு இலிங்கமாதலின். பிராணன் ஆகாயம் என்னும் இரண்டுக்கும் சர்வகாரணத்துவ முதலிய எய்தமாட்டா. "(இப்பூதமனைத்தும்) பிராணனிலிருந்தே (பிறந்தன)" என்றற்றொடக்கத்த சுருதிக்கு ஆனந்தரூபமுடைய பரப்பிரமமே காரணம் என்பது தாற்பரியம். பிராணன் காரணமன்று; பின் அது அநுவாதமாத்திரம். பூதங்களுள்ளே ஒன்று ஆகாயமாதலின், (அது பூத)மனைத்தும் என்பதனுள் அடங்கிவிடும்.

ஆத்ம ஆகாஶஸ்ஸம்பூத: (தைத். உ. க)

"ஆன்மாவிலிருந்து ஆகாயம் பிறந்தது" என்னுஞ் சுருதியினுற் சர்வபூதோற்பத்தியும் சிவபெருமானிலிருந்தே ஆகும். ஆகலின், சர்வபூதகாரணத்துவம் பூதாகாசம் பிராணன் என்பவைகளுக்குச் செல்லாதென்பது சித்தாந்தம்.

(வினு) பூதாகாயம் என்றதிலே போந்த பூத என்னும் உபபதவிசேடத்தினுற் பயன் யாதெனின்,

(உத்தரம்) (பூதாகாயத்தினின்று வேருக) பரப்பிரகிருதிரூப பரமாகாயம் என (மற்றொன்று) சர்வபூதகாரணமாதயிருத்தலை உணர்த்துவதே பயனும்.

(வினு) அங்ஙனமாயின் (ஆகாயத்தைச்) சிவபெருமான் என்று நிர்ணயிப்பதெங்ஙனம்?

(உத்தரம்) (சிவபெருமானுக்கும் * பரமாகாயத்துக்கும்) பேதமில்லாமையான். (உச)

## (கக) ஜ்யோதிரதிகரணம்.

---

சமஸ்த புவனநாயகரும், சமஸ்த தோஷவாசநாகளங்கமில்லாதவரும், நிரதிசயமங்கல இரத்திநாகரருமாகிய உமாபதியாம் பரப்பிரமத்துக்கு ஆதித்தியமண்டலம் ஆஸ்பதமாயினமை மேலே நிரூபிக்கப்பட்டது.

ஈண்டுச் சூத்திரகாரர் அந்தச் சிவபெருமானுக்கு மற்றோர் ஸ்தானம் உரைப்பாராயினர்.

---

*இது திருச்சிற்றம்பலத்தின் மேற்று; உபக்கிரமணிகை கoடு-ஆம் இலக்கம் யார்க்க.

ஜ்யோதிஶ்சரணாபிதாநாத் (க. க. உரு)

(உரு) (பிரமம்) சோதி;* சரணம் கூறப்படலான்.

அத யதத꞉ பரோ திவோ ஜ்யோதிர்தீப்யதே விஶ்வத꞉ ப்ருஷ்டேஷு ஸர்வத꞉ ப்ருஷ்டேஷ்வநுத்தமேஷூத்தமேஷு லோகேஷ்விதம் வாவ தத்யதிதமஸ்மிந்நந்த꞉ புருஷே ஜ்யோதி꞉ (சாந். ௩. ௧௩. ௭)

"இதற்குமேற் பிறிதோர் உலகம் இல்லை எனற்பாலதாம் உயர்வாகிய உலகத்திலே ஒவ்வொன்றுக்கும் மேலாய், அனைத்துக்கும் மேலாய், இந்த ஆகாயத்துக்கு மேலாய்ப் பிரகாசிக்கின்ற அந்தச் சோதியே புருஷனுக்குள்ளேயுள்ள சோதி" என்னும் சாந்தோக்கிய சுருதியே ஈண்டு ஆராயற்பாலதாகிய விஷயம்.

சமஸ்த லோகத்தையும் வியாபித்து ஆகாயத்துளதாகக் கூறப்பட்ட பரஞ்சோதியானது சிவபெருமானா? மற்றோர் தேவதையா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) "திவு" என்னும் மொழி ஆகாயம் எனப்பொருட்பட, "பரோதிவ꞉" (ஆகாயத்துக்கு மேலாய்) என்றமையின், ஆகாயத்துள்ள ஆதித்தியனே சோதி என ஈண்டுப் பிரதிபாதிக்கப்படுகின்றது; இன்றேல், புருஷனுக்குள்ளேயுள்ள சோதி என்றமையின், அது புருஷனுக்குள்ளேயுள்ள ஜாடராக்கினியாம் எனின்,

(சித்தாந்தம்)

அத யதத꞉ பரோ திவோ ஜ்யோதி꞉ (சாந். ௩. ௧௩. ௭)

"ஆகாயத்துக்கு மேலேயுள்ள சோதி" என அனைத்துக்கும் மேலாய்க் (கூறப்பட்ட) பரஞ்சோதி சிவபெருமானே; மேலே,

பாதோ(அ)ஸ்ய ஸர்வா பூதாநி (சாந். ௩. ௧௨. ௬)

"பூதமனைத்தும் அவரது பாதம்" என்னுஞ் சுருதியிற் பூதமனைத்தும் இந்தச் சோதியின் அம்சம் என உரைக்கப்படுதலின். இது ஜாடராக்கினிக்கும் சூரியனுக்குஞ் செல்லாது, பரிச்சின்னமுடைமையின். (உரு)

(ஆக்ஷேபம்)

காயத்ரீ வா இதம் ஸர்வம் பூதம் (சாந். ௩. ௧௨. ௧)

---

* சடையானேதழலாடீதயங்குமூவிலைச்சூலப்
படையானேபரஞ்சோதீபசுபதீமழவெள்ளை
விடையானேவிரிபொழில்சூழ்பெருந்துறையாயடியேனு
னுடையானேயுனையல்லாதுறுதுணைமற்றறியேனே.
(திருப்புலம்பல், உ)

"(மேலே) இப்பூதமனைத்தும் காயத்திரி" என்று கூறப்படுதலின், காயத்திரியின் சர்வவியாபகத்துவம் பிரதிபாதிக்கப்படுகின்றது. படவே, பிரகரணத்தினுல்

வாஒொzஸ்ு ஸவ-ிா ஹ-ூதாநி (சாந். ங. கஉ. சு)

"செந்துக்களெல்லாம் அவரது பாதம்" என்னுஞ் சுருதியானது பிரபஞ்சமனைத்தும் காயத்திரியின் அம்சம் எனக் கூறுகின்றதெனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

ஃஜொzஹியா நாளுதி வெஹ தயாவெஙெதாzவ-ிணமிஜஷாத்த யாஹி ஓுஶ-ிநழ (க. க. உசு)

(உசு) சந்தசைக் கூறினமையின் (பிரமம்) அன்ரும் எனின், அன்று; அங்ஙனம் அறிவானது (பிரமத்தில்) அர்ப்பணஞ் செய்யப்பட்டதாகக் கூறப்படலான்; அது பற்றியன்ரே (பிரமாணமும்) காணப்படுகின்றது.

ஞாயத்ரீ வா ஊஷ0 ஸவ-ிo ஹ-ூதழ (சாந். ங. கஉ. க)

மேலே "இப்பூதமனைத்தும் காயத்திரி" எனச் சந்தசைப்பற்றிக் கூறப்படலான், அதுவே ஈண்டுக் கூறப்பட்டதன்றிச் சிவபெருமான் அன்றெனின்,

(உத்தரம்) அங்ஙனம் எய்தாது; காயத்திரி எனப்படும் சந்தசுக்கு மாத்திரம் சர்வவியாபகத்துவம் எய்தாது. பின் காயத்திரிக்கோபாகச் சிவபெருமான் (தியானஞ்) செய்யப்படுகின்றனர். (பாதம் ஒன்றுக்கு) ஆறு அக்ஷரங்களாக அமைந்த நான்கு பாதங்களைக் காயத்திரி உடைத்தாமாறு போல, பிரமமும் நான்கு பாதமுடையது. அங்ஙனம் பிறவிடங்களினும் சந்தசைக் குறிக்கும் சப்தமானது ஒருபுடையொப்புமையான் மற்ரோர் பொருட்குஞ் செல்வதாகக் காணப்படுகின்றது.சம்வர்க்க வித்தைதயில்,

தெ வா வனதெ வஞாநெ ந்ூ வஞாநெ ந்ூஷஶ ஸஹுஸ்க்ரு தழ।
(சாந். ச. ங. அ)

"இந்த ஐந்தும் மற்ற ஐந்துஞ் சேர்ந்து பத்து; அது கிருதம்" என்று தொடங்கி,

வெஷா விராடீ (சாந். ச. ங. அ)

*"இது விராட்டு" என்று உபசங்கரிக்கப்பட்டது. அங்ஙனஞ் சிவபெருமானுக்குக் கூறப்பட்ட சர்வவியாபகத்துவலிங்கத்தினுற் காயத்திரிப்பிரகரணம் பாதிக்கப்பட்டது. ஆகலின், சிவபெருமானே சோதி என்பது. (உசு)

---

*பத்து அக்ஷரங்களாலாய சந்தசின் பெயராகிய விராட்டு என்பது வேறு பத்துத் தேவதைகளையும் உணர்த்துமாறு போல என்பது தாற்பரியம்.

பின்னருஞ் சூத்திரகாரர் பொருத்தவுண்மை உரைக்கின்ருர்.

ஹூதாதிவாத வ்யவதேஶோபபத்தேஶ்சைவம் (க. க. உஎ)

(உஎ) பூதமுதலியவற்றைப் பாதங்களாகக் கூறல் பொருத்தமுறினும், அதுவும் அங்ஙனம்.

பூதம் (பிராணிகள்), பிருதிவி, சரீரம், இருதயம் என்பவற்றைப் (பாதங்களாகக் கொண்டமைபற்றி) நான்குபாதமுடைத்தெனல் காயத்திரிசந்தசுக்குப் பொருந்துமாறின்று; அது சிவபெருமானுக்கே பொருத்தமுறுகின்றது. (உஎ)

சூத்திரகாரர் பின்னரும் ஆக்ஷேபித்துப் பரிகரிக்கின்றனர்.

உபதேஶ ஹேதாந்நேதி சேந்நோபயஸ்மிந்நப்யவிரோதாத்॥ (க. க. உஅ)

(உஅ) உபதேசம் (கூறல்) பலதிறப்படுதல்பற்றி, அது பிரமமன்ருமெனின், அன்று; ஈரிடத்தும் விரோதமின்மையின்.

(ஆக்ஷேபம்)

பாதோஸ்ய ஸர்வா பூதாநி (சாந். ந. கஉ. சு)

"பூதமனைத்தும் அவரது பாதம்" எனவும்,

த்ரிபாதஸ்யாம்ருதம் திவி (சாந். ந. கஉ. சு)

"அவரது அமிர்தமாகிய மூன்று பாதமும் ஆகாயத்தனவாம்" எனவும் போந்தவிடத்து, ஆகாயத்தோடு சம்பந்தமுளதாதல்பற்றிச் சோதி வாக்கியத்திற் சிவபெருமான் பிரதிபாதிக்கப்படுகின்றனர் எனல் சாரமன்று; உபதேசபேதத்தினுல் விரோதமாக அறியப்படலான்.

த்ரிபாதஸ்யாம்ருதம் திவி (சாந். ந. கஉ. சு)

"அவரது அமிர்தமாகிய மூன்று பாதம் ஆகாயத்திலே" என (ஏழாம் வேற்றுமையினும்)

பரோ திவோ ஜ்யோதி: (சாந். ந. கந. எ)

"ஆகாயத்தின் மேல் சோதி" என (ஐந்தாம் வேற்றுமையினும்) போந்த சுருதிகளில், விபக்திபேதத்தினுல் உபதேசம் பேதமுறுகின்றது. ஆகலின், விரோதமே எனின்,

(உத்தரம்) அன்று; ஈரிடத்தும் விரோதமின்மையின். "மரநுனியிலே பருந்து (என ஏழாம் வேற்றுமையினும்), மரநுனியின் மேற் பருந்து"

(என ஐந்தாம் வேற்றுமையினும்) கூறப்பட்ட ஈரிடத்தும் மரத்தினின்றும் மேல் என உரைக்கப்பட்டது. அங்ஙனம் ஈரிடத்தும் ஆகாயத்துக்கு மேல் (சோதி) எனக் கூறப்பட்டது. இந்த இலிங்கத்தினாற் சிவபெருமானே புருஷசூக்தத்திற் கூறப்பட்ட புருஷர் எனச் சித்தித்தது;

பாதோ³ऽஸ்ய விஶ்வா பூ⁴தாநி।

(புருஷசூக்தம். ங)

"சமஸ்த பூதங்களும் அவரது பாதம்" எனப் புருஷசூக்தத்திற் கேட்கப் படலான். அதுபற்றித் தமது ஓர் அம்சத்தில் அடங்கிய சமஸ்தப் பிரபஞ் சத்தையுடையதும், ஆகாயத்தில் விளங்குவதுமாகிய பரஞ்சோதி சிவபெரு மான் என நிர்ணயிக்கப்பட்டது.

பகவானாகிய சூரியனுடைய மண்டலத்திலே நேரே உபாசிக்குமாறு உணர்த்தப்பட்ட சிவபெருமானே இந்த அதிகரணத்தில் விசுவரூபியாகக் கூறப்பட்டனர். (உஅ)

அவரது அபேத வியாபகத்தினால் அனன்னிய வஸ்துக்களும் உபாசிக் கற்பாலன, மற்றோர் பிரகாரத்தால் அன்று எனப் பிரதிபாதிப்பதற்கு ஆரம்பிக்கப்படுகின்றது இவ்வதிகரணம்.

## (கஉ) இந்திரப்பிராணாதிகரணம்.

---

ப்ராணஸ்ததா²நுக³மாத் (க. க. உகூ)

(உகூ) அங்ஙனம் பிராணன் (பிரமம்; அவர் குணங் கள்) சம்பந்தமுறலான்.

ப்ராணோऽஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாமாயுரம்ருதமித்யுபாஸ்ஸ்வ।

(கௌஷீ. ங. உ)

"நானே பிராணன், என்னைப் பிரஞ்ஞையோடு கூடிய ஆன்மாவாகவும், ஆயுளாகவும், அமிர்தமாகவுங்கொண்டு வழிபடு" என இந்திரன் கூறிய வசனமாக நேர்ந்த கௌஷீதகியுபநிடத சுருதியே ஈண்டு ஆராயக்கிடந்த விஷயம்.

ஈண்டு உபாசனாவிதிவிஷயமாய்ப் பிராணசப்தத்தின் சாமாநாதிகரண் ணியத்திற் சுட்டப்பட்டவர் இந்திரனா? இன்றேற் சிவபெருமானா? என் பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ப்ராணோऽஸ்மி ப்ரஜ்ஞாத்மா।

(கௌஷீ. ங. உ)

"நானே பிராணன், பிரஞ்ஞாத்துமா, அப்பெற்றியனாகிய என்னை" என்றதிலே பிராணன் என்றது சாக்ஷாத்தாக இந்திரனிலே சாமானாதிகரண முறுவதாகப் பெறப்படுகின்றது.

ஊஊவாஸ்வ (கௌஷீ. ௩. உ)

"என்னை வழிபடுக" என்னும் விஷயத்திலேதான் உபாசனாவிதி கேட்கப் படுகின்றது. மழை வாயிலாக அனைத்தையும் காத்தலின் இந்திரன் பிராணனாகின்றான். பரமைசுவரியத்துவமுடைமையின் அவன் அனைவராலும் வழிபடற்பாலனாகின்றான்.

ஐஜா ஈராஜா ஜஹதொ ய ஈஸுஷெ

(தைத். ஆரணி. ௩. கக. உரு)

"உலகத்தைப் பரிபாலிக்கும் அரசன் இந்திரன்" என்று சுருதி கூறுகின்றது. அதுபற்றி இந்திரனே உபாசிக்கற்பாலன் என உரைக்கப்படுகின்றான் எனின்,

(சித்தாந்தம்) சிவபெருமான் (உபாசியர்) என்பது. எதனால்? ஆனந்தர், ஐரையில்லாதவர், அமிர்தர், பிரஞ்ஞாத்துமா என்னும் விசேஷகுணமனைத்தும் பிராணசப்தத்தினாற் சுட்டப்பட்டவரிடத்துச் சம்பந்தமுறலான்.

ஊஷ ஹாண ஊவ ஹஜாத்தாநஹொ ஜரொ ஊதக

(கௌஷீ. ௩. அ)

"அவரே பிரஞ்ஞாத்துமாவும், ஆனந்தரும், ஐரையிலாதவரும், அமிர்தருமாயுள்ள பிராணன்" என்றது சுருதி.

ஐஜா ஈராஜா (தைத். ஆரணி. ௩. கக. உரு)

"இந்திரன் இராஜா" என்றவிடத்து, இந்திரசப்தம் சிவபெருமான் மேற்றும் எனப் பிரகரணத்தினாற் சித்திக்கின்றது. (உகூ)

பின்னரும் ஆசங்கித்துச் சூத்திரகாரர் பரிகரிக்கின்றனர்.

ந வகுராவொதவஷெமாதி செஷஹாத்து ஸஂவயஹீ ஹஸி௩ (க. க. ௩௦)

(௩௦) வக்தா தன்னையே குறித்து உபதேசித்தலான் அவர் அன்றெனின், இந்தப் பிரகரணத்திலே அத்தியான்ம சம்பந்தமாகிய குணங்கள் மிகுத்துக் கூறப்பட்டன என (இறுக்கப்படும்).

(ஆக்ஷேபம்) உபாசியர் சிவபெருமான் அன்று.

ஊவெவ விஜாநீஹி திஸீஷாணஂ கூா ஷ்ஹநு

(கௌஷீ. ௩. க)

"என்னையே அறிக; முத்தலையுடைய துவஷ்டாவின் மகனைக் கொன்றேன்" என்றற்றொடக்கத்தனவாக உபக்கிரமத்தில் அறிவுடைய ஆன்மாவாக அறியப்படும் இந்திரனே உபாசியன் எனக் கூறப்படலான். ஆகலின், உபசங்காரவாக்கியமும் உபக்கிரமவாக்கியம்போற் (பொருள்) கோடற்பாலதெனின்,

(உத்தரம்) இது உசிதமன்று; உபக்கிரமத்தினின்று ஆரம்பித்து, இந்தப் பிரகரணத்திலே அத்தியான்ம சம்பந்தமுடைய சிவபெருமானது குணம் பாகுள்ளியமாயிருத்தலின்.

யஜுஷ நாஷாய ஹிதத௦ உநவெ (கௌஷீ. ௩. க)

"மனிதனுக்கு எதனை உத்தமமென நினைக்கின்றனை" என உபக்கிரமித்து *இததமோபாசனை ஆரம்பிக்கப்பட்டது. அவ்வுபாசனை சிவதருமம்; அவரை உபாசித்தலே முத்திசாதனத்துக்கு மிக்க பயனுடையதாகலின். (பிரகரண) மத்தியினும்,

ஊஷஹெவ ஸாயு கூ கூாயதி த௦ யஹெஹா ஹொகெஹ உனிநீஷதெ ஊஷ ஊவாஸாயு கூ கூாயதி த௦ யஹொ நிநீஷதெ (கௌஷீ. ௩. அ)

"இவ்வுலகினின்று மேலே அவனை உயர்த்த விரும்புங்கால், அவனை நற்கருமஞ் செய்யுமாறு உஞற்றுகின்றனர்; எவனை மேலுலகத்திருந்து கீழுலகத்துக்குச் செலுத்த விரும்புகின்றாரோ, அவனைத் தீக்கருமஞ் செய்ய உஞற்றுகின்றனர்" என்னுஞ் சுருதியினால், சமஸ்த கருமங்களையும் (அவர்) உஞற்றுதல் பெறப்படுகின்றது.

தஷ்யா ரயஸ்யாரெஷு நெமி ரவிதா நாஹாவரா கூவிதா ஊவஹெவெதாஹுதஊதராஃ வஜ்ஞாஊதராஃவிதாஃ வஜ்ஞாஊதராஃ வராணெஃவிதாஃ (கௌஷீ. ௩. அ)

"இரதத்தின் சக்கரம் பழுக்களினும், பழுக்கள் (ஆரங்கள்) நாபியினும் அர்ப்பிக்கப்பட்டாற் போல, பூதமாத்திரைகள் பிரஞ்ஞாமாத்திரையில் அர்ப்பிக்கப்பட்டன; பிரஞ்ஞாமாத்திரைகள் பிராணனில் அர்ப்பிக்கப்பட்டன" என்னுஞ் சுருதியினற் சேதனு சேதனப் பிரபஞ்சம் அனைத்துக்கும் ஆதாரத்துவம் பெறப்படுகின்றது. இதுவும் சிவதருமம். இங்ஙனம் சிவபெருமானுடைய குணம் பாகுள்ளியமாயிருத்தலின் உபாசியன் இந்திரன் அன்று. (௩௦)

---

* மிக்க பயனுடைய உபாசனை.

(ஆக்ஷேபம்) இந்திரன் பசுவாய் உபாசியனல்லனுயினும், (அவன்) தன்னை உபாசிக்குமாறு உபதேசிப்பதென்னை? என ஆசங்கிப்ப,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஶாஸ்த்ர த்ருஷ்ட்யா தூபதேஶோ வாமதேவவத் (க. க. நக)

(நக) வாமதேவரைப் போலச் சாஸ்திரதிருஷ்டியினுல் (அவன் தன்னை) உபதேசிக்கின்றான்.

அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி|
(சாந். சு. ந. உ)

"இந்தச் சிவான்மாவோடு பிரவேசித்து நாமரூபங்களை வகுத்தேன்" என்றற்றொடக்கத்த சாஸ்திரதிருஷ்டியினுலே சர்வசப்தவாச்சியர் சிவபெருமான் (என்று இந்திரன் ஓர்ந்து, சிவபெருமான்) தன் சரீரமாயிருத்தலின், தன் (இந்திர) சப்தத்தின் பொருளாயுள்ள சிவபெருமான் உபாசிக்கற்பாலர் என உபதேசித்தனன். ஆகலின், இந்திர சப்தத்தினுற் சிவபெருமான் உபதேசிக்கப்படுகின்றனர். *"வாமதேவர் போல" எனத் திருஷ்டாந்தம் (சூத்திரகாரர்) கூறுகின்றனர். வாமதேவர் தமக்குச் சிவபெருமான் ஆன்மாவாயிருக்கின்றனர் என்னும் (சோஹம்பாவனு) திருஷ்டியினுல்,

அஹம் மநுரபவம் ஸூர்யஶ்ச (பிரு. ந. ச. கo)

"நான் மனுவும் சூரியனுமாயினேன்" என உபதேசித்தாற் போல்வது இந்திரனது உபதேசமுமாம். இன்றேல், வேதாந்த ஞானத்தினுற் கிடைத்த பிரம ஆன்மபாவனையினுற் பிரமபாவத்தை அடைந்து, மனுஷ்யாதி தேக விஷயத்திற் கற்பிக்கப்படும் அஹம்பாவம் குவிய, உலகாகாரமாயிருக்கும் கரையிறந்த †பரமாஹம் பாவமுற்ற வாமதேவர் தமது ஆன்மசோஹம் பாவனையினுலே வியாபகமுற்று வேற்றுமையின்றி உலகமாய் நின்றமையினுலே, சூரியன் மனு முதலாயினேரை அடக்கிய பிரபஞ்சம் தாம் என்று உரைத்தார்; இங்ஙனம் இந்திரன் விஷயத்தினுமாம் என நிச்சயிக்கற்பாற்று.

ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா (கௌஷீ. ந. உ)

---

*உபக்கிரமணிகை உகூகூ-ஆம் இலக்கம் பார்க்க.

†சோகம்பாவனையினுல் வாமதேவர் கிருஷ்ணர் என்போர் உலகெலாமாகி நின்றமை சிவஞானபோதச் சிற்றுரை உ-ஆஞ் சூத்திரத்து க-ஆம் அதிகரணத்து "அரக்கொடு" என்னுந் திருவெண்பாவின் கீழ்க் காண்க.

"பிரஞ்ஞாத்துமாவாகிய பிராணனுயிருக்கின்றேன்" என்றவிடத்துப் பிராணசப்தம் பரப்பிரமத்தின் மேற்று;

ப்ராண வஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மா ஆயுரம்ருதமித்யுபாஸ்ஸ்வ
(கௌஷீ. ௩. உ)

"பிராணனே பிரஞ்ஞாத்துமா, ஆனந்தம், அஜரம், அமிர்தம்" எனச் சுருதி கூறுமாறு, அவர் ஆனந்தரூபராய் அனைத்துக்கும் பிராணஹேது வாயிருத்தலின். அங்ஙனம்,

அஹம் ப்ரஹ்மாஸ்மி (பிரு. ௩. ௪. ௧௦)
மாமுபாஸ்ஸ்வ (கௌஷீ. ௩. உ)

"நான் பிரமமாயிருக்கின்றேன்; என்னை வழிபடுக" என்னுஞ் சுருதிகளும் பிரமதிருஷ்டியினாற் போந்த உபதேசமே; அங்ஙனமன்றே கிருஷ்ணர் முதலாயினோர் அர்ச்சுனர் முதலாயினோர்க்கு உபதேசித்தனர். (௩௧)

பின்னரும் சூத்திரகாரர் ஆக்ஷேபித்து உத்தரம் இறுப்பாராயினர்.

ஜீவமுக்ய ப்ராணலிங்காந்நேதி சேந்நோபாஸாத்ரைவித்யா தாஸ்ரிதத்வாதிஹ தத்யோகாத் (க. க. ௩உ)

(௩உ) ஆன்மாவுக்கும் பிராணமுக்கியத்துக்கும் இலிங்கமொன்றுதல்பற்றி, அது (பிரமம்) இல்லையாமெனின், அன்று; (பிரம) உபாசனை மூவகைப்பட்டதாய், அது அவற்றிற்கு ஆதாரமாய், பொருத்தமாயிருத்தலின்.

(ஆக்ஷேபம்) பிரமஞானோபாசனையினாலே பிரமபாவத்தை அடைந்து, ஆன்மபாவமொழிந்து, அந்தப் பிரமரூபதிருஷ்டியினாலே (இந்திரன்) தன்னை வழிபடுக என்றும், தான் சர்வவியாபகன் என்றும் உரைத்தமை யுக்தம்.

த்ரிஸீர்ஷாணம் த்வாஷ்ட்ரமஹநம் யாவத்யஸ்மிஞ்சரீரே ப்ராணோ வஸதி தாவதாயுஃ (கௌஷீ. ௩. க)

"நான் முத்தலையுடைய துவஷ்டாகுமாரனைக் கொன்றேன்; சரீரத்திலே பிராணன் இருக்கும் வரைக்கும் ஆன்மா இருக்கின்றது" என்றற்றொடக்கத்த சுருதிகளில் ஆன்மத்துவலிங்கமும் பிராணமுக்கியத்துவலிங்கமும் காணப்படுகின்றன. ஆகலின், இவ்வுபதேசம் யுக்தமின்றாம் எனின்,

(உத்தரம்) அங்ஙனங் கூறுவது தக்கதன்று; ஆன்மா பிராணன் என்னும் இரு மொழிகளின் பொருளாயினர் சிவபெருமான் எனல் உசிதம்; உபாசனை முத்திறப்படுதலின். பரப்பிரமசொரூபமாகவும், போக்தாவின் (ஆன்மாவின்) சொரூபமாகவும், போக்கியத்தின் (புலப்படும் பொருளின்) சொரூபமாகவும் ஈண்டு உபாசனை முத்திறத்ததாகக் கூறப்பட்டது; (போக்தா போக்கியம்) என்னும் இரண்டும் அவர் வடிவமாய் அவரை ஆதாரமாய்க் கோடல்பற்றிப் பொருத்தமாதலின். சிவபெருமானுடைய சொரூபோபாசனை தாமசமின்றி மோக்ஷத்துக்கு ஏதுவாகும். *(போக்தா போக்கியம்) என்னும் இரண்டும் காலவிளம்பத்தில் முத்திபாலிக்கும். ஆகலின், இந்திரனுக்குச் சிவபெருமான் ஆன்மாவாதல்பற்றி, இந்திரன் உபாசிக்கற்பாலன் என நிர்ணயிக்கப்பட்டது.

---

* முத்திற உபாசனைகளுள்ளே போக்தாவாகிய இந்திரன் தன்னைப் பிரமமாகக் கூறியது போலவே, (போக்தாவாகிய) கிருஷ்ணரைப் பிரமமாகப் பகவற்கீதை கூறியதூஉமாம். ஆகலின் இவ்வுபாசனை காலவிளம்பத்திற் பயன் கொடுக்குமன்றி நேரே மோக்ஷத்துக்கு ஏதுவாகாது.

## முதலாம் அத்தியாயத்து

# இரண்டாம் பாதம்.

---

## (க) சர்வத்திரப்பிரசித்தாதிகரணம்.

---

பிரமத்தைப் போதிக்கும் வேதாந்த வாக்கியங்கள் அனந்தமாதலின், ஒவ்வோர் வாக்கியத்தையுமெடுத்துதகரித்து விசாரித்தல் கூடாது. அது புற்றிச் சந்தேகாஸ்பதமாகிய சில வாக்கியங்களை உதகரித்தல் வாயிலாக, மற்றைய வாக்கியப் பொருள்களும் அந்நியாயங்கள் கொண்டு நிர்ணயம் செயற்பாலன. சில வாக்கியங்கள் தாற்பரியலிங்கசமந்வயத்தினுற் பிரமத்தை உணர்த்துவன என்று சூத்திரிக்கப்பட்டன.

அவற்றுள்ளே ஸ்பஷ்டலிங்கங்கள் சில முதற்பாதத்தில் விசாரிக்கப்பட்டன.

அதிகம் ஸ்பஷ்டமாகா இலிங்கங்கள் சில இரண்டாவது பாதத்திற் சூத்திரகாரரால் விசாரிக்கற்பாலனவாயின.

ஸவ-ீத்ர ப்ரஸிஜோபஜெமாக (க. உ. க)

**(ங.ங) *சர்வவியாபியாயினுரை உபதேசிப்பதால் (இவ்வாக்கியம் சிவபெருமான் மேற்று).**

ஃஒநாஃயஃ ப்ராணஶரீரோ ஹாரூபஸ்ஸத்யஸம்கல்ப ஆகாஶாத்மா ஸவ-ீகூஃ-ா ஸவ-ீகாஃஃ (சாந். ங. கச. உ)

“மநோமயரும், பிராணசரீரரும், சோதிசொரூபரும், சத்தியசங்கற்பரும், ஆகாயவியல்பினரும், சர்வகர்மரும், சர்வகாமரும்” என்னும் சாந்தோக்கியோபநிடத சுருதியே விஷயம்.

ஈண்டு மனோமய (ஞானமய) முதலிய தர்மமுடையராகக் கேட்கப்பட்டவர் சிவபெருமானு? ஆன்மாவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இது ஆன்மாவை உணர்த்திற்று. எதனுல்? இவன் மிகுதியும் அடுத்துநின்றமையின்.

---

*எல்லாவுலகழுமானுய்நீயேயேகம்பமேவியிருந்தாய்நீயே
நல்லாரைநன்மையறிவாய்நீயேஞானச்சுடர்விளக்காய்நின்ருய்நீயே
பொல்லாவினைகளறுப்பாய்நீயேபுகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
செல்வாயசெல்வந்தருவாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ.
(திருவையாறு, நாவு, எ)

ஃய வஜு க்ரதுமயஃ புருஷோ யதா க்ரதுரஸ்மிம்லோகே புருஷோ பவதி ததேதஃ ப்ரேத்ய பவதி ஸ க்ரதும் குர்வீத (சா. ௩. கச. க)

"பின்னரும் மனிதன் அறிவுடையவன்; எங்ஙனம் இவ்வுலகில் அவன் அறிவு நிகழ்கின்றதோ, அங்ஙனமே இவ்வுலகத்தைத் துறந்த பின்னும் ஆவன்; ஆகலின் அவன் இவ்வறிவையும் விசுவசிப்பையும் அடைவானாக" என [மேலே உதகரித்த (விஷய) வாக்கியத்துக்கு (சாங். ௩. கச. உ) முன் வாக்கியமாகக் காணப்படும் இவ்வாக்கியத்திலே (சாங். ௩. கச. க)] இவ்வு லகத்தினும் மறு உலகத்தினும் கன்மவயத்தினாற் சுழன்று திரிபவன் ஆன்மா என்று கூறிய பின்னர், "மனோமயன்" என்பது கேட்கப்படுகின்றது. ஆகலின் மனோமயமுதலிய தருமமுடையவன் ஆன்மா; மனோமயமுடை மை பிராணசரீரமுடைமை முதலிய சம்சாரலக்ஷணம் சிவபெருமானுடைய இலிங்கம் அன்று. 'சத்தியசங்கற்பம்' என்றதைச் சதி அசங்கற்பம் என்று பிரித்து, யதார்த்தமாகிய "சத்திலே கருத்திறங்காதவன்" எனப் பொருட் படுத்தல்பற்றிச் "சத்தியசங்கற்பம்" என்றது சம்சாரியாகிய ஆன்மாவுக் குரிய குணமாக யோஜிக்கற்பாற்று. ஆகலின் எப்பிரகாரத்தானும் மனோ மய முதலிய தர்மமுடையவன் ஆன்மாவேயாம், சிவபெருமான் அன்று என ஆசங்கிப்பின்,

(சமாதானம்) கூறுதும். *மனோமயமுதலிய தர்மமுடையார் சிவ பெருமானே. எங்ஙனம்?

ஸர்வம் கஸ்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத।

(சாங். ௩. கச. க)

"இவை அனைத்தும் பிரமம்; தோற்றம், நிலை, இறுதியாம் இவை பிரமத்தி னாலாகலின், ஒருவன் அதனை உபாசிப்பானாக" என்னும் உபக்கிரமசுருதி யிலே சிவபெருமானே அனைத்துக்குங் காரணராய் உபாசிக்கற்பாலரென உபதேசிக்கப்படுகின்றமையின். இச்சுருதியின் தாற்பரியம் வருமாறு:— படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றும் பிரமத்தின்பாலன; சித்தும் அசித்துமாயுள்ள இவையனைத்தும் பிரமமேயாகலின், ஒருவன் சாந்தமுடையனாய்ப் பிரமத்தை உபாசிக்க என்பதாம். சமுத்திரத்திற் றோன்றி நின்றொடுங்கும் குமிழிக்கூட்டங்கள் ஜலமாயிருத்தல் போன்று, (பரா) சத்தியாரோடியைந்த பிரமத்தினாலெய்தும் படைப்பு முதலியன அப் பிரமமயமாகவேயன்றி, மற்றோர் பிரகாரமாகக் காணப்படுகின்றில. அங் ஙனமே,

---

*மனோமயன் என்றதில் மனசு கo௬-ஆம் இலக்கத்திற் கண்டவாறு ஞான சத்தியின் மேற்று.

𑌅𑌹𑌮𑍇𑌕𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑌾𑌸𑌂 𑌵𑌰𑍍𑌤𑌾𑌮𑌿 𑌚 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌨𑌾𑌨𑍍𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑌤𑍍𑌤𑍋 𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌃 (அதர்வசிரசு. ௧)

"நான் ஒருவனே முதற்கண் இருந்தேன், இருக்கின்றேன், இருப்பேன், எனக்கு வேறாகப் பிறர் யாரும் இல்லை" என அதர்வசிரசிலே சிவபெருமானால் நிரூபிக்கப்பட்டது. பின்னரும்,

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌹𑌮𑍍 (அதர்வசிரசு. ௧)

"பிரமம் நான்" என்றற்றொடக்கத்தவற்றாற் பிரபஞ்சம் அனைத்தும் அவர் வடிவமென விரித்துரைக்கப்பட்டது.

𑌸𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌨𑍍𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 (அதர்வசிரசு. ௧)

"அவர் மறைவினும் மறைவாய் உள்ளவற்றுள்ளே பிரவேசித்தனர்" என்னும் சுருதியிலே "பிரபஞ்சத்துட் பிரவேசித்தமை" என்றது பிரபஞ்சம் அனைத்தும் அவர் சொரூபம் என உணர்த்துதற்குப் போந்த காரணமாதலை உணர்த்திற்று. பிரமத்துக்கு வேறாகப் பிரபஞ்சத்துக்குப் படைப்பு, நிலை, இறுதி இல்லையாமாகலின், அப்பிரபஞ்சம் பிரமத்தினின்று வேறுபடாது. இதுபற்றியே,

𑌶𑌕𑍍𑌤𑌯𑍋𑌽𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌶𑌕𑍍𑌤𑌸𑍍𑌤𑍁 𑌶𑌕𑍍𑌤𑌿𑌭𑍇𑌦𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑌂 𑌨 𑌵𑌾𑌞𑍍𑌛𑌤𑌿।
𑌤𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍍𑌯𑌮𑌨𑌯𑍋𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌹𑍍𑌨𑌿𑌦𑌾𑌹𑌕𑌯𑍋𑌰𑌿𑌵।
𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌤𑍋𑌰𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌭𑍇𑌦𑌃 𑌸𑌰𑍍𑌵𑌦𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃।
𑌅𑌤𑌸𑍍𑌤𑌦𑍍𑌧𑌰𑍍𑌮𑌧𑌰𑍍𑌮𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌪𑌰𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌃।
𑌨 𑌵𑌹𑍍𑌨𑍇𑌰𑍍𑌦𑌾𑌹𑌿𑌕𑌾 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌾 𑌵𑌿𑌭𑌾𑌵𑍍𑌯𑌤𑍇॥

"இவ்வுலகெலாம் அவர் சத்திகளே; மகேசுவரர் சத்திமான்; சத்திமானை விட்டுச் சத்தி வேறுபடார்; *(சத்தியும் சிவமுமாம்) இருவரின் தாதான்மியம் அக்கினியும் சூடும் போல நித்தியம், சத்திக்கும் சத்திமானுக்கும் எக்காலத்தும் †பிரிவில்லையாமாகலின். அவ்விருவரும் ‡குணமும் குணியுமாதல்பற்றிப் பராசத்தியார் பரமான்மாவுக்கு உரியர். அக்கினியின் சுடுஞ்சத்தி தீயினின்று வேறாகக் கொள்ளப்படுவதில்லை" என்றற்றொடக்கத்தனவாக அபியுக்தர் உரைக்கின்றனர்.

---

*உபக்கிரமணிகை ௧௯-ஆம், ௧௦௨-ஆம், ௧௩௮-ஆம், ௧௫௬-ஆம், ௧௫௭-ஆம் இலக்கங்களைப் பார்க்க.

† ஊரானையுலகேழாய்நின்றான்றன்னையொற்றைவெண்பிறையானையுமை
யோடேன்றும், பேரானைப்பிறர்க்கென்றுமரியான்றன்னை.
(திருவாலவாய், திருத்தாண்டகம், நாவு, ௫)

‡ விரிந்திடுமொளியைநீங்கியேமதியுஞாயிறும்விளங்கிடமாட்டா
திருந்தியவொளியுமன்னவைதம்மைநீங்கியேசேர்ந்திடாததுபோ

ஶக்த்யாதி ச ப்ருதிவ்யந்தம் ஶிவதத்வஸமுத்பவம்|
தேநைவ தேந தத்வ்யாப்தம் ம்ருதா கும்பாதிகம் யதா||
(வாயு. பூ. ௨௫: ௧௮, ௧௯)

தஸ்யாஸ்ய விவிதா ஶக்தி: ப்ரபோதாநந்தரூபிணீ|
ஏகாநேக ஸ்வரூபேண பாதி பாநோரிவ ப்ரபா||
(வாயு. உத். அ: ௧)

"சத்திதத்துவமுதற் பிருதிவி ஈருயுள்ள தத்துவம் *சிவதத்துவத்தினின்று பிறந்தது; கும்பமுதலியன மண்ணினல் வியாபிக்கப்பட்டாற் போல, அச் சிவதத்துவத்தினல் அது வியாபிக்கப்பட்டது; ஞானனந்தரூபிணியாய்ப் பலதிறப்படும் பராசத்தி சூரியனிற் கிரணம் போல ஏகாநேகரூபமாய் விளங்குகின்றனர்" என வாயுசங்கிதையிற் கூறப்பட்டது.

பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபல க்ரியா ச (சுவே. ௬. ௮)

ஏகோ ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே ய இமாம்ல்லோகாநீஶத ஈஶநீபி: பரமஶக்திபி: (சுவே. ௩. ௨)

"இவர்க்குச் (சிவபெருமானுக்குப்) †பராசத்தியார் சுவாபாவிகமாய் ஞான சத்தி, பலசத்தி (இச்சாசத்தி), கிரியாசத்தி எனப் பலதிறப்படுவாராய்க் கேட்கப்படுகின்றனர்; எவர் ஆளுகின்றனவும் பிறப்பிப்பனவுமாகிய பரம சத்திகொண்டு உலகம் அனைத்தையும் ஆளுகின்றனரோ, அவர் ஏகராகிய உருத்திரர்; இரண்டாவதற்காக அவர்கள் இருந்திலர்" என்றற்றொடக்கத்த சுருதிகள் பரப்பிரமமானது உலகத்தைப் படைத்து ஆஞ்ஞாபித்துக் காக்கும் முடிவிலாச் சத்தியை இயல்பாகவுடையதெனக் கூறுகின்றன. அநேகஞ் சொல்லி என்! சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களினுலும், அபியுக்தசூக்திப்பிரமாணத்தினுலும் சகல சேதனசேதனப் பிரபஞ்ச மகாவிபூதி ரூபையாய், மகாசச்சிதானந்த சத்தையாய், சுவதந்திரமுடையதாய், தேச காலங்களினல் வரையறுக்கப்படாததாயுள்ள பராசத்தியார் அப்பரப்பிரம சிவனுர்க்கு இயல்பாய் வாய்ந்து, அவர்க்கு ‡உருவமும் குணமுமாய் முற்று

விருந்தநம்மிறையுமிறைவியுமொன்ருயுறைகுவரிறைவியாலிறைவன்
பொருந்திடப்போகமுத்திநன்குதவிப்பொற்புறுசத்திமானுவான்.
(வாயுசங்கிதை, சிவஞ்சத்தி விபூதியுரைத்தவத்தியாயம், ௫)

*"வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்பட வினவிடை" ௧-ஆம் இலக்கந் தொடுத்து ௧௪-ஆம் இலக்கம் வரையிற் பார்க்க.

†உபக்கிரமணிகை ௧௫-ஆம் இலக்கத்திற் பார்க்க.

‡ உமையலாதுருவமில்லையுலகலாதுடையதில்லை
நமையெலாமுடையராவர்நன்மையேதீமையில்லை.
(திருவையாறு, திரிநேரிசை, நாவு, ௯)

கின்றனர். அப்பராசத்தியாரை விடுத்துப் பரப்பிரமத்துக்குச் சர்வஞ்ஞத்துவம், சர்வசக்தித்துவம், சர்வகாரணத்துவம், சர்வநியந்திருத்துவம், சர்வோபாசியத்துவம், சர்வானுக்கிராககத்துவம், சர்வபுருஷார்த்தஹேதுத்துவம், சர்வவியாபகத்துவமுதலியவும் இன்று. மேலும் மகேசுவரர், சிவன், மகாதேவர், உருத்திரர் முதலிய பரமநாமங்களும் அவர்க்கு எய்தா. அங்ஙனம் சர்வசேதனசேதனப் பிரபஞ்சசரீரவிசிஷ்டமுடைய பிரமம் சர்வசப்தத்தினற் கூறப்படுகின்றது. நீலம் என்னும் பதமானது நீலநிறத்தை மாத்திரமன்றி, தன்னையுடைய நீலோற்பலத்தையும் உணர்த்தினற் போல, பிரபஞ்சம் என்னும் பதமும் பிரமத்தை உணர்த்துகின்றது. ஆகலின்,

ஸவெ-ௗ ெவெ ரு-ஜ: (தைத். ஆரணி. கo. உச. சஉ)

“(சர்வமும்) அனைத்தும் நிச்சயமாய் உருத்திரர்” என்றற்றொடக்கத்த சுருதிகள் சர்வ என்னும் சப்தத்தினல் உணர்த்தப்படுவது பிரமமெனக் கூறுகின்றன. அங்ஙனமே,

ஸவ-ௗo வஜிஉo ஬்ரஹ (சாங். ங. கச. க)

“(சர்வம்) இஃதெல்லாம் நிச்சயமாய்ப் பிரமம்” என்ற சுருதி சர்வசேதனசேதனப் பிரபஞ்சத்தைச் சரீரமாகவுடைய பிரமத்தை உணர்த்துகின்றது. இந்தப் பிரபஞ்சம் பிரமத்தின் சொரூபமாய்த் துவேஷமுதலியவற்றுக்கு விஷயமாகாமையின், யாவரும் சாந்தமுடையராய்ப் பிரமத்தை உபாசிப்பாராக. இந்தப் பொருள் பௌராணிகர் வாக்கினும் வெளிப்படுகின்றது.

விஶ்ரஹo ஦ெவ஦ெவஸ்ய விஶ்வஸ்யெதஸ்யராசரஸ்ய।
஬ஹுரூஸஂநஜாநதி ஬ஶவஃ பாஶமொஹிதாஃ॥

(வாயு. உத். சூ: க)

விஂ஦்யாதி ஦ெதநாo ஬்ராஹ்மணாவிஂஸா஦ெதநாஸ்ய।
விஂ஦்யா விஂ஦்யாத்மகo ஸவ-ௗo விஶ்வoவிஶ்வரூபொவிஹொஃ।
ருஂவஸ்ய நஸ஦ெஹொ விஶ்வo தஸ்ய வஶெ யதஃ॥

(வாயு. உத். சூ: எ)

ஸ஦ெஸ்ய ஸாயொஂ஬ ஸ஦ஸஂ ஸஜிரெவ ஬்ரயுஜ்யதெ।
விவ்ரீதெ கூ ஸஂஸா஬ஃ கயஸ்தெ ஦ெஶவா஦ிஹிஃ।
ஸஂஸாஂஸஂ ஜகஜிஶ்வo ஶரீரo வரமெஷ்டிநஃ॥

(வாயு. உத். சூ: கக, கஉ)

வ்ருக்ஷஸ்ய ஊஂஸெகெ஻ ஶாவாஃ வுஷ்யஂதி வெ யதா।
ஶிவஸ்ய வூஜயா த஥ஂ வுஷ்யஂதஸ்ய வவுஜஂஜஃ॥

(வாயு. உத். ச: உகூ)

ஆத்மா தஸ்யாஷ்டமீ மூர்த்தி: ஶிவஸ்ய பரமாத்மந:|
வ்யாபிகேதரமூர்த்தீநாம் விஶ்வம் தஸ்மாச்சிவாத்மகம்||
(வாயு. உத். ச: உஅ)

தேஹிநோ யஸ்ய கஸ்யாபி நிக்ரஹ: க்ரியதே யதி|
அநிஷ்டமஷ்டமூர்த்தேஸ்ஸ்யாத்தத்ர கார்யா விசாரணா||
(வாயு. உத். ச: ௩உ)

ஸர்வோபகாரகரணம் ஸர்வாநுக்ரஹணந்ததா|
ஸர்வாபயப்ரதாநஞ்ச ஶிவஸ்யாராதநம் விது:||
(வாயு. உத். ச: ௩0)

*"தேவாதிதேவருடைய வடிவம் இந்தச் சராசரம்; இவ்வுண்மையைப் பாசமிகுதியினாற் பசுக்கள் அறிகின்றில; சேதனத்தை (பசுவை) வித்தை எனவும், அசேதனத்தை (பாசத்தை) அவித்தை எனவும் கூறுவர்; வித்தை அவித்தை என்னும் பிரபஞ்சம் அனைத்தும் சந்தேகமின்றி வியாபகராகிய விசுவகுருவின் சரீரம்; விசுவம் அவர் வசத்ததாகலின். சத் என்னும் மொழி சத்துக்கும் சாதுவுக்கும் செல்லும் என்று சத்துக்களாற் பிரயோகிக்கப்படுகின்றது. அசத்து என்றது அவற்றுக்கு மாறானவற்றை உணர்த்தும் என்று வேதவாதிகள் கூறுவர். சத்தும் அசத்துமாயுள்ள விசுவம் அனைத்தும் சிவபிரானுருடைய சரீரம்; † விருக்ஷமூலத்திலே இறைத்த நீரால் அம்மரச் சாகைகள் புஷ்பிக்குமாறுபோல, சிவபெருமானுடைய பூசையினால் அவர் சரீரமாகிய உலகம் செழிக்கின்றது; பரமான்மாவாகிய சிவபெருமானுக்கு எட்டாவது மூர்த்தம் மற்றைய மூர்த்தங்களுள்ளே வியாபகமாகிய ‡ ஆன்மா; ஆகலின் உலகமனைத்தும் சிவசொரூபம்; எந்தத் தேகமு

* நிறைந்தானை நீர்நிலந்தீவெளிகாற்
றாகிநிற்பனவுநடப்பனவுமாயினானை.
(திருநாகேச்சரம், திருத்தாண்டகம், நாவு, சு)

நிற்பனநடப்பனயாவுநேர்ந்திடிற்
பொற்புறுசடையவனுருவம்போலுமா
லற்புதப்படவிவ்வாறமர்வனென்பதைச்
சொற்படுபசுக்கடாந்தோன்றவோர்ந்திடா.
(வாயுசங்கிதை, பரசிவப்பிரபாவமுரைத்தவத்தியாயம், க)

† வேரினிற்றெண்ணீர்வார்த்திடத்தருவின்கொம்புகள்மிகத்தழைப்பதுபோற்
றாரணிகொன்றையண்ணலைப்பூசைசெய்திடிலுலகெலாந்தழைக்கு
மேர்பெறவாதலான்மணிவண்ணவிறைவனைப்பூசியென்றுரைத்தான்
பாரொடுவிசும்பும்புகழ்ந்தெடுத்தேத்திப்பணியுபமன்னியுவென்பான்.
(வாயு, பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்தவத்தியாயம், அ)

‡ இருநிலனாய்த்தீயாகிநீருமாகியியமானனாயெறியுங்காற்றுமாகி
யருநிலையதிங்களாய்ஞாயிறாகியாகாசமாயட்டமூர்த்தியாகி.
(பொது, நின்றதிருத்தாண்டகம், நாவு, க)

டைய ஆன்மாவேனும் நிக்கிரகத்துக்கு ஆளாயின், அது முழுமையும் அட்டமூர்த்தமுடையார்க்கு வெறுப்பாய் முடியும்; இதனையுற்று ஆராயவேண்டியதின்று; எல்லோர்க்கும் உபகாரமாயிருத்தலும், யாவர்மீதும் அருளுடைமையாதலும், எல்லோர்க்கும் அபயப்பிரதானஞ் செய்தலுமாம் இவையனைத்தும் சிவாராதனம் என்று கொள்ப; பிரமம் சர்வாகாரமாயிருத்தலிற் சர்வம் பிரம்ம" என்றும்,

ஶாந்த உபாஸீத (சாங். ங. கச. க)

"ஒவ்வொருவரும் சாந்தமாய்ப் பிரமத்தை உபாசிக்க" என்றும் கூறல் பொருத்தம். ஆகலின், உபக்கிரமத்திலே உபாசிக்கற்பாலதாகக் கூறப்பட்ட பிரமமே மனோமய (ஞானமய)த்துவமுதலிய தர்மத்தையுடையதாகும். (இதற்குரிய) மனோ (ஞான) மயத்துவாதி குணம் சம்சாரிக்குரிய இலக்ஷணமன்று; பிரமமானது உபாசிக்கற்பாலதாம் ஓர் வடிவம் வாயிலாகப் பரிச்சேதமுறலான். தனது நினைவு உடையனாகக் கூறப்படும் ஆன்மாவை ஞானமயமுடையனாக மேலே உரைத்தமை அயுக்தம். உபாசனை விதிக்கும் வாக்கியத்திலே, படைப்பாதி விசிஷ்டகுணத்தையுடைய பிரமம் உபாசனைப்பொருளாகப் பொருட்படுத்தப்படவேண்டியவிடத்து, இடையில் ஆன்மாவை உபாசனைப் பொருளாகக்கொண்டு புகுத்தல் கூடாது; விசுவதேவர் சம்பந்தமாகிய *ஆமிக்ஷாவில் வாஜின்களுக்குரிய வாஜினவைப் பிரவேசிப்பித்தல் (மீமாஞ்சையிற்) கூடாதவாறுபோல. ஆகலின், பிரமமே ஞானமயமுதலிய குணங்களோடு உபாசிக்கற்பாற்று. (க)

(ஆக்ஷேபம்) உபக்கிரமத்திலே கூறிய பிரமமே மனோமயமுதலிய விசிஷ்டதருமமுடையதாகக் கூறப்பட்டவிடத்து, அவாந்தரத்தில் எய்திய ஆன்மாவைப்பற்றிப் பிரசங்கித்தல் அநர்த்தமாகுமாம் என ஆக்ஷேபிக்க,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

விவக்ஷித குணோபபத்தேஶ்ச (க. உ. உ)

(ஙச) உரைக்கப்பட்ட குணங்கள் பொருத்தமாதலினாலும்.

"சத்தியசங்கற்பத்துவம்" "சத்தியகாமத்துவம்" என்பனவாதியாக உரைக்கப்பட்ட குணங்கள் பிரமத்துக்குப் பொருந்துதலான், அந்தப் பிரமமே உபாசிக்கற்பாற்று; அவாந்தரமாகச் சித்தித்த ஆன்மா உபாசகன்.

---

நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றான்
(திருத்தோணோக்கம், ௫)

ஈண்டு இயமானன், மைந்தன் என்பன சிவபிரானது எட்டாவது மூர்த்தமாகிய ஆன்மாவின் மேற்று.

*பூருவமீமாஞ்சை. உ. உ. உங.

ஆண்டு உபாசியப்பொருளாகிய பிரமத்துக்கு உபாசகன் ஆவசியகம் அபே க்ஷிக்கப்படுதலின், அந்த ஆசங்கை ஒவ்வாது. (உ)

## (உ) சாரீராதிகரணம்.

---

ஈண்டுச் சாமானியமாக ஆன்மா உபாசியனுகான், பின் உபாசகனும் என்று மேலே நிரூபிக்கப்பட்டது. பின்னும் சமஸ்த சிவசமஷ்டிரூப இரண் ணியகருப்பருக்கு உபாதானகாரணராகிய நாராயணரும், விசுவாதிகப் பிர மத்தை உபாசிப்பவராமன்றித் தாம் உபாசியராகார் என உரைத்தற்கெழுந் தது இவ்வதிகரணம்.

அநுபபத்தேஸ்து ந ஶாரீர: (க. உ. ந)

## (நு) ஆயின் பொருந்துமாறின்மையிற் சரீரி அன்று.

விஶ்வாத்மானம் ஈஶ்வரம் ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் நாராயணம் மஹாஜ்ஞேயம் (தைத். ஆரணி. கo. கந. உக)

"விசுவபதியும், ஆன்மாவும், ஈசுரரும், நித்தியரும், நல்லோரும், அழிவில் லாதவருமாயுள்ள நாராயணரே மிகுதியும் அறியற்பாலர்" என்றற்றொடக் கத்த மகோபநிடத சுருதியே ஆராயற்பாலதாகிய விஷயம்.

விசுவபதித்துவாதி இலக்ஷணமுடையராகக் கூறப்பட்டவர் நாராயணர் எனப்படும் மூர்த்தியான்மாவா? சிவபெருமானு? மற்றொருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்).

ஸஹஸ்ர ஶீர்ஷம் தேவம்

(தைத். ஆரணி. கo. கந. உக)

(முதலாவது). "ஆயிரஞ் சிரசுடைய தேவர்" என்று சுருதி தொடங்கி ஆயி ரம் தலை முதலியவற்றை விதித்தல் வாயிலாக, மூர்த்தியான்மாவாகிய நாரா யணரே உத்தேசியமாக அப்பியாசலிங்கத்தினுற் கூறப்படலானும்,

ஸமுத்ரே(அ)ந்த: விஶ்வஶம்புவம்

(தைத். ஆரணி. கo கந. நo)

(இரண்டாவது). "சமுத்திரத்தில் இருப்பவரும், உலகத்துக்கு நன்மை செய்பவரும்" எனச் சமுத்திரத்திற் சயனித்தலாதிய இலக்ஷணங்கள் அவ ருக்குக் கூறப்படலானும்,

(மூன்றாவது). நாராயணரது பரியாய நாமங்களாகிய அச்சுதன், அரி முதலிய சப்தப்பிரயோகங்கள் காணப்படலானும் நாராயணராகிய மூர்த்தி

யான்மாவே விசுவபதித்துவ முதலிய இலிங்கத்தினாற் பிரதிபாதிக்கப்பட்டா ரெனின்,

(சித்தாந்தம்) நாராயணரது ஆன்மா சிவபெருமான். எங்ஙனம்? விசுவ பதித்துவமுதலிய சிவ குணங்கள் நாராயணர்க்குச் செல்லாவாமாகலின்.

வஶூநாம் வதயெ வ்ருக்ஷாணாம் வதயெ ஜமதாம் வதயெ।
(தைத். சங்கிதை. ச. ரு. உ. க, உ)

"பசுக்களுக்குப் பதியாயினர்க்கும், விருக்ஷங்களுக்குப் பதியாயினர்க்கும், உலகுக்குப் பதியாயினர்க்கும் (நமஸ்காரம்)" என்றற்றொடக்கத்த சுருதிக ளாற் சமஸ்த புவனாதிபத்தியம் சிவபெருமானுக்கே அடுத்தடுத்து உரைக் கப்பட்டது.

வகொஹி ருெஷ்ரா நத்விதீயாய தஸ்ஶுய்ந இமாெந்லொகாநீஶத ஶஶநீஹிঃ (சுவே. ௩. உ)

"எவர் உலகங்களையெல்லாம் ஆளுஞ் சத்தியினாலே ஆளுகின்றனரோ, அவர் ஏகராகிய உருத்திரர்; அவர்கள் இரண்டாவதற்காக இருந்திலர்" என்னும் சுருதியினால் உருத்திரர்க்கு வேறாக (மற்றொருவர்க்கு) ஜகதீசுவரத்துவம் இல்லை என்றுரைக்கப்பட்டது.

விஶ்வாயிகொ ருஷ்ரஃ।
(தைத். ஆரணி. ௧௦. ௧௨. உ௮)

"விசுவாதிகர் உருத்திரர்" என்னும் சுருதியானது பிரபஞ்சத்துக்கெல்லாம் நாயகத்தன்மை அவர்க்கே என்று கூறுகின்றது. உலகத்துப் பதித்துவ மாதன் முதலிய இலக்ஷணமுடையார் நாராயணர்க்கு ஆன்மாவாயுள்ள சிவ பெருமானே என்பது சமீசீனம். (௩)

(ஆக்ஷேபம்) "நாராயணான்மா" என்றதை நாராயணர்க்கு அந்தரி யாமியாயுள்ள சிவபெருமான் எனப் பொருளுரைத்தல் அயுக்தம்.

நாராயணவரம் ஬்ரஹ (தைத். ஆரணி. ௧௦. ௧௩. உ௧)

"நாராயணபரம்பிரம்ம" என்னுஞ் சுருதி "நாராயணர் பரப்பிரமம்" எனக் கூறி,

வஜொவ ஶ்ரதீகாஶஂ (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௩௦)

பின்னரும் "கமல முகையை யொத்த" என்னும் சுருதி இதயகமலத்திலே புருஷன் இருக்கின்றனன் என உரைத்து,

தஸ்யாெஷ ஶிவா (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௩௦)

"அதன் மத்தியிலே அக்கினி சிகை" என்னும் சுருதி சீவான்மசொரூபம் கூறி,

தஸ்யாஃஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித꞉।

(தைத். ஆரணி. க௦. கரு. ௬௦)

"அந்தச் சிகையின் மத்தியிலே பரமான்மா ஸ்தாபிக்கப்பட்டனர்" என்னுஞ் சுருதி நாராயணரே சீவாந்தரியாமியும் பரமான்மாவுமாம் என்றும் கூறலான், நாராயணர் உபாசியரென அறியப்படுகின்றனர்.

ஸ ப்ரஹ்மா ஸ ஶிவ꞉ (தைத். ஆரணி. க௦. கரு. ௬௦)

"அவர் பிரமன், அவர் சிவன்" என்றற்றொடக்கத்த சுருதியாற் பிரமன் சிவன் முதலாயினோரெல்லாம் அவரது விபூதி என்று கூறப்படுகின்றனர். ஆகலின், நாராயணரே விசுவபதியாகிய பரப்பிரமமாயும் சீவனுக்கு அந்தரியாமியாயும் உபாசிக்கற்பாலர். ஆகலின் சிவபெருமானை நாராயணருடைய ஆன்மா என்றும், நாராயணர்க்கு மேலானவர் என்றும், அவரால் உபாசிக்கற்பாலர் என்றும் கூறல் நியாயமன்றென ஆக்ஷேபிக்க,

(சமாதானம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

கர்மகர்த்ருவ்யபதேஶாச்ச (க. உ. ச)

(௩௬) (அவர்கள்) * கர்மமும் கர்த்தாவுமாக உரைக்கப்படலானும்.

ஈண்டுச் சிவபெருமானும் நாராயணரும் முறையே தியேயப்பொருளும் தியாதாவுமாம் கர்மமும் கர்த்தாவுமாகக் கூறப்படுகின்றனர். எங்ஙனமெனின்,

பத்மகோஶ ப்ரதீகாஶம்।

"தாமரை முகையை நிகர்த்த" என்றமையான் இப்போது உரைக்கப்படும் நாராயணரது இருதயமே கூறப்படுகின்றது.

பரமாத்மா வ்யவஸ்தித꞉ (தைத். ஆரணி. க௦. கரு. ௬௦)

---

* மங்கலக்குடியீசனை மாகாளி
வெங்கதிர்ச்செல்வன்விண்ணொடுமண்ணுநேர்
சங்குசக்கரதாரிசதுர்முக
னங்ககத்தியனும்மர்ச்சித்தாரன்றே.
(திருமங்கலக்குடி, திருக்குறுந்தொகை, ஙாவு, ௩)

ஏறுடனேழடர்த்தானெண்ணியாயிரம்பூக்கொண்டு
வாறுடைச்சடையினனையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணைமீண்டக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே.
(திருக்குறுக்கைவீரட்டம், திருநேரிசை, நாவு, ௫)

"பரமான்மா ஸ்தாபிக்கப்பட்டார்" என்றமையாற் பரமான்மாவாகிய சிவபெருமான் நாராயணருடைய இதயத்திற் *தியேயப் பொருளாயினர் எனக் கூறப்படுகின்றது. இங்ஙனம் தியாதாவாதலின் நாராயணர்க்குக் கர்த்திருத்துவமும், தியேயப்பொருளாதலின் சிவபெருமானுக்குக் கர்மத்துவமும் கூறப்படுகின்றன. ஆகலின், நாராயணர்க்கு வேறாகவே பரமான்மா உபாசியராகின்றனர்.

"அவர் பிரமா, அவர் சிவன்" என்றற்றொடக்கத்தவற்றாற் பிரமா விஷ்ணு உருத்திர இந்திராதி பிரபஞ்சவிபூதி விசிஷ்டத்துவம் சிவபெருமானுக்கே கூறப்படுகின்றது. ஈண்டு †விஷ்ணுவானவர் சிவபெருமான் விபூதியாகக் கூறப்படாதொழியினும், கைவல்லியோபநிடதத்தில் அங்ஙனம் கேட்கப்படுகின்றது. இதயகமலத்தையுற்றுக் கூறிய பின்னர்,

உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும்|
த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம்|
த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம்|
ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்|
ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸேந்த்ர: ஸோக்ஷர: பரம: ஸ்வராட்|
ஸ ஏவ விஷ்ணு: ஸ ப்ராண: ஸ காலோக்நி:||

(கைவல்லியம்)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், பிரசாந்தருமாயுள்ளாரைத் தியானித்து முனிவன் சமஸ்த பூதங்களுக்கெல்லாம் காரணரும் சமஸ்தசாக்ஷியுமாயினாரைத் தமசுக்குமேல் அடை

---

* பொறுத்திருந்தபுள்ளூர்வானுளனாகியுள்ளிருந்தங்குண்ணேயைகளை வான்றானை.
(திருக்கருகாவூர், திருத்தாண்டகம், நாவு, ௧0)

காலமுநாள்களூழிபடையாமுனேகவுருவாகிமூவருருவிற்
சாலவுமாகிமிக்கசமயங்களாறினுருவாகிநின்றதழலோன்
ஞாலமுமேலைவிண்ணொடுலகேழுமுண்டுகுறளாயொராலினிலைமேற்
பாலனுமாயவற்கொர்பரமாயமூர்த்தியவனாநமக்கொர்சரணே.
(பொது. தசபுராணம், நாவு, ௫)

என்றற்றொடக்கத்த திராவிட சுருதிகளானும் நாராயணர் இதயத்துள்ளாராகிய பரமமூர்த்தி சிவபெருமான் என்பது பெறப்பட்டது. நாராயணர் சிவபிரானைத் தியானித்தார் என்றவிடத்து, தியானித்தார் என்னும் கிரியைக்கு (தியாதாவாகிய) நாராயணர் எழுவாயாய் நின்றமையின் இவர் கர்த்தா என்றும், அக்கிரியைக்குத் (தியேயப் பொருளாகிய) சிவபிரான் செயப்படுபொருளாதலின் இவர் கருமம் என்றும் கூறப்பட்டார்.

† இக்காலத்துள்ள தைத்திரீய ஆரணியகத்துப் பத்தாம் பிரசினமாகிய மகா நாராயணத்தில் விஷ்ணுவை உணர்த்தும் ஹரி என்னும் பெயர் சுருதியின் மெய்ப்பொருளையும் பாடியகாரர் கருத்தையும் மாறுபடுத்துமாறு புகுத்தப்பட்டிருக்கின்றது. பெரியோர் அதுபற்றிமயங்கார் என்பது.

கின்முன். அவர் பிரமா, அவர் உருத்திரன், அவர் இந்திரன், அவர் அக்ஷரர், பரமசுவராட்டு, அவரே விஷ்ணு, அவர் பிராணன், அவர் காலர், அவர் அக்கினி'' என்றற்றொடக்கத்தனவாக அது கூறுகின்றமையின், அந்த நியாயமே ஈண்டு யோஜிக்கற்பாற்று.

யொ வெ ருத்ர ஸ ஹுவா நஸ்து ஹூதமாதவெஷோ வெ நமோ நம: யஸ்து விஷ்ணுயஸ்து மஹேஸ்வர: (அதர்வசிரசு)

"எவர் உருத்திரரோ, அவர் பகவான்; (அவர்) பூர், புவர், சுவர்; (அவர்) பிரமா (அவர்க்கு நமஸ்காரம்); எவர் விஷ்ணுவும் மகேசுவரருமோ (அவர்க்கு நமஸ்காரம்)'' என்றற்றொடக்கத்தனவாகப் போந்த ஆதர்வணிக சுருதியும் கவனிக்கற்பாற்று. மகோபநிடதத்தினின்று உதகரிக்கப்பட்ட வாக்கியத்திலே (தைத். ஆரணி. க0. கரு. ரு0) பிரமாவுக்கும் சிவனுக்கும் (உருத்திரருக்கும்) மத்தியிலே விஷ்ணு கூறப்படாதொழிந்தமை அவர் சிவோபாசகராகக் கொள்ளப்பட்டமையான். ஆகலின் இவ்வாக்கியங்களுள்ளே விரோதமில்லை. (ச)

(ஆக்ஷேபம்)

ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: (இரு. வே. க0. கூ0. க)

"ஆயிரந்தலையுடைய புருஷர்'' என்று ஆரம்பித்துக் கூறப்பட்ட புருஷர்க்கு

பாதோஸ்ய விஶ்வாபூதானி (இரு. வே. க0. கூ0. ரு)

"விசுவமாகிய பூதமெல்லாம் பாதம்'' என அவரது ஓர் அம்சம் உலகமுழுதுமாமென்று கூறப்பட்டது.

ஸஹஸ்ரஶீர்ஷம் தேவம் (தைத். ஆரணி. க0. கரு. உக)

"ஆயிரம் தலையுடைய தேவர்'' என்று கூறப்பட்டவரே ஈண்டு நாராயணர் என்று அறியப்படுகின்றனர்.

நாராயணபரம் ப்ரஹ்ம (தைத். ஆரணி. க0. கரு. உக)

"நாராயணபரம் பிரம்ம'' என்றவிடத்தும் அவர் பிரமமாகக் கூறப்பட்டனர். பிரமமே எல்லோராலும் வழிபடற்பாலதாக, இதற்கு மற்றொருவர் தியேயப்பொருளானமை எங்ஙனம்? என ஆக்ஷேபிக்க,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

ஶப்தவிஶேஷாத் (க. உ. ரு)

## (ருஎ) சப்தவிசேஷத்தினல்.

"நாராயணபரம் பிரம்ம'' என்னும் விசேஷசுருதி "நாராயணர்க்கு மேலாயது பிரமம்'' என்று கூறுகின்றது. ஆகலின் நாராயணர்க்கு வேறாகிய

பரப்பிரமமே உபாசியப் பொருள்; பரப்பிரமம் ஆயிரந்தலைமுதலியவுடைய விசிட்ட புருஷரூபத்தோடு உலகுக்கு உபாதானமாயிருத்தலின். நாராயண ராவார் பரப்பிரமத்தைத் தமக்கு ஆன்மாவாகவுடையராகிப் பிரபஞ்சாகார மாதலை (க. ச. உ௩) ஆம் சூத்திரவதிகரணத்திற் கூறுவம். (௫)

நாராயணர் உபாசகர் என மற்றோர் பிரமாணம் சூத்திரகாரர் தொடுப்பாராயினர்.

ஸ்ம்ருதேஶ்ச (க. உ. ௬)

(௩அ) ஸ்மிருதி உண்மையானும்.

ஏவமுக்த்வா ததோ ராஜந் மஹாயோகேஶ்வரோ ஹரி:।
தர்ஶயாமாஸ பார்த்தாய பரமம் ரூபமைஶ்வரம்॥

"இங்ஙனம் கூறிய பின், மகாயோகேசுவரராகிய நாராயணர் பரமேசுவர ரூபத்தை அர்ச்சுனர்க்குத் தரிசிப்பித்தனர்" என்னும் (பகவற்கிதை. கக. ௯) ஸ்மிருதியினால், மகாயோகசுவாமியாகிய நாராயணர் "பரப்பிரம சிவபெருமானை யோகசமாதியினாற் றியானித்தனர்" என்பது வெளிப்படுகின்றது. இவ்விஷயத்தையுற்றுச் சிவபெருமான் அசுவத்தாமற்குக் கூறியவிடத்து,

அஹம் யதாவதாராத்: க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா।
தஸ்மாதிஷ்டதம: க்ருஷ்ணாதந்யோ மம நவித்யதே।
(ம. சவுத்திகபருவம். எ: ௯உ)

"யான் இளைப்புறுத் தொழில் பூண்ட கிருஷ்ணரால் விதிப்படி ஆராதனை செய்யப்படுகின்றேன்; ஆகலின் கிருஷ்ணரினும் எனக்கு அதிப்பிரீதியுடையர் பிறர் இலர்" என்றனர். ஆகலின் நாராயணர்க்கு வேறாக உபாசியமாகிய பரப்பிரமம் உளது என்பது பெறப்படுகின்றது. (௬)

சூத்திரகாரர் பின்னரும் ஆக்ஷேபித்து மறுக்கின்றனர்.

அர்பகௌகஸ்த்வாத்தத்வ்யபதேஶாச்ச நேதிசேந்ந நிசாய்யத்வாதேவம் வ்யோமவச்ச (க. உ. எ)

(௩௧) அவர் சிறு நிவாசமுடைமையானும், அங்ஙனம் சூசிக்கப்படலானும் (அவ்வாறு) இல்லை (எனக் கொள்ளின்) இன்று; அவரே அங்ஙனம் (சூசிக்கப்பட்டார்) வழிபடற்பாலராகலின்; அவர் ஆகாயமும் போல்வர்.

(ஆக்ஷேபம்)

நீவாரஶூகவத்தந்வீ பீதாபாஸ்வத்யணூபமா।
தஸ்யா: ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:॥
(தைத். ஆரணி. ௧௦. க௩. ௩௦)

*"நீவாரதானியக் கூர்போல மெல்லியதாய், மஞ்சணிறமுடையதாய ஒளி ஒன்றுளது; அந்த (ஒளிச்) சிகை மத்தியிலே பரமான்மா நிலையுறுகின்றனர்" என்பது சுருதி. சிறிய அக்கினிச் சோதியினுள்ளே இருத்தலானும், சிறு இடத்தை உடைமையானும், சிறிதென்று கூறப்படலானும், இவர் சர்வவியாபகராகிய சிவபெருமானல்லராமெனின்,

(சமாதானம்) அங்ஙனமன்று. உபாசிக்கப்படுபவராதலின், அங்ஙனம் கூறப்பட்டனர். சொரூபத்தினால் அற்பரல்லர், ஆகாயம் போற் சொரூபம் பெரிதாய் முற்றுதலின்; கடங்களுள்ளே அமைந்த ஆகாயம் அக்கடவுபாதியால் அற்பத்துவமும், சுவரூபத்தினால் மகத்துவமுமாயிருத்தல் போல. ஆகலின் விரோதமின்று. (எ)

(ஆக்ஷேபம்) பின்னரும் சூத்திரகாரர் ஆசங்கித்துப் பரிகரிக்கின்றனர்.

ஸம்ஹோகப்ராப்திரிதிசேந் நவைஶேஷ்யாத் (க. உ. அ)

(சo) போகம் அடைதற்பொருட்டாமெனின் அன்று, பேதமுண்மையின்.

(ஆக்ஷேபம்)

நாராயணபரம் ப்ரஹ்ம (தைத். ஆரணி. கo. கஙு. உகூ)

(நாராயணபரம்பிரம்ம) நாராயணர்க்கு மேலாய அவ்வஸ்துவே உபாசியமாகிய பிரமம்; அவ்வஸ்துவானவர்

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்கலம் ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் (தைத். ஆரணி. கo. உஙு. சக)

"இருதமும், சத்தியமும், பரப்பிரமமும், புருஷரும், கிருஷ்ணபிங்களரும், ஊர்த்துவவீரியரும், விரூபாக்ஷரு"மாகக் கூறப்படுகின்றார்; பரமசத்தி எனப்படும் உமாசத்தியோடியைந்து சபளாகாரமுற்றமையாற் கிருஷ்ணபிங்களர் எனவும், அக்கினியை வீரியமாகவுடைமையின் ஊர்த்துவவீரியர் எனவும், முக்கண்ணுடைமையின் விரூபாக்ஷர் எனவும், மேலே உரைத்த தகரபுண்டரீகத்திற் கிடத்தலாற் புருஷர் எனவும், மனம் வாக்குகளுட் பேதமின்மையான் இருதம் சத்தியம் எனவும் பரப்பிரமத்துக்கு இலக்ஷணம் கூறப்பட்டது. படவே, முக்கண் முதலிய இலக்ஷணங்கள் வாய்ந்த சரீர சம்பந்தமுடைமையின் சுகதுக்கபோகங்களுக்கு அப்பிரமம் ஆளாகின்றதெனின்,

(உத்தரம்) அன்று; பேதமுண்மையின். சுகதுக்கபோகத்துக்கேதுவாம் ஆன்மசரீரங்களினின்று பிரமரூபத்துக்குப் பேதமுண்டு; பிரமம்

* காட்டுநெல்.

விரும்பிய வடிவம் எடுத்தலானும், ஆன்மாக்கள் கன்மகாரணமாகச் சரீரங் கோடலானுமாம். அதுபற்றியே சிவபெருமானுக்குச் சம்சாரிக்குரிய சரீர சம்பந்த குணமொன்றுமின்மையின்,

ஸவஹதவாவூா விஜரொ விருத்யு-விஸொகொ விஜிவஜெூா zவிவாஸஸத்யகாஶஸத்யஸஂகலூ: (சாந். அ. க. ரு; அ. எ. கா)

"பாவமில்லாதவரும், ஜரையில்லாதவரும், மரணமில்லாதவரும், சோகமில்லாதவரும், பசியில்லாதவரும், தாகமில்லாதவரும், சத்தியகாமரும், சத்தியசங்கற்பருமாம்" என்று சுருதியிலே கூறப்படுகின்றனர். சம்சாரியாகிய ஆன்மா இவ்வாறு இலன். ஆகலின் சிவபெருமானுக்கு அப்பிராகிருதங்களாய், பாவ ஜரை மரண சோக முதலிய இலாதனவாய், விரும்பியாங்குக் கொள்ளப்படுவனவாய லீலாமங்களரூபசரீரங்கள்

ஸ்திரெஹிரஂமெகெ: வுருருவ உ_ராூ: |

(இரு. வே. உ. கூ. கூ)

"ஸ்திரமாகிய அங்கங்களோடு அநேக வடிவுடையரும் உக்கிரருமாயினர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, பூரணமும் நித்தியமுமாயுள்ளன என்று அறியப்படுகின்றது. பரப்பிரம சிவபிரான் ஆன்மாவினின்று வேறுறுகின்றமையின், அவர் ஆன்மாவைப்போற் சரீரசம்பந்த தோஷத்துட்படார். ஈண்டு உபக்கிரமாதிலிங்கங்களான் விருபாக்ஷமுடைய பிரமம் சர்வோத்கிருஷ்டமாய் உபாசிக்கற்பாலதெனல் யுக்தமே. எங்ஙனமெனின், உபக்கிரமத்திலே

கணொரணீயாநீ |

(தைத். ஆரணி. க0. கஉ. உசு; கட. உ. உ0; சுவே. கூ. உ0; கை. உ0)

"அணுவுக்கணு" என்த் தொடங்கி,

ஶஹிஶாநீஶஃ|

"மகிமைக்குணமுடைய ஈசர்" என்பதிறுதியாகப் போந்த சுருதியிலே சகல செந்துக்களின் இதயகுகைக்கண்ணே வசித்தலானும், தமது மிகுந்த கருணையினுற் சோகம் நீங்கப்பெற்ற புருஷனுற் றரிசிக்கப்படலானும், மிகுந்த மகிமையுடைய ஈசர் என உரைக்கப்பட்டனர். பின்னர்,

ஸவ்த வாணா: வுஹவக்தி தஸாக|

(தைத். ஆரணி. க0. கஉ. உசு)

"ஏழு பிராணன்கள் அவரினின்று உற்பத்தியாகின்றன" என்றற்றொடக்கத்த சுருதியாற் பரமசத்திமானுகிய அவர் பிராணுதியோடியைந்த பிரபஞ்சத்துக்கு உபாதானகாரணராக நிரூபிக்கப்பட்டனர். பின்னரும்,

யொ ஢ெவா நா௦ ஢ுயஶ௦ ஢ாரஹாதி஫ாயிகொ ரு஢ொ ஶஹ ஷி஀ஂ। ஹிரண்யஂமஂ஀௦ ஢ஶ்யத ஜாயஶா நந். ।

(தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"தேவர்கட்கு முன்னே முதற்கண் இருந்தவரும் விசுவாதிகருமாகிய உருத்திரமகர்ஷியானவர் இரண்ணியகருப்பரைப் பிறக்கக் கண்டனர்" என்று கூறியவாறு விசுவாதிக்கியத்தினாலும், சர்வஞ்ஞதையினாலும், சமஸ்த காரியங்கட்கும் பிரதமராகிய இரண்ணியகருப்பரைப் பிறப்பித்தமையானும் (அவர்) நிமித்தகாரணராக உரைக்கப்பட்டனர்.

஢ரெண நாகஂ (தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"பரேணநாகம்" என்ற சுருதியினாற் பரமாகாய குகையின்கண்ணே இருப்பவரெனக் கூறப்பட்ட வஸ்துவானவர் பயனை அபேக்ஷியாது கர்மங்களை அனுஷ்டிப்பவராய், வேதாந்த தாற்பரியமுணர்ந்தோராய், இந்திரியங்களை அடக்கினோராயுள்ள யதிகளுக்குப் பராமிர்தப்பொருளாய் அடையற்பாலரென வர்ணிக்கப்பட்டார். அவரை அடையும் உபாயம் என்னையெனின்,

஡ஹு௦ விவாஂ (தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"தகரம் விபாப்மம்" என்னும் சுருதியினால் தகரோபாசனை செய்யவேண்டும் என உரைக்கப்பட்டது. ஆண்டு,

தஸ்மி நூஹஸ்஡ு வாஸி஡வஂ ।

(தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"தகரபுண்டரீகத்திலே எந்த வஸ்து உள்ளதோ அது உபாசிக்கற்பாற்று" எனச் சாமானியமாக உரைக்கப்பட்டது. அது எப்பொருளாமென ஆக்ஷேபிக்குங்கால்,

யஃவரஸஶஹெஸுரஃ (தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"எவர் மேலானவரோ அவர் மகேசுவரர்" எனப் பெயரிய அப்பொருள் வர்ணிக்கப்பட்டது. உபாசிக்கப்படும் அப்பொருளின் ரூபம் என்னை என ஆக்ஷேபிக்கின் "இருதம் சத்தியம்" என்றற்றொடக்கத்த சுருதியினால் விரூபாக்ஷத்துவ முதலிய இலக்ஷணரூபமுடையதெனத் தொகுத்துரைக்கப்பட்டது. ஈண்டு அவாந்தர வாக்கியத்தினாற் சித்திக்கப்பெற்ற நாராயணராவார் மேலே போந்த அதிகரணநியாயத்தினால் உபாசகராக முற்றினார். ஈண்டு எல்லோர்க்கும் சிவோபாசனாதிகாரம் உளதேனும், நாராயணர் உபாசகர்களுள்ளே சிரேஷ்டராதலின், அவர் ஈண்டு விதந்து கூறப்பட்டனர். அந்த உபாசியரும் விரூபாக்ஷருமாகிய பிரமத்தை உபாசகராகிய நாராயணர்

*அபேதபாவனை செய்தமையான், அப்பரமேசுவரர்க்குரிய குணங்களை உலகுக்கு உபாதானரும், சிவபெருமானுல் வியாபிக்கப்பட்டவருமாகிய அந்நாராயணர்க்கு ஏற்றிக் கூறுதல் சால்பே. (அ)

## (௯) அத்திரதிகரணம்.

---

ஸூத்ர அத்தா சராசரக்ரஹணாத் (க. உ. கூ)

**(சக) †அவர் நுங்குபவர், சராசரத்தையுற்றுக் கூறப் படலான்.**

யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரம் சோபே பவத ஓதந: ம்ருத்யுர்யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ: (கட. உ. உச)

"எவர்க்குப் பிராமணரும் க்ஷத்திரியரும் ஓதனமாக, மிருத்தியு உபஸ்கரமாயிற்றோ, அவர் எங்குள்ளாரெனப் பின் யார் அறிவார்" என்னும் சுருதியே விஷயம்.

---

*ப்ரஹ்மாத்யைர் பரம் வஸ்து த்வம் ஜ்யோதி: பர ஞ பரமேஸ்வரேதி நாம: ஸ்தூயதே நாராயண: ஸ்துதிநீதிவாதே ஸ்ரீ யதா கருடபாவநயா கருடதாநீ||

"மாந்திரிகன் (மந்திரரூபமாகிய ஆதிதெய்விக) கருடனை (நாடோறும்) பாவித்து வந்த பயிற்சிவிசேடத்தால் (அம்மந்திரரூபமே தானுக அனன்னியபாவனை செய்து தன் அறிவு அதன் வசமாம்படி உறைத்து நின்று அம்மந்திரக்கண் கொண்டு பார்த்து விஷ வேகத்தை மாற்றுதலாற்) கருடன் (எனப்படுதல்) போல, "பரமேசுவரரே! நாராயணரானவர் உம்மோடு அனன்னியபாவனை செய்தமையினுற் "பரப்பிரமம்" "தத்துவம்" "பரஞ்சோதி" என (உமது திருநாமங்களாற்) கூறப்படுகின்றனர்" என்று சுருதிசூக்திமாலையுடையார் கூறினர்.

†முதலாம் பாதத்து இதராநுபபத்தி அதிகரணம் எனப்படும் இரண்ணியகர்ப்பாதிகரணத்தில் (கஎ—உ0) சிவபிரானைச் சேஷி என்றும், பிரமாவைச் சேஷர் என்றும் நிருபணஞ் செய்தல் வாயிலாகப் பிரமாவுக்கு மேலானவர் பரப்பிரம சிவபெருமான் என்றும், இந்த இரண்டாம் பாதத்து (அநுபபத்தியதிகரணம்) சாரீராதிகரணம் எனப்படும் நாராயணுதிகரணத்தில் (௩—அ) சிவபிரானை உபாசியர் என்றும் நாராயணரை உபாசகர் என்றும் நிருபணஞ் செய்தல் வாயிலாக நாராயணர்க்கு மேலானவர் சிவபெருமான் என்றும், இந்த அத்திரதிகரணமாகிய சங்கார காலருத்திராதிகரணத்தில் (கூ, க0) அயிலப்படும் "பிரமக்ஷத்திரிய காலரைக் கூறினமை பற்றி உபலக்ஷணையினுல் அசுத்த மிச்சிர சுத்தப் பிரபஞ்சத்துள்ள சராசரப்பொருளனைத்தும் கொள்ளப்படும் என்றும், இச்சராசரப்பொருள் அனைத்தையும் ஒருங்கு சங்காரஞ் செய்யும் சாந்தியாதீதகலாசக்கரத்து மஹாருத்திரர் செய்யும் மஹாசங்காரவன்மை ஏகதேசத்து அசுத்தப் பிரகிருதிப் பாலனவாம் சராசரப்பொருள்களைச் சங்கரிக்கும் காலருத்திரர்க்கில்லையாமாதலின், இக்கால்ருத்திரர்க்கும் மேலானவர் மகாசங்கார மூர்த்தியாகிய பரப்பிரம சிவபெருமானும் என்றும் நிருபணஞ் செய்யப்படும். படவே, பிரம விஷ்ணு உருத்திரர் என்னும் மூவர்க்கும் மேலானவர் அருட்சத்தியினின்று பிரிவுருத சிவபெருமானேயாமன்றி, ஏகான்மவாதிகள் கூறும் அநிர்வசநீய மாயாசத்தி விசிட்ட நிர்க்குண ஆன்மப்பிரமமுமன்று, பாஞ்சராத்திரிகள் கூறும் ரமாசத்தியுடைய நாராயணருமன்று என்பது சூத்திரகாரர் சம்மதமாம்.

சண்டு மிருத்தியுவை உபஸ்கரமாகச் சேர்த்துப் பிராமண க்ஷத்திரியர்களினுற் குறிக்கப்பட்ட சமஸ்த சேதனுசேதனப் பிரபஞ்சத்தை நுங்குபவராகக் கேட்கப்படுபவர் சிவபெருமானு? மற்றொருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பரமகாருணிகரும் சர்வாநுக்கிரகருமாயுள்ளார் அனைத்தையும் கவளீகரித்தாராகக் கூறுதல் அநுசிதம். இம்சை என்பது பிறருடைய உயிரைப் போக்குதல். இம்சையைப் பிரவிருத்தி செய்தற்குக் குரோதமே மூலாங்குரம். குரோதமாகிய அமங்கலகுணத்துக்கு மோகமே மூலகந்தம். அந்தச் சர்வசம்ஹார காரணத்துக்குத் தாமசமே காரணம். ஆகலின், அனைத்தையும் சங்கரிப்பவர் தாமசத்தினரே. (அஞ்ஞான இருளினுல்) மூடுண்ட ஞானமுதலியவற்றின் பிரகாசமின்மையே தாமசத்துவம். அனைத்தையும் சங்கரிப்பது பிரமமெனக் கூறின், அது நித்திய சுத்தமும், நிருபாதிக மங்கல வடிவும், சம்சாரகளங்கமிலாததுமாகிய பிரமத்துக்கு அஞ்ஞானம், தமசு, மோகம், குரோதமுதலிய அமங்கலகுணத்தை ஏற்றித் தொடக்குறச் செய்தலாய் முடியும். (அஃதன்றிச்) சுவரூபலக்ஷணமாக நிர்ணயிக்கப்பட்ட முற்றறிவு, வரம்பிலின்பமுடைமை முதலியன பயனற்றனவாயன்றோ முடியும். ஆகலின், இவ்வியல்பினதாகிய குணமுடைய சங்காரஞ் செய்யும் வஸ்து பிரமத்தை ஒழிந்த பிறிதோர் வஸ்துவாமெனின்,

(சித்தாந்தம்) அன்று, பிரமந்தான் அனைத்தையும் சங்கரிப்பதாகக் கூறப்படுகின்றது; எங்ஙனம்? சராசரத்தையுற்றுக் கூறப்படலான். சமஸ்த சராசரப் பிரபஞ்சத்தைப் பிரமம் புசிப்பது அயுக்தம் எனின், அதுவே பிரமத்தின் இலக்ஷணம்; பரிச்சின்ன சத்தியுடைய ஆன்மாவுக்குச் சராசரத்தைச் சங்கரித்தற்கு வன்மை இன்மையின்.

தஸ்மாது௸பஸம்ஹரதே ௨ஹாக்ராஸாய வை நமோ நமஃ|

(அதர்வசிரசு)

“ஆகலின், சங்காரகர்த்தாவுக்கு, * மகாகபளீகாரஞ் செய்பவர்க்கு நமஸ்காரம்” என அதர்வசிரசிலே சிவபெருமானுக்குச் சமஸ்த சங்காரமுளதாதல் கூறப்படுகின்றதன்றி, யாண்டும் ஆன்மாவுக்குக் கூறப்படவில்லை.

---

*காயாந்நிர௸ஜெ௱ஹ௱வாந்ஸ்ர௸ஜெ௱மெஹவொzவிசு|
ஸவ௴ ஸஂஜஹ்ரு௲ஸ்ரூஂஹெ ௱ஜ்ஞயா தெள ௨ஹாபலௌ|
சுவாஞாநாவ்ருஸஂஹா௱ ஸ்௲ஜ்ஞெயஃ ப்ரஜாபதெ|
ஸவ௴ஹ்ராஸொ ௨ஹாஜெவஸ்ஸவ௴ஜ்ஞாந்ருவிஷஂ ஜமக்ஷு|
ஸவ௴ா ஜீவாந்வக்ஷணெந ஹாஸெந ச பா௱க்ந்ருயா|
சுட்ட ஹாஸெந ந்ருத்தெந ஷாடநயநாந்நா|
ஹ௲ஂகாரெண ச ஹஸ்தெந வாஜாவாதெந ஜீயா|

ய ஹீரே விஶ்வா ஹவநாமி ஜுஹ்வத் |

(இரு. வே. அ. ௲. கசு)

"எவர் இவ்வுலகம் அனைத்தையும் ஓமித்தனர்" என இருக்குவேதத்திற் பிரமமானது தனது பிரகாசமாகிய தீயிற் சமஸ்த புவனங்களையும் அவிசாய் ஓமித்தமை அறியப்படுகின்றது. ஹவ்வியபாகமாகக் கொள்ளப்படும் ஆன்மாவுக்கு இவ்வன்மை இல்லை. தனக்கு வேறாகிய *சமஸ்த சராசரம் எனப்படும் சேதனசேதனப் பிரபஞ்சத்தைத் தம்மிடத்தொடுக்கி எப்போது உளராயினரோ சிவபெருமான், அப்போது சந்திர சூரியராம் பிரகாசமின் மையான் இராப்பகலாதியாய காலவிபாகமெல்லாம் இலவாய், நாமரூபபேத மின்மையின் ஸ்தூல சூக்கும மனுஷ்ய தேவாதி ரூபவியவகாரம் இலதாய் இவையெல்லாம் தமசுமாத்திரமாய் உளவாக, அவ்வொருவரே தடையிறந்த பிரகாசராய்ச் சமஸ்த சாட்சியாய் அப்போதும் பரிசேஷிக்கின்றனர். அங்ஙனமே,

---

நாநா ரூபதரேணைவ ஸ்வாகம் ஸம்ஹாரம் யதுங்காரலை:|
ஸ ஹோவஸ்து யோ நாஶ ஸவெ்ஷாணாஸுகாரக:|

(சங். த. உக: உ—ரு)

"மகாபலமுடையராகிய உருத்திரர் எனப் பெயரிய காலாக்கினிருத்திரபகவானும் பைரவரும் சிவபிரானர் ஆஞ்ஞையினலே பிரபஞ்சம் அனைத்தையும் சங்கரிக்கின்றார்; இது அவாந்தரசங்காரம் எனப்படும். சமஸ்த அண்டங்கள் சமஸ்த உலகங்களோடு சமஸ்த சீவர்களையும் (சங்கரிக்குங்கால்) சிலரைப் பார்வையினலும், சிலரை நகைப்பினலும், சிலரைக் கோபத்தினலும், சிலரை அட்டகாசத்தினலும், சிலரை நடனத்தினலும், சிலரை நேத்திராக்கினியினலும், சிலரை ஹுங்காரத்தினலும், சிலரைக் கையினலும், சிலரை உதையினலும் லீலாமாத்திரத்தினல் அநேக உருத்திரர்களோடு கூடி நின்று சங்கரிக்கின்றனராதலின், மஹாதேவராகிய சிவபிரான் (மகாகபலீகாரர்) மகாக்கிராசர் என்று (அதர்வசிரசிற்) கூறப்படுகின்றார் என்றும், இந்தச் சங்காரம் மகாப்பிரளயம் எனப்படும்" என்றும் சங்கரசங்கிதையிற் கூறப்படுகின்றமை காண்க.

*ஸதி ஸவெ்ஶ்வரஸ்ஸாம்ஹஸ்வ்தா நஜவிரூஹ: |
உவஸம்ஹ்ருத்ய விஶ்வாத்மாஸ்ஸிம் ஸவ்நியாமிகாம் |
ஸ்வஸ்மிம்ஸ்வ்ஸ்வே ஸ்வயம்ஜ்யோதி: வாவ்த்யா: வாரதோஜ்வா:|
ததா ஜக்ஷிதம் ஸவம் நீரூவெணஷ்கியம்ஹ்ருஸ் |
நாஹோராத்ரா நவாஹா நஸூர்ஜ்யோவஹ்நிஸ்வாரா நச|
தமோஹதம் ஜவாகாரம் ஹீஷணம்கேவலம்ஜ்வா: |

(சங். த. ச: கள—கக)

"சச்சிதானந்தரூபியும், சம்புவும், விசுவாத்துமாவுமாகிய சிவபெருமான் தேவி முன்னிலையிற் சமஸ்த உலகத்தையும் நடாத்தும் தமது சத்தியைத் தமக்குள்ளே அடக்கிக்கொண்டு சோதிரூபராய் நின்றனர்; அப்போது சமஸ்த உலகமும் மிருதியும் உருவு மற்றுச் செயலுமற்றுப் போயின; இரவில்லை, பகலில்லை, சூரியன் இல்லை, சந்திரன் இல்லை, அக்கினியில்லை, தேவர்கள்தானுமில்லை; எங்கும் கேவலம் பயமுறத்தக்க ஜடவடிவினதாகிய இருண்மயமாயுற்றது" என்றது சங்கரசங்கிதை.

யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரிர்ந ஸந்நசாஸச்சிவ ஏவ கேவல:|
(சுவே. ௪. ௧௮)

†"எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமன்றி சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ அப்போது சிவன் ஒருவரே இருந்தார்" எனச் சுருதி கூறிற்று. சத்தும் அசத்தும் இலவாய் என்றமையான், சத்தும் அசத்துமாகிய பசு பாசங்களுடைய சுவரூபசத்து நிஷேதிக்கப்படவில்லை; பின் நாமரூபவிபாகத்துக்கு அருகமாகிய ஸ்தூலரூபமே (நிஷேதிக்கப்பட்டது).

(ஆக்ஷேபம்) நித்தியப் பிரகாசமாகிய சிவப்பிரமம் உளதாகுங்கால், தமோமயமாய் உலகம் எங்ஙனம் இருப்பதாம் எனின்,

(உத்தரம்) அங்ஙனமன்று; சுவயம் பிரகாசரும், சர்வசாட்சியுமாய சிவபிரானுர்க்குக் குறைவென்! நாமரூபமில்லாமையான் அறியக்கூடாதன வாகிய விஷயங்களிற் செல்லக் கரணசரீரசக்தியில்லாத ஆன்மாக்களுக்கு அறிவு மலத்தினுல் மூடுண்டிருக்குங்கால், பிரபஞ்சத்தை அறிதல் கூடாது; சுவப்பிரகாசமாயுள்ள சிவனுர்க்கும் முன் போல உலகத்தை அறியுமாறில்லை. ஆகலின், சமஸ்த காரிய விசேஷஞானம் யாதுமின்றி மகாசுழுப்திமயமா யுள்ள மகாவஸ்தையே தமசு (இருள்) எனப்படுகின்றது. அங்ஙனமே,

ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம் |
(மனுஸ்மிருதி. ௧. ரு)

"யாதும் இலக்ஷணமின்றி அறியப்படாததாய் இது தமசாயிருந்தது" என ஸ்மிருதி கூறுகின்றது. நாமரூப விபாகத்துக்கு அருகமல்லாத சூக்கும சித சித் பிரபஞ்ச சக்தி விசிட்டமுடைமையாற் சிவபெருமான் கேவலர் எனக் கூறப்படுகின்றனர். அவர் பின்னர்ச் சிருஷ்டி காலத்திலே தமது சங்கற்ப மாத்திரையானே சமவாயிகாரண அபேக்ஷையின்றி, தம்மிடத்திருந்து பிர தமசக்தி பரிஸ்புரித்தல் வாயிலாக, முன்னிருந்த அந்தந்த நாம விசிட்டமு டையனவாகவே சமஸ்த சேதனுசேதனப் பொருள்களையெல்லாம் சிருஷ் டிக்கின்றனர், பிரகாசிப்பிக்கின்றனர்.

சிதாத்மைவ ஹி தேவோऽந்த:ஸ்திதமிச்சாவசாத் பஹி: |
யோகீவ நிருபாதாநமர்த்தஜாதம் ப்ரகாசயேத் ||

"உள்ளே அமைந்த பொருள் அனைத்தையும் சிதான்மாவாகிய கடவுளே யோகிபோல இச்சாவசத்தினுல் உபாதானமின்றிப் புறத்தே பிரகாசிப்பிக் கின்றனர்" என்பது அபியுக்தசூக்தி.

---

†௧௫௩-ஆம் பக்கத்து "இருநிலனது" "பெருங்கடன்" என்றற்றொடக்கத்த தேவாரங்களைப் பார்க்க.

(ஆக்ஷேபம்)
மாயாஞ்து ப்ரக்ருதிம் வித்யா ந்மாயிநஞ்து மஹேஶ்வரம்।
(சுவே. ச. கo)

தஸ்மாத்விராளஜாயத (இரு. வே. கo. கூo. ரு)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக," "அவரினின்று விராட்டுப் பிறந்தனர்" என்றற்றொடக்கத்த சுருதியினால், மாயையும் புருஷனும் உபாதானமாகக் கேட்கப்படுகின்றது. உபாதானம் இருந்திலதென்று கூறுவது எங்ஙனம் அடுக்கும்? எனின்,

(உத்தரம்) உண்மை; குலாலன் கடத்தை உண்டாக்குங்கால், மட்கட்டி குலாலன் சரீரத்துக்கு வேறாய்க் கடத்துக்கு உபாதானமாய்க் காணப்படுமாறு போல, மாயை முதலிய உபாதானம் சிவபெருமானுக்கு வேறாயிருப்பதில்லை; மாயாதி ரூபத்தைக்கொண்டு சிவபெருமான் உலகத்தைப் படைத்தலான். அதுபற்றி விரோதமின்று. தம்மினின்று வேறுறாத நிலையுற்ற சூக்குமமாயையுடைய புருஷராகிய சிவபெருமானே உலகத்துக்கு உபாதானமாகவும் கூறப்படுகின்றனர்.

த்யாயீதே ஶாநம் ப்ரத்யாயிதவ்யம் ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணுருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே। ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹ பூதைர் ந காரணம் காரணாநாம் த்யாதா காரணந்து த்யேயஸ்ஸர்வைஶ்வர்யஸம்பந்நஸ்ஸர்வேஶ்வரஶ்ஶம்புராகாஶமத்யே॥
(அதர்வசிகை)

"மிகவும் தியானிக்கற்பாலராகிய ஈசானரைத் தியானிக்க; அந்தப் பிரமவிஷ்ணு உருத்திர இந்திரர்களாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர்; எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே கூட (உற்பத்தியாகின்றன); காரணமும் காரணங்களைப் படைத்தோரும் கருதினோருமாகியவர் (உற்பவித்த)லின்று; காரணமும் சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், சம்புவுமாகியவரே * ஆகாயமத்தியிற் றியானிக்கற்பாலர்" என அதர்வசிகையிலே கேட்கப்படுகின்றது. ஆகலின், பூதங்கள் அனைத்துக்கும் எங்கே சங்காரமுளதோ, அங்கேதான் அவைகள் அனைத்துக்கும் உற்பத்தியுமுளதாம். முடிவிறந்த இவைகட்கெல்லாம் எதுகாறும் சங்காரமுளதோ, அதுகாறும் அனந்தசத்தியுடைய சிவபிரானே அவைகட்கெல்லாம் நிலையம். பிரம சப்தத்தினாற் கூறப்பட்ட சங்காரகர்த்தா சிவபிரானே. சங்காரம் ஹிம்சாரூபமாயிருத்தலான் அதற்கு மூலமாயுள்ள குரோதமுதலிய அநர்த்தகுணசம்பந்தம் பிரமத்துக்கு உளதாமோ எனின், அது விசாரமின்மையினால் விளைந்த பிணக்கு; குரோதமுதலியவற்றுக்கு மூலமாயுள்ள தமோகுணம் பிரகிருதி தருமமாகலின்.

---

* திருச்சிற்றம்பலத்தின் மேற்று.

உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் ।
(கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும்" என்று தொடங்கி,

தமஸ: பரஸ்தாத் ।
(கைவ)

"தமசுக்கு மேலே சமஸ்த சாக்ஷியாயுள்ளாரை" என்னும் கைவல்லிய சுருதியே சிவபெருமான் தமசுக்கு மேலாயினர் என்பதற்குத் திவ்விய பிரமாணம்.

ஜ்ஞாநம் வைராக்யமைஶ்வர்யம் தப: ஸத்யம் க்ஷமா த்ருதி: ।
ஸ்ரஷ்ட்ருத்வமாத்மஸம்போதோ ஹ்யதிஷ்டாத்ருத்வமேவ ச ।
அவ்யயாநி தஶைதாநி நித்யம் திஷ்டந்தி ஶங்கரே ॥

"ஞானம், விராகம், ஐசுவரியம், தபசு, சத்தியம், க்ஷமை, தைரியம், சிருஷ்டிவன்மை, ஆன்மஞானம், அதிபதித்துவம் என்னும் பத்துக் குணங்களும் சிவபெருமானிடத்து அழியாது நிலையுறுவன" எனவும்,

ஸமஸ்த விஷயாஜ்ஞாநாச் சுத்தபுத்திவிஜ்ரும்பண: ।
ஸ்வஶக்த்யம்ருதாஸ்வாத ப்ரமோதரஸிகோ யுவா ।
அநந்தாநந்த ஸந்தோஹ மகரந்தமதுவ்ரத: ।
ஔதார்ய வீர்ய காம்பீர்ய மாதுர்ய மகராலய: ।
அகண்ட ஜகதண்டாநாம் பிண்டீகரணபண்டித: ॥
(வாயு. பூ. உ: ருச—ருகூ)

"சமஸ்த விஷய ஞானங்களினின்றும் தவறுத சுத்த புத்தி விசிரும்பணரும், தமது சத்தியாகிய அமிர்தத்தை உருசித்தலினால் எய்தும் மகிழ்ச்சியில் விருப்பமுடைய இளைஞரும், அனந்த ஆனந்த சந்தோகமாகிய மகரந்தத்தைப் பருகும் மதுகரரும், உதாரகுணம், வீரியம், காம்பீரியம், மாதுரியம் என்பவற்றுக்கு இரத்திநாகரராயும் அகண்ட ஜகதண்டங்களைப் பிண்டீகரித்தற்குப் பண்டிதராயும் உளர்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறும் பவுராணிகர் வாக்கும் சிவபெருமானிடத்திலே மோகமுதலிய அனைத்தையும் ஒழிக்கும் ஞானமுதலிய குணங்கள் நித்திய சம்பந்தமாய் உள்ளன என்று கூறுகின்றது. முடிவிறந்த மகிமையுடைய சிவபெருமான் சிருஷ்டிக்க விருப்பமுடையராய்

ஸோகாமயத பஹுஸ்யாம் (தைத். உ. கூ)

"அவர் அநேகமாய் ஆவேனுக என்று விரும்பினர்" எனச் சுருதியிற் கூறப்பட்டவாறு, அநேக பிரபஞ்சமாதற்குத் தமது மாயாலக்ஷண இச்சாரூப சத்தியை ஆசிரயிக்கின்றனர்.

ஸ தமெவாzதவு)த (பிரு. ந. உ. சு)

"அவர் ஞானசத்தியை ஆலோசித்தனர்" என்னுஞ் சுருதிப் பிரகாரம் தம் ஸ்வரூபமாகிய ஞானசத்தியினாற் சமஸ்த ஆன்மாக்களுக்கும் கர்மானுகுணமாக அந்தந்தச் சரீரங்களுக்கியைந்த சாமக்கிரியைகளை ஆலோசிக்கின்றனர். ஆலோசித்து, சங்கற்பித்த சகலத்தையும் இயற்றவல்ல கிரியாசத்தியினாலே

ஐஉo ஸவ—்ஸஸ்ரஜத (தைத். உ. சு)

"இவை அனைத்தையும் அவர் சிருட்டித்தனர்" என்னும் சுருதிபற்றி, இச்சாசத்தியாம் பித்தியிலே சமஸ்த ஜகதாகிய சித்திரத்தைத் தோற்றுவிக்கின்றனர்.

தஷஸ்ரஷ்ஷா தமெவா நுவ்ராவிஶ்ஜ (தைத். உ. சு)

"அதனைச் சிருட்டித்து, அதனுட் பிரவேசித்தனர்" என்னும் சுருதிப்பிரகாரம், சகல காரிய சமூகங்களுட் பிரவேசித்து, இந்த மூன்று சத்தி சம்பந்தத்தினால், முக்குணத்தினாலே பின்னமுற்ற மூர்த்தித்திரயமுதலிய பிரபஞ்சரூபமாகின்றனர். ஆகலின், ஈண்டு சர்வசத்தியும் சர்வஞ்ஞருமாயுள்ள சிவபிரானார் மகிமையை யார் அறிவார்!! ஆகலின், சர்வசங்கார கர்த்தா சிவபெருமானே. (கூ)

வ்ரகரணாத் (க. உ. கo)

(சஉ) பிரகரணத்தினாலும்.

ஜஹாஂதஂ விஹ்ஜோ தா நஂ ஜஹா யீரொ ந ஶொசதி (கட. உ. உக)
நாயமாத்மா ப்ரவசநெந லப்யஃ (கட. உ. உஉ)

*"(பரம) ஆன்மாவை மகத்தாகவும் வியாபகமாகவும் அறிந்து தீரன் துன்புறுவானல்லன்; அந்தப் (பரம) ஆன்மா வேதத்தினால் எய்தாது" என்னும் சுருதி (மேலைச் சூத்திரத்து வாதிக்கப்பட்ட சுருதி காணப்படும் கடவல்லியின் ஒரே பாகத்திற் காணப்பட்டுச்) சிவபெருமானுக்கே நேர்ந்ததெனப் பிரகரணமும் உணர்த்துகின்றது. ஆகலின், பரப்பிரம சிவபெருமானே சங்காரகர்த்தா, பிறர் அன்றெனச் சித்தித்தது. (கo)

## (ச) குகாதிகரணம்.

---

மேலை அதிகரணத்திலே சர்வசங்கார இலக்ஷணத்தையுடையராகச் சித்தித்த சிவபெருமான்

---

*இந்த ஆன்மா உபக்கிரமணிகை கoக-ஆம் இலக்கத்துக் காணப்படும் சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவமுடைய பரமான்மாவன்றி ஏகான்மவாதி கூறும் நிர்க்குணப்பிரம ஆன்மாவன்று.

ஆரவஸுவணாா ஸயுஜா ஸவாயாஸோநம வ்ருக்ஷம வரிஷஸ்வ ஜாதே| தயோரந்ய: விப்பலம ஸ்வாத்வத்த்யநஸ்நந்நந்யோ அபிசாகஸீதி|

(முண். ௩. க. க; சுவே. ச. ௬; இரு. வே. க. கசுச. உ0)

"பிரியாத நண்பினையுடைய இரு பக்ஷிகள் ஒரே மரத்தையுற்றிருக்கின்றன; அவற்றில் ஒன்று இனிமையாகிய பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணுது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே பிரசித்தராய், தமது விபூதியாயுள்ள ஆன்மாக்களோடு எப்போதும் இயைந்திருக்கின்றனர் என்பதை வெளிப்படுத்துதற்கு மற்றோர் அதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

குஹாம ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்தர்சநாத் (க. உ. கக)

**(சஙு) குகைக்கண்ணே பிரவேசித்தன இரு * ஆன்மாக்களே; அங்ஙனம் காணப்படலான்.**

ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே| சாயாதபௌ ப்ரஹ்மவிதோ வதந்தி பஞ்சாக்நயோ யே ச த்ரிணாசிகேதா: (கட. ௩. க)

"புண்ணிய ஸ்தானமாகிய மேலாய (பிராம்மணுதி சரீர) குகையிலே பிரவேசித்தனவாய், கன்ம பலத்தைத் துய்ப்பனவாயுள்ள இரு வஸ்துக்கள் சாயையும் ஒளியும் போல் வேறாய் உள்ளன என்று கிரகஸ்தர்களாயும் திருணுசிகேதர்களாயுமுள்ள பிரம்ம ஞானிகள் கூறுகின்றனர்" என்னும் சுருதியே ஆராயப்படும் விஷயம்.

---

*என்னிலாருமெனக்கினியாரில்லை
யென்னிலும்மினியானொருவனுள
னென்னுளேயுயிர்ப்பாய்ப்புறம்போந்துபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே.

(திருவின்னம்பர், நாவு, க)

கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவல னியானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்
தோடாப் பூட்கை நாடி நாடா
வென்னுட் கரந்தென் பின்வந் தருளி
யென்னையுந் தன்னையு மறிவின் றியற்று
மென்னதி யானெனு மகந்தை யுங்கண்
டியாவரி யாவையு மியாங்க ணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து
மிக்க போகம் விதியால் விளைத்திங்
கெற்பணி யாளா வெனைப் பிரியாதே
யோடி மீள்கென வாடல் பார்த்திட்
டென்வழி நின்றன னெந்தை யன்னே.

(இருபாவிருபஃது, சஅ)

சண்டு புண்ணியஸ்தானமாகிய உயர்ந்த பிராம்மணுதி சரீரத்தின் இதய குகையிலே பிரவேசித்தனவாய், கன்மபலன்களைத் துய்ப்பனவாய், சாயையும் ஒளியும் போல வேறுபாடுடையனவாயுள்ள எவையோ இரு வஸ்துக்கள் கேட்கப்படுகின்றன. அந்த இரண்டும் புத்தியும் ஆன்மாவுமா? இன்றேல் ஆன்மாவும் சிவபெருமானுமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இந்த இரண்டும் புத்தியும் ஆன்மாவுமாம்; எங்ஙனம்?

ருதம் பிபந்தௌ (கட. ௩. க)

"கர்மபலன்களை இரண்டும் துய்ப்பன" எனப் பெறப்படுகின்றமையின். சிவபெருமான் போக்தா அல்லர்;

அநச்நந்நந்யோ அபிசாகசீதி (சுவே. ச. சு; முண். ௩. க. க)

"மற்றது புசியாது பார்த்துக்கொண்டிருக்கின்றது" எனச் சுருதி காணப்படலான். புத்திக்கும் ஆன்மாவுக்கும் புசிப்புளதாதல் பிரசித்தமே. மேலும், அறிவுருபமாயுள்ள ஆன்மாவுக்கும் சிவபெருமானுக்கும் சாயையும் ஒளியும் போல வேறுபாடில்லை. புத்தி அசேதனமாகலின் புத்திக்கும் ஆன்மாவுக்கும்பேதமுண்டு. இங்ஙனம் கூறப்பட்டவை புத்தியும் ஆன்மாவுமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். குகையை அடைந்தவர் ஆன்மாவும் சிவபெருமானுமே;

தம் துர்தர்சம் கூடமநுப்ரவிஷ்டம் குஹாஹிதம் கஹ்வரேஷ்டம் புராணம் (கட. உ. கஉ)

"தாண்டற்கரியரும், மறைவினரும், கூடப் பிரவேசித்தவரும், குகைக்குள் மறைந்தவரும், குகைக்கணமர்ந்தவரும், பழையரும்" என்னுஞ் சுருதியினுல் அவ்விருவரும் குகையிற் பிரவேசித்தமை காணப்படலான். சிவபெருமானுக்குப் புசிப்பில்லை என்று கூறப்பட்டது யுக்தமன்று.

ப்ராணாராமம் மந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"பிராணசத்தியிலே அவர்க்கு விருப்பம்; மனசில் (ஞானசத்தியில்) அவர் ஆனந்தம்" என ஆன்மவிருப்பமுடைய பிரமத்துக்கும் ஞானமாத்திரவிஷயமாகிய சொரூபானந்தபோகம் உளதாகக் காணப்படலான். அங்ஙனமே,

ஸ்வசக்த்யம்ருதாஸ்வாத ப்ரீதிலோலா: குமாரகா: |
அநந்த ஸ்வாநந்த மகரந்த மதுவ்ரதா: ||

(வாயு. பூ. உ: ருச)

"தமது சத்தியாகிய அமிர்தத்தை இரசித்தலினுல் உண்டாகிய மகிழ்ச்சியில் விருப்புடைய இளைஞரும், அனந்த பரமானந்த மகரந்தத்தை உண்ணும் மதுகரரும்" என்றற்றொடக்கத்தனவாகப் புராணமும் கூறுகின்றது. ஆன்மா

வுக்குத் தன் கருமமலப் புசிப்புள்ளதாதல் பிரசித்தம். இங்ஙனம் அவ்விருவரும் போக்தாக்கள் போலச் சாதாரணமாகக் கூறப்படினும் பேதம் கொள்ளப்படும்; போக்தாக்கள் விஷயத்திற் பேதம் உண்மையின். "அரசனும் வேலைக்காரனும் அன்னம் அயில்கின்றனர்" என்று கூறுமிடத்து, அவர்கள் தத்தம் நிலைக்கிசைந்த அன்னம் அயில்கின்றனர் என்று கோடல் போலாம். அவர்களுக்குப் பேதமில்லை என்றமை அங்கீகரிக்கப்படாது.

நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம்।

(கட. ரு. கந; சுவே. சு. கந)

"நித்திய பதார்த்தங்களுள்ளே நித்தியரும், சேதனருள்ளே சேதனரும்" என்னும் சுருதி வாயிலாக, நித்தியத்துவ சேதனத்துவ முதலியன பற்றி ஆன்மாவுக்கும் சிவபெருமானுக்கும் சாமியம் உளதாயினும், அநாதிமல சம்பந்தத்தின் உண்மை இன்மைகளால் (இருவர்க்கும்) வேற்றுமை உண்டாகின்றது.

ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ (சுவே. க. கூ)

"பிறவாதவராகிய அறிஞனும் அறிவிலனுமாகிய இருவரும் (முறையே) ஈசரும் ஈசனல்லாதவனும்" என்றற்றொடக்கத்த சுருதியினால் ஞானம் அஞ்ஞானம், சுவாதந்திரியம் அசுவாதந்திரியம் என்பனவாதி குணங்களானும் பேதமுளதாதல் பெறப்படுகின்றது.

(ஆக்ஷேபம்) இவ்விருவர்க்கும் சரீரசம்பந்தம் ஒன்றாயவிடத்தும், ஒருவற்கு அஞ்ஞானமுதலியவற்றான் றுன்பமும், மற்றவர்க்கு அஃதின்மையும் எங்ஙனமெனின்,

(உத்தரம்) அது பொருந்தாது; ஒரே சரீரத்தைப் பொருந்தியிருத்தல் சுகத்துக்கேனும் துக்கத்துக்கேனும் காரணமின்று. பின் (சிவபெருமானுடைய) சுவாதந்திரியமும், (ஆன்மாவுடைய) அசுவாதந்திரியமுமே (முறையே) சுகத்துக்கும் துக்கத்துக்கும் காரணம்.

ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீஶயா ஶோசதி முஹ்யமாந:। ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶம் அஸ்ய மஹிமாநமிதி வீதஶோக:॥ (முண். ந. க. உ)

"புருஷன் ஒரே (சரீர) மரத்தில் ஈசனல்லாமையின், மோகமுற்று அமிழ்ந்தித் துக்கிக்கின்றனன்; ஆயின், அவன் தனக்கு வேறாகிய மகிழ்வுடைய சிவபிரானைக் கண்டு அப்போது அவருடைய நிரதிசயானந்த மகிமைக் குணத்தை அடைந்து துன்பம் நீங்குகின்றனன்" என்னும் இச்சுருதியின் சம்பிரதாய அர்த்தம் வருமாறு:—

இந்த ஆன்மா அநாதியாகிய கர்மத்தளையினாற் கட்டுண்டு, அதனால் அந்தந்தக் கர்ம பல போகத்துக்கு வாய்ந்த குகையாகிய மாயாமய அநேக

சரீரத்திற் பிரவேசித்து, தடுத்தற்கரிய துன்பத்தை அனுபவித்து ஈசனல்லாமையாற் சுவாதீனமற்றிருத்தல்பற்றி அத்துக்கத்தை நீக்குதற்குச் சாமர்த்தியமிலனுயே மோகமுற்றுச் சோகிக்கின்றுன்; மகாமோகத்தினுல் எய்திய துக்கசாகரத்தமிழ்ந்திக் கிடக்கின்றுன்; தன்னுள்ளேயிருந்து செலுத்துபவரும், மகிழ்ச்சியுடையரும், சர்வானுக்கிரகரும், ஈசரும், உமாசகாயருமாயுள்ளாரை எப்போது அவர் அருளினுல் அபரோக்ஷமாய் அறிகின்றுனே, அப்போதே சோகநீங்கி அவரது நிரதிசய (ஆனந்த) மகிமைக் குணத்தை அடைகின்றுன்.

ஆகலின், சுவாதந்திரியரும் அநாதிமுத்தருமாயுள்ள சிவபெருமானுக்குச் சரீரசம்பந்தமுளதாயினும், ஆன்மாவுக்குப் போலத் தோஷம் அவரைப் பற்றுது. ஆகலின், குகையை அடைந்தவர்கள் ஆன்மாவும் சிவபெருமானுமாம். (கக)

சூத்திரகாரர் பின்னரும் பொருத்தமாமாறு உரைப்பாராயினர்.

விஶேஷணாச்ச (க. உ. கஉ)

(சச) விசேஷகுணமுண்மையானும்.

இப்பிரகரணத்திலே ஆன்மாவும் சிவபெருமானும் விசேஷித்து உரைக்கப்படுகின்றனர்.

நஜாயதே ம்ரியதே வா விபஶ்சித் (கட. உ. கஅ)

"அறிஞன் பிறப்பதும் இல்லை இறப்பதும் இல்லை" என்றற்றொடக்கத்தவற்றுல் ஆன்மா கூறப்பட்டான்.

அணோரணீயாந் மஹதோ மஹீயாந் (கட. உ. உ0)

"அணுவுக்கணு, மகத்துக்கு மகத்து" என்னுஞ் சுருதியினுற் சிவபெருமான் கூறப்பட்டனர். இந்த விசேஷணம் ஆன்மபுத்தி விஷயத்தில் எங்ஙனம் எய்தும்? ஆகலின் ஆன்மாவும் சிவபெருமானுமே குகையை அடைந்து, முறையே பிரேரியனும் பிரேரகரும், சரீரமும் சரீரியுமாய் அமர்ந்தனர் என நிர்ணயிக்கற்பாற்று. (கஉ)

## (ரு) அந்தராதிகரணம்.

---

இருதயகுகைக்குள்ளே உபாசிக்கப்படுமாறு அமர்ந்தருளிய சிவபெருமானுக்கு ஈண்டு மற்றோர் உபாசனஸ்தானம் கூறப்படுகின்றது.

அந்தர உபபத்தே: (க. உ. கங)

**(சரு) *(கண்) உள்ளே (இருப்பவர் சிவபெருமான்), (அவர்க்குக் குணங்கள்) பொருத்தமுறுதலின்.**

ய ஏஷோऽக்ஷிணி புருஷோ த்³ருஶ்யத ஏஷ ஆத்மேதி ஹோவாசைதத³ம்ருதமப⁴யமேதத்³ப்³ரஹ்ம (சாந். ச. கரு. க)

"இவர் கண்ணுள்ளே புருஷராகக் காணப்படுகின்றனர்; இவர் (பரம) ஆன்மா, இவர் அழியாதவர், பயமில்லாதவர், இவர் பிரமம்" என்னும் சாந்தோக்கிய சுருதியே ஈண்டு ஆராயற்பாலதாம் விஷயம்.

கண்ணுள்ளே அமிர்தத்துவாதி இலக்ஷணத்தோடு கூறப்பட்ட புருஷன் சிவபெருமானு? மற்றொருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சிவபெருமானுக்கு அன்னியன் என்று கூறுவம்.

த³ஹ்ரம் விபாபம்। பத்³மகோஶப்ரதீகாஶம்।

(தைத். ஆரணி. க0. கஉ. உஅ)

"சூக்குமமாயும், பாவமில்லாததாயும்," "பதுமகோசத்தைப்போன்றதாயும்" என்றற்றொடக்கத்த மகோபநிடதச் சுருதிகளிலே, சிவபெருமான் இதயகமலத்தில் இருப்பவராகக் கூறப்படுகின்றனர். ஆன்மா மனசின் சம்பந்தத்தினால் ரூபங்களைக் கிரகிக்கும் கண்ணிந்திரியத்தில் மனச் சம்பந்தத்தினாற் பிரவேசித்திருக்கின்றனன்; அவனே கண்ணிற் புருஷன். இன்றேல், சாயாபுருஷனும் எனின்,

(சித்தாந்தம்) நிரூபிக்கின்றேம். கண்ணிற் புருஷன் சிவபெருமான்; நிருபாதிகமாகிய அமிர்தத்துவம் அபயத்துவமுதலிய குணங்கள் இவர்க்கே பொருத்தமாதலின். (கரு)

(ஆக்ஷேபம்) கண்ணுள்ளே இருப்பவராகச் சிவபெருமான் யாண்டும் கேட்கப்படவில்லையே எனின்,

சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸ்தா²நாதி³வ்யபதே³ஶாச்ச (க. உ. கச)

**(சசு) (அவர்க்கு) இடமுதலியன உரைக்கப்படலான்.**

யஶ்சக்ஷுஷி திஷ்ட²ந் சக்ஷுஷோऽந்தரோ யம் சக்ஷுர் ந வேத³ யஸ்ய சக்ஷு: ஶரீரம் யஶ்சக்ஷுரந்தரோ யமயதி ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத: (பிரு. ரு. எ. கஅ)

---

*திருவேயென்செல்வமேதேனேவானோர்செழுஞ்சுடரேசெழுஞ்சுடர்நற்சோதிமிக்க வுருவேயென்னுறவேயென்னூனேயூனினுள்ளமேயுள்ளத்தினுள்ளேநின்ற கருவேயென்கற்பகமேகண்ணேகண்ணிற்கருமணியேமணியாடுபாவாய்காவா யருவாயவல்வினைநோயடையாவண்ணமாவடுதண்டுறையுறையுமமரரேறே.

(திருவாவடுதுறை, நாவு, க)

"எவர் கண்ணினும், கண்ணினுள்ளும் இருக்கின்றனர்; அவரைக் கண் கண்டிலது, அவர்க்குக் கண் சரீரம், அவர் உள்ளே இருந்து கண்ணை ஆளு கின்றனர், அவர் உன் ஆன்மா, அந்தரியாமி, (அமிர்தர்) சிவன்" என்னும் சுருதியினற் கண்ணுள்ளே இருப்பவராகவும் ஆளுபவராகவும் சிவபெருமான் கூறப்படுகின்றனர். ஆகலின், இவர் சிவபெருமானே. (கச)

பின்னர்ச் சாயாபுருஷனைச் சொல்வது பொருந்தாதெனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸுவிஶிஷ்டாஹியா நாஜெவச (க. உ. கரு)

(சஎ) அவர் ஆனந்த குண விசிஷ்டமுடையராகவே கூறப்படலானும்.

கஂ ஬்ரஹ்ம வஂ ஬்ரஹ்ம (சாந். ச. கo. ரு)

"ஆனந்தம் பிரமம்; ஆகாயம் பிரமம்" என்னும் வாக்கியத்திலே பிரமம் ஆனந்தமுடையதாக மேலே கூறப்படுதலின், இந்தப் பிரமம் சிவபெருமானே. ஆனந்தம் சாயாபுருஷனிடத்து இல்லையன்றே. (கரு)

கண்ணிலுள்ளான் ஆன்மா என்றுரைக்கப்பட்டமைபற்றிச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸுகவுவ ஸ ஬்ரஹ்ம (க. உ. கசு)

(சஅ) *(ஆனந்தகுண விசிஷ்டமுடையராகக் கூறப்படும்) அந்த நியாயத்தினுல், அவர் பிரமம்.

பிறவிக்கஞ்சிப் பிரமத்தை அறிய விரும்பிய உபகோசலற்கு

கஂ ஬்ரஹ்ம வஂ஬்ரஹ்ம (சாந். ச. கo. ரு)

"ஆனந்தம் பிரமம், ஆகாயம் பிரமம்" என்று தொடங்கி,

யஷாவகஂ தஜெவவஂ யஜெவ வஂதஜெவகஂ |

(சாந். ச. கo. ரு)

"எது ஆனந்தமோ அது ஆகாயம்; எது ஆகாயமோ அது ஆனந்தம்" எனச் சுருதி உபதேசிக்கின்றமையின், (வஂ) "கம்" என்று கூறப்பட்ட ஆகாயம் பரப்பிரமமே. ஆன்மாவுக்கு இவ்வியல்பினதாகிய பொருத்தம் உளதா? ஆன்மாவில் நிரதிசயானந்தம் இல்லை; ஆகலின், பரமானந்தமுடை

---

*மானமழிந்தோமதிமறந்தோமங்கைநல்லீர்
வானந்தொழுந்தென்னன் வார்கழலேநினைந்தடியோ
மானந்தக்கூத்தனருள்பெறினுமவ்வணமே
யானந்தமாகிநின்ருடாமோதோணேக்கம்.
(திருத்தோணேக்கம், அ)

யதாக முதற்கண்ணே கூறி, பின்னர்க் கண்ணினுள்ளே ஆதாரமாய் இருப்பதாகக் கூறப்பட்ட அந்தப் பிரமமே கண்ணினுள்ள புருஷராக உரைக்கப்பட்ட சிவபெருமான். (கசு)

பூருவபக்ஷத்தில் இன்னும் பொருத்தமில்லாமையுற்றுச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஶ்ருதோபநிஷத்கக³த்யபி⁴தா⁴நாச்ச (க. உ. கஎ)

(சகூ) உபநிஷத்தை அறிந்தோர்க்குரிய மார்க்கம் கூறப்படலானும்.

தேऽர்சிஷமேவாபி⁴ஸம்ப⁴வந்த்யர்சிஷோऽஹ꞉ ।

(சாந். ச. கரு. ரு; ரு. கo. க)

"அவர்கள் ஒளிக்குப் போய், ஒளியிலிருந்து பகலுக்குப் போய்" என்று தொடங்கி,

தத்புருஷோऽமாநவ꞉ ஸ ஏநாந்ப்³ரஹ்ம க³மயத்யேஷ தே³வ பதோ² ப்³ரஹ்மபத² ஏதேந ப்ரதிபத்³யமாநா இமம் மாநவமாவர்தம் நாவர்தந்தே (சாந். ச. கரு. ரு, சு)

"அவ்விடத்து அமானவ புருஷன் ஒருவன் உளன்; அவன் அவர்களைப் பிரமத்துக்கு நடாத்துகின்றனன்; இது பிரமத்துக்குப் போகும் தேவயானம்; இவ்வழிச் செல்வோர் இம்மனித வாழ்வுக்கு மீள்வாரல்லர், மீள்வாரல்லர்" என்பது இறுதியாக, பிரமசொரூபத்தை அறிந்தவர்களாற் படிக்கப்படும் ஒளிமார்க்கம் கண்ணுட் புருஷரை அறிந்தவன் விஷயத்தினும் கூறப்படலான், இவர் (கண்ணுட் புருஷர்) ஆன்மாவுமன்று, சாயாபுருஷனுமன்று, பின் சிவபெருமானே. (கஎ)

## (சு) அநவஸ்தித்யதிகரணம்.

---

அநவஸ்தி²தேரஸம்ப⁴வாச்ச நேதர꞉ (க. உ. கஅ)

(ருo) அநவஸ்தையினாலும் அசம்பவத்தினாலும் *பிறரன்று.

ஸம்ப்ரஸாதோ³ऽக்ஷிபுருஷோऽஸ்வப்ந꞉ ஸர்வஶ்ருத꞉ ।
ஸமஸ்தஸ்வரூபஜ்ஞாத꞉ ப்ரஹ்ம꞉ ஸ்ரீ ணாதி³ ஸ்வப்நஹோக் ॥

(தைத். ஆரணி. கo. எஉ. கூஉ)

---

*காயமேகோயிலாகக்கடிமனமடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப்
பூசனையீசனுர்க்குப்போற்றவிக்காட்டினோமே.
(பொது, தனித்திருநேரிசை. ச)

"அங்குஷ்ட அளவினராகிய புருஷர் அங்குஷ்டத்தையும் ஆசிரயித்தனர்; ஈசரும், உலகம் அனைத்துக்கும் பிரபுவும், விசுவத்தைக் கவளீகரிப்பவருமாகிய இவர் பிரீதியுறுகின்றனர்" என்றற்றொடக்கத்த மகோபநிடதத்திலே கூறப்படும் சுருதியே விஷயம்.

ஈண்டு அங்குஷ்ட அளவினராகக் கூறப்பட்டவர் சிவபெருமானா? பிறரொருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிராணாக்கினிகோத்திரப் பிரகரணத்தில் இவ்வாக்கியம் காணப்படலானும், அங்குஷ்ட அளவினராக உரைக்கப்பட்ட புருஷர் சிற்றுருவினராகக் கூறப்படலானும், அந்தப் புருஷன் ஐந்து ஆகுதிகளைப் புசிக்கும் பிராணவாயு என்றே கோடற்பாற்று. பிராணன் புசிப்பவனாகான் என்று உறுத்திக் கூறல் கூடாது;

ப்ருதிவ்யாபோ(அ)ந்நம் அத்தாரௌ வஹ்நிர்வாயூ ச |

"பிருதிவியும் அப்புவும் அன்னம்; உண்போர் அக்கினியும் வாயுவும்" என்றற்றொடக்கத்த வாக்கியங்களில் வாயுவும் புசிப்பவனும் என்னும் உண்மை பிரசித்தமாதலின்; எப்பிரகாரத்தானும் அவ்வாக்கியம் பிராணவாயுவைக் குறித்ததென ஆக்ஷேபிக்கின்,

(சித்தாந்தம்) (அங்குஷ்டமாத்திரராகக் கூறப்பட்டவர்) சிவபெருமானே; உலகம் அனைத்துக்கும் ஈசுவரராதல், உலகத்தைக் கவளீகரித்தல் முதலிய குணங்களை மற்றொன்றுக்கு (பிராணவாயுவுக்கு எப்பிரகாரமாயேனும்) பிரயோகிப்பின், அக்குணங்களுக்கு (அவ்வியல்பினவாய பிறபொருள்கட்கும் பிரயோகிக்க நேர்தலாகிய முடிவின்மை என்னும்) அநவஸ்தாதோஷமும், அசம்பவமும் நேருமாகலின். ஆகலின், அவ்வியற்கையர் சிவபெருமானே.

ப்ராணாநாம் க்ரந்திரஸி ருத்ரோ மா விஶாந்தக: |

(தைத். ஆரணி. க0. எச. கூரு)

"நீவிரே பிராணனுக்கெல்லாம் கிரந்தி, (துக்கத்தை ஒழிக்கும்) உருத்திரர் நீவிரே; நீவிரே என்னுட் பிரவேசித்துள்ளீர்" என்னும் சுருதியில், (அவர்) பிராணனுக்கு ஆதாரமாயினரெனக் கேட்கப்படுதலின், பிராணாதாரமாயும் வழிபடற்பாலர் எனக் கூறப்படுகின்றனர். உபாசனையின் பொருட்டு அவரை அங்குஷ்ட அளவினராகக் கூறினமை விரோதமின்று. பிராணவாயு (பலவிடங்களில்) போக்தாவாகக் கூறப்படினும், அதனை அனைத்தையும் கவளீகரிக்கும் விசுவபோக்தா எனல் அசம்பாவிதம். ஆகலின், இந்தச் சிவபெருமான் பிராணாக்கினிகோத்திரத்தினால் வழிபடற்பாலராதலின், அவர் பிராணரூபராய்ப் பிரதிபாதிக்கப்படுகின்றார் என்றமை சித்தித்தது. (கஅ)

## (எ) அந்தரியாமியதிகரணம்.

பரப்பிரமசிவனுர் சர்வஞ்ஞரும், சர்வசக்தியினரும், சர்வானுக்கிரகரும், சர்வவியாபகருமாமாயினும், அவர் சூரியமண்டலம், புருஷ இருதயபுண்டரீகமுதலிய இடங்களில் உபாசனையின் பொருட்டு உளராதல் (இதுகாறும்) நிரூபிக்கப்பட்டது. (அவர்) யாண்டும் வியாபித்தலை உணர்த்துமாறெழுந்தது இவ்வதிகரணம்.

ஸூயஂர்யாமயதிசைவாதிஷு தஷ்மாவ்யபதெஶாத் ।

(க. உ. கக)

(௫க) *தேவர்களினும் (உலக) முதலியவைகளினும் அந்தரியாமியாய் இருப்பவர் (அவரே), அவர் குணங்கள் கூறப்படலான்.

யஃ ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம்ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீஶரீரம் யஃ ப்ருதிவீமந்தரோ யமயத்யேஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருதஃ (பிரு. ௫. எ. ௩)

"பூமியினும் பூமிக்குள்ளும் இருக்கும் அவரைப் பூமி அறிந்திலது, பூமியைச் சரீரமாகவுடையராய், அதனை உள்ளே நின்று செலுத்துபவர் உன் ஆன்மாவும், அந்தரியாமியும், (அமிர்தரும்) சிவபெருமானுமாம்" என்னும் அந்தரியாமிப் பிராம்மணசுருதியே ஆராயற்பாலதாகிய விஷயம்.

பிருதிவிமுதல் அவ்வியக்த ஆன்மா வரையும் உள்ள எப்பொருள்களுக்கும் அந்தரியாமியாகக் கூறப்பட்டவர் சிவபெருமானு? ஆன்மாவா? விராட்புருஷனு? பிரதானமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) தான் தேடிக்கொண்ட விசித்திரமாகிய பல்வகைப் பயன்களைத் துய்க்கும் பொருட்டு, ஆன்மா சகல பூதேந்திரியங்களுள்ளும் பிரவேசித்தானெனல் பொருந்துகின்றது; (இன்றேல்) சகல சேதனப் பொருள்களுக்கும் உபாதானமாயிருத்தலின் விராட்புருஷன் சகல பூதங்களுட் பிரவேசித்தானெனல் பொருத்தம்; இன்றேல், மகத்தத்துவ முதலாகப் பரிணமித்தலின் பிரதானமே சர்வவியாபகமாயதெனல் உசிதம்.

விஶ்வாயிகோ ருத்ரஃ (சுவே. ௩. ச; ச. கஉ)

---

*மாலாகிநான்முகனுய்மாபூதமாய்மருக்கமாயருக்கமாய்மகிழ்வுமாகிப்
பாலாகியெண்டிசைக்குமெல்லையாகிப்பரப்பாகிப்பரலோகந்தானேயாகிப்
பூலோகபுவலோகசுவலோகமாய்ப்பூதங்களாய்ப்புராணன்றுனேயாகி
யேலாதனவெல்லாமேல்விப்பானுயெழுஞ்சுடராயெம்மடிகணின்றவாறே.
(பொது, நின்றதிருத்தாண்டகம், நாவு, க0)

"விசுவாதிகர் உருத்திரர்" என்னுஞ் சுருதி கூறியவாறு, உலகம் அனைத்தையும் கடந்து, சமஸ்த விகாரமெலாம் ஒழிந்துள்ள சிவபெருமான் விகாரரூபமாகிய பிரபஞ்சத்துட் பிரவேசித்தாரெனல் ஒவ்வாது. ஆகலின், சிவபெருமான் ஒழிந்து ஆன்மா, விராட்புருஷன், பிரதானம் என்னும் மூன்றனுள் ஒன்றே அந்தரியாமி எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிருதிவி முதலியவற்றுள் அந்தரியாமியாயுள்ளார் சிவபெருமானே; எல்லாவற்றுள்ளும் (அவர்) உண்மைக்குணம் (பிருகதாரணியத்திற்) கூறப்படுதலின்,

ஸொऽந்தராதந்தரம் ப்ராவிஶத் (அதர்வசிரசு.க)

"அந்தரத்தின் அந்தரத்தைப் பிரவேசித்தனர்" என்று அதர்வசிரசினும் எப்பொருள்களுக்கும் ஆன்மாவாகச் சிவபெருமான் பிரவேசித்தனர் எனக் காணப்படுதலின்.

ஏஷ த ஆத்மாऽந்தர்யாம்யம்ருதः (பிரு. ரு. எ. ௩)

"அவர் உன் ஆன்மா, அந்தரியாமி, அமிர்தர்" என்னுஞ் சுருதியிற் சிவபெருமானே அநாதிமுத்தராகிய அமிர்தர் எனக் கூறப்படுகின்றனர்;

ஏதானி ஹவா அம்ருதஸ்ய நாமதேயானி।

"இவை அமிர்தத்தின் பெயர்கள்" என்று சிவபெருமானைக் குறித்து ஜாபாலோபநிடதத்திற் கேட்கப்படலான்.

விஶ்வாதிகோ ருத்ரः (சுவே. ௩. ச; ச. கஉ)

"விசுவாதிகர் உருத்திரர்" என்னுஞ் சுருதி சிவபெருமானை விசுவாதிகர் என்று கூறியவாறு போல,

ஸர்வோ வை ருத்ரः (தைத். ஆரணி. க௦. உச. சஉ)

"எல்லாம் உருத்திரர்" என்றற்றொடக்கத்த சுருதிகளும் அவரை விசுவரூபர் என்று கூறுகின்றன. விகாரமுடைய எப்பொருள்களுட் (கலந்து) பிரவேசிப்பினும், அவர்க்கு அவ்விகாரத்தின் லேசமும் பற்றாது என உணர்த்துதற்கே (இந்த அதிகரண ஆரம்பத்திற் கூறப்பட்ட வாக்கியத்தைத் தொடர்ந்து, பிருகதாரணியத்துள்ள) ஒவ்வொரு மந்திரத்தும் அமிர்தசப்தம் பரியாயமாகப் பிரயோகிக்கப்பட்டது.

யோ வை ருத்ரஸ்ஸ பகவான் யஶ்ச ப்ரஹ்மா பூர்புவஸ்ஸுவஸ்தஸ்மை வை நமோ நமः (அதர்வசிரசு)

"எவர் உருத்திரரோ, அவர் பகவான், அவர் பிரமா, அவர் பூः, புவः, சுவः, அவர்க்கு நமஸ்காரம், நமஸ்காரம்" என்றற்றொடக்கத்தவற்றாற் பிரமா, விஷ்ணு, உருத்திரர், உமை, இலக்குமி, சரசுவதி, கணேசர், ஸ்கந்தர்,

இந்திராதி லோகபாலர், பூமி முதலிய சப்தலோகங்கள், பிருதிவியாதி பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், கிரகம், நக்ஷத்திரம், காலமுதலிய ரூபமுடையராய்ச் சிவபெருமான் தனித்தனி அப்பியாசலிங்கத்திஞல் அதர்வசிரசினும் நிரூபிக்கப்படுகின்றனர். சமஸ்த சேதஞசேதனப் பிரபஞ்சத்தை வியாபித்து நின்றமையின், அபுருஷார்த்த சம்பந்தம் எய்துமோ என்னுஞ் ஆசங்கை அறுத்தற்கு, ஐசுவரிய முதலிய மங்கல குணம் அவர்க்கு உளதாதலே உணர்த்துமாறு பகவத் சப்தம் பரியாயமாக ஒவ்வோரிடத்தும் அதர்வசிரசிற் பிரயோகிக்கப்பட்டது. ஆகலின், சர்வாதிகரும் சர்வான்மாவாயுமுள்ளார் சிவபெருமான் எனல் யுக்தம். (ககூ)

பிரதான முதலியவற்றை அந்தரியாமியாகக் கூறல் உசிதமா என்னும் ஆக்ஷேபத்தைச் சூத்திரகாரர் பரிகரிப்பாராயினர்.

ந ச ஸ்மார்த்தமதத்தர்மாபிலாபாத் ஶாரீரஶ்ச (க. உ. உ௦)

**(ருஉ) ஸ்மிருதி கூறும் அதுவும் அன்று; அதன் குணங்கள் யாதுங் கூறப்படாமையின்; சரீரியும் அன்று.**

(சாங்கிய) ஸ்மிருதியிற் கூறப்பட்ட பிரதானத்தைச் சுருதி சொல்லிய அந்தரியாமி எனல் கூடாது, விகாரமுறும் ஜடத்தன்மை முதலிய குணங்கள் அவர்க்குக் கூறப்படாமையின்; சாரீரஞகிய விராட்புருஷனுமன்று, அவனுக்கு அனைத்தையுஞ் செலுத்துமியல்பு முதலியன கூடாமையின். (உ௦)

சூத்திரகாரர் ஆன்மாவுமாகான் என்கின்றனர்.

உபயேऽபி ஹி பேதேநைநமதீயதே (க. உ. உக)

**(ருங) இரண்டும் உறுதியாய் அவரைப் *பேதமென்றே கூறுகின்றன.**

யோ விஜ்ஞாநே திஷ்டந் (கண்ணுவசாகை—பிரு. ரு. எ. உஉ)
ய ஆத்மநி திஷ்டந் (மத்தியந்தினசாகை)

"எவர் விஞ்ஞானத்தில் (ஆன்மாவில்) இருக்கின்றனரோ;" "எவர் ஆன்மாவில் இருக்கின்றனரோ" என்றற்றொடக்கத்தனவாக முறையே கூறும் கண்ணுவசாகை மத்தியந்தினசாகையுமாம் இரண்டினும் ஆன்மாவினின்று

---

*கள்ளனேன்கள்ளத்தொண்டாய்க்காலத்தைக்கழித்துப்போக்கித்
தெள்ளியேஞகிநின்றுதேடினேஞடிக்கண்டே
னுள்குவாருள்கிற்றெல்லாமுடனிருந்தறிதியென்று
வெள்கினேன்வெள்கிநானும்விலாவிறச்சிரித்திட்டேனே.
(பொது, தனித்திருநேரிசை, நாவு, ரு)

இரப்பரெமையாள்வரென்னுணீங்காரிடைமருதுமேவியிடங்கொண்டாரே.
(திருவிடைமருதூர், நாவு, ௬)

அந்தரியாமியானவர் வேறெனக் கூறப்படுகின்றனர். ஆகலின் சிவபெருமானே அனைத்துக்கும் அந்தரியாமி; பிரதானமாவது, விராட்புருஷனாவது, ஆன்மாவாவது அன்று என்பது சித்தமாயிற்று. (உக)

## (அ) அதிருசியத்துவாதிகரணம்.

ஈண்டுப் பிரத்தியக்ஷமாகிய பிருதிவியாதி ரூபமாகப் பிரதிபாதிக்கப்பட்ட சிவபெருமான் அவற்றைப் போலக் காண்டலுறுர் என உணர்த்துதற்கு எழுந்தது இவ்வதிகரணம்.

𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌗𑍁𑌣𑌕𑍋 𑌧𑌰𑍍𑌮𑍋𑌕𑍍𑌤𑍇𑌃 (க. உ. உஉ)

(ருச) *கண்கூடாகாமை முதலிய குணங்களுடையர் (சிவபெருமான், அவர்) குணங்கள் கூறப்பட்டமையின்.

𑌅𑌥 𑌪𑌰𑌾 𑌯𑌯𑌾 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌮𑌧𑌿𑌗𑌮𑍍𑌯𑌤𑍇। 𑌯𑌤𑍍𑌤𑌦𑌦𑍍𑌰𑍇𑌶𑍍𑌯𑌮𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌮𑌗𑍋𑌤𑍍𑌰𑌮𑌵𑌰𑍍𑌣𑌮𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌤𑌦𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌵𑌿𑌭𑍁𑌂 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌸𑍁𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌤𑌦𑌵𑍍𑌯𑌯𑌂 𑌯𑌦𑍍𑌭𑍂𑌤𑌯𑍋𑌨𑌿𑌂 𑌪𑌰𑌿𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌧𑍀𑌰𑌾𑌃 (முண். க. க. சு)

"அந்த அக்ஷரம் எதனுல் உரைக்கப்படுகின்றதோ, அது பரைஞானம்; எது காணப்படாததாய், பற்றப்படாததாய், கோத்திரமிலாததாய், வர்ணமிலாததாய், கண் காது இலாததாய், கைகால் இலாததாய், நித்தியமாய், வியாபகமாய், யாண்டும் பிரவேசித்ததாய், அதிசூக்குமமாய், அழியாததாய், சமஸ்தப் பிராணிகளுக்கும் காரணமாய் உள்ள அதனை (அக்ஷரத்தைப்)

---

*கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னேக்கரியநோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே.
(திருவாசகம், சிவபுராணம்)

அடிசார்ந்தவர்க்கு முடியாவின்ப
நிறையக்கொடுப்பினுங் குறையாச்செல்வ
மூலமுநடுவு முடிவுமிகந்து
காலமூன்றையுங் கடந்தகடவு
ளுளக்கணுக்கல்லா தூன்கணுக்கோளித்துத்
துளக்கறநிமிர்ந்த சோதித்தனிச்சுட
ரெறுப்புத்துளையி னிருசெவிக்கேட்டா
துறுப்பினின்றெழுதரு முள்ளத்தோசை
வைத்தநாவின் வழிமறுத்தகத்தே
தித்தித்தூறுந் தெய்வத்தேற
றுண்டத்துளையிற் பண்டைவழியன்றி
யறிவினுறு நறியாநாற்ற
மேனையதன்மையு மெய்தா தெவற்றையுந்
தானேயாகி நின்றதற்பர.
(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, உக)

பெரியோர் காண்கின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதியே இவ்வதிகரண விஷயம்.

ஈண்டு அக்ஷரம் என்றது பிரதானமா? ஆன்மாவா? சிவபெருமானா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஈண்டு அக்ஷரம் பிரதானம்; மகத்து முதலியவாய்ப் பரிணமிக்கும் பிரதானம் எப்பொருட்கும் காரணமாதலின்; இன்றேல் (அக்ஷரம்) ஆன்மா.

𑌕𑍍𑌷𑌰𑌂 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌮𑌮𑍃𑌤𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌹𑌰𑌃 (சுவே. ௧. ௧0)

"க்ஷரம் பிரதானம், அக்ஷரம் அமிர்தம்" என்னுஞ் சுருதிகொண்டு ஆன்மாவை அக்ஷரம் எனக் கூறுவது உசிதம், ஆன்மா தன் கர்மவசத்தினால் மகாபூதங்களுக்குக் காரணமாதலும் உண்மையான். ஆகலின், இந்தப் பிரதானம் ஆன்மா இரண்டனுள் ஒன்றை அக்ஷரம் குறிப்பதாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சிவபெருமானே அக்ஷரம்;

𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌯𑌂 𑌤𑌪𑌃 (முண். ௧. ௧. ௯)

"எவர் சர்வஞ்ஞரோ, அனைத்தையும் அறிபவரோ, எவர்க்குத் தபசு ஞானமயமோ" என்றற்றொடக்கத்த சுருதியில், அவர் குணங்கள் கூறப்படலான்; சிவபெருமானையொழிந்து பிறிதொன்றுக்கும் முற்றுணர்வு முதலிய குணங்கள் எய்தா. எப்பொருள்களுக்கும் காரணமாதல், பிரதானத்துக்கேனும் ஆன்மாவுக்கேனும் நேருமெனல் யுக்தமன்று. அசேதனமாகிய பிரதானத்திக்கும், அசர்வஞ்ஞனாகிய ஆன்மாவுக்கும் அந்தச் சாமர்த்தியம் எய்தாமையான். (௨௨)

ஈண்டுப் பின்னரும் ஆன்மாவையும் பிரதானத்தையும் அக்ஷரமெனல் பொருந்தாதெனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑌭𑍇𑌦𑌵𑍍𑌯𑌪𑌦𑍇𑌶𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌚 𑌨𑍇𑌤𑌰𑍌 (௧. ௨. ௨௩)

**(௫௫) விசேஷணமும் பேதமும் கூறப்படலான், இந்த இரண்டும் அன்று.**

𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁 𑌭𑌗𑌵𑍋 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌭𑌵𑌤𑌿

(முண். ௧. ௧. ௩)

"பகவானே, எது அறியப்படின், ஈதெல்லாம் அறியப்பட்டதாகின்றவோ" என்னுஞ் சுருதியினால் ஒன்றை (சிவஞானத்தை) அறிதலான் எல்லாம் அறியப்படுகின்றனவாகும் என உணரப்படுகின்றது. இஃதன்றி இவ்வியல்பினவாய வேறு விசேஷணங்களும் உண்டு; அக்குணங்கள் கூறப்படலானும், அக்ஷரம் பிரதானமாகாது.

அக்ஷராத்பரத: பர: (முண். உ. க. உ)

“அக்ஷரத்தினும், (~~பரமா~~சிவான்மாவினும்) பரன்” என்னுஞ் சுருதி ஆன்மாவினின்று (அக்ஷரம்) வேறு எனக் கூறுதலின், (அக்ஷரம்) ஆன்மாவும் அன்று. (உ௩)

ரூபோபந்யாஸாச்ச (க. உ. உச)

**(௫௬) (அவரது) வடிவத்தின் உபந்நியாசம் உண்மையானும்.**

அக்நிர்மூர்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ திஶ: ஶ்ரோத்ரே வாக்விவ்ருதாஶ்ச வேதா:। வாயு: ப்ராணோ ஹ்ருதயம் விஶ்வமஸ்ய பத்ப்யாம் ப்ருதிவீ ஹ்யேஷ ஸர்வபூதாந்தராத்மா॥
(முண். உ. க. ச)

“அக்கினி அவர் தலை, சூரியனுஞ் சந்திரனும் அவர் கண்கள், திக்குகள் அவர் காதுகள், புலப்படுத்தப்பட்ட வேதம் அவர் வாக்கு, பிராணன் அவர் சுவாசம், பிரபஞ்சம் அவர் இருதயம், பூமி அவர் அடிகளினின்று பிறந்தது, பிராணிகள் அனைத்துக்கும் அவரே அந்தரியாமி” என்னுஞ் சுருதியினால், அக்ஷரம் மூவுலகவடிவமாதல் கூறப்படுகின்றது. ஆகலின் அனைத்துக்கும் ஆன்மாவாகிய சிவபெருமானே அக்ஷரமொழியினாற் கருதப் பட்டவர். (உச)

## (௬) வைசுவாநராதிகரணம்.

---

மேலே உரைத்த அதிகரணமொன்றிற் பிராணதாரராக உபாசிக்கற்பாலர் என்று கூறப்பட்ட சிவபெருமான் பின்னர் ஜாடராக்கினி ரூபமாக உபாசிக்கற்பாலரெனக் கூறுகின்றது இவ்வதிகரணம்.

வைஶ்வாநர: ஸாதாரணஶப்தவிஶேஷாத் (க. உ. உரு)

**(௫எ) *வைசுவாநர †ஒளி (சிவபெருமான்), சாதாரண சப்தத்தினின்று பேதம் உண்மையின்.**

யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே ஸ ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஷ்வாத்மஸ்வந்நமத்தி (சாந். ரு. கஅ. க)

---

*காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்கடிக்கமலத்திருந்தயனுங்காணவண்ணஞ் சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கு மேரொளியையிருநிலனும்விசும்பும்விண்ணுமேழுலகுங்கடந்தண்டத்தப்பானின்ற பேரொளியைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.
(கோயில், பெரியதிருத்தாண்டகம், நாவு, க0)

†அக்கினி.

"இடவரைப்புட்பட்ட வைசுவாநரரை ஆன்மாவாக எவன் உபாசிக்கின்றானோ, அவன் சர்வலோகங்களினும், சர்வபூதங்களினும், சர்வான்மாக்களினும் போகம் (அன்னம்) துய்க்கின்றான்" என்னுஞ் சாந்தோக்கிய சுருதியே இவ்வதிகரணவிஷயம்.

உபாசிக்கற்பாலராகக் கூறப்பட்ட வைசுவாநரர் சிவபெருமானா? பிறர் ஒருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வைசுவாநரமொழியினால் ஜாடராக்கினியே கூறப்படுகின்றது;

அயமக்நிர்வைஶ்வாநரோ யோऽயமந்த꞉புருஷே யேநேத³மந்நம் பச்யதே யதி³த³மத்³யதே தஸ்யைஷ கோ⁴ஷோ ப⁴வதி யமேதத்கர்ணாவபிதா⁴ய ஶ்ருணோதி ஸ யதோ³த்க்ரமிஷ்யந்ப⁴வதி நைநம் கோ⁴ஷம் ஶ்ருணோதி।

(பிரு. எ. கூ. க)

"உண்ணப்பட்ட அன்னத்தை ஜீர்ணமாக்கற்பாலதாய (மனிதனுள்ளேயுள்ள) இந்த அக்கினி வைசுவாநரன், ஒருவன் தன் காதுகளைப் பொத்துங்கால், அவன் கேட்பது அதன் ஒலியே; அவன் இவ்வாழ்வைவிட்டு நீங்குங்கால், அவன் அவ்வொலியைக் கேட்பானல்லன்" என்னுஞ் சுருதியில் ஜாடராக்கினிபற்றிப் பிரயோகங் காணப்படலான்.

இன்றேல் (அவ்வைசுவாநரர்) பிருதிவியாதி பஞ்சபூதங்களுள் மூன்றாவதாகிய அக்கினியாகலாம்;

ஏஷ வா அக்நிர்வைஶ்வாநர꞉ (தைத். சங். ௩. ௩. அ. ௪)

"இந்த அக்கினியே வைசுவாநரன்" என்றற்றொடக்கத்த சுருதிகளில் வைசுவாநரசப்தம் பிரசித்தமாயிருத்தலின்.

இன்றேல், வைசுவாநரன் அக்கினி தேவதையாயிருக்கலாம்;

வைஶ்வாநரம் த்³வாத³ஶகபாலம் நிர்வபேத் புத்ரே ஜாதே।

(தைத். சங். ௨. ௨. ௫. ௩)

"புதல்வன் பிறந்தபோது பன்னிரு கபாலங்களில் வைசுவாநரர்க்குப் பலிகள் கொடுக்கப்படும்" என்றற்றொடக்கத்த சுருதிகளில், (அவ்வக்கினி) இஷ்டி தேவதையாய்ப் பலம் கொடுத்தல் கூறப்படுதலின். சிவபெருமான் அன்று; பிரதேசமாத்திரம் என எல்லை வரையறுப்புக் குறிக்கப்படுதலினெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சிவபெருமானே வைசுவாநரர்; எங்ஙனம்? வைசுவாநரசப்தம் சாதாரணமாக வழங்கப்படினும், இவ்வதிகரணத்திலே

கோ ந ஆத்மா கிம் ப்³ரஹ்ம (சாந். ௫. ௧௧. ௧)

ஆத்மாநமேவேமம் வைஶ்வாநரம் ஸம்ப்ரத்யத்யேஷி தமேவ நோ ப்ரூஹீதி (சாந். ரு. கக. சு)

"நமது ஆன்மா யாவர்? பிரமம் என்னை? வைசுவாநர ஆன்மாவை நீவிர் இப்பொழுது அறிகின்றீர்; அதனை நமக்குக் கூறும்?" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் சிவபெருமான் அசாதாரண பிரமசப்தாதிகளினால் (இந்தச் சாந்தோக்கியோபநிடதப் பிரகரணத்தில்) விசேஷிக்கப்படுதலின், அந்த விசேஷணம் ஜாடராக்கினி முதலியவைகளுக்குச் செல்லுமாறின்று. ஆகலின், சிவபெருமானே வைசுவாநரர். (உரு)

சிவபெருமான் பாலதாக மற்றோர் பிரமாணஞ் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸ்மர்யமாணமநுமாநம் ஸ்யாதிதி (க. உ. உசு)

**(ருஅ) (ஈண்டுக்) கூறப்படுவது அனுமானக் குறியாய் ஆகுக என்பது.**

"அக்நிர்மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ।
(முண். உ. க. ச)

"அக்கினி அவர் தலை, சூரியனுஞ் சந்திரனும் அவர் கண்கள்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே ஆகாயலோகமுதற் பிருதிவியீறாகிய வடிவம் சிவபெருமானுக்குக் கூறப்பட்டது.

தஸ்ய ஹ வா ஏதஸ்யாத்மநோ வைஶ்வாநரஸ்ய மூர்த்தைவ ஸுதேஜாஶ்சக்ஷுர்விஶ்வரூப: ப்ராண: ப்ருதக்வர்த்மாத்மா ஸந்தேஹோ பஹுலோ பஸ்திரேவ ரயி: ப்ருதிவ்யேவ பாதௌ।
(சாந். ரு. கஅ. உ)

"அந்த வைசுவாநர ஆன்மாவுக்குத் தலையே சுதேஜஸ் (நல்லொளி), கண் விசுவரூபம், பிராணன் பிருதக் வர்த்தமானம் (வேறாய வழி), தேகம் பகுளம் (நிறைவு), ஜலாசயமே செல்வம், அடிகளே பூமி" என்னுஞ் சுருதிகளிற் கூறப்பட்ட வடிவம் சிவபெருமானதென (அனுமானித்தற்கு) இலிங்கமாகின்றது. (உசு)

ஶப்தாதிப்யோऽந்த:ப்ரதிஷ்டாநாச்ச நேதி சேந்ந ததா த்ருஷ்ட்யுபதேஶாதஸம்பவாத் புருஷமபி சைநமதீயதே (க. உ. உஎ)

**(ருகூ) சப்தமுதலியவைகளானும், உள்ளே பிரதிஷ்டை பண்ணப்படலானும், வைசுவாநரர் ஜாடராக்கினியொழிந்து மற்றொன்றன்றெனின், அன்று; அங்ஙனந் தியானத்தின்**

பொருட்டு உபதேசிக்கப்படலானும் ஒவ்வாமையானும்; இவரை (வைசுவாநரரை) புருஷரென்றும் படிக்கின்றனர்.

(ஆக்ஷேபம்) இந்த வைசுவாநராக்கினி,

ஹ்ருதயம் கார்ஹபத்யோ மநோऽந்வாஹார்யபசந ஆஸ்யமாஹவநீயஃ (சாங். நி. கஅ. உ)

தத்யத்³ப⁴க்தம் ப்ரத²மமாக³ச்சே²த்தத்³தோ⁴மீயம் ஸ யாம் ப்ரத²மாமாஹுதிம் ஜுஹுயாத் (சாங். நி. கக. க)

"இருதயம் கார்கபத்தியாக்கினி, மனம் அங்வாகாரியாக்கினி, வாய் ஆகவநீயாக்கினி, ஆகலின் மனிதன் எதனை முதற்கண் புசித்தானே அது ஹோமஸ்தானத்தின் பாற்று, அவன் முதல் ஆகுதியை ஓமிக்க" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் கூறப்பட்டு, அக்கினி சப்தத்தினல் மூன்றாகக் கற்பித்த அக்கினிகளாய், பிராணன்களுக்குக் கொடுக்கும் ஆகுதிகளுக்கு ஆதாரமாயிருத்தலானும்,

ஸ யோ ஹைதமேவமக்³நிம் வைஶ்வாநரம் புருஷவிதம் புருஷேऽந்த: ப்ரதிஷ்டி²தம் வேத³ (சத. பி. கO. சு. க. கக)

"புருஷரூபமாயும், புருஷனுள்ளே பிரதிஷ்டை செய்யப்பட்டதாயும் இங்ஙனம் இந்த வைசுவாநராக்கினியை எவன் அறிகின்றானே" என்னுஞ் சுருதியிற் புருஷனுள்ளே பிரதிஷ்டை செய்யப்பட்ட குறியினலும், (அந்த வைசுவாநராக்கினி) ஜாடராக்கினியன்றிச் சிவபெருமான் அன்றெனின்,

(உத்தரம்) அங்ஙனமன்று; ஜாடராக்கினிரூபராகச் சிவபெருமான் உபாசிக்கற்பாலர் என உபதேசிக்கப்படலானும், கேவலம் ஜாடராக்கினி மூவுலக சரீராதியாயிருத்தல் கூடாமையானுமாம். மேலும்,

ஸ ஏஷோऽக்³நிர்வைஶ்வாநரோ யத்புருஷ:।
(சத. பி. கO. சு. க. கக)

"புருஷனாக அறியப்பட்டவன் இந்த வைசுவாநராக்கினி" என்னுஞ் சுருதியில் வாஜசநேயினர் வைசுவாநரரைப் புருஷர் எனவும் கூறுகின்றனர். உபாதியில்லாத புருஷசப்தத்தினற் கூறப்படுகின்றவர் சிவபெருமானே; அந்தப் புருஷனல் இஃதெல்லாம் நிறைந்தது என்று கேட்கப்படலான். ஆகலின் சிவபெருமானே (அந்தப் புருஷர் என்று) கோடல் யுக்தம். (உஎ)

அத ஏவ ந தே³வதா பூ⁴தஞ்ச (க. உ. உஅ)

(சுO) ஆதலினலே தேவதையுமன்று, பூதமுமன்று.

இந்த வைசுவாநரர் திரிலோகத்தைச் சரீரமாகவும், புருஷசப்தத்தினல் அறியப்படுபவராகவும் இருத்தலினல், (அவர்) தேவதாக்கினியாயா

வது, (பிருதிவியாதி பஞ்சபூதங்களுள்) மூன்றும் பூத அக்கினியாயாவது கொள்ளப்படுவாரல்லர். (உஅ)

ஈண்டுச் சிவபெருமான் ஜாடராக்கினிரூபமாய் உபாசிக்கற்பாலராக அக்கினிசப்தத்திஞற் குறிக்கப்பட்டனரென நிரூபித்து, சூத்திரகாரர் மற்றைய ஆசாரியர்கள் அவ்வக்கினியை எங்ஙனம் பலதிறப்பட யோஜித்தனர் எனக் காட்டுவாராயினர்.

ஸாக்ஷாஉவ்யவிரொயம் ஜெஜிநிঃ (க. உ. உகூ)

**(௬க) நேரே (பதப்பிரயோகஞ் செய்யினும்) விரோதமின்றென்பர் ஜைமினி.**

அவர் ஆவசியகம் அக்கினிரூபராக உபாசிக்கற்பாலர் என்னும் நியாயத்திஞன் மாத்திரமன்றி, முற்பட (அன்பர்களை) நடாத்துதலாற் சிவபெருமானே அக்கினிசப்தத்துக்கு நேரே பொருளாயினர் என்னும் நியாயத்தானும் விரோதமின்றென்பர் சைமினி. (உகூ)

அஹிவ்யக்தெ ரித்யாஶ்மரய்யঃ (க. உ. ௩௦)

**(௬உ) அபிவியக்தியின் பொருட்டென்பர் ஆசுமரத்தியர்.**

யஷ்ஷெநமெவம் ப்ராஜெஶமாத்ரு (சாங். நி. கஅ. க)

"இடவரையுட்பட்டவர்" என்றற்றொடக்கத்த சுருதிப்பிரகாரம், எல்லையுட்படாதவரை ஆகாயமுதற் பிருதிவி ஈருயுள்ள பிரதேசங்களில் அடங்கினவராக எல்லைப்படுத்தினமை, உபாசகர்களுக்குப் பிரசன்னமாக்கும்பொருட்டென்பர் ஆசுமரத்தியமுனிவர். (௩௦)

அநுஸ்ம்ருதெ ரிதி பாதரிঃ (க. உ. ௩க)

**(௬௩) ஞாபகத்தின்பொருட்டு என்பர் பாதரி.**

ஆகாயமுதற் பிருதிவி அந்தமாயுள்ளவைகளிற் சிரசும், பாதமும், மற்றை அவயவங்களும் கற்பித்தமை மறவாதிருக்கும் பொருட்டே, (அஃதாவது) பிரமத்தை அடையும்பொருட்டேன்பர் பாதரிமுனிவர். (௩க)

ஸம்பத்தெரிதி ஜெஜிநிஸ்ததா ஹி உஶயதி (க. உ. ௩உ)

**(௬௪) உயர்வின்பொருட்டென்பர் ஜைமினி, அங்ஙனமே சுருதி கூறுகின்றது.**

உர ஏவ வெதிலொமாநி பஹிர்ஹ்ருதயம் காஹர்பத்யோ மநொऽந்வாஹார்யபசந ஆஸ்யமாஹவநீயঃ (சாங். நி. கஅ. உ)

"நெஞ்சே வேதிகை, உரோமங்களே தர்ப்பை, இருதயம் கார்கபத்தியாக்கினி, மனசு அந்வாகாரியாக்கினி, வாய் ஆகவநீயாக்கினி" என்னுஞ்

சுருதியில் உபாசகனுடைய உர முதலியவைகளை வேதிகை முதலியனவாகக் கற்பித்தமை ஞானங்கமாயுள்ள பிராணாகுதியை அக்கினிகோத்திரமென உயர்த்திச் சிந்தையிற் கொள்ளுமாறென்பர் ஜைமினி.

ய ஏவம்விதா நஹ்ரிஹோத்ரம் ஜுஹோதி।

(தைத். சங். க. சு. கூ. க)

"வித்துவான் அக்கினிகோத்திரத்தை ஓமிக்கின்றனன்" எனச் சுருதி விளக்குகின்றது. (ருஉ)

அபிநசைநமஸ்மிந் (க. உ. ருரு)

(ருரு) இவரை அதற்குள்ளே உளராகவும் கூறுகின்றனர்.

ஶிவோ மா விஶாப்ரதாஹாய (தைத். ஆரணி. க௦. சுகூ. கூ௦)

"(ஓ பலியே), எரிவுறுதிருக்குமாறு சிவபெருமானை என்னுள்ளே பிரவேசி" எனவும்,

ப்ரஹூ: ப்ரீணாதி விஶ்வஹுக்।

(தைத். ஆரணி. க௦. எக. கூஉ)

"விசுவபோக்தாவாயுள்ள பிரபு பிரீதியுறுகின்றனர்" எனவும் போந்த சுருதிகளிற் சிவபெருமான் பிராணாகுதிசெய்யுங்காலத்திற் *போக்தாவாக உபாசகர் உள்ளத்தில் உளர் எனத் தைத்திரீயகர் கூறுகின்றனர். ஆகலின், ஆசாரியர் அனைவர் கோட்பாட்டினாலும், எவ்வித நியாயத்தினாலும் ஜாடராக்கினிரூபராகச் சிவபெருமானே பிராணாக்கினிகோத்திரத்தினால் ஆராதிக்கற்பாலர் எனல் சமீசீனம். (ருரு)

---

*ஶிவோ தாதா ஶிவோ போக்தா।

அண்டமோரணுவாம்பெருமைகொண்டணுவோ
ரண்டமாஞ்சிறுமைகொண்டடியே
னுண்டவூணுனக்காம்வகையெனதுள்ள
முள்கலந்தெழுபரஞ்சோதி.

(திருவிசைப்பா, கங்கைகொண்டசோளேச்சரம், சு)

என்று வேதத்துக்கிசைந்து சிவாகமமுந் திருவிசைப்பாவுங் கூறிய.

---

## முதலாம் அத்தியாயத்து
# மூன்றாம் பாதம்.

———o———

## (க) த்யுப்வாத்தியதிகரணம்.

இந்தப் பாதத்திலே வெளிப்படையானவும் வெளிப்படையிலாதனவுமாகிய பிரமலிங்கங்களையுடைய வேதாந்த வாக்கியங்களின் விசாரஞ் செய்யப்படுகின்றது. இதற்கிடையில் (இந்நூல் படித்தற்குரிய) அதிகாரி எவரென்றும் நிரூபணஞ் செய்யப்படுகின்றது.

த்யுப்வாத்யாயதநம் ஸ்வஶப்தாத் (க. ங. க)

(கூகூ) *ஆகாயம் பூமி முதலியவற்றுக்கு உறைவிடம் (சிவபெருமான்), சுவ (என்னும் ஆன்ம) சப்தவுண்மையான்.

யஸ்மிந் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந: ஸஹ ப்ராணைஶ்ச ஸர்வை:। தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யா வாசோ விமுஞ்சத அம்ருதஸ்யைஷ ஸேது: (முண். உ. உ. ரு)

"எவரிலே ஆகாயமும், பூமியும், அந்தரிக்ஷமும் குறுக்கும் மறுக்குமாயினவோ, பிராணன்கள் அனைத்தினோடு மனசும் (உளவோ), அந்த ஏகராகிய (பரம) ஆன்மாவையே அறிக, பிற வார்த்தைகளை விடுக, அவர் அமிர்தத்துக்குச் சேது" என்னும் சுருதியே ஈண்டு ஆராயற்பாலதாகிய விஷயம்.

இந்தச் சுருதியில் ஆகாயம் பூமி முதலியவற்றுக்கு உறைவிடமாகக் கூறப்பட்டவர் சிவபெருமானா? மற்றொன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சிவபெருமானுக்கு அன்னியமாயுள்ள வாயுவே பூமி ஆகாயத்துக்கு ஆதாரம் எனப் பெறப்படுகின்றது.

வாயுநா வை கௌதம ஸூத்ரேணாயஞ்ச லோக: பரஶ்ச லோக: ஸர்வாணி ச பூதாநி ஸந்த்ருப்தாநி பவந்தி।

(பிரு. ரு. எ. உ)

"கௌதமனே! நூலினாற் போல வாயுவினாலே இவ்வுலகமும், பிறவுலகமும், மற்றெந்தச் சென்துக்களும் கோக்கப்பட்டுள்ளன" என்னுஞ் சுருதியில்

---

*நீள்வானமுகடதனைத்தாங்கிநின்றமலையானை
(திருநாகேச்சரம், நாவு, ச)

‡ பொறையவன்காண்பூமியேழ்தாங்கியோங்குபுண்ணியன்காண்
(திருவேகம்பம், நாவு, ங)

என்னுந் திராவிட சுருதிகளால் ஆகாயம் பூமிகளுக்குச் சிவபிரான் ஆதாரர் என அறியப்படுகின்றார்.

வாயுவே அனைத்துக்கும் ஆதாரமெனப் பிரசித்தமாயிருத்தலினால் எனின்,

(உத்தரம்) கூறுதும். சிவபெருமானே ஆகாயம் பூமி முதலியவற்றுக்கு ஆதாரம்;

தமெ௨ வெகஂ ஜாநய ஆத்மாநஂ (முண். உ. உ. ரு)

"அவ்வொருவராகிய (பரம) ஆன்மாவையே அறிக" என்னுஞ் சுருதியிற் (பரம) ஆன்மா என்னும் சப்தம் உளதாதலின். (க)

(ஆக்ஷேபம்) ஆன்மசப்தத்தைச் சூத்திரான்மாவாகிய வாயுவுக்குப் பிரயோகித்தலான் எய்தும் இழுக்கென்னை என,

(உத்தரம்) சூத்திரகாரர் இங்ஙனம் இறுப்பாராயினர்.

முக்தோபஸ்ருப்யவ்யபதெஶாத் (க. ௩. உ)

(சுஎ) * முத்தரால் எய்தப் பெறுகின்றார் எனக் கூறப்படலானும்.

யதா பஶ்யஃ பஶ்யதெ ருக்மவர்ணஂ கர்த்தாரமீஶஂ புருஷஂ ப்ரஹ்மயோநிஂ ததா வித்வாந் புண்யபாபெ விதூய நிரஂஜநஃ பரமஂ ஸாம்யமுபைதி (முண். ௩. க. ௩)

"எப்போது பார்ப்பவன் பொன்னிறத்தினரும், கர்த்தாவும், ஈசரும், புருஷரும், பிரமாவுக்குக் காரணருமாயினாரைப் பார்க்கின்றானோ, அப்போது அவன் வித்துவானாய், புண்ணியபாவத்தை ஒழிந்து நிரஞ்சனனாய்ப் பரம சாமியத்தை அடைகின்றான்" எனவும்,

யதா நத்யஃ ஸ்யந்தமாநாஃ ஸமுத்ரெ ऽஸ்தஂ கச்சந்தி நாமரூபெ விஹாய ததா வித்வாந் நாமரூபாத்விமுக்தஃ பராத்பரஂ புருஷமுபைதி திவ்யம் (முண். ௩. உ. அ)

"எங்ஙனம் ஓடுவனவாகிய †நதிகள் சமுத்திரத்திற் பாய்ந்து பெயரும் வடி

---

*சொற்பாவும்பொருடெரிந்து தூய்மைநோக்கித்தூங்காதார்மனத்திருளை வாங்காதானை
(திருக்கீழ்வேளூர், நாவு, உ)

மறவாதேதன்றிறமேவாழ்த்துந்தொண்டர்மனத்தகத்தேயனவரதமன்னி நின்றதிறலானை.
(திருமுதுகுன்றம், நாவு, அ)

என எதிர்மறைமுகத்தானும் உடன்பாட்டானும சிவபிரான் முத்தர்களாகிய அடியாரால் அடையப்படுமாறு திராவிட சுருதிகளால் விளக்கப்பட்டது.

† நதீநாஂ ஸாகரஂ ப்ராப்ய நாமரூபஂ நிவர்த்ததெ |
தெநதத்ர ந விஜாநந்தி பரஸ்பரவிஶெஷணம் |
நவாநஂஜாயதெ தத்ராப்யெகஸ்ய விஶெஷணம் |

வும் ஒழிந்து மறைகின்றனவோ, அங்ஙனம் வித்துவானும் பெயர்வடிவி னின்று விடுற்றுப் பரத்துக்குப் பரமாயிருக்கும் திவ்ய புருஷரை அடை கின்றான்" எனவும் போந்த சுருதிகளான், புண்ணிய பாவங்களினால் எய் தும் நாமரூபங்களினின்று விடுறுகின்றவர்களாகிய முத்தர்களால் அடை யற்பாலராகக் கூறப்படலானும், (இவர்) சிவபெருமானே.

இது எங்ஙனம் வாயுவுக்குப் பொருந்தும்? சிவான்மகமாகவேயிருத்த லின் வாயு சூத்திரான்மா; சிவபெருமானுடைய அட்டமூர்த்தங்களுள்ளே ஒன்றாதலின். ஆகலின், வாயு அன்றென்று நிர்ணயிக்கப்பட்டது. (உ)

நாநுமாநமதச்ச்ரூதேஃ ப்ராணப்ருச்ச (க. ந. ந)

(௬அ) அனுமானம் அன்று; அதைச் சுட்டும் சப்தம் இன்மையான்; ஆன்மாவும் (அன்று).

அனுமானத்தினாற் பெறப்படும் ஆகாயம் பூமிகளுக்கு ஆதாரம் அது; அனைத்துக்கும் உபாதானகாரணமாயிருத்தலினான் எனின், அது பொருந் தாது; பிரதானத்தைச் சுட்டும் சப்தம் இன்மையான். (பரம)ஆன்மசப்தம் உண்மையான், பிராணனைத் தாங்கும் ஆன்மா எனாலும் பொருந்தாது. (ந)

பேதவ்யபதேசாச்ச (க. ந. ச)

(௬௬) பேதம் கூறப்படலான்.

ஈண்டுச் சிவபெருமான் ஆன்மாவினின்று வேறெனக் கூறப்படுகின்றது;

ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீசயா சோசதி முஹ்யமாநஃ ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமிதி வீத சோகஃ (முண். ந. க. உ; சுவே. ச. எ)

"அவன் (ஆன்மா) மரமொன்றில் (சரீரத்தில்) இறைவற்றன்மையின்மை யான் மயங்கி, அமிழ்ந்தி, சோகித்துக்கொண்டிருக்கின்றான்; (ஆயின்) எப்

---

ஸமுத்ரமாஸாத்ய நதீஸ்ரவந்தீ ரூபாணி நாமாநி
க்ஷாரத்வமாயாதி யதா சமுத்ர ஸாம்யமேதி
ததா சிவம் ப்ராப்ய ...

"சமுத்திரத்தை அடைய நதிகளுக்கு நாமரூபம் நீங்குகின்றது; (நதிக்கும் சமுத்தி ரத்துக்கும்) ஒன்றுக்கொன்றுள்ள விசேஷத்தை (எவர்களும்) அறிகின்றிலர்; ஆண்டு (இரு) ஜலத்துக்கும் வேறாக விசேஷம் தோன்றவில்லை; தூயசலத்தைக்கொண்டு செல்லும் நதியானது சமுத்திர ஜலத்தை அடைந்து உப்பு நீரியல்பைச் சமுத்திரத் தின் பிரபாவத்தினாலன்றோ அடைகின்றது. இங்ஙனம் தேகத்திலே வேறாயுள்ள ஆன்மாவானது சிவத்தை அடைகின்றது" என்று சிவாகமப் பிரகரணங் கூறுத லான், நதியானது தனது நாமரூபத்தையொழிந்தாலும் சமுத்திர உவர்த்தன்மையை யடையுமாறுபோல, ஆன்மாவானது தனது நாமரூபத்தையொழிந்தாலும் வேறு படாது நின்று சிவனார் ஆனந்தரசத்தை அடைகின்றதென முண்டகோபநிஷத சுருதிப்பொருள் வலியுறுத்தப்படுகின்றது.

போது இவன் மகிழ்வுடையனாய், (தனக்கு) வேறாகிய சிவபிரானை மகிழ்வினோடு காண்கின்றானோ, (அப்போது) அவர் *புகழை (சர்வஞ்ஞதாதி குணங்களைச்) சோகம் நீங்க அடைவானாயினான்" என்று கூறுதலின். ஆகலின் சிவபெருமான் தாமாகவே ஆகாயம் பூமி முதலியவற்றுக்கு ஆதாரரா கின்றனர். (ச)

ப்ரகரணாச் (க. ௩. ரு)

(எ0) பிரகரணத்தினால்.

அத பரா யயா தத³க்ஷரமதி⁴க³ம்யதே (முண். க. க. ரு)

"அந்த அக்ஷரம் எந்தப் †பரைஞானத்தினால் அறியப்படுகின்றதோ" என்னும் இந்தச் சுருதிப் பிரகரணம் பரவஸ்துவை அன்றோ கூறிற்று. அதனாலும் (ஈண்டு) சிவபெருமான் (என்றே கோடற்பாற்று). (ரு)

ஸ்தி²த்யத³நாப்⁴யாம் ச (க. ௩. சு)

(எக) இருத்தலானும் உண்ணலானும்.

த்³வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா²யா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே। தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்³வத்த்யநஶ்நந்நந்யோ அபி⁴சாகஶீதி।
(முண். ௩. க. க)

"பிரியா நட்புடைய அழகுடைப் பட்சிகள் இரண்டு ஒரே மரத்தில் இசைந்துள்ளன; அவற்றுள் ஒன்று இனிய பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணாது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்னும் சுருதியானது ஆன்மா கன்மபலத்தைத் துய்ப்பதாகக் கூறி, (மற்றவர்) துய்க்காது பிரகாசித்துக் கொண்டிருக்கின்றார் என்று கூறலானும், ஆன்மாவுக்கு வேறாயுள்ள சிவபெருமானே ஆகாயம் பூமிக்கு ஆதாரர் என நிர்ணயிக்கப்பட்டது. (சு)

(உ) பூமாதிகரணம்.

முத்தான்மாக்களால் அடையற்பாலராக ஈண்டுப் பிரதிபாதிக்கப்பட்ட சிவபெருமானை அடைதலான் எய்தும் பிரயோசனமாகிய நிரதிசயானந்தத்தைச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

பூ⁴மா ஸம்ப்ரஸாதா³த³த்⁴யுபதே³ஶாத் (க. ௩. ஏ)

---

*இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.
(திருக்குறள். ரு)

†பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்.
(சிவஞானசித்தியார். கக. உ)

(எ௨) (முடிவிலா இன்பமாகிய) * பூமா (சிவபெருமான்); சம்பிரசாதத்துக்கு முன்னர்க் கூறப்படலான்.

ஸ்ரீலெவ ஸுவிஃ (சாந். எ. உ௩. க)

சாந்தோக்கியத்தில் "பூமாவே இன்பம்" என்று கூறப்பட்டபின்னர்

யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ ஸ்ரீமா (சாந். எ. உச. க)

†"ஆங்கு மற்றொன்றும் காண்கிலனுய், மற்றொன்றும் கேட்கிலனுய், மற்றொன்றும் அறிகிலனுயாகின்றானே, அது பூமா எனப்படும்" என்னும் பூமாவைப்பற்றிய சுருதியே விஷயம்.

பூமா என்னும் மொழியினற் கூறப்பட்டவர் சிவபெருமானு? மற்றொன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பூமா என்றது சிவபெருமானுக்கு அன்னியமாகிய பிராணனே. (இச் சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட) விஷயத்துக்கு முற்பட்டுக் கூறப்பட்ட நாமமுதலியவற்றைக் குறித்து,

அஸ்தி ஸ்ரீவொ நாமெநா ஸ்ரீயஃ (சாந். எ. க. ௫)

"நாமத்தினுஞ் சிறந்ததாகப் பிறிதொன்றுளதோ?" என்று நாரதர் கேட்ப, சனற்குமாரர்

---

* அளவிலாப்பாவகத்தாலமுக்குண்டிங்கறிவின்றி
விளைவொன்றுமறியாதேவெறுவியனுய்க்கிடப்பேனுக்
களவிலாவானந்தமளித்தென்னையாண்டானைக்
களவிலாவானவருந்தொழுந்தில்லைகண்டேனே
(கண்டபத்து. அ)

ஆனந்தக்கூத்தனருள்பெறினுமவ்வணமே
யானந்தமாகிநின்றுடாமோதோணேக்கம்.
(திருத்தோணேக்கம். அ)

† நஶ்ருணோதி நஜிக்ரதி நரஸயதி நபஶ்யதி |
(புறத்துள்ளதொன்றும்), "கேட்கின்றிலன், மணக்கின்றிலன், இரசிக்கின்றிலன், காண்கின்றிலன்" என்றது வாதுளாகமம்.

எனைநானென்பதறியேன்பகலிரவாவதுமறியேன்
மனவாசகங்கடந்தானெனைமத்தோன்மத்தனுக்கிச்
சினமால்விடையுடையான்மன்னுதிருப்பெருந்துறையுறையும்
பனவனெனைச்செய்தபடிறறியேன்பரஞ்சுடரே.
(உயிருண்ணிப்பத்து, ௩)

கோற்றேனெனக்கென்கோகுரைகடல்வாயமுதென்கோ
வாற்றேனெங்களரனேயருமருந்தேயெனதரசே
சேற்றூர்வயல்புடைசூழ்தருதிருப்பெருந்துறையுறையு
நீற்றூர்தருதிருமேனிநின்மலனேயுனையானே.
(உயிருண்ணிப்பத்து, அ)

வா ஹாவ நாமெ்நா ஹூயஸீ (சாங். எ. உ. க)

"நாமத்தினுஞ் சிறந்தது வாக்கு" என்றற்றொடக்கத்தனவாக வாக்கு முதலியவைகளை நிர்த்தேசஞ் செய்ய, (பின்)பிராணனுக்குமேலே சுருதியானது கடாவிடைகளின்றிப் பூமாவையுற்றுக் கூறப்போந்தது. ஈண்டுச் சிவசம்பந்தமாகிய விஷயம் யாதும் இன்று; ஆகலின், பூமாவே பிராணன் எனின்,

(சித்தாந்தம்) கூறுவம். ஈண்டுச் சிவபெருமானே பூமாசப்தத்தினாற் குறிக்கப்பட்டவர்; சம்பிரசாதத்துக்கு முன் வருதலான். சம்பிரசாதம் என்றது ஆன்மா;

ஏஷ ய ஸஷஸாஂ ப்ரஸாதஃ (சாங். அ. ௩. ச)

"இவன் சம்பிரசாதன்" என்னுஞ் சுருதியுண்மையான். ஈண்டு அவன் பிராணசப்தத்தினாலும் கூறப்படுகின்றான்.

ஸஷ து வா அதிவதி யஃ ஸத்யேநாதிவதி (சாங். எ. கசு. க)

"பரவஸ்துவைச் சத்தியம் என்று சொல்பவன் உண்மையாய் மேலாயதொன்றைக் கூறுபவனே" என்றற்றொடக்கத்த சுருதியினால், அவனுக்கு முன்னர்ப் பூமாவானது ஆன்மாவின் வேறென்று கூறப்படுகின்றது. ஈண்டு முன்னர்

ஸ வா ஸஷ ஸவஂ பஸ்யந்நேவஂ மந்வாந ஸவஂ விஜாநந்நதிவாதீ ஹவதி (சாங். எ. கரு. ச)

"இங்ஙனம் பார்ப்பவனும், இங்ஙனம் அறிகின்றவனும், இங்ஙனம் உணர்கின்றவனுமாகிய இவன் மேலாயதொன்றைக் கூறுகின்றான்" என்னுஞ் சுருதியானது பிராணனைச் சொல்பவன் மேலானதைச் சொல்பவன் என்று கூறி, அதன்பின்னர்

ஸஷ து வா (சாங். எ. கசு. க)

என்பதிற் போந்த (ஆயின் எனப்படும்) து (து) என்னும் எதிர்மறைமொழிகொண்டு மேலே உரைத்த பிராணதிவாதியினும் சத்தியாதிவாதிக்கு மேன்மை காட்டப்பட்டமையின், பூருவ அதிவாதியின் விஷயமாகிய சத்தியத்தினாற் கூறப்படுகின்றவருக்கு ஆதிக்கியம் முற்றுப்பெறுகின்றது. அவரே முன்னர் முடிவிலாவின்பகுணவிசிட்டமுடையராக (பூமாவாக) வர்ணிக்கப்படுகின்றார். "ஆகலின், பின்னர்ப் (பரம) ஆன்மாவின் ஆதேசம்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறும் சுருதியிற் போதரும் (பரம)ஆன்மசப்தத்தினாலே அவர் வர்ணிக்கப்படுகின்றார். அதுபற்றிப் பிராணசப்தத்தினாற் குறிக்கப்பட்ட ஆன்மாவினுஞ் சிறந்த (பரம) ஆன்மாவாகிய பூமாவாயுள்ளவர் சிவபெருமானே. (எ)

யஜெ்ஃாவவதெ்ஹு (க. ந. அ)

## (எந) குணங்கள் பொருத்தமுறலானும்.

ஸ ஹ்ரவஃ கஸ்மிந் ப்ரதிஷ்டித இதி ஸ்வேமஹிம்நி।
(சாந். எ. உச. க)

ஆத்மைவேதம் ஸர்வம் (சாந். எ. உரு. உ)

ஆத்மதஃ ப்ராண ஆத்மத ஆஶா (சாந். எ. உசு. க)

"பகவானே, அவர் எங்கே நிலையுற்றிருக்கின்றார் எனின், தம்மகிமையிலே; இஃதெல்லாம் (பரம)ஆன்மா; (பரம)ஆன்மாவினின்று பிராணன், (பரம) ஆன்மாவினின்று ஆசை" என்றற்றொடக்கத்த சுருதிகளான், அவர் மகிமையிலே (புகழிலே) நிலையுறுகின்றார், அவர் அனைத்துக்கும் ஆன்மா, அவர் அனைத்துக்குங் காரணர் என்றற்றொடக்கத்தனவாகக் குணங்கள் உபதேசிக்கப்படுகின்றன. சிவபெருமானுக்கே அக்குணங்கள் பொருத்தமுறுவன வன்றி, பிராணசப்தத்தினாற் கூறப்படும் ஆன்மாவுக்கன்று. ஆகலின், சிவபெருமானே பூமாவன்றிப் பிறரன்றென்பது சித்தித்தது.

(ஆக்ஷேபம்) மேல் அதிகரணத்தில்,

நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யம் உபைதி (முண். ந. க. ந)

"அவன் நிரஞ்சனனாய்ப் பரமசாமியத்தை அடைகின்றான்" என முத்தான்மாக்கள் பிரமசாதிருசியம் அடைபவராகக் கூறப்பட்டது. ஆகலின், பிரமத்தினது சாமியத்தை அடைந்த முத்தான்மாக்கள் சிவபெருமானுக்கே வேறாயுளர் என்பது சித்தித்தது.

யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸ பூமா (சாந். எ. உச. க)

"எங்கே மற்றொன்றும் காண்கிலனோ, மற்றொன்றும் கேட்கிலனோ; மற்றொன்றும் அறிகிலனோ, அது பூமா" என்னுஞ் சுருதியில் உள்ள பூமா என்னும் மொழியினாற் குறிக்கப்பட்ட பிரமம் காணப்படுமாயின், அந்தப் பிரமத்துக்கு மாறாகிய பிரபஞ்சம் விஷயமாகாதே; இதற்குப் பொருத்தம் என்னை எனின்,

(உத்தரம்) பூமா பிரத்தியக்ஷமாகுங்கால் "மற்றொன்றும் காண்கிலன்" என்றற்றொடக்கத்தனவற்றின் அபிப்பிராயம் இது:—நிரதிசய சுபாவமுள்ளவரும் சாக்ஷாத்கரிக்கப்பட்டவருமாகிய எவரிலே அமிழ்ந்திய புருஷன் மற்றோர் இன்பத்தை விரும்பி ரூபாதி விஷயங்களைக் காண்டலாதிகளிற் பிரவர்த்தியிலனாகின்றானோ, அவர் பூமா; அவர் பிரமம்; பல்வகை விஷயசுகமெல்லாம் பிரமானந்தத்தின் நுண்ணிய பரமாணுக்களே.

ஸதஸ்யைவாநந்தஸ்யாந்யாநி பூதாநி மாத்ராமுபஜீவந்தி
(பிரு. சு. ௩. ௩உ)

"மற்றெல்லாச் செந்துக்களும் இந்தப் பிரமானந்தத்தின் சிறுபாகத்தில் உயிர்க்கின்றன" என்று சுருதி கூறுகின்றது. ஆகலின், பிரமத்தையுற்றுத் துவிதநிஷேதம் இல்லை. பிரபஞ்சம் சத்தியமாயிருப்பின், முக்தான்மாக்கள் புருஷார்த்தமல்லாத அந்தப் பிரபஞ்சத்தோற்றத்தை எங்ஙனந் தவிர்க்க வல்லார்? என்று விசாரிக்கற்பாலதன்று; எதனுலெனின், முக்தான்மாக்களுக்குப் பிராகிருத பிரபஞ்சம் காட்சிவிஷயமாகாது; பின் நிரதிசயானந்த சொரூபமாகிய பிரம்மே பிரபஞ்சாகாரமாகக் காட்சிப்புலனுகின்றது. இதுபற்றியே,

ஸதத்தோ ஸவதி । ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம । ஸத்யாத்ம ப்ராணாராமம் । மந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"பின்னர் அவன் அதுவாகின்றான், ஆகாயத்தைச் சரீரமாகவுடைய பிரமம்; (அவர் இயல்பு) சத்தியான்ம பிராணுராமம்; மனசில் (ஞானசத்தியில்) ஆனந்தம்" என்று சுருதி கூறுகின்றது.

ஆப்நோதி ஸ்வாராஜ்யம் ஆப்நோதி மநஸஸ்பதிம் ।
(தைத். க. சு. உ)

ஈண்டு "சுவராச்சியத்தை அடைகின்றான், மனசுக்கு மேலாயதை அடைகின்றான்" என்றற்றொடக்கத்தனவாக முக்தான்மா பிரஸ்தாபிக்கப்படுகின்றான்; "வாக்குக்குப் பதி" என்றற்றொடக்கத்த சுருதியினுல், அவன் சுவாதீனமல்லாதனவாய், அப்பிராகிருதத்தனவாய், விசுத்தமுடையனவாயுள்ள வாக்கிந்திரியமுதலியவைகளையுடையனுகக் கூறப்படுகின்றது. பின்னர் அவ்வியல்பினவாய அவஸ்தையை அடைந்த பின்னர் அவனுக்குப் புலப்படும் பிராகிருதபிரபஞ்சக் கூட்டமானது ஆகாய சரீரமாய் (எனவே), சிதம்பரப்பிரகாச சரீரத்தையுடைய பிரமமாகவேயாகின்றதென்பது தாற்பரிய இரகசியார்த்தம். ஆகலின், முக்தான்மாக்கள் பிரமத்தின் சாமியத்தை அடைதலாவது அந்தப் பிரமத்தோடு பிரபஞ்சத்தையும் சமரசமாக (சமானந்தமாகக்) காண்டலாம் எனக் (கோடலே) முழுமையும் யுக்தம். (அ)

## (௩) அக்ஷராதிகரணம்.

---

அக்ஷரமம்பராந்த த்ருதே: (க. ௩. கூ)

(எச) அக்ஷரம் (சிவபெருமான்), ஆகாயம் இறுதியாயுள்ள அனைத்தையும் தாங்குதலின்.

ஏதத்வை ததக்ஷரம் கார்கி ப்ராஹ்மணா அபிவதந்தி அஸ்தூலமநண்வஹ்ரஸ்வமதீர்கமலோஹிதமஸ்நேஹமச்சாயம் (பிரு. ௫. அ. ௮)

"கார்க்கியே, பிராமணர் இதனை அக்ஷரம் என்று கூறுகின்றார்; இது*ஸ்தூலமன்று, அணுவன்று, குறுக்கமன்று, நெடுமையன்று, சிவப்பன்று, சினேகமன்று, நிழல் அன்று" என்றற்றொடக்கத்த பிருகதாரணிய சுருதியே இவ்வதிகரண விஷயம்.

ஈண்டு அக்ஷரம் என்றது பிரணவமா? ஆன்மாவா? சிவபெருமானா? என மூன்று பிரகாரமாக உண்டாகின்றது சந்தேகம்.

பிரணவம் ஆன்மா என்னும் இரண்டில் ஒன்றே அக்ஷரம். எதனாலெனின், அக்ஷரசப்தத்துக்கு வர்ணசப்தம் பரியாயமாதலின், பிரணவம் என்று கூறுவது உசிதம்.

புருஷோக்ஷர உச்யதே ।

"புருஷன் அக்ஷரம் எனப்படுகின்றான்" என்னும் வாக்கியத்தினாற் புருஷனும் (ஆன்மாவும்) அக்ஷரசப்தத்தினாற் குறிக்கப்படுகின்றான். ஆகலின், அவ்விரண்டுமே அக்ஷரசப்தத்தினாற் குறிக்கப்பட்டன எனின்,

(சித்தாந்தம்) கூறுவம். அக்ஷரசப்தப்பொருள் பரப்பிரமமே. எதனால் எனின், †ஆகாயவிறுதியாயுள்ள அனைத்தையுந் தாங்குதலான். (யாஞ்ஞவற்கியர்),

யதூர்த்வம் கார்கி திவோ யதவாக் ப்ருதிவ்யா யதந்தரா த்யாவாப்ருதிவீ இமே யத்பூதஞ்ச பவச்ச பவிஷ்யச்சேத்யாசக்ஷத ஆகாஶ ஏவ ததோதஞ்ச ப்ரோதஞ்ச (பிரு. ௫. அ. ௭)

‡"கார்க்கியே, வானத்துக்கு மேலும் பூமிக்குக்கீழுமாக, வானம், பூமி இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்றவற்றை அடக்கிக் குறுக்கும் மறுக்குமாய் அமைந்ததெதுவோ அது ஆகாயத்தில் (அமர்ந்தது)" என்று அனைத்துக்கும் ஆதாரமாகக் கூறிய ஆகாயம் (பின்) எதிலே குறுக்கும் மறுக்குமாய் உள்ளதென்று கார்க்கி (அவரை) வினவ, (யாஞ்ஞவற்கியர்)

---

*மண்ணல்லை விண்ணல்லை வலையமல்லை மலையல்லை கடலல்லை வாயுவல்லை
யெண்ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை யிரவல்லை பகலல்லை யாவுமல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை பிறிதல்லை யானும்பெரியாய் நீயே
யுண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை யுணர்வரிய வொற்றியூருடையகோவே.
(திருவொற்றியூர். நாவு. க)

ஸ்தூலமன்று அணுவன்று என்றற்றொடக்கத்த விஷயம் உபக்கிரமணிகை (௩௭௩-ஆம் இலக்கந் தொடுத்து ௩௭௬-ஆம்) இலக்கம் வரையும் விளக்கப்பட்டுள்ளது.

†திருச்சிற்றம்பலம்.

‡உபக்கிரமணிகை ௨௫௭-ஆம் இலக்கம் பார்க்க.

𑌏𑌤𑌦𑍍𑌵𑍈 𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌅𑌭𑌿𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 ।
(பிரு. ௫. ௮. ௮)

"கார்க்கியே, இதனையே பிராமணர்கள் அக்ஷரம் என்று கூறுகின்றனர்" என்று தொடங்கி,

𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌖𑌲𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌆𑌕𑌾𑌶 𑌓𑌤𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑍋𑌤𑌶𑍍𑌚 ।
(பிரு. ௫. ௮. ௧௧)

"இந்த அக்ஷரத்திலன்றோ, கார்க்கியே! ஆகாயம் குறுக்கும் மறுக்குமாய் உள்ளது" என்பது இறுதியாகக் கூறிய வசனத்தினால், ஆகாயவிறுதியாயுள்ள பிரபஞ்சத்தைத் தாங்குவது நிர்ணயிக்கப்பட்ட அக்ஷரம் எனப் பெறப்படுகின்றது. இது எங்ஙனம் சிவபெருமானை ஒழிந்து மற்றொன்றுக்குச் செல்லும்? ஆகலின், சிவபெருமானே அக்ஷரசப்தத்தினாற் கூறப் பட்டவர். (௯)

𑌸𑌾 𑌚 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑌾𑌤𑍍 (௧. ௩. ௧௦)

## (௭௫) அதுவும் *ஆஞ்ஞையினால்.

𑌏𑌤𑌸𑍍𑌯𑌵𑌾𑌕𑍍𑌷𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌶𑌾𑌸𑌨𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑍌 𑌵𑌿𑌧𑍃𑌤𑍌 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌃 (பிரு. ௫. ௮. ௯)

"கார்க்கியே, இந்த அக்ஷரத்தினுடைய ஆஞ்ஞையினாலே சூரியனும் சந்திரனும் தாங்கப்படுகின்றன" என்றற்றொடக்கத்த சுருதியினால், அந்தத் தாங்குதல் (திருதி) உற்கிருஷ்ட ஆஞ்ஞையின்பாலதாக அறியப்படுகின்றது. அந்த உலகத்தை ஆஞ்ஞை செய்தலும் ஆன்மாவுக்கு எய்தமாட்டாது;

𑌏𑌕 𑌏𑌵 𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌨 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌯 𑌤𑌸𑍍𑌥𑍁𑌃 (சுவே. ௩. ௨)

"ஒருவரே உருத்திரர், அவர்கள் இரண்டாவதற்காக இருந்திலர்" என உலகத்தின் மேலதாம் ஆஞ்ஞை சிவபெருமானுக்காய், இரண்டாவதாக ஒருவர்க்கு (அது) இன்றெனக் கேட்கப்படலான். ஆகலின், சிவபெருமானே அக்ஷரமொழியினாற் குறிக்கப்பட்டவர். (௧௦)

𑌅𑌨𑍍𑌯𑌭𑌾𑌵𑌵𑍍𑌯𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌶𑍍𑌚 (௧. ௩. ௧௧)

## (௭௬) அன்னியபாவம் நீங்குதலானும்.

அன்னியபாவம் என்பது மற்றொன்றுக்கு உளதாதல்.

𑌤𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑌂 𑌗𑌾𑌰𑍍𑌗𑌿 𑌅𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃 𑌅𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍃 𑌅𑌮𑌤𑌂 𑌮𑌨𑍍𑌤𑍃 𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍃 (பிரு. ௫. ௮. ௧௧)

*பராசத்தி.

"கார்க்கியே, இந்த அக்ஷரம் *காணப்படாததாய்க் காண்கின்றது, கேட்கப் படாததாய்க் கேட்கின்றது, கருதப்படாததாய்க் கருதுகின்றது, அறியப் படாததாய் அறிகின்றது" என்னுஞ் சுருதிவாக்கிய சேஷமானது அக்ஷரம் சிவபெருமானை ஒழிந்து மற்றென்றுக்கு உளதாதலைத் தவிர்க்கின்றது; பிரணவத்துக்கேனும், ஆன்மாவுக்கேனும் காணப்படாமையாம் தன்மை யோடு காண்டலாதியாம் இயற்கைகளும் (ஒரேகாலத்தில்) எய்தாமையான். ஆகலின், சிவபெருமானே அக்ஷரம் என்று நிர்ணயிக்கப்பட்டது. (கக)

## (௪) ஈக்ஷதிகர்மாதிகரணம்.

பிரத்தியக்ஷாதி பிரமாணாதீதராயினும் சிவபெருமான் பரமகாருண்ணிய வசத்தினால் உபாசகர்களுக்குப் பிரத்தியக்ஷமாதலை உணர்த்துமாறெழுந்தது இவ்வதிகரணம்.

ஈக்ஷதி கர்மவ்யபதேசாத் ஸ: (க. ௩. கஉ)

(எஎ) அவர் காட்சிப்பொருளாகின்றார், (அவர் குணங்கள்) கூறப்படலான்,

யஃ புநரேதம் த்ரிமாத்ரேணோமித்யேதேநைவாக்ஷரேண பரம் புருஷமபித்யாயீத ஸ தேஜஸி ஸூர்யே ஸம்பந்நோ யதா பாதோதரஸ்த்வசா விநிர்முச்யத ஏவம் ஹவை ஸ பாப்மநா விநிர்முக்த ஸ ஸாமபிருந்நீயதே ப்ரஹ்மலோகம் ஸ ஏதஸ்மாஜ்ஜீவகநாத்பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே।

(பிர. ரு. ரு)

"எவன் மூன்று மாத்திரையையுடைய இந்த ஓம் என்னும் அக்ஷரவாயிலாகவே பரமபுருஷரைத் தியானிக்கின்றானோ, அவன் ஒளியையும் சூரியனையும் அடைந்தவனாகின்றான்; சர்ப்பம் தன் தோலிலிருந்து விடுபட்டாற் போல, அவன் பாவத்தினின்று வீடுறுகின்றான்; அவன் சாம (கானங்களினாலே) பிரமலோகத்துக்கு வழிகாட்டப்படுகின்றான்; இந்தச் சீவகனத்தினின்று பரத்துக்குப் பரமாயினாராய் (தேகமாம்) புரியிற் கிடக்கும் புருஷரைக் காண்கின்றான்" என்னும் பிரசிநோபநிடத சுருதியே அதிகரண விஷயம்.

ஈண்டுக் காட்சிப் பொருள் விஷயமாய்க் கேட்கப்பட்டவர் சிவபெருமானா? பிறரொருவரா? என்பது சந்தேகம்.

---

*தத்ஸ்ஸஹஸ்ரவாநீஶ: பரமாத்மா ஶிவ: ஸ்வயம்।
நாந்யோதோஸ்தி ஹேஹாதேவா த்ரஷ்டா ஶ்ரோதா பராத்பர:॥

"ஆகலின், அந்தப்பகவானாகிய ஈசர் பரமான்மாவாகிய சிவபெருமானே; பார்ப்பவரும், கேட்பவரும், பராற்பரரும் சிவபெருமானொழிந்து பிறர் யாருமில்லை" என்றது சங்கரசங்கிதை.

(பூருவபக்ஷம்) அவர் சிவபெருமானல்லர்;

ஸ ஸாமபிருந்நீயதே ப்ரஹ்மலோகம் (பிர. ரு. ரு)

"அவன் சாம(கான)ங்களினுற் பிரமலோகத்துக்கு வழிகாட்டப்படுகின்றான்" என அவர் உலகத்தை அடைதல் கேட்கப்படலானும், பர சப்தம் சீவான்மாக்களுள்ளே மேலானவர்க்குச் சேறலானுமாம்; இன்றேல், நாராயணர் (ஆகலாம்), அவர் புருஷர் என்னும் மொழியிற் கூறப்படலானும், அவருக்கே பிரணவசப்தம் செல்வது பிரசித்தமாதலினுலும்,

தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:

(இரு. வே. க. உஉ. உ0)

"அந்த விஷ்ணுவின் பரமபதத்தைச் சூரிகள் எப்போதும் பார்க்கின்றனர்" என்னும் சுருதியில், அந்தப் பரமபதமே வித்துவான்களால் அநுபவவிஷயமாகக் கேட்கப்படலானும்,

ருக்பிரேதம் யஜுர்பிரந்தரிக்ஷம் ஸாமபிர்யத்தத்கவயோ வேதயந்தே (பிர. ரு. எ)

"இருக்குக்களினுலே இந்த உலகத்தையும், யசுரினுலே ஆகாயத்தையும், சாமங்களினுலே கவிகள் அறியும் அதனையும் (அடைகின்ருன்)" என்னும் (ஐந்தாவது பிரசிநோபநிடத இறுதியில்), அது (பரமபதம்) குறிக்கப்படலானுமாமாதலின் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஈண்டு காட்சிப்பொருளாயுள்ளார் சிவபெருமான்; (ஐந்தாவது பிரசிநோபநிஷதவிறுதியில்)

தமோங்காரேணைவாயதநேநாந்வேதி வித்வாந் யத்தச்சாந்தமஜரமம்ருதமபயம் பரஞ்ச (பிர. ரு. எ)

"அவன் ஓங்காரவாயிலாக இதனை (பிரமலோகத்தை) அடைகின்ருன், வித்துவான் சாந்தரும், ஜரை இல்லாதவரும், அழியாதவரும், பயமில்லாதவரும், பரமுமாகிய அவரை (சிவபெருமானை) அடைகின்ருன்" என அவரது அசாதாரணமாகிய சாந்தத்துவ முதலிய குணங்கள் கூறப்படலான். சிவபெருமானுடைய (சிருஷ்ட) காரியராகிய இரண்ணியகருப்பர்க்குச் சாந்தத்துவாதி குணங்கள் இல்லையன்றே. பிரமலோகம் என்றது அடையற்பாலதாயுள்ள பரப்பிரம சிவனுருடைய உலகமாம் என்க. சீவகனம் என்றது சீவசமஷ்டி ரூபராயுள்ள இரணியகருப்பர் (மேற்று); இவருக்கு மேலாகிய சிவபெருமானே தியேயப்பொருளாகக் கேட்கப்படுகின்றனர். ஆகலின், இரண்ணியகர்ப்பரைச் சொல்வது யுக்தமன்று.

நாராயணரைப் பரம் என்றது ஆராயற்பாற்று.

ஸூ̃த ஊேயம் வாணு (பிர, ரு. எ).

"அமிர்தரும், பயமிலாதவரும், பரமுமாயவர்" என்னுஞ் சுருதியிற் கண்டவாறு நித்தியமுக்தத்துவமும், அபயகாரணமும், விசுவாதிகத்திஞற் பரத்துவமும் எங்ஙனம் அவருக்கு (நாராயணர்க்குச்) செல்லும்?.

விஶ்வாஃஷொாஹி (சுவே. க. கூ)

இவர் "விசுவரூபரன்றே" (என்னுஞ் சுருதியுண்மையான்), *சீவகனமாகிய இரண்ணியகர்ப்பரினும் (பிரமாவினும்) பரராய் உற்கிருஷ்டராயுள்ள நாராயணரினும் பரம உற்கிருஷ்டமாய்ப் புரியின்கண்ணே (சரீரத்தின்கண்ணே) அந்தரியாமியாய்ச் சயனித்தலிற் புருஷரும் பரப்பிரமமுமாயுள்ளாரை உபாசகர் சாக்ஷாத்காரஞ் செய்வதாக வர்ணிக்கப்பட்டமை எங்ஙனம் நராயணர்க்குப் பொருந்தும்?

நாராயணவாஂ ஹூஜ| (தைத். ஆரணி. கo. கரு. உகூ)
ஐதம் ஸத்யம் வாம் ஹூஜ வாஷம் கூஷவிoஜஃ|
ஊஜ்ஃஷஂ விஃஷவாக்ஷஃ (தைத். ஆரணி. கo. உரு. சக)

"நாராயணர்க்கு மேலாய பிரமம்" (எனவும்); இருதமும், சத்தியமும், பரப்பிரமமும், புருஷரும், கிருஷணபிங்களரும், ஊர்த்துவரேதரும், விரூபாக்ஷரும் எனச் சுருதியிற் கூறப்படுகின்றதன்றே. ஆகலின், (சிவபெருமான்) புரியாய தகரபுண்டரீகத்திருத்தலாற் புருஷர் எனப்பட்டனர்;

தஸ்ய ஜகூதிநஸ்ய யஃ வாஸஹெஸ்வாஃ|
(தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"(அகாரமாகிய) பகுதியில் ஒடுங்கப்பெறும் (அந்தப் பிரணவத்துக்கு) சுவரத்துக்கு எவர் மேலானவரோ, அவர் சிவபெருமான்" என்றற்றொடக்கத்த சுருதியினுல் அவர் பிரணவம் எனவும்,

நாராயணவாஂ ஹூஜ (தைத். ஆரணி. கo. கரு. உகூ)

"நாராயணரினும் பரமாகிய பிரமம்" என்னுஞ் சுருதியினுல் விசுவரூபராகிய நாராயணரினும் அதிகர் (மேலோர்) எனவும், வாக்கினும் மனசினும் நின்று பேதமுறுமையின் முறையே இருதம் சத்தியம் எனவும், முக்கண்களுண்மையான் விருபாக்ஷர் எனவும், †பிரணவத்தின் வர்ணவியத்தியயத்தி

*வெள்ளேயேறேறும்விகிர்தாபோற்றிமேலோர்க்குமேலோர்க்குமேலாய்போற்றி.
(திருவாரூர், நாவு, அ)

விண்மேனுமேனுமிர்ந்தாய்போற்றி மேலார்கள் மேலார்கள் மேலாய் போற்றி.
(ஸ்ரீகைலாயத்திருமலே. நாவு, எ)

†இலிங்கபுராணத்திலே சிவபெருமானுல் உமையம்மையார்க்கு அருளிச்செய்யப்பட்டவிடத்து,

ஞல் எய்திய உமையாம் பராசத்தியோடியைந்திருத்தலாற் கிருஷ்ணபிங்களர் எனவும், எல்லாவற்றையும் கடந்தமையிற் பரமாகிய பிரமம் எனவும் கூறப்படுகின்றது.

வராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே (பிர. நு. ரு)

"பரத்துக்குப் பரமாய் (தகரபுண்டரீக) புரிக்கணுள்ள புருஷரைக் காண்கின்றான்" என்னும் சுருதியினால் அவர் காட்சிப்பொருளாம் என்று கூறல் யுக்தம்.

தத்விஷ்ணோ: பரமம்பதம் (இரு. வே. க. உஉ. உ0)

"அந்த விஷ்ணுவின் பரமபதம்" என்று கூறப்பட்டவிடத்து, பிரபஞ்சாகாரத்துக்கு வேறாய் எது நிரதிசயானந்த இயற்கையாயுள்ள விஷ்ணுவின் பரமபதம் எனப்படுகின்றதோ, அதை (வியாபகசீலராகிய) சிவபிரான் எனப் பெயரிய பரப்பிரமத்தின் †பரமாகாய பரமபதம் என்று கோடலின் யாதும் விரோதமில்லை. விஷ்ணுவும் சிவனும் முறையே உலகத்துக்கு உபாதானமும் நிமித்தமுமாயிருத்தல்பற்றி அவஸ்தாபேதமன்றி, சொரூபபேதம் இன்றாம். சகல சம்சாரங்களையும் நிவிர்த்தி செய்தல் வாயிலாகப் பிரமத்தை அடையுமாறு (அப்பிரமத்தின்) வாசகமாகிய பிரணவத்தைப் பற்றிய உபாசகர்களுக்கு, விஷ்ணு பிரமாதி பிரபஞ்சத்தைக் கடந்தாரேனும் அவ்வுபாசகரை அநுங்கிரகிக்குமாறு (தகரபுண்டரீகமாகிய) புரியின்கண்ணே சயனித்தலாற் புருஷராய், பரமசத்திரூப உமா சபளிதராய் விரூபாக்ஷராயுள்ள பரப்பிரம சிவனார் சாக்ஷாத்காரமாகின்றார் என நிரூபணஞ் செய்யப்பட்டது. (கஉ)

---

க்ஷதீயம் ப்ரணவம் கஸ்திந்தீயம் ப்ரணவஸ்யா।
அகாரோகாரமகாரா மதீயே ப்ரணவேஸ்திதா: ।
உகாரஞ்ச மகாரஞ்ச அகாரஞ்ச க்ரமேணது।
க்ஷதீயம் ப்ரணவம் வித்திஸ்ரிமாத்ரம்ப்லுதமுத்தமம்॥

(இலிங். பூர். அநு: சச—சகூ)

"ஒரு பிரணவம் உனக்கு (உமைக்கு) உரியது; அவ்வாறு (மற்றொன்று) எமக்கு (சிவபிரானுக்கு) உரியது; எமது பிரணவத்தில் அகாரம் உகாரம் மகாரம் உள்ளன; (வர்ணவியத்தியயத்தினால்) உகாரம் மகாரம் அகாரம் என்பன கிரமமாக உனது பிரணவமாய் மும்மாத்திரைப் புலுதமாம் என்றறிதி" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அ+உ+ம் என நிற்கற்பாலது வர்ணவியத்தியயமாகிய எழுத்துமாறலான் உ+ம்+அ என நின்று, உமா என வியாகரணவிதியினால் எய்திற்று.

†கன்றம ரன்பா லான்பால் கவர்தருங் காலமேனும்
வென்றிகொ ளம்பு வீழும் வேலையா யினுமி மைப்பிற்
சென்றுறு மமைய மேனுந் திருவடி தெளிய நோக்கி
நின்றவர் காண நின்றார் நீள்பவ நீங்கினாரே.

(கோயிற்புராணம், இரணியவனமச்சருக்கம், எரு)

## (ரு) தகராதிகரணம்,

அவர் தகரபுண்டரீகத்தில் உளதாதலையும், அவரை உபாசித்தலையும் பிரகடனஞ் செய்தற்கெழுந்தது இவ்வதிகரணம்.

ஓஹர உத்தரேப்ய꞉ (க. ந. கந)

(எ அ) தகரம் (சிவபெருமான்), அடுத்துக் கூறப்படுங் குணங்களுண்மையின்.

அத யதிதமஸ்மின் ப்ரஹ்மபுரே ஓஹரம் புண்டரீகம் வேஸ்ம ஓஹரோऽஸ்மிந்நந்தராகாஶ꞉ தஸ்மின் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம் (சாந். அ. க. க)

"இந்தப்பிரமபுரத்திலே *தகரபுண்டரீக வீடுள்ளது, அதிலே தகராகாயம் உள்ளது; இந்தத் தகராகாயத்துள்ளே உள்ளது நாடற்பாற்று, †அறியற்பாற்று" என்றற்றொடக்கத்த சாந்தோக்கிய சுருதியே விஷயம்.

ஈண்டுத் தகர சப்தத்தினுற் கூறப்பட்டது பூதாகாசமா? ஆன்மாவா? சிவபெருமானு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆகாயம் என்னும் மொழி ரூடியினுல் (ஜடா)காசத்துக்குண்மையின், தகராகாசம் என்றது பூதாகாசம்; இன்றேல், தகரம் என்றது ஆன்மா; அது (தகரம்) சிற்றளவினதாதலானும், அணுவாயிருக்குஞ் ஆன்மாவுக்கு அது பொருத்தமுறுதலானுமாம்; அது வியாபியாயுள்ள சிவபெருமானுக்குச் செல்லாதெனின்,

(சித்தாந்தம்) சொல்லுதும். சிவபெருமானே தகராகாகம்;

ஏஷ ஆத்மாऽபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ꞉ ஸத்யகாம꞉ ஸத்யஸங்கல்ப꞉ (சாந். அ. க. ரு)

"இந்தப் (பரம) ‡ஆன்மா பாவமில்லாதவர், ஜரையில்லாதவர், மரணமில்லா

---

*மலர்மிசை யேகினன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்.
(திருக்குறள் ந)

†பனைக்கைமும்மதவேழமுரித்தவ
னினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவ
னனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனே
(கோயில், நாவு. க)

‡எட்டுக்கோலாமவரீதில்பெருங்குண
மெட்டுக்கொலாமவர்சூடினமலர்
(பொது, நாவு, அ)

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.
(திருக்குறள், கo)

தவர், சோகமில்லாதவர், பசியில்லாதவர், தாகமில்லாதவர், சத்தியகாமர், சத்தியசங்கற்பர்" என அடுத்து வந்த அபகதபாப்மத்துவாதி குணங்கள் (சாந்தோக்கிய) சுருதிவாக்கிய சேடத்தினுற் சித்தித்தலின். இக்குணங்கள் சம்சாரியாம் ஆன்மாவுக்கு எங்ஙனம் எய்தும்? ஆகலின் சிவபெருமானே அபகதபாப்மத்துவாதி குணங்களையுடைய தகராகாசம். (௧௩)

கதிஶப்தாப்யாம் ததா ஹி த்ருஷ்டம் லிங்கஞ்ச (க. ௩. ௧௪)

**(௭௧) கதியும் (போதலும்), சப்தமும் (உண்மையானும்); அங்ஙனங் காணப்படுகின்றதே; இலிங்கமும் (உள்ளது).**

ஹிரண்யநிதிம் நிஹிதமக்ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ ந விந்தேயுரேவமேவேமாஸ்ஸர்வா: ப்ரஜா அஹரஹர்கச்சந்த்ய ஏதம் ப்ரஹ்மலோகம் ந விந்தந்த்யந்ருதேந ஹி ப்ரத்யூடா: |

(சாந். ௮. ௩. ௨)

"க்ஷேத்திரத்தை (தேசத்தை) அறியாத சனங்கள் (பூமிக்குள்) மறைப்புண்டு கிடந்த பொற்பண்டாரத்துக்கு மேலே தினந்தோறுஞ் சஞ்சரித்தும் அதனைக் காணுதவாறு போல, பிரஜைகளெல்லாந் தினந்தோறும் இந்தப் பிரமலோகத்தை அடைந்தும் அஞ்ஞானத்தினுல் மேற்கொள்ளப் பட்டாராகி அதனை அறிந்திலரன்றே" என்னுஞ் சுருதிவாக்கியசேஷத்திற் பிரஜைகள் தினந்தோறும் இந்தத் தகராகாசத்திற் செல்லுங் கதி கேட்கப் படுகின்றது; அது பிரமலோகம் எனவுங் கேட்கப்படுகின்றது; கதி பிரம லோகசப்தம் (இரண்டினுலும்) தகராகாசம் சிவபெருமான் (என உணரற் பாற்று)

ஸர்வா இமா: ப்ரஜா: ஸதி ஸம்பத்ய ந விது: ஸதி ஸம்பத்யாமஹ இதி (சாந். ௬. ௯. ௨)

"சௌமிய! இந்தப் பிரஜைகளெல்லாஞ் *சத்தில் அமிழ்ந்தியும், சத்தில் அமிழ்ந்துகின்றேம் என அறிகின்றில" என மற்ருேர் சுருதியினும் (பிர ஜைகள்) சிவபெருமானிடத்திலே இவ்வியல்பினதாகிய கதி செய்கின்றன என்று காணப்பட்டது.

ஏஷ ப்ரஹ்மலோகஸ்ஸம்ராடிதி ஹோவாச |

(பிரு. ௬. ௩. ௩௨, ௩௩; ௬. ௪. ௨௩)

"அரசனே! இது பிரமலோகம் எனக் கூறினர்" என்னுஞ் இந்தச் சுருதியிற் பிரமலோகசப்தமுந் தகராகாச விஷயத்திற் காணப்பட்டது.

---

* வேதாந்த சூத்திரத்து ௧. ௧. ௧௦ ஆஞ் சூத்திரபாடியம் பார்க்க.

மேலும், (பிரஜைகளுடைய) கதியும், (பிரமலோகம் என்னும்) சப்தமும் மற்றோரிடத்திலே காணப்படுகின்றன என்பது வேண்டாம். பிரஜைகளெல்லாந் தினந்தோறும் (பிரமத்தைப் போய் அடைதலாகக்) கேட்கப்படும் கதியும், பிரமலோகசப்தமும் தகராகாசஞ் சிவபெருமான் என்பதற்குப் போதியசான்றும் முற்றிய. (கச)

யூதெஸ்ல ஹேரி ஜெர ஸ்ரா ஸூஹனவஸெபூ (க. ரு. கரு)

(அ௦) இதிலே (தகராகாசத்திலே பிரபஞ்சத்தைத்) தாங்குதலாகிய அவர் *புகழுங் காணப்படலான்.

அய ய ஆத்மா ஸ ஸேதுர்விய்ருதிரேஷாம் லோகாநாமஸம்பேதாய (சாந். அ. ச. க)

"பின்னர் இந்த உலகங்கள் கலங்காவண்ணம் அந்தப் (பரம) ஆன்மா சேதுவும் ஆதாரமுமாம்'' என்னுஞ் சுருதியில் உலகத்தைத் தாங்குதலாகிய சிவபெருமானுடைய புகழ் இந்தத் தகராகாசத்துக்கு உளதாகக் காணப்படுகின்றது.

ஏஷ ஸர்வேஶ்வர ஏஷ பூதாதிபதி ரேஷ பூதபால ஏஷ ஸேது விதரண ஏஷாம் லோகாநாமஸம்பேதாய। (பிரு. சு. ச. உஉ)

"இவர் சர்வேசுவரர், இவர் பூதாதிபதி (பசுபதி), இவர் பூதபாலர் (ஆன்மரக்ஷகர்), இவர் சேது, உலகமனைத்துங் கலங்காவண்ணந் தாங்குபவர்'' என்னுஞ் சுருதியினால் உலகத்தைத் தாங்குதலாகிய சிவபெருமானுடைய புகழும் பெறப்படுகின்றது. ஆகலானும், தகராகாசஞ் சிவபெருமான். (கரு)

ப்ரஸித்தேஶ்ச (க. ரு. கசு)

(அக) (அங்கே அவர் வழிபடற்பாலரெனப்) பிரசித்தமாதலினாலும்.

தஹ்ரம் விபாப்மம் பரவேஶ்மபூதம் யத்புண்டரீகம் புரமத்யஸம்ஸ்தம் தத்ராபி தஹ்ரம் ககநம் விஶோகஸ்தஸ்மிந்யதந்தஸ்ததுபாஸிதவ்யம் (தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"பாவமிலாததும், பெரியோர் இல்லமாயதும், சரீரமத்தியில் இருப்பதுமாகிய †தகரபுண்டரீகம் உள்ளது; அதனுள்ளே சோகமில்லாத தகராகா

---

*இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.
(திருக்குறள். ரு)

†உபக்கிரமணிகை ரு௦-ஆம் பக்கத்தில் தகராகாசத்தின் பொருள் விளக்கப்பட்டமை காண்க. திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரருளிய "கற்றாங்கெரியோம்பி"

சம் உள்ளது; அதற்குள்ளே உள்ளது உபாசிக்கற்பாற்று" என மகோபநிடதத்தினும்,

ஹ்ருத்புண்டரீகம் விரஜம் (கைவ)

"இதயபுண்டரீகம் துகளற்றது" என்று தொடங்கி,

உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம்। த்யாத்வா (கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், திரிநேத்திரரும், நீலகண்டரும், பிரசாந்தருமானவரைத் தியானித்து" என்றற்றொடக்கத்தனவாகக் கைவல்லியோபநிடதத்தினுந் தகரபுண்டரீகமத்தியில் உளராக உமாசகாயராகிய சிவபெருமான் உபாசிக்கற்பாலர் என்றது பிரசித்தம். ஆகலானுந் தகராகாசஞ் சிவபெருமான்.

(பூருவபக்ஷம்)

ய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாஶஸ்தஸ்மிஞ்சேதே ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந: (பிரு. சு. ச. உஉ)

"இந்த இருதய ஆகாயத்திலே அனைத்தையும் வசிகரிப்பவராகிய சர்வேசுவரர் இருக்கின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதிவாக்கியங்களிலே தகரபுண்டரீகத்துத் தகராகாயத்துள்ளிருப்பவராகச் சிவபெருமான் உபாசிக்கற்பாலர் என மற்றோர் உபநிடதத்திற் பிரசித்தமாயிருக்கின்றது. (அவர்) தகராகாசமாக உபாசிக்கற்பாலர் என (பிறிதோரிடத்திற் கூறப்பட்டமை) இங்கே விரோதமுறுமோ எனின்,

(உத்தரம்) அவ்விடத்துத் தகராகாயத்து மத்தியிலுள்ள சிவபெருமான் என்று உபாசிக்கற்பாலரல்லர்; பின் தகராகாயத்துக்கு அபகதபாப்மத்துவாதி (பாவமிலாமைமுதலிய) சிவகுணங்கள் சம்பந்தமுளவாகக் கூறப்படலான், சிவபெருமானுக்குத் தகராகாசத்தைச் சிதம்பரரூபமாகப் (பராசத்தியாகக்) கொண்டு அவர் உபாசிக்கற்பாலர் என்று கோடலான் எய்தும் விரோதம் இன்று. (கசு)

இதரபராமர்ஶாத் இதி சேந்நாஸம்பவாத் (க. ந. கஎ)

"ஆடினாய்நறுநெய்" என்னுந் திருப்பதிகங்களும், திருநாவுக்கரசுநாயனாரருளிய "அன்னம்பாலிக்கும்" "பனைக்கைமும்மத" "செஞ்சடைக்கற்றை" "பத்தனாய்ப்பாட" "பாளையுடைக்கமுகு" "கருநட்டகண்டனை" "அரியானையந்தணர்" "மங்குன்மதி" என்னும் திருப்பதிகங்களும், சுந்தரமூர்த்திநாயனாரருளிய "மடித்தாமடிமை" என்னும் திருப்பதிகமும், மாணிக்கவாசகசுவாமிகளருளிய "இந்திரியவயமயங்கி" என்றற்றொடக்கத்தனவும், திருமாளிகைத்தேவரருளிய "ஒளிவளர்விளக்கே" என்றற்றொடக்கத்தனவும், திருமூலநாயனாரருளிய "தானந்தமில்லா," "அண்டங்களேழினும்" "தெற்குவடக்கு" "அண்டங்களோரேழு" "குருவுருவன்றி" என்றற்றொடக்கத்தனவும் அத்தகராகாய திருச்சிற்றம்பலவர் மேலனவாம்.

(அஉ) மற்றொன்றைச் சுட்டுதலால், அது (ஈண்டுக் கொள்ளப்பட்டது) என்பது அன்று; அசம்பவமாதலின்.

(ஆக்ஷேபம்)

அத ய ஏஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதி ருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யத ஏஷ ஆத்மேதி ஹோவாச (சாந். அ. ங. ச)

"பின்னர் இவன் சம்பிரசாதன்; இந்தச் சரீரத்தை விட்டெழுந்து, பரஞ் சோதியை அடைந்து தனது ரூபத்தோடு தோற்றுகின்றனன்; அவன் ஆன்மா என்று அவர் கூறினர்" என்னுஞ் (சுருதியிற கண்டவாறு), (ஆகாயம்) மற்றொன்றாகிய ஆன்மாவையே சுட்டுகின்றது. ஆகலின் பிரகிரு தத்து ஆகாயமானது ஆன்மாவன்றி மற்றொருவரன்றாமெனின்,

(உத்தரம்) ஆன்மா அன்று; மேலே உரைத்த அபகதபாப்மத்து வாதி குணங்கள் அவனுக்கெய்தாமையான். ஆகலின், (ஆகாசத்தினுற் குறிக்கப்படுஞ்) சிவபெருமானிலே அக்குணங்கள் ஆசிரயித்துள்ளன என் பது யுக்தம். (கஎ)

உத்தராச்சேதாவிர்ப்பூதஸ்வரூபஸ்து (க. ங. கஅ)

(அங) உத்தர (வாக்கிய) த்தினுல் (ஆன்மா எனின்) அவன் ஆவிர்ப்பூதசொரூபமாகவே (உள்ளான்).

(ஆக்ஷேபம்)

ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோऽபிபாஸ ஸத்யகாம ஸத்யஸங்கல்ப ஸோऽந்வேஷ்டவ்ய ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய ஸ ஸர்வாம்ஶ்ச லோகாநாப்நோதி ஸர்வாம்ஶ்ச காமாந்யஸ்தமாத்மாநமநுவித்ய விஜாநாதி (சாந். அ. எ. க)

பின்னர் "எவர் பாவமில்லாதவரும், ஜரையில்லாதவரும், மரணமில்லாத வரும், சோகமில்லாதவரும், பசியில்லாதவரும், தாகமில்லாதவரும், சத்திய காமரும், சத்தியசங்கற்பருமாயினரோ, அந்தப் (பரம) ஆன்மாவானவர் நாடற்பாலர், அறியற்பாலர்; (பரம) ஆன்மாவை நாடி அவரை அறிகின்ற வன் சமஸ்தவுலகங்களையும், சகல காமியார்த்தங்களையும் அடைகின்றான்" எனப் பிரஜாபதி கூறிய வாக்கியத்திலே ஆன்மாவுக்கு அபகதபாப்மத்து வாதி குணங்கள் உளவாகக் கேட்கப்படுகின்றது.

ய ஏஷோऽக்ஷிணி புருஷோ த்ருஶ்யத ஏஷ ஆத்மேதி ஹோவாச (சாந். ச. கரு. க)

ய ஹஷ ஸ்வப்நே மஹீயமாநஶ்சரதி ஹஷ ஆத்மேதி ஹோவாச।

(சாந். அ. க0. க)

"கண்ணுள்ளே தோன்றும் இந்தப் புருஷன் காணப்படுகின்றான், இவன் ஆன்மா என்று கூறினர்; சொப்பனத்திலே மகிழ்வினோடு செல்கின்றவன் ஆன்மா என்று கூறினர்" எனவும்,

தத்யத்ரைதத் ஸுப்தஸ்ஸமஸ்தஸ்ஸம்ப்ரஸந்நஸ்ஸ்வப்நம் ந விஜாநாத்யேஷ ஆத்மேதி ஹோவாச (சாந். அ. கக. க)

"ஒருவன் ஆறி அமர்ந்து நித்திரை செய்து கனவு காணுதொழியின், அவன் ஆன்மா என்று கூறினர்" எனவும் போந்த சுருதிகளில் ஆன்மாவுக்கு இலக்கணமாகக் கூறிய அவஸ்தாத்திரயங்கள் கேட்கப்படுகின்றன. ஆகலின் ஆன்மாவே ஈண்டுக் குறிக்கப்பட்டான் எனின்,

(உத்தரம்) இங்ஙனங் கூறுவது சாரமன்று. தனது அநாதியாகிய கர்ம களங்க சம்பந்தத்தினுல் இயைந்த சரீரத்தில் மறைப்புண்ட பாவமிலாமை முதலிய குணங்களையுடைய ஆன்மா பரஞ்சோதியோடிசைந்து பின்னர் (அதனுல்) தனது சொரூபம் வெளிப்பட்டவனும், தனது பாவமிலாமை முதலிய குணங்கள் வெளிப்பட்டவனும் இங்கே பிரதிபாதிக்கப்படுகின்றான்; (இவன்) சம்சாரியாகிய ஆன்மா அன்று. தகராகாசமோ எனின், அது இயல்பாகவே மறைக்கப்படாத அந்தந்தக் கல்யாணகுணங்களையுடைய வஸ்துவைக்குறிக்கின்றது; இங்ஙனம் ஈண்டுக்குறிக்கப்பட்ட தகராகாசம் கட்டுண்டதும் அன்று, வீடுற்றதும் அன்று. (க அ)

அந்யார்த்தஶ்ச பராமர்ஶ: (க. ரு. கக)

## (அச) பராமரிசமானது அன்னியார்த்தத்தையுமுடையது.

அஸ்மாச்சரீராத்ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே (சாந். அ. ரு. ச)

"இந்தச் சரீரத்தினின்றெழுந்து பரஞ்சோதி சொரூபத்தை அடைந்து தனது இயற்கைச் சொரூபம் அடைகின்றது" என்னுஞ் சுருதிவாக்கியத்தினுல், ஆன்மா தகராகாச சப்தத்தினுற் குறிக்கப்பட்ட பரவஸ்துவோடியைந்து, தனது இயற்கைச் சொரூபம்ஆவிர்ப்பாவமாதல் கூறப்படுகின்றது. அங்கே ஆன்மாவையுற்றுக் கூறப்பட்ட பராமரிசம் (சுட்டுகை) அவ்வியல்பினதாய அவனது மான்மியத்தைக் கூறற்காம். ஆகலின் விரோதமில்லை. (கசு)

அல்பஶ்ருதேரிதி சேத்தது்க்தம் (க. ரு. உ0)

(அரு) சுருதியானது சிறுமையைப் பேசினமையின் (ஆன்மாவே குறிக்கப்பட்டது எனின்) அது கூறியாயிற்று.

(பூருவபக்ஷம்) அற்பஸ்தானத்தைப் பற்றினமையின், தகராகாசம் அற்பசொரூபத்தையுடையதாகி, அதனாற் பரம்பொருள் ஈண்டுக் குறிக்கப் பட்டதில்லையாமென ஆசங்கிப்பின்,

(உத்தரம்) அது *க. உ. எ. என்னுஞ் சூத்திரத்தில் இறுத்தாயிற்று.

𑌅𑌨𑍁𑌕𑍃𑌤𑍇𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌚 (க. ங. உக)

(அசு) அவனுக்குச் †சாமியமுண்மையானும்.

𑌨𑍈𑌤𑌂 𑌸𑍇𑌤𑍁𑌮𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌤𑌰𑌤𑍋 𑌨 𑌜𑌰𑌾 𑌨 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌨 𑌶𑍋𑌕𑍋 𑌨 𑌸𑍁𑌕𑍃𑌤𑌂 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑌾𑌪𑍍𑌮𑌾𑌨𑍋𑌽𑌤𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌃 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌂 𑌸𑍇𑌤𑍁𑌂 𑌤𑍀𑌰𑍍𑌤𑍍𑌵𑌾𑌽𑌨𑍍𑌧𑌸𑍍𑌸𑌨𑍍𑌨𑌨𑌨𑍍𑌧𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌵𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌸𑌨𑍍𑌨𑌵𑌿𑌦𑍍𑌧𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌉𑌪𑌤𑌾𑌪𑍀 𑌸𑌨𑍍𑌨𑌨𑍁𑌪𑌤𑌾𑌪𑍀 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌂 𑌸𑍇𑌤𑍁𑌂 𑌤𑍀𑌰𑍍𑌤𑍍𑌵𑌾𑌪𑌿 𑌨𑌕𑍍𑌤𑌮𑌹𑌰𑍇𑌵𑌾𑌭𑌿𑌨𑌿𑌷𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌸𑌕𑍃𑌦𑍍𑌵𑌿𑌭𑌾𑌤𑍋 𑌹𑍍𑌯𑍇𑌵𑍈𑌷 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌃 (சாந். அ. ச. க, உ)

"அந்தச் சேதுவைப் பகல் இரவேனும், ஜரையேனும், மரணமேனும், சோகமேனும், நன்மையேனும், தீமையேனும் கடப்பதில்லை; பாவிகளெல்லாம் அங்கிருந்து மீண்டுவிடுவர்; இந்தப் பிரமலோகம் பாவத்தினின்று நீங்கியதன்றோ; அதனாற் குருடாயுள்ளோன் இந்தச் சேதுவைக் கடந்து குருடு நீங்கப்பெறுவன்; காயமுற்றோன் காயம் நீங்கப்பெறுவன்; ‡துன்

---

* அரைமாத்திரையிலடங்கும்மடியகலமளக்கிற்பாரில்லாவடி.
(திருவதிகை. நாவு. எ)

†"மெய்ப்பரம்பொருள் சேர்வார் தாமேதானுகச்செயுமவனுறையுமிடம்"
(திருத்தாளச்சதி, ஞான, எ)

"ஆனந்தவார்கழலேயோப்பாகவோப்புவித்த
வுள்ளத்தாருள்ளிருக்குமப்பாலைக்கப்பாலைப்பாடுதுங்காணம்மானாய்"
(திருவம்மானை. கக)

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்றாளை வணங்காத் தலை.
(திருக்குள். ௯0)

‡கூர்வாள்ரக்கன்றன்வலியைக்குறைவித்துச்
சீராலேமல்குசிற்றம்பலமேய
நீரார்சடையானைநித்தலேத்துவார்
தீராநோயெல்லாந்தீர்தறிண்ணமே.

கோணகணையானுங்குளிர்தாமரையானுங்
காணார்கழலேத்தக்கனலாயோங்கினன்
சேணார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேத்த
மாணாநோயெல்லாம்வாராமாயுமே.
(ஞான. கோயில் அ, க)

புற்றேன் துன்பம் நீங்கப் பெறுவன்; ஆகலின், இந்தச் சேதுவைக் கடந்த போது இராவானது பகலாகின்றது; பிரமலோகம் (யாவர்க்கும்) ஒரே முறையிற் பிரகாசிப்பது" என்று சாந்தோக்கிய வாக்கியசேஷம் கூறுகின்றமையின், ஆன்மா தகராகாய சப்தத்தினற் குறிக்கப்பட்ட பரஞ்சோதிக்கு ஒப்பாயிருப்பதாகப் பெறப்படுகின்றது.

ஈண்டுத் தகராகாசத்தை அடைந்தவனுக்குப் பாவரூபமாகிய ஜரை நீங்குதற்கும் குருடு நீங்குதற்கும் அபகதபாப்மத்துவமும் இடையீடில்லாது உதிக்கும் பிரகாசமும் காரணமாகக் கூறப்பட்டன.

ஆகலின், தகராகாசத்தை அடைந்தவனுக்கு எய்துவதாகக் கூறப்பட்ட பலப்பேறாகிய சாமியமே அந்த அனுகிருதி என்பது

நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி (முண்ட. ௩. க. ௩)

"நிரஞ்சனனைப் பரமசாமியத்தை அடைகின்றான்" என்னுஞ் சுருதியினல்) அறியப்படுகின்றது. அதுவும் (அனுகிருயும்) தகராகாசத்து ஆன்மா பேதமாயிருக்குமிடத்துத்தான் பொருத்தம். ஆகலின், (ஈண்டுக் கூறப்பட்ட தகராகாசம்) ஆன்மா அன்றென்பது தாற்பரியம். (உக)

பின்னருஞ் சூத்திரகாரர் மற்றோர் பிரமாணங் கூறுகின்றனர்.

அபி ச ஸ்மர்யதே (க. ௩. உஉ)

(அஎ) மேலும் ஸ்மிருதியினும் (அங்ஙனம்) கூறப்படுகின்றது.

அயவா பரமாத்மானம் பராநந்த விக்ரஹம்।
புருஷம் க்ருஷ்ணபிங்களம்।
ப்ரஹ்ம ப்ரஹ்மபுரே தகராகாசமத்யமே।
அப்யாஸாத் ஸம்பஶ்யந்தி ஸூரயஃ கார்க்கி॥
(யோகயாஞ்ஞவல்கியத்துத் தியானத்தியாயம்)

"இன்றேற் பரமானந்தவிக்கிரகரும், புருஷரும், கிருஷ்ணபிங்களருமாகிய பரப்பிரம சிவபிரானுரைக் குருவுபதேசத்தினல் அப்பியாசித்து, கார்க்கியே! பெரியோர் பிரமபுரத்துத் தகரபுண்டரீகாம்பரமத்தியிலே காண்கின்றனர்; நீயும் அங்ஙனமே செய்" என்று (யோகயாஞ்ஞவற்கிய) ஸ்மிருதியினும் கூறப்படலான், பிரமம் தகரபுண்டரீகத்துள்ளிருப்பதாயும், அது வழிபடற்பாலதாயும் கூறப்பட்டது. ஆகலின், பரஞ்சோதிசொரூபமுடையதும், முக்தர்களால் அடையற்பாலதும், உமை என்னும் பராசத்தியோடிசைந்ததுமாகிய பரப்பிரமம் தகரபுண்டரீக ஆகாயமத்தியிலிருப்பதும் அபகதபாப்மத்துவாதி குணங்களை இயல்பாகவுடையதும், உபாசிக்கற்பாலதுமாமெனச் சித்தித்தது. (உஉ)

## (சு) பிரமிதாதிகரணம்.

பின்னர்ச் சிவபெருமான் மற்றோர் வடிவமாக உபாசிக்கப்படுதல் கூறப்படுகின்றது.

ஶப்³தா³தே³வ ப்ரமித꞉ (க. ங. உங)

(அஅ) சுருதிபற்றியே (அவர்) *அளக்கப்பட்டனர்.

அங்கு³ஷ்ட²மாத்ர꞉ புருஷோ மத்⁴ய ஆத்மனி திஷ்ட²தி।
ஈஶானோ பூ⁴தப⁴வ்யஸ்ய ந ததோ விஜுகு³ப்ஸதே॥

(கட. ச. கஉ)

"அங்குஷ்டப் பிரமாணத்தினராகிய புருஷர் இதயமத்தியில் நிற்பாராயினர்; இவர் இறந்தகால எதிர்காலத்துக்கும் ஈசானராதலின், (எவர்க்கும்) அஞ்சுவாரல்லர்" என்றற்றொடக்கத்த சுருதியே விஷயம்.

ஈண்டு அங்குஷ்ட அளவினராகக் கேட்கப்படும் புருஷர் சிவபெருமானா? ஆன்மாவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா எனல் யுக்தம்;

ஸ விஶ்வரூபஸ்த்ரிகு³ணஸ்த்ரிவர்த்மா ப்ராணாதி⁴ப꞉ ஸஞ்சரதி ஸ்வகர்மபி⁴꞉। அங்கு³ஷ்ட²மாத்ரோ ரவிதுல்யரூப꞉ ஸங்கல்பாஹங்காரஸமன்விதோ ய꞉ (சுவே. ரு: எ, அ)

"அவன் விசுவரூபியும், முக்குணமுடையனும், மும்மார்க்கமுடையனும், பிராணாதிபனும், தன்து கன்மவசத்தாற் (பிறவிதோறும்) சரிப்பவனும் ஆகின்றான்; அவன் அங்குஷ்ட அளவினனும், இரவிதுல்லியரூபனும், சங்கற்பாகங்காரங்களோடு இசைந்தவனுமாம்" என்னுஞ் சுருதியினால் அவன் அங்குஷ்ட அளவினனாதல் சித்தித்தலினாலும்,

மத்⁴ய ஆத்மனி திஷ்ட²தி (கட. ச. கஉ)

"ஆன்மாவின் மத்தியில் நிற்கின்றான்" என்றது அந்தப் புருஷன் சரீரத்துள்ளே இருப்பவன் எனப் பொருள் அறியப்படலானுமாம்; வியாபகராகிய சிவபெருமான் அன்றெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அங்குஷ்ட அளவினர் சிவபெருமான் எனல் யுக்தம்;

---

*பிறையமாகும்புருடனங்குட்டப்பிரமிதிதனைவிரும்பாம
லறவனேயுனதீசானநற்சுருதியாற்பரமென்றுநிச்சயித்தோன்
செறியும்வேதாந்தப்பொருளினைத்தெரிக்குஞ்சூத்திரஞ்செய்தவன்கருத்து
மிறைவனின்பெருமைகண்டதேயாகுமென்பராலாயவல்லவரே.
(சிவதத்துவவிவேகம். ௩அ)

ஸாமாநெ ஹி தஹவ்யஷ (கட. ச. கஉ)

"இறந்தகால எதிர்காலத்துக்கு ஈசானர்" என்றற்றொடக்கத்த சுருதி சிவபெருமானுக்குரிய லிங்கசப்தமுடைமையின்;

ஸவெ-ஶ்வய்ஸம்பஹஸவெ-ஶ்வரஶ்ஶம்ஹூாகாஶமெஷ்ய।

(அதர்வசிகை)

"சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், ஆகாயமத்தியிலுள்ள சம்புவும்" என அதர்வசிகையினும் அவர்க்கே சர்வேசுவரத்துவம் கேட்கப்படலான். (உந)

சிவபெருமானைப் பரிச்சின்னராகப் பன்முன்றையுங் கூறுதல் எங்ஙனம் இயைபுடைத்தெனச் சூத்திரகாரர் கூறுகின்றார்.

ஹ்ரூத்யபெக்ஷயா து ம்நுஷ்யாயிகாரகூாத் (க. ந. உச)

**(அகூ) ஆயின் இதயத்தை அபேக்ஷித்து மனுஷ்யாதிகாரமுண்மையின்.**

சிவபெருமான் அபரிச்சின்னராயினும், (அவரை) அங்குஷ்ட அளவினராகக் கூறினமை உபாசகனுடைய இதயத்தை அபேக்ஷித்து மனுஷ்யாதிகாரம்பற்றி உபாசன சாஸ்திர விதிகள் உண்மையின். மனிதர் இதயம் எத்துணைப் பிரமாணமுடையதோ, அத்துணைப் பரிச்சின்னமாகிய ரூபத்தையே பரமகாருணிகராகிய சிவபெருமானும் அவர் உபாசனசித்தியின் பொருட்டுக் கொள்வாராயினர். ஆகலின், சோதிமயராகிய சிவபெருமான் லிங்கரூபமாக உபாசகர் இதயமத்தியில் நிற்கின்றனர் என்பது நிர்ணயம். (உச)

## (எ) தேவாதிகரணம்.

---

மேலை அதிகரணத்தில் மனிதர்களுக்குமாத்திரமே சிவபெருமானை உபாசித்தற்கு அதிகாரம் உளதெனச் சூசிப்பிக்கப்பட்டது.

தஷெதா ஜெவா ரூஹுாவஶ்யநெஜெவா ரூஹுமய்யாயஙி।

(அதர்வசிரசு)

"பின்னர்த் தேவர்கள் உருத்திரரைக் காண்கிலராய் அவரைத் தியானிப்பாராயினர்" எனத் தேவர்களும் சிவபெருமானை உபாசித்தாராக அதர்வசிரசிற் கேட்கப்படுகின்றதென ஆசங்கிப்பின், அதற்கு உத்தரமாக இவ்வதிகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

தஃஹுவய்ஷி வாஃராயணஸம்ஹவாத் (க. ந. உரு)

**(கூo) பாதராயணர் (கொள்ளுமாறு), அவர்களுக்கு (மனிதர்க்கு) மேலுள்ளார்க்கும்; (அது) கூடுமாதலின்.**

தே தேவா ருத்ரம் த்யாயந்தி (அதர்வசிரசு)

"அந்தத் தேவர்கள் உருத்திரரைத் தியானிக்கின்றார்கள்" என்னும் அதர்வசிரச்சுருதியே விஷயம்.

சிவபெருமானை உபாசிக்கத் தேவர்களுக்கு அதிகாரம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது கூடாது. அவாவுடையனும், வன்மையுடையனும், வித்துவானும், சாஸ்திரத்தினால் நிஷேதிக்கப்படாதவனுமன்றோ வைதிக கருமத்துக்கு அதிகாரியாவன். தேவர்களுக்கு வன்மை இன்று, சரீரம் இன்மையான். சரீரமுடையரன்றோ ஒருவரைத் துதி தியான முதலிய செய்யச் சமர்த்தராகின்றனர்.

இந்த்ரோ வ்ருத்ராய வஜ்ரமுதயச்சத் (யசு. வே. கா. ௫. க. க)

"இந்திரன் விருத்திராசுரனுக்கு (விரோதமுற) வச்சிராயுதத்தை ஓங்கினன்" என்றற்றொடக்கத்த பிரமாணமுண்மையின், அவர்கட்குச் சரீரமுளதாகின்றதே எனின், அன்று; விதியொன்றை விளக்கும்பொருட்டு உபயோகமாயிருக்கும் வாக்கியங்கள் அந்த விதியொழிந்த மற்றொன்றைச் சுட்டுமாறின்றாமாதலின்,

அவர் சரீரமுடையராயவிடத்தும் சிவபெருமானது பதத்தை நோக்கி அவர்களுக்குஞ் சிவபெருமானுக்கும் பதம் ஒன்றாமாதலின்.

தேவா ஹவை ஸ்வர்க்கம் லோகமாயம்ஸ்தே தேவா ருத்ரமப்ருச்சந் கோ பவாந் (அதர்வசிரசு)

"தேவர்கள் சுவர்க்கலோகத்தை அடைந்தனர்; அத்தேவர்கள் நீவிர் யார்? என உருத்திரனைக் கேட்டனர்" என்னுஞ் சுருதியினால், சுவர்க்கமாகிய உலகமே உருத்திரராகிய பரப்பிரமத்தின் பதமாக அறியப்படுகின்றது. அதுவே தேவர்களுடைய பதம்.

ஆப்நோதி ஸ்வாராஜ்யம் (தைத். க. ௬)

"சுவர்க்கராச்சியத்தை அடைகின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளினால் முத்தனும் சுவர்க்கராச்சியத்தை அடைவதாக அறியப்படுகின்றது. அங்ஙனம் அவர்கட்கு (தேவர்கட்கு) ஞானமும் இன்று. உபநயனசம்ஸ்காரபூருவமாக எய்தும் வேதாத்தியயனமில்லாவிடத்து, அவர்கட்கு வேதாந்த விசாரமின்மையின், பிரமஞானம் எய்தாது. அதுபற்றி, அவர்கள் சாஸ்திரத்தினால் உபாசனைக்கு விலக்காவர் என்பது. ஆகலின், தேவர்கள் பிரமோபாசனைக்கு அதிகாரிகளல்லராம் எனின்,

(சித்தாந்தம்) பிரமோபாசனைக்குத் *தேவர்கட்கும் அதிகாரம் உளது; யாதினாலெனின், அவர்களுக்கு ஆசையுண்மையின். சிவபெருமானுடைய பதமும் தேவருடைய பதமும் ஒன்றன்று. சுவர்க்கசப்தம் சாமானியமாக இன்பத்தை உணர்த்துமேனும், பிரகரணத்தினால் அது விசேட இன்பத்தைக் குறிக்கின்றது; எங்ஙனமெனின், ஈசுரசப்தம் (சாமானியமாக) எசமானனை உணர்த்துமேனும் பிரகரணவசத்தினால்,

உவெயாத்ரீஹுரமெனுவ யொமகேஷாசஷ-2வியெ|

"யோகக்ஷேமசித்தியின்பொருட்டு ஈசுவரனை ஒருவன் அடையற்பாலன்" என்றற்றொடக்கத்த வாக்கியங்களில், ஈசுவரசப்தம் தேசத்துக்கு அதிபதியாயிருக்கின்ற அரசனையே குறிக்கின்றது; அம்மொழி பின்னர்ப் பிரமத்தையுற்றுப் பேசும் பிரகரணத்தில் நிரதிசய ஐசுவரியத்தையுடைய பிரமத்துக்கே பெயராகச் செல்கின்றது. அங்ஙனம், இன்பத்தை உணர்த்தும் சுவர்க்கசப்தமும் பிரகரணத்தினாலும், பிற பிரமாண உபபத்தியினாலும் அழியுமாலையதாதல் சாதிசயமாதல் முதலிய குற்றங்களினால் மாசு ஏறிய அற்ப இன்பத்தையுடைய தேவருலகத்தைக் குறிக்கின்றது; அது பின்னர் நிரதிசய இன்பசொரூபமுடையதாகி மீண்டு பிறப்பின்கட் செலுத்தாத இலக்ஷணமுடைய பரப்பிரம சிவனாருடைய பதத்தை குறிக்கின்றது. ஆகலின், தனக்கு மேலான தொன்மையுடைத்தாதல் முதலிய குற்றமுடைய சுகபதத்தில் வசிப்பவர்கள் நிரதிசய இன்பமுடைய பிரமபதத்தில் ஆசையுறுவது இயற்கையே. அர்த்தவாதப் பிராமண்ணியத்தினால் அவர்களுக்கு வடிவுடைமைபற்றி (கன்மாதிகார) சாமர்த்தியமும் உண்டு எதனாலெனின்,

தயா ஞூஜிெதூ1 யஶிவ: (தைத். பிராம்மணம். உ. க. ரு. ரு௯);
ஊஹிஹ-2ஹேஷூ்ஹெஷஜ2 (யசுர். வே. எ. ச. கஅ. க)

---

*அயனெடுமாலிந்திரன்சந்திராதித்தமரரெலாஞ்
சயசயவென்றுழப்போதுபணிவனதண்கடல்சூழ்
வியனிலமுற்றுக்கும்விண்ணுக்குநாகர்வியனகர்க்கு
மியபரமாவனவின்னம்பரான்றனிணையடியே.
(திருவின்னம்பர், நாவு, க)

அரியயனிந்திரன்சந்திராதித்தரமரரெல்லா
முரியநின்கொற்றக்கடைத்தலையாருணங்காக்கிடந்தார்
புரிதருபுன்சடைப்போகமுனிவர்புலம்புகின்று
ரெரிதருசெஞ்சடையேகம்பவென்னோ திருக்குறிப்பே.
(திருக்கச்சியேகம்பம், நாவு, எ)

பாய்ந்தவன்காலனைமுன்பணைத்தோளியோர்பாகமதா
வேய்ந்தவனெண்ணின்றந்தவிமையோர்கடொழுதிறைஞ்சு
வாய்ந்தவன்.
(திருவக்கரை, ஞான, உ)

“ஆதித்தியன் யூபம்; அக்கினியானவர் பனிக்கு ஔஷதம்” என்றற்ருெடக்கத்தவற்ருற் குணவாத அனுவாதங்கள் தமக்குரிய அர்த்தத்திலே தாற்பரியமில்லையேனும்,

ஊஜீ வ்ருத்ராய வஜ்ரமுதயச்சத் (யசுர். வே. சு. ரு. க. க)

“இந்திரன் விருத்திரனைக் (கொல்ல) வச்சிரத்தை உயர்த்தினன்” என்றற்ருெடக்கத்த அர்த்தவாதங்கள் வேறு பிரமாணங்களினுல் விரோதமுருது, பிரமாணமாகத் தம்பொருளிலே தாற்பரியமுளவாகக் காணப்படலான். (தேவர்களுக்குள்ள) மிகுந்த சக்தியினுல் வேதார்த்தங்கள் தாமே அவர்க்குப் புலப்படுதலாலாவது, முன்னர்ப்படித்த வேதங்களை மறவாதிருத்தலினுலாவது அவர்களுக்கு ஞானம் உளதாகின்றது. சாத்திரம் பொதுவுற உபாசனையை விதித்தமையான், (உபாசனைக்கு) அதிகாரராதலை நீக்குதல் கூடாமையின், தேவர்களை நீக்குதல் கூடாதாயிற்று. ஆகலின், பிரமவித்தைக்கு அதிகாரிகள் தேவர்கள். (உரு)

தேவர்களுக்குச் சரீரமுதலிய உளவாமிடத்து விரோதமுளதாம் எனச் சூத்திரகாரர் ஆக்ஷேபித்துப் பரிகரிப்பாராயினர்.

விரோத: கர்மணீதி சேந்நாநேக ப்ரதிபத்தேர்தர்சநாத்।
(க. ரு. உசு)

**(கூக) (யஞ்ஞ) கர்மத்தில் விரோதமுளதோ எனின், இன்று; அநேக (சரீரத்தைப்பற்றிய) கொள்கை உண்மையின்.**

(ஆக்ஷேபம்) நாநா தேசங்களினும் இயற்றப்படும் (பற்பல) யஞ்ஞங்களில் அங்கங்கே வரிக்கப்படுந் தேவர்கள் (சேறற்குச்) சரீரமெடுக்குங்கால் யாண்டும் ஒரே காலத்தில் சாந்நித்தியராகக் கூறப்படுகின்றனர்; அது பொருந்தாது; இங்ஙனம் யஞ்ஞவிஷயத்தில் விரோதமுறுகின்றதே எனின்,

(உத்தரம்) அங்ஙனம் இன்று; *சௌபரி முதலாயினேர் ஒரே காலத்தில் அநேக சரீரங்களை எடுத்தாராகக் காணப்படுகின்றது. ஆதலிற் சிறிதும் விரோதமின்று. (உசு)

---

*சௌபரிமுனிவர் ஒருவர் மாந்தாதா என்னும் ஓர் அரசருடைய புதல்வியர் ஐம்பதின்மரை விவாகஞ் செய்து அவ்வைம்பதின்மர்க்கும் தமது ஆச்சிரமத்திலே தனித்தனி மாளிகை முதலாயின அமைப்பித்து அவ்வைம்பதின்மர் மாளிகையினும் ஒருவரை ஒருவர் அறியாவண்ணம் அவ்வவரிடத்துத் தனித்தனி வடிவங்கொண்டு ஓர்காலமும் அவ்வவரைப் பிரியாது நெடுங்காலம் போகந்துய்த்து புத்திர பௌத்திரரோடு வாழ்ந்திருந்தார்' என்று விஷ்ணுபுராணம் நான்காம் அம்சத்து இரண்டாம் அத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

யஞ்ஞகர்மத்தில் விரோதம் வேண்டாம்; வேதசப்த விஷயத்தில் விரோதம் எழுகின்றதே எனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸஜ்ஹ இதி வெணாக்ஷ ப்ரஹவாதீ ஸ்ரத்யக்ஷா நுமாநாஜ்ஜாம் |

(க. ௩. உ௭)

**(கூஉ) வேதத்தைப்பற்றி (விரோதமுளதே) எனின், இன்று; பிரத்தியக்ஷாநுமானங்களினால் அங்கிருந்து உற்பத்தியுறுதலின்.**

(ஆக்ஷேபம்) யஞ்ஞவிஷயத்தில் விரோதமின்றேனும், வேதசப்த விஷயத்தில் விரோதமுளதாகின்றது. எங்ஙனமெனின், தேகம் அவயவத்தோடியைந்திருத்தலின், தேவர்களுக்கும் அநித்தியம் சகசமே; ஆகலின், இந்திரன் முதலிய தேவர்களுக்கும் உற்பத்தி உளதாதலிற்றடையில்லை. அங்ஙனமாயின், அவர்கள் பிறப்புக்கு முன்னும் இறப்புக்குப் பின்னும் வைதிக இந்திராதி சப்தங்கள் பொருட் சூன்யமாயேனும், அநித்தியமாயேனும் இருக்கலாம். அவ்வேதசப்தங்கள் அநித்தியமாயின், (அவை) பௌருஷேயமாய், விதிநிஷேதவாக்கியங்கள் அப்பிராமாண்ணியமாய்ப்போம். அதனால், அவ்வேதங்களிற் கூறிய கன்மங்களுஞ் சித்தியாகா. அநேக அநர்த்தங்கள் விளைய நேரும். ஆகலின், வைதிகசப்த விரோதத்தைப் பரிகரிக்குமாறு தேவர்கள் சரீரமுடையராதலே அங்கிகரிக்கலாகாதாம் எனின்,

(உத்தரம்) ஆகாது; அங்கிருந்து, அஃதாவது, இந்திரன் முதலிய வைதிக சப்தங்களிலிருந்து இந்திரன் முதலிய அர்த்தங்கள் சிருட்டிக்கப்பட்டன. இந்திராதி சப்தங்கள் வியக்தியைப் (பொருளைக்) குறிக்குமாயின், அப்போதன்றோ இந்திராதி சப்தங்களினாற் சுட்டப்பட்ட பொருள் அழியுங்கால், அந்த வேதவாக்கியப் பொருள்களுக்குப் பொருளின்மையும் அநித்தியமும் நேரும். கவாதி சப்தம் போல இந்திராதி சப்தங்களுக்கும் ஆகிருதி (வடிவு) வாசகமாத்திரம் கூறப்படுகின்றது. எங்ஙனங் குலாலன் கடமுதலிய சப்தங்கொண்டு மனசில் உதித்தவாறு அவ்வாகாரத்தை நினைந்து கடாதிகளைச் சிருஷ்டிக்கின்றானோ, அங்ஙனமே முந்திய இந்திரன் ஒருவன் இலனாகுங்கால், பிரமா வைதிக இந்திராதி சப்தத்தினால் மற்றோர் இந்திரன் முதலியோர் ஆகிருதியை நினைந்து அந்த ஆகாரமாய் மற்ற இந்திரன் முதலாயினோரைப் படைக்கின்றனர். ஆகலின், இந்திரன்முதலிய வியக்திகள் நாசமுறினும், அந்தந்த ஆகிருதி ஒழிவனவன்றாய், அதனால் வைதிக சப்தங்கள் நித்தியமாயுறுதலின் விரோதமின்று. இதற்குப் பிரமாணம் என்னை எனின்,

வெதெ³ந நாமரூபெ வ்யாக்ருத்ய ஸதாஸதீ ப்ரஜாபதி꞉ (தைத். பிரா. உ. சு. உ. அ)

ஸ பூ⁴ரிதிவ்யாஹரத்ஸ பூ⁴மிமஸ்ருஜத (தைத். பிரா. உ. உ. ச. உஉ)

ஸர்வேஷாந்து ஸ நாமாநி கர்மாணி ச ப்ருத²க் ப்ருத²க் ।

வேத³ஶப்³தே³ப்⁴ய ஏவாதௌ³ ப்ருத²க்ஸம்ஸ்தா²ஶ்ச நிர்மமே ॥

(மனு. க. உக)

"பிரஜாபதியானவர் சத்தும் அசத்துமாகிய ரூபங்களை வேதங்களினால் இயற்றினர்" என்றும், "அவர் பூர் என்று கூறிப் பூமியைப் படைத்தனர்" என்றும், "எல்லோர் பெயரையுங் கன்மங்களையுந் தனித்தனி வேதசப்தங்களினின்று முதன்முதற் படைத்தனர்" என்றும் முறையே கூறும் சுருதி ஸ்மிருதிகளே பிரமாணங்கள். (உஎ)

அத ஏவ ச நித்யத்வம் (க. ரு. உஅ)

## (கூரு) ஆதலினாலும் நித்தியத்துவம்.

ஆகலின்,

ருஷ்யந்ம்ருதா ப்ரவ்ருணீதே (ஆபஸ்தம்ப பிறவரசூத்திரம். க. எ)

"மந்திரம் இயற்றினோரை அவன் வரிக்க"

விஶ்வாமித்ரஸ்ய ஸூக்தம் ப⁴வதி (தைத். சங். ரு. உ. ரு. ரு, ச)

"இது விசுவாமித்திரசூக்தம்" என்னும் வாக்கியங்களான் விசுவாமித்திரர் முதலாயினோர் மந்திரகர்த்தாக்களாயினும், விசுவாமித்திரர்முதலிய மொழிகள் ஆகிருதிநிமித்தமாயிருத்தலின், மந்திரமும் பிராம்மணமுமாயிருக்கும் வேதமானது நித்தியம் என்பது தேற்றம். எதனாலெனின், பிரமா வைதிக சப்தங்கொண்டு (படைக்கற்பாலனவாகிய) பொருள்களை நினைந்து, பின் அவற்றைப் படைப்பாராயினர்; (அவர் உபாத்தியாயர் ஒருவரிடத்துக்) கல்லாது, மந்திரங்களைப் பார்க்குஞ் சத்தியோடிசைந்தமையின். அங்ஙனமே நைமித்திகப் பிரளயமுடிவில் முந்திய யுகத்துள்ள விசுவாமித்திரர் முதலாயினோருடைய விசேஷவடிவங்களை அந்தந்த வைதிக சப்தங்கொண்டு நினைந்து அதே வடிவத்தையுடைய பிறரையும் (விசுவாமித்திராதியோரையும்) அவ்வச்சத்தி விசேஷங்களையுடையராகப் படைக்கின்றனர். விசுவாமித்திரர் முதலியோருங் கல்லாது தாந்தாமே வேதமந்திரங்களைப் படிக்கின்றனர். ஆகலின், அவர்கள் மந்திரகர்த்தாக்களாதலும் வேதம் நித்தியமாதலும் ஆகும். (உஅ)

(ஆக்ஷேபம்) நைமித்திகப்பிரளயத்தில் இங்ஙனம் ஆகலாம்; பிரமாதியோரும் வேதசப்தமும் ஒழியும் பிராகிருதப் பிரளயத்திலே வேதம் நித்தியமாதல் எங்ஙனமெனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸமா நநாமரூபத்வாச்சாவ்ருத்தாவப்யவிரோதோ தர்சநாத் ஸ்ம்ருதேச்ச (க. ந. உகூ)

(கூச) ஒரே பெயரும் வடிவும் உண்மையின் உலக ஆவிருத்தியினும் விரோதமின்று; வேதத்தினும் ஸ்மிருதியினுங் காணப்படலான்.

படைக்கற்பாலனவாய பொருள்களுக்கு அதே வடிவும் உண்மையின், பிரகிருதிப்பிரளயமுடிவில் மீள உளதாகும் உலகத்தில் யாதும் விரோதம் இல்லை. அங்ஙனமே சர்வஞ்ஞரும், சர்வசத்தியினரும், விசுவாதிகரும், ஆதிகர்த்தாவுமாகிய சிவபெருமான் முந்திய உலகத்தின் நிலையை உணர்ந்து அதே வடிவமாக உலகத்தைப் படைக்கின்றனர். வேதமனைத்தையும் முற்றொடர்ச்சிப்படி நினைந்து புத்திரத்தன்மையுற்ற பிரமாவுக்கு அவற்றை அருளுகின்றனர். இது எங்ஙனம் பெறப்பட்டதாலோ எனின், சுருதி ஸ்மிருதிகளான் என்க.

ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்।
திவஞ்ச ப்ருதிவீஞ்சாந்தரிக்ஷமதோ ஸுவ:।

(தைத். ஆரணி. க௦. க. கச)

யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை (சுவே. சு. கஅ)

"தாதா (வாகிய சிவபெருமான்) முன் போலச் சூரியசந்திரரையும், ஆகாயம் பூமியையும், அந்தரிக்ஷ சுவர்க்கத்தையும் சிருட்டித்தனர்; பிரமாவை முதற்கட்படைத்து அவர்க்கு *வேதத்தையும் அருளினர்" என்று சுருதியினும்,

சிவ ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்।
ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶு ஸமப்ரபம்।
தஸ்மிஞ் ஜஜ்ஞே ஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோக பிதாமஹ:।

*வேதத்தையும் என்ற உம்மையினூற் புராணங்களுங் கொள்ளப்படும். இவ்வுண்மையை

ததாபி ஸ மஹாதேவோ மஹாதேவ்யக ஏவாவயோ:।
அஸ்மாவயத்தயம் வேதாந் புராணாநி ச பூர்வத:॥

(சங். த. க: கச)

"அங்ஙனமாயினும் முதற்கண் எங்களுக்கு (பிரமவிஷ்ணுக்களுக்கு) வேதங்களையும் புராணங்களையும் கற்பித்த அந்த மகாதேவர் எங்கள் இருவருள்ளும் ஒருவர் போற் பிரகாசிக்கின்றார்" என்னும் சங்கரசங்கிதையினுல் உணர்க.

ஸூவஹாணம் விஜயெ வூ-லீவம் வெதூம தடுவெஷ வூயதூதி॥ (மனு. க: அ, ௯)

"அவர் முதற்கண்ணே ஜலத்தை உண்டாக்கி அதில் வீரியத்தை விட்டனர்; அது ஆயிரங் கிரணத்தையுடைய சூரியன்போற் பிரகாசமுடைத்தாய், ஓர் சுவர்ண அண்டமாயிற்று; அதிற் சர்வலோகபிதாமகராகிய பிரமா தாமாகவே பிறந்தனர்; இப் பிரமாவை முதற்கண்ணே படைத்து அவர்க்கு வேதங்களை அருளுகின்றனர்" என ஸ்மிருதியினுங் கூறப்படுகின்றது. ஆகலின், உலகமுழுமையும் பிரகிருதிப் பிரளயத்துக்குப் பின்னர்ப் புதிதாய் உளதாயவிடத்தும் வேதம் நித்தியமே. (உ௯)

சூத்திரகாரர் மதாந்தரங் கூறுகின்றனர்.

உவாதிஷ்வஸம் ஹவாஃநயிகாரம் ஜெஜிநிஃ (க. ௩. ௩௦)

(௩௦) மது (வித்தை) முதலியவற்றிற் கூடாமையின், அவர் அநதிகாரமுடையர் (என்பர்) ஜைமினி.

மதுவித்தை முதலிய உபாசனைகளில் வசுக்களும் மற்றைத் தேவர்களுமே உபாசிக்கற்பாலரும் அடையற்பாலருமாயிருத்தலின், ஒரே வஸ்துவானது கர்த்தாவாகவும் கன்மமாகவும் இருத்தல்பற்றி வசுவாதிகர் உபாசிக்கற்பாலராகார். மேலும், வசுவாதியர் தாமேயாயிருத்தலினால், வசுவாதித்துவம் மேலே அடையப்பட்டதாயிருக்க, (அது) அடையற்பாலதாய பொருளாதல் கூடாது. ஆகலின், வசுக்களும் மற்றைத் தேவர்களும் மதுவித்தை முதலியவற்றிற்கு அதிகாரமுடையரன்றென ஜைமினி கொள்கின்றனர். (௩௦)

ஜெ்யாதிஷி ஹாவாச் (க. ௩. ௩க)

(௩க) *சோதியில் (அவர்கள் அதிகாரம்) உண்மையானும்.

பரப்பிரமசோதியானது சாதாரணமாய் (மனிதர்களோடு கூடத்) தேவர்களால் உபாசிக்கற்பாலதொன்றாயினும்,

தஜெவா ஜெ்யாதிஷாம ஜெ்யாதி ராயுா ஹொலீா வாஸதெ ஃஶுதஃ (பிரு. ௬. ௪. க௬)

"சோதிகளுள்ளே சோதியாம் அவரைத் தேவர்கள் உயிராயும் அமிர்தராயும்

*சொற்றெரியாப்பொருள்சோதிக்கப்பானின்றசோதிதான்
மற்றறியாவடியார்கடஞ்சிந்தையுண்மன்னுமே.
(திருவீழிமிழலை, ஞான, க௦)

ஓதியாருமறிவாரிலையோதியுலகெலாஞ்
சோதியாய்நிறைந்தான்சுடர்ச்சோதியுட்சோதியான்.
(திருவையாறு, ஞான, எ)

உபாசிக்கின்றனர்" என்னுஞ் சுருதியினால் தேவர்களுக்கும் மனிதர்களைப் போலப் பரப்பிரமசோதியை அடைய அதிகாரமிருப்பதாகக் கூறப்படலான், மற்றோர் மதுவித்தியாதி உபாசனையில் அதிகாரமில்லை என்பது நியாயசித்தமாயிற்று. (௩க)

சூத்திரகாரர் தமது கருத்தைக் கூறுகின்றனர்.

ஹாவஜ ॥ வாஜராயணொzவ்ஹி ஹி (க. ௩. ௩உ)

(கூஎ) ஆயின், பாதராயணர் (அவர்கட்கு அதிகாரம்) உளது (என்கின்றனர்); (கூடுமா)கலின்.

வசுக்களுக்கும் மற்றைத் தேவர்களுக்கும் மதுவித்தை முதலியவைகளில் அதிகாரம் உளதென வாதராயணர் கொள்கின்றனர். அவர்கள் வசுக்களாயிருப்பினும், அவர்கள் வசுக்கள் வடிவமாகவே பிரமத்தை உபாசித்து, மற்றோர் கற்பத்தில் வசுத்துவ முதலியவற்றை அடைதல் கூடும். ஈண்டுப்பிரமமானது காரியம் காரணம் என்னும் இருதிறத்ததாக உபாசிக்கற்பாற்று.

அஸௌ வா ஆதித்யோ தேவமது (சாந். ௩. க. க)

"இந்த ஆதித்தியனே தேவர்களுக்கு மது" என்று ஆரம்பித்த சுருதியானது ஆதித்தியர் வசுக்கள் முதலாயினோருடைய நாமரூபகிருத்தியத்தோடியைந்த காரியரூபமாகிய பிரமம் உபாசிக்கற்பாலதென உபதேசிக்கின்றது.

அத தத ஊர்த்வ் உதேத்ய நைவோதேதா நாஸ்தமேதா।
(சாந். ௩. கக. க)

"அங்கிருந்து அவன் மேலே எழுந்தபோது அவன் *உதயாஸ்தமனம்

---

*விஷாதிதெ்யா ஹ்யுதாகாஸெ வ்யதிஹாதி மிரஹஜம்।
நாஸ்தமேதி நசோதேதி ஸ்வயம் ஸம்ஜ்யோ ஃவாஸ்தகெ।
உதகெந விநா ஸம்ஜ்யா ஜவஹெநாடிஜெ விநாதவஃ।
.........வரெ தகெவ ஸா ஸம்ஜ்யா ஸஜ்ஜிஷ்யதெ॥
(ஞானசித்தி)

அகலமாமாகாயத்தினமர்ந்ததோர்ஞாயிற்றன்
விகலமாயுதியானந்தமேவிடான்சந்திதன்னை
யிகலறவியற்றுமாறதெங்ஙனமென்றென்றெண்ணி
முகில்சொரிநீத்தமின்றிமுடித்துநீசந்தியெல்லாம்.
(சுவாமிநாததேசிகர் தசகாரியம்)

கரவிலுள்ளமாம்விசும்பிடைக்காசறவிளங்கும்
பரசிலாச்சுடர்க்குதயமீறின்மையாற்பகலு
மிரவுநேர்படக்கண்டிலரியன்றுசெய்நித்த
விரதமாதிநோன்பிழந்துறைவிஞ்சையர்பலரால்.
(திருவிளையாடற்புராணம், வாதவூரடிகளுக்கு உபதேசித்தபடலம், ௩க)

அடையவில்லை'' என்றற்றொடக்கத்த சுருதியினால் நாமரூபகிருத்தியம் ஒழிந்த சூக்கும ஞாயிற்றுக்கு அந்தரியாமியாம் காரண ரூபமாகவும் பிரமம் உபாசிக்கற்பாலதென உபதேசிக்கப்படுகின்றது. (காரியம் காரணம் என்னும்) இருபிரகாரமாகப் பிரமத்தை உபாசித்தமையிலே, அதன் பலம் (முறையே) கற்பாந்தத்தில் வசுவாதியாதலும், பிரமத்தை அடைதலுமாம்.

ஸ ய ஏதமேவமம்ருதம் வேத வஸூநாமேவைகோ பூத்வா
அக்நிநைவ முகேநைதமேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யதி |

(சாங். ங., சு. ங)

"(ஆண்டு) இந்த அமிர்தத்தை இங்ஙனம் அறிபவன் வசுக்களுள் ஒருவனாகி, அக்கினிவாயிலாக அமிர்தத்தைப் பார்த்து மகிழ்வடைகின்றனன்'' என்றற்றொடக்கத்த சுருதிவாக்கியம் வசுமுதலாயினோர் ரூபத்தை அடைதலாம் பயனைக் கூறுகின்றது.

ந ஹ வா அஸ்மா உதேதி ந நிம்லோசதி ஸக்ருத்திவா ஹைவாஸ்மை பவதி ய ஏதாமேவம் ப்ரஹ்மோபநிஷதம் வேத |

(சாங். ங., கக, ங)

*"பிரமஞானத்தை அறிபவனுக்குச் சூரியன் உதிப்பதும் இல்லை, அஸ்தமிப்பதும் இல்லை, எதனாலெனின் ஒரேமுறையில் யாவுந் தினமாகின்றது'' என்னுஞ் சுருதியானது பிரமத்தை அடைதலாம் பயனை உபதேசிக்கின்றது. ஆகலின், தேவர்களுக்கு மதுவித்தை முதலியவைகளினும் அதிகாரம் உளதாகின்றது. எப்பிரகாரத்தானுந் தேவர்கள் பிரமோபாசனைக்கு அதிகாரிகள் என்பது. (௩உ)

## (அ) அபசூத்திராதிகரணம்.

---

(க. ங. உச) என்னுஞ் சூத்திரத்தினால் மனிதர்க்குப் பொதுவுற அதிகாரம் நேர்வதாக, அதில் விசேஷம் கூறுகின்றனர்.

ஶுகஸ்ய ததநாதரஶ்ரவணாத்ததாத்ரவணாத்ஸூச்யதே ஹி |

(க. ங. ஙங)

---

*நதிவா பூஜயேல்லிங்கம் ராத்ரௌ நைவ ச நைவ ச|
ஸர்வதா பூஜயேல்லிங்கம் திவாராத்ரௌ விவர்ஜயேத்|

"சிவபெருமானைப் பகலிற் பூசை செய்யற்க; இரவினும் அங்ஙனஞ் செய்யற்க; பகல் இரவொழித்துச் சிவபெருமானை எக்காலமும் பூசிக்க'' என்னுஞ் சிவாகம சுலோகப் பொருள் சகலாவஸ்தை கேவலாவஸ்தை என்னும் பகலிராவொழிந்த சுத்தாவஸ்தையிலே நின்று சிவபிரான் எக்காலமும் வழிபடற்பாலர் என்பதாம். இதுபற்றியே "இராப்பகலற்றவிடத்தே யிருக்கையெளிதல்லவே'' என்றார் மேலோரும்.

**(கூஅ) தன்னைப்பற்றிய இகழ்மொழியைக் கேட்டமை யானும் அதுபற்றி (ஆசாரியரிடத்துக்கு) ஓடினமையானும் அவனது துக்கம் சூசிப்பிக்கப்பட்டமையின்.**

சூஜஹாரேமாஃ ஶூ-ஶேநைவ முவெநாலாவயிஷ்யாஃ!

(சாந். ச. உ. ரு)

“சூத்திர! நீ இவற்றைக் கொணர்ந்தனை; அந்த வாயினாலேமாத்திரம் நீ என்னைப் பேசப் பண்ணினை” என்னுஞ் சாந்தோக்கிய சுருதியே விஷயம்.

ஈண்டு ஆசாரியர் சீடனைச் சூத்திரன் என்று விளிக்கின்றனர். ஆகலின், சூத்திரர் பிரமவித்தைக்கு அருகரா? அல்லரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவர்களுக்கும் அதிகாரம் உளது; ஆசையுண்மையின். மூவருணத்தார்க்கே என்னும் நியமம் இன்று; மூவருணத்தரல்லராய தேவர்கட்கும் அது உளதாகக் காண்டலின். தேவர்களுக்கு அது உபநயனம் வேதாத்தியயனமில்லாவிடத்தும், இயல்பாகவே வேதார்த்தம் விளங்குதலின் ஞானம் உளதாகின்றது. சூத்திரர்க்கு இது எங்ஙனங் கூடுமென் ஆசங்கித்தல் ஆகாது, இவர்களுக்கும் புராணசிரவணமுதலியவற்றால் ஞானம் உளதாதலினாலும், நிஷாதஸ்தபதிநியாயத்தினால் மகாவாக்கியசிரவணத்துக்கும் அதிகாரவுண்மையினாலுமாம்; ஆகலின், இவர்கள் பிரமவித்தைக்கு அருகர் எனின்,

(சித்தாந்தம்) கூறுவம். சூத்திரர் பிரமவித்தைக்கு அதிகாரரல்லர்; அவர்களுக்கு அத்தியயனமில்லாவிடத்து அவ்வத்தியயனவுபாயத்தினால் எய்தும் உபாசிய மூர்த்தியினதும், அம் மூர்த்தி குண முதலியவற்றுடையவும் ஞானம் நிகழமாட்டாமையின். இதிகாசபுராணங்கள் வேதங்களை உபப்பிருங்கணஞ் செய்வதுபற்றி சாதனமாகின்றனவேயன்றித் தாமே சுவதந்திரமாய் இருப்பனவன்று. சூத்திரர் இதிகாசபுராணங்களைக் கேட்க ஆஞ்ஞாபித்தல் அவர்கள் பாவத்தை க்ஷயஞ் செய்யும் பிரயோஜனநோக்கியேயாம். *விதுரரும் தர்மவியாதாதியரும் ஜந்மாந்தரத்தில் ஆர்ச்சித்த ஞானம் அழியாதிருந்தமையின், (அவர்கள்) பிரமநிஷ்டராயினர். பிரமஞானம் உபதேசிக்குமிடத்து ஆசாரியர் சீடனை எங்ஙனஞ் சூத்திரர் என விளிக்கப்போந்தனர் என வினவின், சூத்திரவருணத்தைச் சார்ந்தவர் எனக்கொண்டு அவரைச் சூத்திரர் என்று விளித்திலர்; பின் பிரமஞானம் அடையவில்லை என்று

---

* விதுரர் அறிவிற் சிறந்தவர் என்றுணர்த்துமாறு மகாபாரதம் ஸ்திரீபர்வத்து கூ-ஆம் அத்தியாயத்து சக-ஆம் சுலோகத்தில் அவரை மஹாமதி என்று கூறுகின்றது. இவர் மஹாப்பிராஞ்ஞர் என்பதை மகாபாரதத்தில் அங்கங்கே கண்டுணர்க.

தர்மவியாதர் என்னும் ஓர் வேடர் மகாப்பிராஞ்ஞர் என்று வனபர்வத்து உ0கூ-ஆம் அத்தியாயத்து ருகூ-ஆம் சுலோகங் கூறுகின்றது. இவர் சரித்திரம் அப்பர்வத்து உ0சு-ஆம் அத்தியாயமுதற் பத்து அத்தியாயங்களான் அறியப்படுகின்றது.

அவனுக்கு (ஜாநசுருதி என்பானுக்கு) துக்கம் பிறந்ததாகக் காணப்பட்டலான். அவனுக்குத் துக்கம் பிறந்தமைக்குக் காரணம் பிரமவித்தையைப் பெருமையினலே தன்னையுற்று அன்னம் கூறிய இகழ்மொழியைக் கேட்டமையானும், அது காரணமாக அவன் ஆசாரியரிடத்துக்கு ஓடினமையானுமாம். சூத்திரத்தில் ஹி என்றது ஏதுப்பொருளின் மேற்று. ஏதனுல் சூத்திர! என விளித்தமை அச்சாதிபற்றியன்றன்றே, அதனற் சூத்திரற்குப் பிரமோபாசனை இல்லை என்ருயிற்று. (௩௩)

முன்னர்ப் போதரும் நியாயத்தினுலும் சீடனைச் சூத்திர! எனக் கூறினமை சூத்திரவருணத்தை நோக்கியன்றென்று கூறுகின்றனர்.

க்ஷத்ரியத்வாவக³தேஶ்ச (க. ௩. ௩௪)

(௬௬) அவன் க்ஷத்திரியன் என அறியப்படுதலானும்.

சீடனுகிய ஜாநசுருதி க்ஷத்திரியனுக அறியப்படலானும், அவன் சாதி சம்பந்தமாகச் சூத்திர! என்று விளிக்கப்பட்டானல்லன்.

ஜாநஶ்ருதிர்ஹ பௌத்ராயண: ஶ்ரத்³தா⁴தே³யோ ப³ஹுதா³யீ ப³ஹுபாக்ய ஆஸ ஸ ஹ ஸர்வத ஆவஸதா²ந் மாபயாஞ்சக்ரே ஸர்வத ஏவ மே(அ)த்ஸ்யந்தீதி (சாந். ௪. க. க)

"(பிராமணர்களுக்கு) அன்பினேடு கொடுப்பவனும், (சனங்களுக்கு) அதிக திரவியங் கொடுப்பவனும், தினந்தோறுந் தனது கிரகத்தில்) யாகம் அதிகம் நடைபெறச் செய்வோனுமாகிய ஜாநசுருதி பௌத்திராயணன் என்பான் ஒருவன் இருந்தனன்; அவன் தனது அன்னத்தை ஜனங்களெல்லாம் ஒவ்வோரிடத்தும் உண்ணவேண்டும் என விரும்பி, யாண்டும் இடங்கள் அமைத்தனன்" என்னுஞ் சாந்தோக்கியசுருதியினுல் ஜாநசுருதி என்பான் தனிபதி எனவும், பாகஞ் செய்த அன்னத்தை மிகுதியாகக் கொடுப்பவனும் எனவும் உபாக்கியான உபக்கிரமத்திற் கூறப்படுகின்றுன்.

ஸஹ ஸஞ்ஜிஹாந ஏவ க்ஷத்தாரமுவாச (சாந். ௪. க. ௫)

"உதயகாலத்தில் எழுந்தவுடன் தனது சாரதிக்குக் கூறினன்" என்னுஞ் சுருதியினுல் அவன் தனது சாரதிக்குச் சொல்லி அனுப்பினனுக (உபாக்கியான) மத்தியிற் கூறப்படுகின்றனன்.

இயம் ஜாயா அயம் க்³ராமோ யஸ்மிந்நாஸ்ஸே (சாந். ௪. உ. ௪)

"இந்த மனைவி; நீர் வசிக்கும் இந்தக் கிராமம்" எனவும்,

தே ஹைதே ரைக்வபர்ணா நாம மஹாவ்ருஷேஷு யத்ராஸ்மா உவாஸ (சாந். ௪. உ. ௫)

"(தனக்குக் கீழே) இரைக்குவர் இருந்த மகாவிருஷருடைய தேசத்தின் இரைக்குவபர்ணக் (கிராமங்கள்) இவைகள்" என்னுஞ் சுருதியினால், அநேக கிராமங்கள் (இரைக்குவர்க்கு அவன்) கொடுத்தானாக (உபாக்கியான) முடிவிற் கூறப்படுகின்றனன். இவ்வியல்பினவாய இலிங்கங்களினால் ஜாநசுருதி க்ஷத்திரியனாக அறியப்படுகின்றான். (௩௪)

உத்தரத்ர சைத்ரரதேந லிங்காத் (க. ௩. ௩௫)

(௩௦௦) பின்னர் அடுத்துச் சைத்திரரதரோடு இலிங்கமுண்மையின்.

இந்தச் சம்வர்க்கவித்தைக்கு அடுத்து,

அத ஹ சௌநகஞ்ச காபேயமபிப்ரதாரிணஞ்ச காக்ஷஸேநிம் பரிவிஷ்யமாணௌ ப்ரஹ்மசாரீ பிபிக்ஷே (சாந். ௪. ௩. ௫)

"சௌனக காபேயரும், அபிப்பிரதாரிகாக்ஷசேநியும் போசனஞ் செய்யும் போது, பிரமசாரி ஒருவன் அவர்களை யாசித்தான்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, பிராமணர் க்ஷத்திரியர்களின் தொடர்பு சம்வர்க்கவித்தையிற் காணப்படுகின்றது. ஈண்டு அபிப்பிரதாரி என்பார் சித்திரரத வம்சத்திற் றோன்றிய க்ஷத்திரியராகத் தோற்றுகின்றனர்; காபேயர் என்னும் யஞ்ஞகுருவோடு சேர்ந்திருத்தலின்.

ஏதேந வை சைத்ரரதம் காபேயா அயாஜயந் தமேகாகிநம் ஸந்தம் அந்நாத்யாத் அத்யக்ஷம் அகுர்வந் (தாண்டியப்பிராம்மணம். ௨௦. ௧௨. ௫)

"இதனாற் காபேயர் யஞ்ஞஞ் செய்யுமாறு சைத்திரரதரை ஏவினர்; அவர் ஒருவரையே அன்னத்துக்கு அத்தியக்ஷராக ஆக்கினர்" என்னும் வாக்கியத்தினால், காபேய யஞ்ஞகுருவோடு சைத்திரரதர் சேர்ந்திருந்தனராகச் சுருதி கூறுகின்றது. இதனால் அபிப்பிரதாரி பெயர்வேற்றுமைபற்றிச் சைத்திரரதரல்லாவிடினும் அந்த (க்ஷத்திரிய) வம்சத்துக்கு உரியர் என்பது பெறப்படுகின்றது. ஒத்தவம்சத்துள்ளவர்களே மற்றோர் ஒத்த வம்சத்தார்க்கு விசேடமாக யாகஞ் செய்விப்பவராகின்றனர். சைத்திர வம்சத்தராதலின் அவர் க்ஷத்திரியராதல் வேண்டும் என்பது

தஸ்மாச்சைத்ரரதிநாமேகஃ க்ஷத்ரபதிர்ஜாயதே

(தாண்டியப்பிராம்மணம்)

"அவரிடத்திருந்து க்ஷத்திரியப்பிரபுவாகிய சைத்திரரதர் என்னும் ஒருவர் பிறக்கின்றார்" என்னும் வாக்கியசேஷத்தினாற் சித்திக்கின்றது. இங்ஙனமே அடுத்துக் காபேயவம்சத்துப் பிராமணனோடு சம்பந்தமுற்றவனாகக் கூறப்பட்ட அபிப்பிரதாரி என்பவர் க்ஷத்திரியர் என நிச்சயிக்கப்படுகின்றனர். இங்ஙனம் பிராமண ரைக்குவரோடு சம்பந்தமுற்ற ஜாநசுருதி என்ப

வரும் க்ஷத்திரியர் என அறியப்படுகின்றனர். ஆகலின், க்ஷத்திரியரே சூத்திரரென் விளிக்கப்பட்டனர் என்பது. (௩௫)

நிஷாதஸ்தபதி நியாயத்தினுற் சூத்திரற்கு மகாவாக்கிய சிரவணமாத்திரத்தில் அதிகாரம் உளதாகக் கூறப்பட்டமைபற்றி, சூத்திரகாரர் கூறுகின்ருர்.

ஸம்ஸ்காரபராமர்ஶாத் தத³பா⁴வாபி⁴லாபாச்ச (க. ௩. ௩௬)

(௧௦௧) சம்ஸ்காரபராமரிசவுண்மையானும், அதின் இன்மை கூறப்படலானும்.

உபயிகாநெநஷ்யெ தம் உபநீய (சாந். ச. ச. ௫)

"நான் உனக்கு உபநயனஞ் செய்வேன் (என்று கூறி), அவர் அவனுக்கு உபநயனஞ் செய்தார்" என்றற்ருெடக்கத்த சுருதிகளிற் பிரமவித்தையின் தொடக்கத்தில் உபநயனசம்ஸ்காரங் கூறப்படலான்,

ந ஶூத்³ரெ பாதகம் கிஞ்சித் ந ச ஸம்ஸ்காரமர்ஹதி ।

(மனு. ௧௦. ௧௨௬)

ஶூத்³ரஶ்சதுர்தோ² வர்ண ஏகஜாதி꞉ (கௌதம. ௧௦. ௫௦)

"சூத்திரனிடத்திற் பாதகம் இல்லை, அவன் உபநயனத்துக்கு அருகன் அல்லன்; நான்காம் வருணத்தானுகிய சூத்திரன் ஒரே பிறப்புடையன்" எனவுங் கூறி, ஸ்மிருதிகளினுற் சூத்திரற்கு உபநயனசம்ஸ்காரம் இல்லை எனக் கேட்கப்படலான், அவற்குப் பிரமவித்தையில் அதிகாரம் இல்லை.

நிஷாத³ஸ்த²பதிம் யாஜயெத்।

(பூருவமீமாஞ்சை. ௬. ௧. ௫௧-ஆம் சூத்திரபாஷியத்தில்)

"நிஷாதஸ்தபதியை யஞ்ஞஞ் செய்யப்பண்ணு" என்னும் விதியில் விரோதம் இல்லை. உபநயனம் இல்லாவிடத்துஞ் சூத்திரற்குச் சிரவணஞ் செய்யயாண்டும் விதி இல்லை. (௩௬)

தத³பா⁴வநிர்தா⁴ரணெ ச ப்ரவ்ருத்தே꞉ (க. ௩. ௩எ)

(௧௦௨) அதன் (சூத்திரத்துவ) அபாவத்தை நிச்சயஞ் செய்வதில் (ஆசாரியர்க்குப்) பிரவிருத்தியுண்மையானும்.

நைதத³ப்³ராஹ்மணோ விவக்துமர்ஹதி ஸமித⁴ம் ஸோம்யாஹரோபத்வா நெஷ்யெ ந ஸத்யாத³கா³꞉ (சாந். ச. ச. ௫)

"அப்பிராமணன் இங்ஙனங் கூறற்கு அருகனல்லன்; சௌமிய! சமித்துக்களை எடுத்துவா; நான் உனக்கு உபநயனஞ் செய்கின்றேன், நீ சத்தியத்தினின்று வழுவினுயல்லை" என்னுஞ் சத்திய வசனத்தினுல் ஜாபாலர் சூத்

திரரல்லர் என நிச்சயித்தபின்னரே (ஆசாரியர்) அவருக்கு உபநயன சம்ஸ்காரஞ் செய்தற்கும், பிரமவித்தை உபதேசித்தற்கும் போந்தமையின், சூத்திரற்கு அதிகாரம் இல்லை. (௩௭)

(ஆக்ஷேபம்) உபநயனசம்ஸ்காரமில்லாவிடத்து வேதோச்சாரணங் கூடாதென நிஷேதித்தல் ஒரோவிடத்திலா? (இன்றேல்) யாண்டுமா?

(பூருவபக்ஷம்) யாண்டும் இன்று ;

நஸ்ஹ்யஸ்மிந்வித்யதே கர்ம்ம கிஞ்சிதாமௌஞ்ஜிபந்தநாத்|

(கௌதம தருமசூத்திரம். உ. ௫)

"பிதிர்கன்மஞ் செய்யுமிடத்தன்றி வேதத்தை அவன் உச்சரிக்கக்கூடாது" என்னும் வாக்கியத்தினால், உபநயனசம்ஸ்காரமில்லாவிடத்தும் (விப்பிர) பாலனானவன் பிதிர்கன்மஞ் செய்யுமிடத்து வேதத்தைப் படிக்கலாம் என விதியுண்மையின். இதனால் வேதம் படிக்கக்கூடாதெனல் ஒரோவிடத்திலாம். ஆகலின், உபநயனமில்லாச் சூத்திரன் பாகயஞ்ஞஞ் செய்யும்போது வேதம் படிக்கக்கூடாதென்று நிஷேதிக்கப்படுகின்றனனன்றி, பிரமவித்தை படிக்கும்பொழுதன்றென ஆசங்கிப்ப,

(சமாதானம்) சூத்திரகாரர் சொல்வாராயினர்.

ஶ்ரவணாத்யயநார்த்தப்ரதிஷேதாத் (க. ௩. ௩௮)

**(௧0௩) வேதத்தைச் சிரவணஞ் செய்தல், அத்தியயனஞ் செய்தல், (அதன்) பொருள் அறிதல் நிஷேதிக்கப்படலான்.**

தஸ்மாச்சூத்ரஸமீபே நாத்யேதவ்யம்|

"ஆகலின் சூத்திரற்குச் சமீபத்தில் அத்தியயனஞ் செய்யவொண்ணாது" என்னும் வாக்கியத்தினாற் சூத்திரற்கு வேதாத்தியயனசிரவணமுதலியன நிஷேதிக்கப்படுகின்றன. வேதத்தைக் கேளாதவனுக்கு வேதாத்தியயன முதலியன எங்கிருந்துளவாம்!

ஸ்ம்ருதேஶ்ச (க. ௩. ௩௯)

**(௧0௪) ஸ்மிருதியுண்மையானும்.**

அத ஹாஸ்ய வேதமுபஶ்ருண்வதஸ்த்ரபுஜதுப்யாம் ஶ்ரோத்ரப்ரதிபூரணமுதாஹரணே ஜிஹ்வாச்சேதோ தாரணே ஶரீரபேதஃ|

(கௌதம. ௧உ. ௪. ௬)

"பின்னர் வேதத்தைக் கேட்குங்கால், காதுகளை உருக்கிய ஈயத்தினாலும் மெழுகினாலும் நிறைக்க; வேதங்களை உச்சரிக்குங்கால் நாவை இரண்டாகச் சேதித்தல்வேண்டும்; மனசிற்றரித்து வைத்திருந்தால், சரீரஞ்

பேதிக்கப்படல் வேண்டும்'' என்னும் ஸ்மிருதியானது வேதத்தைச் சிரவணஞ் செய்யுஞ் சூத்திரற்குத் தண்டம் விதிக்கின்றது. சுருதி ஸ்மிருதிகளினுற் சூத்திர சமீபத்தில் அத்தியயனமுதலியன செய்வது நிஷேதிக்கப்படுகின்றமையின் அவற்கு வேதார்த்தவிசாரம் எங்கிருந்தாகும்! ஆகலின், எப்பிரகாரத்தினுலும் பிராமணனுக்கு எட்டாம் வயசிற் செய்யப்படும் உபநயன சம்ஸ்காரமின்றி வேதாத்தியயனம் எவ்விடத்தும் எவனுக்கும் எய்தாதென்பது சித்தமாயிற்று. ஆகலின், சூத்திரர் பிரமவித்தைக்கு *அருகரல்லர். (௩௯)

*ஸம்ஸ்க்ருதை: ப்ராக்ருதை வாக்யை: ய: சிஷ்யமநுரூபத: । தேசபாஷாத்யுபாயைச்ச போதயேத் ஸ குரு: ஸ்ம்ருத: ॥ (வடமொழிச் சுருதியல்லாத) சமஸ்கிருத வாக்கியங்களானும், பிராகிருத வாக்கியங்களானும், (அவ்வத்)தேசபாஷை முதலிய வாயிலாகவும் எவர் இயைபாகச் சீடனுக்குப் போதிக்கின்ருரோ, அவர் குரு எனப்படுவர்'' என்று சிவதருமோத்தரத்தினும்

ஶூத்ராணாம் விரக்தாநாம் ததா ஸ்த்ரீணாம் ததைவ ச ।
ஸித்தாந்தஶ்ரவணம் ப்ரோக்தம் புராணஶ்ரவணம் ததா ॥
ஸர்வேஷாம் ஜ்ஞாநாப்யாஸோ விதீயதே ।

"விரக்தர்களாகிய சூத்திரர்களுக்கும் (விப்பிர) ஸ்திரீகளுக்கும் உபகாரமாம் பொருட்டு அறிஞரால் சித்தாந்த சிரவணம் புராணசிரவணம் கூறப்பட்டுள்ளன; எல்லோர்க்கும் ஞானப்பியாசம் விதிக்கப்படுகின்றது'' என்று சூதசங்கிதையிற் கூறப்பட்டதாக ஞானவரணவிளக்கத்தினும் உரைக்கப்பட்டிருத்தலானும், ஞானப்பியாசத்தின் பொருட்டுச் சிவாகமங்கள் (சமய விசேஷ நிருவாண தீக்ஷைபெற்ற) நான்கு வருணத்தார்க்கும்'' பயன்படுமாறுள்ளன என்று உ. உ. ௩அ-ஆம் சூத்திர பாடியத்தினுற்பெறப்படலானும், திருஞானசம்பந்தமூர்த்திநயனர் முதலிய சைவ சமயஸ்தாபனசாரியர்கள் முதலாயினோர் வேதப்பொருள்களையெல்லாம் தமிழிலே தேவார திருவாசகமுதலிய அருட்பாக்களாகப் பிராமணர் முதலிய நான்குவருணத்தார்க்கும் உபயோகமாமாறு அருளிச்செய்தமையானும்,

ஸத்யாந்ந ப்ரமதிதவ்யம் । தர்மாந்ந ப்ரமதிதவ்யம் । குஶலாந்ந ப்ரமதிதவ்யம் । பூத்யை ந ப்ரமதிதவ்யம் । ஸ்வாத்யாய ப்ரவசநாப்யாம் ந ப்ரமதிதவ்யம் (தைத். க. கக. க)

என்று தைத்திரீயம் கூற,

ஸத்யாத்தர்மாத் குஶலாத் ஸ்வகர்மாநுஷ்டாநாதபி ।
ப்ரவர்த்மாநாத்மநாதபி ஸ்வாத்யாயாத்யயநாதபி ॥

என்று சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டம் ௬௯-ஆம் அத்தியாயத்து ௩௫-ஆம் சுலோகமும், சுவேதாசுவதரத்து ஆறு அத்தியாயங்களினும் உள்ள மந்திரங்கள் பெரும்பாலனவற்றை வாயுசங்கிதை பூருவபாகத்து நான்காம் அத்தியாயமும் நேரே சுருதிவாக்கியங்களையெடுத்து உதகரித்தவிடத்தும், அவை புராணமாதல்பற்றிப் பாஷ்யகாரர் க. ௩. ௩௩-ஆம் சூத்திரபாடியத்தில் இதிகாசபுராணங்களைச் சூத்திரர் கேட்குமாறு ஆஞ்ஞாபித்தமை அவர்கள்பாவத்தை க்ஷயஞ்செய்யும்பயன் நோக்கியாம் என்று கூறுகின்றமையானும், சூத்திரர் சிவோபாசனைக்கு உரியராகின்ருர் என்று பெறப்படுதலானும், பிரமவித்தைக்குச் சூத்திரர் அதிகாரிகளல்லர் என்று பிரமசூத்திரகாரர் கூறினமை சூத்திரர் உபநயன சம்ஸ்காரமில்லாமையான் நேரே

## (௯) கம்பநாதிகரணம்.

---

இங்ஙனம் கூறிய பிரமவித்தைக்குரிய அதிகாரி யாவன் என நிரூபித்து, பிரகிருத (ஆறும் அதிகரண) விஷயத்தை அநுசரித்துக் கூறுவாராயினர்.

கம்பநாத் (க. ௩. ௩௰)

### (க௰ரு) *நடுக்கமுறலான்.

யதிடம் கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ஸ்ருதம்। மஹத்பயம் வஜ்ரமுத்யதம் ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி (கட. ௬. ௨)

"(பிரமத்தினின்று) பிறந்த இவ்வுலகமெல்லாம் பிராணனில் நடுங்குகின்றது, உயர்த்திய இடியாமெனப் பெரும்பயம் அடைகின்றது; இதனை அறிகின்றவர் அமிர்தர் (சிவன்) ஆகின்றனர்" எனக் கடவல்லியில் அங்குஷ்டப் பிரமாணபுருஷர் கூறப்படும் பிரகரணத்திற் காணப்படும் சுருதியே விஷயம்.

ஆண்டு நடுக்கமுறுதற்குக் காரணம் சிவபெருமானா? பிறிதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஈண்டுப் பிராணன் என்னும் மொழியினாற் குறிப்பிக்கப்பட்ட பயத்தினாற் சமஸ்தலோகபயமும் கூறப்படுகின்றது. சகல உலகத்துக்கும் அபயப்பிரதானஞ் செய்வதால் மதுர சுவயாவமுடையரும், பரம காருணிகருமாகிய சிவபெருமானை உலகநடுக்கத்துக்குக் காரணமாகக் கூறல் அயுக்தம். ஆகலின், (ஈண்டு) இடிசப்தம் நேர்தலின், பயத்துக்குக் காரணம் இடியேயாம்; இன்றேற் பிராணவாயு நடுக்கத்துக்குக் காரணம்; பிராணன் என்னுஞ் சப்தம் நேர்தலான். தேகம் சரித்தற்குப் பிராணவாயு காரணமாதலின், பிராணனைக்கொண்டே சரீரவடிவினதாகிய இவ்வுலகம் அனைத்துஞ் சலிக்கின்றது;

யதிடம் கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நிஸ்ஸ்ருதம்।
(கட. ௬. ௨)

"(பிரமத்தினின்று) தோன்றியபோதே, இவ்வுலகத்துள்ள எதுவும் பிராண

---

வேதத்தை அத்தியயனஞ்செய்து பொருளறிந்து பிரமவித்தையிற்றலைப்படல் கூடாமைபற்றியாமாதலினாலும், இச்சைவபாடியம் பிராமணர்முதலிய அனைவர்க்கும் உபயோகமாம்பொருட்டுப் பாஷாந்தரமாகிய தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டதாமென்றுணர்க.

*ஆட்டுவித்தாலாரொருவராடாதாரேயடக்குவித்தாலாரொருவரடங்காதாரே
யோட்டுவித்தாலாரொருவரோடாதாரேயுருகுவித்தாலாரொருவருருகாதாரே
பாட்டுவித்தாலாரொருவர்பாடாதாரேபணிவித்தாலாரொருவர்பணியாதாரே
காட்டுவித்தாலாரொருவர்காணாதாரேகாண்பாரார்கண்ணுதலாய்காட்டாக்காலே.
(பொது, நாவு, ௩)

ணிற் பயப்படுகின்றது'' என்னுஞ் சுருதிப்பொருள் பொருத்தமுறுதலின்; மின்னலும், மேகமும், மழையும் போலப் பெரும் பயத்துக்குக் காரணமாகிய இடியும் வாயுவின்றொழிற்பாட்டினால் உண்டாகின்றதென

மஹத்பயம் வஜ்ரமுத்யதம் (கட. சு. உ)

“உயர்த்தப்பட்ட இடியே பெரும் பயத்துக்குக் காரணம்'' என்னுஞ் சுருதி ஆண்டுப் பொருத்தமுறுதலின்.

வாயுரேவவ்யஷ்டி ஸமஷ்டிர்வாயுரேவஸமஷ்டிரேவ வாநமேவம்வேத அப புனர்ம்ருத்யும் ஜயதி ய ஏவம் வேத (பிரு. ரு. ௩. உ)

“வாயுவே வியஷ்டி, வாயுவே சமஷ்டி, இதனை அறிபவன் மிருத்தியுவை ஐயிப்பன்'' என்னுஞ் சுருதியுண்மையின், வாயுவை அறிதலான் அமிர்தத்துவம் அடைதலும் பொருத்தமுறுகின்றதெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சிவபெருமானே நடுக்கத்துக்கு ஏதுவாகின்றனர். சிவபெருமான் ஆளுபவராதலின், அவர் உலகம் அனைத்தும் நடுக்கமுறுதற்குக் காரணமாகின்றனர். அவர் ஆளும் பயத்தினால் நாமெல்லாம் நிஷித்தகன்மங்களில் விமுகராய், விகிதகன்மங்களிற் பிரவர்த்திக்கின்றேம். இவரது சாசனபயத்தினால் வாயுமுதலியவும் தத்தம் அதிகாரங்களிற் பிரவர்த்திக்கின்றன. இவ்வுண்மையை,

பீஷாஸ்மாத்வாத: பவதே (தைத். உ. அ. க)

“இவர்க்குப் பயந்தே வாயு வீசுகின்றது'' என்னுஞ் சுருதி கூறுகின்றது. சிவபெருமான் கல்யாணமூர்த்தியாயினும் ஆளும் இயற்கையினால் அஞ்சத்தக்கவராகின்றனர்.

தஸ்மாத்ராஜமுகம் பீஷ்மம் பவதி |

(தைத். பிரா. ௩. அ. உ௩. அகூ)

“ஆகலின் அரசருடைய முகமானது அஞ்சத்தக்க இயல்பினது'' எனச் சுருதி கூறுகின்றது.

ஆகலின், சுவாமியாதலின் சமஸ்த உலகபயத்துக்கும் காரணர் சிவபெருமானே. (௪௦)

## (க௦) ஜ்யோதிரதிகரணம்.

---

தகராதியில் உபாசிக்கற்பாலராகக் கூறப்பட்ட சிவபெருமான் (முத்தர்களால்) எய்தற்பாலர் என்றுரைப்பதற்கு மற்றோர் அதிகரணம் ஆரம்பிப்பதாயிற்று.

ஜ்யோதி ர்தர்சனாத் (க. ௩. ௪க)

**(௧௦௬) *சோதி சிவபெருமான்; (அங்ஙனங்) காணப் படுதலின்.**

ஏஷ ஸம்ப்ரஸாதோ(அ)ஸ்மாச் ச்சரீராத்ஸமுத்தாய பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே ஸ உத்தம: புரு ஷ: (சாந். அ. ௮. ௪)

"(இந்த ஆன்மா எனப்படும்) சம்பிரசாதன் இச்சரீரத்தினின்றெழுந்து, பரஞ்சோதிரூபத்தை அடைந்து தன் சொரூபத்தோடு ஆவிர்ப்பாவமாகின் றனன், அவன் உத்தமபுருஷன்" எனச் சாந்தோக்கியத்துள்ள பிரஜாபதி வித்தையிற் போந்த சுருதியே விஷயம்.

ஈண்டு முக்தரால் அடையற்பாலதாகக் கேட்கப்படும் பரஞ்சோதி சிவ பெருமானு? மூர்த்தியான்மாவாகிய நாராயணரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உத்தமபுருஷர் என்றது முத்தர்களால் அடையற்பால தாம் பரஞ்சோதி புருஷோத்தமர் என அறியப்படலானும், புருஷோத் தமசப்தம் ரூடத்தினல் நாராயணரென அறியப்படலானும், அவரே உத்தம புருஷசப்தத்தினுற் சமாநாதிகரண பரஞ்சோதியராம் எனின்,

(சித்தாந்தம்) முத்தர்களால் அடையப்படும் பரஞ்சோதி ஈண்டுச் சிவ பெருமான் எனப் பெயர்கொண்ட பரப்பிரமம்; இவரை அடைந்தவர்க்குப் புநராவர்த்தியில்லையாகக் காணப்படலான், பரப்பிரமத்துக்கு வேருக ஒரு வரை அடைபவர்க்கு ஆவிருத்தியில்லை என்பது எங்ஙனம் உசிதமாகும்? புருஷோத்தமசப்தம் நாராயணர்க்கு ரூடியினுற் செல்வதேனும், அது புரு ஷர்களுக்கெல்லாம் (ஆன்மாக்களுக்கெல்லாம்) அதிகமாதலின் (மேலதாத லின்)பிரமத்துக்கே செல்லும்; பிரமமேத சங்கற்பத்தில்

வேஷிதவ்யம் புருஷோத்தம:।

"புருஷோத்தமரை அடைய" என்பதிற் புருஷோத்தமசப்தம் அடையற் பாலதாகிய பரப்பிரமத்துக்குப் பரியாயமாகப் பிரயோகிக்கப்படுதலின். ஆகலின், பரப்பிரமமே பரஞ்சோதி. (௪௧)

## (௧௧) அர்த்தாந்தரத்துவாதிவியபதேசாதிகரணம்.

---

ஆகாஶோ(அ)ர்த்தாந்தரத்வாதிவ்யபதேஶாத் (க. ந. ௪௨)

---

*பண்டாலினீழலானைப்பரஞ்சோதியை
விண்டார்கடம்புரமூன் றுடனேவேவக்
கண்டானைக்கடிகமழ்கோழம்பங்கோயிலாக்
கொண்டானைக்கூறுமினுள்ளங்குளிரவே.
(திருக்கோழம்பம், ஞான, ௬)

**(௧௦எ) *ஆகாயம் (சிவபெருமான்), (அவர்) பிறவஸ்து முதலியவற்றுக்கு வேருகக் கூறப்படலான்.**

ஆகாஶோ ஹ வை நாம நாமரூபயோர்நிர்வஹிதா தே யதந்தரா தத்ப்ரஹ்ம ததம்ருதம் ஸ ஆத்மா (சாங். அ. ௧௪. ௧)

"ஆகாயம் எனப்பட்டவர் நாமரூபம் படைப்பவர், இவையனைத்தும் அடங்கியிருக்கப்பெறுவது பிரமம், அது அமிர்தம் (சிவம்), அது (பரம) ஆன்மா", என்னுஞ் சாந்தோக்கிய சுருதியே ஈண்டு ஆராயக்கிடந்த விஷயம்.

நாமரூபத்தைப் படைப்பதாகக் கேட்கப்பட்ட ஆகாசம் சிவபெருமானு? (பூத) ஆகாயமா? ஆன்மாவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சர்வபூதங்களுக்கும் வான் இடங்கொடுத்தலின் நாமரூபத்தைப் படைத்தல் வானத்துக்கு நேர்தலின், பூதாகாயமே ஈண்டு ஆகாசம். இன்றேல் ஆன்மா;

அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி।
(சாந். ஸ. ௩. ௨)

"நான் இந்தச் சீவான்மாவோடு கூடப் பிரவேசித்து நாமரூபத்தை வெளிப்படச் செய்வேன்" என்னுஞ் சுருதியினல் அச்சீவான்மாவுக்கு நாமரூபம் வெளிப்படற்குரிய சம்பந்தம் காணப்படலான் என்று இங்ஙனம் கூறின்,

(சித்தாந்தம்) கூறுதும். சிவபெருமானே ஈண்டு ஆகாயசப்தத்தினல் நாமரூபத்துக்குக் கர்த்தாவாகக் கேட்கப்படுகின்றனர்; அமிர்தத்துவ முதலிய அவர் குணங்கள் கூறப்படலான். ஆகாசத்துக்கேனும் ஆன்மாவுக்கேனும் அமிர்தத்துவாதி குணம் எய்தாது. ஆகலின், சிவபெருமானே ஆகாயசப்தப்பொருள். (௪௨)

(ஆக்ஷேபம்) தத்த்வமஸி (சாந். ஸ. அ. எ)

"அது நீயாகின்றனை" என்னும் வாக்கியத்தில் ஐக்கியம் கூறப்படுதலின், சிவபெருமான் பிரத்தியக்கான்மாவினின்று வேறல்லர் என ஆக்ஷேபிப்பின்

(சமாதானம்) சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸுஷுப்த்யுத்க்ராந்த்யோர்பேதேந (க. ௩. ௪௩)

**(௧௦அ) சுழுப்தியினும் உற்கிராந்தியினும் (அவர்) வேறெனக் (கூறப்படலான்).**

ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சந வேத நாந்தரம் (பிரு. ஸ. ௩. ௨௧)

*திருச்சிற்றம்பலம்.

ப்ராஜ்ஞேநாத்மநாஸம்பரிஷ்வக்த உத்ஸர்ஜந்யாதி (பிரு. ௬. ௩. ௩௫)

"பிராஞ்ஞனாகிய (பரம) ஆன்மாவினாலே தழுவப்பட்டு ஆன்மா அகத்தும் புறத்துமுள்ள யாதும் அறியாது" எனவும், "பிராஞ்ஞனாகிய (பரம) ஆன் மாவினால் இவரப்பெற்று ஆன்மா (தேகத்தை) விட்டுப் போகின்றது" எனவும் முறையே சுழுத்தியினும் உற்கிராந்தியினும் ஆன்மா பாகியாந்தர விஷய ஞானசூன்னியமாய் இருக்குங் காலத்திலேயே சிவபெருமான் அறிவு மாத்திரையாய் ஆன்மாவுக்கு வேறாயிருக்கின்றனர் எனக் கூறப்படலான், சிவபெருமான் அவ்வான்மாவுக்கு வேறுயுள்ளார். ஈண்டு அவர் ஆகாயசப்த வாச்சியர். (௪௩)

பத்யாதி ஶப்தேப்ய: (௧. ௩. ௪௪)

## (௧௦௯) பதிமுதலிய பதங்களுண்மையின்.

ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந ஸர்வஸ்யாதிபதி: ஸ ந ஸாதுநா கர்மணா பூயாந்நோ ஏவாஸாதுநா கநீயாநேஷ ஸர்வேஶ்வர ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால:।

(பிரு. ௬. ௪. ௨௨)

"அவர் எவற்றையும் வசீகரிப்பவர், அனைத்துக்கும் ஈசானர், அனைத்துக் கும் அதிபதி, அவர் நற்கன்மங்களால் உயர்வதும் இல்லை, தீக்கன்மங்களாலே தாழ்வதுமில்லை, இவர் சர்வேசுவரர், இவர் பூதாதிபர், இவர் பூதபாலர்" என்னும் சுருதியில் ஆன்மாவைத் தழுவியிருக்கும் பிராஞ்ஞருக்குக் கூறப் படும் பதிமுதலிய சப்தங்களினால் இந்தச் சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறுயுளர் என்பது பெறப்படுகின்றது.

பஶூநாம் பதயே வ்ருக்ஷாணாம் பதயே (யசுர். ௪. ௫. ௨)

"பசுக்களுக்குப் பதி, விருக்ஷங்களுக்குப் பதி" என்றற்றொடக்கத்தவற்றாற் சிவபெருமான் உலகங்களுக்கு அதிபதியாயுள்ளார் என்பது யாண்டும் பிர சித்தம். ஆன்மா உலகத்துக்குப் பதியாக யாண்டும் கேட்கப்படவில்லை. ஆகலின், ஆன்மாவுக்கு அன்னியராயுள்ள இந்தச் சிவபெருமானே ஆகாய சப்த வாச்சியர். (௪௪)

# முதலாம் அத்தியாயத்து
# நான்காம் பாதம்.
## (க) ஆநுமாநிகாதிகரணம்.

முந்திய பாதத்திலே ஸ்பஷ்டாபஷ்டபிரமலிங்க வாக்கியங்கள் ஆராயப்பட்டன. இந்நான்காம் பாதத்திற் சில அஸ்பஷ்டலிங்க வாக்கியங்கள் விசாரிக்கப்படுவனவாயின,

ஆநுமாநிகமப்யேகேஷாமிதி சேந்ந ஶரீரரூபகவிந்யஸ்த க்ருஹீதேர்தர்ஶயதி ச (க. ச. க)

(ககo) சிலர்க்கு அனுமானமே கருத்தாகக் கொள்ளப்பட்டது எனக் கொளின், அன்று; சரீராகிருதியில் அடங்கியதற்கு அனுமானமுண்மையின். அங்ஙனம் சுருதியும் கூறுகின்றது.

இந்த்ரியேப்ய: பரா ஹ்யர்தா அர்தேப்யஶ்ச பரம் மந:।
மநஸஸ்து பரா புத்திர்புத்தேராத்மா மஹாந் பர:।
மஹத: பரமவ்யக்தமவ்யக்தாத்புருஷ: பர:।
புருஷாந்ந பரம் கிஞ்சித்ஸா காஷ்டா ஸா பரா கதி:॥
(கட. ௩. கo, கக)

"இந்திரியங்களுக்கு மேல் (விஷயப்) பொருள்கள்; பொருள்களுக்கு மேல் மனசு; மனசுக்கு மேல் புத்தி; புத்திக்கு மேல் ஆன்மாவாகிய மகான் (மகத்து); மகத்துக்கு மேல் அவ்வியக்தம்; அவ்வியக்தத்துக்கு மேற் புருஷன்; புருஷனுக்கு மேல் யாதும் இல்லை; அது எல்லை; அது பரமாகிய கதி" எனக் கடசாகையிற் கூறப்பட்ட சுருதியே விஷயம்.

ஈண்டு மகத்துக்கு மேலே உளதாகக் கூறப்பட்ட அவ்வியக்தம் கபில முனிவர் கூறும் பிரதானமா? இன்றேற் சரீரமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது பிரதானம்; எங்ஙனம்? மகத்து, அவ்வியக்தம், புருஷன் என்பன சாங்கியதந்திரத்திலேதான் பிரசித்தமாகலின். இவைகள் ஈண்டுச் சுருதியிற் குறிக்கப்படுதலின், சரீரத்தையுற்றுக் கூறச் சிறிதும் அவகாசமின்று. ஆகலின், ஈண்டு உரைக்கப்பட்டது சாங்கியர் பிரதானமே, சரீரமன்று எனின்,

(சித்தாந்தம்) சரீரம் என்றல் யுக்தம்; மேலே,

ஆத்மாநம் ரதிநம் வித்தி ஶரீரம் ரதமேவ து।
புத்திம் து ஸாரதிம் வித்தி மந: ப்ரக்ரஹமேவ ச।

𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌹𑌯𑌾𑌨𑌾𑌹𑍁𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌂𑌸𑍍𑌤𑍇𑌷𑍁 𑌗𑍋𑌚𑌰𑌾𑌨𑍍 ‖

(கட. ௩. ௩, ௪)

"ஆன்மாவை இரதத்துளனாகவும், சரீரத்தை இரதமாகவும், புத்தியைச் சாரதியாகவும், மனசைக் கடிவாளமாகவும் அறிதி; இந்திரியங்களைக் குதிரைகளாகவும், விஷயப்பொருள்களை அவை செல்லும் மார்க்கமாகவும் கூறுப" என (இந்திரியங்களை) வசிகரிக்கும் பொருட்டுச் சரீரத்தை இரதமாகவும் ஆன்மாவை இரதத்துளனாகவும் உருவகஞ் செய்யப்பட்ட உபாசனா உபாயங்களுள்ளே, (கவனிக்கப்படாது) எஞ்சியதாய் உருவகஞ் செய்யப்பட்ட சரீரமே அவ்வியக்தசப்தத்தினாற் கொள்ளக்கிடக்கின்றமையின். "இந்திரியங்களுக்கு மேலே உள்ளன விஷயார்த்தங்கள்" என்று தொடங்கி, "அது எல்லை; அது பரமாகிய கதி" என்பதிறுதியாக வசிகாரம் பண்ணும் பொருட்டன்றோ ஒன்றன்மேல் ஒன்றாக மேல் என்று சொல்லிப் போந்தன.

𑌯𑌚𑍍𑌛𑍇𑌦𑍍𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑌸𑍀 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍇𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 |
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌮𑌹𑌤𑌿 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑍇𑌤𑍍𑌤𑌦𑍍𑌯𑌚𑍍𑌛𑍇𑌚𑍍𑌛𑌾𑌨𑍍𑌤 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 ‖

(கட. ௩. ௧௩)

"அறிஞன் வாக்கையும் மனசையும் அடக்கல்வேண்டும்; அவற்றை அறிவாம் ஆன்மாவிலே ஒடுக்கவேண்டும்; அறிவாகிய ஆன்மாவை மகத்தாகிய ஆன்மாவிலே ஒடுக்கவேண்டும்; அவன் அந்த மகத்தைச் சாந்தமாகிய ஆன்மாவில் ஒடுக்கவேண்டும்" என்றற்றொடக்கத்தவற்றாற் சுருதியே பின்னரும் உணர்த்துகின்றது. ஆகலின், அவ்வியக்தம் என்றது ஈண்டுச் சரீரத்தைக் குறிக்கின்றது. (௧)

(ஆக்ஷேபம்) அவ்வியக்தத்தைப் பிரதானம் எனலே பிரசித்தம். இஃதெங்ஙனம் சரீரமாம்? என்று ஆசங்கிப்ப, சூத்திரகாரர் உத்தரம் இறுப்பாராயினர்.

𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌂 𑌤𑍁 𑌤𑌦𑌰𑍍𑌹𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 (௧. ௪. ௨)

(௧௧௧) **சூக்குமமாயுள்ளதே சரீரம்; அதற்குத் தகுதி உண்மையின்.**

சூக்குமம் என்பது அவ்வியக்தம். அவ்வியக்தமே சரீராவஸ்தை கொண்டு காரியத்துக்குத் தகுதியாதல்பற்றி அது அவ்வியக்தத்தினாற் குறிக்கப்படுவதெனல் யுக்தம். (௨)

சூத்திரகாரர் மற்றோர் யுக்தி கூறுகின்றனர்.

𑌤𑌦𑌧𑍀𑌨𑌤𑍍𑌵𑌾𑌦𑌰𑍍𑌥𑌵𑌤𑍍 (௧. ௪. ௩)

(௧௧௨) **அவர்க்கு ஆதீனமாகலின் (ஒவ்வொன்றும்) பயனுடைத்து.**

ஆன்மா சரீரமுதலியன சிவபெருமான் வயத்தனவாகி உபாசனையை முற்றுவித்தலின் பொருட்டுப் பயனுடையனவாயின. சிவபெருமான் அந்தரியாமியாய் ஆன்மாவோடனைத்தையும் பிரேரித்து, உபாசனைக்குத் துணையாகி, வசீகரிக்கற்பாலனவாகிய பொருள்கட்கெல்லாம் முடிந்த எல்லையாகி (இறுதியாய்) பெறற்பாலராகலின், "அவர் பரமாகிய கதி" எனப்படுகின்றனர். ஆகலின், அவ்வியக்தம் ஈண்டுச் சரீரமே. (ரு)

ஜ்ஞேயத்வாவசநாச்ச (க. ச. ச)

(ககரு) அறியற்பாலதாகக் கூறுமையானும்.

ஈண்டுச் சாங்கியர் பிரதானமே அவ்வியக்தமாயின், அது ஓர் ஞேயப்பொருளாகக் கூறப்பட்டிருக்கும். அங்ஙனம் ஒன்றும் (கூறப்பட) வில்லை. ஆகலின், அது கபிலர் அவ்வியக்தம் அன்று. (ச)

பிரதானம் ஓர் ஞேயப்பொருளாகக் கூறப்பட்டதென்னும் ஆசங்கையைச் சூத்திரகாரர் பரிகரிப்பாராயினர்.

வததீதி சேந்ந ப்ராஜ்ஞோ ஹி ப்ரகரணாத் (க. ச. ரு)

(ககச) (அப்படிப்பட்டதொன்றைச் சுருதி) கூறுகின்றதெனின், அன்று; எதனாலெனின், (அது) அறிஞனன்றோ; பிரகரணத்தினால்.

(ஆக்ஷேபம்)

அசப்தமஸ்பர்சமரூபமவ்யயம் ததாऽரஸம் நித்யமகந்தவச்ச யத்। அநாத்யநந்தம் மஹத: பரம் த்ருவம் நிசாய்ய தம் ம்ருத்யுமுகாத் ப்ரமுச்யதே (கட. ரு. கரு)

"சப்தமிலதாயும், பரிசமிலதாயும், ரூபமிலதாயும், அவ்வியமாயும், இரசமிலதாயும், நித்தியமாயும், மணமிலதாயும், அநாதியனந்தமாயும், மகத்துக்கு மேலாயும், வேறுபடாததாயும் இருப்பதொன்றை அறிந்து மரணவாயினின்று வீடுறுகின்றனன்" என அடுத்துவந்த சுருதியினாற் பிரதானம் அறியற்பாலதொன்றாகக் கூறப்பட்டதெனின்,

(உத்தரம்) அது யுக்தம் அன்று;

யச்சேத்வாங்மநஸீ ப்ராஜ்ஞ: (கட. ரு. கரு)

"அறிஞன் வாக்கையும் மனசையும் அடக்கல்வேண்டும்" என அறிஞனைப் பற்றியே பிரகிருதவிஷயமிருந்தமையின். ஆகலின் அவ்வியக்தம் சரீரமே. (ரு)

பிரதானத்தின் பிரசங்கமே இல்லை என்று கூறுகின்றனர்.

த்ரயாணாமேவ சைவமுபந்யாஸ: ப்ரச்நச்ச (க. ச. சு)

(ககரு) மூன்றுக்குமே இங்ஙனம் உபந்நியாசமும் பிரசினமும்.

இப்பிரகரணத்தில் உபாசியம், உபாசனம், உபாசகன் என்னும் மூன்றும் அறியற்பாலன என உபந்நியாசமும் பிரசினமும் போந்தன; பிரதானுதிக்கன்று. எங்ஙனமெனின்,

தம் து³ர்த³ர்ஶம் கூ³ட⁴மநுப்ரவிஷ்டம் கு³ஹாஹிதம் க³ஹ்வரேஷ்ட²ம் புராணம்। அத்⁴யாத்மயோகா³தி⁴க³மேந தே³வம் மத்வா தீ⁴ரோ ஹர்ஷஶோகௌ ஜஹாதி॥ (கட. உ. கஉ)

"அறிஞனவன் அத்தியான்மயோகவாயிலாகக் காண்டற்கரியரும், மறைவினரும், கூடப்பிரவேசித்தவரும், குகைக்குள் மறைந்தவரும், குகைக்கணமர்ந்தவரும், பழையருமாகிய (மகா) தேவரை அறிந்து இன்ப துன்பத்தினின்று வீடுறுகின்றனன்" என்றற்றொடக்கத்தனவே இந்த அதிகரணத்திலுள்ள உபந்நியாசம்.

யேயம் ப்ரேதே விசிகித்ஸா மநுஷ்யே அஸ்தீத்யேகே நாயமஸ்தீதி சைகே। ஏதத்³வித்³யாமநுஶிஷ்டஸ்த்வயாஹம் வராணாமேஷ வரஸ்த்ருதீய꞉ (கட. க. உ௦)

"மனிதன் இறந்தபோது அவன் இருக்கின்றனன் எனச் சிலரும், அவன் இலன் என்று வேறு சிலரும் கூறுதலின், சந்தேகம் உண்டாகின்றது; இதனை நீவிர் உணர்த்த, யான் அறிய விரும்புகின்றேன்; நான் கேட்கும் வரங்களுள்ளே இது மூன்றுவது வரம்" என்றும்,

அந்யத்ர த⁴ர்மாத³ந்யத்ராத⁴ர்மாத³ந்யத்ராஸ்மாத்க்ருதாக்ருதாத்।
அந்யத்ர பூ⁴தாச்ச ப⁴வ்யாச்ச யத்தத்பஶ்யஸி தத்³வத³॥

(கட. உ. கச)

"தர்மத்துக்கு வேறுபட்டதும், அதர்மத்துக்கு வேறுபட்டதும், காரணகாரியமிலாததும், இறப்பெதிர்விலாததுமாயுள்ள எதை நீர் பார்க்கின்றீரோ, அதை எனக்குச் சொல்க" என்னுஞ் சுருதிகளிற் பிரசினம் அடங்கிற்று. ஆகலின் பிரகரணசம்பந்தமின்மையானும் சரீரமே அவ்வியக்தம், பிரதானம் அன்று. (௯)

இன்னும் மற்றோர் இலிங்கமும் உளதென்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

மஹத்³வச்ச॥ (க. ௪. எ)

(கக௬) மகத்துப் போலவும்.

பு³த்³தே⁴ராத்மா மஹாந்பர꞉ (கட. ௩. க௦)

"புத்திக்கு மேல் ஆன்மாவாகிய மகத்து" என்னுஞ் சுருதியில் மகத்து என்றது சாங்கியர்க்குச் செல்லாதவாறு போல, அவ்வியக்தமும் பிரதானம் அன்றென நிர்ணயிக்கப்பட்டது. (எ)

## (உ) சமசவததிகரணம்.

(ஆக்ஷேபம்) இந்தப் பிரகரணசம்பந்தமாகப் பிரதானத்தையுற்றுப் பேசுதற்கு அவகாசமின்றேல் ஆகுக; பிறிதோரிடத்திற் பிரதானமே காரணமாகக் கேட்கப்படுகின்றதென்பதை ஆக்ஷேபித்து இந்த அதிகரணம் ஆரம்பிக்கற்பாலதாயிற்று.

சமஸவதவிஶேஷாத் (க. ச. அ)

(கள) சமச(பாத்திர)ம் போல ; பகுத்துக் கூறும் குறியின்மையின்.

அஜாமேகாம் லோஹிதஶுக்லக்ருஷ்ணாம் பஹ்வீ: ப்ரஜா: ஸ்ருஜமானாம் ஸரூபா:। அஜோ ஹ்யேகோ ஜுஷமாணோ(அ)னுஶேதே ஜஹாத்யேனாம் புக்தபோகாமஜோ(அ)ன்ய: (சுவே. ச. ரு)

"செந்நிறமுடையதாய், வெண்ணிறமுடையதாய், கருநிறமுடையதாய், ஏகரூபமாய் அநேக பிரஜைகளைப் பிறப்பிப்பதாயுள்ள பிறவாப் (பெண்) வஸ்து ஒன்றுளது; அதனை விரும்பி அதனோடு கிடக்கும் பிறவாத மற்றோர் (ஆண்) வஸ்து ஒன்றுள்ளது; இன்பம் அனைத்தையும் அனுபவித்து அதனை விடுத்துள்ள மற்றோர் பிறவாத வஸ்து ஒன்றுள்ளது" என்னும் சுவேதாசுவதரசுருதியே விஷயம்.

ஈண்டுச் சமஸ்தப் பிரபஞ்சகாரணமாகிப் பிறப்பிலதாதலின் அஜா என்று கூறப்படுவது சாங்கியர் பிரகிருதியா? இன்றேற் பராசத்தியா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சாங்கியர் கூறும் பிரகிருதி எனலே யுக்தம்; அஜா என்பது பிறப்பிலாததொன்றை உணர்த்தலானும், சமஸ்தப் பிரஜைகளுக்கும் காரணமாயிருத்தலானும், செம்மை, வெண்மை, கருமை என்னும் முக்குணங்கள் அறியப்படலானும். இவ்வியற்கை மற்றொன்றற்குக் கோடல் யுக்தம் அன்றும் என ஆக்ஷேபிக்க,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. (சாங்கிய) தந்திரத்திற் கூறப்பட்ட பிரகிருதியைக் காரணமாகக் கூறல் கூடாது, பிறப்பிலாமைமாத்திரத்தால் அதனைப் பிரகிருதி எனக் கோடல் யுக்தமன்று;

அர்வாக்பிலஶ்சமஸ: (பிரு. ச. உ. ௩)

"கீழ்ப்புறத்துவாரமுள்ள சமசபாத்திரம் என்ற விடத்து விசேஷ (ஹேது) விலதாய்

ஐதஷ்தஜ்ஜிரஃ (பிரு. ச. ௨. ௩)

"இது அதன் தலை" என்றவிடத்து எங்ஙனம் பேதம் கூறப்படுகின்றதோ, அங்ஙனமே ஓர் காரண மொழியால் ஓர் விசேஷ ஞானம் உதிக்கவேண்டுமாயின், அதற்கு மற்றோர் விசேஷணம் வேண்டப்படுகின்றது. ஆகலின், அது சாங்கியத்துப் பிரகிருதி அன்று. (அ)

சாங்கியர் பிரகிருதிக்கு வேறாய பிரகிருதி எவ்வியல்பிற்றென்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஜ்யோதிருபக்ரமாது ததா ஹ்யதீயத ஏகே (க. ச. ௯)

(௧௧அ) அங்ஙனமே சிலர் ஜ்யோதி என்று தொடங்கிப் படிக்கின்றனர்.

ஜ்யோதி என்றது சிவபெருமான். இந்த அஜாப் பிரகிருதி சிவபெருமானைக் காரணமாகக்கொண்டதாகக் கூறப்படுகின்றது. அங்ஙனம் தைத்திரீயர் சிலர் சிவபெருமானைக் காரணமாகக் கொண்டதுதான் பிரகிருதி என அதன் சொரூபத்தைப் படிக்கின்றனர்.

அணோரணீயாந் மஹதோ மஹீயாந் (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௯)

"அணுவுக்கணுவாய் மகத்துக்கு மகத்தாய்" என்று சிவபெருமானிலே உபக்கிரமித்து,

ஸப்த ப்ராணாஃ ப்ரபவந்தி தஸ்மாத் (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௯)

"பிராணன்கள் ஏழும் இவரிலே நின்று பிறக்கின்றன" என்றற்றொடக்கத்தவற்றாற் பிரபஞ்சம் சிவபெருமானினின்று உற்பத்தியாய அவ்வியல்பினையுடையதென்று கூறுமிடத்து, அஜா (பிறவாத) வஸ்து ஒன்றுளது என்று படிக்கின்றனர். அவரை உணர்த்துமாறுபற்றி, இந்த அஜாப் பிரகிருதி சிவபெருமானைக் காரணமாய்க் கொண்டதென எவ்வாற்றானு நிச்சயிக்கப்படுகின்றது. ஆகலின், சாங்கியத்திற் சித்தித்த பிரகிருதி எனல் யுக்தம் அன்று. (௯)

(ஆக்ஷேபம்) இந்தப்பிரகிருதி சிவபெருமானைக் காரணமாய்க் கொண்டதுபற்றி, அது அவருக்குக் காரியமாய்க் கூறப்படுகின்றது. (சிவபெருமானைக் காரணமாகக் கொண்ட) அவ்வியல்பினதாகிய இதனைப் (பிரகிருதியை) அஜா என எங்ஙனம் கூறலாம்? என ஆசங்கித்து,

சூத்திரகாரர் கூறுவாராயினர்.

கல்பநோபதேசாச்ச மத்வாதிவதவிரோதஃ (க. ச. ௧௦)

(௧௧௯) கற்பனை உபதேசிக்கப்படலானும் விரோதமின்று, மது முதலியவற்றிற் போல.

கற்பனை என்றது சிருட்டி.

ஃஜாம்ஸி யஜ்ஞாஃ க்ரதவோ வ்ரதாநி பூதம் பவ்யம் யச்ச வேதா வதந்தி। அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத்தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:। மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்॥

(சுவே. ச. ௯)

"சந்தசுகளும், யஞ்ஞங்களும், கிரதுக்களும், விரதங்களும், இறப்பும், எதிர்வும், வேதஞ் சொல்லிய யாவுமாகிய இஃதனைத்தையும் எதன்பானின்று பிறப்பித்தனரோ, அதில் மற்றொருவன் மாயையாற் கட்டுண்டான்; பிரகிருதியை மாயை என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக" என்னும் வாக்கியத்திற் சிருட்டி கூறப்பட்டமையின், பிரகிருதியை அஜா என்றும், சிவபெருமானால் ஆக்கப்பட்ட காரியம் என்றும் கூறலிற் போதரும் விரோதம் யாதுமில்லை. இச்சுருதியின் பொருள் வருமாறு:—

பிரளயகாலத்திலே நாமரூபமொழிந்து நிற்கும் அசித்தாகிய மாயையும் மகேசுவரரிடத்துச் சரீரமாகிச் சூக்குமரூபமாயிருக்கின்றமையின் அஜா எனப்படும்; சிருட்டிகாலத்திலே நாமரூபத்தோடிசைந்திருத்தலாற் சிவபெருமானால் ஆகிய காரியமுமாம். எங்ஙனமெனின், படைப்புக்காலத்திலே வசு முதலிய தேவர்கள் யார்க்கும் ஆதித்தியன் போக்கிய பண்டாரசாலையாயிருந்தமையின், அவன் மதுவாயும் காரியமாயுமுளான்;

அஸௌ வா ஆதித்யோ தேவமது (சாந். ௩. ௧. ௧)

"சூரியன் தேவர்கட்கு மதுவாயினன்" என்று சுருதி கூறுகின்றமையின்.

நைவோதேதா நாஸ்தமேதைகல ஏவ மத்யே ஸ்தாதா।

(சாந். ௩. ௧௧. ௧)

"அங்கிருந்து அவன் மேலே எழுந்தபோது அவன் உதிப்பதுமில்லை, அஸ்தமிப்பதுமில்லை, அவன் ஒருவனே மத்தியில் நிற்கின்றனன்" என்றும் சுருதி கூறலின், பிரளயகாலத்திலே அவ்வாதித்தியன் மதுமொழிபோன்ற மற்ற மொழிகளாற் கூறொணாத அத்தியந்த சூக்குமரூபமாயிருத்தலிற் காரியமாகான். இங்ஙனம் மதுவித்தையிற் கூறப்படுகின்றது. இங்ஙனம் பிரகிருதியை அஜா என்றும், (அது) சிவபெருமானைக் காரணமாய்க் கொண்டதென்றும் கூறலின் எய்தும் விரோதம் யாதும் இல்லை. ஆகலின், அஜா என்றது தாந்திரிக சாங்கியர் கூறும் பிரகிருதி அன்று. (௧0)

## (ரு) சங்கியோபசங்கிரகாதிகரணம்.

(ஆக்ஷேபம்) பிறிதோரிடத்துச் சாங்கியர் தந்திரசித்தமாயுள்ள இருபத்தைந்து தொகையினவாம் தத்துவங்கள் சுருதியிற் கூறப்படுகின்றன என்றதை ஆசங்கித்து, அதனைப்பரிகரிக்குமாறு மற்றோர் அதிகரணம் எழுந்தது.

ந ஸம்வெ்யாவஸம்஗்ரஹாதபி நாநா ஹாவாததிரெகாச்ச|

(க. ச. கக)

**(கஉ௦) சங்கியை சங்கிரகிக்கப்பட்டமையானும் அன்று, தத்துவங்கள் நானாவகையாயுண்மையானும், அதிகம் உண்மையானுமாம்.**

யஸ்மிந் பஞ்ச பஞ்ச ஜநா ஆகாஶஶ்ச ப்ரதிஷ்டித:|
தமேவ மந்ய ஆத்மாநம் வித்வாந் ப்ரஹ்மாம்ருதோ ம்ருதம்||

(பிரு. சு. ச. கஎ)

"ஆகாயமும் ஐவைந்து சனங்களும் எவரிலே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனவோ, அவரைப் (பரம) ஆன்மா என நினைக்கின்றேன்; அமிர்தமாயுள்ள பிரமத்தை அறிந்து நான் அமிர்தனுகின்றேன்" என்னும் சுருதியே விஷயம்.

இச்சுருதியிற் கண்ட ஐவைந்து சனம் என்னும் பதார்த்தஞ் சாங்கிய சித்தமாயுள்ள தத்துவங்களா? இன்றேற் சுருதி சித்தமாயுள்ள தத்துவங்களா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சாங்கிய சாஸ்திரத்திலே இருபத்தைந்து சங்கியை பிரசித்தமாதலினுலும், அத்தொகை ஈண்டுத் தோற்றுதலானும் ஐவைந்து சனம் என்றது எப்பிரகாரத்தானும் அவைகளையே குறிக்கத்தக்கன என ஆக்ஷேபிப்பின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஈண்டுப் பஞ்சபஞ்ச என்றற்றொடக்கத்த மந்திரத்திலே, இருபத்தைந்து என்னும் தொகை "பஞ்ச பஞ்ச" எனச்சுருக்கமுறக் கூறப்படினும், அவை தந்திரசித்தமாயுள்ள தத்துவங்களன்று. "யஸ்மிந்" (பிரு. சு. ச. கஎ) (எவரிலே) என்றற்றொடக்கத்த மந்திரபாகத்தினுற் குறிக்கப்பட்ட சிவபெருமானிலே அவைகள் (தத்துவங்கள்) ஆதாரமுற்றனவாக அறியப்படுகின்றது; (அவைகள் என்றது உபநிடதத்துக் கூறப்பட்ட தத்துவங்கள்); இவற்றினின்று வேறுற்றமையானும், ஆகாயத்தைத் தனித்துக் கூறினமையின் தத்துவம் அதிகப்படுதல்பற்றியுமாம். தத்துவ அதிரேகம் என்றது தத்துவங்களின் அதிகத்தொகை. ஆகலின்,

ஈண்டு இருபத்தைந்து தத்துவத்தொகை குறிக்கப்பட்டதன்று. மேலும், இருபத்தைந்து என்னுந் தொகையுங் கூறுதல் யுக்தமன்று.

திக்ஸம்ஂவெ்ய ஸஂஜ்ஞாயாஂ (பா. வி. உ. க. ருo)

"திக்சங்கியையாயுள்ள சம்ஞையில்" என்னுஞ் சூத்திரவிதிப்படி, இது சம்ஞாவிஷயமாயுள்ள சமாசம். ஆகலின், ஐந்து சனம் என்றது ஐவைந்து சனங்களைச் சுட்டியது; "சப்த சப்த" ருஷிகள் என்றாற் போல.

ஆகலின் சாங்கியதத்துவப் பிரசக்தி இல்லை. (கக)

பின் அவை எவை எனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

வ்ராணாதயோ வாக்யஶெஷாத் (க. ச. கஉ)

(கஉக) பிராணாதிகள் வாக்கியசேஷத்தினால்.

வ்ராணஸ்ய வ்ராண முத சக்ஷுஷஸ்சக்ஷு ருதஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரமந்நஸ்யாந்நம் மநஸோ யெ மநோ விதுஃ (பிரு. சு. ச. கஅ)

"பிராணனிற் பிராணனையும், கண்ணிற் கண்ணையும், காதிற் காதையும், அன்னத்தில் அன்னத்தையும், மனத்தில் மனத்தையும் எவர்கள் அறிகின்றனரோ" என்னும் வாக்கியசேஷத்தினாற் பஞ்சசனம் எனப்பட்டவை பிராணாதி ஐந்து இந்திரியங்களாம் என அறியப்படுகின்றது. இதனாலுஞ் சாங்கியதத்துவங்கள் ஈண்டுக் கூறப்படவில்லை. (கஉ)

பின்னரும் நியாயம் கூறப்படுகின்றது.

ஜ்யோதிஷைகெஷாமஸத்யந்நெ (க. ச. கங)

(கஉஉ) சிலர் கூறுமாறு சோதியினால், அன்னமில்லாவிடத்து.

சிலர் என்றது காண்ணுவர் மேற்று.

அந்நஸ்யாந்நஂ (பிரு. சு. ச. கஅ)

"அன்னத்தின் அன்னம்" என்னும் சப்தம் இல்லாவிடத்து,

தத்தெவா ஜ்யோதிஷாஂ ஜ்யோதிஃ (பிரு. சு. ச. கசு)

"சோதிக்குட் சோதியாயினாரைத் தேவர்கள் வழிபடுகின்றார்" என்னும் சுருதியுபக்கிரமத்தின் முதலாவது சோதிசப்தத்தினாற் பஞ்சசனம் என்னும் இந்திரியங்கள் அறியப்படுகின்றன. சோதிக்குட் சோதி என்றும், பிரகாசத்துட் பிரகாசம் என்றும் பிரமத்தைக் கூறிய பின்னர், ஐவைந்து சனம் என்று கூறப்படுதலின், இவை பிரகாசிக்கும் ஐந்து இந்திரியங்கள் என்று அறியப்படுகின்றது. (கங)

காரணத்வேந சாகாஶாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே:।

(க. ச. கச)

(கஉரு) ஆகாசமுதலியவற்றுக்குக் காரணமாயிருத்தலானும், குறிக்கப்பட்டபடி கூறப்படலானும்.

அஸதே³வேத³மக்³ர ஆஸீத் (தைத். உ. எ. க)

தத்³தே⁴த³ம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்। (பிரு. ரு. ச. எ)

"அசத்துத்தானே முதற்கண் இருந்தது; இது மெய்யாய் அவ்வியாகிருதமாயிருந்தது" என்றற்றொடக்கத்த வேதாந்தவாக்கியங்கள் அனைத்தினும் பேதம் புலப்படாமையின்,

ஆத்மா வா இத³மேக ஏவாக்³ர ஆஸீத் (ஐத. க. க)

"(பரம) ஆன்மா ஒன்றுமாத்திரமே முதற்கண் இருந்தது" என்னும் விசேஷவாக்கியத்தினாற் குறிக்கப்பட்டதே கூறப்படலாற் சாங்கியர்களுடைய அவ்வியாகிருதம் கொள்ளப்படமாட்டாது. அங்ஙனமே விசேடித்த வாக்கியங்களிற் காணப்பட்ட இந்திரியங்களே கூறப்பட்டமைபற்றிச் சாங்கியர் தத்துவங் கூறப்பட்டதன்று. (கச)

ஈண்டுச் சாங்கியதத்துவம் எங்ஙனம் பொருந்தாதெனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸமாகர்ஷாத் (க. ச. கரு)

(கஉச) தொடர்ச்சியுண்மையான்.

ஸோ(அ)காமயத ப³ஹு ஸ்யாம் (தைத். உ. சு)

(எங்ஙனம்) "நான் அநேகமாக ஆவேன் என அவர் விரும்பினர்" என்றவிடத்து, அவர் என்பது தொடர்ச்சிபற்றி முற் கூறப்பட்ட சர்வஞ்ஞரைக் குறிக்கின்றதோ,

அஸதே³வேத³மக்³ர ஆஸீத் (தைத். உ. எ. க)

எங்ஙனம் "அசத்துத்தானே முதற்கண் இருந்தது" என்றவிடத்து, தொடர்ச்சிபற்றி அசத் என்றது முற் கூறப்பட்ட அவ்வியாகிருதத்தைக் குறிக்கின்றதோ,

ஸ ஏஷ இஹ ப்ரவிஷ்ட ஆநகா²க்³ரேப்⁴ய: (பிரு. ரு. ச. எ)

எங்ஙனம் "அவர் நகத்து நுனிவரையும் ஈண்டுப் பிரவேசித்தார்" என்றவிடத்து, தொடர்ச்சிபற்றி அவர் என்றது அவரையே குறிக்கின்றதோ, அங்ஙனமே ஈண்டுந் தொடர்ச்சிபற்றிப் பஞ்சஜனம் என்றது இந்திரியத்தைக் குறித்ததாமெனக் கோடலில் விரோதமில்லை. சாங்கியதத்துவ ஆசங்கைப் பிரசங்கம் நீங்கிற்று. (கரு)

பின்னர்ச் சூத்திரகாரர் சிவபெருமான் ஆன்மாவுக்கு வேருவரெனக் கூறுவாராயினர்.

### (ச) ஜகத்வாசித்துவாதிகரணம்.

---

ஜமஹாவிஷயாஜ (க. ச. கசு)

(கஉரு) (அது) ஜகத்தைச் சுட்டுதலின்.

ஸ்ரஹ தெ ஸ்ரவாணி (கௌஷீ. ச. க)

"பிரமத்தை உனக்குப் போதிப்பேன்" என்று தொடங்கி,

யொ வெெ ஙாலாக ஊதெஷாං வுருஷாணாං கதூா யஸ்ய வெெ தகூவ ஸ வெெ வெஜிதவ்யஃ (கௌஷீ. ச. கஅ)

"பாலாகி, இந்தப் புருஷர் எல்லார்க்குங் கர்த்தாவாயினரோ, இது எவரது கர்மமாயிற்றே, அவர் அறியற்பாலர்" என்றற்றொடக்கத்த கௌஷீதகிப் பிராம்மணோபநிடத சுருதியே விஷயம்.

ஈண்டு அறியற்பாலராகக் கூறப்பட்டவர் சிவபெருமானு? ஆன்மாவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ய ஊவெஷ ஆஜிதெ்ய வுருஷஸ்தவொஹ உவாஸெ; ய ஊவெஷ வஜெ்ரவிவுருஷஃ; ய ஊவெஷ விஜ்ஷுதி;
(கௌஷீ. ச. உ, ரு, ச)

"எந்தப்புருஷர் ஆதித்தியனில் இருக்கின்றுரோ, அவரையே வழிபடா நின்றேன்; எவர் சந்திரனிலோ, எவர் மின்னலிலோ" என்பவற்றில் முன் வாக்கியத் தொடர்ச்சியினுற் பிரகிருத ஆதித்தியன் முதலிய அனைத்துக்குங் கர்த்தாவாயிருத்தல் ஆன்மாவுக்கு உளதாதலினுலும், கர்மசப்தம் அபூர்வத்தைக் குறிக்குமாதலானும், கர்மசம்பந்தம் அனைத்தையும் விடுத்து நின்ற சிவபெருமானுக்காகாமையின், அந்த அபூர்வம் ஆன்மாவுக்குப் பொருந்துமாமெனின்,

(சித்தாந்தம்) கர்மம் என்னும் சப்தமும் இது என்னும் மொழியும் சமானுதிகரணத்திருத்தல்பற்றியும், செய்யப்படுகிறதென்னுந் தொழில்பற்றியும் உலகம் குறிக்கப்படுகின்றமையின், உலகத்தைக் காரியமாய்க்கொண்ட சிவபெருமானே ஈண்டுப் பிரதிபாதிக்கப்பட்டனர். (கசு)

சூத்திரகாரர் பின்னர் ஆசங்கித்துப் பரிகரிக்கின்றனர்.

ஜீவமுவ்யவ்ராணலிංஹாஜெதி செதூஙுாவ்யாதஂ (க. ச. கஎ)

(௧௨௯) **ஆன்மா முக்கியப் பிராணன் என்பவற்றின் லிங்கங்கள் உண்மையாலெனின், அன்று; அது வியாக்கியானஞ் செய்யப்பட்டது.**

தத்3யதா2 ஶ்ரேஷ்டீ2 ஸ்வைர்பு4ங்க்தே யதா2 வா ஸ்வா: ஶ்ரேஷ்டி2நம் பு4ஞ்ஜந்த்யேவமேவைஷ ப்ரஜ்ஞாத்மைதைராத்மபி4ர்பு4ங்க்தே ஏவமேவைத ஆத்மாந ஏதமாத்மாநம் பு4ஞ்ஜந்தி॥

(கௌஷீ. ௪. ௨௦)

"எங்ஙனந் தனிகன் இனத்தாரோடு உண்கின்றானோ, இனத்தார் தனிகன் உதவிகொண்டு உண்கின்றாரோ, அங்ஙனமே பிராஞ்ஞனாகிய ஆன்மா மற்ற ஆன்மாக்களோடு உண்கின்றனன், மற்ற ஆன்மாக்கள் இவ்வான்மாவைத் தொடர்ந்துள்ளன" எனவும்,

யதா3 ஸுப்த: ஸ்வப்நம் ந கஞ்சந பஶ்யத்யதா2ஸ்மிந் ப்ராண ஏவைகதா4 ப4வதி (கௌஷீ. ௪. ௨௦)

"எப்போது உறங்கினவன் ஒன்றையுங் காண்கின்றிலனோ, அப்போது பிராணனில் ஒடுங்கி ஒன்றாகின்றான்" எனவும் ஆன்மாவுக்கும் முக்கிய பிராணனுக்கும் அடையாளம் காணப்பட்டிருக்கின்றமையான், குறிக்கப்பட்டவர் சிவபெருமானல்லர் எனல் கூடாது; பிரதர்த்தனவித்தையில் (௧. ௧. ௩௨) நன்கு விளக்கப்பட்டமையான். ஈண்டும் முன் பின் உள்ள வாக்கியங்களைப் பரியாலோசிக்குங்கால் அவையெல்லாம் பிரமத்தின்பாற்பட்டனவேயாக; மற்றை இலிங்கங்களும் அங்ஙனமே அவற்றிற்கேற்ப விளக்கற்பாலனவாம். எங்ஙனமெனின்,

ப்3ரஹ்ம தே ப்3ரவாணி (கௌஷீ. ௪. ௧)

உபக்கிரமத்திலே "பிரமத்தை உனக்குச் சொல்வேன்" எனத் தொடக்கப்பட்டது; மத்தியிலே,

யஸ்ய வைதத் கர்ம (கௌஷீ. ௪. ௧௯)

"அவர் செய்கை ஈது" என்னும் வாக்கியத்தினாற் பிரபஞ்சம் அனைத்துக்கும் அவர் கர்த்தாவாதல் உரைக்கப்பட்டது. பின்னரும் உபசங்காரத்திலே,

ஸர்வாந் பாப்மநோ(அ)பஹத்ய ஸர்வேஷாம் ச பூ4தாநாம் ஶ்ரைஷ்ட்2யம் ஸ்வாராஜ்யம் ஆதி4பத்யம் பர்யேதி ய ஏவம் வேத3।

(கௌஷீ. ௪. ௨௦)

"இங்ஙனம் அறிபவன் பாவம் அனைத்தையும் போக்கி, சர்வபூதங்களுக்கும் தலைமையாகி, சுவர்க்கராச்சியத்தையும், ஆதிபத்தியத்தையும் அடைகின்றான்" என்னும் சுருதியினாற் சமஸ்த பாவமும் நிவிர்த்தியாதல் வாயி

லாகச் *சுவர்க்கராச்சியமாகிய பயன் ஏகாந்தப் பிரமோபாசனையினாலே மாத்திரம் எய்துவதாமென்று கூறப்பட்டது. இங்ஙனம் இந்தப் பிரகரணம் பிரமபரமாம் என நிச்சயிக்குமிடத்து, ஆன்மாவுக்கும் முக்கியப் பிராணனுக்கும் உரிய லிங்கங்கள் அவர் பரத்தனவாகச் செலுத்தற்பாலன. (கஎ)

மற்றோர் பக்ஷம் கூறப்படுகின்றது.

ஸூத்ரம்—கஅ ஜைமிநிஸ் து கார்யம் ப்ரச்நவ்யாக்யாநாப்யாமபி சைவமேகே (க. ச. கஅ)

**(கஅ) சைமினி கொள்ளுமாறு போல வினாவிடையில் மற்றொருவர் பொருட்டு உள்ளது; மேலுஞ் சிலர் அங்ஙனமே கூறுவர்.**

தௌ ஹ ஸுப்தம் புருஷமாஜக்மதுஸ் தம் ஹாஜாதசத்ருராமந்த்ரயாஞ்சக்ரே ப்ருஹந் பாண்டரவாஸஸ் ஸோமராஜந்நிதி ஸ உ ஹ தூஷ்ணீமேவ சிச்யே தத உ ஹைநம் யஷ்ட்யா விசிக்ஷேப ஸ தத ஏவ ஸமுத்தஸ்தௌ (கௌஷீ. ச. கஅ)

"அவ்விருவருங் கூடி நித்திரையாயிருந்தவனிடம் வந்தார்கள்; அஜாதசத்துரு என்பவன் வெண்டுகில் புனைந்த சோமராசப் பெரியோனே, என்று விளிப்ப, அவன் யாதும் பேசாது நித்திரைசெய்தான்; அவன் பின்னர்த் தண்டினாலே அவனைத் தட்டும்போது உடனே எழுந்தான்" என்னும் வாக்கியத்திலே, விளித்தபோது கேளாமையானும் பின் தடிகொண்டு தட்டிய போது எழுந்தமையானும், பிராணாதிகளுக்கு வேறாக ஆன்மா உளதென்றமை இதற்கு வேறாய்ச் சிவபெருமான் உளர் என்பதை உணர்த்தும் பொருட்டாம்.

க்வைஷ ஏதத் பாலாகே புருஷோऽசயிஷ்ட க்வ வா ஏதத் அபூத் குத ஏதத் ஆகாத் (கௌஷீ. ச. கஅ)

"பாலாகி, இந்தப் புருஷன் எங்கே துயின்றான்? எங்கிருந்தான்? பின் எங்கிருந்து வந்தான்? என்னும் வினாவினும்,

ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி (சாந். சு. அ. க)

"புதல்வனே, அப்போது சத்தோடு கூடச் சம்பன்னனாகின்றான்" என்னும் வாக்கியத்தோடோர் பொருள் இயைந்த

யதா ஸுப்தஸ் ஸ்வப்நம் ந கஞ்சந பச்யத்யதாஸ்மிந் ப்ராண ஏவைகதா பவதி (கௌஷீ. ச. உ0)

*சிவலோகம்.

"உறங்குங்கால், அவன் கனவொன்றுங் காணுதிருக்குமிடத்துப் பிராண ேைடு ஐக்கியமாகின்ருன்" என்னும் விடையினும் அப்பொருள் நன்கு புலப்படுகின்றது.

பாலாகிக்கும் அஜாதசத்துருவுக்கும் நிகழ்ந்த சம்வாதப்பொருளே, வாசசநேயர் சிலர்

யத்ரைஷ ஏதத்ஸுப்தோऽபூத் ய ஏஷ விஜ்ஞாநமய: புருஷ: க்வைஷ ததாऽபூத் குத ஏததாகாத் (பிரு. ச. க. கசு)

"இம்மனுஷன் எங்கு உறங்கினன்? விஞ்ஞானமய புருஷன் எங்கிருந்தான்? அவன் எங்கிருந்து மீண்டு வந்தான்?" என்னும் வினாவாகவும்,

யத்ரைஷ ஏதத்ஸுப்தோऽபூத் ய ஏஷ விஜ்ஞாநமய: புருஷ: (பிரு. ச. க. கள)

ய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாஶஸ்தஸ்மிஞ்சேதே।
(பிரு. சு. ச. உஉ)

"இம்மனுஷன் இங்ஙனம் நித்திரை செய்தபோது இந்த விஞ்ஞானமய புருஷனவன் இருதயத்துள்ள ஆகாசத்திலே நித்திரை செய்கின்ருன்" என்னும் விடையாகவும் படிக்கின்றனர். ஆகலின், உலகம் அனைத்துக்கும் கர்த்தா சிவபெருமானேயாம். (கஅ)

## (சு) வாக்கியாந்வயாதிகரணம்.

மைத்திரேயப்பிராம்மணமெங்கும் ஆன்மாவும் சிவபெருமானும் ஒன்ருகக் கூறப்பட்டவிடத்தும், அவர்கள் இருவரும் ஓரிடத்தில் வசித்தல் எங்ஙனம் பொருந்தும் என்பதைக் காட்டும்பொருட்டு இவ்வதிகரணம் எழுந்தது.

வாக்யாந்வயாத் (க. ச. கக)

### (கஉஅ) வாக்கியாந்வயத்தான்.

ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி ஆத்மநஸ்து காமாய பதி: ப்ரியோ பவதி (பிரு. சு. ரு. சு)

"மெய்யாய் நாயகனுடைய அனுபவத்தின் பொருட்டு நாயகன் விரும்பற்பாலனுகின்ருனில்லை; ஆன்மாவின் அனுபவத்தின் பொருட்டே நாயகன் விரும்பற்பாலனுகின்ருன்" என்று தொடங்கி,

ஆத்மா வாऽரே த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: (பிரு. சு. ரு. சு)

*"(பரம) ஆன்மாவானது மெய்யாய்க் காணற்பாற்று, கேட்கற்பாற்று, சிந்திக்கற்பாற்று, தேளியற்பாற்று" என்னும் விஷயம் பிருகதாரணியத்திற் கேட்கப்படுகின்றது. ஈண்டு,

(பூருவபக்ஷம்)

ஞூ௺நஷூ⁻ கூாீய (பிரு. சு. ரு. சு)

"ஆன்மாவின் அனுபவத்தின் பொருட்டு" என்றற்றொடக்கத்த வாக்கியங்களால் அனுபவத்தை விரும்புகின்றமைபற்றிச் சம்சாரியாதலின், இவன் ஆன்மாவாம் எனில்,

(சித்தாந்தம்) ஈண்டுக் கூறப்பட்டவர் சிவபெருமான். எதனாலெனின்,

கூ௺ூ தக்ஷஸ்ய தா நாஶாஷி விெத்தந (பிரு. சு. ரு. ௩)

ஞூ௺நி வஷுெ ஓ௺ெஷ௺ூெத ஶெத விஜ்ஞாத ஐஓo ஸவ-ிo விஷிதழ (பிரு. சு. ரு. சு)

ஐஓo ஸவ-ிo யஓயரோ௺ா (பிரு. சு. ரு. எ)

"செல்வத்தினாலே சிவத்துவமடைதற்கு நம்பிக்கையில்லை; (பரம) ஆன்மாவைக் கண்டு கேட்டுச் சிந்தித்துத் தெளியும் போது, இஃதெல்லாம் அறியப்படும்; (பரம) ஆன்மாவே இஃதெல்லாம்" என்று தொடங்கி,

யெநெஓo ஸவ-ிo விஜாநாதி தo கெந விஜாநீயாஜ!

(பிரு. ச. ச. கச)

"எவரால் ஈதெல்லாம் அறிகின்றனோ, அவரை எதனால் அறியலாம்?" என்பதிறுதியாய்ப்போந்த வாக்கியமனைத்தும் சிவபெருமானிலே அன்னுவயிக்கின்றமையின், போகப்பிரீதியுடைய ஆன்மா அநுவாதத்தினாற் சிவபெருமானைப் பிரதிபாதித்தலினால் விரோதமில்லை. (கரு)

இந்த இடமெல்லாம் ஆன்மாவைக்குறிக்குஞ் சொல்லினாற் சிவபெருமான் கூறப்படுதல் யாங்ஙனமென மதாந்தரத்தினாற் சூத்திரகாரர் வெளிப்படுத்துவாராயினர்.

வ்ரதிஜ்ஞாஸிெஷிலிo௱ாஶ௰ாயூ: (க. ச. உo)

**(கஉரு) பிரதிஞ்ஞை சித்திப்பதற்காக லிங்கம்; ஆசுமரத்தியர் உரைக்குமாறு போல.**

ஞூ௺நி வஷுெ ஓ௺ெஷ (பிரு. சு. ரு. சு)

---

*கனியினுங்கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க்குழற்பாவைநல்லாரினுந்
தனிமுடிகவித்தாளுமரசினு
மினியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே.
(திருவிடைமருதூர், நாவு. கo)

"ஆன்மா காணப்பட்டவிடத்து" என்று தொடங்கிய சுருதியினுல், ஒன்றை அறியுமிடத்து யாவும் அறியப்படும் என்னும் பிரதிஞ்ஞை சித்திப்பதில் ஆன்மா அவனுடைய *காரியமாகலின், இதினின்று வேறுபடாமையை உணர்த்துதற்கு ஆன்ம சப்தத்தினுற் சிவபெருமான் கூறப்படுகின்றனர் என்பது ஆசுமரத்தியர் கொள்கை. (௨0)

உக்ரமிஷ்யத ஏவம் ஹாவாதிதெ்யளடுலொமிஃ (க. ச. ௨க)

(கந௦) ஔடுலோமி உரைக்குமாறு, உற்கிரமணஞ் செய்பவனும் அவ்வாருகலின்.

தேகத்தை விட்டு நீங்கும் முத்தனுக்குச் சிவபெருமானுடைய ரூபமுண்மையின், சிவபெருமான் ஆன்மசப்தத்தினுற் (சுருதியிற்) கூறப்படுகின்றனர் என ஔடுலோமி கொள்கின்றனர். (௨க)

அவஸ்திதெ ரிதி காஶக்ருத்ஸ்நஃ (க. ச. ௨௨)

(கநக) அவர் வசிக்கின்றமையான் எனக் காசகிருத்சினர் கூறுகின்றனர்.

ய ஆத்மநி திஷ்டந்।

"எவர் ஆன்மாவில் இருக்கின்றனரோ" என்னுஞ் சுருதிப் பொருளுற, ஆன்மாவிலே ஆன்மாவாகச் சிவபெருமான் இருத்தலினுல், ஆன்மாவைக் குறிக்கும் மொழிகொண்டு அவர் கூறப்படுகின்றனர் எனக் காசகிருத்சினர் கொள்கின்றார்.

மற்றிருவர் மதத்தையும் உபந்நியசித்து, அவற்றுக்கு மாருக இது கூறப்படுதலானும் அதற்குமேல் மற்றென்றைக் கூருமையானும், இதுதான் சூத்திரகாரர் மதம் என நிச்சயிக்கப்படுகின்றது.

மேலும், அநேக சுருதிகளுக்கு இணக்கமுறுகின்றது; எங்ஙனமெனின் அதர்வசிரசிலே சேதனுசேதனப் பிரபஞ்சம் அனைத்தையும் பிரவேசித்து நின்றமைபற்றிச் சிவபெருமான் எல்லா நாமங்களினுலும் உரைக்கப்படலான்.

தெவா ஹவை ஸ்வர்கம் லோகமாயம்ஸ்தெ தெவா ருத்ர மப்ருச்சந் கோ ப⁴வாநிதி। ஸோऽப்ரவீத³ஹமேக: ப்ரத²மமாஸம் வர்தாமி ச ப⁴விஷ்யாமி ச நாந்ய: கஶ்சிந்மத்தோ வ்யதிரிக்த இதி ஸோऽந்தராத³ந்தரம் ப்ராவிஶத்³தி³ஶஶ்சாந்தரம் ப்ராவிஶத்। ஸோऽஹம் நித்யாநித்யோ வ்யக்தாவ்யக்தோ ப்³ரஹ்மாப்³ரஹ்மாஹம் ப்ராஞ்சः ப்ரத்யஞ்சோऽஹம் த³க்ஷி

* காரியம் என்னுமுண்மை கசஉ-ஆம் பக்கத்து ௨-ஆம் வரிமுதலியவற்றினும், ௨௨௯-ஆம் பக்கத்து கசு-ஆம் வரிமுதலியவற்றினும் காண்க.

ஞ்சோஹம் உதஞ்சோஹம் அதஶ்சோர்த்வஞ்ச திஶஶ்ச விதிஶஶ்சாஹம் புமா ந் ஹம் ஸ்த்ரீ சாஹம் ஸாவித்ர்யஹம் காயத்ர்யஹம் த்ரிஷ்டுப்ஜகத்யனு ஷ்டுப்சாஹம் சந்தோஹம் கார்ஹபத்யோஹம் தக்ஷிணாக்நிரா ஹவனீயோஹம் ஸத்யோஹம் கௌரஹம் கௌர்யஹம் ஜ்யேஷ்டோ ஹம் ஶ்ரேஷ்டோஹம் வரிஷ்டோஹமாபோஹம் தேஜோஹம்ருக்யஜு ஸாமாதர்வாங்கிரஸோஹம் அக்ஷரமஹம் க்ஷரமஹம் குஹ்யோஹம் கோ ப்யோஹம் அரண்யோஹம் புஷ்கரமஹம் பவித்ரமஹம் அக்ரஞ்ச மத்யஞ்ச பஹிஶ்ச புரஸ்தாஜ்ஜ்யோதிரித்யஹமேக: ஸர்வே ச மாமேவ மாம் யோ வேத ஸ ஸர்வான்வேத (அதர்வசிரசு)

“தேவர்கள் சுவர்க்கலோகத்தை (சிவலோகத்தை) அடைந்து, உருத்திரரை நோக்கி நீவிர் யார்? என வினவினர்; (அதற்கு) நான்மாத்திரம் முதற்கண் இருந்தேன், இருக்கின்றேன், இருப்பேன், எனக்கு வேறாக எதுவுமில்லை; அந்தரத்தையும் (உள்ளையும்) அந்தராந்தரத்தையும் (உள்ளினுள்ளையும்) பிரவேசித்தார், திக்குகளையும் திக்கினிடைகளையும் பிரவேசித்தார்; (அவ்வியல்பினராய) அவர் நான், நான் நித்தியனும் அநித்தியனுமாகி இருக்கின்றேன், (என்று தொடங்கி) நான் பிரமா, நான் பிரமம், நான் கிழக்கு மேற்குமாயினேன், நான் தெற்காயினேன், வடக்காயினேன், நான் மேலுளேன், கீழுளேன், நான் பெருந்திசை நான்குஞ் சிறுதிசை நான்குமாகின்றேன்; நான் ஆண், நான் பெண், நான் காயத்திரி, நான் சாவித்திரி, நான் திருஷ்ட்டுப்பு ஜகதியும் அநுஷ்ட்டுப்புமாகின்றேன், சந்தசு நான், கார்கபத்தியம் நான், தக்ஷிணாக்கினி நான், ஆகவனீயம் நான், சத்தியம் நான், பசு நான், கௌரி நான், ஜ்யேஷ்டன் நான், சிரேஷ்டன் நான், வரிஷ்டன் நான், சலம் நான், தேயு நான், இருக்கு யசுர் சாமம் அதர்வம் ஆங்கிரசு நான், க்ஷரம் நான், அக்ஷரம் நான், குகியம் நான், கோப்பியம் நான், வனம் நான், புஷ்கரம் நான், பவித்திரம் நான், ஆதிமத்தியம் நான், புறம் நான், முன் நான், சோதி நான், என்னை *எல்லாமாக அறிபவன் எல்லாம் அறிகின்றான் என்றார்” என்பதிறுதியாக முதலாவது கண்டத்தினும், அவர் யாண்டும் பிரவேசித்தனர் என்பது நோக்கி,

---

*மாலாகிநான்முகனாய்மாபூதமாய்மருக்கமாயருக்கமாய்மகிழ்வுமாகிப்
பாலாகியெண்டிசைக்குமெல்லையாகிப்பரப்பாகிப்பரலோகந்தானேயாகிப்
பூலோகபுவலோகசுவலோகமாய்ப்பூதங்களாய்ப்புராணன்றானேயாகி
யேலாதனவெலாமேல்விப்பானெழுஞ்சுடரானெம்மடிகணின்றவாறே.

மண்ணாகிவிண்ணாகிமலையுமாகிவயிரமுமாமாணிக்கந்தானேயாகிக்
கண்ணாகிக்கண்ணுக்கோர்மணியுமாகிக்கலையாகிக்கலைஞானந்தானேயாகிப்
பெண்ணாகிப்பெண்ணுக்கோராணுமாகிப்பிரளயத்துக்கப்பாலோரண்டமாகி
யெண்ணாகியெண்ணுக்கோரெழுத்துமாகியெழுஞ்சுடரானெம்மடிகணின்றவாறே.

யொ வெ ருத்ரஸ் ஸப்ரஹ்மா தஸ்மை வெ நமோ நம: (அதர்வசிரசு)

"உருத்திரர் எனப்படும் பகவானுக்கு, பிரமா எனப்படும் அவருக்கு நான் நமஸ்காரஞ் செய்கின்றேன்" என்று தொடங்கி, பிரமா, விஷ்ணு, மகேசுவரன், உமை, விநாயகர் முதலிய சமஸ்தப் பிரபஞ்ச சப்தப்பொருளுமாயிருத்தல் இரண்டாவது கண்டத்தினும் பிரதிபாதிக்கப்பட்டுப்போந்தது. அங்ஙனஞ் சமஸ்த சுருதிகளை இணக்கி ஆராயுங்கால், சேதனசேதனப் பிரபஞ்சத்தையும் அந்தரியாமியாய்ப் பிரவேசித்து, அனைத்தையும் சரீரமாகவும், எல்லாப் பெயருமுடையராகவும் இருந்தனர் சிவபெருமான் என்றறியப்படுதலின், காசகிருத்சினமதந்தான் சுருதிசூத்திர மகாபியுக்த சம்மதமாம் எனக்கோடல் உசிதமாயிற்று. (௨௨)

## (௬) பிரகிருத்தியதிகரணம்.

முதலாம் அத்தியாயத்து முதற்பாதத்து இரண்டாம் அதிகரணத்திலே "எவரினின்று இப்பூதங்களெல்லாந் தோற்றியவோ" என ஐந்தாம் வேற்றுமை கேட்கப்படுதலின், (ஆண்டுச்) சிவபெருமானுடைய பிரபஞ்சோபாதானம் சாமான்னியமாக நிரூபிக்கப்பட்டது. இவ்வதிகரணம் அதனை முற்றுந் தாபித்தற்கெழுந்தது.

ப்ரக்ருதிஸ்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தாநுபரோதாத் (க. ச. ௨௩)

**(௩௨) அவர் பகுதியுமாம்; பிரதிஞ்ஞை திருட்டாந்தங்களுக்கியைதலான்.**

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஸஸ்ஸம்பூத: (தைத். ௨. க)

"(பரம) ஆன்மாவாகிய அவரினின்று ஆகாயம் பிறந்தது"

த்யாவா பூமீ ஜநயந்தேவ ஏக: (தைத். ஆரணி. ௧0. க. ௩)

"பூமியையும் ஆகாயத்தையும் படைத்து ஒருவராகிய தேவர்" என்றற்றொடக்கத்த சுருதிகளே ஈண்டு ஆராயற்பாலனவாகிய விஷயம்.

இவைகளிலே பிரசித்தமாயுள்ள உபயகாரணத்துவம் உரைப்பது யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

---

அங்கமாயாதியாய்வேதமாகியருமறையோடைம்பூதந்தானேயாகிப்
பங்கமாய்ப்பலசொல்லுந்தானேயாகிப்பான்மதியோடாதியாய்ப்பான்மையாகிக்
கங்கையாய்க்காவிரியாய்க்கன்னியாகிக்கடலாகிமலையாகிக்கழியுமாகி
யெங்குமாயேறூர்ந்தசெல்வனாகியெழுஞ்சுடராயெம்மடிகணின்றவாறே.

என்றற்றொடக்கத்த நின்ற திருத்தாண்டகமுதலியவற்றானும் அதர்வசிரசுப்பொருள் தொனிக்கின்றது.

நிமித்தகாரணராகிய குலாலாதியோர் உபாதான மிருத்பிண்டாதிகளாக ஆகாமையினாலும், உபாதானமாகிய மிருத்பிண்டாதிகள் நிமித்தகாரணராகிய குலாலாதியராக ஆகாமையினாலுமே சந்தேகமுண்டாயிற்று. பிரபஞ்ச காரியத்தையுற்று அவர் நிமித்தகாரணமும் உபாதானகாரணமுமாம் இரண்டுமாதல் யாங்ஙனம்?

**(பூருவபக்ஷம்)** அவர் உலகசிருட்டிக்கு நிமித்தகாரணர்தான்; உபாதானகாரணரல்லர்; ஏதனால்? கூடாமையின். கடத்தை நிருமாணஞ்செய்யும் குலாலன் தானே மட்பிண்டமுமாகிக் கடத்தைச் செய்வானல்லன்; படம் நெய்யும் குவிந்தனும் அங்ஙனஞ்செய்வானல்லன். அல்லது மட்பிண்டம் குலாலனாகிக் கடத்தை வனைய முயலினும் அது கூடாதாமே. நிமித்தகாரணமாகிய பிரமத்துக்கு உபாதானத்துவம் எய்தாது. நிமித்தத்துக்கு உபாதான கற்பனை நிஷ்பிரயோசனம்; அவ்வியல்பிற்றாகிய கற்பனையின்றியும் காரியம் தோற்றுவதால். குலாலன் மிருத் பிண்டத்தினின்று வேறாயினும், கடம் ஆக்கப்பட்டதாகக் காணப்படுகின்றமைபற்றிக் (குலாலன் கடமாதலும், கடம் குலாலனாதலுமாகிய) அந்தக் கற்பனையின்றியே காரியம் காணப்படலான். நிமித்தத்துக்கு உபாதானத்தை ஏற்படுத்துவது பயனற்றது. ஆகலின் பிரமம் நிமித்தகாரணமே; உபாதானமுமன்று எனின்,

**(சித்தாந்தம்)** கூறப்படுகின்றது. உலகத்துக்கு நிமித்தமும் உபாதானமும் பிரமமே;

𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋𑌽𑌸𑍍𑌯𑍁𑌤 𑌤𑌮𑌾𑌦𑍇𑌶𑌮𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑍍𑌯𑍋 𑌯𑍇𑌨𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌭𑌵𑌤𑍍𑌯𑌮𑌤𑌂 𑌮𑌤𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌮𑍍 (சாங். சூ. க. க)

"நீயும் அகந்தை கொண்டனை; எதனாற் கேட்கப்படாதது கேட்கப்படுகின்றதோ, நினைக்கப்படாதது நினைக்கப்படுகின்றதோ, அறியப்படாதது அறியப்படுகின்றதோ, அந்த ஆஞ்ஞையை நீ எஞ்ஞான்றாயினுங் கேட்டனையா?" என்று சுருதி கூறுமாறு, நிமித்தகாரணராகிய ஆஞ்ஞையுடையார் அறியப்படுமிடத்துச் சேதனசேதனப்பிரபஞ்சமனைத்தும் அறியப்பட்டதாகும் என்றவாறு, ஆஞ்ஞையுடையார் அறியப்பட்டபோது யாவும் அறியப்படுமென்னும் பிரதிஞ்ஞையினாலும்,

𑌯𑌥𑌾 𑌸𑍋𑌮𑍍𑌯𑍈𑌕𑍇𑌨 𑌮𑍃𑌤𑍍𑌪𑌿𑌣𑍍𑌡𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 (சாங். சூ. க. க)

"ஒரு மட்பிண்டம் அறியப்பட்டால் மண்மயமாக அனைத்தும் அறியப்பட்டதாகும்" என்னுஞ் சுருதியினால் அதனை விளக்கும் மட்பிண்ட திருஷ்டாந்தத்தின் ஒற்றுமையினாலுமாம். பிரமம் நிமித்தமாய் மாத்திரமிருத்தலின் அதனை அறிதல்பற்றிச் சமஸ்தப் பிரபஞ்சஞானமும் எய்தமாட்டாது. எங்

ஙனமெனின், உபாதானமாகிய மட்பிண்ட ஞானத்தை அறிவதாலன்றிக் குலாலனை அறிதலாற் காரியமாகிய குடம் அறியப்படமாட்டாது. ஆகலின், நிமித்தகாரணமாகிய பிரமம் உபாதானகாரணமாயுமிருக்குமிடத்து இது பொருந்தும் எனக் கொள்ள, பிரமமே உபாதானமாம். (௨௩)

(சாந். சு. க. ௩) சுருதியிற் கண்ட இந்த ஆதேச சப்தத்தினல் ஆஞ்ஞை செய்யும் பிரமம் கூறப்பட்டது. உபாதானம் என்றது அவரினின்று வேறின்றெனக் காட்டச் சூத்திரகாரர் மற்றோர் நியாயங் கூறுகின்றார்.

அபி⁴த்⁴யோபதே³ஶாச்ச (க. ச. ௨௪)

(௧௩௩) (அவர்) சங்கற்பங் கூறப்படலானும்.

தமைக்ஷத ப³ஹுஸ்யாம் ப்ரஜாயேய (சாந். சு. ௨. ௩)

"நான் அநேகமாவேனுக என்று அவர் சங்கற்பித்தார்" என்னுஞ் சுருதியில் நிமித்தகாரணமாகிச் சங்கற்பித்த முற்றறிவுடைய பிரமத்தினது விசித்திர ஜகதாகாரத்தினல் அநேகமாயாதலாகிய சங்கற்பம் உபதேசிக்கப்படுகின்றது. ஆகலின், உபாதானம் நிமித்தகாரணத்துக்கு வேறின்று. (௨௪)

(ஆக்ஷேபம்)

விஶ்வாதி⁴கோ ருத்³ரோ மஹர்ஷி ஹிரண்யக³ர்ப⁴ம் பஶ்யத ஜாயமாநம் (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௮)

"விசுவாதிகரும் மகாவிருடியுமாகிய ருத்திரர் இரண்ணியகருப்பர் பிறக்கக் கண்டனர்" என்னுஞ் சுருதியினல் விசுவாதிகராகிய சிவபெருமான் நிமித்தகாரணராகித் தமக்கு வேருயுள்ள பிரகிருதியில் (உபாதானத்தில்) தமது சங்கற்பத்தினுல் உண்டாக்குஞ் சமஸ்த தேவர்கட்கும் தலைவராகிய இரண்ணியகருப்பரைச் சிருட்டிக்க அனுக்கிரகத்தோடு பார்க்கின்றனர் என்று அறியப்படுகின்றது. அவர் பிரகிருதியாய் உலகாகாரமாவது எங்ஙனம்?

மாயாந்து ப்ரக்ருதிம் வித்³யாத் (சுவே. ச. ௧௦)

"மாயையைப் பிரகிருதி என்று அறியவேண்டும்" என்றுரைக்குஞ் சுருதியில், மாயை என்பது பிரகிருதியாம்.

தஸ்மாத்³விராட³ஜாயத விராஜோ அதி⁴பூருஷ꞉।

(இரு. வே. ௧௦. ௯௦. ௫)

"அவரினின்று விராட்புருடன் பிறந்தான்; விராட்டுக்குமேலே புருஷன்" என்னுஞ் சுருதிகளாற் புருஷன் பிரகிருதி என்று அறியப்படுகின்றது. அவ்விரண்டுமே பிரகிருதியாய் உலகாகாரமாயிற்றென்று கூறுவது உசிதம் என்று கூற,

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

ஸாக்ஷாச்சோபயாம்நாநாத் (க. ச. உரு)

(௧௩ச) அவர் நேரே இரண்டாகவுங் கூறப்படலான்.

வேதாந்த பாகங்களிலே சிவபெருமான் உபாதானகாரணராகிப் பிரபஞ்சாகாரமாயும், நிமித்தகாரணராகிப் பிரபஞ்சோற்பத்தி செய்பவராயும் பிரத்தியக்ஷமாகக் கேட்கப்படுகின்றனர். எங்ஙனமெனின்? "விசுவாதிகர் உருத்திரர்" என்றற்றொடக்கத்த சுருதிகளான். எங்ஙனம் விசுவாதிகத்துவங் கேட்கப்படுகின்றதோ, அங்ஙனமே

ஸர்வோ ஹ்யேஷ ருத்ர꞉ (தைத். ஆரணி. க௦. உச. சஉ)

"எல்லாம் உருத்திரர்" என்றற்றொடக்கத்தவற்றால் உபாதானகாரணமாதல் பற்றி விசுவரூபியாதலுங் கேட்கப்படுகின்றது. சதருத்திரீயத்தில்,

நமோ ஹிரண்யபாஹவே।

"இரண்ணிய பாகுவுடையார்க்கு நமஸ்காரம்" என்று தொடங்கி,

தஸ்கராணாம் பதயே।

"கள்ளர் தலைவர்க்கு நமஸ்காரம்" என்பதிறுதியாக அவரது விசுவாதிகத்துவங் கூறப்படுகின்றது.

நம꞉ பர்ண்யாய ச பர்ணஶத்யாய ச।

"இலையினின்று தோன்றியவர்க்கும், இலைச் சமூகத்திற்றோன்றியவர்கும் நமஸ்காரம்" என்பதிறுதியாகச் சிவபெருமான் உலகாகாரமாயிருத்தல் கேட்கப்படுகின்றது. பிறிதோரிடத்தில்,

ப்ரஹ்ம வநம் ப்ரஹ்ம ஸ வ்ருக்ஷ ஆஸீத்யதோ த்யாவாப்ருதிவீ நிஷ்டதக்ஷு꞉ ... யாரயந் (தைத். பிராம். உ. அ. கூ. எசு, எஎ)

"பிரமம் வனமாயிற்று; பிரமம் அந்த விருக்ஷமாயிற்று; தத்தம் இடங்களிலே நிறுவி உலகத்தைப் பிரமம் பரிபாலிக்கின்றது" என அவர்க்கு ஈரியல்பு சாற்றப்படுகின்றது. அதர்வசிரசின் முதலாம் இரண்டாம் பாகங்களினும் சிவபெருமான் உலகாகாரமாதலும், அதன்மேல் உலக ஈசுரத்துவமாதலுங் கூறப்படுகின்றன. ஆகலின், "பிரத்தியக்ஷமாய் இரண்டாகக் கூறப்படலான்" ஜகத்தும் ஜகதீசுரனும் பிரகிருதி நிமித்தமாகிய பரப்பிரம சிவபெருமானும். (உரு)

மேலும் மற்றோர் பிரமாணம் உண்டென்று சூத்திரகாரர் கூறுகின்றார்.

ஆத்மக்ருதே꞉ (க. ச. உசு)

(௧௩ரு) தம்மிலிருந்து சிருட்டித்தலான்.

ததாத்மாநம் ஸ்வயமகுருத (தைத். உ. எ)

"அப்போது அவர் தாமே தாமாகச் செய்தனர்" என்னுஞ் சுருதியினுற் சிவபெருமான் தாமே உலகாகாரமாதலோடு கர்த்தாவாதலும் பெறப்படுகின்றது. ஆகலின், அவர்தாம் உபாதானமும் நிமித்தமுமாம். (உசு)

(ஆக்ஷேபம்) சமஸ்த தோஷகளங்கலேசமுமிலராய், அளவுகடந்த மங்கலகுணரத்திஞகரராய், தடைகடந்த நித்திய வைபவமுடையராய், பிரபஞ்சாதீதராய் நின்ற சிவபெருமான் அஞ்ஞான விகாராஸ்பதமாகிய இழிந்த பிரபஞ்சரூபப் பிருகிருதியாதல் யாங்ஙனம்? என ஆக்ஷேபிக்க,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

வரிணாமாத் (க. ச. உஎ)

(கரு௬) பரிணுமத்திஞல்.

நித்தியசுத்தானந்தரும் நிரதிசயமங்கல சுவாபாவிகருமாமாயினும், நிமித்தகாரணராகிய சிவபெருமான் உபாதான காரணமாகி உலகாகாரமாதலும் யுக்தமே; (சிவபெருமான்) சேதனுசேதனகாரியமாய்ப் பரிணுமமுறுதலான்.

(ஆக்ஷேபம்) அந்தோ! காரணவிகாரரூபமாய்த்திரிதலன்றே பரிணுமம்; முன் ரூபத்தை விடுத்துப் பின்னேர் ரூபமாய் மாறுதலே பரிணுமமாகும். சிவபெருமான் அநர்த்தத்தன்மையிலிருந்து எவ்வாறு தொடக்குறுவாரல்லர்?

(உத்தரம்) சத்தியம்; நீ விஞவியது. எங்ஙனம் நிமித்தகாரணம் உபாதானமாயவிடத்தும் விகாரமுதலிய பரிசமில்லையோ, அங்ஙனம் பரிணுமமும் எய்துகின்றது. அபூர்வமாகிய பரிணுமம் எது? அதனைக் கேட்டற்குக் குதூகலமுடையேம். அதனை விளக்க வேண்டிற்றும் எனின்,

(உத்தரம்) கேட்குதி; விளக்குவாம்.

யதா தமஸ்தந் நிவா ந ராத்ரிந ஸந் ந சாஸச்சிவ ஏவ கேவலஃ। ததக்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம் ப்ரஜ்ஞா ச தஸ்மாத்ப்ரஸ்ருதா புராணீ (சுவே. ச. கஅ)

"எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார்; அவர் அக்ஷரமாயும், சவிதாவுடைய வணங்கற்பாலதாம் முக்கியப் பொருளாயும் இருந்தார், அவரினின்று புராணியாகிய பிரஞ்ஞை (பராசத்தி) வெளிப்பட்டது" என்பது சுருதி.

சந்திர சூரியர் ஒளியெல்லாம் ஒழிந்து, பகல் இது இரவிது எனப் பகுத்தலில்லாத சூனியமாய், நாமரூப விசேஷமின்றி ஸ்தூலசூக்கும

சேதனுசேதனமாகிய சத்து அசத்தின் வியக்தி நிலையற்று, ஈதெல்லாம் இருண்மயமாய் இருந்த அந்தக்காலத்திலே, அந்தச் சிவபிரானுர் அத்துவிதீயராய், கேவலராய், சுவப்பிரகாசராய், தம்மினின்று பகுக்கப்படாவியல் படைந்தசேதனுசேதனச் சத்தியோடுளராயினர். அவரே அக்ஷரமாயும், க்ஷரரகிதமாயும், நாசரகிதமாயுமுள்ள பரவஸ்துவாயிருந்தனர்; அந்தச் சவிதாவாகிய சூரியனுக்கு முதற்கண்ணே ஒளியைக் கொடுத்தமையின் வரேண்ணியராயும், அவனுக்கு மத்தியிலினுள்ள ஒளியாயுமிருந்தார். அப்பெற்றியராகிய தம்மினின்று வேறுபடாச் சேதனுசேதனப் பிரபஞ்சம் முழுமையும் மறைந்து கிடத்தல்பற்றி அத்துவிதீயமாய் அக்காலத்திருளையெல்லாம் ஒட்டும் பெருந் தோற்றமாகிய உருவத்தையுடைய நித்தியசித்த புராணியாம் பரமப்பிரஞ்ஞையாகிய ஞானசத்தியார் தோற்றினர். பின்னர்,

ஸொ காமயத வஹுஸ்யாம் (தைத். உ. ௬)

"நான் அனேகமாய் ஆவேனுக என அவர் விரும்பினர்" என்றவாறு, பின்னர் நாமரூபாதி பகுப்பில்லாத சூக்குமசேதனுசேதன வஸ்து சரீரியாயும் காரணராயும் நின்ற சிவபெருமான் நாமரூபப் பகுப்புளதாகும் (ஸ்தூல) சேதனுசேதனப் பிரபஞ்சமாக ஆவேன் என்று சங்கற்பித்தனர். ஆகலின்,

இடூ ஸவ-ஸ்ருஜத யதிடூகிஞ (தைத். உ. ௬)

"எதெது இருந்ததோ அதையெல்லாம் அவர் சிருட்டித்தனர்" என்னுஞ் சுருதிப்பிரகாரம் அவர் தமது சரீரமாகவேயிருந்த சூக்கும சேதனுசேதன வஸ்துவைத் தம்மினின்று வேறு பிரித்து, பின்னர்

தத்ஸ்ருஷ்டா ததேவாநுப்ராவிஶத் (தைத். உ. ௬)

"அதனைச் சிருட்டித்து அதனுள்ளே பிரவேசித்து" என்னுஞ் சுருதிப்பிரகாரம் தம்மினின்று பிரிக்கப்பட்ட சேதனுசேதனத்துள்ளே (பரம) ஆன்மரூபமாகத் தாம் பிரவேசித்து, பின் அவர்

ஸச்ச த்யச்சாபவத்* (தைத். உ. ௬)

"சத்தும் (பசுவும்), தியத்தும் (பாசமும்) ஆயினர்" என்றற்றொடக்கத்த

*பரிணமம் என்னும் மொழி உபநிடதங்களில் இல்லை. அங்ஙனமாயினுஞ் சூத்திரகாரரால் க. சு. உஎ. ல் அப்பதம் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது. இப்பரிணமத்துக்காகப் பாடியகாரரால் உதகரிக்கப்பட்ட (தைத். உ. ௬) சுருதியிற் கண்ட அபவத் என்பதற்கு "ஆயினுர்" "ஆனுர்" என்பது பொருள். "ஊனுயுயிரானுயுடலானுயுலகானுய்" எனவும், "இருநிலனுய்த் தீயாகி" எனவும் போந்த திருவாக்குகளிற் காணப்படும் "ஆனுய்" "ஆகி" என்றவைகளுக்கு எந்தப்பொருள் சைவசித்தாந்திகள் கொள்கின்றுர்களோ, அந்தப் பொருள்தான் பரிணமத்துக்கும் பொருளாகக் கோடற்பாற்று. இப்பரிணமத்தினுற் சிவபெருமானுக்கெய்தும் களங்கலேசமுமில்லையாம் என்று உணர்த்தற்கு அபூருவபரிணமம் என்று பாடியகாரர் வுரைந்தருளினர்.

சுருதிப்பிரகாரம் நானுவகைத்தாய சேதனுசேதனப் பிரபஞ்சரூபமாக மிருதியும் (ஆயினர்) பரிணமித்தார்.

இங்ஙனம் மனிதனுக்குப் பாலத்துவமும் யௌவனமும் உளவாமாறு போல, உலகமே வடிவாயுள்ள பிரமத்துக்குக் காரணமும் காரியமும் உளவாயின.

மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேச்வரம்।
தஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத்॥

(சுவே. ச. க௦)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக; அவரது அவயவமாகிய அதனுலே இவ்வுலகமனைத்தும் வியாபிக்கப்பட்டது" என்று சுருதி கூறுகின்றது. அற்றாகலின், அனைத்துக்கும் மாயை தான் பிரகிருதி என்றும், அதனையுடையவர் மகேசுவரர் என்றும், அவரது அவயவமாயும் அம்சமாயுமுள்ள சிற்சத்தியே போக்தாவாயிருக்குந் தசையிலே புருஷன் எனப் பெயர் கொண்டு சகல உலகத்தை வியாபித்துக்கொண்டிருக்கிறதெனப் பெறப்படுகின்றது. எங்ஙனம் சரீரமாத்திரத்திலிருந்தேனும் ஆன்மா மாத்திரத்திலிருந்தேனும் உரோமம் நகமுதலியன உண்டாகாவோ, அங்ஙனம் கேவலம் மாயையிலிருந்தேனும் கேவலம் மகேசுரரிலிருந்தேனும் உலகம் உண்டாகாது. பின் சரீரமுடைய (புருஷனி) னின்று கேசம் நக முதலியன தோற்றுமாறு போல, மாயையுடையாராகிய சிவபெருமானினின்று சேதனு சேதனத்துக்கு உபாதானகாரணமாகிய புருஷன் வெளிப்படுகின்றன். அவ்வுருவடைந்த ஈசனிலிருந்தே அவ்வியக்த சதுர்முகப் பிரமாமுதலாயினேர்க்குற்பத்தியாயிற்று.

புருஷோ வை ருத்ர: (தைத். ஆரணி. க௦. உச. சஉ)

"புருஷர்தான் உருத்திரர்" என்னுஞ் சுருதி ஈசுவரர்க்குப் புருஷரூபத்துவத்தைக் கூறுகின்றது. ஆகலின், அந்தந்த அவஸ்தாவிசேஷத்தினுற் சேதனுசேதன விசிட்ட சிவபெருமான் காரணமும் காரியமுமாம் என்று கூறுதல் மிக உசிதம். (உஎ)

யோநிஸ்ச ஹி கீயதே (க. ச. உஅ)

(கஉஎ) அவர் பிரகிருதியுமாம் என்று பாடப்படுகின்றனர்.

சிவபெருமான் சகல பூதங்களுக்கும் யோநி என்று கூறப்படுகின்றர்.

உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம்
ப்ரசாந்தம் த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் (கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், பிரசாந்தரும், எல்லாப் பூதங்களுக்கும் (யோநியும்) பிரகிருதியும்,

சமஸ்த சாட்சியுமாயுள்ளார் என்றறிந்து முனியானவன் தமசுக்கு மேலே போகின்றான்'' என்னுஞ் சுருதியினாற் சமஸ்தசாட்சியும், சர்வஞ்ஞரும், இருளுக்குமேற் போந்தவரும், பிரபஞ்சத்தைக் கடந்தவரும், சமஸ்த பூதங்களுக்கு யோநியும் (பிரகிருதியு) மாயுள்ளார் பராசத்தி உமையோடிசைந்த சிவபெருமானேயாம். ஆகலின், பரப்பிரமமே *உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாம். (உஅ)

## (எ) சர்வவியாக்கியா நாதிகரணம்.

---

ஏதேந ஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யாதா: (க. ச. உகூ)

**(கூஅ) இதனால் எல்லாம் வியாக்கியானஞ் செய்யப் பட்டன; வியாக்கியானஞ் செய்யப்பட்டன.**

(முதலாம் அத்தியாயத்து முதலாம் பாதத்து) இரண்டாஞ் சூத்திர முதல் இதுவரையும் வியாக்கியானஞ் செய்யப்பட்ட வேதாந்தவாக்கியங்களின் வியாக்கியானத்தினாலே, பிரமலிங்கங்களைக் கூறும் வேதாந்தரூபங்களாகிய கன்மகாண்டத்திடைக்கட் போந்த புருஷசூக்தம் சதருத்திரீய முதலிய மந்திரப்பிராம்மண பாகங்களும், ஸ்மிருதி இதிகாசபுராண ஆகம அபியுக்தசூக்திவிசேஷங்களுமாகிய எல்லாம் வியாக்கியானஞ் செய்யப்பட்டனவாம் என்பதே விஷயம்.

"வியாக்கியாதா:" எனச் (சூத்திரத்தில்) இருதரங் கூறியது அத்தியாயம் முடிந்தது என்ற கருத்தினாலாம்.

ஈண்டுக் கன்மகாண்டத்திற் போதரும் சதருத்திரீயம் புருஷசூக்தம் என்பனவும், ஸ்மிருதி இதிகாசபுராணங்களும் தாற்பரியலிங்க சமந்வயத்தினாற் பிரமத்தைத்தான் உணர்த்துகின்றனவா? இன்றா? என்பது சந்தேகம்; பிரகரணபேத முதலியவே சந்தேகத்துக் காரணம்.

(பூருவபக்ஷம்) கன்மகாண்டத்திலே தோற்றும் புருஷசூக்த முதலியன கன்மத்தை அநுஷ்டிப்போனாகிய ஆன்மபரத்தனவாம் எனக் கூறுவது நலமாம்; அவை நித்தியமுக்த பிரம விஷயபரத்தன அன்று; பயனின்மையான். ஸ்மிருதி புராண முதலியவும் ஒரே ஆன்மாவைக் கூறிற்றில; எதனாலெனின்? அவற்றுட் சில பிரமாவையும், சில விஷ்ணுவையும், சில உருத்திரரையும், சில இந்திரனையும், சில சத்தியையும், சில அக்கினியையும்,

---

* உபநிடத உபக்கிரமணிகை உ0-ஆம் இலக்கத்திற் கண்டவாறு உபநிடதங்களும் இவற்றை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த பிரமசூத்திரமும் **தியானயோகபரியந்தமே** கூறி முற்றி நிற்பனவேயாக, இந்தத் தியானயோகத் துரியத்திலே பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயைக்கும் பராசத்திக்கும் இடம் ஒன்றாயிருந்தமையான், யோகஸ்தானத்து உபநிடதங்கள் அந்நிலைக்குத் தக அவை கூறியவொக்குமாமென்றும், அதுபற்றி நேருமிழுக்குயாதுமின்றாம் என்றும் கடைப்பிடிக்க.

சில சூரியனையும், சில வாயுவையும், சில பிறவற்றையும் பரப்பிரமமாகக் கூறும். ஆகலின், இது (நிலையின்மை என்னும்) அநவஸ்தாதோஷம். அது பற்றி, இவைகள் பிரமத்தைக் கூறியவாகக் கொள்ளப்படமாட்டா என ஆக்ஷேபிக்க,

(சித்தாந்தம்) கூறுகின்றேம். புருஷசூக்தமுதலியவும் பிரமத்தையே போதிப்பனவாம்; பிரமலிங்கங்கள் உண்மையான்.

தஸ்மா த்விராடஜாயத (புருஷசூக்தம்)
ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே (புருஷசூக்தம்)
தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி (தைத். ஆரணி. ங. கங. சo)

"அவரினின்று விராட்டுப் பிறந்தான்; தமசுக்கு மேலுள்ள ஆதித்தியவர்ணர்; அவரையே அறிந்து ஈண்டு அமிர்தனாகின்றான்" என்னுஞ் சுருதிகளான், அவர் அனைத்துக்கும் காரணராதலும், இருளுக்கு மேலாதலும் சிவத்துவத்துக்குக் காரணமாதலுமாகிய பிரமலிங்கங்களையுடைய சம்பந்தம் காணப்படுகின்றது. ஆகலின், ஈண்டுக் கூறப்பட்ட சிவபெருமானே புருஷசப்தத்தினாற் கூறப்படுகின்றார்; சதருத்திரீயத்தினும் சிவபெருமான் உலகத்துக்குப் பதியாதலும், அவர் உலகுக்கு ஆன்மாவாதலும், நீலகண்டமுதலிய இலக்ஷணமுடையராதலும் நேரே கேட்கப்படுகின்றன. ஆகலின், சிவபெருமானே அப்பிரகரணத்திற் கூறப்பட்டனர் என்பது யுக்தம்.

(ஆக்ஷேபம்) மங்கலகுணங்களுக்கு நிதியாயுள்ள சிவபெருமான் சதருத்திரீயத்திற் பிரதிபாதிக்கப்படுதல் அயுக்தம்.

நமஸ்தே ருத்ர மந்யவே (யசுர். வே. ச. ரு. க)

"உருத்திரரே உமது கோபத்துக்கு நமஸ்காரம்" என்றமையாற் றாழ்ந்த குணமாகிய மந்யு (கோப) சப்தம் முதற்கண்ணே எய்திற்றே எனின்,

(உத்தரம்) அங்ஙனம் விசாரிக்கற்பாலதன்று; மந்யு என்னும் மொழி ஞானத்தின் மேற்று. இன்றேற் குரோத சப்தத்தின் பரியாயம் எனினும் இழுக்காது; துஷ்டநிக்கிரகத்தின்பொருட்டுச் சுவேச்சையினாற் கொள்ளப்பட்ட பிரகிருதிகுணமாயிருத்தல்பற்றி அதற்குச் சிவபெருமானிடத்திற் சம்பந்தமில்லை. புராணாதிகளின் தாற்பரியலிங்கங்களெல்லாம் பிரம விஷ்ணுவாதி நாமங்களின் பொருளாயுள்ளாரும், சர்வான்மகரும், சர்வஞ்ஞரும், சர்வசத்தியுடையாரும், சர்வாதிபரும், அசாமானியவைபவரும், பிரமசப்தப்பொருள் ஒய்தற்கு இடமாயினாரும், சமஸ்த வேதாந்த வாக்கியங்களையும் இயைத்துச் சமந்வயஞ் செய்தல் வாயிலாக எய்தும் முடிந்த பொருளாயும், உமாசகாயராயும், பரமேசுவரருமாகிய சிவபிரானையுற்று அறிவிப்பனவாம் என்று உரைப்பது யுக்தமே. இவை கன்மகாண்டத்தில் நிகழ்கின்

றனவே என ஆக்ஷேபிக்கின், அன்று ; லிங்கத்தைக்கொண்டு பிரகரணத்தை அறியவேண்டுமென்பது நியாயம். இந்த நியாயங்கொண்டு வேதாதி பிரமாணவசனங்களிற் சேதனமேனும் அசேதனமேனும் உலகுக்குக் காரணமாகக் கூறப்படுமிடமெல்லாம் அது அவ்வவ் வான்மாவாய் நிற்கும் *சிவபெருமான்மேற்றெனப் பொருள்கொள்க. எங்கெங்கே புருஷார்த்தமில்லாத விகாரம் அறியாமை முதலிய குணம் நிகழ்கின்றனவோ, அங்கங்கே பரப்பிரமசிவனுருடைய சிதசித்வஸ்து சரீரமென்றறியற்பாற்று, காணற்பாற்று என நன்கு நிரூபிக்கப்பட வேண்டுமெனல் முழுமையும் உசிதம். (உக)

*யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனுர்தாம்வருவர்மற்றத்தெய்வங்கள்
வேதனைப்படுமிறக்கும்பிறக்குமேல்வினையுஞ்செய்யு
மாதலானிவையிலாதானறிந்தருள்செய்வனன்றே.
(சித்தியார். உ. உரு)

# இரண்டாம் அத்தியாயத்து

# முதலாம் பாதம்.

## (க) ஸ்மிருத்தியதிகரணம்.

---

ஸ்ம்ருத்யநவகாஶ தோஷப்ரஸங்க இதி சேந்நாந்ய ஸ்ம்ருத்யநவகாஶ தோஷ ப்ரஸங்காத் (உ. க. க)

**(க௩௯) ஸ்மிருதிக்கு இடங்கொடாத் தோஷம் நேருமெனின் அன்று; அன்னிய ஸ்மிருதிகளுக்கு இடங்கொடாத் தோஷம் நேர்தலின்.**

முந்திய அத்தியாயத்திலே சச்சிதானந்தரூபரும், சர்வஞ்ஞத்துவ சர்வ சத்தித்துவாதி சுவரூபலக்ஷணமுடையரும், சகல ஜகத்தைப் பிறப்பிப்பவரும், அனைத்துக்கும் வேறானவரும், அனைத்துக்கும் ஆன்மாவானவரும், விரூபாக்ஷத்துவ கிருஷ்ணபிங்களத்துவ நீலகண்டத்துவ முதலிய விசிஷ்ட லீலாமங்கள சுவரூப சுவபாவமுடையரும், பவர் சிவன் சர்வர் மகாதேவர் பரமேசுவரர் முதலிய முக்கிய நாமங்களின் பொருளானவரும், பரம காருணிகரும், பரப்பிரமமுமாகிய சிவபெருமானிடத்திலே சமஸ்த வேதாந்தவாக்கியங்களும், அவற்றின் அனுகுணமாகிய ஸ்மிருதிகளும் தாற்பரியத்தினாற் சமந்வயமாதல் கூறப்பட்டது. இந்தச் சமந்வயம் வேதாந்த விருத்தமாகிய ஸ்மிருதி தர்க்காதிகளினால் விரோதமுறுதலின், அது இந்த அத்தியாயத்திற் பரிகரிக்கப்படுகின்றது.

முதற்கண்ணே சாங்கியஸ்மிருதி விரோதம் பரிகரிக்கப்படுகின்றது. முந்திய அத்தியாயத்திலே யாண்டும் கூறப்பட்டவற்றைச் சமந்வயஞ் செய்தலே இந்த அத்தியாய விஷயம்.

இங்ஙனங் கூறப்பட்ட வைதிகசமந்வயம் சாங்கிய ஸ்மிருதிப்பிரகாரம் ஸ்தாபிக்கப்படல் வேண்டுமா? அன்றா? எனச் சந்தேகம் எழுகின்றது.

எங்ஙனம்? உலகத்துக்குக் காரணம் பிரமம் என்று வேதங் கூற, கபில ஸ்மிருதியானது உலகத்துக்குக் காரணம் பிரதானம் என்று கூறுகின்றது. கபிலரோ மகாதபசுடையராதலின், அவர் வசனமும் பிரமாணமே. சிரேஷ்டமாகிய வேதமோ அனைத்துக்கும் முக்கியப்பிரமாணம்; இது அப்பிரமாணகந்தத்தையும் பொறுக்காது. இவ்விரண்டனுள்ளே எது எதனால் வாதிக்கப்படும் என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சாங்கியஸ்மிருதி ஒரே விஷயம் கூறுவதாய் (மற்றொன்றற்கு) அவகாசமுடையதன்றாய்ப் பிரபலமுடையதாக, வேதத்துக்குத் தரு

மத்தில் அவகாசமுடையதுபற்றித் துர்ப்பலமுடைமையின், அவ்வேதமானது (அவகாசம்பற்றி) ஸ்மிருதிக்கிணங்கச் *சங்கோசஞ் செய்யப்படல் யுக்தமாம் எனின்,

(சித்தாந்தம்) நாம் அங்ஙனம் இல்லை என்பேம்; எதனால்? வேதவிரோதமில்லாத மனுஸ்மிருதிகளுக்கும் அவகாசதோஷம் நேருமாகலின்.

ஹிரண்யகர்ப்பம் பச்யத ஜாயமாநம் (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௮)

"இரண்ணியகருப்பர் பிறக்கக் கண்டனர்" என்று பிரத்தியக்ஷமாகப் பிரமத்தையே காரணமாகக் கூறும் சுருதிக்கிணங்க,

அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்।
(மனு. க. அ)

"ஜலங்களைத்தான் ஆதியிலே சிருஷ்டித்து, வீரியத்தை அதில் எறிந்தார்" என்றற்றொடக்கத்தனவாக (மனு) ஸ்மிருதி கூறலின், இந்த ஸ்மிருதி அநுமேயசுருதிமூலமாகிய சாங்கிய ஸ்மிருதியினும் சிரேஷ்டமுடையதாகப் பிராமாணிகர் கொள்வர். (க)

இதரேஷாம் சாநுபலப்தே: (உ. க. உ)

(கசு0) பிறரது ஸ்மிருதிகளில் அது காணப்படாமையின்.

சர்வஞ்ஞர்களாகிய மனுமுதலியோருடைய ஸ்மிருதிகளிலே கபிலர் கொண்ட பிரதானகாரணவாதம் அங்கீகரிக்கப்படாமையின், பிரதானத்தைக் (காரண) மாகக் கூறும் ஸ்மிருதியானது வேதத்தை முதலாகக் கொண்டதன்றெனக் கூறுவது யுக்தம். ஆகலின், சாங்கியஸ்மிருதிப்பிரகாரம் வேதம் கூறிய முடிபைத் திரிவுபடுத்தல் கூடாது. (உ)

## (உ) யோகப்பிரத்தியுக்தியதிகரணம்.

---

ஏதேந யோக: ப்ரத்யுக்த: (உ. க. ௩)

(கசுக) அதுகொண்டு யோகம் உத்தரமிறுக்கப்பட்டது.

யோகாங்கத்தைப் பிரதிபாதிக்கும் இரண்ணியகருப்பரது ஸ்மிருதியும் பிரதானத்தையே காரணம் என உரைக்கின்றது. பிரதானத்தைக் காரணமாய்க் கூறும் சாங்கிய ஸ்மிருதி விரோதமுறுங்கால், இதற்கிசைய வேதம் திரிவுபடுத்தப்படல் வேண்டாம் எனின், ஆகுக.

அங்ஙனம் ஈண்டு இரண்ணியகருப்பஸ்மிருதிப் பிரகாரம் சுருதி திரிவுபடுத்தப்படல் வேண்டுமா? அன்று? என்பது சந்தேகம்.

---

* திரித்தல்.

(பூருவபக்ஷம்) கூறுதும். எங்ஙனமெனின்? சுவேதாசுவதரோபநிடதத்திற் பிரமசாக்ஷாத்காரத்துக்குக் காரணமாக யோகவித்தை விரிவாக எங்ஙனங் கூறப்பட்டிருக்கின்றதோ, அங்ஙனமே சாங்கியஸ்மிருதியானது அநுமேயசுருதி மூலமாயிருப்பினும், பிரத்தியக்ஷசுருதியை மூலமாகக் கொண்டதும், பிரதானத்தைக் காரணமாய்க் கூறுவதுமாகிய இரண்ணிய கருப்ப ஸ்மிருதிப்பிரகாரம் பிரமத்தைக் காரணமாகக்கொண்ட சுருதிபாகம் மாற்றப்படவேண்டியது யுக்தமே எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். யோகஸ்மிருதிக்கியையச் சுருதியை மாற்றுதல் கூடாது.

யொ௫ஸ்ரீத்தவ்ரு த்தி நிரொயஃ (பாதஞ்சலயோகம். க. உ)

"யோகமாவது சித்தநிவிர்த்தி நிரோதம்" என்று தொடங்கி, வைதிகாஷ்டாங்கயோகத்தைப் பிரதிபாதித்தன் மாத்திரத்திற்றன் அதற்குத் தாற்பரியமாமன்றி, பிரதானத்தைக் காரணமாகக் கூறும் அவைதிகத்திலன்று. இதிலே (பிரதானத்திலே) தாற்பரியமுளதாயின், சாங்கியஸ்மிருதி போல இதனையும் திரஸ்கரித்தலே நியாயம். ஆகலின், பிரதானத்தைக் காரணமாய்க் கொள்ளும் இரண்ணியகருப்பஸ்மிருதிக்கியையப் பிரமத்தைக் காரணமாகக் கூறுஞ் சுருதி மாற்றப்படமாட்டாதென்பது யுக்தமே. (௩)

## (௩) நவிலக்ஷணத்துவாதிகரணம்.

---

பின்னரும் சாங்கியதர்க்கப்பிரகாரஞ் சுருதி திரிவுபடுத்தப்படமாட்டாதென்பதுபற்றி ஆசங்கித்துச் சூத்திரகாரர் பரிகரிப்பாராயினர்.

ந விலக்ஷணத்வாதஸ்ய ததாத்வஞ் ஶப்தாத் (உ. க. ச)

**(கசஉ) (பிரமம் பிரபஞ்சத்துக்குக் காரணம்) அன்று; அதற்கு விலக்ஷணமாய் இருத்தலின்; அது அப்படியிருத்தலும் (பிரமத்துக்கு வேறாயிருத்தலும்) வேதத்தினால் அறியப்படுகின்றது.**

சாங்கியஸ்மிருதிப்பிரகாரம் சுருதி எங்ஙனந் திரிவுபடுத்தப்படாதிருக்கின்றதோ, அங்ஙனஞ் சாங்கிய தர்க்கப்பிரகாரம் அது (வேதம்) திரிவுபடுத்தற்பாற்றா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) எப்பிரகாரத்தினாலும் பிரமகாரணவாதம் தர்க்கப் பிரகாரந் திரிவுபடுத்தப்படுவதாகும்; எங்ஙனமெனின்? பிரமமானது இந்தப் பிரபஞ்சத்தினின்று முழுதும் வேறானமையின். அது பிரமத்தின் காரியமாகாது; எங்ஙனம்? வேறுபாடெய்தியதேல், அது சுருதியினாலேயாம்.

விஜ்ஞாநஞ்சாவிஜ்ஞாநஞ்ச (தைத். உ. ௬)

"விஞ்ஞானமும் அவிஞ்ஞானமும்" என்றற்றொடக்கத்த சுருதியானது பிரபஞ்சம் விகாராஸ்பதமாய் அவிஞ்ஞான முதலிய புருஷார்த்தரூபமில்லாததாயுள்ளதெனக் கூறுகின்றது. ஆகலின், சத்தியஞானனந்தரூபமுடைய பிரமத்தினின்று இது வேறாயிருக்கின்றது; அவ்விரண்டும் கோவும் மகிஷமும் போலிருப்ப, அவை காரணமும் காரியமுமாக எங்ஙனம் கூறப்படும்? (ச)

அபிமாநி வ்யபதேஶஸ்து விஶேஷாநுகதிப்யாம் (உ. க. ரு)

**(கசரு) ஆனால் விசேஷத்தினாலும் சேர்க்கையினாலும், அது அபிமானியையுற்றுக் கூறுகின்றது.**

(பூருவபக்ஷத்துக்கு விரோதமாய ஆக்ஷேபம்) பிரபஞ்சமானது அசேதனமாதல்பற்றி அது சேதனப் பிரமத்தினின்று வேறுமாயின்,

தம் ப்ருதிவ்யப்ரவீத் (தைத். சங். ரு. ரு. உ)

"அவருக்குப் பிருதிவி சொல்லிற்று,"

ஆபோ வா அகாமயந்த (தைத். பிராம. கூ. க. ரு. சரு)

"ஜலங்கள் மெய்யாய் விரும்பிய,"

ஶ்ருணோத க்ராவாணோ விதுஷ: (தைத். சங். க. கூ. கங)

"புத்தியுள்ள கற்களே! கேளுங்கள்" என்றற்றொடக்கத்தனவாகப் போந்த வாக்கியங்களிலே (ஜடப்பொருள்கள்) சேதனமாகக் கூறப்படுதல் எங்ஙனம்? ஆகலின், இவ்வுலகமனைத்துஞ் சேதனம். அதுகொண்டு பிரமமும் பிரபஞ்சமும் சேதனசேதனரூபத்தில் வேறு பாடின்றாம் எனச் சங்கித்தல் கூடாதாம் எனின்,

(பூருவபக்ஷியின் உத்தரம்) அங்ஙனங் கூறல் யுக்தமன்று. யாண்டுஞ் சேதனகாரியம் கூறப்படுவது அதின் அபிமானிதேவதா விஷயம் என்றேயறியப்படுகின்றது;

ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா: (சாங். சு. கூ. உ)

"ஆ! நான் மூன்று தேவதைகளையும்" என்றதிலே தேவதாசப்தவிசேஷமுண்மையானும்,

அக்நிர்வாக்பூத்வா முகம் ப்ராவிஶத் (ஐத. உ. ச)

"அக்கினியானது வாக்காகி முகத்திற் பிரவேசித்தது" என்றற்றொடக்கத்தவற்றால், அசேதனப் பொருளோடு அபிமானிதேவதையும் உடன் நிகழ்வதாலுமாம்; ஆகலின், அசேதனத்துவமுதலியவற்றினலே உலகம் பிரமத்துக்கு விலக்ஷணம். இங்ஙனம் உலகத்தைக் காரியமாகவும் பிரமத்தைக் காரணமாகவும் ஆக்கும் யுக்தி ஒழிக்கற்பாற்றே. (ரு)

ஊூஶூ௫தெ நா (உ. க. சு)

(கசச) ஆனல் அது காணப்படுகின்றது.

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. பிரமமும் பிரபஞ்சமும் விலக்ஷண மாயினும் அவற்றுக்குக் காரியகாரணவியல்பு எய்துகின்றது. அசேதன மாகிய கோமயத்தினின்று சேதனமாகிய விருச்சிகம் பிறக்கக் காண்டலா னும், சேதனனாகிய புருஷனிலிருந்து அசேதனமாகிய உரோம முதலியன வளரக் காண்டலானுமாம். ஆகலின், சுருதிசமந்வயமானது சுஷ்கதர்க்கத் தினற் பாதிக்கப்படமாட்டாதென்பது துணிபு. (சு)

பின்னரும் ஆசங்கித்துச் சூத்திரகாரர் பரிகரிக்கின்றார்.

ஊஸஜிதி வெஊ வ்ரதிஷெயொதாஹூாகு (உ. க. எ)

(கசரு) (காரியம்) அசத்து எனின் அன்று; மறுத்தல் மாத்திரமுண்மையின்.

(ஆக்ஷேபம்) இங்ஙனம் காரியகாரணம் இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுதலின், காரணத்திற் காரியம் இல்லையே; அங்ஙனம் சுருதியும்

ஊஸஜா ஊஜெ௯ ஹூவிஹ (தைத். உ. எ)

“அசத்துத்தானே முதற்கண் இருந்தது” என்று கூறுகின்றதெனின்,

(உத்தரம்) அங்ஙனங் கூறுவது அடாது; காரணமும் காரியமும் ஒரே இலக்ஷணமுடையவாகவே இருக்கவேண்டுமென்பதை மறுத்து அச் சுருதி கூறினமையின்; அதுகொண்டு காரியமும் காரணமுமாகிய பிர பஞ்சமும் பிரமமும் ஒரே வஸ்து என்பதினின்றிழுக்காதே. (எ)

(ச) அபீதியதிகரணம்.

---

ஊவீதெள தஉஹ்ரஸஂஙாஉஸொஜஸ௱ (உ. க. அ)

(கசசு) பிரளயத்தில் அங்ஙனமிருத்தல் (பிரமம் ஜகத் தைப் போலிருத்தல்) நேர்தலின், பொருத்தம் அன்று.

சற்காரியவாதத்தினலே காரிய காரணமாகிய உலகமும் பிரமமும் ஒரே வஸ்துவாமாயின், வேதசமந்வயம் தர்க்கவாயிலாக ஒழிக்கப்படுவதா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது தவிர்க்கப்படல் வேண்டும்; எங்ஙனம்? உலக மும் பிரமமும் ஒரே வஸ்து என்று கூறப்படுதலான். அங்ஙனமாயின், பிரபஞ்சத்தைப்போல, பிரமமும் விகார அஞ்ஞானமுதலிய தீமைகளுக் கியைந்ததாய் முற்றுகின்றது. ஆகலின், வேதாந்த வாக்கியங்களெல்லாம்

பொருந்தாதாகின்றன. அதுபற்றி இந்த வேதாந்த வாக்கியப்பொருள் நியாயநெறியினால் வாதிக்கப்படுவதாம். (அ)

ந து த்ருஷ்டாந்தபாவாத் (உ. க. கூ)

(கசஎ) ஆனால் அன்று; (சமான) திருஷ்டாந்தமுண்மையான்.

"அன்று" (ந) என்றது பூருவபக்ஷம் ஒழிக்கப்படல் வேண்டும் என்பதைக் குறிக்கின்றது.

யஸ்யாத்மா ஶரீரம் (மத்தியந்தினசாகை)
யஸ்யாவ்யக்தம் ஶரீரம் |

"எவர்க்கு ஆன்மாச் சரீரம்; எவர்க்கு அவ்வியக்தம் சரீரம்" என்றற்றொடக்கத்த சுருதிகளானும்,

விஶ்வம் தேவதேவஸ்ய விஶ்வேஶஸ்ய சராசரம்|
ஸர்வம் ந ஜாநந்தி பஶவ: பாஶமோஹிதா:||
(வாயு. உத். கூ: க)

"சரமும் அசரமுமாகிய இந்த உலகம் தேவாதிதேவரது சரீரம்; பாசமிகுதியினாற் பசுக்கள் இப்பொருளை அறியா" என்றற்றொடக்கத்த புராணவாக்கியத்தினாலும், சித்தும் அசித்துமாகிய சேதனத்தையும் அசேதனத்தையும் சரீரமாகவுடைய பரப்பிரமசிவனார் காரியமாயும் காரணமாயும் நிலையுறினும், குணதோஷங்களைப் பகுக்குமிடத்துத் திருஷ்டாந்தமுண்மையின் வேதாந்த வாக்கியமனைத்துஞ் சாமரசியமாகப் பொருத்தமுறுவனவாயின. எங்ஙனமெனின்? சரீரத்தோடு கூடிய மனிதர் முதலாயினோரது ஆன்மாவுக்குப் பாலிய, யௌவன, விருத்தாவஸ்தைகள் நிகழினும், பாலத்துவ முதலியன சரீரத்துக்குமாத்திரமே; இன்பமுதலியன ஆன்மாவுக்கே; அங்ஙனம் ஈண்டும் சரீரமாகிய சேதனாசேதனப் பொருள்களிலே நிகழும் அஞ்ஞானம் விகார முதலிய தீமைகள் சரீரமாய் அமைந்த சேதனாசேதனங்களுக்கே உரியவாம். அவயவமின்மை, அவிகாரித்துவம், சர்வஞ்ஞத்துவம், சத்தியசங்கற்பத்துவம் என்னுங் குணங்கள் ஆன்மாவாயுள்ள சிவபெருமானுக்கேயாம். இங்ஙனம் திருஷ்டாந்தவுண்மையாற் பிரமத்தையுற்றுக் கூறிய சுருதியிற் பொருத்தமின்மை இன்றே. (கூ)

ஸ்வபக்ஷதோஷாச்ச (உ. க. கo)

(கசஅ) தனது பக்ஷத்தின் தோஷத்தினாலும்.

தர்க்கத்தை மாத்திரம் அவலம்பிப்பின் தன்பக்கத்திற் பிரதானவாதியினாலே நிர்விகாரபுருஷர் சந்நிதிப்பாற்படுத்தப் பிரகிருதி பிரவர்த்திக்கும்

கால், அன்னியோன்னிய தரும அத்தியாசம் கூறவியலாது; ஒன்றில் மற்றொன்றின் தர்மத்தை நினைப்பதாகிய அத்தியாசம் நிர்விகாரபுருஷனுக்கு எய்தாது. அசேதனமாகிய பிரகிருதிக்கும் நினைத்தலாகிய அத்தியாசம் எய்தாதே. ஆகலின், பிரதானகாரணவாதமே தர்க்கத்தினுற் றவிர்க்கப் படுவதாம். (க0)

தகூ௱ா வ்ரதிஷ்டாநாக் (உ. க. கக)

(கசகூ) தர்க்கம் ஸ்தாபிக்கப்படாமையின்.

தர்க்கம் ஸ்தாபிக்கப்படாமையானும், பிரதானகாரணவாதம் அதனைப் பிரமாணமாகக் கொண்டமையானும், ஆண்டுப் பிரதிதர்க்கம் நேர்தலானும் பிரதானவாதம் வாதிக்கப்படுவதன்றிப் பிரமகாரணவாதம் வாதிக்கப்படுவதன்று. (கக)

சுந்யதாநுமெயமிதி செதெவமவ்யநிமொக்ஷ வ்ரஸங்கஃ|

(உ. க. கஉ)

(கரு0) வேறு பிரகாரமாய் அனுமானிக்கலாம் எனின், பின்னரும் மீட்சியின்மை நேர்கின்றது.

பிரதிதர்க்கத்தினுற் றவிர்க்கப்படுவது நேராவண்ணம் வேறு பிரகாரமாய்ப் பிரதானத்தை அனுமானிக்கலாம் என்னும் வாதமும் யுக்தமன்று; ஆண்டுப் பிரதிதர்க்கத்தின் கலகம் நேர்தல்பற்றி, நிலையின்மை என்னும் குற்றத்தினின்று நீங்காமையே நேர்கின்றது. அதுபற்றிச் சுஷ்கதர்க்கத்தை மூலமாய்க்கொண்ட பிரதானகாரணவாதம் ஒழிக்கப்படுமேயன்றிப் பிரபல சுருதிப்பிரமாணத்தினுற் சித்தித்த பிரமகாரணவாதம் ஒழிக்கப்படுவதன்றென்பது யுக்தம். (கஉ)

(ரு) சிஷ்டாபரிக்கிரகாதிகரணம்.

---

ஏதெந ஶிஷ்டாவரிக்ரஹா அவிவ்யாவ்யாதாஃ (உ. க. கரு)

(கருக) இதனுல் (சிஷ்டர்களால் அங்கீகரிக்கப்படாத) ஏனை மதக்கோட்பாடுகளும் (தவிர்க்கப்பட்டன என்று) விளக்கப்பட்டன.

தர்க்கத்தை மூலமாய்க்கொண்ட சாங்கிய தரிசனம் நிலையின்மை முதலிய பற்றி எங்ஙனம் ஒழிக்கப்பட்டதோ, அங்ஙனம் அதேகாரணத்தினுற் கணுதர், அக்ஷபாதர் முதலாயினேர் பரபக்ஷங்களும் ஒழிக்கற்பாலனவாமெனக் கோடற்பாற்று. அஃதாவது கணுதர் முதலியோர் மதத்திற் சித்தித்த பரமாணுகாரணவாதமும் நிராகரிக்கப்பட்டதென்பது. (கரு)

## (௬) போக்திராபத்தியதிகரணம்.

ஹோக்த்ராவத்தேரவிஹாமஸ்ரோத்ஸ்யாஸ்லோகவச (உ. க. கச)

**(கநிஉ) அவர் போக்தா ஆகவேண்டுதலின் வேற்றுமை இல்லையாலோ எனின், உலகத்திலே போல (வேற்றுமை) ஆகுக.**

முன்னரே சிதசித்பிரபஞ்ச விசிஷ்டான்மாவாகிய சிவபெருமான் தாமே அத்துவிதீயராய்க் காரணமும் காரியமும் ஆவர் என்று விசிஷ்ட சிவாத்துவைதங் கூறப்பட்டது. அந்த வேத சமந்வயசித்தமாகிய யுக்தி தவிர்க்கப்படுவதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சிதசித்பிரபஞ்சத்தைச் சிவபெருமான் சரீரமாகவுடையர் என்று அங்கீகரிப்பின், அப்போது சரீரமுடையர் என்பது இவர்க்குச் சித்தித்தது. அங்ஙனமே, ஆன்மாப்போல அவர் சரீரமுடைமையாற் சரீர சம்பந்தமாகிய சுகதுக்கமுடையராவர்; ஆகலின், சம்சாரியாகிய ஆன்மாவுக்கும் சிவபெருமானுக்கும் வேறுபாடின்று. இவன் ஆன்மா இவர் சிவன் என்று பிரித்துக் கூற இயலாது. சிவபெருமான் ஜகத்விசிஷ்டராயிருக்கின்றனர் என்னும் வாதத்திலே அவர் தோஷமனைத்தும் நீங்கியிருக்கின்றார் என்று கூறுவது அடாதென்று பூருவபக்ஷி கொள்கின்றான் என,

(சித்தாந்தம்) ஆண்டு விரோதமில்லை. உலகத்திலே சரீரமுடையனாயினும் அரசனானவன் பிறன் ஒருவனுக்கு வசப்படாதவனாய், தனது ஆஞ்ஞைக்கு அடங்காமை காரணமாக நேரும் அநிஷ்டத்துக்கு ஆளாகாமை பற்றி அவனது போக்திருத்துவம் பிறரது போன்றிராமை போல, சிவபெருமான் நிஷ்களங்க சமஸ்த மங்கலகரராயிருத்தலின் அவர் ஆன்மாவினின்று வேறுபடுவர். பராதீனராயிருந்தாலன்றிச் சரீரவுண்மைபற்றித் தோஷத்துக்காளாகார்.

ஜ்ஞாஜ்ஞௌ த்³வாவஜாவீஶாநீஶௌ (சுவே. க. ௯)

“அறிஞனும் அறிவிலனுமாம் இருவரும் பிறவாத ஈசனும் அநீசனும்” என, சிவபெருமானுக்கும் ஆன்மாவுக்கும் சுவாதந்திரியமும் அசுவாதந்திரியமும் உள என்பது தாமே சித்தித்ததே. ஆகலின், சுவதந்திரராகிய சிவபெருமானும் அசுவாதந்திரனாகிய ஆன்மாவும் சமமாகச் சரீரமுடையரேனும்பேதமல்லரென்றில்லை. ஆகலின், விசிஷ்டாத்துவைதத்துக்கு ஆனி இல்லை. (கச)

## (எ) ஆரம்பணுதிகரணம்.

சுவாதந்திரியம் அசுவாதந்திரிய முதலிய விருத்த குணங்கள் இருத்தல்பற்றி ஆன்மாவுக்கும் பரமான்மாவுக்கும் வேறுபாடிருப்பினும், காரிய

காரணராகிய அவ்விருவர்க்கும் அநந்நியத்துவமும் வேறுபாடின்மையும் சித்திக்கின்றனவேயென்று (சூத்திரகாரர்) கூறுகின்றார்.

தத நந்யத்வமாரம்பணஶப்தாதிப்ய: (உ. க. கடு)

(கடுந) அவ்விருவரும் அனன்னியர், ஆரம்பணமுதலிய சப்தத்தினால்.

ஈண்டுச் சுருதிகள் ஒரேபிரகாரமாகக் கூறும் காரிய காரணமாகிய பிரபஞ்சமும் பிரமமும் வேறில்லை எனக் கோடல் யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

சேதனத்துவ அசேதனத்துவரூப விருத்தகுணமுடைமைபற்றி ஒன்றுக்கொன்று விலக்ஷணமாதலினாற்றான் இச்சந்தேகம் உளதாயிற்று.

(பூருவபக்ஷம்) அவ்விரண்டும் அநந்நியமாதல் எங்ஙனம் கூறற்பாற்று? சிவபெருமான் சர்வஞ்ஞதாதி குணமுடைமையானும் ஆன்மா அஞ்ஞானமுடைய போக்தாவாயிருத்தலானும், அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் வேற்றுமையுடையர் என மேலேஅதிகரணத்திற் காட்டப்பட்டது. சித்தும் அசித்துமாகிய வஸ்துக்கள் இரண்டுக்கும் மிகுதியும் வேறுபாடிருத்தலின், அவ்விரண்டும் அனன்னியத்துவம் என்னும் கதைதூரத்தில் ஒதுக்கற்பாற்றே. காரியகாரணமாயிருத்தல் வேற்றுமையின்மைக்குச் சாதகமாகாது; கோமயம் விருச்சிக முதலிய காரணகாரியமாயிருப்பினும் வேறாகக் காணப்படலான். கடம் மட்பிண்டமுதலியவைகளினும் அர்த்தம் கிரியை முதலிய வியவகாரங்களில் வேற்றுமைபற்றி அபேதமில்லை. இன்றேல், காரியமும் காரணமும் அத்தியந்த அபேதமாகுமிடத்துப் பிரபஞ்சமும் பிரமமும் ஒன்றாதலின், யாண்டும் கர்த்தா கர்மம் கிரியை முதலிய வியவகாரம் இல்லையாகும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். காரியமாகிய பிரபஞ்சம் காரணமாகிய பிரமத்தினின்று வேறின்றே; அது எங்ஙனம் அறியப்படுகின்றது? எனின்,

வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்। (சாந். சு. க. க)

"வாசாரம்பணமானது விகார நாமதேயம்; மிருத்திகை என்பதுதான் உண்மை"

ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் (சாந். சு. உ. க)

"சத்துத்தானே, புதல்வனே, முதற்கண் இருந்தது, இது ஏகமாயே இரண்டாவதற்றதாய் இருந்தது"

ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய (சாந். சு. உ. ந)

"அது நான் அநேகமாய் ஆவேன் என்று சங்கற்பித்தது"

ஐததாத்ம்யமிதம் ஸர்வம் தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்வமஸி।
(சாந். சு. அ. எ)

"இவையெல்லாம் அவரையே ஆன்மாவாகக் கொண்டன; அது சத்தியம்; அது (பரம) ஆன்மா; சுவேதகேதுவே, அது நீயாகின்றனை"

விஶ்வம் பூதம் புவநம் சித்ரம் பஹுதா ஜாதம் ஜாயமாநஞ்ச யத் ஸர்வோ ஹ்யேஷ ருத்ர: (தைத். ஆரணி. க0. உச. சஉ)

"அநேகமாக ஆனவும் ஆகப்போகின்றனவுமாகிய எல்லா உலகமும், விசித்திர புவனமுமாம் இவை யெல்லாம் உருத்திரர்" என்னுஞ் சுருதிகளினுற் பெறப்படுகின்றது. (கரு)

காரியம் காரணமாயிருத்தல் வேறுபாடின்மைக்குச் சாதகமாகாதெனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

பாவே சோபலப்தே: (உ. க. கசு)

(கருச) (காரியம்) இருக்குமிடத்தும் (காரணம்) புலப்படுதலான்.

கடமுதலிய காரியமாக இருக்குமிடத்தும், அதே மட்பொருள் கடமென்றறியப்படுகின்றது. ஆகலின், காரணத்தினின்றும் காரியம் அநன்னியமே.

வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்।
(சாந். சு. க. க)

"வாசாரம்பணம் விகாரமும் நாமதேயமுமாம்; மிருத்திகையென்பதுதான் சத்தியம்" என்னுஞ் சுருதியினுலுங் கூறப்படுகின்றது. அஃதாவது, விகாரமும் நாமதேயமும் ஒருபொருளையுற்றுப் பேசவும், அதன் கிரியாரூபவியவகாரஞ் செய்யவும் வாய்ந்தனவாகின்றன. மண் திரவியமே; கடமுதலிய ரூபமாகிக் கடமுதலிய பெயரைப் பெறும்போது, அது ஓர் காரியத்துக்கு உதவவும், அவ்வுருவத்தையுற்றுப் பேசவும் உதவுகின்றது. வாஸ்தவத்திற் கடமுதலியன மண் என்பதே பிராமாணிக சத்தியம்; மண் ஒழிந்து கடம் காணப்படாமையின். இன்றேல் வாசாரம்பணம் விகாரம்; விகாரமாகிய கடம் வாசாரம்பணம். இது கடமென்பது வாசாரம்பவிஷயமாத்திரமாயுள்ளது. மண் திரவியந்தான்; வியவகாரசித்தியின் பொருட்டுப் பிறக்கும் மற்ருேர் அவஸ்தை. ஆனல் மண்ணைத்தவிர வேறு பொருளில்லை.(கடத்திலே) மண் என்று கூறப்படும் நாமதேயமே சத்தியம். கடமுதலியவற்றை மண் எனக்கொண்டுதான், ஆண்டும் அனைத்தும் மட்குடமுதலிய பெயரை

யுடைத்தாதல் சத்தியம். (மண்) உண்மையான பொருளாயிருத்தலிற் சத்தியம்; ஆயின் வேறொரு பொருளெனக்கொண்டன்று. ஏனெனிற் கடம் மண் எனவே கூறத்தகும். அதுபற்றிக் காரியம் காரணத்தினின்று வேற்றுமை யிலது. மண்ணும் கடமும் ஒரேபொருளாயினும் காரியாதி வியவகாரபேதம் அவஸ்தாபேதத்தினால் நேர்கின்றதே. ஆகலின், மண்ணும் கடமும் போலப் *பிரமமும் பிரபஞ்சமும் வியாபகவியாப்பியபாவத்தினால் அநன்னியம் என்க.

ஶக்த்யாதி ச வ்யாப்த்யந்தம் ஶிவதத்வஸமுத்பவம்।
தேநைவைகேந தத் வ்யாப்தம் யதா கும்பாதிகம் ம்ருதா॥

(வாயு. பூ. உ௫ : க௮)

"சத்திமுதற் பிருதிவியந்தம் சிவதத்துவத்தினின்றும் உற்பத்தியாயிற்று, கும்பமுதலியன மண்ணினால் வியாபிக்கப்பட்டாற் போல, அவர் ஒருவரால் (சிவபெருமானால்) அது வியாபிக்கப்பட்டது" எனப் புராணமும் கூறுகின்றது.

(ஆக்ஷேபம்) இந்தக் கடம் மண் என்றவிடத்து, மண்ணின்வியாத்தி கடத்திலே புலப்படுமாறு போல, இந்தப் பிரபஞ்சம் பிரமமென்றவிடத்துப் பிரமத்தின் வியாத்திகாணப்படவில்லையே எனின்,

(உத்தரம்) "இருக்கும் கடம்; இருக்கும் படம்" என யாண்டும் சத்ரூபமாகிய பிரமத்தின் வியாபகங்காணப்படுகின்றது. உலகமானது சத்சித்ரூபமான சிவபெருமானால் வியாபிக்கப்படாதவிடத்து, இருத்தல் அறிதல்கள் அற்று, இருக்கிறதென்பதும் தோற்றுகிறதென்பதும் எங்ஙனம் காணப்படும்? வஸ்துவின்மையே நேரும்; ஆகலின் மட்கடமுதலியபோலக் காரணமாகிய சிவபிரானாற் காரியமாகிய பிரபஞ்சம் வியாபிக்கப்பட்டு அவரோடு வேறிலதாயிருக்கின்றதெனச் சித்தித்தது. (க௬)

ஸத்வாச்சாவரஸ்ய (உ. க. க௭)

(க௫௫) பின்னுள்ளது (முன்) உளதாதலினாலும்.

காரியம் காரணத்தில் உளதாதலின், காரியம் காரணத்தினின்று அநன்னியம். கட சராவமுதலியன முன்னரோதானே மண்ணாயிருந்தமையின், கடமுதலியன மண் என அறியப்படுகின்றதன்றோ. (க௭)

அஸத்வ்யபதேஶாந்நேதி சேந்ந தர்மாந்தரேண வாக்யஶேஷாத் யுக்தேஶ்ஶப்தாந்தராச்ச (உ. க. க௮)

(க௫௬) அசத்தெனக் கூறப்படலாலெனின், அன்று; வாக்கிய சேடத்தினாலும், யுக்தியினாலும், வேறு வாக்கியங்க

* வ்யாப்யவ்யாபகயோரைக்யம் ஸத்ஸ்வபி விஶேஷு।

(சர்வஞ்ஞானோத்தரம்)

ளினுலுங் காட்டப்பட்டவாறு, அது மற்ருேர் தருமத்தோடுற்றமையாலாம்.

(ஆக்ஷேபம்)

ஊஉ௦ வா ஊெஹ௫ வெநவ கிஜ நாவீக॥
(தைத். பிரா. உ. உ. கூ. ௫௦)

"ஈதொன்றும் முதற்கண்ணே இருந்திலது" என்னுஞ் சுருதி காரியம் காரணத்தில் முதற்கண் இருந்திலது என்று கூறலின், காரியம் காரணத்தில் இன்ருமெனின்,

(உத்தரம்) அன்று; பிரபஞ்சமானது ஸ்தூலத்துக்கு மாருகிய சூக்குமரூப தருமத்தோடிசைந்தமையினுல், "அசத்" என்று கூறப்பட்டதன்றி, இல்லை என்றமையான் அன்று. எதனுல்?

தஊஸெவ ஸநொநாzகூஈாஈதஸ்யாழ (தைத். பிரா. உ. உ. கூ. ௫௦)

"அசத்தாயிருந்தபோதே நான் ஆகுக என்று சங்கற்பித்தது" என்னும் வாக்கியசேஷத்தினுல், சங்கற்பமும் சத்பொருளுக்கேதான் ஆகும். அங்ஙனமே அவஸ்தாரூபமாக இருந்தமைபற்றி அசத்தெனப்பட்டதென்று கொள்ளும் யுக்தியும் பெறப்படுகின்றது. ஒன்றுக்கொன்று மாறுபடும் இயல்புடைய பிண்டத்துவ, கடத்துவ, கபாலத்துவரூபமாயிருக்கும் தர்மங்களுடன் முன்னர்க் கடம் இருந்திலது, இப்போதுள்ளது, பிற்போதிராது என்றவிடத்து, எக்காலத்துமுள்ள மண் திரவியத்தை அசத்து முதலியவாகக் கூறுமிடத்து, அதற்கு வேருக மற்ருேர் அபாவம் இல்லை என்பதாம்; அஃதாவது, அசத்தென்னும் நாமம் பற்றிய மற்ருேர் அவஸ்தை (தருமம்) கற்பிக்கற்பாற்றென்பது; இதுபற்றியே,

தஜெஉ௦ தஹ்ய-வ்யாக்ரு தஜோஸீ தூணாஜ-வொஹ்யாவெ வ்யாகிுயதெ (பிரு. ௩. ச. எ)

"இது அப்போது பிரிவற்றிருந்தது; பின்னர் நாமரூபமாக விரிவுறப்படுகின்றது" என்றற்ருெடக்கத்தனவாக அபிப்பிராயம்பற்றிய பிற சுருதிகளும் உள்ளன. முன்னர்த் தமக்கு அபின்னமாய நாமரூபவிபாகத்துக்கு அநர்ஹமாகிய சூக்கும சிதசித்ரூப பராசத்தியை அடக்கிய சிவபிரானுர் தனியே இருந்தனர். பின்னர் முந்திய நிலைமைக்கு மாருக ஸ்தூலமாகிய நாமரூபவிபாகத்துக்கு அர்ஹமாய்ச் சிதசித்ரூபமாகிய அப்பெற்றியதாம் சத்தியைப் புறத்தே விரிக்கின்றனர். அப்பொழுது சத்தியையுடைய சிவபிராஞரது சங்கோச அவஸ்தை பிரளயம்; விகாச அவஸ்தை சிருட்டி. இது பற்றியே,

விஊாவெத்வ ஹி தெவொஜஷீ தகிுாவஸாஜ ஹிஃ।

யொதீவ ஙிரூவாஜா நகேஷஜாதம வூகாஸயெஜ॥
"உபாதானமொன்றுமின்றி யோகி போலச் சிதான்மாவாகிய தேவர் இச்சாவசத்தினலே தமது அகத்துள்ளதைப் புறத்து வெளிப்படுத்துகின்றனர்" என்று கூறும் ஆப்தவசனமும் உளது. அஃதாவது, தமக்கு வேருக ஓர் உபாதானம் வேண்டாது தாமே உபாதானமாகின்றனர் என்பதாம். ஆகலின், பரமகாரணராகிய பரப்பிரமசிவபிரானினின்று வேறுருத உலகம் காரியமே. (கஅ)

மற்ருேர் நிதர்சனங் கூறப்படுகின்றது.

வடவஜ (உ. க. கக)

(கநள) *படம் போலவும்.

சுருக்கும் போது சூக்குமரூபமாயிருந்த படமானது விரிக்கும் போது அவ்வாறு மகாபடமாய்க் குடிசைரூபமாகிய காரியமாய் ஆகின்றவாறு போல, பிரமம் சங்குசிதாவஸ்தையிற் காரணமாய், பிரசாரிதாவஸ்தையிற் காரியமுமாகின்றது. (கக)

யயா அ வூாணாதிஃ (உ. க. உ௦)

(கநஅ) பிராணுதி போலவும்.

வாயு ஒன்றே கிரியாபேதத்தினுற் பிராணன் முதலிய பல பேதம் அடைதல் போல, பிரமம் ஒன்றே சத்தி வியாபாரபேதத்தினுற் †சதாசிவ முதலிய ரூபபேதத்தையும் அடைகின்றது. ஆகலின், காரணமாகிய பிரமத்தினின்றும் அநன்னியமாயுள்ளது காரியமாகிய உலகம் எனல் யுக்தம். (உ௦)

மேலே கூறப்பட்ட அர்த்தத்தைச் சூத்திரகாரர் ஆக்ஷேபித்துச் சமாதானங் கூறுகின்றனர்.

உதரவ்யவஷெஶாதிதாகரணாதி ஷொஷ வூஸக்திஃ (உ. க. உக)

(கநக) மற்றென்ருேடு இருப்பதாகக் கூறப்படலான், இதத்தைச் செய்யாமை முதலிய தோஷம் எய்துகின்றது.

(ஆக்ஷேபம்)

தகூவஸி (சாங். சு. அ. எ)
"அது நீயாகின்றனை"

* இப்பிரமசூத்திர நீலகண்டபாஷ்யத்திருந்தே படங் குடிலாம் உவமையை எடுத்து ஸ்ரீஅருணந்திசிவாசாரியர் சித்தியார் க. உச-ல் "புகழ்ந்திடும் விருத்தியாகும் படங் குடிலாகுற் போல" என்ருர்.

† இந்தச் சதாசிவர் சாதாக்கிய தத்துவத்தினராமன்றி, சிவதத்துவத்தின்பாற்பட்ட பரப்பிரமநிஷ்களமகாசதாசிவரன்றேன்க.

ஃயஶோத்மா ஶ்ரஹ்ம (பிரு. ச. டு. கரு)

"இந்த ஆன்மா பிரமம்" என்றற்றொடக்கத்தவற்றிற் காரியமாகிய ஆன்மா காரணமாகிய பிரமமென்று கூறப்படலான், அவ்விரண்டும் வேறில்லை எனக் கூறப்பட்டது. இங்ஙனமாகுங்கால், சர்வஞ்ஞரும் வியாபகருமாகிய சிவபெருமான் உலகத்தைப் படையாமை அவர்க்கு நன்மையாகவும், அதனைப் படைத்தல் அவர்க்குத் தீங்காகவுமன்றோ நேர்கின்றது. ஆகலின், சர்வஞ்ஞரும் சத்தியசங்கற்பருமாகிய சிவபெருமான் தம்மினின்று வேறுபடாத ஆன்மாவினது தாபத்தைத் தம்முடையதென்று அறிந்தும் சம்சாரநிமித்தமாயுந் தீதாயுமுள்ள சிருட்டியை எங்ஙனம் முயன்று இதமாகிய சிருட்டியாமையை விடுத்தனர்? அதுகொண்டு ஆன்மா அநன்னியமாயிருக்கும்போது, தமக்கு இதமாயுள்ளதைச் செய்யாமையானும் அகிதமாயதைச் செய்வதானும். அறிவு சூன்னியராதன் முதலிய தோஷஞ் சிவபெருமானுக்கு எய்துகின்றன; அதுபற்றி, காரியகாரணராம் ஆன்மாவும் சிவபெருமானும் அநன்னியமாதல் அயுக்தமே எனின், (உக)

(உத்தரம்) யுக்தம் எனக் கூறப்படுகின்றது.

ஃயிகஷு ஹெஉநிஜெஶாத் (உ. க. உஉ)

**(கருO) ஆயின் (காரணம்) சிரேட்டம்; பேதங் கூறப்படலான்.**

காரியமும் காரணமும் அநன்னியமாயினும்,

விஶ்வாயிகொ ருஉெரா மஹஷிஃ (தைத். ஆரணி. கO. கஉ. உஅ)

"உலகங்களுக்கெல்லாஞ் சிரேட்டர் மகர்ஷியாகிய உருத்திரர்" என்று சுருதி கூறுதலான், ஈண்டுக் காரியமாகிய சிதசித்பிரபஞ்சத்தினின்று காரணஞ் சிரேட்டமென்று அறியப்படுகின்றது. அங்ஙனம் பின்னர்ப் போதருஞ் சுருதிகளினலே, பேதநிர்த்தேசம் என்று சூத்திரம் கூறினமையின், ஆன்மாவும் சிவபெருமானும் வேறென்று காட்டப்படுகின்றனர்.

விஷ்யா ஶவிஷெ்ய ஈஶதெ யஸ்து ஸொஶ்ந்யஃ (சுவே. டு. க)

(க) "வித்தையையும் (ஆன்மாவையும்) அவித்தையையும் (அசேதனத்தையும்) ஆளும் ஈசுரர் வேறு"

க்ஷராத்மாநா வீஶதெ தெவ ஏகஃ (சுவே. க. கO)

(உ) "(பிரதானமாகிய) க்ஷரத்தையும் ஆன்மாவையும் தேவர் ஒருவர் ஆளுகின்றனர்"

ஷ்யகாத்மாநஂ ஷெ்ரிதாரஂ சஷ்வா (சுவே. க. ௬)

(ங) "ஆன்மாவையுஞ் செலுத்துபவரையும் வேறு என நினைந்து"

ஹாஸுவண௺ ஸயுஜா ஸ஖ாயா (சுவே. ச. சு)

(ச) "பிரியா நண்பினேடு இரு அழகிய பக்ஷிகள் (ஆன்மா பரமான்மாக்கள்)"

ஔ ஸ்ரஹணீ வெஜிதவெ்ய வாணாவாஈ (மைத். சு. உஉ)

(ரு) "பரமும் (பரமான்மாவும்) அபரமும் (ஆன்மாவுமாகிய) இரு பிரமங்களும் அறியற்பாலன"

ஜ்ஞா ஜ்ஞௌ தாவஜாவீஶாநீஶௌ (சுவே. க. கூ)

(சு) "பிறவாதவராகிய அறிஞனும் அஞ்ஞனுமாம் இருவரும் (முறையே) ஈசரும் (சிவபிரானும்) அநீசனுமாம் (ஆன்மாவுமாம்)"

நித்யோ நித்யாநாம் சேதநஶ்சேதநாநாம் (கட. ரு. கங)

(எ) "அவர் நித்தியப்பொருள்களுள்ளே நித்தியரும், சேதனப்பொருள்களுள்ளே சேதனரும்"

அந்த: ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் (தைத். ஆரணி. ங. கக. உக)

(அ) "அவர் (பரமான்மா) ஜனங்களுள்ளே (ஆன்மாக்களுள்ளே) பிரவேசித்து, அவைகளை ஆளுபவராயினர்"

மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்।
(சுவே. ச. க0)

அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத்தஸ்மிம்ஶ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:।
(சுவே. ச. கூ)

(கூ) "மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசர் என்றும் அறிக;" "இதினின்று மாயியானவர் இந்த விசுவத்தைச் சிருட்டிக்கின்றனர்; அதிலே மற்றது (ஆன்மா) மாயையாற் கட்டுண்டது"

ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶம் (சுவே. ச. எ)

(க0) "அன்னியமாகிய இன்பமுடைய ஈசரை ஆன்மா காணுங்கால்"

ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶ: (சுவே. சு. கசு)

(கக) "பிரதானம் ஆன்மா என்னும் இரண்டுக்கும் பதியாகிய குணங்களையுடைய ஈசர்"

யெஷாமீஶெ பஶுபதி: பஶூநாம் (தைத். சங். ங. க. ச. ங)

(கஉ) *"இந்தப் பசுக்களைப் பசுக்களுக்கு (ஆன்மாக்களுக்கு) பதியாயினர் ஆளுகின்றார்" என்றற்றொடக்கத்த அனந்த சுருதிகளாற் சிவபெரு

*இங்ஙனம் உதகரிக்கப்பட்ட பன்னிரு சுருதிகளும் இவைபோன்ற ஏனைய அளவிலாச் சுருதிகளும் ஆன்மாவும் (பசுவும்) பரமான்மாவும் (பதியும்) வேறென்

மான் என்று மற்றோர் நாமம் பூண்ட பிரமமே விசுவத்திற்கு (பசுபாசங்களுக்கு) அதிகம் (சிரேட்டம்).

(ஆக்ஷேபம்) "ததநன்னியத்துவம்" என்னும் (உ. க. கரு-ஆம்) சூத்திரங் கொண்டு அபேதம் பிரதிபாதிக்கப்படலானும், "அதிகந்து" என்னும் (உ. க. உஉ-ஆம்) சூத்திரத்தினாலே பேதம் பிரதிபாதிக்கப்படலானும், (சேதன அசேதனப்) பிரபஞ்சம் பிரமம் என்பவற்றுக்குப் பேதாபேதம் சாதிக்கப்படுகின்றதாலோ எனின்,

(உத்தரம்) அங்ஙனஞ் சாதிக்காது விசிட்டாத்துவிதத்தைச் சாதிப்பேம்.

கடமும் படமும் போலப் பிரமமும் பிரபஞ்சமும் அத்தியந்த *பேதம் என்றும் கூறேம்; அது அநன்னியம் என்னும் பரசுருதிக்கு விரோதமுறுதலின்.

நாம் இப்பி வெள்ளி என்பவற்றிற் போல, ஒன்றை மித்தை என்று கூறும் அத்தியந்த அபேதவாதிகள் அன்று; பிரபஞ்சத்துக்கும் பிரமத்தின் சுவாபாவிககுணத்துக்கும் பேதங் கூறுஞ் சுருதிகளுக்கு விரோதமுறுதலான்.

---

றும் நித்தியவஸ்துக்கள் என்றும் இதிகாசபுராண சிவாகமங்களுக்கு மாறுபடாவண்ணம் உதகரிக்கப்பட்டவிடத்தும், இவற்றை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த க. உ. கக-ஆம், க. உ. கக-ஆம், க. உ. உக-ஆம், க. ௩. உ, ௪, ௬-ஆம், உ. க. உஉ-ஆம் பிரமசூத்திரங்களும் பிறவும் உபயான்மவாதபரத்தனவாகி ஏகான்மவாதியார் ஏகான்மவாதத்துக்கிணக்கமுறாமையின், (உபக்கிரமணிகை உ௮-ஆம் இலக்கத்திற்கண்ட) முக்கியோபநிடதங்களில் இல்லாதனவாய், (வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படவினாவிடையின் கககூ-ஆம் இலக்க வினாக்களிற் கண்ட) சர்வசாரமுதலிய மாயாவாதோபநிடதங்களிற் காணப்படுவனவாய்க்கிடந்த கடாகாய மகாகாயக் கூறவிவித்தையைக் கொணர்ந்து புகட்டிக் காட்டிஆட்டி, ஆன்மாவைப் பொய் என்று கெடுத்தல் வாயிலாக, உபயான்மவாதசூத்திரங்களுக்கும் சுருதிகளுக்கும் பொருட்டிரிவுபடுத்திவிட்டமை இவர்க்கு நியாயமாகுமா? நீதியாகுமா? அன்பர்காள்! இவற்றை யோசித்து, ஏகான்மவாதியாரோ? நீலகண்டசிவாசாரியரோ? சூத்திரங்களுக்கு உண்மைப்பொருள் பொதிந்து வைத்தார் என்பதை உணர்ந்து கூறுதிர்? உபயான்மவாதச் சுருதிகளுக்கு மாறுபடாது பதி பாச பசுக்களை உணர்த்திப் போதிக்கும் சிவஞான போதத்துக்கு வித்தியாரணியர் பாடியம் ஒன்று எழுதிவைத்துள்ளார் என்று ஏகான்மவாதிகள் சிலர் புகன்று அது இருக்குமிடம் எங்கேயாம் என்று ஆராய்வாராயினர். தாயுமானவர் "வேதமுடனாகமம்" என்ற செய்யுளிற் கூறியாங்கு, உபயவாதிகளாகிய எங்கள் உபயான்மவாதச் சிவஞானபோதத்துக்கு அவ்வித்தியாரணியர் எழுதிவைத்தார் எனக் கொள்ளப்படும் பாஷ்யமும் அவர் ஆசாரியராகிய ஏகான்மவாதியார் இச்சூத்திரங்களுக்கும் இச்சூத்திரங்களுக்குமூலமாய் நின்ற சுருதிகளுக்கும் கடாகாச மகாகாசவித்தை கொண்டு பொருள்செய்கின்றேமென்று செய்து அவை கெடுக்கப்பட்டாற் போலக் கெடுக்கப்பட்டதொன்றாமென்று யாரும் உணர்ந்துகொள்வாராக.

* ஈண்டு நீலகண்டசிவாசாரியரால் மறுக்கப்பட்ட துவிதம் (பேதம்), ஏகான்மவாதம் (அபேதம்), துவிதாத்துவிதம் (பேதா பேதம்), என்னும் மத்துவம், மாயாவாதம், வைஷ்ணவமாகிய மும்மதத்தையும் ஸ்ரீ உமாபதியார் சிவப்பிரகாசத்துப் "புறச்சமயத்தவர்க்கிருளாய்" என்னுந் திருச்செய்யுளிற் "பொற்பணிபோல பேதப் பிறப்பிலதா யிருள் வெளிபோற் பேதமுஞ் சொற்பொருள் போற் பேதா பேதமுமின்றி" என்றருளினர்.

பேதாபேதவாதிகளும் அன்று; வஸ்துவிரோதவுண்மையான்.

ஆயின் நாம் சரீரசரீரிபோன்றும் குணகுணிபோன்றுங் கூறும் விசிட்டாத்துவிதிகளே. பிரபஞ்சத்துக்கும் பிரமத்துக்கும் அநன்னியத்துவமாவது மண்ணும் கடமும் போலவும், குணமும் குணியும் போலவும் (முறையே) காரண காரியத்தினுலும், விசேஷண விசேடியத்தினுலும் வேறுபடாதிருத்தலேயாம். மண்ணைவிட்டுக் கடம் காணப்படாதவாறு போன்றும், நீலநிறத்தை விட்டு நீலோற்பலமில்லாதவாறு போன்றும் பிரமத்தை விட்டுப் பிரபஞ்ச சத்தி இல்லை; சத்திக்கு வேருகப் பிரமம் ஓர்போதும் இல்லை; உஷ்ணத்தைவிட்டு அக்கினி இல்லாமை போல. எதை விட்டு எதைக் கண்டதில்லையோ, அது அதனேடு விசிட்டந்தான். அது (குணம்) அதாவதும் (குணியாவதும்) இயற்கையே; (சூடு தீயாவதும் இயற்கைதான்). ஆகலின், எப்பிரகாரத்தானும் பிரமம் பிரபஞ்சத்தினின்று வேறுருது. அதுபற்றி அநன்னியம் என்று கூறப்படுகின்றது. அவ்விரண்டுக்கும் வேற்றுமை இயற்கை. ஆகலின், பிரபஞ்சத்தினும் பரப்பிரமம் (அதிகம்) சிரேட்டமே. காரணமாயும் காரியமாயுமிருத்தல் (உ. க. கூ) ல் நிரூபிக்கப்பட்டது. ஆகலின், பேதாபேத சுருதிகளுக்கு இந்நெறி விரோதமற்றதே. (உஉ)

அமாஹிவகு தடநுவவதிீ: (உ. க. உங)

(கசுக) கல் முதலியவற்றிற்போல, அது பொருந்தாது.

(ஆக்ஷேபம்) எப்பிரகாரத்தானும் அபேதசுருதிகளால் ஆன்மாவும் சிவபெருமானும் அபேதர் எனின்,

(உத்தரம்) அங்ஙனம் இன்று; பொருந்தாமையின். அசேதனமாகிய கல்லு, கட்டை, மண், புல் முதலிய போல ஆன்மாவுக்கும் அறியாமையுண்மையின் முற்றறிவு முதலிய குணங்களையுடைய சிவபெருமானினின்று அவன் அத்தியந்த விஜாதீயமாம் எனக் கேட்கப்படலான், அவ்விருவரும் ஒருவராமெனல் பொருந்தாது. ஆகலின், ஆன்மாவிலிருந்து சிவபெருமான் மற்றோர் பொருளே. இங்ஙனம் ஆன்மா சேதனனுயினும், சிவபெருமான் சிரேட்டகுணமுடையராம் பேதத்தினல், ஆன்மா சிவபெருமானேடு ஒப்பாகான். முற்றும் வேருகிய அசேதனப்பொருள் சிவபெருமானுக்கு ஒப்பாகாதென்று கூறவும் வேண்டுமா!! எவ்வாற்றானுஞ் சுருதி ஸ்மிருதி நியாயங்களினுற் காரியமாதல்பற்றித் தம்மினின்று வேறுருத சேதன சேதனப் பிரபஞ்சம் அனைத்துக்கும் சர்வஞ்ஞரும் சர்வசக்தியினருமாகிய சிவபெருமான் சிரேட்டரே (விசுவாதிகரே) (உங)

(அ) உபசங்காரதர்சநாதிகரணம்.

உவஸஂஹாரஜுஸநாநெதி வெநு க்ஷீரவஜி (உ. க. உச)

(௧௯௨) (உபகரணக்) கூட்டம்காணப்படலான் எனின், அன்று; மெய்யாய்ப் பாலிலே போல.

ஏகமேவாத்விதீயம் (சாந். சு. உ. க)

"ஏகந்தானே அத்துவிதீயம்"

த்யாவா பூமீ ஜநயந்தேவ ஏக: (தைத். ஆரணி. ௧௦. க. ௩)

"விண்ணையும் மண்ணையுஞ் சிருட்டித்து ஏகராகிய தேவர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் சிவபெருமான் ஒருவரே உலகத்துக்குக் காரணராமென அறியப்படுகின்றார் (என்பது விஷயம்)

இந்த ஒருவரே உலகத்துக்குக் காரணராயிருத்தல் யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) யுக்தம் அன்றென்பேம்; அது பொருந்தாமையின், ஆகாய வாயு அக்கினி சலவடிவுடைய காரியம் பல்வகைத்து. இது விசித்திரகாரணமின்றி எங்ஙனம் உண்டாம்? இரத முதலிய காரியங்களை அநேகர் கூடிச் செய்தல் காணப்படுகின்றது. ஆகலின், ஒரே காரணமாயிருத்தல் எய்தாதாம் எனின்,

(சித்தாந்தம்) இது யுக்தம் அன்று. எங்ஙனம் க்ஷீரம் ஒன்று தயிராகின்றதோ, அங்ஙனம் காரணமொன்று காரியரூபமாகப் பரிணமிக்க நேரும். ஆகலின், உலகமானது பிரமமாகிய ஒரே காரணத்தின் காரியமாம். காரியம் விசித்திரமாதலின், காரணமும் விசித்திரமாதல் வேண்டும் எனல் பொருந்தாது. உரோமம் நகமுதலிய பல்வகைக் காரியம் ஒரே சேதனப் பொருளிலிருந்து தோன்றக் காண்டலின். இதுபற்றி விசித்திரமாகிய உலகத்தை உண்டாக்குதற்குச் சிவபெருமான் மற்றோர் காரணத்தை அபேக்ஷிப்பதில்லை. (உச)

சத்தியுடையார்க்கு யாவும் ஆகும் என்று சூத்திரகாரர் கூறுவாராயினர்.

தேவாதிவதபி லோகே (உ. க. உரு)

(௧௯௩) உலகத்திலே தேவாதிகள் போன்றும்.

சாஸ்திரங்களிலே சத்தியுடையராகக் கூறப்படும் தேவாதிகளுக்கு எங்ஙனந்தாந்தாம் வேண்டிய வடிவங்கள் கொள்ளுதற்கு வன்மையிருக்கின்றதோ, அங்ஙனஞ் சாஸ்திரங்களிற் கூறப்பட்டவாறு சத்தியுடைய சிவபெருமானுக்கும் எல்லாம் ஆகும்.

ய ஏகோ ருத்ர ஈசத ஈசநீபிர் ஜநநீபி: பரமசக்திபி:।

(அதர்வசிரசு)

"எவர் இவ்வுலகம் அனைத்தையும் பிறப்பிக்கவும் ஆளவும் வல்ல பரமசத்திகளையுடையராகின்றனரோ" என்னுஞ் சுருதியினாற் சிவபெருமான் அநந்த சத்தியுடையர் எனக் கேட்கப்படுகின்றது. அவர்க்கு எது அசாத்தியம்!! (உரு)

(௬) கிருத்ஸ்நபிரசக்தியதிகரணம்.

---

க்ருத்ஸ்நப்ரஸக்திர்நிரவயவத்வஶப்தகோபோ வா (உ. க. உ௬)

(கஙச) முழுமையும் (காரியமாதற்கு) இயைகின்றது; இன்றேல் நிரவயவசுருதிக்கு மாறுபடுகின்றது.

ஈண்டுப் பிரமம் ஜகதாகாரமாகப் பரிணமிக்கும் என முன் உரைத்தமை பொருந்துமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) எங்ஙனம் பொருந்தும்? ஒன்றுதானே ஜகதாகாரமாகப் பரிணமிக்கும் எனக் கூறப்பட்டது. பால் தயிரானது போல அவர் உலகமாய்ப் பரிணமிப்பாரேல், பிரமமானது முழுமையுங் காரியமாய் ஆகி அது சேஷிக்கமாட்டாது. இன்றேல், அவர் ஓர் அம்சத்தினாற் பரிணமித்தாரெனின், பிரமம் நிரவயவம் என்னுஞ் சுருதியோடு விரோதமுறும். ஆகலின், பிரமம் பரிணாமமாதல் யுக்தம் அன்றாம் எனின், (உ௬)

(சித்தாந்தம்) கூறுதும்.

ஶ்ருதேஸ்து ஶப்தமூலத்வாத் (உ. க. உஎ)

(கஙரு) ஆயின் சுருதியும் (அங்ஙனமே), சுருதி மூலமாயிருத்தலின்.

பிரமம் உலகமாகப் பரிணமித்தல் யுக்தமே; சுருதி அங்ஙனம் கூறுதலின். இவ்விஷயத்திற் சுருதியே பிரமாணம், வேறு பிரமாணம் இல்லை; சுருதி மூலமாயிருத்தலினாலேதான், பிற பிரமாணங்களனைத்தினாலும் அறியப்படும் வஸ்துக்களுக்கெல்லாம் அவர் விஜாதீயமாய் அபூருவமாகிய சத்தியோடு கூடினமையின் விரோதம் இன்று. ஆகலின், பரிபூரணராகிய அவருக்கே காரியத்துவமும் காரணத்துவமும் எய்துகின்றன. தார்க்கிகர்க்கு அத்தியந்தம் பேதமுடைய கண்ட முண்டமாய அளவில்லாத வஸ்துக்கள் ஒவ்வொன்றினும் சாதியானது ஒன்றாய் இருக்கின்றது. ஈண்டு வேறுவஸ்து திருஷ்டாந்தங்கொண்டு ஆசங்கை செய்ய இடம் பெறாது. ஆகலின், பிரம சொரூபத்தை நிரூபித்தலிற் சுருதியே மூலமாயிருத்தலின் யாதும் விரோதம் இல்லை. (உஎ)

ஆத்மநி சைவம் விசித்ராஶ்ச ஹி (உ. க. உஅ)

(கசுசு) அங்ஙனமே ஆன்மாவினும் அவை பல பிரகாரமன்றோ.

ஆன்மா விஜாதியமாயிருத்தலினால் அசித்தருமங்களுக்கு விரோதமாகிய சித்தருமங்களோடியைந்திருக்கின்றது. தீ நீர் முதலிய அசேதனப் பொருள்கள் ஒவ்வொன்றும் அன்னியோன்னியமாகிய வெவ்வேறு சத்திகளையுடையனவாய் விசித்திரமாய் இருக்கின்றனவே. ஆகலின் சுருதிப்பிரமாணத்தினால் எய்திய பிரமமும் விசித்திரமாகிய அனந்த சத்தியையுடைத்தாதலின், முழுமையும் விரோதமின்று. (உ௮)

ஸ்வபக்ஷதோஷாச்ச (உ. க. உசு)

(கசுஎ) சுவபக்ஷத்திலே தோஷம் உண்மையினாலும்.

(காரண முழுமையும்) காரியமாதன் முதலிய தோஷம் நிரவயவமும் ஜட சஜாதியமாயுமுள்ள பிரதானமுதலியவற்றிலன்றிச் சாஸ்திரத்தைப் பிரமாணமாகவுடைய பிரமத்திற் செல்லாது. (உசு)

சர்வசத்தியுடைமையின் பிரமத்துக்கு எதுவும் பொருந்தும் எனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸர்வோபேதா ச தத்தர்சநாத் (உ. க. ௩௦)

(கசு௮) (அவரது சத்தி) அனைத்தையுங் கூடிற்று, சுருதியிற் காண்டலானும்.

பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபல க்ரியா ச। மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேச்வரம்। தஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத் (சுவே. சு. ௮; ச. க௦)

"அவரது பராசத்தி சுவாபாவிகமாய் ஞானசத்தியும், பலசத்தியும், கிரியாசத்தியும் எனப் பலதிறப்படும்; மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக; அவர் அவயவத்தினால் இவ்வுலகம் அனைத்தும் வியாபிக்கப்பட்டது" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் சத்தியனைத்தும் பிரமத்தை ஆசிரயித்தனவாக அறியப்படுகின்றது. அது பற்றிச் சர்வசத்தியுடைய அவர்க்கு எதுதான் ஆகாது!! (௩௦)

விகரணத்வாந்நேதி சேத்தது க்தம் (உ. க. ௩க)

(கசுகூ) கரணம் இன்மையால் (அவர் காரணமாதல்) இல்லையேல், அது இறுக்கப்பட்டதாயிற்று.

(ஆக்ஷேபம்)

ந தஸ்ய கார்யம் கரணஞ்ச வித்யதே (சுவே. சு. ௮)

"அவருக்குச் சரீரமும் இல்லை, கரணமும் இல்லை" எனப் பிரமத்துக்குக் கரணமின்மை கூறப்படுகின்றது. ஆகலின், அவர் காரணமாகாரோ எனின்,

(உத்தரம்) அன்று. அதற்குச் "சுருதி மூலமாயிருத்தலான்" என (௨. க. உ௭) ல் முன்னரே உத்தரம் இறுத்தாயிற்றே.

மாயாஂது வ்ரக்ருதிஂ வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்।

(சுவே. ௪. ௧௦)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக" எனவும்,

தஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத்।

(சுவே. ௪. ௧௦)

"அவருடைய அவயவத்தினால் (சத்தியினால்) இவ்வுலகம் அனைத்தும் வியாபிக்கப்பட்டது" எனவும் சிரேட்ட வேதப் பிரமாணமுண்மையானும்,

விசித்ரோத்தரோத்தர விசித்ர மநோரதஸ்ய யஸ்யைகதேஶமதிகம்ய ஸமஸ்தமேதத்। அத்வாநமத்வபதிமத்வவிதோ வதந்தி தஸ்மை நமஸ்ஸகலலோகவிலக்ஷணாய (வாயு. பூ. ௭: உ௩)

"பிரபஞ்சத்துக்கு மேன்மேலாகக் கிளருகின்ற விசித்திர மநோரதமுடைய எவர் சத்தியின் ஓர் பாகத்தில் யாவும் முற்றுப்பெறுகின்றனவோ, எவரை (ஆறு) அத்துவாவாகவும் அத்துவபதியாகவும் அத்துவாவை அறிந்தவர்கள் கூறுகின்றார்களோ, உலகமனைத்துக்கும் வேறாயிருக்கும் அவ்வியல்பினர்க்கு நமஸ்காரம்" என அவ்விஷயம்பற்றி உளதாம் புராணவசனத்தினாலும் விசித்திரமாகிய அனந்தசத்தியையுடைய பல்வகை மாயையாம் பரமசத்தியோடியைந்தவராய்ச் சிவபெருமான் தமது சத்திபாகத்தினால் உலகாகாரமாகியும், தாமே பிரபஞ்சத்துக்கு அதீதராயுமுள்ளார். இங்ஙனம் சமஸ்த தோஷகளங்கமில்லாத சுருதிப்பிரமாணத்தினாற் சித்தமாயினவரும் சர்வசத்தி சம்பத்விலாசருமாகிய பரமேசுவர பரப்பிரம சிவனார்க்கு ஒன்று கூடும் கூடாதென்று விசாரித்தற்குச் சிறிதும் இடமின்றே. (௩௧)

## (௧௦) லீலாகைவல்லியாதிகரணம்.

---

சூத்திரகாரர் வேறுபிரகாரமாக ஆக்ஷேபித்துப் பின்னரும் உத்தரம் இறுக்கின்றார்.

ந ப்ரயோஜநவத்வாத் (௨. க. ௩௨)

(௧௭௦) இல்லை; (ஒவ்வொரு செயலும்) பயனுடைமையின்.

சாஸ்திரங் கூறுமாறு சர்வசத்தியுடைய சிவபிரானார்க்குச் சமஸ்த காரியங்களினும் காரணமாயிருக்கும் சாமர்த்தியம் உளதென நிர்ணயிக்கப்

பட்டது. அங்ஙனமாயினும், எந்தப் பிரவிருத்தியும் பயனுடைமையின், சகல காமமும் அடையப்பெற்ற சிவபெருமானுக்கு உலகசிருட்டி முதலிய வியாபாரங்களிற் பிரவிருத்தி பொருந்துமா? பொருந்தாதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) எங்ஙனம் பொருந்தும்?

ஆநந்தோ ப்ரஹ்ம (தைத். ௩. ௬. ௧)

விபும் சிதாநந்த மரூபமத்புதம் உமாஸஹாயம் (கைவ)

"ஆனந்தம் பிரமம்; வியாபகரும், சிதானந்தரும், அருபரும், அற்புதரும், உமாசகாயரும்" என்றற்றொடக்கத்த சுருதிகளால் நிரதிசயானந்த சொரூபரும், நித்தியதிருப்தருமாவார் சிவபெருமான் என்றே கேட்கப்படுகின்றது. இவர் பின் சிருட்டியாதி வியாபாரங்களில் எங்ஙனம் அபேக்ஷையின்றிப் பிரவிருத்திப்பார்? அவரது பிரவிருத்தி பிரயோசனத்தை நோக்கியிருக்குமேல், (அவரது) நித்தியதிருப்திக்கு ஹாநியாகும்; இன்றேல் அறிவில்லாச் செந்துப் போல உசிதமல்லாத காரியத்தைச் செய்தோராவர் என்று கூறின், (௩௨)

(சித்தாந்தம்) கூறுதும்.

லோகவத்து லீலாகைவல்யம் (உ. க. ௩௩)

(௩௭௧) ஆயினும், உலகத்திற் போல *லீலைமாத்திரம்.

நித்தியதிருப்தியுடைய சிவபெருமானுக்குப் பிரயோசனமின்மையின் அப்பிரயோசனமாகிய உலகசிருட்டியாதி பிரவிருத்தி பொருத்தமுறாதெனின், அங்ஙனமன்று; பொருந்துமே. கேவலம் லீலாமாத்திரத்தினாற் சிவபெருமானுக்கு நிஷ்பிரயோசனமாகிய பிரவிருத்தியும் நேரும். உலகத்திலே பிரயோசனமின்றேனும் கேவலம் லீலையினாலே பந்தடித்தல் முதலியவைகளிற் பிரவிருத்தி உளதாமாறு போல, சிவபெருமானும் சமஸ்த காமமுற்றவரேனும் லீலையினாற் சிருட்டியாதி பிரவிருத்தி செய்தல்பற்றி விரோதமில்லை. (௩௩)

## (௧௧) வைஷம்மியநைர்க்கிருண்ணியாதிகரணம்.

---

வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்ததாஹி தர்சயதி
(உ. க. ௩௪)

---

* கூத்தனிவ்வானுங்குவலயமுமெல்லோமுங்
காத்தும்படைத்துங்கரந்தும்விளையாடி
[illegible] (திருவெம்பாவை. ௧௨)

(௧௭௨) *விஷமமும் இல்லை; இரக்கமின்மையும் இல்லை; (கன்ம) சாபேக்ஷமுண்மையின். மெய்யாய் அங்ஙனமே சுருதியும் கூறுகின்றது.

*பிரயோசனமின்றேனும் லீலையினாற் சிவபெருமானுக்கு உலகசிருட்டியாதிகளிற் பிரவிருத்தி உளதாதல் நிரூபிக்கப்பட்டது.*

ஈண்டுப் பின்னரும் இது கூடுமா? கூடாதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பரிபூரணராயிருத்தலில் லீலையினாலும் சிவபெருமானுக்குச் சிருட்டி பொருந்தாது; இராகத் துவேஷமுதலிய அற்று எல்லோர்க்குஞ் சமமாகி மத்தியஸ்தராயிருப்பவர் அச்சிவபெருமானே. இவர் சிலர்க்கு இன்பமயமாகிய தேவாதி சரீரத்தையும், சிலர்க்குத் துக்கமயமாகிய மனுஷ்யாதி சரீரத்தையும் படைத்தலான், அவர் வைஷம்மியமுடையரென்பதைத் தவிர்த்தல் கூடாது. பின்னருஞ் சிருட்டியானது சங்காரத்துக்கு முன் இருந்தமையின், அனைத்தையும் ஒரே முறையிற் சங்கரிக்கும் சிவபெருமானுக்கு இரக்கமின்மையும் எய்துகின்றது. ஆகலின், புருஷார்த்தமின்மையைக் கொணரும் உலகத்தைச் சிருட்டித்தலிற் சிவபெருமானுக்கு யாது பயனும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். எப்பிரகாரத்தினும் உலகசிருட்டி செய்யுஞ் சிவபெருமானுக்கு வைஷம்மியமும் (பாரபக்ஷமும்), இரக்கமின்மையும் எய்தா; சிருட்டிபேதத்துக்குக் கன்மசாபேக்ஷமுண்மையின்.

𑌰𑌮𑌣𑍀𑌯𑌚𑌰𑌣𑌾 𑌰𑌮𑌣𑍀𑌯𑌾𑌂 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌦𑍍𑌯𑍇𑌰𑌨𑍍 । 𑌕𑌪𑍂𑌯𑌚𑌰𑌣𑌾𑌃 𑌕𑌪𑍂𑌯𑌾𑌮𑍍 (சாந். ௫. ௧௦. ௭)

"நன்மை செய்தவர் நற் செனனத்தையும், தீமை செய்தவர் தீச் செனனத்தையும் அடைகின்றார்" என்று சுருதியும் கூறுகின்றது. (௩௪)

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌾𑌵𑌿𑌭𑌾𑌗𑌾𑌦𑌿𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍁𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌪𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 𑌚 (௨. ௧. ௩௫)

(௧௭௩) கன்மம் பகுப்பின்மையால் இல்லை எனின், அன்று; அநாதிக்கண்ணதாதலின் அது முற்றும் பொருந்தும்; அனுபவத்தினும் அறியப்படுகின்றது.

---

*வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.
(திருக்குறள், ௪)
துன்பமொடின்பமதெல்லாங்கடந்தவர்
(திருக்கற்குடி, ஞான, ௪)

(ஆக்ஷேபம்) சிருட்டிக்கு முன்னர்க் கன்மம் இல்லை; க்ஷேத்திரஞ்ஞர் (ஆன்மாக்கள்) இல்லாமையின்.

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் (சாந். சு. உ. க)

"சௌமிய, சத்துத்தான் முதற்கண் இருந்தது" என்னுஞ் சுருதியில் ஏவ (தான்) என்பது பிறிதொன்றை மறுக்கின்றமைபற்றி, ஆன்மாக்கள் இல்லை எனின்,

(உத்தரம்) அன்று.

ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஸாநீஸௌ (சுவே. க. கூ)

"பிறவாத இருவர் அறிஞரும் அஞ்ஞனுமாய ஈசரும் அநீசனும்" என்று சுருதி கூறும் பிரகாரம் ஆன்மாக்கள் அநாதிக்கண்ணராக, கன்மமும் அநாதிக்கண்ணதாகப் பெறப்படுகின்றது. ஆகலின், சம்சாரம் கன்மப்பிரவாகத்திருந்து விளைந்ததாகின்றது. சிவபெருமானே முற்றறிவினராதலின் ஆன்மாக்களுடைய விசித்திர கன்மத்தையும் அறிந்து, தமது சத்தியினால் அவர் அவர்களுக்கு வாய்ந்த குணமாகவே போக சரீரமாகிய தேவாதி சரீரத்தைச் சிருட்டிக்கின்றனர். இங்ஙனம் சிருட்டிபேதத்துக்குக் கன்மமே மூலம். சங்காரமும் சம்சாரத்தில் உழன்று இளைத்த ஆன்மாக்களுக்குச் சுழுப்தி போல விசிராந்திக்குக் காரணமாயிருத்தலின், சிவபெருமானுக்கு வன்கண்மை இல்லை.

(ஆக்ஷேபம்) ஆன்மாக்களுடைய இன்ப துன்ப முதலியவற்றுக்குக் கன்மமே பிரயோசகமாயின், அப்பிரயோசகராகிய சிவபெருமானால் யாது பயன்? எனின்,

(உத்தரம்) அன்று; கன்மமும் அவர் ஆதீனமாதலின், அவர் சுவாதந்திரியத்துக்கு ஹாநி இல்லை. பின்னரும் கட்டகுடிப்பிரபாதநியாயத்தினாற் கன்மத்துக்குச் சுவாதந்திரியமில்லாவிடின் சிவபெருமானுக்கு வைஷம்மியமுதலிய தோஷம் எய்துகின்றதெனின், அங்ஙனம் கூறலாகாது; மாயையிலே உள்ள அளவிறந்தகன்ம சத்திகளைச் சிவபெருமான் வகுக்கின்றனர். கன்மமே தனது சத்திவசத்தினாற் பல்வகைச் சிருட்டிக்குக் காரணமாதலின், அதனை ஆன்மாக்களுக்கு வகுப்பவராகிய அவர் பாரபக்ஷமுறார்.

(ஆக்ஷேபம்) சடமாகிய கன்மமானது சேதனப்பொருளினால் அதிட்டிக்கப்படாமல் ஆன்மாக்களுடைய சரீரத்தை ஆக்க இயலாமையாற் சேதனராகிய சிவபெருமானே பிரயோஜகர் (உளுற்றுபவர்) என்று கூறற்பாற்று. சிவபெருமான் பரமகாருணிகராயிருந்தும் சிருட்டிக்கு முன்னர்ப் போகசாதனம் ஒடுக்கப்பட்டிருந்தமையாற் சம்சாரகிலேசம் நீங்கிச் சுகிகளாயிருந்த ஆன்மாக்களை மீட்டும் சம்சாரத்துக்குக் காரணமாகிய சரீரத்தோடு எற்றுக்கு இசைக்கின்றாரெனின்,

(உத்தரம்) கூறுதும். சர்வாநுக்கிரகராகிய சிவபெருமான் ஆன்மாக்களுக்குக் கன்மபரிபாகமின்றி ஞானோதயமாகாமையானும், ஞானமில்லாது நிரதிசயானந்த மோக்ஷமின்மையானும், கன்மபரிபாகமும் போகமின்றி எய்தாமையானும், அந்தக் கன்மபலபோகத்தின் பொருட்டுப் பின்னரும் அவைகட்குச் சரீராதிகளைக் கற்பிக்கின்றனர். இந்தப் பிரகாரம் அவரவர் கன்மமானது போகத்தினாற் படிப்படியே பக்குவமடைந்த காலத்திலே சுத்தாந்தக் கரணமுடைய ஆன்மாக்களுக்குத் தம் விஷயமாகிய ஞானத்தை உண்டாக்கி, நிரதிசயானந்தரூபமாகிய * மோக்ஷலட்சுமியைப் பிரகாசிப்பிக்கின்றனர். இங்ஙனம் சர்வசத்திமானும் பரமகாருணிகருமாகிய சிவபெருமான் ஏதனால் ஒரே முறையிலே சமஸ்த ஆன்மாக்களுடைய கன்மத்தையும் பாகப்படுத்தி அனைவர்க்கும் சமமாகவே மோக்ஷாநந்தத்தைப் பிரகாசிப்பிக்கவில்லை? எனின்,

(உத்தரம்) சத்தியம். சிவபெருமானால் யாவர்க்குஞ் சமமாக அநுக்கிரகஞ் செய்யப்படினும், எவர் பக்குவமலமுடையரோ, அவர் வீடுறுகின்றார்; அபக்குவமலமுடையராயினர் காலக்கிரமத்திலேதான் முத்தியடைவர். சூரியகிரணசமூகம் சமமாய் நிரந்தரமாயிருப்பினும் † பக்குவமுள்ள தாமரைகளே அலர்கின்றன; அபக்குவமலர்கள் அன்று. சிவபெருமான் பூரணரேயாயினும் பிறர் நயத்தின்பொருட்டே யாவுஞ் செய்கின்றனர். அவர் சர்வாநுக்கிரகர் என்பதைப் பிரதிபாதித்தல்வாயிலாக (மேலே கூறிய) அர்த்தம் அனைத்தையும் புராண சுலோகங்கள் தெளிவாகப் பின்வருமாறு விளக்குகின்றன.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

---

*இருவினைச் செயல்க ளொப்பி னீசன்றன் சத்தி தோயக்
குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே.
(சித்தியார். ௮. ௩௦)

†பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்
(சிவஞானபோதம். ௧௧. ௩)

தயா நாதி வ்ருஷ்ருமெத்தாயா ஶிவஸம்ஸாரமோசகஃ||
(வாயு. உத். ௧௨: ௧௫, ௧௧, ௧௪, ௧௩)

"ஆதித்தியன் இல்லையேல் இவ்வுலகம் அனைத்தும் இருளாய்ப்போமாறு போல, சிவபிரானார் இல்லையேல் இவ்வுலகம் முழுமையும் இருளாய்விடும்; வைத்தியர் இல்லையேல் இன்பமில்லாது உரோகிகள் வருந்துமாறு போல, சிவபெருமான் இல்லையேல் உலகம் இன்பமிலதாகித் துன்புறும். இயற்கையால் மருந்து வியாதிக்கு மாற்றுவதுபோல, *சம்சாரதோஷத்துக்குச் சிவபெருமான் சுவபாவமாக மாற்றுகின்றார். இந்தக் கோரமாகிய சம்சாரமண்டலம் அநாதிக்கண்ணது போல, சம்சாரமோசகராகிய சிவபெருமானும் அநாதியே உள்ளார்" ஆகலின், சர்வாநுக்கிரகப் பிரவிருத்தியுடைய சிவபெருமானுக்கு உலகசிருட்டியாதி வியாபாரம் நிகழ்கின்றதே. (௩௫)

## (௧உ) சர்வதர்மோபபத்தியதிகரணம்.

---

ஸர்வதர்மோபபத்தேஶ்ச (உ. க. ௩௬)*

### (௧௭௪) சர்வகுணங்களும் இயைதலானும்.

அதிகஞ் சொல்லின் என்! பிரதானத்துக்கும், பரமாணுவுக்கும், கன்மத்துக்கும், காலமுதலியவைகளுக்கும் இயையாதனவாகிய எல்லாக்குணங்களும் சிவபெருமானுக்கே இயைவன. ஆகலின், அனைத்துக்கும் மேலாய சிவபெருமானே உலகசிருட்டி முதலியவற்றுக்குக் காரணமாயினாரென்பது சாமஞ்சசம். (௩௬)

---

*அருளினா லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யி
னிருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி போகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க ளர்க்கு மருந்திவை வயித்திய நாதன்.
(சிவஞானசித்தியார், உ. ௩௩)

## இரண்டாம் அத்தியாயத்து

## இரண்டாம் பாதம்.

---

(இப்பாதம் சாங்கியமுதற் பாஞ்சராத்திரமிறுதியாகிய பரபக்ஷநிராகரணத்தின்மேற்று)

### (௧) இரசநாநுபபத்தியதிகரணம்.

---

(சாங்கியமதநிராகரணம்)

ரசநாநுபபத்தேஶ்ச நாநுமாநம் ப்ரவ்ருத்தேஶ்ச (௨. ௨. ௧)

**(௧௭௫) அநுமானம் (பிரதானம், காரணம்) ஆகாது; சிருட்டி பொருந்தாமையானும், (அறிவுடைத்தலைவனெதிரே) பிரவிருத்தித்தலினாலும்.**

முந்திய பாதத்திற் சாங்கியமுதலிய தர்க்கங்கொண்டு ஆக்ஷேபிக்கப் பட்டவைகளுக்குச் சமாதானங் கூறி, (சிவாத்துவித) சுவபக்ஷசாதனஞ் செய்யப்பட்டது. பின்னர் ஈண்டுத் தர்க்கவாயிலாகச் சாங்கியமுதலிய பரபக்ஷந் தூஷிக்கப்படுகின்றது.

முதற்கண்ணே சாங்கியருடைய பிரதானகாரணவாதம் யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

சந்தேகத்துக்குக் காரணம் யாண்டும் பிரசித்தமேயென யூகிக்கற் பாற்று.

(பூருவபக்ஷம்) பிரதானத்தைக் காரணமாய்க் கூறுவதே யுக்தமெனப் புலப்படுகின்றது. பிரதானமானது இராசச சாத்துவிக தாமசரூபமாயுள்ளது. இதுவே உலககாரணமாதற்கு இயைகின்றது; யாண்டும் அதன் காரியமாகிய இன்ப துன்ப மோகம் என்பவை காணப்படலான். பெறப்பட்டவிடத்து வஸ்திரமுதலியவைகள் சரீரங்களைப் போர்த்தல் முதலியவைகளுக்கு உபயோகப்படுதல் வாயிலாக இன்பம் விளைவிப்பனவாயும், பிறரால் அவை அபகரிக்கப்பட்டவிடத்துத் துன்பத்தை விளைவிப்பனவாகவுமாகின்றன; எதற்கும் உபயோகமில்லை என உபேக்ஷிக்கப்பட்டவிடத்து அவை மோகத்துக்கு ஏதுவாகின்றன. இங்ஙனம் இன்பமுதலியவற்றின் தொடர்ச்சியுண்மையின் முக்குணங்களாய பிரதானமே உலககாரணமாகுமெனின்,

(மறுப்பு) கூறப்படுகின்றது. பிரதானம் உலககாரணமன்று; அசேதனமாகலின். எங்ஙனமெனின்? அறிவுடையானொருவன் இயக்காது அசே

தனமாகிய கட்டைமுதலியன இரதம்பிராசாதமுதலியவற்றை ஆக்கமாட்டா; அவை அறிவுடை ஒருவனுற் பிரவிருத்தியும் எய்துகின்றன. ஆகலின், சேதனத்தினுல் அதிட்டிக்கப்படாது பிரதானம் ஜகத்காரணமாதற்கு அருகமாகாது. இன்பமுதலியவற்றின் தொடர்ச்சியினுலாவதென்பதும் பொருந்தாது; சுகமுதலியன (சரீரத்து) உள்விஷயமாக, படமுதலியன புறவிஷயமாதலின். ஆகலின், பிரதானத்தைக் காரணமாகக் கூறல் பொருத்தமின்று. (க)

பின்னரும் ஆசங்கித்துச் சூத்திரகாரர் பரிகரிக்கின்றனர்.

வயொ௦வ௱வசெ௯தத௯ாவி (உ. உ. உ)

(௧௭௬) (அது) பாலும் நீரும்போலக் காரணமாமெனின், ஆண்டும் (இன்று).

(ஆக்ஷேபம்) ஓர் அறிவுடை அதிட்டானமில்லாது பாலும் நீரும் (முறையே) தயிர்முதலியவாகவும் ஆலங்கட்டிமுதலியவாகவும் ஆதல்போல, பிரதானமும் பிரபஞ்சமாகுமே எனின்,

(உத்தரம்) அன்று; ஆண்டுங் கூறப்பட்டதே காரணம்; பாலும் நீரும் அசேதனப் பொருளாகக் கொள்ளப்பட, அவை அனுமானத் தொகுப்பின் பாலனவாதலின். (உ)

மேலும்,

வ௵திரெகா நவஹ்ரெ௯ஹ௯ா நவெகூக௯ாக (உ. உ. ௩)

(௧௭௭) அபேக்ஷையின்மையின் வேறான நிலைமை எய்தமாட்டாமையானும்.

அசேதனப்பொருளானது ஓர் அறிவுடைப் பொருளின் அபேக்ஷையின்றிப் பிரவிருத்தி செய்யுமாயின், எக்காலமுஞ் சிருட்டியுளதாய் அதற்கு மாறாகிய பிரளயம் இலதாகும். ஆகலின், அசேதனப்பொருள் ஜகத்காரணமன்று. (௩)

கூ௲௺௯ாஹாவா௯ந௯ணாஜிவக (உ. உ. ச)

(௧௭௮) (பசுவினுல் உண்ணப்படும்) புல் முதலிய போலவும் இன்று; பிறிதோரிடத்தின்மையின்.

பாலாதற்பாலதாகிய பசுவுண்ட புன்முதலிய போல, அசேதனமாயினும் பிரதானமானது காரணமாம் எனக் கூறல் யுக்தம் அன்று. எருது முதலியவற்றுல் உண்ணப்படினும், மற்றென்றுல் உண்ணப்படாவிடினும், புல் முதலிய பாலாக மாறுணக் காணப்படாமையின், அவையும் ஓர் அறிவுடைப் பொருளினுல் அதிட்டிக்கப்பட்டனவே. (ச)

புருஷாஶ்மவதிதி சேத்ததாபி (உ. உ. ரு)

**(களகூ) மனிதனும் காந்தமும் போலாமெனின் (அன்று).**

(ஆக்ஷேபம்) குருடனை முடவன் செலுத்துமாறு போன்றும், அயத்தைக் காந்தமணி செலுத்துமாறு போன்றும், அசேதனமாயிருப்பினும், பிரதானமானது புருஷசந்நிதானத்தினுற் பிரவர்த்திக்கின்றது. ஆகலின், அறிவுடைப்பொருள் வேண்டியதின்றும் எனின்,

(உத்தரம்) அங்ஙனமாயினும், பிரதானத்துக்குப் பிரவிருத்தி இல்லை; புருஷன் அவிகாரனுயிருத்தலின். முடவனும் காந்தமணியும் முறையே மார்க்கோபதேசஞ் செய்தலானும் இரும்பின் சமீபத்துறைதலானும் விகாரம் எய்த நேர்ந்தன. ஆகலின், அவிகாரமில்லாத புருஷசந்நிதியானது பிரதானத்தைப் பிரவிருத்தி செய்தற்குக் காரணமாகாது. (ரு)

அங்கித்வாநுபபத்தேஶ்ச (உ. உ. கூ)

**(க௮0) (அங்க) அங்கித்துவம் பொருத்தமின்மையானும்.**

குணங்களின் உற்கர்ஷ அபகர்ஷபாவம் அங்காங்கிபாவம் என்றும், இக்குணங்களிலிருந்து உலகம் உண்டாகின்றதென்றுஞ் சாங்கியர் கூறுகின்றனர். சங்காரகாலத்திற் சாமியாவஸ்தை அடைந்திருக்கும் குணங்கள் வைஷம்மியம் ஒன்றும் அடையாமையின், அவற்றுலாகும் அங்காங்கிபாவம் பொருந்துமாறின்று. ஆகலின், பிரதானகாரணவாதப் பிரகாரம் உலக சிருட்டி சொல்லுதல் பொருத்தமின்று. (கூ)

அந்யதாநுமிதௌ ச ஜ்ஞஶக்திவியோகாத் (உ. உ. எ)

**(க௮க) வேறு பிரகாரமாக அனுமானிக்கும்போதும், அறிவின் சத்தியில்லாமையின்.**

கூறப்பட்ட பிரகாரம் ஒழிந்து, வேறுபிரகாரமாகப் பிரதானஞ் செய்வதாக அனுமிதித்தாலும், அறியுஞ் சத்தியின்மையிற் சிருட்டி செய்யும் என்பது ஆக்ஷேபத்துக்கிடமே. (எ)

அப்யுபகமேऽப்யர்தாபாவாத் (உ. உ. அ)

**(க௮உ) அங்கீகரித்துக்கொண்டவிடத்தும், பயனின்மையின்.**

பிரதானத்தைக் காரணமாக அங்கீகரித்தலிற் பிரயோசனமுளதாயின், ஒருவாறு அங்கீகரிப்பேம். அங்கீகரித்தலில் யாதும் பயனில்லை; புருஷனும் நிர்விகாரியாயிருத்தலிற் பிரதானத்தைக் காண்டன் முதலிய விகாரம் அவனுக்கெய்தாதாகலின். அதுபற்றிப் பிரகிருதிக்குரிய குணங்

களை அவனுக்கேற்றுதலான் எய்தும் போகமும் அதனைப் பகுத்தறிதலினுல் எய்தும் கைவல்லியமும் அவனுக்கெய்தாவாம். ஆகலின், பிரயோசனமின்மையின் பிரதானத்தை அங்கிகரிக்கவேண்டியதின்று. (அ)

விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம் (உ. உ. கூ)

**(கஅரு) விரோதமுண்மையின், அது யுக்தம் அன்று.**

அறிபவனும், போக்தாவும், நிர்விகாரியுமாம் எனப் புருஷன் அநேக ஆயிரவிருத்த தருமங்களையுடையனுகக் காணப்படுகின்றான். ஆகலின், காபிலமதம் யுக்தம் அன்று. (கூ)

## (உ) மகத்தீர்க்காதிகரணம்.

---

(கணுதமதநிராகரணம்)

இப்பிரகாரம் பிரதானகாரணவாதம் நிஷ்பிரமாணம் என நிரூபிக்கப்பட்டது. இதன்மேற் பரமாணுக்கள் (உலக) காரணமாம் எனக்கொள்ளும் மதத்தை நிரசனஞ் செய்யும் பொருட்டெழுந்தது இந்த இரண்டாம் அதிகரணம்.

மஹத்தீர்கவத்வா ஹ்ரஸ்வபரிமண்டலாப்யாம் (உ. உ. கO)

**(கஅசு) இருஸ்வ பரிமண்டலங்களிலிருந்து மகத்தீர்க்கம் உண்டாவது போல.**

ஈண்டு வைசேடிகமத சித்தமாகிய பரமாணுகாரணவாதம் யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சிவபெருமானை உலக அதிஷ்டாதாவாகப் பிரதான மதம் அங்கிகரியாமையின், பிரதானத்தை உலககாரணமாகக் கோடல் விருத்தமென்று தவிர்க்கப்பட்டவிடத்தும், பரமாணுகாரணவாதம் யுக்தம்; அங்ஙனமாயின் உலகம் ஒடுங்கிப்போக, சிவபெருமான் சிருட்டிக்க விரும்பும்போது, பிராணிகளுடைய கன்மவசத்தினுல் நிச்சலமாகிய பரமாணுக்களிலே முதற்றொழில் நிகழ்கின்றது. இத்தொழினிகழ்ச்சியின் ஒர் பரமாணு மற்றோர் பரமாணு வோடியைகின்றது. இதின் சேர்க்கையிலிருந்து துவியணுகம் ஒன்று எய்துகின்றது. மூன்று துவியணுகஞ் சேர்ந்து திறியணுவையாக்குகின்றது. இந்தக் கிரமமாக உலகம் முழுமையும் சிருட்டிக்கப்பட்டது. ஆகலின், பரமாணுவைக் காரணமாகக் கோடல் விரோதம் அன்றும் எனின்,

(சித்தாந்தம்) வருமாறு. கணுதமதப்பிரகாரம் இருஸ்வத்திலிருந்தும் பரிமண்டலத்திலிருந்தும் மகத்துவதீர்க்கத்துவம் பொருந்திய திறிய

ணுகமும் அணுத்துவ இருஸ்வத்துவம் பொருந்திய துவியணுகமும் முறையே தோற்றுகின்றன. இஃதெங்ஙனம் பொருந்தும்? அஃதாமாறு:— பரமாணுக்கள் பாரிமாண்டல்ய பரிமாணமுடையனவேயன்றி அணுப்பரிமாணமுடையனவன்று. அணுப்பரிமாணமற்ற இரு பரமாணுக்களிலிருந்து அணுப்பரிமாணமாயுள்ள துவியணுகம் உண்டாகின்றது என்றும் அறியப்படுகின்றது. அங்ஙனமே இருஸ்வ பரிமாணமுடையதாய்த் தீர்க்கப் பரிமாணமற்றதாய துவியணுகம் மூன்று கூடி, தீர்க்க பரிமாணமுடையதும் அணுப்பரிமாணமற்றதுமாகிய திரியணுகத்தை உண்டாக்குகிறதென்றும் அறியப்படுகின்றது. இவையெல்லாந் தவறே; அவர்கள் அங்கீகரிக்கும் காரணத்தின் குணம் காரியத்திலே தோற்றவேண்டும் என்னும் பிரக்கிரியை (தொடர்ச்சி) விரோதமுறுதலின். அவயவங்கள் தம் ஆறு பக்கங்களுடன் இயைந்து பெரிய அவயவியை உண்டாக்குகின்றன. பரமாணுக்களுக்குப் பக்கமின்மையின் அவையெல்லாம் ஓர் பெரும் பொருளை ஆக்க இயையா. ஆகலின், பரமாணுகாரணவாதம் யுக்தம் அன்று. (௧௦)

சூத்திரகாரர் மற்றோர் பொருத்தமின்மை காட்டுகின்றனர்.

உஹயயாவிந கூ³ர்தஸ்த³ஹாவ꞉ (௨. ௨. ௧௧)

(௧அ௫) ஈரிடத்தும் கருமமில்லை; ஆகலின் அஃதின்று.

அணுக்களிடத்து முதற்கண் கன்மமின்மையின், அக்கன்மத்தால் இயலும் இசைவும் இல்லையே. ஆன்மாக்களுடைய அதிஷ்டகன்மம் பக்குவப்படவேண்டாதாயின், அணுக்களிடத்திற் சேர்ந்த கன்மம் முன்னரே உற்பத்தியாகலாமே. அது (பக்குவம்) வேண்டுவதாயின், அதனுற் சில வேளைகளிலே தோற்றற்பாலனவாகிய அணுக்களிடத்திற் கன்மம் நிகழாது. விபாகம் என்பது கன்மத்தின் ஓர் தர்மமன்று. ஆனல் எந்தக் கன்மமானது எக்காலத்தில் விதிப்படி எவ்விதபலனைக் கொடுக்கவேண்டுமோ, அந்தக் கன்மத்துக்கு அக்காலம் வாய்ப்பதே விபாகம்; காலவிசேஷம் நியமிக்கப்படாத கன்மங்களுக்குப் பிரபலமாகிய மற்றோர் கன்மம் இடையூறுகாததும் விபாகம். அதிட்டங்கள் என்பன அவ்வக்கன்மத்துக்குத் தகுதியாய பயனைக் கொடுக்கும் இயற்கையுள்ளவைகள். ஆகலின், வெவ்வேறு காலத்தின் பயனைக் கொடுக்கக்கூடியவாய் அனந்த ஆன்மாக்கள் அநுட்டித்த கன்மங்களுக்கு ஒரே காலத்தில் ஒரேவிதமான விபாகம் பொருந்தாது. ஆகையாற் பரமாணுகாரணவாதம் யுக்தமன்றே. (௧௧)

இன்னும் பொருந்தாமையைச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸமவாயா஭்யுபக³மாச்ச ஸாம்யாத³நவஸ்தி²தே꞉ (௨. ௨. ௧௨)

(௧அ௬) சமவாயம் என்பது அங்கீகரிக்கப்படலானும்,

(சமவாயத்திற்கும் ஒருசம்பந்தம் வேண்டுமென்னும்) சாமியத்தினுல் அநவஸ்தை நேர்கின்றமையானும்.

சமவாயம் என்னும் சம்பந்தமானது அங்கீகரிக்கப்படுகின்றது. ஆகலின், இது பொருத்தமின்று. அஃதெங்ஙனம்? சாதிகுணமுதலியவற்றுக்குப் போலப் (பதார்த்தங்களுக்குச்) சமவாயசம்பந்தம் உளதாக, மேன்மேல் முடிவின்றி வேருகிய ஓர் சம்பந்தம்கோடல்வேண்டுமாதலின், அந்தக் கணுமதம் யுக்தமன்று. (கஉ)

நித்யமேவ ச (உ. உ. கங)

(கஅள) (அங்கங்களும்) நித்தியமே; (சமவாயம்) உளதாகலின்.

சமவாயம் நித்தியமாம் என அங்கீகரிக்கப்படுதலின், சம்பந்தப்படுபொருள் நித்தியமிலாதிருப்பச் சமவாயம் நித்தியமாதல் கூடாது; இதனுல் அவயவ அவயவிகளும் நித்தியமாக நேரும்; ஆகலின் இது யுக்தமன்று. (கங)

ரூபாதிமத்வாச்ச விபர்யயோ தர்சநாத் (உ. உ. கச)

(கஅஅ) ரூபமுதலியன உண்மையானும், (அனுபவத்தில் அவற்றின்) வேறுபாடு காணப்படலான்.

பரமாணுக்கள் ரூபமுதலியவுடைய என்பது அங்கீகரிக்கப்படுகின்றது. அதனுல் (நாம் காணும் கடாதிகள் போல) அவை நித்தியமாகா; எதனுல்? (ரூபமுதலியவற்றையுடைய) கடாதிகளிற் காணப்படலான். அது அசாமஞ்சசம். (கச)

உபயதா ச தோஷாத் (உ. உ. க௫)

(கஅகூ) இருதிறத்தானும் தோஷமுண்மையின்.

அநித்தியத்துவ தோஷத்தை நீக்குமாறு பரமாணுக்களுக்கு ரூபமுதலியன இல்லை என்று கொள்ளின், (காரியமானது) காரணகுணத்தை முன் உடைத்தாதல் வேண்டுமென்னுங் கொள்கை பொருந்தாது. காரியமானது காரணகுணத்தை முன்னுடைத்தாதலென்னுங் கொள்கை சித்திப்பதற்கு மீண்டும் ரூபமுதலியவற்றை அங்கீகரிப்பின், அநித்தியத்துவ முதலிய அநர்த்தம் விளைகின்றது. ஆகலின், இருதிறத்தானும் குற்றம் நேர்தல்பற்றிக் கணுதமதம் அசாமஞ்சசம். (க௫)

அபரிக்ரஹாச்சாத்யந்தமநபேக்ஷா (உ. உ. கசு)

(ககூ0) அங்கீகரிக்கப்படாமையானும் அது முற்றும் வேறும்.

சாங்கியபக்ஷம் சுருதிக்கும் நியாயத்துக்கும் விரோதமுறினும், (தோற்றத்துக்கு முன்னும் காரணத்திற் காரியம் உளது என்னும்) சற்காரியவாத முதலிய சில அம்சத்திற் சாங்கியம் வைதிகரால் அங்கீகரிக்கப்படுகின்றது. கணுதமதம் எந்த அம்சம் பற்றியும் அங்கீகரிக்கப்படாமையான், முமூட்சுக்களால் இது முற்றும் பராமுகஞ் செய்யற்பாற்று. (கசு)

## (௩) சமுதாயாதிகரணம்.

(பௌத்தரிற் சமுதாயகாரணவாத நிராகரணம்)

ஸமுதாய உபயஹேதுகேபி ததப்ராப்தி: (உ. உ. கஎ)

(கசுக) இரு காரணத்துக்குரிய தொகுதியினும், அது (தொகுதி) நிகழ்கின்றது.

ஏகதேசவைதிகர் மதம் நிராகரிக்கப்பட்டது. இப்போது வேதபாகியருடைய மதம் கண்டிக்கப்படுகின்றது.

முதற்கண் பௌத்தமத சித்தாந்தங்களிலே கூறப்படும் சமுதாயகாரணவாதம் யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது யுக்தம். பின் வருமாறு இங்ஙனம் கூறுகின்றனர்; புறமும் அகமும் எனச் சமுதாயம் இருதிறப்படும். புறச்சமுதாயம் பிருதிவி முதலியவாம். அகச்சமுதாயம் சித்தசைதன்னியம். சமஸ்தப்பிரபஞ்சமும் இரு சமுதாயத்துள் அடங்கும். எங்ஙனமெனின், புறச்சமுதாயத்துக்குப் பரமாணுக்கள் காரணம். அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு என நால் வகைப்படும். இவைகளிலிருந்து ஒரேமுறையிற்றோற்றி இசைந்தே புறச்சமுதாயம் உண்டாகின்றது. அகச்சமுதாயத்துக்கு ஐந்து ஸ்கந்தம் காரணம். அவை ரூபம், வேதனை, விஞ்ஞானம், சம்ஞானம், சம்ஸ்காரம் என்பவைகளே. மனசினால் அறியற்பாலனவாய சத்தப்பரிச ரூபமுதலியவைகளே ரூபஸ்கந்தம். அதின் வெளிப்படுகை விஞ்ஞானஸ்கந்தம். இதினாலுண்டாகிய துக்கம் வேதநாஸ்கந்தம். தேவதத்தன்முதலிய பெயர்கள் சம்ஞாஸ்கந்தம். இவற்றுள் வாசனை சம்ஸ்காரகந்தம். இவைகள் ஒன்றாக இசைந்து நிற்க அகச்சமுதாயம் உண்டாகின்றது. இங்ஙனம் இரு சமுதாயகாரணவாதம் விரோதமுறாதாம் எனின்,

(சித்தாந்தம்) நிரூபிக்கப்படுகின்றது. இரு சமுதாயகாரணவாதம் பொருத்தம் இன்று. அவர்கள் (புத்தர்கள்) க்ஷணிகவாதிகள்; காரணம் க்ஷணிகமாதல்பற்றி அப்பொழுதே நட்ட முற அது காரியத்தை ஆக்க மாட்டாமையான், அவைகளுக்கு (க்ஷணிகங்களுக்கு) சமுதாயம் எங்ஙனமாம்? (கஎ)

ஐதரேதர ப்ரத்யயத்வாதிதி சேந்ந ஸம்காதபாவா நிமித்தத்வாத் (உ. உ. ௧அ)

(௧௧௨) (அவித்தையும் இராகாதிகளும்) ஒன்றுக்கொன்று காரணமாதலின் அது கூடுமாமெனின், அன்று; (அவித்தை) சமுதாயத்தை ஆக்கமாட்டாமையின்.

(புத்தன்) நிலையில்லாததை நிலையெனக்கொள்ளும் அவித்தையும் இராகாதிகளும் ஒன்றுக்கொன்று காரணமாயிருத்தலின், இந்தச் சமுதாயம் கூடுமாம் எனின்,

(சித்தாந்தம்) அன்று; அவித்தை சமுதாயத்தை ஆக்காமையின். அவித்தை காரணமாக இப்பியானது வெள்ளியாகத் திரித்துணரப்படுங்கால், அவ்விப்பி முதலியன வாஸ்தவத்தில் வெள்ளிமுதலியவற்றின் காரியத்தை ஆக்கா; அறிவுடையானுக்கு அப்பொழுதே அத்திரிவுணர்ச்சி தீர்தலின். அவித்தை காரணமாக இராகாதிகளும் எய்தமாட்டா. ஆகலிற் சமுதாய காரணவாதம் அயுக்தம். (௧அ)

(சூத்திரகாரர்) மற்றோர் யுக்தி கூறுகின்றனர்.

உத்தரோத்பாதே ச பூர்வநிரோதாத் (உ. உ. ௧௯)

(௧௧௩) முந்தியது நட்டமாகுங்கால், பிந்தியது உற்பத்தியாதலின்.

பிற் கடம் உற்பத்தியாகுங்கால், முற்கடம் நஷ்டமாகின்றது. அபாவமே காரணமாக யாண்டும் உளதாதலின், எக்காலமும் எங்கும் உற்பத்தியாகலாம். (௧௯)

அஸதி ப்ரதிஜ்ஞோபரோதோ யௌகபத்யமந்யதா।
(உ. உ. உ0)

(௧௧௪) சத்து இல்லையானற் பிரதிஞ்ஞாவிரோதம்; இன்றேல் ஒரேமுறையில் நிகழ்வது.

காரணமில்லாமலே காரியம் உற்பத்தியாவதேல், (இந்திரியம் பிரகாச முதலாயினவே) ஞானத்துக்குக் காரணம் என்னும் கோட்பாடு விரோதமாகும். *(காரியமாகும் வரையிற் பூருவகட அபாவகாரணம்) உளதென்று கொள்ளின், இரு குடங்கள் ஒரே முறையில் இருப்பக் காணலாம்; (காரியமாகும் வரையிற் காரணம்) இல்லையேல், (பொருளுக்கும் இந்திரியத்துக்கும்) இசைவாகிய அறிவுக்கும் ஏககாலநிகழ்ச்சி எய்தும். (உ0)

* இந்திரியத்துக்கும் பொருளுக்கும் சம்பந்தமாய்ப் பின்னர்த் தோற்றற்பாலதாகிய அறிவு ஏககாலத்துளதாம் என்னும் தோஷம் நிகழும் என்பது தாற்பரியம்.

ப்ரதிஸம்க்யா ப்ரதிஸம்க்யா நிரோதா ப்ராப்தி ரவிச்சேதாத்।
(௨. ௨. ௨௧)

**(௧௧௫) (ஸ்தூல) நாசமும், (சூக்கும) நாசமும் எய்தா ; (சந்தானதிரவியம்) உண்மையான்.**

*நிரோதம் என்பது மீதமின்றி ஒழிவது. அந்தவிநாசம் ஸ்தூலவிநாசமாகவாவது சூக்குமவிநாசமாகவாவது இராது ; கபாலாதி ரூபத்தையடைந்தவிடத்தும் கடம் நாசமுற்றதெனச் சொல்வதினாலும்; சத்தாகிய திரவியம் அழியாமையினாலுமாம். அதுகொண்டு க்ஷணிகத்துவ வாதஞ் சித்தியாது.* (௨௧)

உபயதா ச தோஷாத் (௨. ௨. ௨௨)

**(௧௧௬) இருதிறத்தும் தோஷமுண்மையான்.**

தோற்றப்பட்டது இன்மையாவதும், இன்மையிலிருந்து உற்பத்தியாவதும் பொருந்தா ; இன்மையிலிருந்து உற்பத்தியாதல் கூடாமையானும், இன்மையாகுங் காரியமே உற்பத்தியாகுமென்னும் தோஷமுண்மையானுமாம். ஆகலின், இந்தக் கோட்பாடு ஒவ்வாது. (௨௨)

ஆகாசே சாவிசேஷாத் (௨. ௨. ௨௩)

**(௧௧௭) ஆகாயத்தினும் வேறுபாடின்மையான்.**

*ஆகாயத்தையும் சூனியம் என்று கோடற்பாற்றன்று; பருந்து முதலிய பட்சிகள் பறத்தற்கியன்ற பூதமாக அதனுண்மை தவிர்க்கப்படாது அனுபவஞ் சித்தித்தலான்.* (௨௩)

அநுஸ்ம்ருதேஶ்ச (௨. ௨. ௨௪)

**(௧௧௮) நினைப்பூட்டுகையானும்.**

*நினைப்பூட்டுதல்பற்றியும் க்ஷணிகவாதம் நிலைக்காது. "அதுவே இது" என்னுமிடத்துச் சாமாநாதிகரணியத்தினால், சென்றகாலத்துக்கும் நிகழ்காலத்துக்குமுரிய வஸ்து ஒன்றென்று அறியப்படுகின்றது. முன் அனுபவத்தினால் உண்டாகிய சம்ஸ்காரமுடைய புருஷனது இந்திரியசம்யோகமே அதற்குக் கருவியாகின்றது. ஆகலின், க்ஷணிகத்துவமுதலாகிய பொருந்தாத அர்த்தத்தைச் சொல்வதிற் சமுதாயகாரணவாதமானது முற்றும் தவறும்.* (௨௪)

**(௪) திருஷ்டத்துவாதிகரணம்.**

---

(பௌத்தரில் ஞானநுமேயத்துவவாதநிராகரணம்)

*பாகியார்த்த ஆஸ்திகவாதிகளுள்ளே, பசு கடமுதலாயின பிரத்தியு*

க்ஷத்தினல் அறியப்படுவனவாம் என்னும் பௌத்தர் கோட்பாடு நிரசிக்கப்பட்டது. (பாகியார்த்தங்களின் ஆஸ்திகம்) அறிவினல் அனுமானிக்கப்படும் என்னும் வாதிகள் நிரசிக்கப்படுகின்றனர்.

நாஸதோ ऽத்ருஷ்டத்வாத் (உ. உ. உரு)

**(ககூகூ) அசத்திலிருந்து (தர்மம்) இல்லை; காணப்படாமையான்.**

(பாகியார்த்தங்களின் இருப்பு) அறிவினல் அனுமானிக்கப்படல்வேண்டும் என்னும் ஓர் சார் பௌத்தர்களின் கொள்கை யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஒருபொருள் தான் நாசமுறுங்கால் தன் உருவை அறிவிற் புகட்டி அழிகின்றது. அறிபவன் அப்பொருளை அறிவின் வைசித்திரியத்தைக் கொண்டு அநுமானிக்கின்றான். ஞானவைசித்திரியத்தினல் அர்த்தவைசித்திரியம் அனுமானிக்கப்படுகின்றதெனின்,

(சித்தாந்தம்) இது இசையாது; அர்த்தம் க்ஷணிகமாதலினலும், இல்லாதொழிந்துபோய தர்மியின் தருமம் மற்றென்றுக்குச் செல்லக் காணப்படாமையானுமாம். (உரு)

உதாஸீநாநாமபி சைவம் ஸித்தி: (உ. உ. உசு)

**(உ00) இங்ஙனமாயின் உதாசீனருக்கும் சித்தி எய்தும்.**

க்ஷணிகத்துவத்தை அங்கீகரிப்பின் ஒருவன் ஒன்று செய்ய மற்றவன் பலத்தை அடைபவனவன். ஆகலின், பிரயத்தனம் எதுவும் செய்யாதவர்க்கும் சர்வார்த்தசித்தியும் எய்துவதாம். இங்ஙனம் இவர் கோட்பாட்டை விளக்குதல் கஷ்டம். (உசு)

(ரு) உபலப்தியதிகரணம்.

---

(பௌத்தர்விஞ்ஞானமாத்திரவாதநிராகரணம்)

நாபாவ உபலப்தே: (உ. உ. உஎ)

**(உ0க) (பாகியப்பொருள்) அபாவமாகாது, அறியப்படலான்.**

ஈண்டுப் பௌத்தருடைய கேவல விஞ்ஞானவாதம் யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது யுக்தம். வடிவத்தோடு கூடிய விஞ்ஞானமே அகத்தத்துவம்; புறப்பொருள்கள் தத்துவமன்று; சொப்பனத்திலே புறப்

பொருள் வேண்டாது கேவலம் புத்தியினாலே வியவகாரம் நிகழக்காணப் படலான். இங்ஙனம் சாக்கிரவியவகாரத்துக்கும் வியவஸ்தை பொருத்த மாகும். ஆகலின், விஞ்ஞானமாத்திரம் தத்துவமாம் எனின்,

(சித்தாந்தம்) கடத்தை அறிகின்றேன் என்னுமிடத்து அறிபவனுக் குச் செயப்படுபொருளாய பொருள் தோன்றுதலால், அதை இல்லை என்று மறுத்தல் கூடாது. விசேஷ பொருளை வியவரிக்குமாறு புருஷனுக்குத் தக்கவாறு தோற்றுவிப்பதே ஞானத்தின் ஆகாரம். (உஎ)

சொப்பனதிருஷ்டாந்தவாயிலாகச் சாக்கிரவியவகாரமும் சூனியமாம் என்றதற்குச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

வைத⁴ர்ம்யாச்ச ந ஸ்வப்நாதி³வத் (உ. உ. உஅ)

(உ௦உ) பேதமுண்மையினாலும் சொப்பனாதிபோலன்று.

இந்திரியதோஷத்தின் வாதை இல்லை என்னும் வேறுபாட்டாற் சாக் கிராவஸ்தை சொப்பனம்போல் மித்தையாகாது. ஆகலின், விஞ்ஞானமாத் திரம் தத்துவமன்று. (உஅ)

ந பா⁴வோ(அ)நுபலப்³தே⁴꞉ (உ. உ. உகூ)

(உ௦௩) அறிவில்லாவிடத்துப் பொருளில்லை.

பொருள் சூனியமாமிடத்து ஞானம் எய்தாது; அந்த ஞானம் யாண் டும் அனுபவத்திற் காணப்படாமையான். சொப்பன ஞானத்துக்கும் பொருள் இருக்கின்றது. ஆகலின், விஞ்ஞானமாத்திரவாதம் பொருந் தாது. (உகூ)

(கூ) சர்வதாநுபபத்தியதிகரணம்.

---

(சர்வசூன்னியவாதநிராகரணம்)

ஸர்வதா²(அ)நுபபத்தேஶ்ச (உ. உ. ௩௦)

(உ௦௪) எப்பிரகாரத்தினாலும் அது பொருத்தமின்மை யானும்.

ஈண்டுச் சர்வசூன்னியவாதம் யுக்தமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது யுக்தம். எங்ஙனமெனின், உலகமுழுமையும் சத்தன்று, பாதிக்கப்படலான். அசத்துமன்று, அறியக்கிடத்தலின். இரண்டும் அன்று, விரோதமுறுதலான். இரண்டும் அன்றெனலும் கூடாது, அசம்பவமாதலின். ஆனால் இந்த நான்கினும் அடங்காத எல்லாம் சூன்னி யமே. பிரத்தியக்ஷக்காட்சியோ எனின், அது மாயை மூலமாய்ப் போந் தது. ஆகலின், சூன்னியவாதந்தான் நன்றாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. எல்லாம் சூன்னியம் என்பது கூடாது. ஏதனால்? பிரபஞ்சத்தைச் சத்து என்றுவது, அசத்தென்றுவது, மற்றொன்றென்றுவது கூறுமிடமெல்லாம் சூன்னியத்துவம் எய்தாது; சத்து அசத்து என்னும் மொழிகளும் அவற்றின் கருத்துக்களும் வஸ்துவைப்பற்றி ஒன்றுக்கொன்று வேறுபாடாகிய உளது இலதென்னும் அவஸ்தாவிசேஷங்களைப் பற்றியவாமாதலின். பிரத்தியக்ஷக்காட்சி அவித்தையினாலாம் எனின், அது பரிகாசத்துக்கிடனும். எல்லாஞ் சூன்னியமாயின் அவித்தைக்கு ஆசிரயமாயுள்ளது யாது? எதற்கு இத்தோற்றம் நேர்ந்தது? ஆகலின், சர்வசூன்னியவாதம் முழுமையும் விரோதமே. (௩0)

பௌத்தமதம் தீர்ந்தது. சைனமதம் கண்டிக்கப்படுகின்றது.

## (எ) ஏகஸ்மிந்நசம்பவாதிகரணம்.

---

நைகஸ்மிந்நஸம்பவாத் (உ. உ. ௩௧)

### (உ0௫) பொருந்தாமைபற்றி ஒன்றிற் (பல) இல்லை.

### (சைனமதவாதநிராகரணம்)

சப்தபங்கிந்யாயத்தினாற் சைனர்கள் ஒரே பொருளினும் பலதிறத்த வஸ்துகளை விளக்குகின்றனர். இவர்கள் மதம் யுக்தமா? அன்று? என்பது விசாரம்.

அவர்கள் மதம் வருமாறு:— ஆன்மா அநான்மா எனப் பதார்த்தங்கள் இரண்டு உள. ஆன்மா சேதனன்; சரீரபரிமாணமுடையன்; அவயவமுடையன். அநான்மா அறுவிதம். (அவற்றுள்) ஒன்று வனம் மலை முதலிய; எஞ்சிய ஐந்தும் ஆசிரவம், சம்வரம், நிர்ஜரம், பந்தம், மோக்ஷம் என்பன. ஆசிரவம் என்பது இந்திரியத்தொகுதி. இவை வாயிலாக ஆன்மா புற விஷயங்களிற் பற்றுகின்றது. சம்வரம் என்றது அவிவேகம். இதனால் விவேகம் மறைக்கப்படுகின்றது. நிர்ஜரம் என்பது தவம்; அது மயிர் பறித்தல், சுடுகல்லேறல் முதலியவாம்; காமக்குரோத முதலியவெல்லாம் இதனால் ஒழிந்துபோகின்றன. பந்தம் என்பது எண்வகைக் கருமங்களினால் எய்தும் ஜன்மபரம்பரை; (அவையாவன):— இம்சை செய்யும் நால்வகைப் பாவச்செயல்களும், இம்சை செய்யா நால்வகைப் புண்ணியங்களுமாம். மோக்ஷம் என்பது இக்கருமங்களினின்று வீடுறும் ஆன்மா இடைவிடாது மேற்கதி அடைதலாம். இந்தச் சப்த பதார்த்தங்கள் சப்தபங்கிந்யாயத்தினால் ஸ்தாபிக்கற்பாலன. அவை இவை:— உண்டாம் உண்டு; உண்டாம் இல்லை; உண்டாம் உண்டுமாம் இல்லையுமாம்; உண்டாம் சொல்லொணாததாம்; உண்டாம் உண்டுமாம் சொல்லொணாததுமாம்; உண்டாம்

இல்லையுமாம் சொல்லொணாததுமாம்; உண்டாம் உண்டுமாம் இல்லையுமாம் சொல்லொணாததுமாம் என்பன சப்தபங்கிநியாயம். உண்டாம் என்பது சிறிது என்பதின் மேற்று.

ஆகலின் சப்தபங்கிநியாயத்தினுற் சப்த பதார்த்தம் சித்திக்கின்றதெனல் அயுக்தம். எதனுல்? உளதாதலும் இலதாதலும் நித்தியமாதலும் அநித்தியமாதலும் பேதமாதலும் அபேதமாதலும் ஒரே பொருளில் இருத்தல் கூடாமையின். ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றிய மட்பிண்டம் கடம் கபாலம் என்பவைகள் உளவாதலும் இலவாதலுமாம் ஒன்றுக்கொன்று மாருகிய அவஸ்தைகள் ஒரே பதார்த்தத்தில் ஒரே காலத்தில் ஒருங்கிரா. ஆகலின், சைனமதம் விருத்தம். (௩௧)

एवं चात्माकार्त्स्न्यम् (உ. உ. ௩௨)

(உ0௬) இங்ஙனமும் ஆன்மாவுக்குப் பூரணமின்மை.

இங்ஙனம் ஆன்மாவுக்குப் பூரணமின்மை பொருந்தாது. ஆன்மா சரீர பரிமாணமுடையதேற் பெருஞ் சரீரத்திருந்து சிறு சரீரத்துக்குப் பிரவேசிக்குங்காற் குறைவு நேரிடுமே. ஆகலின், ஆன்மாவைச் சரீர பரிமாணமுடையதெனல் அயுக்தமே. (௩௨)

न च पर्यायादप्यविरोधो विकारादिभ्यः (உ. உ. ௩௩)

(உ0௭) (மாறி மாறி) வேறுபடுதல்பற்றியும் அவிரோதமில்லை, விகாரமுதலியவுண்மையான்.

ஆன்மா அவ்வவ் வடிவத்துக்கியைந்த உருப்பெறுமெனினும், முன் உரைத்த பொருத்தமின்மை தீராது; ஆன்மா கடாதிபோல விகாரமடைகின்றதென்னும் தோஷமுறலான். (௩௩)

अन्त्यावस्थितेश्चोभयनित्यत्वादविशेषः (உ. உ. ௩௪)

(உ0௮) இறுதி நிலை காரணமாக இரண்டும் நித்தியமாதலிற் பேதம் இன்று.

இறுதி முத்திதசையிலே பரிமாணம் ஏகரூபமாயிருத்தலின், இயற்கையாய் ஆன்மாவும் அதன் பரிமாணமுமாகிய இரண்டும் நித்தியமாயிருப்ப, முந்திய தசையிலும் பேதமிலதாகும். பல்வகைப் பரிமாணமுடையதென்பதிற் குறைவே நேரும். ஆகலின், ஒன்றில் உளது இலதென்னும் வாதத்தினுலும், ஆன்மா தேகபரிமாணமுடையதென்னும் வாதத்தினுலும் சைனமதமும் தவறும். (௩௪)

(எ) பாசுபதாதிகரணம்.

---

(பூருவாசாரியர் கொள்கைப் பிரகாரம்

அவைதிக நகுலீச பாசுபதமத நிராகரணம்)

पत्युरसामञ्जस्यात् (௨. ௨. ௩௫)

**(௨௦௯) பதி (நிமித்தகாரணமாதல் இன்று), பொருத்தமின்மையின்.**

(மாயாதத்துவத்து வைகும் ஓர்) ருத்திரர் அருளிய (அவைதிக பாசுபத) ஆகமநிஷ்டராய் அதன் மதப்பொருள் அறியாதவராயுள்ள ஏகதேச தாந்திரிகர் *(அவைதிகபாசுபதர்) பதியாகிய சிவபெருமான் சுருதிமுடிவின்

* (பூருவாசாரியர் கொள்கைப்பிரகாரம்) ஸ்ரீநீலகண்டசிவாசாரியராலும், சங்கராசாரியராலும், இராமாநுஜாசாரியராலும், மத்துவாசாரியராலும், இந்தப் "பாசுபதாதியதிகரண" த்தினும், நீலகண்டசிவாசாரியராலும் சங்கராசாரியராலும் "பாஞ்சராத்திராதிகரண" த்தினும் நிராகரணஞ் செய்யப்பட்ட மதங்கள் முறையே **அவைதிகபாசுபதமும் பாஞ்சராத்திரமுமாம்.**

पुरा दारुवने पुण्ये मुनयो गृहमेधिनः ।
सहस्रपरिमाणाश्च तपस्तेपुः सहस्रशः ।
ततः कदाचिन्महती कालयोगेन दुस्तरा ।
अनावृष्टिरतीवोग्रा ह्यासील्लोकविनाशिनी ।
समेत्य सर्वे मुनयो गौतमं तपसां निधिम् ।
अयाचन्त क्षुधाविष्टा आहारं प्राणधारणम् ।
स तेभ्यः प्रददावन्नं दृष्ट्वा बहुतरं बुधः ।

"முன்னோர்கால் கிரகஸ்தாச்சிரமிகளாகிய முனிவர் ஆயிரக்கணக்காயினோர் திவ்யமாகிய தாருவனத்திலே சிவாராதனையின் பொருட்டுத் தபஞ்செய்துவந்தார்; காலபேதத்தினால் ஓர் காற் பெரிதாயதும், கடத்தற்கரியதும், அதிக உக்கிரமுடையதும், உயிர்களை வதைக்கற்பாலதுமாய ஓர் துர்ப்பிக்ஷம் உண்டாயிற்று; அப்போது தபசுக்கு நிதியாயுள்ள கௌதமரை அம்முனிவரெல்லாம் அடைந்து பசியினால் வருந்திப் பிராணாதாரமாகிய ஆகாரம் வேண்டுமென அவரை யாசித்தார்கள். அம்முனிவர் அவர்கட்கு மிகுதியாகப் பாகஞ்செய்யப்பெற்ற அன்னமளித்தார்;" பின்னர் அவர்கள் அச்சம் யாதுமின்றி அவரது ஆச்சிரமத்தில் இருந்து பன்னிரு வருஷம் உண்டு வருவாராக, துர்ப்பிக்ஷம் நீங்கிற்று; மழைபெய்து நாடு செழித்தமையால் அவர்கள் அவ்வாச்சிரமம் விடுத்துத் தம்முறைவிடம் போதற்கு முயன்று முனிவரிடம் வந்து அநுமதிகேட்க, அவர் பின்னும் சிலகாலம் தமது ஆச்சிரமத்திருந்து சுகமே உண்டு வாழுமாறு கூறி, அவர்களைப் போகாவண்ணம் தடுத்தார்; அப்போது அம்முனிவர்கள் மாயாரூபமாகிய கரிய பசுவொன்றை (மந்திரத்தினால்) ஆக்கி, கௌதமர் சமீபத்தில் நிற்குமாறு செய்ய, அம்முனிவர் அப்பசுவைக் கோட்டத்திற் கொணர்ந்து கட்டித் தொட்டமாத்திரத்தில் அது வீழ்ந்திறந்தது; இவ்விஷயத்தை முனிவர் அறியாது கோஹத்தி நிகழ்ந்துபோயிற்றே என்று சோகித்தார்;

गोवध्येयं द्विजश्रेष्ठ यावत्तव शरीरगा ।
तावत्त्वदन्नं न भोक्तव्यं गच्छामो वयमेव हि ।

"(அம்முனிவர்கள் கௌதமரை நோக்கி) விப்பிரசிரேஷ்டரே! இது பசுக்கொலை; நுமது சரீரம் நீங்கும் வரையும் நுமது அன்னம் புசிக்கற்பாலதன்று; நாங்கள் (இவ்விடம்விட்டுப்) போகின்றேம்" என்று கூறிப் போய்த் தமது தாருவனத்தை அடைந்

படி உபயகாரணமுடையராயவிடத்தும், கேவலம் நிமித்தகாரணவாதம் கூறு கின்றார்கள். இது யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

---

தார்கள்; இவர்கள் மாயத்தினால் நேர்ந்த கோவதையைக் கௌதமமுனிவர் அறிந்து அவர்களைச் சபித்தார்;

ஹவிஷ்யந்தி த்ரயீபாஹ்யா மஹாபாதகிநஸ்ஸதா|
பஹுஶஸ்தேந ஶாபாக்நேர்ஜாயமாநா: புந: புந:|
ஸர்வே ஸம்ப்ராப்ய தேவேஶம் ஶங்கரம் விஷ்ணுமவ்யயம்|

"மகாபாதகிகளை நிகர்த்து வேதபாகியர்களாய் ஆவார்கள் என, அவர்கள் அநேகமாய்ச் சாபத்தினால் மீட்டும் மீட்டும் பிறந்து, (மாயாதத்துவ) உருத்திரரையும் அவ்வியயராகிய நாராயணரையும் அடைந்து ஸ்தோத்திரஞ் செய்தார்கள்; அப்போது உருத்திரர் (அவைதிக) பாசுபத முதலியவற்றையும், நாராயணர் பாஞ்சராத்திர முதலியவற்றையும் அச்சாபமுற்ற முனிவர் ரக்ஷணார்த்தமாக உண்டாக்கினார்கள் என்று உபநிடத உபக்கிரமணிகை உகூ-ஆம் இலக்கத்திற் பெறப்படுகின்றது. சாபமுற்ற முனிவர் இரக்ஷணார்த்தமாக அவைதிக பாசுபதமுதலிய இயற்றப்பட்ட இவ்வுண்மை கூர்மபுராண பூருவபாகத்து கசு-ஆம் அத்தியாயத்தினும், சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்து ருஉ-ஆம் அத்தியாயத்தினும் காணப்படுகின்றது. ஆகலின், இவ்விரு அதிகரணங்களும் அவைதிகபாசுபத பாஞ்சராத்திரமத நிராகரணங்களின் மேலனவாம்.

ஸ்ரீநீலகண்டசிவாசாரியரால் உ. உ. ருஅ-ஆஞ் சூத்திரபாஷ்யத்தில் அவைதிக பாசுபதத்தை நிராகரணஞ்செய்து, பின் அவர் சித்தாந்தமாக ஸ்தாபித்த பாசுபதம் வைதிக பாசுபதமாம் என்பதும், அவைதிக (அசிரௌத) பாசுபதம் வைதிக (சிரௌத) பாசுபதம் எனப் பாசுபதம் இருதிறப்படும் என்பதும், உபநிடத உபக்கிரமணிகை ரு0-ஆம் இலக்கத்தினால் அறிக. இந்த அவைதிக பாசுபதம் அகப்புறச் சமயத்துள் ஒன்றாக வைத்து ஸ்ரீசிவஞானசுவாமிகளால் திராவிட மகாபாடியத்திற் கணிக்கப்பட்டிருக்கின்றது. அங்குரத்துக்காதாரம் வித்து, வித்துக்காதாரம் குளிர்ச்சி, குளிர்ச்சிக்காதாரம் நிலமாமாறு போல, பிரபஞ்சத்துக்காதாரம் மாயை, மாயைக்காதாரம் சிவசத்தி, சிவசத்திக்காதாரம் சிவபிரான்; நிலம் குளிர்ந்தவிடத்து அதன்கட் கிடந்த வித்து முளையைத் தோற்றுவிக்குமாறு போல, சிவசத்தி சங்கற்பித்த போது மாயையினின்று பிரபஞ்சம் தோன்றும் என்று சிவஞானபோதம் கூறுமாற்றாற் பிரபஞ்சம் மாயையுள் அடங்கியதென்றும், மாயை சத்திக்குள் அடங்கியதென்றும், சத்தி சிவனார்க்குள் அடங்கியதென்றும் சிவதருமோத்தராதி ஆகமங்களினாற் பெறப்படுகின்றது. பிரபஞ்சமுதலியன ஒன்றனுள் ஒன்று வியாபகவியாப்பியத்தினால் நீங்காதிருந்தனவாக, ஞானபாதமுற்றுச் சிவபிரானும் மாயையும் சத்தியும் நிமித்தோபாதான துணைக்காரணமாகச் சிறப்புறக் கூறப்பட, உபநிடதங்களும் பிரமசூத்திரமும் க. ச. உகூ-ஆம் சூத்திரபாஷ்யக் குறிப்பிற் கூறியாங்கு, தியானயோகமுற்றுச் சிவபெருமான் நிமித்தோபாதான காரணராகப் பொதுவுறக் கூறப்படுதலாற் போதரும் ஏதம் யாதுமின்றாம். தியானயோகத்துச் சிவதத்துவத்தின் பாற்பட்ட வைதிக பாசுபதமானது ஸ்தூல மூலப்பிரகிருதிப் பாற்பட்ட அவைதிக பாசுபதாகமம், இரண்ணியகர்ப்பாகம முதலியவற்றைக் கண்டிக்க வன்மையுடையனவாமன்றி ஞானபாதத்ததாய், வேதசாரத்ததாய், ஷட்திரிம்சத் தத்துவாதீதமாய் நிற்கும் காமிகாதி வைதிக சித்தாந்த சிவாகமத்தைக் கண்டிக்க வன்மையுடையதுமன்று; கண்டித்ததுமன்று. இது கொண்டே நீலகண்டசிவாசாரியர் "வேதசிவாகமங் கட்குப் பேதம் கண்டிலம்" என்றற்றொடக்கத்தனவாக அருளிச்செய்ய,

பத்யுரஸாமஞ்ஜஸ்யாதித்யத்ர நிரீஶ்வரஸாங்க்யவத்
நிராகரணவாக்யம் ந து காமிகாதி ஸித்தாந்தஶைவாகமஸ்ய வேதாவிரோதிநஸ்ய|

"பாசுபத்தியதிகரணத்தில் நிருடபாசுபதமே நிராகரணஞ் செய்யப்பட்டதன்றி,

(பூருவபக்ஷம்) உபாதானமல்லாத குலாலன் தண்டாதிகளைச் செலுத்துதலாற் கர்த்தாவாகின்றான். ஆகலின், தடஸ்தராகிய *ஈசுரர் நிமித்தமாத்திரரே. மாயை உபாதானம். சத்திகள் கரணம். இன்றேல் மண் முதலிய போல ஈசுரர் உபாதானமாயின், அவர் விகாரமுதலியனவுறுவர். ஆகலின் ஈசுரர் நிமித்தமாத்திரரெனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. பதியாகிய ஈசுரரைக் கேவலம் நிமித்தகாரணமாகக் கூறுவது யுக்தம் அன்று; சுருதி நியாயத்துக்கு விரோதமாய்ப் பொருந்தாமையின். (கரு)

எங்ஙனம் விரோதம் என்று சூத்திரகாரர் காட்டுகின்றனர்.

ஃயிஷூானாநுவவதெ்ஹு (உ. உ. கசு)

## (உக0) அதிட்டானம் பொருத்தமின்மையினாலும்.

சரீரமிலராகிய ஈசுரர் உபாதானமாகிய மாயையை அதிஷ்டிக்கின்றனர் எனல் கூடாது. உலகத்திலே சரீரமுடைய குலாலன் முதலாயினோர் மட்பிண்டமுதலிய உபாதானகாரணத்தை அதிட்டிக்கக் காண்கின்றேம். ஆகலின், குலாலாதி திருட்டாந்தம் பொருந்தாது. மாயையை ஈசுரர் அதிட்டித்திலர் எனக்கொள்ளின், அவர் பிரயோசனமிலராக, சாங்கியர் கூறும் மதமே யுக்தமாகும். ஆகலின், ஈசுரர் நிமித்தகாரணமாதல் கூடாதெனப் பின்னரும் ஆக்ஷேபித்துக் கூறுவாராயினர். (கசு)

கரணவஷெ்ஜ ஹொ஗ாஜிஹ்ூ: (உ. உ. கஎ)

## (உகக) இந்திரியம் போலெனின், அன்று; போகாதிகளெய்துமாதலின்.

அதிஷ்டானத்துக்கும் சரீரம் வேண்டாம்; எங்ஙனம் சரீரமில்லாத இந்திரியம் சரீரத்தை அதிஷ்டிக்கின்றதோ, அங்ஙனமே ஈசுரர் பிரதானத்தை அதிஷ்டிக்கின்றனர் எனின்,

---

வேதவிருத்தமில்லாத காமிகாதி சித்தாந்த சைவாகமம் அன்று" என்று பவுஷ்கராகமவிருத்தியில் ஸ்ரீஉமாபதிசிவாசாரிய சுவாமிகள் வரைந்தருளினர். தூலப்பிரகிருதிப் பாற்பட்ட நிமித்தகாரணம் கூறும் அவைதிக பாசுபதாகமம், இரண்ணியகர்ப்பாகமம் முதலியன கண்டிக்கப்படுவனவேயாக, ஞானபாதத்து ஷட்திரிம்சத்தத்துவாதீத வைதிக சைவசித்தாந்த சைவாகமம் கண்டிக்கப்படாது போதல், கன்மகாண்டம்பற்றி ஒருவன் "பெண்களைக் காமுறற்க" என்று கண்டிக்கப்படுவானாக, ஞானகாண்டம்பற்றி (பதினாறுயிரம் கோப) ஸ்திரீகளைக் காமுற்ற கிருஷ்ணபகவான் கண்டிக்கப் படாதுபோதல்போலாம்.

* இந்த ஈசுர சப்தம் சங்கராசாரியர் நீலகண்டசிவாசாரியர்களுக்கு முற்பட்டிருந்த பூருவாசாரியர் கொள்கைப் பிரகாரம் நிருடபாசுபதத்து ருத்திரர் மேற்றேனும், சைவபாடியகாரர் கொள்கைப்பிரகாரம் இரண்ணியகர்ப்பர் மேற்றேனும் செல்லும்.

(சித்தாந்தம்) அன்று; அவர் பிரதானத்துக்குரிய இன்பதுன்பமெல்லாவற்றுக்கும் இயைந்தோராவராதலின். சரீரமில்லாத ஆன்மா சரீரத்தை அதிஷ்டிக்குங்கால் சரீரத்துக்குரிய இன்பதுன்பங்களுக் கெல்லாம் அது ஆளாமாறு போல, பிரதானத்தை அதிஷ்டிக்குங்காற் பிரதானத்துக்குரிய இன்பதுன்பத்துக்கு அவர் ஆளாவார். ஆகலின், ஈசுரர் நிமித்தமாத்திரரல்லர். (௩எ)

ஈஜவகூவேஸவ-ீஜ்ஞூதா வா (உ. உ. ௩அ)

## (உகஉ) முடிவுண்மையும் முற்றறிவின்மையும்.

(சூத்திரத்தில்) வா என்பது உம்மைப்பொருட்டு.

(ஆக்ஷேபம்) குலாலன் மட்பிண்டத்தை அதிட்டிப்பது போல, ஈசுரர் சரீரமுடையராய் வேறு நின்று உபாதானத்தை அதிட்டிக்கின்றனர் எனின்,

(உத்தரம்) அன்று; அங்ஙனமாயின் ஈசுரர் ஓர் சம்சாரியைப் போல, முடிவுடைமையும் முற்றறிவின்மையும் உடையராவாராய், இன்பதுன்பமாம் போகத்துக்கு ஆளாகின்றமையின், ஈசுரர் பிரதானத்தைச் செலுத்துபவராகார்.

(ஆக்ஷேபம்) பிரதானத்தை அதிஷ்டித்தாலும்,

ஈநஶ்நு ஹெநூா Zவிசாகஶீதி (முண். ௩. க. க)

"உண்ணாது மற்றொன்று சாட்சிமாத்திரமாய் இருக்கின்றது" என்னுஞ் சுருதியுண்மையான், ஈசுரர் அந்த இன்பதுன்பமாம் போகத்துக்கு ஆளாகார் எனின்,

(உத்தரம்) அங்ஙனமாயின், தர்க்கபலத்தை விடுத்துச் சுருதிபலமே பற்றத்தக்கதாகும்.

தஷாத்ஜா நo ஸயகூேருருத (தைத். உ. எ. க)

"அப்போது அவர் தாமே தாமாகச் செய்தனர்"

வஹுஸ்ப்ூo ப்ஜாயெய (சாந். சு. உ. ௩)

"நான் அநேகமாயாவேனாக"

ஸவெ-ிா வெெ ருஷஃ (தைத். ஆரணி. உச. சஉ)

"மெய்யாய் எல்லாம் உருத்திரர்" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலே

☞ கேவலம் நிமித்தகாரணம் ஈசுரர்க்குக் கூறிய நிரூடபாசுபதமாகிய அவைதிக நகுலீச பாசுபதாகமத்தை நிராகரணஞ்செய்யுமாறு, சூத்திரங்கடோறும் உத்தரமிறுக்கத் தொடங்கியது வைதிகபாசுபதமேயாம்.

உபாதானமும் சிவபெருமான் என அங்கீகரிக்கப்பாற்று. சிவபெருமான் உலகத்துக்கு உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாய் இருப்பினும்,

நிஷ்கலம் நிஷ்க்ரியம் (சுவே. சு. கசு)

"நிஷ்களமும் நிஷ்கிரியமுமாய் அவர் உளர்" என்றற்றொடக்கத்த சுருதிகளினலே அவர் நிர்விகாரமுடையராவர்.

> ஶக்தி: ப்ரதமஸம்பூதா ஶாந்த்யதீத பதோத்தரா |
> ததோ மாயா ததோऽவ்யக்தம் ஶிவாச்சக்தி மத: ப்ரபோ: |
> ஶாந்த்யதீத பதம் ஜஜ்ஞே ததஶ்ஶாந்திபதம் க்ரமாத் ||

"சாந்தியாதீதசத்தியே முதற்கண் இருந்தது; அதிலிருந்து மாயை பிறந்தது; அதிலிருந்து அவ்வியக்தம் பிறந்தது; சத்தியோடு கூடிய பிரபுவாகிய சிவபெருமானிடத்திலிருந்து சாந்தியதீதபதம் பிறந்தது; அதிலிருந்து சாந்திபதம் பிறந்தது" என்றற்றொடக்கத்த வாயுசங்கிதா சுலோகங்களான் மாயாதிபிரபஞ்சத்திலே சத்திமானுகிய சிவபெருமான் உபாதானத்துவத்தை அடைகின்றனர் என அறியப்படுகின்றது. பின்னரும் அவ்வாயுசங்கிதையிலே,

> ஶக்த்யாதி ச ப்ருதிவ்யந்தம் ஶிவதத்வஸமுத்பவம் |
> தேநைகேந து தத்வ்யாப்தம் ம்ருதா கும்பாதிகம் யதா |
>
> (வாயு. பூர். உ௫: க௮)

"சத்திதத்துவந் தொடுத்துப் பிருதிவியந்தமாயுள்ள எல்லாஞ் சிவதத்துவத்திலிருந்து பிறக்கின்றன; குட முதலிய மண்ணினுல் வியாபிக்கப்பட்டாற்போல, அவ்வொருவராலே எல்லாம் வியாபிக்கப்பட்டன" என்னும் மட்கட நியாயத்தினுற் சிவபெருமானே உபாதானமாகிப் பிரபஞ்சத்தை வியாபிக்கின்றனர் என்று பெறப்படுகின்றது.

> சிதாத்மைவ ஹி தேவோऽந்தஸ்திதமிச்சாவஶாத் பஹி: |
> யோகீவ நிருபாதாநமர்த்தஜாதம் ப்ரகாஶயேத் ||

"சிதான்மாவாகிய தேவர் தமக்குள்ளிருந்து இச்சாவசத்தினுல் யோகிபோல உபாதானமின்றிப் பொருட்டொகுதியைப் புறத்தே பிரகாசிப்பிக்கின்றனர்" என்றற்றொடக்கத்த ஆகமப்பிரமாணத்தினுலும், சிவபெருமானுக்கு உபயகாரணத்துவம் கூறல் குற்றமாகாது.

சிவாகமத்தின் ஏகதேசத்திலே சிவனுராகிய பரப்பிரமம் கேவல நிமித்தகாரணராகக் கூறப்பட்டிருக்கின்றது. அதனைப் பரிகரிக்கும்பொருட்டே இந்த அதிகரணம் போந்ததென்று பூருவாசாரியர் (இங்ஙனம் மேலே கூறியாங்கு) வியாக்கியானஞ் செய்தார்.

யாபோ வேதத்திற்கும் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம். வேதமும் சிவாகமம் எனப்படும் வியவகாரம் யுக்தம்: சிவனே அவற்றிற்குக் கர்த்தாவாதலின். அதுபற்றி மூவருணத்தார்க்குரியதும் எல்லா வருணத்தார்க்குமுரியதுமெனச் சிவாகமம் இருதிறப்படும்: வேதம் மூவருணத்தார்க்குரியது; மற்றது (சிவாகமம்) எல்லா வருணத்தார்க்குமுரியது; அவற்றுக்குச் சிவபெருமானே கர்த்தாவாதலின்.

ஈசாந꞉ ஸர்வவித்யாநாம் (தைத். ஆரணி. உக. ௩௬)

"சர்வவித்தைகளுக்கும் ஈசானர்" என்றும்,

அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதம் |

(பிரு. ௬. ௫. ௧௧: ௪. ௪. ௧௦)

"(வேதம்) பரம்பொருளினாற் சுவாசிக்கப்பட்டது" என்றும் போந்த சுருதிகளானும்,

அஷ்டாதசாநாம் வித்யாநாம் ஏதாஸாம் பிந்நவர்த்மநாம் |
ஆதிகர்தா கவி꞉ ஸாக்ஷாத் சூலபாணிரிதி ச்ருதி꞉ |

(வாயு. பூர். க: உ௪)

"பல மார்க்கமுடைய இந்தப் பதினெண் வித்தைகளுக்கும் நேரே முதற்கர்த்தாவாயுள்ளார் சூலபாணியாகிய சிவபெருமான் என்று சுருதி கூறுகின்றது" என்னும் ஸ்மிருதியினாலும், அவர் வேதத்துக்குக் கர்த்தாவாதல் பெறப்பட்டது. பிறவிடத்தும் சிவபெருமான் இங்ஙனமே கூறப்படுகின்றனர். ஆகலின், கர்த்தா ஒருவராதல்பற்றி வேதமும் ஆகமமும் ஒரே பொருளைப் பிரதிபாதித்தலின் இரண்டும் பிரமாணமே.

இதனை வேறு பிரகாரமாக ஆராயின் * பிரமம், பிரணவம், பஞ்சாக்ஷரம்,

---

*(க) பிரமம்:—என்னும் பெயர் உபநிடதவுபக்கிரமணிகை ௧0௧-ஆம் இலக்கத்திற் கண்டபடி, ஐதரேய முதலிய உபநிடதங்களிற் காணப்படுமாறு போல,

உபக்கிரமணிகை ௬௬-ஆம், ௬௭-ஆம் இலக்கங்களிற் கண்டவாறு பராக்கியை அஜிதம் காமிகம் காரணம் வாதுள முதலிய ஆகமங்களிற் காணப்படலானும்,

(௨) (பஞ்சப்)பிரமம்:—சத்தியோஜாத வாமதேவ அகோர தற்புருஷ ஈசானமென்னும் பஞ்சப்பிரம மந்திரங்கள் தைத்திரீய ஆரணியகத்து ௧0. ௭௭. ௩௫, ௩௬, ௩௭, ௩௮, ௩௯-ஆம் மந்திரங்களிற் காணப்படுமாறு போல,

ஈசாநம் தத்புருஷம் சைவ அகோரம் வாமதேவகம்|
ஸத்யோஜாதஞ்ச பஞ்சைதே ஸ்ராப்ரஹ்ம ப்ரகீர்த்திதம்|

என்று வாதுளாகமத்துப் பிரமபேதத்தினும்,

ஸத்யவாமாகோரஞ்ச தத்புருஷேசாநகௌ த்விஜா꞉|

என்று காரண முதலிய மற்றை ஆகமங்களினுங் காணப்படலானும்,

(௩) பிரணவம் ஓம்:—என்பன சாந். க. ௫. க, ௫. னும், சுவே. க. ௧௩, ௧௪. னும், பிருகதாரணியத்து முதற்கண்ணும் மற்றைய உபநிடதங்களினும் காணப்படுமாறு போல,

பிராசாதாதி மந்திரம், பசுபதிபாசாதி வஸ்துவியவகாரம், பஸ்மோத்தூளன திரிபுண்டரதாரணம், லிங்கார்ச்சனம், ருத்திராக்ஷதாரண முதலிய மற்றைப் பரதருமங்களும் மற்றெல்லாவியவகாரங்களும் இரண்டினும் சமமாகக்

---

ஓமித்யேகாக்ஷரே ப்ரஹ்மவ்யக்தஸ்ஸர்வகதஶ்ஶிவஃ।

என்று சிவதருமோத்தராகமத்தினும்,

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வஸந்தே ஸர்வயோகிநஃ।

ப்ரணவம் ஸர்வவர்ணானாம் ஜீவபீஜாத்மகாஹ்ருதம்।

என்று வாதுளாதியாகமங்களினும் காணப்படலானும்,

(௪) பஞ்சாக்ஷரம்:—

நமஶ்ஶிவாய ச।

என்று யசுர்வேதத்து. ௪. ௫. அ. க. னும்,

ஶிவாய நமஃ।

என்று தைத்திரீய ஆரணியகத்து ௧௦. ௧௬. ௨௪. னும் ஸ்தூல சூக்கும பஞ்சாக்கரங்கள் காணப்படுமாறு போல,

பஞ்சாக்ஷரஸ்ய ஷட்பேதாஸ் ஸந்த்யாஸாதிரூகம்।

ஸ்தூலம் ஸூக்ஷ்மம் ததா ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மம் ஶுத்தம் ததா பரம்।

என்று பஞ்சாக்ஷர பேதங்கள் சித்தாந்தபோத முதலிய ஆகமங்களிற் காணப்படலானும்,

(௫) பிராசாதம்:—

ஹ்ரஸ்வதீர்கப்லுத இதி।

இருஸ்வ தீர்க்க புலுதப் (பிராசாதம்) அதர்வசிகை முதலியவற்றிற் காணப்படுமாறு போல,

பிராசாத பேதங்கள் முழுமையும் வாதுள சுத்தாக்கியை முதலிய ஆகமங்களிற் காணப்படலானும்,

(௬) பதி:—முண். க. உ. ௫. னும், சுவே. ௬. எ, ௯. னும், பிறவிடங்களினும், பதியின் பரியாய மொழிகளாகிய ஈசுவரர்: பிரு. ௬. ௪. உஉ. னும், சுவே. ௬. எ. னும் ஈசானர்: கட. ௪. ௫, ௧உ. னும், சிவ: மாண்டூ. எ, ௧உ. னும், சந்து: சாந். ௬. உ. க. னும், ஞன்: சுவே. க. ௯. னும்,

பசு என்பது அதர்வசிரசினும், இதன் பரியாயமாகிய அஞ்ஞன்: சுவே. க. ௯. னும், ஆன்மா: சுவே. க. ௬. னும், சீவான்மா: சாந். ௬. ௩. உ. னும், சத்தியம்: பிரு. ௪. ௯. உ௦. னும், சம்பிராசாதன்: சாந். அ. ௩. ௪. னும்,

பசுபதி: தைத். ஆரணி. ௧௦. உஉ. ௪௦. னும், பாசம்: சுவே. ௬. ௧௩; க. அ. னுமாகப் பதி பசு பாச வியவகாரம் உபநிடதங்களிற் காணப்படுமாறு போல,

நாஸ்தி தஸ்யௌ வேத்தி ந வித்யதே தஸ்ய வேத்தி யஃ।

ப்ரவஶ்ஶிவயோர்வேத்தா யஸ் ஸூக்ஷ்மா ததயோஃ ப்ரயுக்தி।

என்று ரௌரவாகமத்தினும்,

திரயஃபதார்த்தஸ்ஸூத்ரார்த்தம் ஸங்க்ஷேபாத் ஸமுத்திதாஃ।

ஸம்பந்தேநைகந ஸம்ருஹ்யப்ராஹ விஸ்தராஃ ப்ரநஃ॥

என்று சிவாகமப்பிரமாணங்களினும் காணப்படலானும்,

காணப்படலான், வேதம் சிவாகமம் என்னும் இரண்டும் பிரமாணங்களே; † கர்த்தா ஒருவரேயாதலானும் இரண்டும் ஒரே பொருளைத் தருதலானும், அவ்விரண்டும் விரோதமுறாவாகலின்.

இவ்வதிகரணம் ஈசுரரைக் கேவலம் நிமித்த காரணமுதலியவாகக் கூறும் இரண்ணியகருப்பரது யோகஸ்மிருதி விஷயமென்று கூறுகின்றேம். ஆகலின்,

---

(எ) (உத்தூளன திரிபுண்ட்ர) பஸ்மம்:—ஈசா. கஎ. னும், இதன் பரியாயமாகிய பூதி. தைத். க. கக. க. னும், சிரோவிரதம். முண். ௩. உ. ௧௦. னும், அத்தியாசிரமம். சுவே. சு. உக. னும், கைவல்லியத்தினும், விரதம் சாம்பவம் காலாக்கினிருத்திரத்தினும், பாசுபதவிரதம் அதர்வசிரசினும், விபூதி பசிதம் பஸ்மம் க்ஷாரம் இரக்ஷை என்னும் விபூதியின் நாமங்களும், கற்பம் அனுகற்பம் உபகற்பம் அகற்பம் என்னும் விபூதிபேதங்களும் பிருகச்சாபாலத்தினும், இவற்றைத் தரிக்குந் தானங்களும் மந்திரங்களும் காலாக்கினிருத்திர பஸ்மசாபால பிருகச்சாபால உபநிடதங்களினும் காணப்படுமாறு போல, சுவாயம்புவம், சிந்தியவிசுவம், மதங்கம், காரணம், துவிசதி காலோத்தரம், சுப்பிரபேதம், சர்வஞ்ஞானோத்தர முதலிய ஆகமங்களினும் காணப்படுகின்றமையானும்,

(அ) உருத்திராக்ஷம்:—உருத்திராக்ஷசாபாலோபநிடதத்திற் காணப்படுமாறு போல, வாதுளம் காலோத்தரமுதலிய ஆகமங்களிற் காணப்படலானும்,

(கூ) லிங்கார்ச்சனை:—

தவ ஶ்ரியெ மருதோ மர்ஜயந்த ருத்ர யத்தெ ஜநிம சாரு சித்ரம்॥

"தேவர்கள் (பொருளும் அருளுமாம்) செல்வத்தை அடையுமாறு, (சிவபிரானாது) விசித்திரரூபமாகிய மகாலிங்கமூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்" என்று இரு. வே. ௩. ௩. ௩. னும், (இம்மந்திரத்திற் கண்ட) ஜநிம என்னும் மொழி லிங்கத்தை உணர்த்துமென விளக்கி

ரௌக்மம் லிங்கம் மஹாவிஷ்ணு: ஸ்படிகாஶ்மஜம் ஶிலாமயம் |
சாருசித்ரம் ஸமப்யர்ச்ய ப்ராப்தவாந் பரமம் பதம் |

"மகாவிஷ்ணுவானவர் தாய்தாயும் சிலாமயமாயும் விசித்திரமாயுமுள்ள மகாலிங்கத்தைப் பக்தியினால் அர்ச்சித்துப் பரமபதத்தை அடைந்தார்" என்று போந்த உபப்பிருங்கணத்தினும்,

ஶிவலிங்கம் த்ரிஸந்த்யம் அஹரஹ: ஸமர்சயேத்॥

"சிவலிங்கத்தைத் திரிசந்தியினும் தினந்தோறும் அர்ச்சிக்க" என்று பஸ்மஜாபாலத்தினும்,

ஶிவலிங்காய நம: |

என்று தைத். ஆரணி. ௧௦. ௧௬. ௩௪. னும் காணப்படுமாறு போல,

அம்சுமான், காலோத்தரம், ரௌரவம், காரணம், காமிக முதலிய ஆகமங்களில் லிங்கலக்ஷணம் லிங்காராதன முதலியன விரித்துக் கூறப்படலானுமே வேதமும் சிவாகமமும் பொருளினாற் சாமியமுறுவன என்று நீலகண்டசிவாசாரியர் வரைந்தருளினர்.

† பிருகஸ்பதி பகவான் (பிருகஸ்பதி) ஸ்மிருதிக்கும் லோகாயதத்துக்கும் தாம் ஒருவரே கர்த்தாவாமாயினும், ஆஸ்திகங் கூறும் அவர் ஸ்மிருதியும் நாஸ்திகம் கூறும் அவர்லோகாயதமும் வேறாயினாற் போல, சிவபெருமான் வேதங்களுக்கும் சிவாகமங்களுக்கும் கர்த்தாவாயிருப்பினும், இவ்விரு சாஸ்திரங்களும் கருத்தினால் வேறுபடாவென்பாராய்ப் பாஷ்யகாரர் "ஒரே பொருளைப் பிரதிபாதிப்பன" வாமென்றருளினர்.

இவ்வதிகரணம் ‡ இரண்ணியகருப்ப ஆகமத்தை நிரசிக்கும் பொருட்டுப் போந்ததாமெனல் யுக்தம். (௩௮)

## (௯) பாஞ்சராத்திராதிகரணம்.

---

(பாஞ்சராத்திரமதநிராகரணம்)

உத்பத்த்யஸம்பவாத் (உ. உ. ௩௯)

### (உ௪௩) உற்பத்தி அசம்பவமாதலின்.

பாஞ்சராத்திரமதம் வாசுதேவராற் கூறப்பட்டது. அங்கே ஆன்மாவுக்கு உற்பத்திமுதலியன கூறப்பட்டிருக்கின்றன. அது கூடுமா? கூடாதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது கூடும். எதனால்? பகவானாகிய வாசுதேவராற் கூறப்பட்டது பிரமாணமாதலின். அவ்விஷயம் வருமாறு:—பகவானாய்ப் பரமான்மாவாயுள்ள வாசுதேவர் ஒருவரே. இவரிலிருந்து சங்கர்ஷணர் என்னும்பெயருடைய ஆன்மா பிறக்கின்றது; ஆன்மாவிலிருந்து பிரத்தியும்நர் என்னும் மனசு உதிக்கின்றது; மனசிலிருந்து அநிருத்தர் என்னும் அகங்காரம் உண்டாகின்றது. இந்த நான்கு வியூகமே சர்வான்மாக்களாம். ஆகலின், இரண்ணியகருப்பாதியோர்க்கு வாசுதேவர் பரமாதலின் அவர் கூறியதே பிரமாணம். அதிற் கூறப்பட்டது பொருத்தமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஆன்மா உற்பத்தியாயிற்று என்று கூறும் இந்தச்சாத்திரம் அப்பிரமாண்ணியம். எதனால்? செய்யப்பட்டது நாசமுறுதலும், செய்யப்படாத மற்றொன்று தோன்றுதலும் பெறப்படலான், ஆன்மோற்பத்தி கூடாது. ஒருவன் புண்ணியபாவஞ் செய்து பிரளயகாலத்தில் ஒழிந்து போவானாயின், சிருட்டிகாலத்திலே மற்றோர் ஆன்மா தோற்

---

‡ இந்தப் பாசுபதாதிகரணத்திற் பூருவாசாரியர் கொள்கைப்பிரகாரம் நிராகரிக்கப்பட்டது அவைதிக பாசுபதமாம் என்றும், தமது கருத்துப்பிரகாரம் நிராகரிக்கப்பட்டது இரண்ணியகர்ப்பாகமம் என்றும் சைவபாடியகாரர் கூறுகின்றனர்.

☞ வாயுசங்கிதை பூருவபாகத்து உ௮-ஆம் அத்தியாயத்து ௧௧, ௧௨, ௧௩-ஆஞ் சுலோகங்களாய், சிவார்க்கமணிதீபிகையிலே காணப்படும் இந்த அதிகரணத்து உ. உ. ௩௮-ஆஞ் சூத்திரதீபிகையிலெடுத்தாளப்பட்டனவாய், உபநிடதவுபக்கிரமணிகை உ௧-ஆம் இலக்கத்தில் எடுத்துதகரிக்கப்பட்டனவாயுள்ள "சைவாகமோபி" என்றற்றொடக்கத்த சுலோகங்களுக்கு உண்மைப்பொருள் செய்ய, உபக்கிரமணிகை உ௭-ஆம் இலக்கத்துச் சனற்குமாரசங்கிதா சுலோகங்கள் அத்தீபிகையுடையார் பார்வைக்கெட்டாமையாற் காமிகாதி ஆகமங்களை அவைதிகம் என்று வழுவுற உ௧-ஆம் இலக்கத்திற் கண்டவாறு பொருள் செய்யத் துணிந்தமை தவறென்றுணருமாறு உபநிடதவுபக்கிரமணிகை உ௯-ஆம் இலக்கத்தின் கீழ் அவ்வாயுசங்கிதா சுலோகங்கட்கு உண்மைப்பொருள் உரைக்கப்பட்டமை கண்டு தெளிந்து, காமிகாதி ஆகமங்கள் வைதிகாகமங்களாம் என்றும், அவை அவைதிகாகமங்கள் அன்றென்றும் உண்மை கடைப்பிடிக்க.

றும். ஆகலின், ஆன்மோற்பத்தி கூறும் சாஸ்திரம் அப்பிராமாண்ணியம். (௩௯)

சூத்திரகாரர் மற்றோர் பொருத்தமின்மை கூறுகின்றனர்.

ந ச கர்த்து꞉ கரணம் (௨. ௨. ௪௦)

**(௨௧௪) கர்த்தாவிலிருந்து கரணமும் (பிறக்க) இல்லை.**

சங்கர்ஷணர் எனப் பெயரிய ஆன்மாவினின்று பிரத்தியும்நர் எனப் பெயரிய மனசு பிறந்தது. கர்த்தாவாகிய ஆன்மாவினின்று (அந்தக்) கரணோற்பத்தி தோற்றாது; பிரகிருதிகாரியமாய்த் தோற்றுவதைச் சேதனத்திலிருந்து தோற்றுவதெனல் பொருந்தாமையின். (௪௦)

(பாஞ்சராத்திரி செய்யும் ஆசங்கை)

விஜ்ஞாநாதி³பா⁴வே வா தத³ப்ரதிஷேத⁴꞉ (௨. ௨. ௪௧)

**(௨௧௫) அல்லது ஆன்மா முதலியவற்றை அதிட்டித்தல்பற்றிப் பிரதிஷேதமில்லை.**

விஞ்ஞானம் என்றது ஆன்மா. ஈண்டு ஆன்மா முதலியவற்றுக்கு உற்பத்தி கூறப்படவில்லை; பின்னையோ சங்கர்ஷணர் முதலாயினோர்க்கு ஆன்மாவாதிபாவம் கூறப்பட்டது. ஆன்மாவாதி பாவமென்பது ஆன்மா முதலியவைகளுக்குள்ளிருந்து ஆளுவதாம். ஆகலின், அந்தப் பாஞ்சராத்திரப் பிரமாணம் மறுக்கப்படமாட்டாதாமெனின், (௪௧)

(உத்தரம்) சூத்திரகாரர் இறுப்பாராயினர்.

விப்ரதிஷேதா⁴ச்ச (௨. ௨. ௪௨)

**(௨௧௬) (இது) தவிர்க்கப்படலானும்.**

இங்ஙனம் ஆன்மோற்பத்திக்குச் சமாதானம் கூறப்படினும், பாஞ்சராத்திரமதக் கோட்பாடு அங்கிகரிக்கப்படுவதன்று; சுருதிக்கு விரோதமாக (உலககாரணரல்லாத) ஈசுரரை (வாசுதேவரை, உலக) காரணராகவும் முத்திக்குக் காரணராகவும் கூறலும், (சரீரத்திலே வேதவிருத்தமாகிய) தப்தமுத்திராதிகளைத் தரித்தல் பரதருமம் எனக் கூறலும் பிரதிஷேதிக்கப்படலான் (தவிர்க்கப்படலான்). ஆகலின், பாஞ்சராத்திரமதம் அசமஞ்சசம்.

பாஞ்சராத்ரே ச பௌ³த்³தே⁴ ச ததா² காபாலபாஶுபதே ச।
ஶ்ரத்³த⁴யா தீ³க்ஷிதா யே(அ)பி ஸர்வே ப்³ராஹ்மணாத⁴மா꞉॥

(*சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டம். ௩௨. ௩௯)

---

* ௨. ௨. ௩௫-ஆஞ் சூத்திரபாடியக் குறிப்பிற் கண்டவாறு கௌதமமுனிவரிடத்துப் பன்னிருவருடம் அன்னமயின்று

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

**"பாஞ்சராத்திரத்தினும்** பௌத்தத்தினும் காளாமுகத்தினும் சிரத்தையோடு **தீக்ஷிக்கப்பட்ட** நீங்கள் பிராமண அதமர்களாவீர்கள்" என்றற்றொடக் **கத்தவற்றினும் விசேஷமாக நிஷேதிக்கப்படுதல்** காணப்படுகின்றது. **ஆக லின், பாஞ்சராத்திரமதம்** மறுக்கப்படுவதொன்றாயிற்று. (சஉ)

---

என உத்தரவேதங் கூறியாங்கு, உடனே உண்ட நன்றி கொன்றமுனிவரெல்லாம் வேதபாகியராய்ப் போமாறு அக்கௌதம முனிவராற் சபிக்கப்பட்டவிடத்திற் (சூத சங்கிதையிலே) காணப்படும் இச்சுலோகம் சைவபாஷ்யகாரரால் ஈண்டு சூத்திரப் பொருட்கியைய எடுத்து உதகரிக்கப்பட்டது.

## இரண்டாம் அத்தியாயத்து
## மூன்றாம் பாதம்.

———o———

### (க) வியததிகரணம்.

(வேத) விருத்தமாகிய சமஸ்த சமய நியாயங்களும் கண்டிக்கப்பட்டன.

எஞ்சிய அத்தியாயத்தினாலே அவாந்தர விரோதங்களுக்குப் பரிகாரம் கூறப்படுகின்றது.

ந வியதஶ்ருதேঃ (உ. ௩. க)

**(உகஎ) ஆகாயம் (உற்பத்தி) யாகவில்லை, சுருதிப் (பிரமாணம்) இன்மையான்.**

அவயவமிலாமைபற்றிக் காரியமாகாதென்னும் மயக்கத்தினால் ஆகாயத்துக்கு உற்பத்தி உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆகாயம் உற்பத்தியாகவில்லை என்பது பெறப்பட்டது; எதனால்? சுருதியிற் கூறப்படாமையான். எங்ஙனமெனின்? சாந்தோக்கியத்திலே,

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் (சாந். ௬. உ. க)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது" என்று தொடங்கி,

தத்தேஜோऽஸ்ருஜத (சாந். ௬. உ. ௩)

"அது தேயுவை உண்டாக்கிற்று" எனத் தேயு முதலாகிய பூதங்களின் சிருஷ்டி கூறப்படுகின்றது. அங்கே ஆகாயோற்பத்தி கேட்கப்படவில்லை.

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூதঃ (தைத். உ. க)

"ஆன்மாவிலிருந்து ஆகாயம் பிறந்தது" என்று தைத்திரீயத்திற் கூறப்பட்டது கவுணமாதற் கருகமாகின்றது; ஆகாயத்தோற்றத்துக்குச் சமவாய காரணமுதலியநிரூபித்தல் கூடாமையான். (க)

ஆகலின் ஆன்மாவைப்போல ஆகாயமும் பிறக்கவில்லை எனின்;

(உத்தரம்) கூறுதும்.

அஸ்தி து (உ. ௩. உ)

**(உகஅ) ஆயின் உண்டு.**

ஆகாயத்துக்கு உற்பத்தி உண்டுதான்;

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ் ஸம்பூதஃ (தைத். உ. க)
"இந்த ஆன்மாவிலிருந்து ஆகாயம் பிறந்தது" என்று சுருதி கூறலின்.

ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித் (கட. உ. கஅ)

"அறிஞன் பிறப்பதில்லை, இறப்பதில்லை" என்று மறுக்கப்படலான், ஆன்மாவுக்கோ உற்பத்தி இல்லை. ஆகாய உற்பத்தியை மறுக்குஞ் சுருதி இல்லை. ஆகலின், ஆகாயம் உற்பவிக்கின்றதே. (உ)

(பூருவபக்ஷம்) இந்த உற்பத்தி கவுணமாமோ? எனின்,

சூத்திரகாரர் கூறுவாராயினர்.

கௌண்யஸம்பவாச்சப்தாச்ச (உ. ௩. ௩)

**(உகக) (அது) கவுணம், அசம்பவத்தினாலும் சுருதியினாலும்.**

தத்தேஜோऽஸ்ருஜத (சாந். சு. உ. ௩)

"அது தேயுவைப் படைத்தது" எனத் தேயுவுக்கு முன்னர்ச் சிருஷ்டி வசனமுண்மையான்,

ஆகாஶஸ்ஸம்பூதஃ (தைத். உ. க)

"ஆகாயம் பிறந்தது (சம்பூதஃ) என்னுஞ் சுருதி கவுணம்; அவயவமில்லாத ஆகாயம் பிறத்தல் கூடாமையானும்,

வாயுஶ்சாந்தரிக்ஷம் சைததம்ருதம் (பிரு. ச. ௩. ௩)

"வாயுவும் ஆகாயமும் அழியாதன" என்னுஞ் சுருதி ஆகாயத்துக்கு நித்தியத்துவம் உரைத்தலானுமாம். (௩)

ஸ்யாச்சைகஸ்ய ப்ரஹ்மஶப்தவத் (உ. ௩. ௪)

**(உஉ0) பிரமசப்தம் போல ஓர் மொழி இருவழியினும் வழங்கல் கூடுமாகலின்.**

(சுருதியின்) ஒரே பிரகரணத்து இரு வேறு வாக்கியங்களில் ஒரே மொழி ஆவிருத்தியாய் நேருங்கால்,

தஸ்மாதேதத் ப்ரஹ்ம நாமரூபமந்நஞ்ச ஜாயதே (முண். க. க. கூ)

"அங்கிருந்து இந்தப் பிரமம் (பிரகிருதி) நாமமும், ரூபமும், அன்னமுமாகப் பிறக்கின்றது" என்னுஞ் சுருதியிலே பிரமம் என்பது பிரகிருதியைப் பற்றிப் பேசும் போது கவுணமாயும்,

தபஸா சீயதே ப்ரஹ்ம (முண். க. க. அ)

"தியானத்தினாற் பிரமம் ஓங்குகின்றது" என்னும் வாக்கியத்தில் ஆவிருத்தி

பற்றி முக்கியமாயும் வழங்கியவாறு போல, ஈண்டும் பிறந்தது (ஸம்பூத꞉) என்னும் ஓர் மொழி ஆகாய விஷயத்திற் கவுணமாயும், பிறவிடத்தில் முக்கியமாயும் வழங்கல் கூடும். ஆகலின், ஆகாயம் பிறந்ததெனல் பொருந்தாது என, (௪)

பின்னர்ச் சூத்திரகாரர் பரிகரிக்கின்றார்.

ப்ரதிஜ்ஞாஹாநிரவ்யதிரேகாத் (௨. ௩. ௫)

**(௨௨௧) வேறுபடாமையான் பிரதிஞ்ஞைக்கு ஹானியுறாமை.**

ஆகாய முதலியன பிரமத்தினின்று பிறந்து, அப்பிரமத்திலிருந்து வேறுபடாதிருக்கும்போது மாத்திரந்தான்,

யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவதி (சாந். ௬. ௧. ௧)

(கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி)

(முண். ௧. ௧. ௩)

"கேட்கப்படாதது கேட்கப்படுகின்றது" "(ஒன்றை) அறிந்தால் யாவும் அறியப்பட்டதாகும்" என்னும் பிரதிஞ்ஞை ஹானியுறாது. ஆகலின், பிறந்தது என்னும் சப்தம் கவுணமன்று; பிரதிஞ்ஞைக்கு ஹாநி முதலியவற்றை விளைவிக்குமாகலின். எங்ஙனம் பிரதிஞ்ஞைக்கு ஹாநி வராதிருக்குமோ அங்ஙனம் இணக்கற்பாற்று. (௫)

ஶப்தேப்ய꞉ (௨. ௩. ௬)

**(௨௨௨) சுருதிகளுண்மையான்.**

தத்தேஜோऽஸ்ருஜத (சாந். ௬. ௨. ௩)

"அது தேயுவைச் சிருட்டித்தது" என்னுமிடத்து, ஆகாயம் கூறப்படாமை பற்றித் தேயுவுக்கு எய்தும் முதன்மை

ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத꞉ (தைத். ௨. ௧. ௧)

"ஆகாயம் (பரம) ஆன்மாவினின்று பிறந்தது" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் கூறப்பட்ட ஆகாயோற்பத்தியைத் தடுக்காது. (௬)

யாவத்விகாரந்து விபாகோ லோகவத் (௨. ௩. ௭)

**(௨௨௩) எப்படியும் உலகப்பேச்சிற் போல, விபாகம் சிருஷ்டி முழுமைக்குமாம்.**

ஐததாத்ம்யமிதம் ஸர்வம் (சாந். ௬. ௯. ௪)

"ஈதெல்லாம் (பரம) ஆன்மாவாயது" என்பதினால் ஆகாய முதலிய சிருட்டிக்கப்பட்டனவாகப் பெறப்படும். தேயுமுதலாகக் கூறப்பட்ட விபாகவசனம்

சிருஷ்டிமுழுமைக்குமாம் எனப் புலப்படுகின்றது. உலகத்திலே ஒருவன் தனக்குப் பத்துப் புதல்வர் உண்டென்று கூறி, பின்னர் அப்புதல்வர் சிலருடைய பிறப்பைப்பற்றிப் பேசுதல் போல ஈண்டுமாம். ஆகலின், ஆகாயத்துக்கு உற்பத்தி கோடல் யுக்தமே. (எ)

## (உ) மாதரிச்சுவாதிகரணம்.

---

ஏதேந மாதரிஶ்வா வ்யாக்யாத꞉ (உ. ந. அ)

**(உஉச) இதனால் வாயு வியாக்கியானஞ் செய்யப்பட்டது.**

(உ. ந. க0-ஆஞ் சூத்திரத்தில்) சூத்திரகாரர் தேயுவைப்பற்றிக் கூறப் போகின்றனர். அது பற்றி வாயு வேறாக எடுத்தாளற்பாற்று.

ஆகாயத்துக்குப் போல வாயுவுக்கும் உற்பத்தி கூறப்பட்டதா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வாயுவுக்கு உற்பத்தி இல்லை; சாந்தோக்கியத்திலே தேயுவை முதன்மை கூறல் வாயிலாக வாயுவுக்குச் சிருட்டி கூறப்படாமையானும், பிருகதாரணியத்தில்

ஸைஷா(அ)நஸ்தமிதா தேவதா யத்வாயு꞉ (பிரு. ந. ரு. உஉ)

"வாயு ஓர்போதும் ஒழியாதது" என அதன் உற்பத்தி மறுக்கப்படலானுமாம். எப்பிரகாரத்தினாலும் வாயுவுக்கு உற்பத்தி இல்லையாலோ எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சாந்தோக்கியத்திலே வாயு உற்பத்தி கேட்கப்படாதொழியினும், குணோபசங்காரநியாயத்தினால்

ஆகாஶாத்வாயு꞉ (தைத். உ. க. க)

"ஆகாயத்தினின்று வாயு (பிறந்தது)" என்று தைத்திரீயோபநிடதத்திற் கூறப்பட்ட வாயு உற்பத்தி சாந்தோக்கியத்தினுங் கூறப்பட்டதாகக் கொள்ளப்படும்.

ஸைஷா(அ)நஸ்தமிதா தேவதா யத்வாயு꞉ (பிரு. ந. ரு. உஉ)

"இந்த வாயுவானது ஓர்காலும் ஒழியாதது" என்னும் சுருதியானது உபாசனாப்பிரகரணம்பற்றி அர்த்தவாதமாம். ஆகலின், வாயுவும் பிறக்கின்றதே. (அ)

## (ந) அசம்பவாதிகரணம்.

---

அஸம்பவஸ்து ஸதோ(அ)நுபபத்தே꞉ (உ. ந. கூ)

**(உஉரு) கூடாமையான் சத்துக்கு (உற்பத்தி) பொருந்தாது.**

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் (சாந். ௬. ௨. ௧).

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது" என்னுஞ் சுருதியினால் சத்தாகிய பிரமத்தினின்று ஆகாய முதலியன பிறந்தவென்று நிரூபிக்கப்பட்டது.

ஆகலின், ஈண்டுச் சர்வகாரணமாய சத்தாகிய பிரமத்துக்கும் ஓர் காரணத்தினின்று உற்பத்தி உளதா? இலதா? என்பது **சந்தேகம்.**

**(பூருவபக்ஷம்)** காரணமாகிய ஆகாயத்துக்கு உற்பத்தி உளதாயினாற்போல, பிரமத்துக்கு உற்பத்தி உண்டு; "முதற்கண் இருந்தது" என்று கூறப்படுதலின். சிருஷ்டிப் பொருளுக்கெல்லாம் முதற்கண்ணே உற்பத்தி உளதாயிற்று. அதற்குக் காரணம் என்னை என்று வினவின், அசத்தேயாம்;

அஸத்வா இதமக்ர ஆஸீத் ததோ வை ஸதஜாயத।

(தைத். ௨. ௭. ௧)

"அசத்தாம் இது முதற்கண் இருந்தது, இதினின்று சத்தே பிறந்தது;" எனச் சுருதி கூறலான். ஆகலின், சத்ரூபமாகிய பிரமத்துக்கும் உற்பத்தி உண்டு எனின்,

**(சித்தாந்தம்)** பிரமம் பிறப்பதில்லை. எதனால்?

ஸதேவ ஸௌம்யேத மக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்।

(சாந். ௬. ௨. ௧)

"சௌமிய! சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது, ஏகமே அத்துவிதீயம்" எனவும்,

யதா தமஸ்தந்ந திவா ந ராத்ரிர்ந ஸந்நசாஸச்சிவ ஏவ கேவல:।

(சுவே. ௪. ௧௮)

"எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றி சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார்" எனவும், சிவனாகிய பிரமம் ஒன்றே இருந்ததென வற்புறுத்தல் வாயிலாக நிர்த்தேசிக்கப்படலான், அதற்கு உற்பத்தியில்லை. மற்றெல்லாவற்றுக்கும் உற்பத்தி உண்டு, ஒவ்வாமையான்.

(ஆக்ஷேபம்) எங்ஙனம் பிரமம் அனைத்துக்கும் காரணமாகக் கூறப்படுகின்றதோ, அங்ஙனம் சுருதியிற் பிரமத்துக்கும் மற்றொன்று காரணமாகக் கூறப்படுகின்றது;

அஸத்வா இதமக்ர ஆஸீத் **(தைத். ௨. ௭. ௧)**

"அசத்தாம் இது முதற்கண் இருந்தது"

தஸ்மாத்வை ஸதஜாயத (தைத். உ. எ. க)

"அதினின்று சத்துப் பிறந்தது" என்று கூறப்படுதலின், அசத்தே சத்துக்குக் காரணமாயிற்றெனின்,

(உத்தரம்) இங்ஙனம் கூறல் அடாது;

கதமஸதஸ்ஸஜ்ஜாயேத (சாந். சு. உ. உ.)

"அசத்தினின்று சத்து எங்ஙனம் பிறக்கும்?" என்று சுருதி நிஷேதித்தலான்; சத்தினின்றே சத்துப் பிறந்ததெனல் ஆன்மாசிரயம் என்னும் குற்றம் பற்றுதலான். ஆகலின், சத்தாகிய பிரமத்துக்குப் பிறப்பில்லை; "ஒன்று அறியப்படுங்கால் எல்லாம் அறியப்படும்" என்னும் பிரதிஞ்ஞை பொருந்தாமையின், மற்றெல்லாவற்றிற்கும் உற்பத்தி உண்டு. (௯)

## (௪) தேஜோதிகரணம்.

தேஜோऽதஸ்ததாஹ்யாஹ (உ. ௩. ௧௦.)

### (உஉ௯) அதினின்று தேயு பிறக்கின்றது; அங்ஙனமே அது சொல்கின்றது.

ஈண்டு வாயுமுதலிய காரியம் நேரே பிரமத்தினின்று பிறக்கின்றதா? இன்றேல் அததற்கு நேரே முற்பட்டுள்ள காரணங்களினின்று பிறக்கின்றதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவற்றில் ஒவ்வொன்றும் அததற்கு முற்பட்டதொன்றினின்று பிறக்கின்றது.

ஆகாஶாத்வாயு: (தைத். உ. க. க)

"ஆகாயத்திருந்து வாயு பிறக்கின்றது" என்னும் சுருதியினால் வாயு ஆகாயத்திருந்தே பிறக்கின்றது; நேரே பிரமத்திலிருந்து பிறக்கவில்லை. அவ்வாறே தேயுவும் வாயுவினின்றே தோன்றுகின்றது. ஆதலினாலே சுருதியும்,

வாயோரக்நி: (தைத். உ. க. க)

"வாயுவினின்று தேயு பிறந்தது" என்று கூறுகின்றது. (௧௦)

ஆப: (உ. ௩. ௧௧)

### (உஉஎ) அப்புக்கள்.

அக்நேராப: (தைத். உ. க. க)

"தேயுவினின்று அப்புக்கள்" என்னும் சுருதி அப்புக்களும் தேயுவினின்றே பிறக்கின்றன என்று கூறுகின்றது. (௧௧)

வ்ருயிவீ (௨. ௩. ௧௨)

(௨௨அ) பிருதிவி.

அத்ப்ய: ப்ருதிவீ (தைத். ௨. ௧. ௧)

“அப்புக்களினின்று பிருதிவி பிறக்கின்றது” என்னும் சுருதி அப்புவி னின்றே பூமி பிறக்கின்றதெனக் கூறுகின்றது. ஆகலின், பூதங்கள் நேரே பிரமத்தினின்று பிறக்கவில்லை. (௧௨)

அதிகாரரூபஶப்தாந்தரேப்ய: (௨. ௩. ௧௩)

(௨௨௯) அதிகாரத்தினாலும், நிறத்தினாலும், சுருதிக ளினாலும்.

தா அந்நமஸ்ருஜந்த (சாந். சூ. ௨. ௪)

“அவைகள் அன்னத்தைச் சிருட்டித்தன” என்னுஞ் சாந்தோக்கிய சுருதி யிற் கண்ட அன்னம் என்னும் மொழி பிருதிவியையே குறிக்கின்றது; சர்வ பூதசிருட்டி அதிகரணத்தில் உண்மையாலும்,

யத்க்ருஷ்ணம் தத³ந்நஸ்ய (சாந். சூ. ௪. ௧)

“கருநிறம் அன்னத்துக்குரியது” என்னுஞ் சுருதியினால் அன்னத்தின் நிற மும் விதிக்கப்படுகின்றமையாலும்,

அத்ப்ய: ப்ருதிவீ (தைத். ௨. ௧. ௧)

“அப்புவினின்று பிருதிவி” என்னும் சுருதியும் வெளிப்படையாயுள் ளது. ஆகலின், அப்புவினின்று ஆதியிற் பிறக்கின்றது பிருதிவியே யாம். (௧௩)

இதனாற் பிரமம் நேரே அனைத்துக்கும் காரணமாகாது பரம்பரா காரணம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும்.

தத³பி⁴த்⁴யாநாதே³வ து தல்லிங்கா³த்ஸ: (௨. ௩. ௧௪)

(௨௩௦) சங்கற்பம் என்னும் அவ்விலிங்கத்தினால் அவர் காரணரே.

நேரே பிரமத்தினின்றே பூதங்களெல்லாம் உற்பத்தியாயின.

தஸ்மாத்³வா ஏதஸ்மாதா³த்மந ஆகாஶ: ஸம்பூ⁴த: (தைத். ௨. ௧. ௧)

“அவ்வாறே இவ்வான்மாவிலிருந்து ஆகாயம் பிறந்தது” என்று தொடங்கி வாயுமுதற் பிருதிவி ஈறாக ஒவ்வொன்றும் அதற்கு முற்பட்டதொன்றி னின்று உதித்ததாகக் கூறப்படவில்லை. ஆயின் முன்முற் காரணமாகிய

ஆகாயாதி விசிட்ட பிரமத்திலிருந்து பிற்பின்னுகிய வாயு முதலிய உற்பத்தியாயின என்று கூறப்படுகின்றது. ஆதலினுற் பரமான்மாவாகிய சிவனுரே சர்வபூதங்களையும் உற்பத்தி செய்வர்;

தமெஷெக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயெய (சாந். சு. உ. ௩)

"யான் அநேகமாவேனுக எனச் சங்கற்பித்தது" என்றதிற் போல,

தத்தேஜ ஐக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயெய (சாந். சு. உ. ௩)

"யான் அநேகமாவேனுக எனத் தேயு சங்கற்பித்தது" எனவும்,

தா ஆப ஐக்ஷந்த பஹ்வ்ய ஸ்யாம ப்ரஜாயேமஹி|

(சாந். சு. உ. ச)

"அந்த அப்புக்கள் அநேகமாவேமாக எனச் சங்கற்பித்தன" எனவும் போந்தவற்றுற் சங்கற்பமாகிய அவரது லிங்கம் இருக்கின்றமையான்.

ஸதாஶிவஶ்ஶப்தமூர்த்தி: ஸ்பர்ஶமூர்த்திர்மஹேஶ்வர:|
ரூபமூர்த்திஸ்ததோ ருத்ரஸ்ஸாக்ஷாத்ரஸமூர்த்திர்ஜநார்த்தந:|
கந்தமூர்த்திஸ்துசதுர்வக்த்ர இத்யேதே பஞ்சமூர்த்தய:|

"சப்தமூர்த்தியாகிய சதாசிவர், ஸ்பரிசமூர்த்தியாகிய மகேசுவரர், ரூபமூர்த்தியாகிய உருத்திரர், ரசமூர்த்தியாகிய நாராயணர், கந்தமூர்த்தியாகிய நான்முகனுயினேர் பஞ்சமூர்த்திகள்" என்னும் வாக்கியத்தினுற் சப்தாதிகளுக்கு ஆன்மாவாயிருக்கும் சதாசிவாதிரூப பிரமத்தினின்றே வாயு முதலியவற்றுக்கு உற்பத்தியாம். பஞ்சபூதங்களில் வசிக்கும் ஆன்மாக்களாய் ஐந்து பிரமங்களாய்க் குறிக்கப்படும் இந்தச் சதாசிவர் முதலாயினேர் (மகாசதாசிவ) பரப்பிரமத்தின் சரீரமாகின்றனர். பஞ்சப்பிரம சரீரத்தையுடைய பரப்பிரமத்திருந்தே பிரபஞ்சசிருட்டி முதலாயின பிரவர்த்தித்தன. பஞ்சபூதங்களாகின்ற இந்தச் சதாசிவர் முதலாயினேர் பரப்பிரமத்தினின்று பிறக்கின்றனர்.

(ஆக்ஷேபம்)

ஆகாஶஸ்ஸம்பூத: (தைத். உ. க. க)

"ஆகாயம் பிறந்தது" என்றற்றொடக்கத்தவற்றுற் பூதோற்பத்திமாத்திரங் கூறப்பட்டதன்றிச் சதாசிவர் முதலாயினேர்க்குச் சிருட்டி நேரே கூறப்படவில்லையே எனின்,

(உத்தரம்) அதுவும் கூறப்படுகின்றதே. அது பிற சுருதிகளால் அறியற் பாற்று. எங்ஙனமெனின்,

ஸூர்யாயீஶாநம் ப்ரஸூயித்வம் ஸர்வவிதம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ர
இந்த்ராதீம்ஸ்ஸம்ப்ரஸூயந்தெ ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதை

ெதௌந-ி காரணு| காரணாநாം யாதா ஜ்ஞாதா காரணஷ ஸெவ்ய ஸெவெி்ய்யஸ்ஸ்ஸெவெி்ப்ர வ்ர ஸாமாகாஸெஜ்ய|

(அதர்வசிகை)

"மிகவும் தியானிக்கற்பாலராகிய ஈசானரைத் தியானிக்க; பிரம்ம விஷ்ணு உருத்திர இந்திரரும் மற்றை எல்லா இந்திரியங்களும் பூதங்களோடு உற்பத்தியாகின்றன; காரணங்களுக்கெல்லாம் தாதாவும், கருதிறேரும், பரம காரணருமாயினர் (உற்பவித்தல் இல்லை); சர்வைசுவரிய சம்பன்னரும் சர்வேசுவரரும், சம்புவுமாகியவரே ஆகாயமத்தியிற் றியானிக்கற்பாலர்" என்று அதர்வசிகையிற் கூறப்பட்டவாறு, பூதங்களோடு கூடப் பிரமாதியர்க்கும் இந்திரியங்களுக்கும் உற்பத்தி கேட்கப்படுகின்றது. காரணங்களுக்கெல்லாம் காரணராயுள்ளாராக ஆகாயமத்தியிற் சம்புவானவர் தியானிக்கற்பாலர் எனக் கூறப்படுகின்றது. ஆகலின், அவ்வக்காரணரூபம் கொள்ளும் பிரமத்தினின்று நேரே அவ்வக் காரியோற்பத்தியும் உண்டாகின்றதென நிர்ணயிக்கப்பட்டது. (௧௪)

## (௫) பாரம்பரியாதிகரணம்.

விபயஷியெணதா க்ரொேத உபவஷ்நெெ (௨. ௩. ௧௫)

**(௨௩௧) ஆனல் அங்கிருந்து (தோற்றும்) வேறு பிரகாரமாகிய (சிருட்டிக்) கிரமமும் பொருத்தமாகின்றது.**

ஈண்டு மேலை அதிகரணத்திலே நிரூபிக்கப்பட்ட சிருட்டிக்கிரமம் யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) யுக்தம் அன்றென்பது.

வதஸ்ராஜாயெதெ வ்ராணொ ஃநஸெவெி்ஜ்ரியாணி ச வம் வாயு ஜெ்ஜாதிராவஃ வ்ரயிவீ விஸ்வஸ்ய யாரிணி (முண். ௨. ௧. ௩)

"பிராணன், மனசு, இந்திரியங்கள், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, அனைத்தையுந் தாங்கும் பிருதிவியாம் எல்லாம் இதிலிருந்து உற்பத்தியாகின்றன" என்னும் முண்டகோபநிடதசுருதியினற் பிராணன் முதலாயின ஆகாய முதலியவற்றுக்கு முன்னர்த் தோன்றியவாகக் கூறப்படுகின்றது.

ஸவெிஃம் ஜ்ரஹு விஷ்ணு ருெஜ்ர ஊ்ராஹெ ஸம்ஸ்ரஸ்யெஹெ ஸவெிாணி செ ஜ்ரியாணி ஸஹஸூெதெஃ (அதர்வசிகை)

"பூதங்களோடு கூட பிரம, விஷ்ணு, உருத்திரேந்திரர்களும், சமஸ்த இந்திரியங்களும் பிறந்தன" என்று அதர்வசிகையிலே பிரமாதி பூதங்களுக்கும் இந்திரியங்களுக்கும் உற்பத்தி ஒருங்கு கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், ஆகாயாதிகளுக்கு மேலே கூறிய சிருட்டிக் கிரமம் யுக்தம் அன்றும் எனின்,

(சித்தாந்தம்) மேலே கூறிய சிருட்டிக் கிரமம் யுக்தம்.

அந்நமயம் ஹி ஸோம்ய மந ஆபோமய: ப்ராணஸ்தேஜோமயீ வாக்।
(சாந். சு. ரு. ச)

"பிருதிவிமயம் மனம், அப்புமயம் பிராணன், தேயுமயம் வாக்கு" என்னுஞ் சுருதியினால், பிராணன் முதலாயின பௌதிகமாகக் கேட்கப்படலானும், அவைகள் பூதங்களுள்ளே அந்தர்ப்பாவமாதலினாலும், அது கொண்டு அவைகளுக்கு வேறாகச் சிருட்டிக்கிரமம் கூறுதல் அநாவசியகம். பிரமாமுதலாயினோர்க்கும் பூதங்களோடு கூட உற்பத்தி கூறப்படுகின்றது; அவர்கள் அவைகளின் ரூபமுடையராய், அவைகளுள் அந்தர்ப்பாவமுடையராதலின். மேலே கூறிய சிருட்டிக் கிரமத்தில் விரோதம் யாதும் இல்லை. (கரு)

அந்தரா விஜ்ஞாநமநஸீ க்ரமேண தல்லிங்காதிதி சேந்நாவிசேஷாத்।
(உ. ரு. கசு)

(உருஉ) அவ்விலிங்கமுண்மையாற் கிரமமாக இந்திரியமும் மனசும் அவற்றுக்கிடையே (போதருகின்றனவே) எனின், இன்று; பேதமின்மையின்.

(ஆக்ஷேபம்) ஆகாயம், வாயு, தேயு என்றற்றொடக்கத்த முண்டக சுருதியிற் பிராணனுக்கும் பூதங்களுக்குமிடையே இந்திரியக்கூட்டமும் மனசும் ஒன்றன்பின் ஒன்றாகப் பிறந்தன என்று கூறப்படுகின்றது; பிற சுருதிகளிற் சித்தித்த கிரமத்தை அறிவிக்கும் ரூபத்தையுடைய இலிங்கமுண்மையான். ஆகலின், இந்த (முண்டக) சுருதியும் பாரம்பரியமாகிய சிருட்டிக் கிரமத்தையே உணர்த்துகின்றதெனின்,

(உத்தரம்) அங்ஙனமன்று;

ஏதஸ்மாஜ்ஜாயதே (முண். உ. க. ரு)

"இதிலிருந்து பிறக்கின்றது" என்பது பிராணன்முதற் பிருதிவியந்தமாக அனைத்தினும் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே அந்வயஞ் செய்யப்படல் வேண்டுமாதலின். ஆகலின், அனைத்துக்கும் சிவபெருமானே காரணர்.

சக்த்யாதி ச ப்ருதிவ்யந்தம் சிவதத்த்வஸமுத்பவம்।
தேநைகேந து தத்வ்யாப்தம் ம்ருதா கும்பாதிகம் யதா।
(வாயு. உத். உரு: கஅ)

"சத்திமுதற் பிருதிவியந்தமாயுள்ள தத்துவமெல்லாம் சிவதத்துவத்தினின்று பிறந்தன; கும்பமுதலிய மண்ணினால் வியாபிக்கப்பட்டாற்போல, அச்சிவதத்துவமொன்றினாலே அவை அனைத்தும் வியாபிக்கப்பட்டன" என அங்ஙனம் புராணவாக்கியமும் போந்தது; கிரமமிருந்தாலும் அனைத்

தும் சிவதத்துவத்தினின்றே உற்பத்தியாகின்றனவென (அது) கூறுகின்றது. ஆகலின், சர்வகாரணம் பிரமம் என்பது சமீசீனம். (கசு)

## (சு) சராசரவியபாசிரயாதிகரணம்.

---

சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத்தத்வ்யபதேஶோ பாக்தஸ்தத்பாவிபாவித்வாத் (உ. ரு. கஎ)

**(உருரு) சரம் அசரமாம் பொருள்களைக் குறிக்குஞ் சொற்களைக் கொண்டு பிரமத்தைக் குறித்தல் கவுணமன்று; அப்பிரமம் அப்பொருள்களாயாகும் என்னும் எண்ணம் தழுவப்படலான்.**

முன்னர்ப் பிரமமானது ஆகாயமுதலிய சப்தங்கொண்டு பிரதிபாதிக்கப்பட்டது. அது இங்கே விசாரிக்கப்படுகின்றது.

சேதனுசேதனமாகிய சராசரவஸ்துக்களைக் குறிக்கும் பதங்கள் பிரமத்திலே முக்கியப்பொருளிற் போந்தனவா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது முக்கியப்பொருளிற் போந்ததன்றென்பேம்; ஒரு வஸ்துவைக் குறிக்கும் பதம் மற்றொன்றை முக்கியமாகக் குறிக்கமாட்டாமையின்.

ஆதித்யோ யூப: (தைத். பிரா. உ. க. ரு. ருரு)

யஜமாந: ப்ரஸ்தர: (தைத். பிரா. ரு. ரு. கூ. சுஉ)

"ஆதித்தியன் (யஞ்ஞ) ஸ்தம்பம், யஜமானன் சிலை" என்னும் வாக்கியங்களில் யஞ்ஞ ஸ்தம்ப முதலியவைகள் சூரியன் முதலியவாகக் கூறப்பட்டமை துல்லியரூபமுதலிய குணசம்பந்தத்தினாலன்றி முக்கியத்தினாலன்று. ஈண்டு,

தத்தேஜ ஐக்ஷத (சாந். சு. உ. ரு)

"அந்தத் தேயு சங்கற்பித்தது" என்றற்றொடக்கத்தவற்றிலே தேயு முதலிய அசேதனப் பொருள்களுக்குச் சேதனப்பொருள்களுக்குரிய குணமாகிய சங்கற்பம் கூடாமையின், அந்தத் தேயு முதலிய சப்தங்களினால் அத்தேயு முதலியவற்றை ஆசிரயித்திருக்கும் சேதனமாகிய பிரமம் இலட்சியப்பொருளாகின்றது; மஞ்சம் கூப்பிடுகின்றது என்றதிற்போல. ஆகலின், ஆகாயாதி சப்தங்கொண்டு பிரமத்தைக் குறிப்பது கவுணமெனின்,

(உத்தரம்) கூறுதும். சராசரப்பொருட் சம்பந்தமாய சொற்களாற் பிரமத்தைச் சுட்டுதல் கவுணமன்று; பின் முக்கியமே;

ஸேயம் தேவதைக்ஷத ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி|

(சாந். சு. ௩. ௨)

"அந்தோ! நான் இந்த மூன்று தேவதைகளாக இந்தச்சீவான்மாவோடு பிரவேசித்து நாமரூபங்களை வேறு செய்வேமாக என்று அந்த (மகா)தேவர் சங்கற்பித்தனர்" என்னுஞ் சுருதியிலே கண்டவாறு, சர்வவஸ்துக்களோடும் நாமரூபவிபாகத்தின் பொருட்டு அவ்வவர் ஆன்மாவாகப் பிரமம் பிரவேசித்துளதாம் என்னும் கருத்துக் கொள்ளப்படலான். யூப ஸ்தம்ப முதலியவும் ஆதித்தியன் முதலிய சப்தத்தினாற் கூறப்படல் முக்கியமன்று. மஞ்ச முதலிய விஷயத்திலோ எனின், இவற்றிலே புருஷர் இருக்கும் சம்பந்தமாத்திரம்பற்றி அவர்களை மஞ்சம் எனக் கூறல் முக்கியமாகாது. இங்கே பிரபஞ்சத்துள் ஆன்மாவாய்ப் பிரவேசித்தமையின் அந்தப் பிரமத்தை அந்தச் சப்தத்தினாற் கூறுதல் முக்கியமே; பிராமணர் முதலாயினோருடைய சரீரத்திற் பிரவேசித்த ஆன்மாவானது பிரம முதலிய மொழியினாற் கூறப்படுதல் முக்கியமாதல் போலாம். அல்லாவிடின்,

அஷ்டவர்ஷம் ப்ராஹ்மணமுபநயீத|

(கௌதம தருமசூத்திரம். அ. உ௩)

"எட்டு வயசுப் பிராமணனை உபநயனஞ் செய்விக்க" என்னும் உபநயன சம்ஸ்கார முதலாயின சரீரத்துக்குமாத்திரம் இயையும் என்றும், அந்த உபநயனத்தினால் ஆன்மா யாதும் சம்ஸ்காரம் அடையவில்லை என்றும் பெறப்படும். அதுகொண்டு,

யஸ்யைதே சத்வாரிம்ஶத்ஸம்ஸ்காரா அஷ்டௌ சாத்மகுணா: ஸ ப்ராஹ்மணஸ்ஸாயுஜ்யம் (கௌதம தருமசூத்திரம். அ. உ௩)

"எவன் *நாற்பது சம்ஸ்காரமுமடைந்து எண்குணங்களையுமுடையனாகின்றானோ, அவன் பிரமத்தோடு சாயுச்சியமடைகின்றான்" என்றுரைக்கும் சூத்திரப்பிரகாரம் சம்ஸ்காரவாயிலாக ஆன்மாவுக்கு எய்திய பல சுருதியும் பிரயோசனமில்லையாய் முடியும்; அஃதன்றி,

ப்ராஹ்மணோ யஜேத|

"பிராமணன் யஞ்ஞஞ் செய்வானாக" என்னும் விதிகளும் வியர்த்தமாய் முடியும். ஆகலான் சகல சராசர வஸ்து சரீரங்களைப் பிரவேசித்த பிரமம் அவ்வம் மொழிகளால் உரைக்கப்படுதல் முக்கியமே. (௧௭)

---

* இவை சைவபாடியத்து ௧௭௪-ஆம் பக்கத்துக் குறிப்பிலே உள்ளன.

## (௭) ஆத்துமாசுருத்தியதிகரணம்.

---

𑌨𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌰𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 𑌤𑌾𑌭𑍍𑌯𑌃 (௨. ௩. ௧௮)

**(௨.௩.௪) சுருதிப்பிரகாரம் ஆன்மா பிறக்கவில்லை; அச் சுருதிகளாற் கூறப்பட்டவாறு நித்தியமாயுமிருத்தலின்.**

மேலே ஆகாய முதலியன பிரமத்திலிருந்து நேரே உதித்தன என்று கூறப்பட்டது. அந்த நியாயத்தினால் ஆன்மாவும் பிரமத்திலிருந்து பிறக்கின்றதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா பிரமத்தினின்று பிறக்கின்றதென்பது.

𑌯𑌦𑌾𑌤𑌮𑌸𑍍𑌤𑌨𑍍𑌨 𑌦𑌿𑌵𑌾 𑌨 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍍𑌨 𑌸𑌨𑍍𑌨𑌚𑌾𑌸𑌚𑍍𑌛𑌿𑌵 𑌏𑌵 𑌕𑍇𑌵𑌲𑌃।
(சுவே. ௪. ௧௮)

“எப்போது இருள் உளதாய், பகலுமின்றி இரவுமின்றி, சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார்”

𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍 (சாந். ௬. ௨. ௧)

“ஏகமேவாத்துவிதீயம்” என்னுஞ் சுருதிகளாற் சிருட்டிக்கு முன்னே பிரமம் ஒன்றே இருந்தது என்றும், சத்தும் அசத்தும் இல்லை என்றும் வற்புறுத்தப்படுகின்றது. ஆகலின் சிருட்டிகாலத்திலே பிரமத்தினின்று ஆன்மாக்கள் உற்பத்தியே ஆகின்றனர்.

𑌯𑌥𑌾𑌗𑍍𑌨𑍇𑌃 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌾 𑌵𑌿𑌸𑍍𑌫𑍁𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌵𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑍇𑌵𑌾𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌲𑍋𑌕𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌤 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍍𑌯𑍁𑌚𑍍𑌚𑌰𑌨𑍍𑌤𑌿 (பிரு. ௪. ௧. ௨௦)

“தீயிலிருந்து பொறிகள் பிறப்பது போல, பரமான்மாவிலிருந்து எல்லாப் பிராணன்களும், எல்லா உலகமும், எல்லாத் தேவரும், எல்லாப் பூதங்களும், எல்லா ஆன்மாக்களும் கூட்டமாய்ப் பிறக்கின்றன” என்று சுருதி கூறும் பிரகாரம் தீப்பொறித் திருட்டாந்தம் ஆன்மோற்பத்திக்கு இயைய இருக்கின்றது. ஆகலின் தீயிலிருந்து பொறிகள் பிறப்பது போல, ஆன்மாக்களும் பிரமத்தினின்று பிறக்கின்றன எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஆன்மா பிறப்பதில்லை;

𑌨 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌮𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌾 𑌵𑌿𑌪𑌶𑍍𑌚𑌿𑌤𑍍 (கட. ௨. ௧௮)

“அறிஞன் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை” எனவும்,

𑌨𑌿𑌤𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚𑍇𑌤𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌨𑌾𑌨𑌾𑌮𑍍 (கட. ௫. ௧௩)

"நித்தியப் பொருள்களுள்ளே நித்தியரும், சேதனப் பொருள்களுள்ளே சேதனரும்" எனவும்

ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ (சுவே. க. கூ)

"பிறவாத இருவரும் அறிஞனும் அறிவிலனுமாய ஈசனும் அநீசனும்" எனவும் போந்த சுருதிகளானும் ஆன்மா நித்தியன் எனப் பெறப்படுகின்றமையின். சிருட்டிக்கு முன்னே பிரமமாத்திரம் இருந்ததென்று வற்புறுத்தினமை ஆன்மாக்களும் பாசங்களும் அந்தப் பிரமாகிருதியாகி நாமரூபவியவகாரம் ஒழிந்து நின்றமையாலாம்; ஆன்மாவின் சொரூபம் அசத்தாயிருந்தமையாலன்று. பொறியைப்பற்றிய சுருதியும் இவற்றின் நாமரூபத் தோற்றத்தைக் குறித்ததன்றிப் பிறப்பைக் குறித்ததன்று. இன்றேல், ஒருவர் தாஞ் செய்த கன்மத்துக்குப் பலனடையாதுபோதல் முதலிய தோஷப் பிரசங்கம் எய்துமாதலின், பிரமத்தினின்று ஆன்மா பிறக்கவில்லை. (கஅ)

## (அ) ஞாதிகரணம்.

---

ஜ்ஞோத ஏவ (உ. ந. கக)

### (உநு) ஆகலின் (அவன்) அறிஞனே.

மேலே ஆன்மா நித்தியன் என்று சித்தமாயிற்று. பின்னர் இவனுக்கு இயற்கையறிவு உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா இயற்கையாகவே ஞானமற்றவன்.

ஜ்ஞாஜ்ஞௌ த்வௌ (சுவே. க. கூ)

"அறிஞனும் அறிவிலனுமாகிய இருவர்" என்னும் சுருதியினால், ஆன்மா அறிவிலன் எனப் பெறப்படுகின்றான். ஆகலின், சைதன்னியமாத்திரரூபமாகிய இவன் அறிவிலனே. ஆயின் மாயாசத்தியினாற் சரீரேந்திரியாதிகளையடைந்து, இது கடம், இது படம், நான் மனிதன், நான் தேவன் எனப் பலதிறப்பட்ட அகங்காரத்திற் கட்டுண்டு போக்குவரவுடையனாயிருத்தலின், சம்சாரதசையில் இவன் அறிவிலனேயாகின்றான். இவனுக்கு இயற்கையாய்ச் சிறிதும் அறிவில்லை. இன்றேல் அவனுக்கு எங்ஙனம் முத்தி உண்டாம்? எனின்,

(சித்தாந்தம்) கூறுதும்; ஆன்மா அறிஞனே.

அத யோ வேதேதம் ஜிக்ராணீதி ஸ ஆத்மா (சாந். அ. கஉ. ச)

"எவன் இதை நான் மணக்கின்றேன் என்றறிகின்றானோ, அவன் ஆன்மா"

ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ... (சாந். அ, கஉ. ரு)

ய ஷ௳தெ ஬்ரஹ்௭ொகெ (சாந். அ. ௧உ. ௬)
௨௭நாzஷ்ய ௭ெஷவ௭ுக்ஷுஃ (சாந். அ. ௧உ. ௫)

"அவன் பிரமலோகத்திலேயுள்ள இந்த இன்பங்களை ஞானத்தினுற் கண்டு களிக்கின்றுன்; மனசே (ஞானமே) அவனுக்குத் திவ்யகண்" என்றற்றொடக் கத்த சுருதிகளாற் குணமாகிய ஞானமே அவனுக்கு மனசு. ஆகலின், ஆன்மா சுவயமாக ஞாதாவே. மாயாசத்தியின் சம்பந்தத்தினுற் சம்சார தசையில் அவனுக்கு அறிவுளதென்று முற் கூறியது சத்தியம். மாயா சத்தியினுல் மறைப்புண்ட இயற்கை ஞானவிலாசமுடையனுய்ப் பிராகிருத மனசோடு சம்பந்தமுற்றுச் சுகதுக்கங்களைப் போக்தாவாக நின்றனுப வித்துச் சரீரம் அகங்காரம் என்பவற்றில் முற்றிய ஞானமுடையனுய்ச் சஞ் சரிப்பவன் ஜீவான்மா. இவன் பின் எப்போது பிரமஞான உபாசனுப்பி யாசத்தினுல் மும்மலசம்பந்தத்தையும் அகற்றுகின்றுனே, அப்போது பிரம சாதிருசியனுய், அபிவியக்தமாகிய தனது நிரதிசயஞானதருமமுடையனுய் முக்தான்மா எனப்படுகின்றுன்.

ஷ்ராணாராமஂ ௨ந ஆநஂ௭ம் (தைத். க. ௬. உ)

"பிராணுராமம், மந ஆனந்தம்" என்னுஞ் சுருதியினுற் பிரமத்துக்கு நிரதி சயான்மானந்த விஷயமாயுள்ள மனசு இயற்கைக் கரணம் என்றறியப்படு கின்றது. அதுபற்றிப் பிரமசாம்மிய குணமுடைமையால், சம்சாரம் நீங்கிய ஆன்மாவுக்குச் சொரூபானந்தத்தை அனுபவித்தற்குச் சாதனமாயும் பாகி யாந்தக் கரணத்தை அபேக்ஷியாததாயுமுள்ள மனசு (ஞானம்) உண்டென்று பெறப்படுகின்றது.

ஜ்ஞாzஜ்ஞள (சுவே. க. ௯)

"அறிஞனும் அறிவிலனும்" என்ற சுருதியில் ஆன்மாவுடைய அறிவின்மை சிற்றறிவின் மேற்று. அசஞ்சாரியாகிய சிவபெருமானுடைய அறிவு முற் றறிவின் மேற்று. ஆகலின், ஆன்மா சம்சாரத்திற் சிற்றறிவையும், முக்தி யில் முற்றறிவையும் உடையன் என்பது. ஆகலின் ஆன்மா ஞாதாவே. (௧௯)

## (௯) உற்கிராந்தியதிகரணம்.

---

உக்ராந்திமத்யாமதீநாஂ (உ. ௩. உ௦)

**(உ௩௯) புறப்படுதல், போதல், மீடல்களான் (ஆன்மா அணுவினன்.)**

மேலே அறிஞனுகச் சித்தித்த ஆன்மாவுக்குப் புறத்துச் சேறன் முத லிய கேட்கப்படலான், அவன் அணுத்துவமுடையன். இது யுக்தமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவனுக்கு அணுத்தன்மை ஒவ்வாது.

ஸ வா ஏஷ மஹாநஜ ஆத்மா (பிரு. ௬. ௪. ௨௨)

"இந்த ஆன்மா பெரியதும் பிறவாததும்" என்னுஞ் சுருதி ஆன்மாவை வியாபகன் என்று கூறுதலானும்,

அஹம் விச்வம் புவநமப்யபவாம் (தைத். ௩. ௧௦. ௬)

"நான் பிரபஞ்சம் அனைத்தையுங் கடந்துள்ளேன்" என்னுஞ் சுருதி அவன் வியாபகத்தினாற் சமஸ்த புவனத்தையுங் கடந்துள்ளான் என்று கூறுதலானும், எப்பிரகாரத்தானும் இந்த ஆன்மா வியாபகன் என்று பெறப்பட்டதாம் எனின்,

(சித்தாந்தம்) இந்த ஆன்மா அணுவினனே; உற்கிராந்தி கதி, ஆகதிகள் கேட்கப்படலான்.

தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி।

(பிரு. ௬. ௪. ௨)

"அந்த மினு மினுப்போடு ஆன்மா புறப்படுகின்றது" என்னுஞ் சுருதியில் உற்கிராந்தியும்,

யே வைகே சாஸ்மால்லோகாத் ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி।

(கௌஷீ. ௧. ௨)

"இவ்வுலகத்தைவிட்டுப் போகின்றவர் சந்திரனை அடைகின்றனர்" என்னுஞ் சுருதியினால் அவனது போதலும்,

தஸ்மால்லோகாத் புநரேத்யஸ்மை லோகாய கர்மணே।

(பிரு. ௬. ௪. ௬)

"அந்த உலகத்திலிருந்து கன்மத்தின்பொருட்டு இவ்வுலகத்துக்குப் பின்னர் மீண்டு" என்னுஞ் சுருதியினால் அவனது மீளுதலும் கூறப்படுகின்றன. ஆன்மா வியாபியாயிருப்பின் அவன் வெளியேறலும் போதலும் மீளுதலும் பொருந்துமாறில்லை. (௨௦)

ஆன்மா வியாபியாயிருப்பினும் சரீரத்தை விடுவதே உற்கிராந்தியாகலாம். அங்ஙனமாயினும் போதலும் மீளுதலும் இங்ஙனம் ஆகா என்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸ்வாத்மநா சோத்தரயோ: (உ. ௩. உக)

**(உ௩எ) பின்னுள்ள இரண்டும் தன்னால் (முடிக்கப்படுமாதலினாலும்)**

பின் உரைக்கப்பட்ட போதல் மீளுதல் இரண்டும் தன்னாற் செய்து முடிக்கற்பாலனவாதலின், இந்த ஆன்மா அணு.

ஃஹா நஜ ஆத்மா (பிரு. சு. ச. உஉ)

"ஆன்மா பிறவாதவன் பெரியவன்" என்னுஞ் சுருதி ஈசுரப் பிரகரணத்தில் வருதலான் அது ஆன்மாக்களைக் குறிக்காதென்று கூறுவர். உலகபுவனங்களைத் தான் வியாபித்தலினால் அவன் கடந்துள்ளான் என்றமை மல மறைப்பு நீங்கியகாலத்து வெளிப்பட்ட சத்தி ஒளியானது வியாபித்தது என்னும் சீவன்முத்தனது விஷயமாம். ஆகலின், ஆன்மா அணுவே. (உக)

ஆசங்கித்துப் பரிகரிக்கின்றனர்.

நாணு ரதச்ருதெ ரிதி செனெதராயிகாராகு|

(உ. ௩. உஉ)

**(உ௩அ) சுருதி வேறுபடக் கூறுதலான், அவன் அணுவினன் அல்லன் எனின், அன்று; அது வேறு அதிகரணத்ததாதலின்.**

(ஆக்ஷேபம்)

ஸ வா ஏஷ ஃஹா நஜ ஆத்மா (பிரு. சு. ச. உஉ)

"ஆன்மாவோ மகானும் அஜனும்" என்னுஞ் சுருதி ஆன்மா அணுவினனல்லன் என்று கூறுகின்றதெனின்,

(உத்தரம்) அன்று;

யஸ்யா நுவித்த: ப்ரதிபுத்த ஆத்மா (பிரு. சு. ச. க௩)

"ஆன்மாவை அறிந்து தியானிப்பவன்" என்று தொடங்கிச் சிவபெருமானையுற்றுப் பேசும் அதிகரணத்தில் அச்சுருதி காணப்படலான். (உஉ)

ஸ்வஶப்தோந்மாநாப்யாஞ்ச (உ. ௩. உ௩)

**(உ௩௯) சுவசப்தத்தினாலும் உன்மானத்தினாலும்.**

ஏஷோऽணுராத்மா செதஸா வெதிதவ்யோ யஸ்மிந் ப்ராண: பஞ்சதா ஸம்விவெஶ (முண். ௩. க. ௯)

"எவனிடத்தில் ஐந்து பிரகாரமாய்ப் பிரவேசித்ததோ, அவ்வணுவாகிய ஆன்மா மனசினால் அறியற்பாலன்" என்னுஞ் சுருதியில் அணு என்னும் பதம் கூறப்படலானும்,

ஆராக்ர மாத்ரோஹ்யவரோऽபி த்ருஷ்ட: (சுவே. ௫. அ.)

"சிறியவனாய் முட்கோலின் நுனி அளவினனாய்க் காணப்படுகின்றான்" என்னுஞ் சுருதியில் உன்மானம் கூறப்படலானும், ஆன்மா அணுவே. அணு

வுக்கொப்பாகிய வஸ்துவை உதகரித்து அதன் அளவை எடுத்துக் காட்டுவதே உன்மானம். (௨௩)

ஆன்மா சிறிதாயிருந்தாற் சரீரமுழுதும் வியாபிக்கும் அனுபவவுணர்ச்சி எங்ஙனமாம் எனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஃவிரோயஸ்ரூஷநவஃ (உ. ௩. உ௪)

**(௨௪0) சந்தனம் போல விரோதமின்று.**

சந்தனவிந்து ஓரிடத்திருப்பினும் தேகம் முழுதும் வியாபித்துச் சுகம் பிறப்பிக்கின்றது; அது போல, விரோதம் இன்று. (௨௪)

பின்னருஞ் சூத்திரகாரர் ஆசங்கித்து உத்தரம் இறுக்கின்றனர்.

ஃவஸ்திதி வெஶெஷ்யாதிதிசெஷாஃநுவமாஜூதி ஹி (உ. ௩. உ௫)

**(௨௪௧) குறிப்பிட்ட ஓரிடமிருப்பதினுற் பொருந்தாதெனின், அங்ஙனமன்று; இதயத்திலேதான் ஆன்மாவுக்கிடம் ஒப்புக்கொள்ளப்படலான்.**

(ஆக்ஷேபம்) குறிப்பிட்ட ஓரிடத்திருப்பதினுற் சந்தனம் போல எனல் பொருந்தாதெனின்,

(உத்தரம்)

ஹூதிஹ்யமோ தூ (பிர. ௩. ௬)

"இதயத்திலே இந்த ஆன்மா உளது"

யொzயம் விஜ்ஞாநமயஃ ஷ்ராணெஷு ஹ்ருத்யந்தஜ்யோதிஃ புருஷஃ (பிரு. ௬. ௩. எ)

"இவன் விஞ்ஞானமயனுய்ப் பிராணன்களுள்ளே இருதயத்து அந்தர்சோதியாயுள்ள புருஷன்" என்று சுருதி கூறுமாறு ஆன்மாவுக்கு ஓர் ஸ்தானம் அங்கீகரிக்கப்படுதலின், அது பொருந்தாதென்பர் சிலர். (௨௫)

சூத்திரகாரர் தம்மதத்தைக் கூறுகின்றனர்.

ஶுணாடூா லொகவஃ (உ. ௩. உ௬)

**(௨௪௨) அல்லது ஒளியைப் போற் குணத்தினுல்.**

ஆன்மா சுவகுணமாகிய ஞானத்தினுல் தேகம் எங்கும் வியாபித்து அநுபவிக்கின்றது; இரத்தினமானது தன் ஒளியினுல் தனக்குச் சமீபித்துள்ளதையும் வியாபித்து விளக்குமாறு போலாம். ஆகலின் விரோதம் இன்று. (௨௬)

ஞானத்துக்கும் ஆன்மாவுக்கும் பேதமில்லையெனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

வ்யதிரேகோ ந்ரயவத்தயா ஹி தர்ஶயதி (உ. ங. உஎ)

(உசரு) கந்தத்திலே போலப் பேதமுளது; அங்ஙனஞ் சுருதி கூறுகின்றதன்றோ.

பிருதிவி கந்தமுடையது என்பது போல, நான் அறிகின்றேன் என்றவிடத்து, ஞானம் ஆன்மாவுக்குக் குணமாகக் கொள்ளப்படுகின்றது. அங்ஙனம் ஞானத்துக்கும் ஆன்மாவுக்கும் பேதம் உண்டு.

ஜாநாத்யேவாயம் புருஷ:।

“இந்த மனிதன் அறிகின்றனன்” என்னுஞ் சுருதியும் பேதத்தைக் காட்டுகின்றது. (உஎ)

ப்ருதகுபதேஶாத் (உ. ங. உஅ)

(உசச) வேறாகக் கூறப்படலான்.

நஹிவிஜ்ஞாதுர் விஜ்ஞாதேர் விபரிலோபோ வித்யதே।

(பிரு. சு. ங. ஙo)

“அறிஞனுக்கு அறிவு உலோபமில்லை” என்னுஞ் சுருதியினால் ஆன்மாவுக்கு வேறாக ஞானம் உபதேசிக்கப்படுகின்றது. இங்ஙனம் நித்திய ஞானகுணமுடையன் ஆன்மா என்பது சித்தம். (உஅ)

ஆன்மாவுக்கு ஞானம் குணமாக உளதாமிடத்து, அவன் ஞானமாகவே கூறப்படுதல் எங்ஙனமெனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத் (உ. ங. உகூ)

(உசரு) இது அவனது விசேஷகுணமாயிருத்தலின் பிராஞ்ஞன் போல அந்தப் பெயர் (கொடுக்கப்பட்டது).

ஞானகுணசாரமாயிருத்தலான் ஆன்மாவை ஞானமென்று குறிப்பதன்றி, ஞானமாத்திரமாகவே யிருப்பதினாலன்று. அஃதெங்ஙனமெனின், ஞானமுடையதேனும் பிராஞ்ஞனைப் (பிரமத்தைச்) “சத்தியம் ஞானம்” என்று கூறுதல் போலாம். ஆகலின், ஆன்மாவை ஞானமென்று கூறுவதாற் குற்றமில்லை. (உகூ)

பின்னரும் பொருத்தமாதல் கூறுகின்றனர்.

யாவதாத்மபாவித்வாச்ச நதோஷஸ்தத்தர்ஶநாத் (உ. ங. ஙo)

(உசகூ) அது என்ஞான்றும் ஆன்மாவோடு கூட உட

**னிருத்தலின், அங்ஙனம் காணப்படலானும்; அதில் யாதும் தோஷம் இன்று.**

ஞானம் ஆன்மாவோடு கூட உடனிருத்தலின், அதனை ஞானமென்று கூறுவதினுற்ருேஷமில்லை. பசு முதலியன பசுத்துவ முதலிய சொரூப சம்பந்தமாகிய குணத்தையுடைமையின், பசுமுதலாய பெயர் இடப்பட்டதாகக் காணப்படுகின்றது. ஆகலின், ஆன்மாவுக்குச் சொரூபத்தோடியைந்த ஞானகுண முண்மையின் ஞானம் என்னும் பெயர் கொடுக்கப்பட்டது. (௩௰)

சுழுப்தி முதலிய அவஸ்தைகளில் இல்லாத ஞானம் ஆன்மாவோடு உடனிருப்பதாக எங்ஙனம் கூறலாம் எனச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

பும்ஸ்த்வாதிவத்வஸ்ய ஸதோऽபிவ்யக்தியோகாத் (உ. ௩. ௩௧)

**(உ௪௭) பும்ஸ்துவ முதலியபோல் அதன் சத்து வெளிப்படலான்.**

சுழுப்திமுதலியவைகளிலே சத்தாகிய ஞானம் வெளிப்படாதுளதாயினும், அது சாக்கிர முதலியவற்றில் வெளிப்படுதலுண்மையின், ஞானம் ஆன்மசொரூபத்தோடிசைந்துளதே. மனிதனுக்கு முக்கியமாகிய ஏழாவது தாது பால்ய தசையிற் சத்தாயுளதேனும், யௌவனத்தில் வெளிப்படுகின்றது. ஆகலின், ஞானம் ஆன்மசொரூபமாயிருத்தலாற் போதரும் தோஷம் யாதும் இன்று. (௩௧)

ஆன்மா ஞாதாவாயும் அணுவாயுமிருப்பதாகப் பிரதிபாதிப்பதின் பயனைச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

நித்யோபலப்த்யநுபலப்தி ப்ரஸங்கோऽந்யதரநியமோ வாந்யதா।
(உ. ௩. ௩௨)

**(உ௪௮) இன்றேல் எப்போதும் அறிதலேனும், அறியாதிருத்தலேனும், அவற்றில் ஒன்று நீங்கலாக மற்றொன்றேனும் இருக்கும்.**

அஃதின்றேல் ஆன்மா அறிவாயும் வியாபகமாயும் இருக்கின்றான் எனக் கொள்ளின், சங்கோசமின்மையால் நித்தியத்துவம் போல எப்போதும் அறிவுத்தோற்றம் (உபலப்தி) இருத்தல்வேண்டும். அறிவுத்தோற்றமில்லையேல் அந்தக் காரணத்தினுலே இதுவும் எப்போதும் இருத்தல்வேண்டும். ஞானம் இடையில் வந்ததென்றும் ஆன்மா சர்வவியாபகனென்றும் கொண்டால், அதிலும் அந்தத் தோஷம் எய்தும்; சர்வான்மாக்களும் சர்வவியாபகமாயிருத்தலின் ஞானத்துக்குக் காரணமாகிய மனத்தின் சம்யோக

முதலியன எங்கும் எப்போதும் சாதாரணமாயிருத்தலின். அதிர்ஷ்ட ஹேதுக்களுக்கும் அவ்வாறேயிருத்தலின், அதனாலும் நியமம் இல்லை. அறிவுத்தோற்றத்துக்கும் தோற்றாமைக்கும் விரோதம் இருத்தலின், உபலப்திக்கேனும் அநுபலப்திக்கேனும் காரணங்களிருக்கும். அங்ஙனமாயின் இரண்டில் ஒன்றே உளதாகும். ஆகலின், முற் கூறியதே சமீசீனம். (ஙஉ)

## (கo) கர்த்திரதிகரணம்.

---

கத்தா ஶாஸ்த்ராத்தவத்வாத் (உ. ங. ஙங)

**(உசகூ) (ஆன்மா) கர்த்தா; சாஸ்திரத்துக்கு அர்த்தமுண்மையான்.**

ஆன்மாவுக்கு ஞாதிருத்துவமும் அணுத்துவமும் நிரூபிக்கப்பட்டன. அவனுக்குக் கர்த்திருத்துவம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) கூடஸ்தனாகிய ஆன்மாவுக்குக் கர்த்திருத்துவம் எய்தாது. புத்தியேனும் பிரகிருதியேனும் கர்த்தாவாதல் உசிதம். அத்தியாசத்தினாலே (ஆன்மா) தன்மாட்டு ஆரோபித்துக் கர்த்தாவாகவே தோன்றுகின்றான். ஆதலிற் கர்த்திருத்துவம் ஆன்மாவுக்குப் பொருந்தாதெனின்,

(சித்தாந்தம்) ஆன்மாவே கர்த்தா, சாஸ்திரத்துக்கு அர்த்தமுண்மையின். இன்றேல் இது செய்க, இது செய்யற்க என்று விதிக்கும் சாஸ்திரம் வியர்த்தமாகும். (ஙங)

உபாதாநாத்விஹாரோபதேஶாத் (உ. ங. ஙச)

**(உருo) அவனுக்கு எடுத்தலும் அலைதலும் கூறப்படலானும்.**

ஸவஏதத்ப்ராணாந்க்ருஹீத்வா ஸ்வே ஶரீரே யதாகாமம் பரிவர்த்ததே (பிரு. ச. க. கஅ)

"இங்ஙனம் இவன் இந்தப் பிராணன்களை எடுத்துக்கொண்டு சுவசரீரத்தில் இஷ்டம் போல் அலைகின்றான்" எனச் சுருதியானது ஆன்மா எடுத்தலும் அலைதலும் செய்வதாகக் கூறுதலான், இவன் கர்த்தாவே. (ஙச)

புத்தியும் பிரகிருதியுமே கர்த்தாவாகுமென்றவிடத்துப் புத்தி கர்த்தாவாதலைத் தூஷிக்கின்றார்.

வ்யபதேஶாச்ச க்ரியாயாம் நசேந்நிர்தேஶவிபர்யய:।

(உ. ங. ஙரு)

(௨௫க) கிரியையைப்பற்றிக் கூறப்படுதலான் ; இன்றேல் வேறுவிதமாய்க் கூறப்பட்டிருக்கும்.

விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே (தைத். உ. ௫. க)

"விஞ்ஞானம் யாகத்தைச் செய்கின்றது" என்றற்றொடக்கத்தவற்றினல் ஆன்மாவே யாகாதியிற் கர்த்தாவாகக் கூறப்படுகின்றனுதலின், ஆன்மாவே கர்த்தா.

(ஆக்ஷேபம்) விஞ்ஞானம் (ஆன்மா) என்றது புத்தியையேயன்றி ஆன்மாவைக் குறித்ததன்று எனின்,

(உத்தரம்) அங்ஙனமன்று. அவ்வாறாயின் விஞ்ஞானத்தினல் என வேறுபிரகாரமாய்க் குறிக்கப்பட்டிருக்கும் ;

தத்ஷாம் ப்ராணாநாம் விஜ்ஞாநேந விஜ்ஞாநமாதாய
(பிரு. ௪. க. கஎ)

"இந்தப் பிராணன்களுடைய விஞ்ஞானத்தை விஞ்ஞானத்தினல் எடுத்து" என மற்றோர் சுருதியில் இந்த விஞ்ஞானசப்தம் புத்தியைக் குறிக்குமிடத்து (மூன்றும் வேற்றுமை) கருவிப்பொருளிற் குறிக்கப்பட்டதாய்க் காணப்படலான். ஆகலின், புத்தி கருவிப்பொருளாயிருத்தலாற் கர்த்தாவன்று. (௩௫)

பிரகிருதி கர்த்தா என்பதைச் சூத்திரகாரர் தூஷிக்கின்றார்.

உபலப்திவதநியம꞉ (உ. ௩. ௩௬)

(௨௫௨) அறிவுத்தோற்றம் போல நியமமின்று.

மேலே வாதிக்கப்பட்ட உபலப்தியிற் போல, பிரகிருதியைக் கர்த்தாவாகக் கொள்ளின், அது சர்வசாதாரணமாதலால் முற் கூறிய அறிவுத் தோற்றத்தின் அநியமம் போற் பயனிலும் அநியமம் நேரும். (௩௬)

ஶக்திவிபர்யயாத் (உ. ௩. ௩எ)

(௨௫௩) (போக்திருத்துவ) சத்தி வேறுபடலான்.

பிரகிருதி கர்த்தாவாயின், கர்த்தாவே போக்தாவாகவேண்டுதலின் அந்தப் பிரகிருதியே போக்தாவாகுக ; பின் ஆன்மாவின் போக்திருத்துவ சத்தி வேறுபாடுபெற்றி ஹானி அடையும். (௩எ)

ஸமாத்யபாவாச்ச (உ. ௩. ௩அ)

(௨௫௪) தியானவின்மை நேருமாதலானும்.

இன்னும் பிரகிருதி கர்த்தாவாயின், நான் பிரகிருதிக்கு வேறாயிருக்கின்றேன் என்னும் தியானத்துக்கு அபாவம் நேருமாதலினுலும், ஆன்மாவே கர்த்தா. (௩அ)

யயா ச தக்ஷாஹயயா (உ. ௩. ௩௯)

(உ௫௫) தச்சன் போல அவன் இருவகையாயும்.

ஆன்மா கர்த்தாவாயின், தச்சன் சுவகாரியத்தில் எவ்வாறே அவ்வாறே, விரும்பும்போது செய்தும் விரும்பாதபோது செய்யாதொழிந்தும் போதலாகிய வியவஸ்தை நேரும்.

(ஆக்ஷேபம்) விருப்பமும் புத்திக்குரியதாதலான் அவ்வியவஸ்தை வராதெனின்,

(சமாதானம்) அன்று; இச்சை சேதனத்தின் தருமம். அதுபற்றி ஆன்மாவுக்கே கர்த்திருத்துவமன்றிப் புத்திக்கேனும் பிரகிருதிக்கேனும் இல்லை என்பது நிர்ணயம். (௩௯)

(கக) பராயத்தாதிகரணம்.

---

வராத்து தஞ்ஞுதேঃ (உ. ௩. ௪௦)

(உ௫௬) ஆயின் பரத்திலிருந்தே; அதனைச் சுருதி கூறுதலான்.

அறிதலும் செய்தலும் ஆன்மாவுக்கே பிரதிபாதிக்கப்பட்டன. அந்தக் கர்த்திருத்துவம் தன்னிடத்துளதா? சிவபெருமானிடத்துளதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது ஆன்மாவிலே எய்துகின்றது. இன்றேல் நன்மை தீமைகளில் ஆன்மாவைச் செலுத்திச் சிவபெருமான் பாரபக்ஷமுடையர் என்னும் தோஷத்துக்காளாவர். அதுவன்றி ஆன்மாவுடைய பிரவிருத்தி சிவபெருமான் வசத்ததாயின் ஆன்மா யாதும் செய்யாமையின், விதிநிஷேதங்கள் வியர்த்தமாகும். ஆகலின், ஆன்மாவுடைய பிரவிருத்தி ஆன்மாவைப் பற்றியதேயாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும்.

ய ஆத்மாநமந்தரோ யமயதி (மத்தியந்தினசாகை)

"உள்ளிருந்து ஆன்மாவைச் செலுத்துகின்றனர்" என்னுஞ் சுருதியுண்மையால் ஆன்மாவுடைய கர்த்திருத்துவம் சிவபெருமான் வசத்ததன்றித் தன்னைப் பற்றியதன்று. (௪௦)

ஆன்மாவைச் சிவபெருமான் பிரவிருத்திப்பதால் அவர் பாரபக்ஷமுடையராவார் என்றமைக்கும் விதி நிஷேதங்கள் வியர்த்தமாகும் என்றமைக்குமாகச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய:|
(௨. ௩. ௪௧)

**(௨௫௭) விதிநிஷேதங்களுக்கு வியர்த்தம் வாராதிருக்க (ஆன்மாச் செய்யும்) பிரயத்தனத்தை (ஈசுவரர்) அபேக்ஷிக்கின்றனர்.**

ஆன்மா தன் கர்மபாகவசமாய்ச் சுவேச்சையினாலே பிரவிருத்தி நிவிர்த்திக்கு ஏதுவாகிய முயற்சி செய்கின்றான். பிரவிருத்தி நிவிர்த்திகளின் ஏதுவாகிய ஆன்மாவின் பிரயத்தனத்தை நோக்கி அவனுக்கு அனுமதி கொடுப்பது காரணமாகப் பரம்பொருளானது அவனைச் செலுத்தி நிக்கிரகானுக்கிரகங்களைச் செய்வதால், விதி நிஷேதத்தின் வியர்த்தமின்மை புலப்படுகின்றது. பாலனொருவன் மிக்க பலமுடையவனது சகாயத்தினால் ஓர் பெரிய உத்தரத்தைத் தூக்க இயன்றவனேயாயினும், தான் பிரயத்தினஞ் செய்தவரையில் விதி நிஷேதங்களுக்கு யோக்கியனாகின்றான். இங்ஙனம் ஆன்மா சிவபெருமானுடைய சகாயங்கொண்டு பிரவிருத்தித்தாலும் தானே விதி நிஷேதங்களுக்கு யோக்கியனாகின்றான். ஆகலின் ஆன்மா தான் செய்த பிரயத்தனத்தையுற்று அபேக்ஷையுடைமையாற் கன்மங்களிலே ஆன்மாவைச் செலுத்துபவராகிய சிவபெருமான் பாரபக்ஷமுடையராகார். ஆன்மாவுக்கும் சுவாதீனப் பிரவிருத்தியுண்மையான் விதிநிஷேத முதலிய வியர்த்தமாகப் போகா என்பது சித்தம். (௪௧)

## (௧௨) அம்சாதிகரணம்.

---

அம்சோ நாநா வ்யபதேசாதந்யதா சாபி தாசகிதவாதித்வமதீயத ஏகே|
(௨. ௩. ௪௨)

**(௨௫௮) ஆன்மா (பிரமத்தின்) அம்சம், வேறாய்க் கூறப்படலான்; சில சாகையினர் வேறு பிரகாரமாயும் வலைஞர் துஷ்டர் முதலாயினோர் தன்மையை அத்தியயனஞ் செய்கின்றனர்.**

ஆன்மா நித்தியன், அறிஞன், அணு, கர்த்தா, சிவனார் சகாயத்தை அபேக்ஷிக்கும் பிரவிருத்தியுடையன் என்று மேலே நிரூபிக்கப்பட்டது.

ஈண்டு ஆன்மா சிவபெருமானா? இன்றேல் அவர் அம்சமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா சிவபெருமானே; ஒரு ஆகாயம் கடமுதலியவற்றின் உபாதியினால் நாநாப்பிரகாரமாய்ப் பரிச்சின்னமாய்க் காணப்

பட்டாற் போல, சிவபெருமானே அநேக உபாதிவசத்தினற் சீவபாவம் அடைந்தாராகக் காணப்படுகின்றது. அங்ஙனம்,

அயமாத்மா ப்ரஹ்ம (பிரு. ௪. ரு. ௧௯)

"இந்த ஆன்மா பிரமம்" என்று சுருதியும் கூறுகின்றது. ஆகலின், பிரமமே அஞ்ஞானத்தினற் சீவபாவத்தை அடைந்ததெனப் பெறப்படுகின்றதே எனின்,

(சித்தாந்தம்) சீவான்மா (பரப்பிரம) சிவபெருமானுடைய அம்சமாகிய மூர்த்தியின் ஏகதேசந்தான்.

அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி।
(சாந். ௬. ௩. ௨)

"இந்தச் சீவான்மாவின் உருவமாய்ப் பிரவேசித்து நான் நாமரூபத்தை வகுப்பேன்"

ய ஆத்மநி திஷ்டந் (மத்தியந்தினசாகை)

"எவர் ஆன்மாவில் இருக்கின்றனரோ"

ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா (சுவே. ௧. ௬)

"ஆன்மாவையும் செலுத்துபவரையும் வேறாக அறிந்து"

மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்।
(சுவே. ௪. ௧௦)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக"

தஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத் (சுவே. ௪. ௧௦)

"இவ்வுலக முழுதும் அவர் அவயவத்தினல் வியாபிக்கப்பட்டது" என்றற்றொடக்கத்த சுருதிகளில் அவ்விரண்டுக்கும் பேதம் கூறப்படுகின்றது.

அயமாத்மா ப்ரஹ்ம (பிரு. ௪. ரு. ௧௯)

"இந்த ஆன்மா பிரமம்" என்றற்றொடக்கத்த சுருதியிற் பிரமமே ஜீவான்மா எனின்,

(உத்தரம்) கூறுவாராயினர்.

தத்த்வமஸி (சாந். ௬. ௮. ௭)

"அது நீயாகின்றனை"

அயமாத்மா ப்ரஹ்ம (பிரு. ௪. ரு. ௧௯)

"இந்த ஆன்மா பிரமம்" என்னுஞ் சுருதிகள் வியாபக வியாப்பியபாவமா யிருத்தலின், அவ்விரண்டுக்கும் அநன்னியத்துவம் கூறின. பின்னும்,

ஸ்ரஹூதாரா ஸ்ரஹூதாஸா ஸ்ரஹெஹ ஜெ கிதவாஃ (அதர்வணம்)

"வலைஞர் பிரமம், தாசர்கள் பிரமம், துஷ்டர் பிரமம்" என்றற்றொடக்கத் தவற்றுற் பிரமத்தினின்று (அநன்னியத்துவத்தை) வேறுறுமையை அத்தியயனஞ் செய்கின்றனர். தீயினல் வியாபிக்கப்பட்ட காட்ட முதலியவற்றைத் தீயென்று கூறுவது போல, பிரமத்தின் அம்சமாயினும் ஆன்மா அதனல் (பிரமத்தினல்) வியாபிக்கப்பட்டமையான் அப்பிரம சப்தத்தினற் கூறப்படுவது யுக்தமாம். அங்ஙனமாயினும் அக்கினி காட்டம் இரண்டுக்கும் பேதமுண்டே. ஆகலின் ஆன்மா பிரமத்தின் அம்சமாய் அந்தச் சொரூபமுடையனுகப் பிரதிபாதிக்கப்படுகின்றுன். பிரமந்தானே அஞ்ஞானத்தினுற் சீவான்மாவாகின்றதெனக் கொளின், அது அநேக சுருதிகளுக்கு விரோதமாதன் முதலிய தோஷங்களுக்குட்படுதலை நீக்கக்கூடாமையாயிருக்கின்றது. (சஉ)

ஃஜுவணாசு (உ. ரு. சரு)

(உ௫கூ) மந்திரமுண்மையானும்.

வாடொசுவஹு விஸ்ரா ஹ-ூதாநி (தைத். ஆரணி. ரு. கஉ. ருச).

"அவருடைய பாதம் எல்லா உயிர்களுமாம்" என்னும் இம்மந்திரத்தினுனும் ஆன்மா பிரமத்தின் அம்சமே.

ஜாயாஞ்ச ஷ்ரக்ரு தி விஜ்யா நாயிநஞ்ச ஜெஹெஸ்ரஸ தஸ்யாவயவ ஹ-ூதெந வ்யாவ்தம ஸவ-திஜ ஜமகூ (சுவே. ச. க0)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக; இந்த உலகமெல்லாம் அவரது அவயவத்தினல் வியாபிக்கப்பட்டது" என்னுஞ் சுருதியானது மாயையைக் காரணம் என்றும், அந்த விசிட்டமுடையார் சிவபெருமான் என்றும், உலகமுழுமையும் அவரது அவயவம் என்றும் புலப்படுத்துகின்றது. ஆகலின், மாயையுடைய சிவபெருமானது அவயவ லேசமே (ஆன்மா). (சரு)

கவி ஸ்மயதெ (உ. ரு. சச)

(உகூ0) மேலும் ஸ்மிருதியிற் கூறப்படுகின்றது.

ஆஷ்டா தஸ்யாஷ்டீ ஜ-ூத்தீஃ ஶிவஸ்ய வரஜாதநஃ।
வ்யாபிகெதரஜ-ூத்தீநாம விஸ்வம தஸாஹ்வாதகம॥

"(பிருதிவி முதலிய ஏழு) இதர மூர்த்திகளையும் வியாபித்த ஆன்மாவானது சிவபிரானுரது எட்டாவது மூர்த்தியாகும்; ஆகலின் உலகம் சிவபிரானே" என்று ஸ்மிருதியிற் காணப்படும் இந்த வாக்கியத்தினுலும் ஆன்மா சிவனுரது ஏகதேசமூர்த்தியுமாம். (சச)

ப்ரகாசாதிவத் நைவம் பர: (௨. ௩. ௪௫)

(௨௬௧) ஒளி முதலிய போல, பிரமம் இங்ஙனமன்று.

ஆன்மா பிரமத்தின் அம்சமாயினும், சிவபெருமான் அதன் ரூபத்தையேனும் அதன் சுபாவத்தையேனுமுடையரல்லர். அவர் சர்வஞ்ஞத்துவாதி குணமுடையரே. எங்ஙனம்? ஒளி முதலிய போல. எவ்வாறு ஒளியுடைய மணிமுதலியவற்றுக்கு ஒளியானது விசேஷகுணமாயும் அம்சமாயுமிருக்கின்றதோ, அவ்வாறே ஆன்மாவைச் சரீரமாகக்கொண்டமையான் ஆன்ம விசிட்டமாகிய பிரமத்துக்கு அம்சமாயுள்ளது ஆன்மா. ஆதி சப்தத்தினால் விசேஷணத்துவத்தின் முக்கியவியற்கையாகிய சாதி குண முதலியன கிரகிக்கப்படுகின்றன. விசேஷணங்கள் விசேடியத்தின் ஏகதேசமாயிருத்தல் பற்றி அம்சமாயிருப்பினும்,

ய ஆத்மனி திஷ்டந் (மத்தியந்தினசாகை)

"எவர் ஆன்மாவில் இருக்கின்றாரோ" என்றற்றொடக்கத்த சுருதி கூறியவாறு, சொரூப பேதத்திற்கு விரோதம் எய்தாது. (௪௫)

ஸ்மரந்தி ச (௨. ௩. ௪௬)

(௨௬௨) (அங்ஙனம்) ஸ்மிருதிகளும் கூறுகின்றன.

தஸ்யைதஸ்ய தேவஸ்ய சரீரம் சராசரம்। ததேதந்ந ஜாநந்தி பசவ: பாசகௌரவாத் (வாயு. உத். ௬: ௧)

"இந்தச் சரம் அசரமாகிய உலகமெல்லாம் தேவாதி தேவருடைய சரீரம்; இவ்வுண்மையைப் பசுக்கள் பாசமிகுதியினால் அறியமாட்டா" என்னும் ஸ்மிருதியினால் ஆன்மா பிரமத்தின் அம்சமே. பிரமம் அதை அம்சமாயுடைமையின் சொரூபபேதமும் சித்திக்கின்றது. (௪௬)

அநுஜ்ஞா பரிஹாரௌ தேஹஸம்பந்தாஜ்ஜ்யோதிராதிவத்।

(௨. ௩. ௪௭)

(௨௬௩) சோதி முதலியவற்றிற் போலச் சரீரசம்பந்த முடைமைபற்றியே விதியும் விலக்கும் (போந்தன).

சமஸ்த ஆன்மாக்களும் பிரமாம்சமாயிருப்பினும் வேதாதிகளிலே சிலர் வேதங்களைப் படிக்கலாம் என்றும், சிலர் படிக்கப்படாதென்றும் கூறப்பட்டதே எனின்,

(உத்தரம்) வைதிகருடைய கிரகத்தினும் மயானத்தினும் சம்பந்தமுடைமைபற்றி அக்கினி முதலியவற்றுக்குப் பேதங் கூறப்பட்டாற் போல, பிராமணர் முதலாயினோருடைய சரீரசம்பந்தம்பற்றி (அப்பேதம்) போந்ததென்று கோடலே பொருத்தம்; அது பற்றி விரோதம் இல்லை. (௪௭)

ஙஸஙெதாநவ்யதிரெகஃ (உ. ௩. ௪௮)

(உகூ௪) (ஆன்மாக்களுக்குச்) சம்பந்தமின்மையின் வித்தியாசமில்லை.

(சூத்திரத்தில்) அசந்ததி என்றது அவ்வியாப்தி. சரீரந்தோறும் வெவ்வேறுயிருத்தலின் ஆங்காங்கே அணுத்துவமாய் வரையறுக்கப்பட்டிருத்தலானும், வியாப்தியின்மையானும், நான் பருத்தவன், நான் மெலிந்தவன், நான் சுகி, நான் துக்கி, நான் பிராம்மணன், நான் க்ஷத்திரியன் என்னும் தேகாபிமானமுடையார்க்கு ஞானம் இன்ப முதலியவெல்லாம் ஓர்விதமாயிருக்கின்றன. இதனாற் பெறப்பட்டது யாதோவெனின், தேகாபிமானிகளுக்கு வியாப்தியின்மை சமானமாதலின் வரையறுக்கப்பட்ட சாம்சாரிக ஞானசுக முதலியன ஒரே பிரகாரமாய்க் கலவாமலிருப்ப, பரப்பிரமஞான விசேஷத்தினால் தேகாபிமானம் நீங்கினவர்களாய், தங்கள் மகாவியாபகத்தினாற் பராஹம்பாவனையுடையவர்களாய முக்தான்மாக்களின் சுவாபாவிகமாகிய ஞானசுகாதிகள் நிரதிசயமாயும் நித்தியமாயும் இருத்தலின் சாம்சாரிக ஞானமுதலியவற்றினின்று இவை வேறுபடுமென்பது சித்தித்தது. (௪௮)

அஞ்ஞானத்தினாலும் உபாதியினாலும் *பிரமமே கட்டுண்டது என மேலே கூறப்பட்டதில் அவ்வியவஸ்தை நேருமென்று சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஆஹாஸ வைவ ச (உ. ௩. ௪௯)

(உகூ௫) போலி நியாயமுமே.

சத்தியமாயாவது மித்தையாயாவது உபாதியினாற் கட்டுண்ட பிரமமே சீவான்மாவாக எய்திற்று என்னும் இருபக்ஷத்தினும் ஏற்படும் நியாயங்கள் போலிகளே. (௪௯)

அங்ஙனமே,

---

* சாங்கியமத நிராகரணமுதற் பாஞ்சராத்திரமத நிராகரணமிறுதியாகப் பிரதிபாதிக்கப்பட்ட இரண்டாம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்தில் மாயாவாதந்தையும் ஒருங்குகணித்து நிராகரணஞ் செய்யாது ஈண்டு அதனை வேறாக வைத்து மறுக்கப்போந்தமை மலைவாம் பிற எனின், ஆகாது; நித்தியமாயும் அழியாததாயுமுள்ள ஆன்மாவைப் பிரமமென்றேனும் மித்தையென்றேனும் மாயாவாதிகள் தங்கள் பிரமசூத்திரபாஷ்யங்களினும் பிரமசூத்திரத்துக்கு ஆதாரமாகிய ஈசகேநாதி முக்கிய உபநிடதபாஷ்யங்களினும் வழுவுறக் கூறுகின்றமையின், ஆன்மலக்கணம் விரித்துக் கூறப்போந்த இரண்டாம் அத்தியாயத்து மூன்றாம் பாதத்துப் பத்தொன்பதாஞ் சூத்திரமுதல் ஐம்பத்திரண்டாஞ் சூத்திரமிறுதியாகப் போந்த சூத்திரங்களிலே அவர் கொள்கையை நிராகரித்தலே நெறியாமெனக்கொண்டு சூத்திரகாரராலும் சைவபாடியகாரராலும் அது வேறாக வைத்து நிராகரணஞ்செய்யப்பட்டமையின் நேர்ந்த இழுக்கு யாதுமின்றாமாதலின். இந்த அம்சாதிகரண (உ. ௩. ௪௨-ஆஞ்) சூத்திரபாஷ்யத்தினும் மாயாவாதம் கண்டிக்கப்பட்டமை காண்க

ஊஜ்ரஷ்டாகியமாஜ (உ. ங. ௫0)

(உசுசு) அதிர்ட்டத்திஞல் நியமமில்லாமையான்.

ஆன்மாக்கள் சத்தியமித்தியோபாதிகளிஞலே தோற்றுமாயின், பிரமத்துக்கே அஞ்ஞானமும் உபாதியுமாம். ஆகலின் அவர்களாற் செய்யப்படும் கன்மபயன்களிஞலும் நியமமில்லை. (௫0)

மேலும்,

ஊஹிஸ0ய்ாதிஷ்வபிசெவவழ (உ. ங. ௫க)

(உசுஎ) சங்கற்பமுதலியவற்றினும் இங்ஙனமே.

அதிர்ஷ்டங்களுக்குக் காரணமாகிய சங்கற்பமுதலியவற்றினும் இங்ஙனமே நியமமில்லையாம். (௫க)

வு்ஷெஶாதிதி செஞாகஹ-ர்ாவாஜ (உ. ங. ௫உ)

(உசுஅ) இடத்திஞலோ எனின் அன்ரும்; ஒடுங்குதலான்.

(ஆக்ஷேபம்) உபாதிசம்பந்தம்பற்றிப் பிரமத்துக்கு இடபேதம் வருதலால் வியவஸ்தை உண்டாமே யெனின்,

(உத்தரம்) அன்று; உபாதிநீங்கியபோது எல்லாவிடங்களும் பிரமத்தில் ஒடுக்குகின்றமையான். ஆகலின், சத்தியமித்தியமாயுள்ள உபாதியிஞல் வரையறுப்புண்ட பிரமமானது சீவான்மாவாம் என்னும் இருபக்ஷத்திலும் நியமம் இல்லை. அதுகொண்டு பிரமத்தின் அம்சமாயுள்ள சீவான்மாவானது அதற்கு (பிரமத்துக்கு) விசேஷணமாயிருத்தலேயே முக்கியசுபாவமாயுடையதென்று கோடல் யுக்தமே. (௫உ)

---

# இரண்டாம் அத்தியாயத்து
# நான்காம்பாதம்.

---

## (க) பிராணோற்பத்தியதிகரணம்.

---

தயா ப்ராணா꞉ (உ. ச. க)

(உகூக) அவ்வாறு பிராணன்கள்.

மேலே பூதங்கள் பிரமத்தினின்று உற்பத்தியாகின்றன என்றும், ஆன்மா நித்தியம் என்றும் நிரூபிக்கப்பட்டது.

ஈண்டுப் பூதங்கள் போல, இந்திரியங்களும் பிரமத்தினின்று உற்பத்தியுடையனவா? என்றும், அவை ஆன்மாக்களைப் போல நித்தியமா? என்றும் விசாரிக்கப்படுகின்றது. நித்தியமாதலில் ஆன்மா எவ்வாறு பிறப்பதில்லையோ, அவ்வாறே இந்திரியங்களும் பிறப்பதில்லை; ஆன்மாவைப் போல இவைகளும் நித்தியமாம் என்று சுருதியிலுண்மையான். அங்ஙனம்,

அஸத்வா இத³மக்³ர ஆஸீத்தத³ஹு꞉ கிம் தத³ஸதா³ஸீதி³த்யருஷயோ வாவ தே(அ)க்³ரே(அ)ஸதா³ஸீத் தத³ஹு꞉ கே தே ருஷய இதி ப்ராணா வா ருஷய꞉।

(சதபதப்பிராம்மணம். சு. க.க)

"அசத்தே முதற்கண் இருந்தது; அசத்து என்றது எது என்று கேட்க, அது இருடிகள் என்றார்கள்; இருடிகள் யார் என்று கேட்க, அவை பிராணன்கள் என்றார்கள்" என்னும் சுருதியினாலே பிரளய காலத்திற் பிராணன்களின் இருப்புக் கூறப்படுகின்றது. ஆகலின் பிராணன்கள் பிரமத்தினின்று உற்பத்தியாகவில்லை எனின், (க)

(சித்தாந்தம்) கூறுதும்.

கௌ³ண்யஸம்ப⁴வாத் தத்ப்ராக் ச்ருதேஶ்ச (உ. ச. உ)

(உஎo) அது கவுணம்; அசம்பவமாதலானும், அது முதற்கண் இருந்ததெனச் சுருதி கூறுதலானும்.

பிராணன்கள் சிருஷ்டிக்குமுன்னே இருந்திலவாக,

ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத் (சாந். சு. உ. க)

"சத்துத்தானே முதற்கண் இருந்தது" எனச் சிவபெருமானையுற்றே சுருதியுளதாகலின், இருடி என்னும் மொழியும் பிராணன் என்னும் மொழியும் சிவபெருமான் மேலனவே. அவர் அநேகரல்லாமையாற் பன்மையிற் கூறி

யது கவுணம். ஆகலின் சிருட்டிக்கு முன்னர்ப் பிரமமிருந்ததன்றி, இந்திரியங்கள் இருந்தன அன்று. (உ)

சூத்திரகாரர் மற்றோர் யுக்தி கூறுகின்றனர்.

தத்பூர்வகத்வாத்வாச: (உ. சு. ங)

(உஎக) அதற்கு முன்னே வாக்கிருந்தமையான்.

சிவபெருமானுடைய சிருட்டிக்குப் பின்னே எல்லாம் நாமரூபமடைந்தன; சிருட்டிக்குமுன்னிருந்த பிராணசப்தம் இந்திரியங்களைக் குறிக்காது. ஆகலின், பிரமந்தான் முன்னிருந்தது. (ங)

(உ) சப்தகத்தியதிகரணம்.

ஸப்தகதேர் விசேஷிதத்வாச்ச (உ. சு. சு)

(உஎஉ) ஏழே நடைபெற்று விசேடிக்கப்படலானும்.

பிரமத்தின் காரியமாகச் சித்தித்த புலன்கள் எத்தனை? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஏழு. எதனுல்?

யதா பஞ்சாவதிஷ்டந்தே ஜ்ஞாநாநி மநஸா ஸஹ புத்திஶ்ச ந விசேஷ்டதே தாமாஹு: பரமாம் கதிம் (கட. சு. கo)

"ஐம்புலன்களும், மனசோடியைந்து புத்தியும் சலியாதிருக்குங்கால் அது உயர்ந்த கதி என்று கூறப்படும்" என்னுஞ் சுருதியில் ஏழென்று அறியப்படலானும்,

ஸப்த ப்ராணா: ப்ரபவந்தி (முண். உ. க. அ)

"ஏழு பிராணன்கள் உண்டாகின்றன" என்னுஞ் சுருதியில் ஏழு என்பது விசேடித்துக் கூறப்பட்டமையானுமாம் எனின், (சு)

சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஹஸ்தாதயஸ்து ஸ்திதேऽதோ நைவம் (உ. சு. ரு)

(உஎங) (ஆன்மா) சரீரத்திருக்கும்போது கை முதலாயின உண்டு; ஆகலின், அஃதங்ஙனமன்று.

இந்திரியங்கள் ஏழுமாத்திரமன்று; ஆன்மா தேகத்துள் இருக்கும் வரையும் கைமுதலாயினவும் உபகரணங்களாயிருத்தலிற் பேதமில்லாமை பற்றி, அவைகளும் இந்திரியங்கள்.

தஶேமே புருஷே ப்ராணா ஆத்மைகாதஶ: (பிரு. ரு. கூ. சு)

"புருஷனிடத்திலே இந்தப் பத்தும் பிராணன்கள் (இந்திரியங்கள்); மனசு (ஆன்மா) பதினொன்றுவது" என்று சுருதியும்,

ஊஜியாணி உமெலகஞ (பகவற்கீதை. கங. ரு)

"இந்திரியங்கள் பத்தும் ஒன்றுமாம்" என்று ஸ்மிருதியுங் கூறுகின்றமையின், இந்திரியங்கள் பதினொன்றும். புத்திமுதலியனவும் வேறு இந்திரியங்கள் அன்று; பின் அவை மனோவிருத்தி பேதங்களே. எழு என்று எண்ணிக் கூறினமையும் விசேடித்துக் கூறினமையும் பிரதானமாதல் பற்றியே. ஆகலின், இந்திரியங்கள் எழு அன்று; பதினொன்றேயாம். (ரு)

## (கூ) பிராணாணுத்துவாதிகரணம்.

---

அணவஸ்ரு (உ. ச. ரு)

(உஎசு) (அவைகள்) அணுக்களுமாம்.

அவ்விந்திரியங்கள் வியாபகமுடையனவா? இன்றேல் அணுத்துவமுடையனவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவை வியாபகமுடையன; கண் முதலிய இந்திரியம் தூரத்துள்ள பொருள்களைக் கிரகணம்பண்ணுஞ் சாமர்த்தியமுண்மையால் எனின்,

(உத்தரம்) அவை அணுக்கள் எனப்படும்;

வ்ராணமுக்ராமந்தம் ஸவே வ்ராணா அநுக்ராமந்தி।

(பிரு. ரு. ச. உ)

"பிராணன் புறப்படுங்கால் எல்லாப் பிராணன்களும் கூடப் புறப்படுகின்றன" எனச் சுருதி கூறுகின்றமையான், அவைகள் வியாபகமுடையன அன்று. வியாபகமுடையவாயின் அவை புறப்பட நேராது. கண்முதலியவற்றுக்கு வியாபகத்தினாலன்றி ஒளி ரூபத்தினாலே தூரத்துள்ள பொருள்களைக் கவருந் திறமையும், சீக்கிரகதியினால் அணுத்துவமும் சித்திக்கின்றன. ஆகலின், இந்திரியங்கள் அணுக்களே. (ரு)

## (ச) சிரைஷ்டியாதிகரணம்.

---

ஶ்ரேஷ்டஶ்ரு (உ. ச. எ)

(உஎரு) சிரேட்டமும்.

வ்ராணமுக்ராமந்தம் ஸவே வ்ராணா அநுக்ராமந்தி।

(பிரு. ரு. ச. உ)

"பிராணன் போகும்போது எல்லாப் பிராணன்களும் கூடப் புறப்படுகின்றன" என்னுஞ் சுருதியினுற் பிராணன்கள் அனைத்தினும் விசேஷமாகக் கேட்கப்படுகின்ற பஞ்சவிருத்தியையுடைய பிராணவாயு பிரமத்திலிருந்து உற்பத்தியாகின்றதா? இல்லையா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிராணவாயு பிறப்பதில்லை.

ஆநீத³வாதம் (தைத். பிராம். உ. அ. கூ. எச)

"அது காற்றின்றிச் சுவாசிக்கும்" என்னும் சூக்தத்திலே சிருட்டிக்கு முன்னும் பிராணனுடைய இயக்கம் கேட்கப்படுகின்றமையான் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிராணவாயுவும் பிறக்கின்றது. ஆநீத் (சுவாசித்தது) என்னும் மொழி பிராணவாயு வியாபாரத்தைக் கூறப்போந்ததன்று; அவாதம் (காற்றில்லை) என்னும் மொழி பிராணவியாபாரத்தை நிஷேதித்தலான். பின் பிரமத்தினிருப்பையே கூறுகின்றது. ஆகலின், பிராணன் அநாதிக்கண்ணதன்று.

(ஆக்ஷேபம்) பிராணவாயு உற்பத்தியுடையதாயிருப்பினும்

ப்ராணாத்³யா வாயவ꞉ பஞ்ச (சாங்கியகாரிகை. உகூ)

"பிராணன் முதலிய ஐந்து வாயுக்கள்" என்று வேறு தந்திரத்திற் கூறியவாறு, அது ஐம்பொறிகளின் விருத்திக்கு வேறுபாடற்றதாயாவது

ய꞉ ப்ராண꞉ ஸ வாயு꞉ (பிரு. ரு. க. ரு)

"எது பிராணனோ அது வாயு" எனச் சுருதி கூறியவாறு, பூதவாயுவுக்கு வேறுபாடற்றதாயாவது அன்று எனின், (எ)

சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ந வாயு꞉ க்ரியே ப்ருத²கு³பதே³ஶாத் (உ. ச. அ)

**(உஎகூ) அது வாயுவும் அன்று; (இந்திரிய) விருத்தியுமன்று, வேறாகக் கூறப்படலான்.**

பஞ்சவிருத்தியுள்ள இந்தப் பிராணன் வாயுவுமன்று, இந்திரியவிருத்தியுமன்று;

ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந꞉ ஸர்வேந்த்³ரியாணி ச க²ம் வாயு꞉ ஜ்யோதிராப꞉ ப்ருதி²வீ விஶ்வஸ்ய தா⁴ரிணீ (முண். உ. க. ௩)

"பிராணன், மனம், சர்வேந்திரியம், ஆகாயம், வாயு, தேயு, அப்பு அனைத்தையுந் தாங்கும் பிருதிவி" என்னுஞ் சுருதியில் அது வேறாகக் கூறப்படலான். ஆகலின், வாயுவுக்கும் இந்திரியவிருத்திக்கும் வேறாயது பிராணனே. (அ)

வாயுவினின்று வேருயினும் அது மற்றோர் பூதமன்றென்று சூத்திரகாரர் கூறுவாராயினர்.

அக்ஷுராதிவத்து தத்ஸஹ ஶிஷ்ட்யாதிப்ய꞉ (உ. ச. ௯)

**(௨௭௭) கண் முதலியன போல அது அவற்றோடு கூறப்படன் முதலிய காரணங்களால்.**

வாயுவினின்று வேருயினும் அக்கினி முதலிய போல அது வேறோர் பூதமன்று; வாயுவே. அது சிவபெருமானைத் தனக்கு ஆதாரமாய்க்கொண்டு தேகத்தைத் தாங்கும் யோக்கியதையுடையதாகின்றது;

ஸதர்த்தா ஸந்த்ரியமாணோ பிபர்த்தி। ஏகோ தேவோ பஹுதா நிவிஷ்ட꞉ (தைத். ஆரணி. ௯. ௧௪. ௪௨)

"தாங்குபவனுகிய வாயு தாங்கப்படுபவனுமாயிருந்து தாங்குகின்றான்; ஒரே தேவர் பலரூபமாயிருக்கின்றார்"

ஏகோ3 ஸி பஹூநநு ப்ரவிஷ்ட꞉ (தைத். ஆரணி. ௯. ௧௪. ௪௪)

"அநேக சரீரங்களிற் பிரவேசித்து ஒன்றாயிருக்கின்றனை"

ப்ராணாநாம் க்3ரந்தி2ரஸி ருத்3ரோ மா விஶாந்தக꞉।

(தைத். ஆரணி. ௧௦. ௭௪. ௯௫)

"உருத்திரரே! நீவிர் பிராணன்களுக்கு ஓர் கிரந்தியாயிருக்கின்றீர், அழிக்கிறவராகப் பிரவேசியாதிரும்" என்றற்றொடக்கத்த சுருதிகளுண்மையான். மேலும், இது கண் முதலிய போல, ஆன்மாவுக்கு உபகரணமாயிற்று; பிராணசம்வாத முதலியவற்றிலே கண் முதலியவற்றோடு கூடக் கூறப்படுதலானும், அக்கண் முதலியபோல ஆன்மாவுக்கு உபகாரமாகி, அவ்விந்திரியங்களுள்ளே முக்கியமாயிருத்தன் முதலியவற்றானுமாம். (௯)

அகரணத்வாச்ச ந தோ3ஷஸ்ததா2 ஹி த3ர்ஶயதி (உ. ச. ௧௦)

**(௨௭௮) கரணமில்லாமையானும் தோஷமில்லை; அங்ஙனமே சுருதியும் கூறுகின்றது.**

(சூத்திரத்தில்) அகரணம் என்பது கிரியையின்மையின் மேற்று. பிராணன் ஆன்மாவுக்கு உபகாரமாகிய எத்தொழிலையும் செய்யாமைபற்றித் தோஷமில்லை. தேகேந்திரியங்கள் சிதிலமாகாமைக்குக் காரணம் வாயு என்று சுருதியே கூறுகின்றது; பிராணசம்வாதத்திலே,

யஸ்மிந்நுத்க்ராந்த இத3ம் ஶரீரம் பாபிஷ்ட2தரமிவ த்3ருஶ்யேத ஸ வ꞉ ஶ்ரேஷ்ட2꞉ (சாந். ரு. ௧. ௭)

"எந்தப் பிராணன் உற்கிரமணஞ் செய்புங்கால் இந்தச் சரீரமானது அதிபாவமுடைத்தாகத் தோற்றுகின்றதோ, அந்தப் பிராணன் உங்களுள்ளே சிரேட்டம்" என்று பிரஜாபதி கூறிய பின்னர், வாக்கு முதலியன ஒவ்வொன்றும் உற்கிரமணஞ் செய்தவிடத்தும் தேகத்துக்கும் இந்திரியங்களுக்கும் சிதிலமில்லாமையைக் காட்டி, பிராணன் உற்கிரமணமாகும்போதே அச்சரீரத்துக்கும் இந்திரியத்துக்கும் சிதிலம் கூறப்படலான். (க0)

பஞ்சவ்ருத்தி ர்மநோவத்வ்யபதிஶ்யதே (உ. ச. கக)

**(உஎகூ) அது மனம் போலப் பஞ்சவிருத்தியையுடையதாகக் கூறப்படுகின்றது.**

தொழில்வேறுபாடுபற்றி மனமொன்றே காமமுதலியவற்றுற் கூறபடுவது போல, பிராணன் ஒன்றே ஐவகைத் தொழில் வேறுபாடுபற்றிப் பிராணுதி பெயரைப் பெறுகின்றது. ஆகலின், பிராணன் ஒன்றுதானே வாயுவுக்கும் இந்திரியவிருத்திக்கும் வேருகி ஆன்மோபகாரமாயுள்ளதெனச் சித்தித்தது. (கக)

## (ரு) பிராணுணுத்துவாதிகரணம்.

---

அணுஶ்ச (உ. ச. கஉ)

**(உஅ0) அணுவு (மாகலின்).**

பஞ்ச விருத்தியையுடைய இந்தப் பிராணன் இந்திரியங்கள் போல அணுவா? வியாபகமுடையதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது அணுவன்று.

ஸம꞉ ப்லுஷிணா ஸமோ மஶகேந ஸமோ நாகேந ஸம ஏபி꞉ த்ரிபிர்லோகை꞉ ஸமோঽநேந ஸர்வேண (பிரு. ரு. ரு. உஉ)

ப்ராணே ஸர்வம் ப்ரதிஷ்டிதம் (பிர. உ. சு)

ஸர்வமிதம் ப்ராணேநாவ்ருதம்।

"அது புழுவுக்குச் சமம், கொசுவுக்குச் சமம், யானைக்குச் சமம், மூவுலகத்துக்கும் சமம், அது அண்டமனைத்துக்கும் சமம், பிராணனில் அனைத்தும் இருத்தப்பட்டன; ஈதெல்லாம்பிராணனல் ஆவரிக்கப்பட்டன" என்னுஞ் சுருதியினுற் பிராணன் சர்வாதாரமாய்ச் சர்வவியாபகமாயிருக்கின்றதெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிராணவாயு அணுவே;

ப்ராணஸ்நோத்க்ராமந்தம் (பிரு. சு. ச. உ)

"பிராணன் புறப்படுகின்றது" என அதின் கதி கேட்கப்படலான். ஆதிதெய்விக இரணியகருப்பனுடைய சமட்டிரூபப் பிராணன் வியாபகமாயினும் வியஷ்டிரூபப் பிராணன் அங்ஙனமின்று; இது விரோதமில்லை. ஆகலின், பஞ்சவிருத்தியையுடைய பிராணன் அணுவாம். (கஉ)

## (கூ) ஜ்யோதிராத்தியதிஷ்டாநாதிகரணம்.

---

ஜ்யோதிராத்யதிஷ்டாநஂ து ததாமநநாத் ப்ராணவதா ஶப்தாத்। (உ. ச. கரு)

(உஅக) ஆன்மாவோடு சோதி முதலியவற்றுக்குக் (கண் முதலியவற்றில்) அதிட்டானம் உண்டு, (சிவபெருமான்) சங்கற்பத்தினால்; அங்ஙனமே சுருதி கூறுகின்றமையான்.

ஈண்டு,

ஆதித்யஶ்சக்ஷுர்பூத்வாக்ஷிணீ ப்ராவிஶத் (ஐத. உ. ச)

"ஆதித்தியன் கண்ணாகிக் கண்களைப் பிரவேசித்தான்" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் கண்முதலியவற்றுக்கு ஆதித்தியன் முதலியன அதிஷ்டானம் எனக் கேட்கப்படுகின்றது.

ஸ யதா ஏவைஷ ஏதாந் ப்ராணாந் க்ருஹீத்வா ஸ்வே ஶரீரே யதா காமஂ பரிவர்த்ததே (பிரு. ச. க. கஅ)

"இவ்வாறே இந்த ஆன்மா இந்தப் பிராணன்களைக் கிரகித்துக்கொண்டு தன் சரீரத்திலே இஷ்டமாக அலைந்து திரிகின்றது" என்னுஞ் சுருதியினால் ஆன்மாவும் ரூபமுதலியவற்றைக் கிரகிக்கும்பொருட்டு அவைகளை அதிஷ்டிப்பதாகக் கூறப்படுகின்றது.

ஆன்மாவோடு கூட ஆதித்தியன் முதலியன இந்திரியங்களை அதிஷ்டிப்பது சிவபெருமான் வசத்ததாயோ? சுவதந்திரமாகவோ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ஆதித்யஶ்சக்ஷுர்பூத்வாக்ஷிணீ ப்ராவிஶத் (ஐத. உ. ச)

"ஆதித்தியன் கண்ணாகிக் கண்களைப் பிரவேசித்தான்" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் சுவாதந்திரியம் கேட்கப்படுதலின், ஆதித்தியாதி அதிஷ்டானம் பரமேசுவரர் வயத்ததன்றெனின்,

(சித்தாந்தம்) இந்திரியமுதலியவற்றிற்கு ஆதித்தியன் முதலியவற்றின் அதிஷ்டானம் சிவபெருமான் வயத்தது, எதனால்?

ய ஆதித்யமந்தரோ யமயதி (பிரு. ௩. ௭. ௯)
ய ஆத்மாநமந்தரோ யமயதி (மத்தியந்தினசாகை)

"உள்ளேயிருந்து ஆதித்தியனை இயக்குகின்றனர்", "உள்ளேயிருந்து ஆன்மாவை இயக்குகின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் சிவபெருமான் சங்கற்பபூருவமாக எல்லாம் பிரவிருத்திக்கின்றன என்று கேட்கப்படலான். ஆகலின், இந்திரியங்களுக்கு மேலாகிய சூரியாதிகளுடையவும் ஆன்மாவுடையவும் அதிஷ்டானம் சிவபெருமான் வயத்ததே. (க௩)

தஸ்ய ச நித்யத்வாத் (உ. ௪. க௪)

(௨௮௨) அதுவும் நித்தியமாயிருத்தலின்.

அனைத்தையும் சிவபெருமான் இயக்குதல் நித்தியமே. இதனாலும் அவைகளின் அதிஷ்டானம் சிவபெருமான் சங்கற்ப வயத்ததே. (க௪)

## (எ) இந்திரியாதிகரணம்.

---

த இந்த்ரியாணி தத்வ்யபதேஶாதந்யத்ர ஶ்ரேஷ்டாத் (உ. ௪. க௫)

(௨௮௩) சிரேஷ்டமாயதொன்றைத் தவிர்த்து மற்றவைகள் இந்திரியங்களே; அங்ஙனம் கூறப்படலான்.

ஈண்டு மேலே கூறப்பட்ட வாக்காதி இந்திரியங்கள் பிராணவிருத்திகளினின்று பின்னமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவை முக்கியபிராணவிருத்திகளேயாம்.

த ஏத ஏதஸ்யைவ ஸர்வே ரூபமபவந் (பிரு. ௩. ௫. ௨௧)

"அவையெல்லாம் இதனுடைய ரூபமாயின" என்னும் சுருதியால் அனைத்தும் பிராணசொரூபம் என்று கூறப்படுகின்றமையானும், வாக்காதிகள் வாளாவிருத்தலாகிய மரணகாலத்து உயிர் போயது எனச் சாமானியமாக வியவகரிக்கப்படுதலினானும், அதுகொண்டு இந்திரியங்கள் பிராணனுக்கு வேறன்றாமெனின்,

(சித்தாந்தம்) சொல்லுதும். முக்கியபிராணனினும் வேறாயுள்ளனவே இந்திரியங்கள். சிரேஷ்டப் பிராணனினும் வேறாயுள்ளன எந்தப் பிராணன்களோ அவை இந்திரியங்களாம்;

இந்த்ரியாணி தஶைகம் ச (பகவற்கீதை. க௩. ௫)

"இந்திரியங்கள் பத்தும் ஒன்றும்" என்றற்றொடக்கத்தவற்றிற் கண்முதலாயினவே இந்திரியங்கள் எனக் கூறப்படலான். (க௫)

ஹேஜ ஶ்ருதே வெலக்ஷண்யாச்ச (உ. ச. கசு)

(உஅச) பேதசுருதியுண்மையானும் விலக்ஷணமுண்மையானும்.

ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணி ச।

(முண். உ. க. ௩)

இதினின்று பிறக்கின்றன பிராணன், மனசு, எல்லா இந்திரியங்களும்" என்னுஞ் சுருதி பிராணோற்பத்தியையும் இந்திரியோற்பத்தியையும் தனித் தனி வேறாகக் கூறுகின்றது. இந்திரியமுதலிய ஓய்ந்திருந்தவிடத்தும், பிராண விருத்தி ஓயாதுளதாகிய விலக்ஷணமும் காணப்படுகின்றது. அதனாலும் பிராணவிருத்தியினின்று இந்திரியங்கள் வேறு. (கசு)

## (அ) சம்ஞாமூர்த்திகிலுப்தியதிகரணம்.

---

ஸம்ஜ்ஞாமூர்த்திக்லுப்திஸ்து த்ரிவ்ருத்குர்வத உபதேஶாத்।

(உ. ச. கஎ)

(உஅரு) நாமரூபங்களின் சிருட்டியானது மூவிதமாகச் செய்யும் அவர்க்கே உரித்து; அங்ஙனம் உபதேசிக்கப்படலான்.

மேலே தத்தம் அதிதேவதைகளாகிய சதாசிவர் முதலாயினரோடு ஆகாசாதி பூதங்கள் சிவபெருமானிடத்தினின்று உதித்தன என்று கூறப் பட்டது. அவைகள் இங்ஙனம் பிறந்தபோது தேவர்களுடைய நாமரூப முதலியவற்றின் சிருட்டிமுதற்காரணமாகிய அவரிடத்திருந்து பிறந்ததா? இன்றேல் மற்றொன்றினின்று பிறந்ததா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

தத்தேஜ ஐக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய (சாங். சு. உ. ௩)

"அந்த ஒளி நான் அநேகமாகப் பிறப்பேன் என்று சங்கற்பித்தது"

தத்போ ऽஸ்ருஜத (சாங். சு. உ. ௩)

"அது ஜலத்தைச் சிருட்டித்தது" என்னும் சுருதிப் பிரகாரம் தேஜோபி மானியாகிய உருத்திரர் சலத்தைச் சிருட்டித்து, அதிலே (தமது) வீரியத்தை விடுகின்றனர். இதிலிருந்து சத்துவகுணத்தினராகிய விஷ்ணு உதிக்கின்றனர்.

ஆபோ நாரா நரோ ருத்ர:।

"அப்புக்கள் நாரம்;" "நரர் உருத்திரர்" எனச் சுருதி கூறுதலின், உருத் திரரினின்று உதித்த அப்புதத்துவத்தைப் பிறப்பிடமாகக்கொண்டமையான் விஷ்ணு நாராயணர் எனப்படுவர்.

தா ஆப ஐக்ஷந்த | தா அந்நமஸ்ருஜந்த (சாந். ௬. ௨. ௪)

"அந்த அப்புக்கள் சங்கற்பித்தன ; அவை அன்னத்தை ஆக்கின" என்று சுருதி கூறுமாறு, அதற்கு அபிமானியாகிய நாராயணர் அன்னம் என்னும் பிருதிவியை உண்டாக்குகின்றனர். பிருதிவிதத்துவரூப அண்டத்திலிருந்து இரணியகருப்பர் எழுகின்றார். அவ்வாறே,

அண்டம் ஹிரண்மயம் ருத்ரஸ்ய வீர்யாத் ஸமுத்ரமத்யே ப்ரதமம் பபூவ।
ப்ரதமம் ஸம்பபூவ தத்ர ப்ரஹ்மேவ விஷ்ணுர் ஜஜ்ஞே ஜ்ஞானதேஜா:॥

"உருத்திரர் வீரியத்தினின்று சுவர்ணமயமான அண்டமானது சமுத்திர மத்தியில் முதற்கண் உண்டாயிற்று ; அதில் முதற்கண் விஷ்ணுவானவர் பிரமாவைப் போல ஞானத்தோடு பிறந்தனர்" என்வும்,

அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்।
ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்।
தஸ்மிந் ஜஜ்ஞே ஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோகபிதாமஹ:।
ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:।
அயநம் தஸ்ய தா யஸ்மாத் தேந நாராயண: ஸ்ம்ருத:।
நாராயண: பரோऽவ்யக்தாதண்டமவ்யக்தஸம்பவம்।
அண்டஸ்யாந்த இமே லோகா: ஸப்தத்வீபா ச மேதிநீ॥

(மனுஸ்மிருதி. ௧. ௮—௧௧)

" அவர் (ருத்திரர்) முதற்கண்ணே அப்புவைச் சிருட்டித்து அதிற்றமது வீரியத்தை உகுத்தார் ; அந்த வீரியம் ஆயிரம் ஆதித்தியருக்கு ஒப்பாய சுவர்ண அண்டமாயிற்று. அந்த முட்டையிலே சர்வலோகபிதாமகராகிய பிரமா தாமே பிறந்தார். அப்புக்கள் நர (உருத்திர) ரிடத்தினின்று உதித்தமையால், நாரம் எனப்படும். அது பிறப்பிடமாதலினால் அவர் நாராயணர் எனப்படுகின்றார். அவ்வியக்தத்துக்கு மேலானவர் நாராயணர் ; அந்த அவ்வியக்தத்தினின்று அண்டத்தின் உற்பத்தி ; இவ்வுலகங்களும் சப்ததீவுகளோடு கூடிய பூமியும் அண்டத்துக்குள்ளேயாம்" எனவும் மனுஸ்மிருதி கூறுகின்றது ;

நரஸஞ்ஜ்ஞஸ்ய தேவஸ்ய நரேணோத்பத்திதஃ ப்ரஜாயதே।
தேந க்ஷிப்தம் நரேவீர்யம் பரமேஷ்டிநா।
ததண்டமபவத்வீர்யம் ஸஹஸ்ரகிரணப்ரபம்।
விஷ்ணுஸ்தத்ராவிரப்யக்ஷாந்நரே ஜகேஸ்து வேதவாந்।
நந்நாராயணாவ்யாநேந்து பிரயோஜாத்ருவாநவேஸ।

ஐஶாநாஹ்வஸ்ய தேவஸ்ய மூர்த்திராஸீத் ப்ருதக் ஸுதா।
தத்வீர்யமப்ஸு முக்தம் ச அண்டமாஸீத்ஸஹஸ்ரஶ:।
ஸ்ருஷ்ட்வா ப்ரவிஷ்டோ விஷ்ணுர்வை மச்சக்த்யா து ததா விபு:।
நாம தத்ர வை லேபே நாராயணோ மதாஜ்ஞயா।
ஆபோ நாரா இதி ப்ரோக்தா ரஸோ நாரம் இதீர்யதே॥

"உருத்திரர் எனப்படும் தேவருடைய ரூபத்தில் மூர்த்தி உளதாகின்றது; பர மூர்த்தி அபிமானியாகிய அவரால் வீரியம் நீரிலே விடப்பட்டது; அவ்வீரி யம் ஆயிரஞ் சூரியரொளியை நிகர்த்த அண்டமாயிற்று; நேரே என் சத்தியின் வைபவத்தினால் விஷ்ணு அதனுள்ளே பிரவேசித்தார்; பின்னர் என் ஆஞ் ஞையினாலே அவர் நாராயணர் என்னும் பெயர் படைத்தார்; இங்கே நாரா யணரைப்பற்றிய சுலோகத்தை உதகரிக்கின்றார்; அப்புக்கள் சூக்கும இரசங் களாம்; இரசம் நாரம் எனப்படும்; இதிலிருந்து பிரமா பிறந்தார்; நரன் நேரே சிவன் எனப்பட்டார்; நாரம் இவருக்கு இடமாகக் கூறப்பட்டமை யின் நாராயணர் எனப்பட்டார்; மனிதருட் சிரேட்டரே! பிரமாவும் கந்த சரீ ரத்திற் பிரவேசித்தனர்" என்று புராணமுங் கூறுகின்றது. இவ்வாறே,

வேதேந நாமரூபே வ்யாகரோத் ஸதாஸதீ ப்ரஜாபதி:।
(தைத். பிராம். உ. சு. உ. அ)

"வேதத்தினாலே பிரஜாபதியானவர் சத்தும் அசத்துமாகிய நாமரூபங்களைப் பிறப்பித்தார்" என்னும் சுருதிக்கிசைய அண்டத்துள்ளேயுள்ள இரண்ணிய கருப்பரேனும்,

அத்ப்ய: ஸம்பூத: ப்ருதிவ்யை ரஸாச்ச (தைத். ஆரணி. ரு. கரு. சо)

"அப்புவிலிருந்தும் பிருதிவியின் இரசத்திலிருந்தும் (அண்டம்) பிறந்தது" என்னும் சுருதிக்கியைய நாராயணரேனும் அண்டத்துள்ளே இருக்கும் தேவர் முதலாயினோருடைய நாமரூபங்களுக்குக் கர்த்தாவாதல் அருகமா கின்றது. பிரமாண்டத்துக்கப்புறத்துள்ள சிவபெருமான் (சிருட்டி கர்த்தா) ஆகார் எனின்,

(சித்தாந்தம்) மேலே கூறிய சிருட்டிக்கிரமம் யுக்தம் அன்று; பின்னையோ,

ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம் ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோ(அ)ஸ்ருஜத (சாந். சு. உ. க, உ)

"சௌமிய, சத்தாம் அது முதற்கண் இருந்தது; ஒன்று தானே இரண்டாவ தற்றதாய் இருந்தது; அது நான் அனேகமாவேன் எனச் சங்கற்பித்தது; அது ஒளியைச் சிருட்டித்தது" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலே சத் என்

பது பஞ்சபூதகாரணமாகிய பிரமமே. இதனால் முதற்கட் சிருட்டிக்கப்பட்டது தேயு எனல் நிரசிக்கப்பட்டது.

தடைக்ஷத।
தத்தேஜ ஐக்ஷத (சாங். சு. உ. ௩)
தா ஆப ஐக்ஷந்த (சாங். சு. உ. ச)

"அது சங்கற்பித்தது; அவ்வொளி சங்கற்பித்தது; அவ்வப்பு சங்கற்பித்தது" என்னும் சுருதியினால் ஆகாயமுதற் பிருதிவியீறாகச் சதாசிவர்முதலிய பெயருடைய பிரமமானது முன் முன் உள்ளவற்றுக்குக் காரணமாய்ப் பின்பின்னுள்ளவற்றைப் பிறப்பிக்கின்றதெனப் பெறப்படுகின்றது.

ஹந்தாஹமிமாஸ்திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணீதி। தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி (சாங். சு. ௩. க, உ)

"நான் இந்தச் சீவான்மாவோடு இம்மூன்று தேவதைகளைப் பிரவேசித்து நாமரூபத்தை வகுப்பேன்; அவைகளில் ஒவ்வொன்றையும் மும்மூன்றுக்குவேன்" என்னும் சுருதியினால் தேவதைகள் மும்மூன்றுக்கும் சிவபெருமான் தாமே வாயுமுதலிய ரூபமெடுத்துத் தேயு, அப்பு, பூமி என்னும் முப்பூதங்களையும் பிரமா விஷ்ணு உருத்திரரூப சீவான்மாக்கள் வாயிலாகப் பிரவேசித்து நாமரூபத்தைச் சிருட்டித்தனர் என்று புலப்படுகின்றது. ஆகலின், பூதங்களை முப்பகுப்பாக்கி நான்முகப் பிரமாமுதலாயினோராகி நாமரூபமனைத்தையுஞ் சிருட்டிக்கின்றனர் எனக் கூறுவது யுக்தம். பூதங்களைமுத்திறப்படுத்தல் கேவலம் நான்முகப்பிரமாவுக்கு இயையாது. தேயு அப்புபிருதிவி என முத்திறப்பட்ட பூதங்களிலிருந்து அண்டம் பிறக்கின்றதன்றோ. இதன்பின்,

அண்டம் ஹிரண்மயம் மத்யே ஸமுத்ரஸ்ய ருத்ரஸ்ய வீர்யாத்।
ப்ரஜஜ்ஞே ஸம்பபூவைவ தத்ர ப்ரஹ்மா விஷ்ணுர் ஜ்ஞானதோ ஜாதவேதா:॥

"சமுத்திரமத்தியிற் சுவர்ண அண்டமானது உருத்திரர் வீரியத்தினின்று பிறந்தது; அங்கே விஷ்ணுவானவர் ஞானத்தோடு பிரமாவாகப்பிறந்தார்" என்னுஞ் சுருதியிற் கண்டவாறு நான்முகனார் சிருட்டி பின்னுளதாயிற்று.

(ஆக்ஷேபம்) நான்முகப்பிரமாவுக்குப் பூதங்களை முத்திறப்படுத்துவது கூடும்.

யதா நு கலு ஸோம்யேமாஸ்திஸ்ரோ தேவதா: புருஷம் ப்ராப்ய த்ரிவ்ருத்த்ரிவ்ருதேகைகா பவதி தந்மே விஜாநீஹி (சாங். சு. ௬.எ)

"சௌமிய! இந்த மூன்று தேவதைகள் (பூதங்கள்) புருஷனை அடைந்து ஒவ்வொன்றும் எங்ஙனம் மும்மூன்றாயின என என்னிடத்து அறிகுதி"

அந்நமஶிதம் த்ரேதா விதீயதே। தஸ்ய ய: ஸ்தவிஷ்டோ தாதுஸ்தத் புரீஷம் பவதி। யோ மத்யமஸ்தந்மாம்ஸம்। யோऽணிஷ்டஸ்தந்மந:।
(சாந். சு. ரு. க)

"உண்ட அன்னம் மூன்றாகப் பகுக்கப்படுகின்றது; தூலமாயது மலமாயும், நடுக்கண்ணது மாமிசமாயும், நுட்பமாயது மனசாகவும் ஆகின்றது" என்றற்றொடக்கத்த சுருதியினால், அண்டசிருட்டிக்குப் பின்னர் நான்முகப் பிரமனாற் சிருட்டிக்கப்பட்ட ஆன்மாக்களுள்ளே முத்திறப்படுத்தும் வகை கூறப்படுகின்றதே எனின், (கஎ)

(உத்தரம்) சூத்திரகாரர் பின்வருமாறு அதனை ஆசங்கித்து மறுக்கின்றனர்.

மாம்ஸாதி பௌமம் யதாஶப்தமிதரயோ: (உ. ச. கஅ)

**(உஅசு) மாமிச முதலியன பிருதிவி சம்பந்தம்; சுருதியே மற்றிரண்டுக்குமாம்.**

அந்நமஶிதம் த்ரேதா விதீயதே (சாந். சு. ரு. க)

"உண்ணப்பட்ட அன்னம் மூன்றாக விதிக்கப்படுகின்றது" என்றற்றொடக்கத்த வாக்கியத்தில் அண்டத்திற் புருஷரால் உண்ணப்படும் அன்னாதிகளின் பரிணாமமே கூறப்படுகின்றதன்றி, முத்திறப்படுத்துகை கூறப்படவில்லை. இன்றேல் மலத்தினும் நுண்ணியவாய மாமிசமும் மனசும் அப்புவினாலும் தேயுவினாலுமே தனித்தனி ஆக்கப்பட்டனவாகும். அங்ஙனமாகுங்கால்,

அந்நமஶிதம் த்ரேதா (சாந். சு. ரு. க)

"புசித்த அன்னம் மூவகைப்படுகின்றது" என்னும் பூமியின் முத்திறப்படுகையின் தொடக்கமும்,

அந்நமயம் ஹி ஸோம்ய மந: (சாந். சு. ரு. ச)

"சௌமிய! மனம் அன்னமயமன்றோ" என்றதிலே மனசுக்குச் சாற்றும் பூமி விகாரத்துவமும் விரோதமுறும். அவ்வாறே அப்பு தேயு என்னும் மற்றிரண்டின் முப்பகுப்பும் முரணும், ஆகலின், சூத்திரகாரர்

மாம்ஸாதி பௌமம் யதாஶப்தமிதரயோ:।

"மாமிசமுதலியன பிருதிவி சம்பந்தம்; மற்றிரண்டும் சுருதி கூறியவாறு அவ்வாறேயாம்" என்றார். மலம் போல மாமிசமும் மனசும் பிருதிவி சம்பந்தம். அங்ஙனம் மூத்திரம் போல இரத்தமும் பிராணனும் அப்பு சம்பந்தம். அங்ஙனம் என்புபோல மச்சையும் வாக்கும் தேயு சம்பந்தம்.

(ஆக்ஷேபம்) முன்னரே பூதங்கள் முத்திறப்படுத்தப்பட்டிருக்கு மேல் ஒவ்வொரு வஸ்துவும் மூவகைப் பூதங்களால் ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும். (கஅ)

பிருதிவி, அப்பு, தேயு என்பன எங்ஙனமாம் எனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

வைஶேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத: (உ. ச. ககூ)

(உஅஎ) விசேஷமுண்மையால் அவை அவ்வாறு கூறப்பட்டன, கூறப்பட்டன.

அன்னாதிமிகுத்துண்மையாம் விசேஷத்தினால் அன்ன முதலியவற்றின் பேச்சு உளதாகின்றது. ஆகலின், முத்திறப்படுத்தும் சிவபெருமான் நான்முகப்பிரமாவாகிச் சமஸ்த நாமரூபங்களைச் சிருட்டித்தனர் என்பது யுக்தம். (ககூ)

---

## மூன்றும் அத்தியாயத்து

# முதலாம் பாதம்.

### (௧) ததந்தரபிரதிபத்தியதிகரணம்.

---

𑌤𑌦𑌨𑍍𑌤𑌰𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑍌 𑌰𑌂𑌹𑌤𑌿 𑌸𑌂𑌪𑌰𑌿𑌷𑍍𑌵𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑌨𑌿𑌰𑍂𑌪𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍍 (௩. ௧. ௧)

(உ-அ) பிரசிநோத்தரங்களாற் (பெறப்படுமாறு) **ஆன்மா மற்றோர் சரீரமெடுக்குங்காற் சூக்கும பூதங்களைத் தழுவி ஓடுகின்றது.**

முதலாம் அத்தியாயத்திற் சித்தித்த உலகமுதற்காரணம் பிரமம் என (உபநிடதங்களால்) ஒரே கருத்தாகக் கூறப்பட்டமைக்கு விரோதமாக எழுந்த ஆக்ஷேபங்களுக்குப் பரிகாரம் கடந்த அத்தியாயத்திற் கூறப்பட்டது.

எங்ஙனமெனின், பிரதமபாதத்திற் சாங்கியாதி தர்க்கவிரோதம் பரிகரிக்கப்பட்டது.

இரண்டாம் பாதத்திலே பிரதானகாரணவாத முதலியவற்றுள்ளே தர்க்கவிரோதம் காட்டப்பட்டது.

மூன்றும் பாதத்திலே பூதசிருட்டியின் அவாந்தரவிரோதத்தைப் பரிகரித்துக்கொண்டு, ஆன்மா நித்தியத்துவாதி குணங்களையுடையதாக நிரூபிக்கப்பட்டது.

நான்காம் பாதத்திலே பிராணன் இந்திரியம் என்பவற்றின் சொரூபத்தையும், பிரமத்தைக்கொண்டே அவைகளுக்கு உற்பத்தி உளதாம் என்பதையுங் கூறி, மற்றெல்லாவற்றின் நாமரூபங்களின் பகுப்பு நிரூபிக்கப்பட்டது.

ஈண்டு மூன்றும் அத்தியாயத்து முதற் பாதத்திலே நித்தியத்துவ முதலாயவற்றோடு கூடிய ஆன்மா போக்குவரவு செய்தல் நிரூபிக்கப்படுகின்றது.

இரண்டாம் பாதத்தில் அதின் அவஸ்தாநிரூபணபூருவமாகச் சிவபெருமானது சொரூபலக்ஷணம் கூறப்படுகின்றது.

மூன்றும் பாதத்திலே (வேதத்திற் பலவிடங்களினும் கூறப்பட்ட) பல்வகைச் சிவ உபாசனையின் குணோபசங்காரம் கூறப்படுகின்றது.

நான்காம் பாதத்திலே ஆச்சிரமாதிகளின் தருமம் கூறப்படுகின்றது.

இப்போது முதலாம் அதிகரணத்திலே ஆன்மா மற்றோர் உலகத்துக்குப் போக்குவரவு செய்யுங்கால், அது மற்றோர் சரீரத்தை எடுத்தற்குச் சூக்கும பூதங்களுடன் கூடிப்போகின்றதா? இன்றேற் கூடாது போகின்றதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா தேகத்தைவிட்டுப் புறப்படுங்காற் சூக்குமபூதங்களாய் எய்தப்போகும் சரீரபீஜங்களைக்கொண்டு போகாது, (அவற்றை) விடுத்தே போகின்றது; பூதங்கள் சுலபமாய் யாண்டும் பெறப்படுவன வாதலானும், ஆயாசம் விருதாவாய் முடிதலினாலுமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஆன்மா மற்றோர் தேகம் எடுக்கும்பொருட்டுச் சூக்குமபூதங்களைக் கொண்டு செல்கின்றதென்பது பஞ்சாக்கினி வித்தையிற் போந்த வினாவிடைகளாற் பெறப்படுகின்றது.

வெத்஥ யயா வஞ்சம்யாமாஹுதாவாவ꞉ புருஷவசஸோ ஹவந்தி|
(சாந். ரு. ங. ங)

"ஐந்தாவது ஆகுதியில் அப்புக்கள் புருஷன் என்று கூறப்படுதலை அறிவையோ" என்பது வினா.

இதி து பஞ்சம்யாமாஹுதாவாவ꞉ புருஷவசஸோ ஹவந்தி|
(சாந். ரு. கூ. க)

"ஐந்தாவது ஆகுதியில் ஆகுதி செய்யப்பட்ட அப்புக்கள் புருஷன் என்னும் மொழியையுடையவாகின்றன" என்பது விடை.

இதன் பொருள் பின்வருமாறு சுருக்கிக் கூறப்படுகின்றது. பிராம்மணதி சரீரத்துள்ள ஆன்மா ஆகுதி முதலிய பிற கருமங்களையும் புரிந்து அக்கருமபயன்களைத் துய்க்கும்பொருட்டு, இச்சரீரத்தை விடுத்துப் போகுங்கால், இச்சரீரத்துள்ள மற்றைப் பூதங்களோடியைந்த சூக்குமபூத அப்பினோடு கூடி அக்கினியாகக் குறிக்கப்பட்ட * தியு (சுவர்க்க) லோகத்தை அடைந்து, அந்த அமிர்தமயமாகிய தேகாகாரமாய்ப் பரிணமித்த அப்புக்களோடு சேரப்பெற்றுத் தேவர்களுக்கு உபயோகமாகி, அவர்களோடு தானே அங்கே விசேஷ போகங்களை அனுபவித்து, பிராம்மணதி சரீரத்தைக் கொடுக்கும் எஞ்சிய கன்மத்தோடு அவ்வான்மா கன்மங்கள் செய்யும் பொருட்டு இவ்வுலகத்துக்கு வந்து அந்த அப்புக்களோடு கூடியே அக்கினியாகக் குறிக்கப்பட்ட மேகத்தை அடைகின்றான்; பின்னர் மழைத்துளி

---

* இந்தப் பஞ்சாக்கினிவித்தை சிவஞானபோதத்து உ-ஆஞ் சூத்திரத்து ங-ஆம் அதிகரணத்து முதலாம் வெண்பாவுரையிற் குறிக்கப்பட்டும், "துறக்கம் மேகமண்டலம் நிலம் தந்தை தாய் என்னும் இவ்வைந்திடம் அங்கியாகவும், அவ்வவ்விடங்களினெய்திய ஆன்மா ஆகுதியாகவும் வைத்துத் தியானித்தல்" என்று திராவிடமாபாடியத்தில் வரையப்பட்டுமிருக்கின்றது.

களோடு அக்கினியாகக் குறிக்கப்பட்ட பூமிக்கு வருகின்றான். அங்கிருந்து நெல்முதலிய தானியங்களோடு உணவுவடிவாகி அக்கினியாகக் குறிக்கப்பட்ட புருஷசரீரத்தை அடைந்து, இந்திரியமயமாகிய அந்த அப்புக்களோடு கூடி மற்றோர் அக்கினியாகக் குறிக்கப்படும் பெண்ணை அடைகின்றான். புருஷசரீரம் என்று கூறற்கியன்ற சரீரமாகமாறிய அப்புக்களோடு சேர்ந்து, கன்மத்துக்கியையப் பிராம்மணாதி சரீரமாகப்பிறக்கின்றான். இஃதெல்லாம் பின்னர் நன்கு விளக்கப்படும். ஆகலின், ஆன்மா மற்றோர் சரீரத்தை எடுக்க வேண்டுமாயின் அது சூக்குமதேகத்தோடு கூடியே போகின்றது. (௧)

த்ர்யாத்மகத்வாத்து பூயஸ்த்வாத் (௩. ௧. ௨)

**(௨௮௯) ஆயின், முத்திறப்படுத்தும் இயற்கையும், மிகுதிப்பாடு உண்மையான்.**

ஒவ்வொன்றும் முத்திறப்படுதலின், ஒவ்வொன்றும் முத்திறவியல்பினவாம். எஞ்சிய பூதங்களோடு சேர்ந்த அப்புக்களே மிகுதியாதல்பற்றி அங்ஙனம் குறிக்கப்பட்டன. ஐந்தாம் ஆகுதியில் அப்புக்கள் என்றவிடத்துக் கேவலம் அப்புசப்தம் கூறப்படுகின்றமையானும் விரோதம் இல்லை. (௨)

ப்ராணகதேஶ்ச (௩. ௧. ௩)

**(௨௯௦) பிராணன் புறப்படுதலினாலும்.**

ப்ராணமநூத்க்ராமந்தம் ஸர்வே ப்ராணா அநூத்க்ராமந்தி।

(பிரு. ௬. ௪. ௨)

"பிராணன் புறப்படும்போது அதனோடு கூட எல்லாப் பிராணன்களும் புறப்படுகின்றன" என்பதினால் ஆன்மாவோடு இந்திரியங்கள் புறப்படுதலால் இந்திரியங்களுக்குப் பற்றுக்கோடாயுள்ள சரீரகமனமும் அறியப்படுகின்றது. (௩)

ஆகலின், ஆன்மா புறப்படும்போது சூக்குமபூதத்தோடு சேர்ந்து கொண்டே போகின்றதென்பதைச் சூத்திரகாரர் ஆசங்கித்துப் பரிகரிக்கின்றனர்.

அக்ந்யாதிஷு கதிஶ்ருதேரிதி சேந்ந பாக்தத்வாத் (௩. ௧. ௪)

**(௨௯௧) அக்கினி முதலியவற்றை அடைகின்றவெனச் சுருதி கூறுகின்றதெனின், அன்று; அது கவுணமாதலின்.**

(ஆக்ஷேபம்)

யத்ராஸ்ய புருஷஸ்ய ம்ருதஸ்யாக்நிம் வாகப்யேதி வாதம் ப்ராணஶ்சக்ஷுராதித்யம் (பிரு. ரு. ௨. ௧௩)

"எங்கே இந்த இறந்த மனுஷனுடைய வாக்கு அக்கினியையும், பிராணன் வாயுவையும், கண் சூரியனையும் அடைகின்றனவோ" என்றற்றொடக்கத்த சுருதிகளில், இந்திரியங்கள் அக்கினிமுதலியவற்றை அடைதலாகக் கேட்கப்படுகின்றது. ஆகலின், ஆன்மாவோடு கூட இந்திரியங்கள் செல்லவில்லையே எனின்,

(உத்தரம்) அங்ஙனமன்று; வாக்காதி சப்தங்கள் வாக்காதி அபிமான தேவதைகளிற் கவுணமாயினமையானும்,

ஓஷதீர்லோமாநி வநஸ்பதீந்கேஶா: (பிரு. ௫. உ. ௧௩)

"ரோமங்கள் செடிகளையும், கேசங்கள் மரங்களையும் அடைகின்றன" என்று (அங்ஙனஞ்) செல்லாத ரோம முதலியவற்றோடு கூடப்படிக்கப் படுகின்றமையானுமாம். (௪)

ப்ரதமேऽஶ்ரவணாதிதி சேந்ந தா ஏவ ஹ்யுபபத்தே:।
(௩. ௧. ௫)

**(௨௯௨) முதற்கண் கூறப்படாமையான் எனின், அங்ஙனம் அன்று; பொருத்தமுறுதலான் அவைகளே.**

(ஆக்ஷேபம்) முதற்கண்ணே சுவர்க்கலோகாக்கினியையுற்றுப் பேசுங்கால் அப்புக்கள் கேட்கப்படாமையின், அப்புக்கள் புறப்படவில்லை;

தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா: ஶ்ரத்தாம் ஜுஹ்வதி (சாந். ௫. ௪. ௨)

"இந்த அக்கினியில் தேவர்கள் சிரத்தையை ஆகுதிசெய்கின்றனர்" எனச் சிரத்தையே கேட்கப்படலான் எனின்,

(உத்தரம்) அன்று. அப்புக்களே சிரத்தை என்னும் சப்தத்தினாற் கூறப்படுகின்றன. எங்ஙனம்? சிரத்தையை அப்புக்கள் என்று சொல்வதே பிற்றொடர்ச்சிக்கு இணக்கமுறுதலின்.

ஶ்ரத்தா வா ஆப: (தைத். பிராம். ௩. ௨. ௪. ௨௮)

"சிரத்தையே அப்புக்கள்" என்று சுருதி சொல்வதாற் சிரத்தை என்னும் பதம் அப்புக்களுக்குப் பிரயோகிக்கப்படுகின்றது. (௫)

சூத்திரகாரர் பின்னரும் ஆக்ஷேபித்து உத்தரம் இறுக்கின்றனர்.

அஶ்ருதத்வாதிதி சேந்நேஷ்டாதிகாரிணாம் ப்ரதீதே: (௩. ௧. ௬)

**(௨௯௩) கூறப்படாமைபற்றி (அது) அன்றாம் எனின்; அன்று; யஞ்ஞாதி செய்பவர் அறியப்படுதலின்.**

(ஆக்ஷேபம்) ஈண்டு வினாவிடைகளில் அப்புக்கள்மாத்திரம் கூறப்படுகின்றன. அவற்றாற்றழுவப்பட்ட ஆன்மா குறிக்கப்படவில்லையே எனின்,

(உத்தரம்) அங்ஙனம் அன்று;

𑌅𑌥 𑌯 𑌇𑌮𑍇 𑌗𑍍𑌰𑌾𑌮 𑌇𑌷𑍍𑌟𑌾𑌪𑍂𑌰𑍍𑌤𑍇 𑌦𑌤𑍍𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌤𑍇
𑌧𑍂𑌮𑌮𑌭𑌿𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌧𑍂𑌮𑌾𑌦𑍍𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌂 𑌰𑌾𑌤𑍍𑌰𑍇𑌰𑌪𑌰𑌪𑌕𑍍𑌷𑌮𑌪𑌰𑌪𑌕𑍍𑌷𑌾
𑌦𑍍𑌯𑌾𑌨𑍍 𑌷𑌡𑍍𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍈𑌤𑌿 𑌮𑌾𑌸𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍍 𑌨𑍈𑌤𑍇 𑌸𑌂𑌵𑌤𑍍𑌸𑌰𑌮𑌭𑌿𑌪𑍍𑌰𑌾
𑌪𑍍𑌨𑍁𑌵𑌨𑍍𑌤𑌿। 𑌮𑌾𑌸𑍇𑌭𑍍𑌯𑌃 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑌂 𑌪𑌿𑌤𑍃𑌲𑍋𑌕𑌾𑌦𑌾𑌕𑌾𑌶𑌮𑌾𑌕𑌾𑌶𑌾𑌚𑍍
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌮𑍇𑌷 𑌸𑍋𑌮𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌤𑌦𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌨𑍍𑌨𑌂 𑌤𑌂 𑌦𑍇𑌵𑌾 𑌭𑌕𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌿।
𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌾𑌵𑌤𑍍𑌸𑌂𑌪𑌾𑌤𑌮𑍁𑌷𑌿𑌤𑍍𑌵𑌾𑌥𑍈𑌤𑌮𑍇𑌵𑌾𑌧𑍍𑌵𑌾𑌨𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇
𑌯𑌥𑍇𑌤𑌮𑌾𑌕𑌾𑌶𑌮𑌾𑌕𑌾𑌶𑌾𑌦𑍍𑌵𑌾𑌯𑍁𑌂 𑌵𑌾𑌯𑍁𑌰𑍍𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌧𑍂𑌮𑍋
𑌭𑌵𑌤𑌿 𑌧𑍂𑌮𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾𑌽𑌭𑍍𑌰𑌂 𑌭𑌵𑌤𑌿। 𑌅𑌭𑍍𑌰𑌂 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌮𑍇𑌘𑍋 𑌭𑌵𑌤𑌿
𑌮𑍇𑌘𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌷𑌤𑌿 𑌤 𑌇𑌹 𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌯𑌵𑌾 𑌓𑌷𑌧𑌿𑌵𑌨𑌸𑍍𑌪𑌤𑌯
𑌸𑍍𑌤𑌿𑌲𑌮𑌾𑌷𑌾 𑌇𑌤𑌿 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇𑌽𑌤𑍋 𑌵𑍈 𑌖𑌲𑍁 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌪𑌤𑌰𑌂
𑌯𑍋 𑌯𑍋 𑌹𑍍𑌯𑌨𑍍𑌨𑌮𑌤𑍍𑌤𑌿 𑌯𑍋 𑌰𑍇𑌤𑌃 𑌸𑌿𑌞𑍍𑌚𑌤𑌿 𑌤𑌦𑍍𑌭𑍂𑌯 𑌏𑌵 𑌭𑌵𑌤𑌿।

(சாந். ௫. ௧௦. ௩, ௪, ௫, ௬)

"யஞ்ஞமும் பிற தருமங்களும் செய்துகொண்டு கிராமத்திலே வசிக்கின்றவர்கள் தூமத்துக்குச் செல்வார்கள்; தூமத்திலிருந்து இரவுக்கும், இரவிலிருந்து அபரபக்ஷத்துக்கும், அபரபக்ஷத்திலிருந்து தக்ஷிணாயனத்துக்குஞ் செல்வர்; ஆனால் அவர் வர்ஷத்தை அடைவதில்லை; தக்ஷிணாயனத்திலிருந்து பிதிர்லோகத்துக்கும், பிதிர்லோகத்திலிருந்து ஆகாயத்துக்கும், ஆகாயத்திலிருந்து சந்திரனுக்கும் போகின்றனர்; அவன்தான் சோமராஜன்; அங்கே தேவர்களுக்கு அவர்கள் (சீவான்மாக்கள்) அன்னமாக, அவர்களைத் தேவர்கள் அயில்கின்றனர்; தமது கருமமெல்லாம் முடியும் வரையும் அங்கே இருந்து வந்தவழியே ஆகாயத்துக்கும், ஆகாயத்திலிருந்து வாயுவுக்குமாக மீள்கின்றனர்; பின் யஞ்ஞகாரன் வாயுவாகி, தூமமாகி, பனியாகி, முகிலாகி, மழையாகின்றான்; பின்னர்த் தானியமாயும், ஓஷதிகளாயும், மரங்களாயும், எள்ளாயும், பயறுயுமாகின்றான்; இங்கிருந்து நீங்குதல் மிகு கஷ்டத்துள்ளாகும். எதனால் எனின், எவன் அவ்வன்னத்தையுண்டு வீரியத்தை உகுக்கின்றானோ அவன் போலாகின்றான் (அந்தச் சீவான்மா)" என்னும் பிற் சுருதி வாக்கியங்களிலே யஞ்ஞாதி செய்தவர் சோமராஜா என்று கூறப்பட்ட அமிர்தமயமாய விசேஷ தேகத்தோடு சுவர்க்கத்திலே நல்வினைப் பயனைத் துய்த்து, அந்நல்வினை ஒழியுங்கால் ஈண்டுவந்து கர்ப்பத்திலே பிரவேசிப்பர் என்று அறியப்படுகின்றமையான்,

𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌗𑍍𑌨𑍌 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂 𑌜𑍁𑌹𑍍𑌵𑌤𑌿 𑌤𑌸𑍍𑌯𑌾 𑌆𑌹𑍁𑌤𑍇𑌃
𑌸𑍋𑌮𑍋 𑌰𑌾𑌜𑌾 𑌸𑌂𑌭𑌵𑌤𑌿 (சாந். ௫. ௪. ௨)

"அந்த அக்கினியிலே தேவர்கள் சிரத்தையை ஆகுதிசெய்கின்றனர்; அந்த ஆகுதியிலிருந்து சோமராஜன் உதிக்கின்றான்" என்னும் வாக்கியத்தில் அந்த யஞ்ஞஞ் செய்பவர்களே சோமராஜனைக் குறிக்கப்படலான். ஆகலின், வினவிடைகளினும் அப்புக்களாற் றழுவப்பட்டு அதனையே சரீரமாகக் கொண்ட "ஆன்மாவே அப்பெனக் கூறப்படுகின்றான்" என்று பெறப்படுகின்றது. அது பற்றி விரோதமில்லை. (சு)

ஸாக்ஷதம் வா நாத்ம விக்வாத்யாஹி ஏூ‌ஏயதி (ங. க. எ)

(உகூச) ஆன்மாவை அறியாமையின், அது கவுணமே; அங்ஙனம் சுருதி கூறுகின்றது.

(ஆக்ஷேபம்)

ஏஷ ஸோமோராஜா தத்தேவாநாமந்நம் தம் தேவா பக்ஷயந்தி।

(சாந். ரு. க௦. ச)

"இவன் சோமராஜன்; அவன் தேவர்களுக்கு * அன்னம்; இவனைத் தேவர்கள் † உண்கின்றனர்" என்று சுருதி கூறியவாறு, அவன் சோமராஜனுடையவியல்பை அடைந்தபோது அவன் தேவர்களால் உண்ணப்படுவதாகக் கூறப்படுகின்றமையான், அந்த அப்பு (என்னும் மொழி) சீவான்மாவைக் குறிக்காதெனின்,

(உத்தரம்) அவன் உண்ணப்படுகின்றான் என்று கூறினமை கவுணமே. அவன் பரமான்மாவை அறியாமையாலே தேவர்களுக்கு அநுபவிக்கும் கருவியாகின்றான் என்பதே அபிப்பிராயம். அவ்வாறே,

யதா பசுரேவம் ஸ தேவாநாம் (பிரு. ங., ச. க௦)

"பசுவிருப்பது போல அவன் தேவர்களுக்காகின்றான்" என்னுஞ் சுருதியானது பரமான்மாவை அறியாதவர்கள் பசுப்போலத் தேவர்களுக்கு உபகரணமாகா நிற்கின்றனர் என்று காட்டுகின்றது. பரமான்மவித்துக்கள் சிவபெருமானுக்கு உபகரணமாகவும், அநான்மவித்துக்கள் தேவர்களுக்கு உபகரணமாகவும் ஆகின்றனர் என்றும் அறியற்பாற்று. ஆகலின், எப்பிரகாரத்தினாலேனும் ஆன்மா மற்றோர் சரீரம் எடுக்குங்காற் சூக்குமசரீரத்தோடே செல்கின்றான் என்பது சித்தித்தது. (எ)

---

* அன்னம் என்றது உபகரணமாய்ப் பிரியமாயுள்ளதின் மேற்று.

† உண்கின்றனர் என்றது தேவர்களுக்கு அவர்கள் பிரீதியாகின்றார் என்பதின் மேற்று.

## (உ) கிருதாத்தியயாதிகரணம்.

க்ருதாத்யயே(அ)நுஶயவாந் த்³ருஷ்டஸ்ம்ருதிப்⁴யாம் யதே²தமநேவஞ்ச ॥
(௩. ௧. அ)

**(உ௯௫) கருமம் முடிந்தகாலேயில் ஆன்மா கன்மசேஷத்தோடு மீளுகின்றது; அங்ஙனம் அது போனபடியானும் வந்தபடியானும் எனச் சுருதி ஸ்மிருதி கூறுவதினுல்.**

ஆன்மா பூத சூக்கும தேகமுடையனுகவே சுவர்க்கலோக முதலிய உலகங்களிலே போய்த் தேவசரீரமடைந்து சுயகன்மத்துக்குத் தகுதியாய பலங்களைத் துய்க்கின்ருன் என மேலேச் சூத்திரத்தில் நிரூபிக்கப்பட்டது.

இப்போது ஆன்மா அங்ஙனம் துய்த்தபின்னர் இவ்வுலகத்துக்கு வருங்கால், அவன் கன்மசேஷத்தோடு வருகின்ருனு? இன்றேற் கன்மமுழுமையுந் துய்த்தபின் வருகின்ருனு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இப்போது ஆன்மா அனுசயம் எனப்படும் கன்மசேஷமின்றிச் சுவர்க்கத்தினின்று மீளுகின்ருன் என்று கூறுவதே யுக்தம். [அநு=(ஆன்மாவோடு) கூட, சேதே=இருத்தல் எனப் பொருள்பட], அநுசயம் என்பது ஆன்மாவோடு கன்மசேஷம் சார்ந்துளதென்பதே பொருள். சுவர்க்கத்திருந்திறங்கினவனுக்குக் கன்மசேஷமில்லே; ஆண்டுக் கன்மபலந் துய்க்கப்பட்டமையின்.

யாவத்ஸம்பாதமுஷித்வா(அ)தை²தமேவாத்⁴வாநம் புநர்நிவர்த்தந்தே
(சாந். ரு. ௧௦. ரு)

“கன்மம் துய்த்து முடிவுபெறும் வரையுமிருந்து, அவர்கள் (ஆன்மாக்கள்) வந்த வழியே திரும்புகின்றனர்” என்று சுருதியும் அவ்விஷயம்பற்றிக் கூறுகின்றது. ஈண்டுச் சம்பாதம் என்பது கன்மசமூகம். கன்மமுழுமையும் ஒழியும் வரையும் அவர்கள் சுவர்க்கத்திலிருக்கின்றனர். ஆகலின், கன்மபல முழுமையும் துய்த்தபின்னர் ஆன்மா கன்மம் யாதுமின்றியே சுவர்க்கத்திலிருந்து இறங்குகின்ருன் எனின்,

(சித்தாந்தம்) நல்வினே துய்த்து முடிந்து ஆன்மா மீண்டு இவ்வுலகத்துக்கு வருங்காற் சேஷகன்மத்தோடு தொடர்ந்து வருகின்ருன். இது எங்ஙனம் கூறப்படுகின்றதெனின்? சுருதி ஸ்மிருதி வாயிலாய்.

தத்³ய இஹ ரமணீயசரணா அப்⁴யாஶோ ஹ யத்தே ரமணீயாம் யோநிமாபத்³யேரந் ப்³ராஹ்மணயோநிம் வா க்ஷத்ரியயோநிம் வா வைஶ்யயோநிம் வா(அ)த² ய இஹ கபூயசரணா அப்⁴யாஶோ ஹ யத்தே கபூ

யாம யொநிமாவஷெ்ுரந் ஶ்வயொநிம் வா ஸூகரயொநிம் வா சண்டாஉ யொநிம் வா (சாந். ரு. ௧௦. எ)

"நல்லொழுக்கமுடையோர் பிராம்மண க்ஷத்திரிய வைசியர் முதலிய நற்பிறப்பை விரைவில் அடைகின்றார், தீயொழுக்கமுடையோர் நாய் பன்றி சண்டாளன் முதலிய தீயபிறப்பை விரைந்து அடைகின்றனர்" எனச் சுருதியிற் கூறப்படுகின்றது.

ஜாயதெ வர்ணாகஷூர்ண॥

"அவன் நற்கன்மத்தினுற் பிறக்கின்றான்" என மிருதியினும் கூறப்படுகின்றது. இன்றேல் உடனே பிறந்தசிசுவுக்கும் தர்மா தர்மமில்லாமையான் சுக துக்கானுபவம் இல்லையாய் விடும். ஆகலின், போனவழியேயேனும் வேறு வழியேயேனும் மீளுங்காற் சேஷகன்மத்தோடே ஆன்மாக்கள் வருகின்றார்கள். அஃதாவது அவர்கள் ஆகாயமார்க்கமாக இறங்குங்கால் ஏறின வழியே வாயுவாதிகளையடைந்தும், பிதிருலோக முதலியவற்றையடையாமலும், வேறு பிரகாரமாக மீளுகின்றார் என்பது பொருள். (அ)

பின்னருஞ் சூத்திரகாரர் ஆக்ஷேபித்து மற்றோர் பிரகாரம் மறுக்கின்றனர்.

சரணாதிதி செஞ தடுவலக்ஷணாதெஸ்தி காஷ்ணாஜிநிஃ॥

(ந. க. கூ)

**(உகூகூ) சரணம் என்னும் மொழியினாலெனின் அன்று; அது உபலக்ஷணப்பொருளென்று கார்ஷ்ணாஜிநி சொல்கின்றனர்.**

(நல்லொழுக்கமுடையர்) ரமணீயசரணஃ (தீயொழுக்கமுடையர்) கபூயசரணஃ என்பவற்றிற் கண்ட சரண என்னும் மொழியினால் அனுசயம் எனப்படும் கன்மசேஷம் சித்திக்கவில்லை; அது ஸ்மிருதியிற் கண்ட ஒழுக்கத்தையே குறித்ததாம் எனின்,

(உத்தரம்) அன்று; சுருதியிற் கண்ட சரண என்னும் மொழி அனுசயம் எனப்படும் கன்மசேஷத்துக்காகவே உபலக்ஷணப்பொருளாயிருக்கின்றது; அந்தக் கன்மசேஷமே சுகாதிகளைச் சாதிக்கின்றமையின். (கூ)

ஆநஸ்க்யூமிதி செஞ தடவெக்ஷகூாசு (ந. க. ௧௦)

**(உகூஎ) (அந்த ஒழுக்கம்) வீணும் எனின், அன்று; அதனை அபேக்ஷித்திருத்தலான்.**

(ஆக்ஷேபம்) அங்ஙனமாயின், ஸ்மிருதியிற் கூறப்பட்ட ஒழுக்கம் உபயோகமின்றியும் வீணாகவும் போமே எனின்,

(உத்தரம்) அன்று;

ஸம்த்யாஹீநோ ऽஶுசிர் நித்யம் அநர்ஹ: ஸர்வகர்மஸு।
யதந்யத் குருதே கர்ம ந தஸ்ய பலமஶ்நுதே॥

"(காலை மாலைச்) சந்தியின்றி இருக்கும் எவனும் நித்தமும் அசுத்தன்; சகல கன்மத்துக்கும் யோக்கியனல்லான்; அவன் எக்கிரியையைச் செய்யினும் அவன் அதன் பயனை அடையான்" என்று சுருதியிற் கூறப்பட்டாற் போல, நல்வினைகளனைத்தும் அதனை அபேக்ஷித்துண்மையான். இது கார்ஷ்ணாஜினியின் கொள்கை. (௧௦)

ஸுக்ருத து௷க்ருதே ஏவேதி து பாதரி: (௩. ௧. ௧௧)

(௨௬அ) ஆயின் நல்வினை தீவினைகளே என்று கூறுவர் பாதரி.

(மேலே உதகரித்த சுருதியிற் கண்ட) சரணம் என்னும் மொழி (முறையே) நல்வினை தீவினைகளைக் குறித்ததென்பர் பாதரி; புண்ணிய கன்மத்தை ஆசரிக்கின்றான் எனப் பிரசித்தமாகலின். சூத்திரகாரர் கருத்தும் இதுவாம். சரணம் என்பது உபலக்ஷணையினாலன்றி நேரே நல்வினை தீவினைகளைக் குறித்ததெனப் பாதரி கூறுகின்றார். கன்மமானது ஸ்மிருதியிற் கூறப்பட்ட நல்லொழுக்கத்தை அபேக்ஷித்து நின்றது என்பது ஒப்புக்கொள்ளப்பட்டதே.

ஆகலின், ஆன்மா சுவர்க்கத்திருந்து மீளும்போது தான் செய்த நல்வினை தீவினையாகிய கன்மசேஷத்தோடு தொடர்ந்துவருகின்றான் என்பது சித்தித்தது. (௧௧)

## (௩) அநிஷ்டாதிகார்யாதிகரணம்.

---

அநிஷ்டாதிகாரிணாமபி ச ஶ்ருதம் (௩. ௧. ௧௨)

(௨௬௯) நற்கன்மமுதலிய செய்யாதோர்க்கும் கூறப்பட்டது.

யஞ்ஞாதிகளாகிய பொதுத் தருமங்களைச் செய்பவர் சந்திரனை அடைதல்போல, மற்றையோரும் சந்திரனை அடைகின்றாரா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அங்ஙனமாயின் யஞ்ஞாதி பொதுத் தர்மங்களைச் செய்யாதவர்க்கும் சந்திரகமனம் உண்டே;

யே வை கே சாஸ்மால்லோகாத் ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி (கௌஷீ. ௧. ௨)

"இவ்வுலகத்தைவிட்டுப் புறப்பட்டுப் போவார் எவருஞ் சந்திரனையே அடைகின்றனர்" என்னுஞ் சுருதியினால் எல்லோரும் பேதம் யாதுமின்றிச் சந்திரனை அடைகின்றனர் எனக் கேட்கப்படலான். பாவிகளுக்கு அங்கே இன்பம் கிடையாவிடினும் மீண்டுவந்து சரீரம் எடுக்கும்பொருட்டும், பஞ்சமாகுதியை அடையும்பொருட்டும் சுவர்க்கத்துக்குப் போதல் அபேக்ஷிக்கப்படுகின்றது. ஆகலின், யஞ்ஞமுதலிய பொதுத் தருமங்களைச் செய்யாதோர்க்கும் சந்திரகமனமுளதாம் எனின், (கஉ)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

ஸம்யமநே த்வநுபூயேதரேஷா மாரோஹாவரோஹௌ தத்கதிதர்சநாத் (௩. க. க௩)

**(௩௦௦) ஆயின் யமலோகத்திலே அனுபவித்துப் பிறரெல்லாம் போய் மீளுகின்றனர்; சுருதி அக்கதிகளைக் காட்டலான்.**

யஞ்ஞாதிபொதுத் தர்மங்களைச் செய்யாதோர்க்குச் சந்திரகமனமில்லை. ஆயின்,

வைவஸ்வதம் ஸங்கமநம் ஜநாநாம் (இரு. வே. ௧௦. கச. க);
(தைத். ஆரணி. சு. க. க)

"சனங்களுக்கெல்லாம் எல்லை யமன்" என்றவாறு, அவர்கள் யமலோகத்திலே கருமபலன்களைத் துய்த்துப் பின்னர்ப் (பூமிக்கு) மீளுகின்றனர். அவர்களுக்குப் போதலும் மீளுதலும் இங்ஙனமே. ஒருவன் சுவர்க்கம் போதல் போகத்தின்பொருட்டன்றே; பஞ்சமாகுதி பெறும்பொருட்டன்று; பெண்ணின் ஆகுதியானது இல்லையாக, * துரோணர் முதலாயினோர் விஷயத்திற் றோஷமேறலான். ஆகலின், பாவிகளுக்கு யமலோகப்பிராப்தி என்பது யுக்தம். (க௩)

ஸ்மரந்தி ச (௩. க. கச)

**(௩௦க) ஸ்மிருதியும் கூறுகின்றன.**

---

*ப்ருஹஸ்பதே ஸ்துதஸ்யாம்சே ஸ்வயம்யோநி ரயோநிஜ:|
உத்பந்நோ த்ரோணம் ஸம்பூதம் த்ரோணம் பாரத்வாஜ மயோநிஜம்|
(பார. ஆதிபருவம், சுஎ: எ௦)

"பரத்துவாஜகுமாரராகிய துரோணர் (ஐந்தாவது ஆகுதியாகிய) பெண்ணிடத்து தியாது மிகுந்த புகழ்படைத்த பிருகஸ்பதியின் அம்சத்தினின்று உற்பவித்தனர்" என்று பாரதம் கூறுகின்றது.

ஸர்வே சைதே வஶம் யாந்தி யமஸ்ய பகவந் கில।
(விஷ்ணுபுராணம். ௩. ௭. ௫)

"பகவானே, இவரெல்லாம் யமனுடைக்குட்படுகின்றனர்" என்றற்றொடக்கத்த விஷயம், இந்தப் பொருள்பட, ஸ்மிருதியினும் கூறப்படுகின்றது. (௧௪)

அபி ச ஸப்த (௩. ௧. ௧௫)

(௩௦௨) மேலும் ஏழு (உண்டு)

சப்த இரௌரவாதி நரகங்களையும் பாவிகளுக்கு மகாநரகங்கள் என்று கூறுகின்றனர். (௧௫)

தத்ராபி ச தத்வ்யாபாராதவிரோத: (௩. ௧. ௧௬)

(௩௦௩) அங்கும் அவனது வியாபாரமுண்மையின் விரோதம் இல்லை.

சித்திரகுப்தர் முதலாயினோரால் அதிஷ்டிக்கப்பட்ட நரகங்களினும், அவரையெல்லாம் பிரேரிக்கும் யமன் அவர்களுக்கு அதிஷ்டாதாவாதலின், அவ்வியமன் வசப்பட்டவராயினர் என்பதனால் விரோதமுறாது. (௧௬)

வித்யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத் (௩. ௧. ௧௭)

(௩௦௪) வித்தையும் கன்மமுமே பிரகிருதவிஷயமாதலின்.

(ஒருவன்) வித்தை எனப்படும் உபாசனபலமாகிய பிரமத்தையேனும் கன்மபலமாகிய சந்திரனையேனும் அடைகின்றான். எங்ஙனம்?

தத்ய இத்தம் விதுர்யே சேமே(அ)ரண்யே ச்ரத்தா தப இத்யுபாஸதே தே(அ)ர்சிஷமபிஸம்பவந்தி। அத ய இமே க்ராம இஷ்டாபூர்தே தத்தமித்யுபாஸதே தே தூமமபிஸம்பவந்தி।
(சாங். ௫. ௧௦. ௧, ௩)

"இதனை அறிந்தவர்களும், வனத்திலே சிரத்தையுடையராகத் தவஞ் செய்வோரும், அர்ச்சிகதியை அடைகின்றனர்; ஆயின் கிராமத்திலே யஞ்ஞாதி தருமங்களைச் செய்பவர் தூமகதி அடைகின்றனர்" என்னுஞ் சுருதியிற் கண்டவாறு பிரமத்தையும் சந்திரனையும் அடைவிப்பன முறையே வித்தையும் கன்மமுமாம் என ஆரம்பிக்கப்பட்டமையின். ஆகலின், பாவிகளுக்கு அக்கதிப் பிரசங்கமின்று. (௧௭)

ந த்ருதீயே ததோபலப்தே: (௩. ௧. ௧௮)

(௩௦௫) மூன்றாவதாயினர் (சுவர்க்கத்துக்குப்) போவாரல்லர்; அங்ஙனஞ் சுருதி கூறுகின்றமையின்.

சரீரம் பஞ்சமாகுதி வாயிலாகப் பெறப்படவேண்டுதலான், பாவிகளுக்கும் அதுபற்றிச் சுவர்க்கலோகம் வாய்க்காது;

அதயோ: பதோ ந கதரேண ச ந தாநீமாநி க்ஷுத்ராண்யஸக்ருதாவர்த்தீநி பூதாநி பவந்தி ஜாயஸ்வ ம்ரியஸ்வேத்யேதத் த்ருதீயம் ஸ்தாநம் தேநாஸௌ லோகோ ந ஸம்பூர்யதே।

(சாந். ரு. ௧௦. அ)

“இந்த இரண்டு மார்க்கத்தில் எதிலாவது இறந்து பிறக்கும் அற்ப செந்துக்கள் இடைவிடாது மீளுவனவல்ல; அவைகளுக்கு மூன்றாவதாகிய ஸ்தானமொன்றுளது; ஆகலின், அந்த உலகம் நிறைவாதல் இல்லை” என அவர்கள் சுவர்க்கத்துக்குப் போதல் இல்லை என வெளிப்படையாகக் கூறுகின்றமையான். “மூன்றாவது தானம்” என்பது பாவிகள் மேற்று. ஆகலின், பாவிகள் சுவர்க்கத்துக்குப் போவாரல்லர். (௧அ)

ஸ்மர்யதேऽபி ச லோகே (௩. ௧. ௧௯)

## (௩௦௯) உலகத்திற் கூறப்படலானும்.

இவ்வுலகத்திலே புண்ணியகன்மமுடைய * திரௌபதி முதலாயினோர்க்குச் சரீர ஆக்கத்தின்பொருட்டு ஐந்தாவது ஆகுதி அபேக்ஷிக்கப்படவில்லை எனக் கருதப்படுகின்றது. (௧௯)

தர்சநாச்ச (௩. ௧. ௨௦)

## (௩௦௭) (சுருதியிற்) காண்டலானும்.

தேஷாம் கல்வேஷாம் பூதாநாம் த்ரீண்யேவ பீஜாநி பவந்தி ஆண்டஜம் ஜீவஜமுத்பிஜ்ஜம் (சாந். ௬. ௩. ௧)

“எல்லாச் செந்துக்களுள்ளும் அண்டஜம், சீவஜம், உற்பிச்சம் என மூன்று பீஜங்களே உள” எனச் சுருதியிற் காணப்படுகின்றது. ஈண்டுச் சுவேதஜ உற்பிச்சவிஷயத்தில் அது (பஞ்சமாகுதி) அபேக்ஷிக்கப்படாமை காணப்படுகின்றது.

(ஆக்ஷேபம்) “சீவஜம் உற்பிச்சம்” என்னுஞ் சுருதியிற் சுவேதஜத்தைப்பற்றிக் கூறப்படவில்லையே எனின், (௨௦)

---

*வேதீமத்யாத் ஸமுத்தஸ்தௌ பாஞ்சாலீ சாபி கந்யகா।

(பார. ஆதிபருவம், ௧௯௯ : ௪௪)

(திருஷ்டத்துயும்நர் உதித்தபின்னர்) யஞ்ஞவேதியின் மத்தியிலிருந்து பாஞ்சாலி எனப்படும் புத்திரியும் எழுந்தாள்” என்று பாரதங் கூறுகின்றமையால், திருஷ்டத்துயும்நரும் துரோபதியும் ஐந்தாவது ஆகுதியாகிய பெண்ணிடத்திருந்து உற்பத்தியாயினரல்லர் என்பது பெறப்படுகின்றது.

(உத்தரம்) சூத்திரகாரர் இறுக்கின்றனர்.

த்ருதீய ஶப்தாவரோத⁴ ஸம்ஶோகஜஸ்ய (ங. க. உக)

**(ஙo அ) சுவேதஜமானது மூன்றுவதாகிய (உற்பிச்சத்தில்) அடங்கிற்று.**

சுவேதஜமும் மூன்றுவதாகிய உற்பிச்ச மொழியில் அடங்கிற்று. ஆகலின், பாவிகள் சுவர்க்கத்துக்குப் போவாரல்லர் என்பது நிர்ணயிக்கப்பட்டது. (உக)

## (ச) தத்சுவாபாவ்யாபத்தியதிகரணம்.

---

தத்ஸ்வாபா⁴வ்யாபத்திருபபத்தே꞉ (ங. க. உஉ)

**(ஙoகூ) அவன் ஒத்த இயல்பை அடைகின்றான்; அது பொருத்தமாதலின்.**

சுவர்க்கத்திலே பல போகம் துய்த்தபின்னர்க் கன்மசேஷத்தோடு வருகின்றனன் என மேலே அதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது.

அதை²தமேவாத்⁴வானம் புனர்நிவர்த்தந்தே யதே²தமாகாஶமாகாஶாத்³வாயும் வாயுர்பூ⁴த்வா தூ⁴மோ ப⁴வதி தூ⁴மோ பூ⁴த்வாऽப்⁴ரம் ப⁴வதி। அப்⁴ரம் பூ⁴த்வா மேகோ⁴ ப⁴வதி மேகோ⁴ பூ⁴த்வா ப்ரவர்ஷதி (சாந். ரு. கo. ரு, சு)

"பின் அவர்கள் வந்த வழியே ஆகாயத்துக்கும், ஆகாயத்திலிருந்து வாயுவுக்குமாக மீளுகின்றனர்; பின் (யஞ்ஞஞ் செய்வோன்) வாயுவாகிப் புகையாகின்றான்; புகையாகிப் பனியாகின்றான்; பனியாகி மேகமாகின்றான்; மேகமாய் வருஷிக்கின்றான்" என்னுஞ் சுருதியில், அவன் இறங்குங்கால் ஆகாய முதலியவாதல் கூறப்படுகின்றது.

ஆன்மா ஆகாயமாகின்றனா? இன்றேல் ஆகாயம் போலாகின்றனா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆகி (பூ⁴த்வா) என்னும் மொழியினால், ஆன்மா ஆகாசாதியாகவே எய்துகின்றான் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். இறங்குங்கால் ஆன்மா ஆகாசாதியாக வரவில்லை; ஆனால் ஆகாயாதி போல வருகின்றான்; அங்கே (அவனுக்கு) சுகதுக்கானுபவமின்மையின். இன்பதுன்பங்களை அடைதற்காகவே ஆன்மா அவ்வச் சரீரங்கள் எடுப்பது; ஒரு பொருளுக்கு மற்றோர் பொருட்டன்மை எய்தமாட்டாமையின். ஆகலின், இறங்குங்கால் (ஆன்மா) ஆகாயமுதலிய போல் வருகின்றான் என நிர்ணயிக்கப்பட்டது. (உஉ)

## (ரு) நாதிசிராதிகரணம்.

நாதிசிரேண விஶேஷாத் (ந. க. உந)

**(நகம) நெடுங்காலமன்று; விசேஷமுண்மையான்.**

ஈண்டு இறங்குங்கால் ஆன்மா தாமசமுறுகின்றனா? இன்றேல் தாமச முறவில்லையா? இன்றேல் நியமமில்லையா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

த இஹ வ்ரீஹியவா ஓஷதி வநஸ்பதயஸ்திலமாஷா இதி ஜாயந்தே।
(சாங். ரு. கம. சு)

"நெல்லு, யவை, ஒஷதி, வனம், திலம், உழுந்து என்பனவாயாகின்றான்" என்னுஞ் சுருதியானது (ஆன்மா) மழைபெய்தபின்னர்த் தானிய முதலிய இயல்பை அடைகின்றான் எனக் கூறுகின்றது. நெல்லு யவை முதலியவைகளாய் அடைதற்குமுன், (ஆன்மா) ஆகாய முதலியவற்றில் விளம்பமாயேனும், விளம்பமில்லாமலேனும் உளதாம்; இதற்கு நியமமில்லை எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். நென் முதலியவாகவாதற்குமுன் ஆன்மா ஆகாயமுதலியவற்றில் நெடுங்காலம் நிற்கிறதில்லை; எங்ஙனம்?

அதோ வை கலு துர்நிஷ்ப்ரபதரம் (சாங். ரு. கம. சு)

"அதிலிருந்து தவிர்தல் மிக அரிது" என்னுஞ் சுருதியினால், நென் முதலியவாயபின் அவ்வியல்பிலிருந்து நீங்குதல் அரிதாம் எனக் கேட்கப்படுகின்றது. ஆகலின், (ஆன்மாக்கள்) நென்முதலியவற்றிற்றாமதித்தலான், பிறவிடங்களிலே (அவை) விரைந்து செல்கின்றன எனப் பெறப்படுதலின், ஆகாசாதிகளில் ஆன்மா தாமசஞ் செய்யவில்லை. (உந)

## (சு) அந்யாதிஷ்டிதாதிகரணம்.

அந்யாதிஷ்டிதே பூர்வவதபிலாபாத் (ந. க. உச)

**(நகக) மற்றொன்றால் (ஆன்மாவினால்) அதிஷ்டிக்கப்பட்டவிடத்து முன்போற் கூறப்பட்டமையான்.**

ஈண்டு ஆன்மா தானியாதியோடு சம்பந்தமாத்திர முற்றுவருகின்றதா? இன்றேல், தானியமாய்ப் பிறக்கின்றதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அவை நென்முதலியனவாகப் பிறக்கின்றன எனச் சுருதி கூறுகின்றமையின், ஆன்மா தானியமாய்ப் பிறக்கின்றதெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். மற்றை ஆன்மாக்களால் அதிஷ்டிக்கப்பட்ட தானியமுதலியவற்றில் ஆன்மா சம்பந்தமாத்திரமுறுகின்றது; ஆகாய முதலியவாயிலாக இறங்கும்போது ஆங்கு ஆன்மாவுடைய பிறப்பின் காரணத்தைச் சுருதி கூருமையின், "பிறக்கின்றன" என்னுஞ் சுருதியின் பொருள் கவுணத்தின் பாலதாம். ஆன்மா பிராம்மணுதியராய்ப் பிறக்குங்கால், நல்வினையுடையார் தீவினையுடையார் என்னும் மொழிகளால் அவ்வப் பிறப்புக்களின் காரணத்தைச் சுருதி கூறுகின்றது. ஆகலின் அவன் பிராம்மணுதியராய் மாத்திரம் பிறக்கின்ருன் எனச் சுருதி கூறுவதாற் பிற விஷயங்களிலெல்லாம் சம்பந்தமாத்திரம் என்று கோடலே நிர்ணயம். (உச)

அஶுத்³த⁴மிதி சேந்ந ஶப்³தா³த் (ந. க. உரு)

(நகஉ) அசுத்தமெனின், அன்று; சுருதி கூறுவதால்.

இறங்கும் ஆன்மா தான் முன் இயற்றிய யாகாதிகளில் அக்கினிஷோமீயாதி ஹிம்சை கலந்துளதாகலின், அசுத்த கன்மபலத்தைத் துய்க்கும் பொருட்டுத் தானியாதிரூபமாய்ப் பிறத்தல்வேண்டும் எனின்,

(உத்தரம்) அன்று;

ஹிரண்யஶரீர ஊர்த்⁴வம் ஸ்வர்க³ம் லோகமேதி।
நவா உ ஏதந்ம்ரியஸே ந ரிஷ்யஸி (இரு. வே. க. கசுஉ. உக)

"சுவர்ண சரீரமாய் அதுமேலே சுவர்க்கத்துக்குப் போகின்றது;" "வாஸ்தவமாய் நீ சாவாயல்லை, அழிவாயல்லை" என்னுஞ் சுருதியினுற் பசு ஹிம்சையானது அஹிம்சையாம். ஆகலின், இறங்கும் ஆன்மா தானியாதியாகப் பிறக்கவில்லை. (உரு)

சூத்திரகாரர் மற்ருேர் பிரகாரம் விளக்குகின்றனர்.

ரேத:ஸிக்³யோகோ³(அ)த² (ந. க. உசு)

(நகந) பின்னர் இரேதஸ் விடுபவனேடு சம்பந்தம்.

யோ யோ ஹ்யந்நமத்தி யோ ரேத: ஸிஞ்சதி தத்³பூ⁴ய ஏவ ப⁴வதி।
(சாந். ரு. கo. சு)

"எவனெவன் அன்னமயின்று இந்திரியத்தை விடுங்கால் அவன் (பெண்ணிடத்துப்) பின்னும் அவ்வாகிருதியாகவேயாகின்ருன்" என்னுஞ் சுருதியில் இந்திரியத்தை விடுப்பவனேடு ஆன்மாவுக்குச் சம்பந்தமாத்திரமுறுதலாகக் கூறப்படுகின்றது. ஆகலின், முன்னரும் நெல் முதலியவற்றினும் சம்பந்தமாத்திரமே (சுருதி கருதிற்று). (உசு)

யோநே: ஶரீரம் (ந. க. உள)

## (௫கச) யோனியிலிருந்து சரீரம்.

அவன் எப்போது யோனியை அடைகின்றானோ, அப்போது சரீர முண்டாகின்றது. ஆகலின், இதற்குமுன்னே சம்பந்த மாத்திரம் என்பது தாற்பரியம். (உஎ)

---

# மூன்றும் அத்தியாயத்து

# இரண்டாம் பாதம்.

---o---

## (க) சந்தியாதிகரணம்.

ஸம்யெ ஸ்ரூஷ்டிராஹ ஹி (௩. ௨. க)

(௩கரு) சொப்பனத்திலே சிருட்டி (சீவான்மாவினது); அங்ஙனஞ் (சுருதி) கூறுகின்றதன்றோ.

மேலே ஆன்மாவுடைய போதல் மீளுதல்கள் நிரூபிக்கப்பட்டன. ஈண்டு அதன் அவஸ்தை விசாரிக்கப்படுகின்றது. சொப்பனத்திலே,

ந தத்ர ரதா ந ரதயோகா ந பந்தாநோ பவந்த்யத ரதாந் ரதயோகாந் பதஸ் ஸ்ருஜதே (பிரு. ௬. ௩. க0)

"அங்கே இரதங்கள் இல்லை, குதிரைகள் இல்லை, பாதைகள் இல்லை, ஆயின் தானே இரதங்களையும், குதிரைகளையும், பாதைகளையும் சிருட்டிக்கின்றான்" என்பனமுதலியவற்றாற் சிருட்டி கூறப்படுகின்றது.

இந்தச் சிருட்டி ஆன்மசிருட்டியா? சிவசிருட்டியா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்ம சிருட்டி எனப் பெறப்படுகின்றது.

ஸ வேஶாந்தா: புஷ்கரிண்ய: ஸ்ரவந்த்ய: ஸ்ருஜதே ஸ ஹி கர்த்தா।

(பிரு. ௬. ௩. க0)

"அவன் கேணி, வாவி, நதி என்பவற்றைச் சிருட்டிக்கின்றான்; அவனே கர்த்தா" எனச் சொப்பனம் காணும் ஆன்மாவையே கர்த்தாவாகச் சுருதி கூறுகின்றதன்றோ. (க)

நிர்மாதாரஞ்சைகே புத்ராதயஶ்ச (௩. ௨. ௨)

(௩கசு) புத்திரர் முதலாய (இச்சித்த பொருள்களையும்) சிருட்டிப்பவனாகவும் (சொல்வர்) சிலர்.

ய ஏஷ ஸுப்தேஷு ஜாகர்த்தி காமங் காமம் புருஷோ நிர்மிமாண:।

(கட. ரு. அ)

"நித்திரை செய்பவரில் விழிப்பாயிருக்கும் அந்தப் புருஷன் ஒன்றன்பின் ஒன்றாக இனிய காட்சியை உருவப்படுத்துகின்றான்" என்னுஞ் சுருதியினால், இச்சித்த பொருளைச் சொப்பனத்திற் சிருட்டிப்பவன் ஆன்மாவே என்று சில சாகையினர் உரைக்கின்றனர். ஈண்டுக் காமம் என்னும் மொழி புத்திரர் முதலாய விரும்பிய பொருள்களின் மேற்று;

ஸவா்நாமோத்க்ஷாஉதஃ ப்ரக்ருதீஷ்வ (கட. க. உரு)

"நீ விரும்பிய பொருள்களை யெல்லாம் வேண்டியபிரகாரம் கேள்" என முன்னர்க் கூறி,

ஶதாயுஷஃ புத்ரபௌத்ராந்வ்ருணீஷ்வ (கட. க. உங)

"நூறு வருஷம் சீவிக்கும் புதல்வரையும் பௌத்திரரையும் கேள்" எனச் சுருதி விளக்கினமையின். இந்த நியாயத்தினாலும் சொப்பன சிருட்டி ஆன்மாவினதே எனின், (உ)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

மாயாமாத்ரந்து காத்ஸ்ந்யேநாநபிவ்யக்தஸ்வரூபத்வாத்।

(ந. உ. ந)

(நகூ) ஆனால் (அது) மாயாமாத்திரம்; (ஆன்மாவின்) சொரூபம் முற்றும் வெளிப்படாமையான்.

சொப்பனத்திலே சிருட்டிக்கப்பட்ட மாயாமாத்திரமாகிய இரதமுதலிய பொருட்சமூகம் சிவபெருமானாற் சிருட்டிக்கப்பட்டதன்றி ஆன்மாவினாற் சிருட்டிக்கப்பட்டதன்று. சொப்பனகாலமாத்திரத்தில் முடிவுறுவதாய் நிற்றலான், (இது) சொப்பனங் காண்போனால் அநுபவிக்கப்படுவது; ஆச்சரியமாயிருத்தல்பற்றி மாயாமாத்திரமாயிருக்கின்றதென்று கூறப்பட்டது. ஆன்மாவுக்குச் சத்திய சங்கற்பத்துவாதிகள் மறைக்கப்பட்டிருத்தல்பற்றி, அவ்வான்மாவுக்கு இரதமுதலியவற்றைச் சிருட்டிக்கும் சாமர்த்தியம் இல்லை. ஆகலின்,

புருஷோ நிர்மிமாணஃ (கட. ரு. அ)

"(இச்சித்த பொருள்களைச்) சிருட்டிப்பவனாகக் கூறப்பட்ட புருஷன்" என்னுஞ் சுருதி விஷயம் ஆன்மாவைப் பற்றியதன்று.

ததேவ ஶுக்ரம் தத்ப்ரஹ்ம ததேவாம்ருதமுச்யதே।
தஸ்மிம்ல்லோகாஃ ஶ்ரிதாஃ ஸர்வே தது நாத்யேதி கஶ்சந॥

(கட. ரு. அ)

"அதுவே சுக்கிரம், அது பிரமம், அதுதான் சிவம் என்று கூறப்படுகின்றது; அதிலே எவ்வுலகமும் அடங்கின; இதற்குமேல் எவனும் போவதில்லை" என்னும் வாக்கியசேஷத்தினால், (அது) சிவபெருமானைச் சுட்டியது; ஒரே பொருளைக் காட்டலான்.

ஸ ஹி கர்த்தா (பிரு. சு. ந. ௧௦)

"அவன் கர்த்தா" என்பதும் அச்சிவனார் விஷயமே. ஆகலின், சொப்பன சிருட்டி சிவபெருமானது. (ந)

சூத்திரகாரர் ஆன்மசொரூபம் வெளிப்படாமைக்குக் காரணம் கூறுவாராயினர்.

பராபித்யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ। (௩. ௨. ௪)

**(௩௧௮) ஆயின் பரத்தினது சங்கற்பத்தினாலே மறைக்கப்பட்டது; ஆதலினாலன்றோ அவனுக்குப் பந்தமும் மோக்ஷமும் உளவாம்.**

ஆன்மாவுக்குள்ள அநாதி அபசார பிரவாக காரணமாகப் (பரத்தினது) சிவனாரது சங்கற்பத்தினால் ஆன்மாவினது சத்திய சங்கற்பத்துவ முதலியன மறைக்கப்பட்டன. அந்த அபசாரத்தினாலேதான் அது வெளிப்பட்டிலது. ஆதலினாற்றான் சிவபெருமானுடைய சங்கற்பத்தினால் அவனுக்குப் பந்தமும் மோக்ஷமும் உளவாகின்றன. அங்ஙனமே,

யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருஶ்யே(அ)நாத்ம்யே(அ)நிருக்தே(அ)நிலயநே(அ)பயம் ப்ரதிஷ்டாம் விந்ததே। அத ஸோ(அ)பயம் கதோ பவதி யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே। அத தஸ்ய பயம் பவதி (தைத். உ. எ. க)

"எவன் காணப்படாததாயும், சரீரமிலதாயும், கூறொணாததாயும், நிலயமிலாததாயும் இருப்பதிலே பயமிலனாய்ப் பிரதிஷ்டையை அறிகின்றானோ, அவன் பயமொழிந்தவனாகின்றான்; பின் அவன் அதிற் சிறிது வேற்றுமை பண்ணுவானாயின் அவனுக்குப் பயமுண்டு" எனச் சுருதியும் கூறுகின்றது. (௪)

தேஹயோகாத்வா ஸோ(அ)பி (௩. ௨. ௫)

**(௩௧௯) இன்றேல் அது தேகசம்பந்தத்தினாலுமிருக்கலாம்.**

தேவர் மனிதர் முதலாயினோர் தேகாகாரமாகிய ஜடச்செயற்கையினாலே சிருட்டிகாலத்தில் ஆன்மாவுடைய சொரூபம் மறைக்கப்பட்டிருப்பினும், பிரளயகாலத்திலே நாமரூபமாகப் பிரிக்க வியலாத சூக்குமாகாரமாகிய ஜடசம்பந்தத்தினால் அதன் சொரூபம் மறைக்கப்பட்டது. இங்ஙனம் சத்திய சங்கற்பத்துவாதிகள் மறைக்கப்பட்ட அதற்குச் சொப்பனத்திலே தாற்காலிக விசித்திரசிருட்டி சாமர்த்தியம் எய்தாது. (௫)

சூத்திரகாரர் பிறிதோர் நியாயம் கூறுகின்றனர்.

ஸூசகஶ்ச ஹி ஶ்ருதேராசக்ஷதே ச தத்வித꞉ (௩. ௨. ௬)

**(௩௨௦) அது (முன்னர் அறிவிக்கும்) சூசகமாயே உள்**

ளது சுருதி கூறுகின்றமையான்; அதிற் றேர்ந்தவர்களுஞ் சொல்கின்றனர்.

யதா கர்மஸு காம்யேஷு ஸ்த்ரியம் ஸ்வப்நேஷு பஶ்யதி।
ஸம்ருத்திம் தத்ர ஜாநீயாத்தஸ்மிந் ஸ்வப்ந நிதர்ஶநே (சாந். ரு. உ. கூ)
அத ஸ்வப்நா: புருஷம் க்ருஷ்ணம் க்ருஷ்ணதந்தம் பஶ்யதி ஸ ஏநம் ஹந்தி
(ஐதரேயஆரணியகம். ரு. உ. ச. கஎ)

"எப்போது காமியகருமங்களிலே ஸ்திரியைச் சொப்பனங்களிலே காண்கின்றானோ, அவன் ஜாக்கிரத்திலே செல்வம் வருவதாக அறியற்பாலன்;" "பின் கரிய பற்களோடு ஓர் கரிய மனிதனைக் கண்டால் அவன் இவனைக் கொல்கின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளுண்மையின், சுபாசுபத்தைக் காட்டுவதன்றோ சொப்பனம். சொப்பனுத்தியாயங்களை அறிந்தோர் சொப்பனங்கள் சுபாசுபங்களைச் சூசிப்பன என்று உரைக்கின்றனர். ஆகலின், சொப்பனப் பொருள்கள் ஆன்மசிருஷ்டமன்று; (அவை) ஆன்மசிருஷ்டமாயிருப்பின், தீமையைச் சூசிப்பிக்கும் அப்பொருள்கள் சிருட்டிக்கப்பட்டிருக்கமாட்டாவாதலின். ஆகலின், சொப்பனசிருட்டி சிவபெருமானது செய்கை எனல் யுக்தமே. (கூ)

## (உ) ததபாவாதிகரணம்.

தத³பாவோ நாடீஷு தச்ச்ருதேராத்மநி ச (ரு. உ. எ)

(கூஉக) சொப்பனமின்மை (சுழுப்தி) நாடிகளினும் பரமான்மாவினுமாம்; அது கூறப்படுதலான்.

சொப்பனமின்மையே சுழுப்தி.

யத்ரைதத்ஸுப்த: ஸமஸ்த: ஸம்ப்ரஸந்ந: ஸ்வப்நம் ந விஜாநாதி
ஆஸு ததா நாடீஷு ஸுப்தோ பவதி।
(சாந். அ. கூ. ரு)

"ஒருவன் நித்திரை செய்து அமைந்தவனாய், முற்றும் ஒய்ந்தவனாய், சொப்பனம் காணாதிருக்கும்போது, அவன் அந்த நாடிகளுள்ளே உறங்குகின்றனன்"

அத யதா ஸுஷுப்தோ பவதி யதா நகஸ்யசந வேத ஹிதா நாம நாட்ய: த்வாஸப்ததி ஸஹஸ்ராணி ஹ்ருதயாத்புரீததமபி ப்ரதிஷ்டந்தே தாபி: ப்ரத்யவஸ்ருப்ய புரீததி ஶேதே (பிரு. ச. க. ககூ.)

"அவன் ஆழிய நித்திரை செய்து ஒன்றும் அறியாதிருக்குங்கால், இதயத்திலிருந்து சரீரமெங்கும் பரந்திருக்கும் ஹிதை எனப்படும் எழுபத்தீராயிரம் நாடிகளுக்கூடாக அவன் சலித்துச் சரீரத்திலே உறங்குகின்றான்"

யநைதத்புருஷஃ ஸ்வபிதி நாம ஸதா ஸொம்ய ததா ஸம்பந்நோ பவதி (சாங். சு. அ. க)

"ஒருவன் இங்கே நித்திரை செய்யும்போது, சௌமிய! அவன் சத்தோடு இயைந்திருக்கின்றனன்" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலே ஆன்மா நாடிகளினும் சரீரத்தினும் பிரமத்தினும் நித்திரை செய்கின்றான் என்று பெறப்படுகின்றது.

இவைகளில் ஒவ்வொன்றிலா? இன்றேல் இவைகள் அனைத்தினுமா? (ஆன்மா நித்திரை செய்கின்றனன்) என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆன்மா நித்திரை செய்தற்கு நாடிமுதலிய ஸ்தானங்களில் ஒன்று அருகமாயிருக்கின்றது; ஆகவேண்டிய நித்திரை ஒரேநோக்கமுடைமையான்.

வ்ரீஹிபி ர்யஜேத |

"நெற்கொண்டு யஞ்ஞஞ் செய்வானாக"

யவைர் யஜேத |

"அவன் யவைகொண்டு யஞ்ஞஞ் செய்வானாக" என்னும் வேதவிதியிற் செயற்பாலதாகிய புரோடாசப்பிரயோசனம் ஒன்றேயுண்மையின், எங்ஙனம் அவ்விரண்டில் ஒன்றே கொள்ளற்பாற்றோ, அங்ஙனம் நித்திரை என்னும் ஒரே பிரயோசனத்தைப்பற்றினமையின், ஓர்காற் சரீரத்தினும், ஓர் கால் நாடிகளினும், மற்றோர்காற் பிரமத்தினுமாக ஆன்மா நித்திரைசெய்கின்றான் எனப் பூருவபக்ஷஞ் செய்யின்,

(சித்தாந்தம்) ஆன்மா அவையனைத்தினும் ஒருங்கு நித்திரை செய்கின்றான்; எதனால்? அநேக பிரயோசனமுண்மையின். எங்ஙனமெனின், இதயத்திருக்கும் பிரமத்தைப் போய்ச் சீவான்மாச் சேர்தற்கு நாடி ஓர் வாயிலாம். ஆன்மா ஒரேகாலத்திற் சரீரத்திலும் பிரமத்திலும் துயிலும்; (சரீரமும் பிரமமும் முறையே) மேடையும் படுக்கையும் போல்வனவாமாதலின் விரோதமின்று; இங்ஙனம் ஆன்மா நாடிவாயிலாகப் போய்ச் சரீரத்துள்ள பிரமத்திலே துயில்கின்றான். வெவ்வேறிடமும் வெவ்வேறு பிரயோசனமுமுடைமையின், தொகுப்பே ஈண்டுக் கொள்ளப்பட்டது. (எ)

அதஃ ப்ரபோதோ ஸ்மாத் (ந. உ. அ)

(நஉஉ) ஆதலினால், அதிலிருந்து விழித்தல்.

ஸத ஆஜமூ ந விஷுஸ்ஸத ஆஜமூமஹெ (சாங். கூ. கo. உ)

"அவர்கள் சத்திலிருந்து மீண்டுஞ் சத்திலிருந்து மீண்டேம் என்று அறியார்" என்ற சுருதி ஆன்மா பிரமத்திலிருந்து விழிக்கின்றது எனக் கூறுகின்றது. ஆகலின், அவை அனைத்தின் தொகுப்பே ஈண்டுக் கொள்ளப்பட்டது. அவற்றில் ஒன்றைக்கொண்டால், அது எண்வித தோஷத்துக்குள்ளாகும். "எப்போது ஆன்மா நாடிகளிலே உறங்குகின்றானோ" என்னும் (சாங். அ. கூ. ந-ஆம்) வாக்கியத்தை அங்கீகரிப்பின், அப்போது சரீரத்தையும் பிரமத்தையும் பற்றிய (பிரு. ச. க. கக; சாங். கூ. அ. க) வாக்கியங்களிற் கூறியாங்கு உறங்குகின்றான் என எய்திய பிரமாணத்தை விடுத்தலாகவும், எய்தாததும் அப்பிராமாண்ணியமுமாயுள்ளதை அங்கீகரிப்பதாகவும் முடியும்; பின்னர் "அவன் சரீரத்திலும் பிரமத்திலும் எப்போது உறங்கின்றானோ" என்னும் இரு வாக்கியங்களையும் அங்கீகரிப்பின், அப்போது சரீரப்பிரம வாக்கியங்களில் முன்னர் விடுக்கப்பட்டதைப் பிராமாண்ணியமாக அங்கீகரித்தலாகவும், முன்னர் அங்கீகரித்ததை அப்பிராமாண்ணியமாக விடுத்தலாகவும் முடியுமென எய்தியதை விடுத்தலும், எய்தாததைச் சுவீகரித்தலும், விடுத்ததைச் சுவீகரித்தலும், சுவீகரித்ததை விடுதலுமாக நான்கு தோஷங்கள் விளையாநின்றன. (இத்தோஷங்கள்) சரீரம் பிரமம் என்பவற்றைப்பற்றிய வாக்கியங்களை அங்கீகரித்தலால் நேர்கின்றன. அங்ஙனம் நாடிவாக்கியத்தைக் கொள்ளுங்காலும், நான்கு தோஷங்கள் உளவாகின்றன. இங்ஙனம் எட்டுத் தோஷங்கள் பிறப்பனவாயின. ஆகலின், தொகுப்பே பொருத்தமாகுங்கால், விகற்பம்பொருத்தமில்லை. (அ)

## (ந) கர்மாநுஸ்மிருத்தியதிகரணம்.

---

ஸ ஏவ து கர்மாநுஸ்ம்ருதிஶப்தவிதிப்ய꞉ (ந. உ. கூ)

**(நஉந) ஆனால் கர்மம், ஞாபகம், சுருதி, விதி என்பன உண்மையான், அவன்றானே.**

ஸதா ஸௌம்ய ததா ஸம்பன்னோ பவதி (சாங். கூ. அ. க)

"சௌமிய! அவன் * சத்தோடு சம்பன்னனாகின்றான்" என்னுஞ் சுருதியே இப்பொழுது ஆராயப்போந்த விஷயம்.

மேலே ஆன்மாவுடைய சுழுப்தியவஸ்தை நிரூபிக்கப்பட்டது. ஈண்டுப் பிரமத்திலே சுழுப்தி செய்தவன்றானா? இன்றேல் மற்றொருவனா? விழிக்கின்றான் என்பது சந்தேகம்.

---

*இந்தச் சத்தின் பொருளைச் (க. க. கு-ஆம்) சூத்திரக்குறிப்பிற் காண்க.

(பூருவபக்ஷம்) பிரமத்தை அடைந்தவனுக்கு மீளுதல் உசிதமன்றாதலின், மற்றொருவனென்றே கொள்ளப்படும். நிரதிசயானந்த பிரமத்திற் சாமியமுற்ற ஆன்மாவுக்குப் பின்னர்த் துக்கமயமாகிய சம்சாரவிருத்தி பொருந்தாதன்றே. சத்தாகிய பிரமத்தை அடைந்தவன் எங்ஙனம் வெளி வருவான்? அவ்விரண்டுக்கும் பேதம் என்னை? எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சத்தோடு சம்பன்னனாயினும், நித்திரை செய்தவனே விழித்து எழுந்திருக்கின்றான்; ஞானமில்லாமையாற் செய்த கன்மபலத்தை அவன் துய்க்கற்பாலனாதலானும், மீட்டும் முன் அனுபவித்தவற்றை நினைக்கின்றானாதலினாலும்,

த இஹ வ்யாக்ரோ வா ஸிம்ஹோ வா வ்ருகோ வா வராஹோ வா கீடோ வா பதங்கோ வா தம்ஶோ வா மஶகோ வா யத்யத் பவந்தி ததா பவந்தி (சாங். சு. கo. உ)

"புலியாயேனும், சிங்கமாயேனும், ஓநாயாயேனும், வராகமாயேனும், புழுவாயேனும், விட்டிலாயேனும், கொசுகாயேனும், ஒலுங்காயேனும் இங்கே இந்தச் செந்துக்கள் எங்ஙனம் இருக்கின்றனவோ, அங்ஙனமே அவை மீட்டும் மீட்டும் ஆகின்றன" என ஆன்மா முன்னிருந்தவாறு மீட்டும் ஆகின்றான் என்னும் சுருதியுண்மையானும், மோக்ஷோபாயம் விதிக்கும் வாக்கியமெல்லாம் அப்பிரயோசனமாய் முடியுமாதலினாலுமாம்.

ஸத ஆகம்ய ந விது: (சாங். சு. கo. உ)

"அவர்கள் சத்தினின்று மீண்டும் (சத்தை) அறிந்திலர்" என்னுஞ் சுருதி பிரமானந்தத்தின் ஞானம் இல்லை என்று கூறுதலால், முத்திதசையிலே போல ஆன்மா பிரமத்தில் இலயமுற்றானல்லன். ஆகலின், முதற்கண் நித்திரைக்குப்போந்தவனே மீண்டும் விழிக்கின்றனன் என்று கோடல் யுக்தம். (கூ)

## (௪) முக்தாதிகரணம்.

---

முக்தே அர்த்தஸம்பத்தி: பரிஶேஷாத் (ங. உ. கo)

**(ஙஉ௪) மூர்ச்சித்தபோது பரிசேடத்தினால், அது அரை (மரணம்) ஆகின்றது.**

ஓர் புருஷன் மூர்ச்சித்தான் என்னும் வியவகாரமுண்மையான், மூர்ச்சை எனப்படும் ஓர் அவஸ்தை அனுபவிக்கப்படுகின்றது. இந்த அவஸ்தை சுழுப்திமுதலியவற்றினின்று வேறாயதா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஜாக்கிரசொப்பன சுழுப்திக்கு வேருக ஓர் அவஸ்தை உளதாம் என அறியப்படாமையான், மூர்ச்சை என்பது சாக்கிரமுதலிய வற்றுள் அடங்கியதாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. மூர்ச்சையடைந்த புருஷனுடைய அவஸ்தை அரை மரணத்துக்குச் சமம்; பரிசேடத்தினற் சுழுப்திமுதலிய வற்றினின்று வேருயுள்ளது. பிரபஞ்சஞானமில்லாமையான் சாக்கிரசொப் பனங்களில் அடங்கியதில்லை. சுழுப்திகாலத்தில்முகம் பிரசன்னமாயிருத் தன் முதலிய இலக்ஷணத்தினுலும், மூர்ச்சையிலே அது விகாரமுறுதலாம் இலக்ஷணத்தினுலுமாகப் போந்த பேதத்தினற் சுழுப்திக்கு வேருயது மூர்ச்சை. (௧௦)

## (௫) உபயலிங்காதிகரணம்.

---

ந ஸ்தாநதோऽபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி

(௩. ௨. ௧௧)

**(௩௨௫) இடத்தைப்பற்றியும் பரத்துக்குத் தோஷப்பிர சங்கமில்லை; யாண்டும் உபயலிங்கமுண்மையான்.**

மேலை அதிகரணங்களிலே துவம்பதார்த்த ஆன்மாவுடைய ஸ்வரூப தர்மமும், போதல் மீடல்களும், அவஸ்தா விசேஷங்களும் நிரூபணஞ் செய் யப்பட்டன. அதன் பின்னர்த் தத்பதார்த்தமாகிய சிவபெருமானுடைய சொரூபதர்மமுதலாயின நிரூபிக்கப்படுகின்றன.

ஸோऽந்தராதந்தரம் ப்ராவிஶத் திஶோऽந்தரம் ஸம்ப்ராவிஶத்

(அதர்வசிரசு)

"அவர் உள்ளினுள்ளேப் பிரவேசித்தனர்; திக்கின் உள்ளேப் பிரவேசித்தனர்"

யঃ ப்ருதிவ்யாம் திஷ்டந் (பிரு. ௫. ௭. ௩)

"எவர் பூமியினுள்ளார்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, சிவபெருமான் யாண்டும் வியாபித்துப் பிரவேசித்து நிற்கின்றமை கேட்கப்படுகின்றது.

எல்லா அவஸ்தைகளினும் சர்வாந்தரியாமியாயிருக்குங்கால் அவர் பல் வகைப் பரிசதோஷத்துக்கு ஆளாவாரா? அன்ரு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) தோஷத்துக்கு ஆளாவார். அங்ஙனமே,

அஸ்தூலமநண்வஹ்ரஸ்வம் (பிரு. ௫. ௮. ௮)

"ஸ்தூலமிலரும், அணுவிலரும், குறுக்கமிலருமாயுளர்"

நிஷ்களம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம் (சுவே. சு. ௧௯)

"நிஷ்களரும், நிஷ்கிரியரும், சாந்தரும், பாவமிலரும், நிரஞ்சனருமாயுளர்" என்றற்றொடக்கத்த சுருதிகளானும் சிவபெருமானுக்கு அவ்வியல்பினதாகிய ரூபமில்லை என்று கூறப்படுகின்றது. அப்படிப்பட்ட பரிசதோஷம் எய்தி விடுமா என்னும் பயத்தினுற்றுன்,

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" என அவருக்கு அபரிச்சின்னமாகிய சத்தியஞானமாத்திரசொரூபங் கூறப்படுகின்றது. பிரகிருதி விகாரசம்பந்த முடையரே எனின், அவரும் ஆன்மாவைப் போலச் சமஸ்தவிகாரதோஷங் களுக்கும் ஆஸ்பதமாய் விடுவரெனின்,

(சித்தாந்தம்) அன்று. அவஸ்தைகள் அனைத்தினும் சர்வாந்தரியாமி யாய் இருப்பினும் சிவபெருமானுக்கு எவ்வித தோஷமும் பற்றுது. எங்ங னமெனின்,

ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோ அபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப: (சாந். அ. க. ரு)

"பாவமில்லாததும், ஜரையிலாததும், மரணமில்லாததும், துக்கமில்லாததும், பசியில்லாததும், தாகமில்லாததும், சத்தியகாமசத்தியசங்கற்பத்துவமுடை யதுமாயது (பரம) ஆன்மா"

அஸ்தி அஸ்மிந் அஸங்க்யேயகல்யாணகுணாஶ்ரய:।
ஸமஸ்தலோகஸ்ரஷ்டா பஶுபாஶவிலக்ஷண:॥

"எல்லையில்லாத ரமணீய குணங்களுக்கு ஆசிரயராயும், சமஸ்தலோகத்தை யும் படைப்பவராயும், பசுபாசங்களுக்கு விலக்ஷணமாயுமுள்ளார்" என் றற்றொடக்கத்த வாக்கியங்களிற் சமஸ்த தோஷகளங்கமில்லாமையும், நிரதி சய மங்களாகாரத்தன்மையுமாம் இரண்டு குண லிங்கங்களும் அவருக்குப் பிரசித்தமன்றே. ஆகலின், அவர் பிருதிவியாதிகளில் அந்தரியாமியாயி ருந்தவிடத்தும், தோஷமில்லை. (கக)

பேதாதிதி சேந்ந ப்ரத்யேகமதத்வசநாத் (ந. உ. கஉ)

(ந உ கூ) பேதமுண்மையான் அவர் (தோஷமுடையரா) எனின், அன்று; ஒவ்வோரிடத்தும் மறுப்புண்மையான்.

(ஆக்ஷேபம்) ஆன்மா இயற்கையாகவே பாவமின்மை முதலிய குணங் களையுடையனுயினும், தேவாதி சரீர சம்பந்தமுறுதலாம் அவஸ்தாபேதத் தினுற் கூறப்பட்ட தோஷம் எங்ஙனம் அவனுக்கெய்துகின்றதோ, அங்ங னமே சிவபெருமானுக்கும்

யஸ்ய வ்ருதிவீ ஶரீரம் (பிரு. ரு. எ. ரு)

"அவருக்குச் சரீரம் பிருதிவி" எனச் சரீரசம்பந்த முறுதலாம் அவஸ்தா பேதத்தினுல் அத்தோஷம் எய்தாதோ எனின்,

(உத்தரம்) அன்று; அவருக்கு ஒவ்வோரிடத்தும் தோஷமின்றென மறுக்கப்படலான்.

யஸ்ய வ்ருதிவீ ஶரீரம் (பிரு. ரு. எ. ரு)

"அவருக்குப் பிருதிவி சரீரம்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே

ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத: (பிரு. ரு. எ. ரு)

"அவர் உன் அந்தரியாமியாகிய அமிர்தர் (சிவன்)" என அந்தரியாமிக்கே தோஷமின்மை கூறப்படுகின்றது. ஆன்மாவுக்கோ எனின், (ரு. உ. ச) பரசங்கற்பத்தினுல் அதன் சொரூபம் மறைக்கப்பட்டதெனக் கூறப்பட்டது. (கஉ)

கவிமெபெவவெஃகெ (ரு. உ. கரு)

## (ருஉஎ) மேலும் அங்ஙனஞ் சிலர் கூறுகின்றனர்,

த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி।
(முண். ரு. க. க)

"அழகிய இரு பறவைகள் நண்பாய் எப்போதும் பிரியாது ஒரே மரத்தில் இருக்கின்றன; அவற்றுள் ஒன்று இனிய பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணுது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்று சுருதி கூறுமாறு, ஒரே சரீரத்தில் ஆன்மாவும் சிவபெருமானும் வசித்தாலும், ஒன்று தோஷத்துக்குச் சம்பந்தமுறுவதாயும், மற்றது தோஷசம்பந்தமுறாததாயும் இருத்தலே பேதமாம். ஆகலின், ஆன்மாவைப் போலச் சிவபெருமான் தோஷத்துக் காளாகார். (கரு)

ஆன்மாவும் சிவபெருமானும் சரீரத்திருப்பினும், இருப்பிலே பேதமுளதாம் எனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

அரூபவதேவ ஹி தத்ப்ரதாநத்வாத் (ரு. உ. கச)

## (ருஉஅ) அவர் அரூபம் போலவே உள்ளார்; அது (ரூபம்) அவரைப் பிரதானமாய்க் கொண்டமையான்.

பரப்பிரமமாகிய அந்தச் சிவபெருமான் தேவாதி சரீரங்களிலே சரீரியாயிருந்தாலும் ரூபமில்லாப் பொருள்போலவேயுளர்; எதனுல்? அவர் முக்கியமாய் நாமரூபங்களைப் படைத்தலான். அங்ஙனமே சுருதியும்,

ஆகாஶோ ஹவை நாம நாமரூபயோர்நிர்வஹிதா தேயதந்தரா தத்ப்ரஹ்ம (சாந். அ. கச. க)

"ஆகாயம் எனப்படுபவர் நாமரூபங்களைப் படைப்பவராகின்றனர்; இந்த நாமரூபங்களுள்ளே உள்ளது அந்தப் பிரமம்" என்று கூறுகின்றது. நாமரூபமத்தியிலேயுள்ள அவர் அந்த ரூபகாரியங்களினுற் றொடக்குண்ணுதுளர். அவர் அவற்றின் மத்தியிலே உள்ளார் என்றமையான், அவர் சுவாதந்திரியமாயுள்ளார் என்று கூறப்பட்டது. ஆன்மா கன்மபலந் துய்க்குமாறே சரீரத்தில் வசிக்கின்றுன். ஆகலின், அவ்விருவர்க்கும் பேதம். (கச)

ப்ரகாஶவச்சாவையர்த்யாத் (ந. உ. கரு)

**(நஉகூ) பிரகாசம் போன்றும் (அவர் திவ்யகுணங்களுடையர்), சுருதிகள் வியர்த்தமில்லாமையான்.**

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம" என்னும் வாக்கியம் வியர்த்தமில்லாமைபற்றி, சுவப்பிரகாசமுண்மையாற் பிரமம் ஞானரூபம் எனப்படுகின்றதன்றே; அங்ஙனம்

நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் (சுவே. சு. ககூ)

"நிஷ்களம், நிஷ்கிரியம், சாந்தம்" எனவும்,

அபஹதபாப்மா (சாந். அ. க. ரு)

"பாவமில்லாதவர்" எனவும்,

ஸத்யாத்ம ப்ராணாராமம் (தைத். க. சு. உ)

"சத்தியான்ம பிராணுராமம்" எனவும்,

மந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"மன ஆனந்தம்" எனவும்,

யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் (முண். க. க. கூ)

"சர்வஞ்ஞரும், யாவும் அறிபவரும்" எனவும்,

ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேஶஃ (சுவே. சு. கசு)

"பிரதானம் க்ஷேத்திரஞ்ஞன் என்னும் இரண்டுக்கும் பதியாகிய குணங்களையுடையர் ஈசர்" எனவும்,

பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே (சுவே. சு. அ)

"அவர் நாநாப் பிரகாரமாயுள்ள பராசத்தியுடையர் என்று கூறப்படுகின்றனர்" எனவும்,

கூய கஸ்மாஉ⁻வ்யுதெ ஊஹாஜெவொ யஸ்லவ-ா ந்நாவா நுஸி த்மஜ்ஞா த்து ஜ்ஞா நயொமெ ஹுறூயெ-ம ஊஹ தி ஊஹீயதெ தஸ்மாஉ⁻வ்யுதெ ஊஹாஜெவஃ।

(அதர்வசிரசு)

"எதனுல் அவர் மகாதேவர் எனப்படுகின்றனர்? சமஸ்த இயல்புகளெல்லாம் விடுத்துப் பரமான்மஞானயோகைசுவரியத்திஞல் மகத்தாயிருத்தலின் அவர் மகாதேவர் என்ப்படுவர்" எனவும் போந்த நூற்றுக்குமேலாய சுருதி வாக்கியங்கள் வியர்த்தமாகாமையின், கூறுணுக் கல்யாணகுணங்களுக்கு ஆஸ்பதமாயுள்ளது பிரமம் என இரு லிங்ககுணங்களே (எய்திய). (கரு)

ஸூஹ வ தந்நாத்ரு (க. உ. கசு)

**(ந.ந.௦) (சுருதியும்) அதனை மாத்திரம் கூறுகின்றது.**

ஸத்யம் ஜ்ஞாந ஊநஷம் ஸ்ரஹ (தைத். உ. க)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்ம" என்னுஞ் சுருதி பிரமத்துக்கு முடிவிறந்த ஞானமாத்திரத்தையே கூறுகின்றது. பிற குணங்களை அது மறுக்கின்றிலது; விசேஷமின்மையானும் விரோதமின்மையானுமாம். சுவர்ண கிரீடம் என்றளவிற் சுவர்ணரூபமாத்திரையே பேசியதன்றி, அதிலே பதிக்கப்பட்ட இரத்தினுதிகளை இல்லை என்று மறுக்கவில்லை; அங்ஙனமே ஈண்டும் சத்தியம் ஞானம் அனந்தம் என இயல்பாகவே மகாப்பிரகாசரூபத்திஞற் பரப்பிரமத்துக்குப் பரம ஞானகாரமாத்திரையே கூறும் சுருதியானது, பிரமத்துக்குப் பின்னர்த் (தைத். உ. க) கூறும் (விபச்சித்தை) சர்வஞ்ஞதையை எங்ஙனம் மறுக்க வல்லதாம்? பற்பல வஸ்து சமூகங்களைப் பார்த்து அறியும் ஞானம் எவர்க்குளதோ, அவர் விபச்சித் எனப்படுவர். ஆகலின் விரோதமில்லை. (கசு)

ஊஶ-யதி வாயொ சுவி ஷயு-தெ (க. உ. கள)

**(ந.ந.க) சுருதியும் (அதனைக்) கூறுகின்றது; பின் மிருதியுமாம்.**

யாண்டும் ஹேயகுணமில்லாமையும் கல்யாணகுணமுடைமையுமாக உபயலிங்கத்தையும் கூறுகின்றது மங்களசுருதி.

ஆகாஶஶரீரம் ஸ்ரஹ (தைத். க. சு. உ)

"ஆகாசசரீரம் பிரம்ம"

ஸத்யாத்ம ப்ராணாராமம் ஊந ஆநந்தம் (தைத். க. சு. உ)

"சத்தியான்ம பிராணுராமம், மன ஆனந்தம்"

ஶாந்திஸம்ருத்தம் (தைத். க. சு. உ)

"சாந்தியினுல் நிறைந்த சிவம்"

ஸ்ராஶீநயோஶ்ராவாஸ (தைத். க. கூ. உ)

"பிராசீனயோக்கியனே, தியானி" எனச் (சுருதி கூறுகின்றது). யாண்டும் பிரகாசிப்பதால் ஆகாயம் பிரகாசமெனப்படும்; இந்த ரூபம் சிதம்பரம்; (அது) சத்தியான்ம சத்தாரூபமாயுள்ளது. ஆன்மாவிலே (தம்மிலே) ஆனந்தமன்றிப் பாஹ்யத்தில் அன்றும் என்பது பிராணாராமம். மனசிலே ஆனந்தமன்றிப் பாஹ்யகரணங்களிலன்றும் என்பது மனஆனந்தம். ஈண்டு மனம் என்றது ஞானம் எனப்படும் உட்கரணமென்று கூறப்படுகின்றது. பாஹ்யகரணமில்லாமல் அபரோக்ஷமாகிய சகல பாஹ்யவஸ்து விலாசத்தினுலும், நித்திய நிஷ்களங்கத்தினுலும் சர்வஞ்ஞதையுடையது பிரமம் எனப்படுகின்றது; இதனுல் அபரிமித சொரூபானந்தானுபவமே மன ஆனந்தம். இராகத்துவேஷ முதலிய இழிந்த குணங்கள் முற்றுமில்லாதது சாந்தி; அதினுல் நிறைந்து சமஸ்ததோஷகளங்கமில்லாதிருத்தலாற் சாந்தி சமிர்த்தம் எனவும், அநாதிமுத்தராதலின் அமிர்தம் எனவும் படுவர். அவர் சத்தியஞானரூபமுடையர், அவர் சர்வஞ்ஞர்; ஆன்மாவின் நிரதிசய ஆனந்தசத்திவிலாசம் உடையர்; சமஸ்ததோஷமில்லாதவர்; இங்ஙனம் (சுருதி) யானது பரப்பிரமம் உபயலிங்கமுடையதெனக் கூறுகின்றது. அங்ஙனமே,

நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம் (சுவே. சு. கக)

"நிஷ்களம் நிஷ்கிரியம் சாந்தம்"

தர்மாவஹம் பாபநுதம் பகேஶம் (சுவே. சு. சு)

"தருமத்தைப் தருபவரும், பாவத்தைத் துரப்பவரும், பகேசருமாயுள்ளார்"

தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் (சுவே. சு. எ)

"ஈசுவரருள்எல்லாம் பரமாகிய மகேசுவரர்" என்றற்றொடக்கத்த சுருதிகள் உபயலிங்கமுடையது பிரமம் என்று கூறுகின்றன.

அநாதிமலஸம்ஸ்பர்ஶாபாவாத்ஸ்வபாவத:|
அத்யந்தபரிஶுத்தாத்மா ஶிவ இத்யுச்யதே விபு:|
அதவா அஶேஷகல்யாணகுணைகவந ஈஶ்வர:|
ஶிவ இத்யுச்யதே ஸத்பி: ஶிவதத்வார்தவேதிபி:||

(வாயு. பூ. உஅ: உஅ, உகூ)

"விசேடித்து அநாதிமலத்தொடக்கில்லாது அத்தியந்த பரிசுத்தான்மாவாய்ச் சர்வவியாபகராயிருத்தலிற் சிவன் எனப்படுவர்; அனந்தகல்யாணகுணங்களால் நிறைந்த நிதியாகிய ஈசுரராதலின் சிவன் எனப்படுவர் என்று சிவதத்துவத்தை அறிந்த சத்துக்களாற் கூறப்படுவர்" என ஸ்மிருதியும் சிவசப்த வாச்சியமாகிய பிரமம் உபயலிங்கமுடையதெனக் கூறுகின்றது. பரம

விசுத்தமங்கள குணவாசகமாகிய சிவசப்தத்தினுலே சமஸ்ததோஷகளங்க மில்லையாய், நிரதிசய புருஷார்த்த குணங்களாற் பரிபூரணமாயுள்ளது பிரமம் எனக் கூறப்படுகின்றது. இங்ஙனம் பிரமம் சிவசப்தத்தினுற் கூறப்படுதலின் (பிரமத்துக்கு) உபயலிங்கஞ் சித்திக்கின்றது. (கஎ)

அத ஏவ சோபமா ஸூர்யகாதிவத் (ந. உ. கஅ)

(ந.ந.உ) ஆதலினுலும் உவமை பரிதிமுதலிய போல்.

பிருதிவிமுதலியவற்றில் யாண்டும் உளரேனும், சிவபெருமான் தோஷரகிதரும் கல்யாணகுணங்களுக்கு நிதியாயுமுள்ளார். ஆதலினுற்றுன் சாஸ்திரங்களில் ஜலத்திலே சூரியாதிகள் போல என உவமை கூறப்படுகின்றது.

ஆகாசமேகம் ஹி யதா கடாதிஷு ப்ருதக்ப்ருதக்யதைவ ஹ்யேகஏஷ ஜலாதாரேஷிவாம்சுமாந்।

"எங்ஙனம் *ஆகாசம் ஒன்றுதானே கடாதிகளிலே வெவ்வேருயிருக்கின்றதோ, அங்ஙனமே பரமான்மா ஒருவரே வெவ்வேறு ஜலாதாரங்களிற் பிரதிவிம்பிக்குஞ் சூரியன் போல, பலவற்றிற் றங்கி வெவ்வேருயிருக்கின்றனர்" என வாஸ்தவத்தில் (வெவ்வேறிடங்களின் மாத்திரம்) இருக்கும் ஆகாயமும், (வெவ்வேறு பிரதிவிம்பங்களிலே வாஸ்தவமாகவில்லாத) சூரியனுமென இரு உபமானங்கள் எடுத்தாளப்பட்டன. இந்த அபிப்பிராயத்தினுலே, ஏகமாய ஆகாயம் குடமுதலிய வெவ்வேறிடங்களில் வெவ்வேருய் வாஸ்தவத்தில் இருப்பது போல, ஏகராகிய சிவபெருமானும் பிருதிவி ஆன்மா முதலியவாம் ஒவ்வோரிடங்களில் வேறுவேருக வாஸ்தவமாகவே உளர். சிவபெருமானும் அநேக வஸ்துக்களில் வாஸ்தவமாக உளராதல் பொருத்தமாகின்றது. இதுபற்றியே ஆகாயவுபமானம் (போந்தது). ஜலாதாரங்களில் வாஸ்தவமாய் உளதாகாத சூரியன் விகாராதிதோஷமடையாதவாறுபோல, சிவபெருமான் பிருதிவிமுதலியவைகளில் உளராயினும், அவற்றின் விகாராதி தோஷங்கள் அவர்க்கின்று. சர்வாந்தரியாமியாயுள்ள சிவபெருமான் தோஷமுருமலும், சொரூபகுணம் குறைவுருமலும் உளராயினர்; இதுபற்றிச் சூரியோபமானம். இங்ஙனமே ஆகாயாதி உவமையினுற் சர்வான்மாவாகிய சிவபெருமானுக்கு உபயலிங்கம் உண்டென்று சித்தித்தது. (கஅ)

ஈண்டுச் சூத்திரகாரர் ஆசங்கிக்கின்றனர்.

அம்புவதக்ரஹணாத்து ந ததாத்வம் (ந. உ. கக)

* ஈண்டு ஆகாய ஆதித்திய உபமானங்களை எக்கருத்திலே சைவபாஷ்யகாரர் உபயோகிக்கின்ருர் என்பதுணர்ந்து தெளிந்து மாயாவாதிகூற்றினுல் மயங்கார் சைவர்.

**(௩௩௩) ஆயின் நீரிற்போற் கொள்ளாமையின், அது அங்ஙனமின்று.**

(ஆக்ஷேபம்) நீரிலே சூரியன் அபரமார்த்தமாகக் கொள்ளப்படுவது போலல்லாமற் பிருதிவியாதிகளிற் சிவபெருமான் பரமார்த்தமாகக் கொள்ளப்படுதலின், அவருக்கு எங்ஙனம் நிர்த்தோஷத்துவமாம் என்று ஆசங்கிப்பின், (௧௯)

(உத்தரம்) அதற்குப் பரிகாரம் கூறப்படுகின்றது.

வ்ருத்திஹ்ராஸபாக்த்வமந்தர்பாவாதுபயஸாமஞ்ஜஸ்யாதேவம் தர்ஶநாச்ச॥
(௩. ௨. ௨௦)

**(௩௩௪) வளர்ச்சி குறுக்கல் இல்லை; உள்ளே உளதாகலின். இரண்டு உவமையும் சாமஞ்சசமாதலினாலும், அங்ஙனம் ஒத்த இடத்தில் (உவமைகள்) காணப்படலானும்.**

மேலைச் சூத்திரத்துப் போந்த ந (இல்லை) என்னும் மொழி ஈண்டுஅநுவர்த்திக்கின்றது. வாஸ்தவத்திற் பிருதிவியாதிகளிலே அந்தர்ப்பாவமாயிருப்பினும் சிவபெருமானுக்கு அவற்றுக்குள்ள வளர்ச்சி தேய்வுகள் இல்லை. மேலே உரைத்த இரு திருஷ்டாந்தக்கொள்கைகளின் பொருத்தத்தினலே தான் இங்ஙனம் பெறப்படுகின்றது. (பிரதிவிம்பத்தில்) உண்மையில் இராத சூரியனும், எப்பொருள்களினும் உண்மையாயிருக்கும் ஆகாயமுமாம் இரண்டு உவமைகளாற் கொள்வது சிவபெருமான் எப்பொருள்களினும் உளரேனும் இல்லாதவர்போல அவற்றின் றோஷத்தினற்றொடக்குறுதிருப்பர் என ஞாபகப்படுத்தற்காம். அங்ஙனமே "சந்திரன் போன்ற முகம்" என்பதிலே போலச் சில விசேஷதருமசாமியத்தைக் காட்டும்பொருட்டே உவமைகள் உபயோகிக்கப்படுகின்றன. ஆதலாற் பிருதிவி முதலிய பொருள்களிலே பரமார்த்தமாக அவர் உளரேனும், அவர்க்கு உபயலிங்கம் உளதாம் என்பது சித்திக்கின்றது. இல்லையேல்,

அஶ்வ இவ ரோமாணி விதூய பாபம் (சாந். அ. ௧௩. ௧)

"குதிரை உரோமங்களை உதறிவிடுதல் போலப் பாவங்களை உதறி" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் குறிக்கப்பட்ட சில தருமத்தின் ஒற்றுமை பற்றியே திருட்டாந்தம் காணப்படுகின்றது. ஆதலின், குறிக்கப்பட்ட தருமங்களின் ஒற்றுமையினற் பிரமம் உபயலிங்கமுடையதென்பது சித்திக்கின்றது. (௨௦)

(௬) பிரகிருதைதாவத்துவாதிகரணம்,

---

உபயலிங்கமும் பொருந்தாதென்பதைச் சூத்திரகாரர் ஆசங்கித்துக்கூறுவாராயினர்.

ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேததி ததோ ப்ரவீதி ச பூய:।
(ந. உ. உக)

(ருருரு) அவர் இயல்பு இவ்வளவென்பதைச் சுருதி மறுத்து, பின்னரும் கூறுகின்றது.

மேலே அதிகரணத்திற் பிரமம் இரண்டு இலிங்கமுடையதெனச் சாதிக்கப்பட்டது. அது மறுக்கப்பட்டதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே மூர்த்தஞ்சைவாமூர்த்தஞ்ச।
(பிரு. ச. ந. க)

"மூர்த்தமும் அமூர்த்தமுமான இரண்டு ரூபமே பிரமத்துக்குள்ளது" எனப் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய வடிவாகிய மூர்த்தாமூர்த்தப்பிரபஞ்சரூபத்தைப் பிரமத்தின் ரூபம் எனக் கூறிச் சுருதியானது பின்னரும்,

அதாத ஆதேஸோ நேதி நேதி (பிரு. ச. ந. சு)

"ஆதேசம் இங்ஙனமன்று, இங்ஙனமன்று" எனக் கூறுகின்றது. ஈண்டு இதி (இங்ஙனம்) என்னும் மொழி மேலே கூறியதைக் குறித்தலான், பிரமத்துக்கு மேலே கூறிய மூர்த்தமும் அமூர்த்தமுமாம் பிரபஞ்சரூபத்துவம் நிஷேதிக்கப்படுகின்றதே எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். "இங்ஙனமன்று" "இங்ஙனமன்று" என்றது பிரமம் பிரபஞ்சரூபம் என மேலே சித்தித்ததை நிஷேதித்ததன்று; முன் அறியப்படாததாய்ப் புதிதாய் விதித்ததொன்றை மறுப்பது பொருந்தாதாமாகலின். பின் அதன் பொருள்யாதோ எனின், இயல்பாக இத்துணை மாத்திரந்தான் பிரமம் (அதற்குமேல்) இல்லை என்னும் கூற்றை மறுத்தற்கே (நேதி நேதி—இல்லை இல்லை எனப்பட்டதென்று) கூறுவதே யுக்தம்; எதனால்?

நஹ்யேதஸ்மாதிதி நேத்யந்யத்பரமஸ்த்யத² நாமதேயம் ஸத்யஸ்ய ஸத்யமிதி ப்ராணா வை ஸத்யம் (பிரு. ச. ந. சு)

"இங்ஙனமன்று என்று கூறப்பட்டவரினும் பரமானது ஒன்றுமில்லை; சத்தியத்தின் சத்தியம் என்னும் நாமதேயம் போந்தது; உயிர்கள்தான் சத்தியம்; இவைகளுள்ளே சத்தியம் அவரே" என முன்னர்க் கூறப்படாத குணசமூகங்களை மீட்டும் விதந்து சுருதி அடுத்துரைத்தலினால் (என்பது). ஈண்டு,

நஹ்யேதஸ்மாத் (பிரு. ச. ந. சு)

என்னும் வாக்கியத்தில், இங்ஙனமன்று இங்ஙனமன்று என்றமையிற் குறிக்கப்பட்ட பிரமத்தினும் உயர்ந்ததொன்றில்லை எனக் கூறப்படுகின்றது.

ஊய நாஜெயம ஸதாஸா ஸதாஷ (பிரு. ச. ௩. ௬)

"பின்னர்ச் சத்தியத்தின் சத்தியம் என்றது (அவரது) நாமதேயம்" என்றும், ஆன்மாக்கள் தான் சத்தியம், அவர்களுள் இவர் சத்தியம் என அதின் (சுருதியின்) அர்த்தம் கூறப்படுகின்றது. (அஃதாவது) பிராணன்கள் எனப்படும் ஆன்மாக்கள் ஆகாயாதிபோல உற்பத்தியில்லாமையாற் சத்தியம் எனப்பட்டனர். அந்தச் சத்தியங்களுள்ளே (ஆன்மாக்களுள்ளே) இவர் சத்தியம்; சத்தியமாகிய ஆன்மாக்களின் ஞானம் போல் அவர் ஞானம் சங்கோச முதலியவின்மையின், "இங்ஙனமன்று, இங்ஙனமன்று" என்னும் வாக்கியமானது பிரகிருதமாகக் கூறப்பட்ட தருமம் இத்துணையதென்பதை நிஷேதிக்கப்போந்ததன்றி, பிரமத்துக்கு முன்னர்ச் சித்தித்த உபயலிங்கத்தையும் குறைக்கப்போந்ததன்றே;

(ஆக்ஷேபம்) "கடம் சத்தியம், படம் சத்தியம்" என்றற்றொடக்கத்தனவாக எப்பொருள்களினும் உள்ள இருப்புத்தான் பிரமம். "இங்ஙனமன்று" "இங்ஙனமன்று" என்று சுருதி நிஷேதித்தமை கடம் படமுதலியவற்றையாம் எனின், (௨௧)

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுகின்றனர்.

தஃவூக்தஜொஹஹி (௩. ௨. ௨௨)

(௩௩௬) அது அவ்வியக்தம் எனச் சுருதி கூறுகின்றதன்றோ.

பிரமரூபமானது பிரத்தியக்ஷமுதலியவற்றானும், பிற பிரமாணத்தினாலும் வெளிப்படாது.

ந ஸஹூெஶ திஷதி ரூவெஸ்ய ந சக்ஷுஷா வஶ்யதி கஶ்வெநநம் ஹூதா ...... கீஶ்தூ: (கட. ௬. ௯)

"அவர் ரூபம் கண்ணுள் நிற்கின்றிலது; *கண்ணினால் எவரும் அவரைப் பார்க்கின்றிலர்; அருளினால் (ஹூதா) அவர் வெளிப்படுகின்றனர்" என்றற்றொடக்கத்த சுருதி கூறுகின்றது.

ஆகலின், பிரத்தியக்ஷாதியினால் வெளிப்பட்ட இருப்பானது பிரமமாகாது. (௨௨)

பிரமசொரூபத்தைக் கிரகிக்கும் ஏதுக் கூறுகின்றனர்.

ஊவிஸம்ராயநெ வ்ரத்யக்ஷாநுமாநாஸ்யாம் (௩. ௨. ௨௩)

---

*"உளக்கணுக் கல்லா தூன் கணுக்கோளித்து"
(பட்டினத்தடிகள், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

**(ஙஙஎ) மேலுஞ் சுருதி ஸ்மிருதிப்பிரகாரம் *தியானத்தில் (வெளிப்படுகின்றனர்).**

மேலும் தியானரூபமாம் ஞானத்தினால் நன்றாக ஆராதித்தலாற் பிரம சொரூபம் பற்றப்படுகின்றது. தங்களைப் பிரமம் என்று (உபசரிதமாகப்) பிரமபாவனை செய்பவர்களுக்குப் பிரமத்தின் சொரூபம் வெளிப்பட யோக்கியமாகின்றதெனச்சுருதி ஸ்மிருதிகளினால் அறியப்படுகின்றது.

நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ஶ்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் (கட. உ. உங)

"இந்தப் (பரம) ஆன்மாவானவர் வேதாத்தியயனத்தினாலேனும், புத்தியினாலேனும், அநேக சிரவணத்தினாலேனும் எய்தார்; எவனை இவர் விரும்புகின்றாரோ, அவனால் அவர் அடையப்படுகின்றனர்; அவனுக்கு (பரம) ஆன்மாவானவர் தமது ரூபத்தைப் புலப்படுத்துகின்றனர்"

ததஸ்து தம் பஶ்யதே நிஷ்கலம் த்யாயமாந꞉ (முண். ங. க. அ)

"தியானஞ் செய்பவன் நிஷ்களமாக அவரைப் பார்க்கின்றனன்" என்றற்றொடக்கத்தனவாகச் சுருதியும்

நாஸௌ ப்ரத்யக்ஷவிஷய꞉।

"இவர் பிரத்தியக்ஷவிஷயத்தினரல்லர்" என்றற்றொடக்கத்தனவாக ஸ்மிருதியும் போந்தன. (உங)

ப்ரகாஶாதிவச்சாவைஶேஷ்யம் ப்ரகாஶஶ்ச கர்மண்யப்யாஸாத்। (ங. உ. உச)

**(ஙஙஅ) பிரகாச முதலியவற்றிற் போற் பேதமில்லை; (தியானத்) தொழிலை இடையீடின்றி அப்பியசித்தலிற் பிரகாசமும் எய்தும்.**

இடையீடில்லாத தியான ஆராதனையினாலே எவர்களுக்குப் பிரமம் பிரகாசிக்கின்றதோ, அவர்களுக்கு அந்தப் பிரமதரிசனவாயிலாக விஷயீகரித்தலிலே அந்தப் பிரமஞானானந்தம் ஜகதீசுவரத்துவம் என்பன பேதமின்றி எய்துகின்றன. அங்ஙனமே,

அஹம் ப்ரஹ்மாஸ்மி (பிரு. ங. ச. கO)

---

* அருப்புப்போன் முலையாரல்லல்வாழ்க்கைமேல்
விருப்புச்சேர்நிலைவிட்டுநல்லிட்டமாய்த்
திருப்புத்தூரானைச்சிந்தைசெயச்செயக்
கருப்புச்சாற்றினுமண்ணிக்குங்காண்மினே.

(அரிசிற்கரைப்புத்தூர். திருக்குறுந்தொகை. நா. இ)

"*நான் மனுவாயிருந்தேன்; சூரியனாகவும் இருந்தேன்" (என்று இருஷி வாமதேவர் கண்டுணர்ந்தார்),

தம் மாமாயுஷ ம்ருதமித்யுபாஸ்வ (கௌஷீ. ௩. ௨)

"நீ என்னை ஆன்மாவாகவும் சிவமாகவும் உபாசி" (என்று கூறினவன் இந்திரன்)

---

(௧) வாமதேவர், (௨) கிருஷ்ணர், (௩) அகஸ்தியர், (௪) விசுவாமித்திரர் என்போர் சிவோகம்பாவனையினாலோங்கிய சிவபக்தர்:—

(௧) வாமதேவர்:—

இந்தப் பிருகதாரணியத்திலே மூன்றும் அத்தியாயத்து நான்காம் பிராம்மணத்துப் பத்தாம் மந்திரத்திலே (பிரு. ௩. ௪. ௧௦), வாமதேவமுனிவர் "மனுவாயினேன் சூரியனாயினேன்" என்னும் பாவனை செய்தார் என்று கூறப் பட்டவிடத்து, "அஹம்பிரம்மாஸ்மி" என்னும் மகாவாக்கியபாவனையும் கூறப்பட்டிருக்கின்றது. இந்த வாமதேவமுனிவர் ஏகான்மவாதியா? வைணவரா? சைவரா?என உபப் பிருங்கணவாயிலாக ஆராயப்புகின்,

ஸாது ஸாது மஹாபாகவாமதேவ முநீஸ்வர।
ஸ்ரீவ ஷிவே மஹாபக்த ஷிவஜ்ஞாநவதாம் வர॥ (கைலா. அ: ௧)

"நன்று! நன்று!! மகாபாகரும், முனீசுவரருமாகிய வாமதேவரே! நீவிர் சிவஞானமுடையவருட் சிரேட்டராய், சிவபெருமானிடத்திலே மிகுந்த பத்தியுடையராய் உள்ளீர்" என்றற்றொடக்கத்தனவாக (முருகப்பிரான்) வாமதேவரை விளித்து அவருக்கு வைதிக பாசுபததீக்ஷை செய்து, சிவாத்துவிதம் உபதேசித்து, பிரணவத்தின் மந்திரார்த்தம், யந்திரார்த்தம், தேவதார்த்தம், பிரபஞ்சார்த்தம், சிவசூத்திரார்த்த முதலியவற்றை உபதேசித்தாராகக் கைலாச சங்கிதை எட்டாம் அத்தியாயந் தொடங்கிப் பதினொராம் அத்தியாயம் இறுதியாகக் கூறப்படலான், வாமதேவர் ஏகான்மவாதியருமன்று, வைணவருமன்று, பின் சிவபக்தரே; (௧. ௧. ௩௧-ஆம்) சூத்திரபாஷ்யத்தில் இந்திரனது பிரமபாவனை கூறப்பட்டுள்ளது.

(௨) கிருஷ்ணர்:—

உபமந்யுஸ் க்ருஷ்ணாய தீக்ஷாமேதாமநுக்ரஹ।

"உபமன்னியு என்பார் இந்தப் பாசுபததீக்ஷையைக் கிருஷ்ணர்க்கு உபதேசித்தார்" என்று சனற்குமாரசங்கிதையைச் சார்ந்த காளிகாகண்டத்து முப்பதிரண்டாம் அத்தியாயத்திற் கூறப்படலானும்,

உபேதா ஹி தேவகீஸுநும் உபமந்யும் ஸதீக்ஷயா।
உபஸ்ரீவாத மாஸைஸ்தம் ஸ க்ருஷ்ணோ ஜ்ஞேயோயி தத்துவாக:॥
(சிதம்பரமான்மியம், ௨௪: ௩௭, ௩௫)

"உபமன்னியு என்பார் தேவகி புதல்வராகிய கிருஷ்ணர்க்குத் தீக்ஷை செய்தார்; அவராற் சிவாகமார்த்தங்களையும் அந்தக் கிருஷ்ணர் அறிந்துகொண்டார்" என்று சிதம்பரமான்மியத்து இருபத்துநான்காம் அத்தியாயத்திற் காணப்படலானும்,

உதாநீம் த்வ மஹாதா ம்ருஷா உபமந்யோ மஹாத்மந:।
ஷிவதீக்ஷாஸ்ய நிவ்ருத்தா ஷிவாகமே விஷாரதாஸ:॥
(உபதேசகாண்டம், அ௦: ௬௩, ௬௪)

என்றற்றொடக்கத்த சுருதிகளிற் பிரமோபாசகர்கள் அந்த ஐக்கிய பாவனையினால், அந்தப் பிரமத்தின் அசாதாரண குணங்களை அடைகின்றனர் எனக் காணப்படுகின்றது.

஦ிவ்யம் த஦ாமி தே சக்ஷுஃ பஶ்ய மே யோக மைஶ்வரம்॥
(பகவற்கிதை. கக. அ)

---

"இப்பொழுது எனது பக்தசிரேட்டரும், மகாத்துமாவும், சிவாகமஞ்ஞருமாகிய உபமன்னியுவாயிலாக அவர்க்கு (கிருஷ்ணர்க்கு) சிவதீக்ஷை முற்றியது" எனச் சங்கரசங்கிதை உபதேசகாண்டத்து எண்பதாம் அத்தியாயத்திற் கூறப்படலானும்,

நமஸ்காரம் ததஃ க்ருத்வா தௌம்யாக்ரஜஸ்ய ஹரிஃ।
ப஦ுமாநேந ச ஏவ க்ருஷ்ணஃ க்ருத்வா ச ப்ர஦க்ஷிணம்॥
தஸ்யாவலோகநாதேவ ஸர்வேஷாம் க்ருஷ்ணஸ்ய தீமதஃ।
நஷ்டமேவ மலம் ஸர்வம் காயஜம் கர்மஜம் ததா॥
பஸ்மநாக்நிரிதி ஸ்ம க்ருத்வா உபமந்யுர்மஹாத்யுதிஃ।
தஸ்மிந்ஸதி விதேஜா வாயவ்யஸ்த்ராதிபிஃ க்ரமாத்॥
஦ிவ்யம் பாஶுபதம் ஜ்ஞாநம் ப்ர஦தௌ ப்ரீதமாநஸஃ॥
(இலிங்கபுராணம். பூ. க0அ: நி—அ)

"முனிவர்களே! தௌமியர் தமையனாராகிய அந்த உபமன்னியுவைக் கிருஷ்ணர் நமஸ்கரித்து, வெகுமானத்தோடு மும்முறை வலஞ் செய்தார்; அந்த முனிவருடைய பார்வையினாலே புத்திமானாகிய கிருஷ்ணர் காயத்தினாலும் கர்மத்தினாலும் இயற்றிய பாவம் அனைத்தும் ஒழிந்தன; "அக்கினி" என்றற்றொடக்கத்த மந்திரங்கொண்டு முறைப்படி மகாப்பிரதாபமுடைய உபமன்னியுவானவர் பஸ்மோத்தூளனஞ் செய்து, பிரிய மனசோடு திவ்ய பாசுபதீக்ஷைசெய்தார்" என்று இலிங்க புராண பூருவபாகத்து நூற்றெட்டாம் அத்தியாயத்தில் உரைக்கப்படலானும்,

஭கவந் ஶ்ரோதுமிச்சாமி தேவதேவேந பாஷிதம்॥
஦ிவ்யம் பாஶுபதம் ஜ்ஞாநம் விபூதிம் வாஸ்ய க்ருத்ஸ்நஶஃ॥
(வாயு. பூ. உ: சு)

"(கிருஷ்ணர் உபமன்னியுவை நோக்கி) பகவானே! சிவபெருமானால் உமாதேவியார்க்குக் கூறப்பட்ட திவ்ய பாசுபதஞானமும் அவருடைய விபூதியுமாம் அனைத்தையும் கேட்கவிரும்புகின்றேன்" என்று வேண்ட, அதற்கு உபமன்னியு விடையாக இறுத்தமையும், அவர்க்குத் தீக்ஷை செய்தமையும் பிறவும் வாயுசங்கிதை உத்தர பாகத்தில் மிகவிரிவாய்க் கூறப்படலானும்,

ஏவமுக்த்வா த஦ௌ ஜ்ஞாநம் உபமந்யுர்மஹாமுநிஃ।
ப்ராதம் பாஶுபதம் யோகம் க்ருஷ்ணாயாக்லிஷ்டகர்மணே॥

"இந்தப் பிரகாரம் மகாமுனிவராகிய உபமன்னியு (சிவபெருமானுடைய மகிமைகளைக்) கூறியருளி, கடினமில்லாது கர்மத்தை முற்றுவிக்கும் கிருஷ்ணர் பொருட்டுப் பாசுபதயோகதீக்ஷாஞானத்தைக் கொடுத்தனர்" என்று கூர்மபுராணம் இருபத்தைந்தாம் அத்தியாயத்தினும், தருமசங்கிதை இரண்டாம் அத்தியாயத்தினும் விளக்கப்படலானும்,

"நான் உனக்குத் திவ்வியநேத்திரத்தைக் கொடுக்கின்றேன்; என் ஐசுவரிய யோகத்தைப் பார்" என்றற்றொடக்கத்த வாக்கியங்களிலே, கிருஷ்ணர் முதலாயினோர்க்கு அந்த ஐக்கியபாவனையினால் அந்த ஜகதீசுரத்துவம் பிரகாசிக்கின்றதெனக் காணப்படுகின்றது. பிரம பாவனாப்பியாசத்தினாலேதான் விஸ்வாமித்திரர் அகஸ்தியர் முதலாயினோர் (முறையே) மற்றோர் சுவர்க்கத்தைச்

---

ஷிநஜஷஹெகா விஷெயண தீக்ஷிதொ நாஜஸாயவீவியி।

(பா. அநுசாசனிபருவம், ௧௪: ௩௭௪)

"அஷ்டமியிலே உபமன்னியுவினால் விதிப்பிரகாரம் தீக்ஷிக்கப்பட்டேன்" என்று வைசம்பாயனர் உதிஷ்டிரர் பீஷ்மர் என்போர்க்குக் கிருஷ்ணர் உரைத்ததாக மகாபாரதம் அநுசாசனிபருவத்துப் பதினான்காம் அத்தியாயத்திற் பேசப்படலானும்,

ஸ ஏஷ ருத்ர஭க்தஶ்ச கேஶவோ ருத்ரஸம்஭வ:।
ஸர்வரூபம் ஭வம் ஜ்ஞாத்வா லிங்கே(அ)ர்ச்சயதி ப்ரபு⁴ம்॥

(பார. துரோணபருவம், ௨௦௨: ௯௪)

"சிவபெருமானினின்று உதித்தவரும், சிவபக்தருமாகிய அந்தக் கேசவர் உலகமனைத்துக்கும் காரணம் சிவலிங்கமென்றறிந்து எப்பொழுதும் பிரபுவாகிய சிவபெருமானை அர்ச்சிக்கின்றனர்" என்றும்,

ஷஷ்டிம் வர்ஷ ஸஹஸ்ராணி தாவதேவ ஶதானி ச।
அபோ ஭க்ஷயதஸ்தஸ்ய வாயு஭க்ஷோ ஜலாஶய:।
ஸ தேன தபஸா தாத ப்ரஹ்ம ஭ூதோ யதா ஭வத்।
ததா விஶ்வேஶ்வரம் யோனிம் விஶ்வஸ்ய ஜகத: பதிம்।
ததர்ஶ ஸர்வ தேவேஶம் ஶர்வம் தேவம் ஈஶ்வரம்॥

(பா. துரோணபருவம், ௨௦௨: ௫௯, ௬௧, ௬௨)

"அறுபத்தாறாயிரம் வருஷம் வாயு ஜலபக்ஷணஞ்செய்து, தம்மை ஒறுத்து, அந்தத் தபசினால் எப்போது பிரமமாயினாரோ, அப்போது விசுவேசுவரரும் (விசுவ) காரணரும் விசுவமாகிய ஜகத்துக்குப் பதியாயினருமாகிய சர்வதேவேசுவர சிவபெருமானைத் தரிசித்தார்" என்றும் துரோணபருவத்து இருநூற்றிரண்டாம் அத்தியாயத்திற் கூறப்படலானும்,

அதனால் உபநிடதங்களிலே பிரதிபாதிக்கப்படாததாய், இராமாநுஜரால் திருநாராயணபுரத்திலே இற்றைக்கு ௮௫௦ வருஷத்துக்கு முன்னே, (அஃதாவது) சக வருஷம் ஆயிரத்துக்குமேற் பன்னிரண்டு சென்ற பகுதானியவருஷத்திலே புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்டதாயுள்ள திருமண்ணை நாராயணருக்கு ஒரிடத்தும் வைணவர் நாலாயிரப்பிரபந்தமானது ஏற்றிக் கூறாது,

஭ஸ்மதாரண ஸம்பன்னோ மம ஭க்தோ ஭விஷ்யதி।

"விபூதிதாரண சம்பன்னனாயுள்ளான் எனது (சிவபிரானது) அடியானாவன்" என்று பிருகச்சாபாலோபநிடதம் (௬. ௧௧) கூறியாங்கு, நாராயணரைச் சிவபக்தராகக் கொண்டு

஭ஸ்மஸஞ்ச்சன்ன ஸர்வாங்கோ ஭ஸ்மதிக்த த்ரிபுண்ட்ரக:। நிஶ்சலேனைவ மனஸா விஷ்ணுர்யஜதி ஶங்கரம்॥

சிருட்டித்தல், சமுத்திரத்தைக் கவளீகரித்தல் முதலிய செய்கைகளைச் செய்யச் சாமர்த்தியமுடையராகின்றனர். உலகத்திலே மாந்திரிகர் கருட மந்திராப்பியாசத்தினலே கருடனுடைய அசாதாரணகுணத்தை அடைகின்றனர். ஆகலின், பிரமாஹம்பாவனை முற்றியபோது பிரமத்துக்குரிய அசாதாரண குண அம்சத்தின் விசேஷநிலை உபாசகர்க்கு எய்தும் என்பதில் யாதும் தடையில்லை.

---

"விளங்காநின்ற திரிபுண்டரத்தையுடையவரும், விபூதியினல் வெளுத்தவரும், மௌனமுடையரும், ஜடையுடையரும், மரவுரியுடையருமாகிய நாராயணர் இடையீடின்றி மனசிலே சந்திர சூடராகிய சிவபிரானைச் சிந்தித்துப் பஞ்சாக்ஷரஞ்செபித்தார்" என்று பாரதத்தைச் சார்ந்த அரிவம்சத்திற் கூறப்படுவது கண்டு,

> "கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்
> பெரியகோலத்தடங்கண்ணன்" .........

எனத் திருவாய்மொழியில் (௪. ௯. ௬) விபூதியையும்,

> "உடையார்ந்தவாடையன்கண்டிகையனுடைநாணினன்
> புடையார் பொன்னூலினன் பொன் முடியன் மற்றும் பல்கலன்
> நடையாவுடைத்திரு நாராயணன்"

எனத் திருவாய் மொழியில் (௩. ௪. ௭) உருத்திராக்ஷத்தையும் அவர்க்கேற்றிக் கூறினமையானும், சிவபெருமானுக்கு ஒன்றைச் சமர்ப்பிக்கின் அது அவரையே சாரும் என்றும், சிவனடியார்க்கு ஒன்றைச் சமர்ப்பிப்பின் அது அச்சிவனடியார்க்கும் சிவோகம்பாவனையினல் அவ்வடியாரிடத்துத் தயிரில் நெய் போல விளங்கப்பெறும் சிவபெருமானுக்குமாக ஈரிடத்தும் எய்தப்பெறும் என்பாராய்,

> படமாடங் கோயிற் பகவற்கொன் றீயி
> னடமாடங் கோயி னம்பர்க்கங் காகா
> நடமாடங் கோயி னம்பர்க்கொன் றீயிற்
> படமாடங் கோயிற் பகவற்க தாமே

எனத் திருமூலர் திருமந்திரத்திற் கூறியாங்கு,

> நிஶாயாம் நைத்யிகம் க்ருத்வா நைஶம் த்ரையம்பகம் பலிம்।
> ததஃ ப்ரீதமநாஃ பார்த்தோ மால்யைர்கந்தைஶ்ச மாதவம்।
> ஸமலங்க்ருத்யோபஹாரம் ச நைஶம் தஸ்மை ந்யவேதயத்।

"அர்ச்சுனர் எப்பொழுதும் இராத்திரியிலே முக்கண்ணராகிய சிவபெருமானுக்கு (நிவேதிக்கப்படும்) இராத்திரி பலியைக் கொணர்ந்து அன்புபொருந்திய மனசுடையராய்க் கந்தங்களாலும் மாலைகளாலும் கிருஷ்ணரை அலங்கரித்து, மகாதேவர்க்குரிய இராத்திரியுபகாரத்தைச் செய்தார்" என்று துரோணபருவத்து எழுபத்தொன்பதாம் அத்தியாயத்து நான்காம் ஐந்தாம் சுலோகங்களினும்,

> தமுபஹாரம் ஸுக்ருதம் நைஶம் நைத்யிகமர்ஜுநஃ।
> ததர்ஶ த்ர்யம்பகாப்யாஶே வாஸுதேவநிவேதிதம்॥

"அர்ச்சுனர் தாம் இராப்போதிலே தம்மால் வாசுதேவர்க்கு நிவேதிக்கப்பட்டவற்றைச் சிவபிரான் பக்கத்திற் கிடப்பக் கண்டார்" என்று அத்துரோணபருவத்து எண்பத்தோராம் அத்தியாயத்து இரண்டாம் சுலோகத்தினும் காணப்படலானும், இப்பொருளை அடக்கி

ஆகலின் கடமுதலியவற்றிற் கூடியிருப்பது சன்மாத்திரமாய்ப் பிரத்தியக்ஷமாயுள்ள பிரமம் எனல் விருத்தமே; அப்பிரமத்தைச் சாக்ஷாத்காரம் பண்ணுதற்கு ஏதுவாயுள்ள நிதித்தியாசன முதலியவைகள் வியர்த்தமாகுமாதலினாலும், அதனை அப்பிரத்தியக்ஷமாய்க்கொண்டாலும் அப்படிப்பட்ட

---

தீர்த்தனுலகளந்தசேவடிமேற்பூந்தாமஞ்
சேர்த்தியவையேசிவன்முடிமேற்றான்கண்டு
பார்த்தன்தெளிந்தொழிந்தபைந்துழாயான்பெருமை
பேர்த்துமொருவராற்பேசக்கிடந்ததே.

என்று திருவாய்மொழியில் (உ. அ. கூ) கூறப்படுகின்றமையானும், அந்த வுண்மை கொண்டே சிவஞானபோதமாபாடியகாரர் "கண்ணன்மேலிட்ட போதுகள் முதல்வன்றிருமுடிமேற் காணப்பட்டன" என்றற்றொடக்கத்தனவாகக் கூறுகின்றமையானும்,

கிருஷ்ணர் தம்மையுந் தலைவரையும் உணர்ந்தோராகலிற் சிவோகம்பாவனையிற்றலைப்பட்டுச் சிவனாரது விசுவரூபத்தை அர்ச்சுனர்க்குத் திவ்ய நேத்திரங்கொடுத்துத் தரிசிப்பித்தார் என்று காணப்படலானும் கிருஷ்ணர் ஏகான்மவாதியுமன்று, வைணவருமன்று, பின் சிவபக்தரேயாம்.

(கூ) அகஸ்தியர்:—

ஶிவஸாவநயா தஸ்ய ஶிவஸ்ய ஸமதாம் க³தே ।
ஸமம் ஸமந்தாத³பவத் விஷமோ(அ)பி மஹீதலம் ॥

"(எஞ்ஞான்றும்) சிவபாவனை செய்தமையாற் சிவபெருமானுக்குச் சமானமாய அவ்வகஸ்திய முனிவர் பொதியமலை சென்றபோது மேடுபள்ளமாய நிலவுலகமானது சமமாயிற்று" என்று சிவரகசியகண்டத்திலே சம்பவகாண்டத்து இருபத்துமூன்றாம் அத்தியாயத்து முப்பத்து மூன்றாஞ் சுலோகத்திற் காணப்படலானும்,

ஏதாவது³க்த்வா வசநம் மைத்ராவருணி ரச்யுத:।
ஸமுத்³ரமபிப³த் க்ருத்³த⁴: ஸர்வலோகஸ்ய பஶ்யத:।
பீயமாநம் ஸமுத்³ரம் து த்³ருஷ்ட்வா தே³வா: ஸவாஸவா:।
விஸ்மயம் பரமம் ஜக்³மு: ஸ்துதிபி⁴ஶ்சாப்யபூஜயந்।

"மித்திரவர்ணருடைய புதல்வராகிய அகஸ்தியர் இவ்வார்த்தையைக் கூறிக் கோபமுற்றுச் சர்வலோகமும் பார்க்குமாறு சமுத்திரபானஞ் செய்தார்; இந்திரன் முதலிய தேவரெல்லாம் சமுத்திரம் பானஞ் செய்யப்பட்டுப்போனமை கண்டு மிக்க ஆச்சரியங்கொண்டு அவரை ஸ்தோத்திரஞ் செய்தார்" என்று வனபருவத்து நூற்றைந்தாம் அத்தியாயத்து மூன்றும் நான்காம் சுலோகங்களிற் கூறப்படுகின்றமையானும், அகஸ்தியர் சமுத்திரத்தைப் பானஞ் செய்தற்கு வன்மை கொடுக்கவல்ல சிவோகம்பாவனையில் முதிர்ந்த சிவபக்தரேயாம்.

தொன்றிலே அந்தப் பிரமகுணங்கள் காணப்படாமையானுமாம். ஆகலின், சன்மாத்திரப் பிரத்தியக்ஷம் பிரமம் அன்றென்றும், "இங்ஙனம் அன்று இங்ஙனமன்று" என்றது பிற அனைத்தையுமே நிஷேதிக்கின்றதென்றுங் கூறுவது பொருத்தமே. (உச)

---

(ச) விசுவாமித்திரர்:—

அரிச்சந்திரன் தந்தையாகிய திரிசங்கு என்பான் தான் தேகத்தோடு சுவர்க்கம் புகவேண்டித் தன் குருவாகிய வசிட்டரைப் பிரார்த்தித்தான்; அதற்கு அவர் கூடாதென்று மறுக்க, அவன் அவர் குமாரரிடஞ் சென்றான். அவர்களும் அது கூடாதென்று மறுக்க, விசுவாமித்திரரிடஞ்சென்றான். தாம் க்ஷத்திரியரேயாமாயினும் சிவோஹம்பாவனைத் தபோபலத்தினாற் பிராம்மணராயோங்கிய விசுவாமித்திரர் சரீரத்தோடு திரிசங்குவைச் சுவர்க்கத்துக்குப் போமாறு செய்ய, இந்திரன் "குருசாபம் பெற்ற மூடா! நீ இங்கே வருதல் கூடாது தலைகீழாக வீழ்க" என்று கூறி நீக்க, திரிசங்கு விசுவாமித்திரரை விளித்து, "சுவாமீ, காத்தருள்வீர்" என்று வேண்ட அதனை விசுவாமித்திரர் கேட்டு,

> ரோஷகோஹாரய தீவ்ரஸ்திஷ்ட திஷ்டேதி சாப்ரவீத்।
> ருஷிமத்யே ஸ தேஜஸ்வீ ப்ரஜாபதிரிவாபர:।
> ஸ்ருஜந்தக்ஷிணமார்கஸ்தாந் ஸப்தர்ஷீநபராந்புந:।

"கோபங்கொண்டு, திரிசங்கே! நில்! நில்!!" என்று விரைந்து கூறி இருஷிகளுள்ளே தேஜசுடையரும் துவிதீயபிரமாவை நிகர்த்தவருமாகிய அவ்விசுவாமித்திரர் தக்ஷிணமார்க்கத்திலுள்ள சப்தரிஷிகளையும் (உடனே) படைத்துத் திரிசங்குவை அங்கே நிறுத்தினார்" என்று இராமாயணத்துப் பாலகாண்டத்து அறுபதாம் சர்க்கத்திற் கூறப்படலானும்,

> பிந்தந்தி ஶைலாந் உததிம் பிபந்தி வ்யோமாபி ஸ்ருஷ்டிம் க்ஷபயந்தி நூநம்।
> த்ருணீக்ருதப்ரஹ்மமஹேந்த்ராணாம் கிம் து ஶக்யம் ஶிவதாஸகாநாம்॥

"(சிவபக்தர்கள்) மலைகளைப் பிளக்கின்றார்கள்; மகோததியைக் குடிக்கின்றார்கள்; பூமியந்தரிக்ஷத்தை வேறுக்குகின்றார்கள்; பிரமேந்திரர்களைத் திருணமாய்க் கொள்ளும் அச்சிவபக்தர்களுக்கு எது தான் அசாத்தியம்"! என்று உபப்பிருங்கணத்திற் கூறப்படலானும், சுவர்க்கலோக மொழிந்து மற்றோர் துறக்கம் படைக்கவல்ல சிவோகம்பாவனையினாலோங்கிய விசுவாமித்திரர் சிவபக்தரேயாம்.

உபலக்ஷணையினாலே, க. ந. உஉ-ஆம் சூத்திரபாஷ்யங் கூறியதினாற் கார்க்கி யாஞ்ஞவற்கியர் முதலாயினோரும், சாந்தோக்கிய பிருகதாரணியாதிகளிற் காணப்படும் ஜாபாலர் ஆதர்வணர் சுவேதாசுவதரர் முதலாயினோரும் (வைதிகசுத்தாத்துவித சைவ சித்தாந்த தத்துவப்பட வினா விடை கசுடு-ஆம் இலக்கத்திற் கண்டவாறு) வைதிக பாசுபத சிவபக்தர்களேயாம்.

ஸவொாz நஞெந கயாஹிமிமஜ (௩. ௨. ௨௫)

(௩௩௧) ஆகலின் அவர் அனந்த குணங்களோடியைந்தவர்; ஆதலினாலன்றே அவர் இயற்கை (இலிங்கம்).

பிரமோபாசகர்க்கும் அவரது ஞானானந்தம் பரமைசுவரிய முதலியன பிரகாசிக்கின்றமையான்,

வெ வா ஸ்ரஹணொ ரூவெ (பிரு. ௨. ௩. ௧)

"பிரமத்துக்கு இரண்டு ரூபம்" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் பிரமம் மேலேயுரைத்த அனந்தகல்யாணகுணங்களோடியைந்தது என்பது சித்தமாகும். ஆகலின், பிரமத்துக்கு இரண்டு இலிங்கம் உண்டு.

(ஆக்ஷேபம்) பிரமத்துக்கு இரண்டு ரூபங்கள் உள்ளன என்றற்றொடக்கத்தனவாகச் சுருதி கூறியதிற் பிரபஞ்சம் பிரமத்தின் ரூபம் என்றது ஒன்றை மற்றொன்றாகக் கோடலாம் அத்தியாச சம்பந்தத்தினால் என்று கூறத்தக்கது; வேறுபிரகாரத்தினால் அதனைக் கூறல் கூடாமையின். ஆகலின்,

ஈயாத ஆஜெஸொ நெதி நெதி (பிரு. ௨. ௩. ௬)

"ஆதேசம் இங்ஙனமன்று, இங்ஙனமன்று" என்னுஞ் சுருதி அத்தியாசத்தினால் உளதாகக் (கொள்ளப்பட்ட) பிரபஞ்சத்துண்மையை மறுத்தவாறாம் எனக் கொள்வதே யுக்தம் என ஆக்ஷேபிக்க, (௨௫)

(உத்தரம்) அத்தியாச சம்பந்தம்பற்றித் தொடராது தமது அபிமதப் பிரகாரம் கூறற்குமுன் முதற்கண்ணே வேறு (௩௪௦, ௩௪௧-ஆஞ் சூத்திரங்களால் இரு) பக்ஷங் கூறுகின்றனர்.

உஹயவ்யவஜெஶாத்து கூஷிணுவக (௩. ௨. ௨௬)

(௩௪௦) இரண்டையுங் கூறுதலான், (அவர்) சர்ப்பமும் அதன் சுருளும் போல.

ஸவெ்ா வெ ரூஃ (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரர்"

ஆவா ஹுமிவீ ஜநயநெ்வ ஏகஃ (தைத். ஆரணி. ௧௦. ௧. ௩)

"ஆகாயத்தையும் பூமியையும் படைத்துத் தேவராகிய ஒருவர்" என்னுஞ் சுருதிகள் ஒன்றாயும் பலவாயும் இருக்கும் (சிவபெருமான்) இயற்கையைக் கூறினமையின், சர்ப்பம் சுருளாயேனும் நேரியதாயேனும் இருத்தல் போல,

வெவாவ ஸ்ரஹணொரூவெ (பிரு. ௪. ௩. ௧)

"பிரமத்துக்கு இரு ரூபமுண்டு" என்றற்றொடக்கத்தவற்றாற் சிவபெருமான் பிருதிவி முதலிய மற்றைய ரூபங்களாயிருக்கும் விசேஷங் கூறப்பட்டது. (௨௬)

ப்ரகாஶாஶ்ரயவத்வா தேஜஸ்த்வாத் (௩. ௨. ௨௭)

(௩௪௧) அல்லது ஒளியுடைமையால் (அது) பிரகாசமும் அதின் ஆசிரயமும் போல்.

பிரகாசமும் அதின் ஆசிரயமும் சொரூபத்திற் பேதமுளவாயினும், அவை ஒளி என்னும் தன்மைபற்றி ஒன்ருகக் கொள்ளப்படும். இங்ஙனம் பிரமமும் உலகமுதலியவும் (பிரமத்தின்) ஒரே சாதிக்குள் அடங்கினமையிஞலாவது அவருக்குப் பூமி முதலியவாதல் எய்துகின்றது. (௨௭)

பூர்வவத்வா (௩. ௨. ௨௮)

(௩௪௨) அல்லது முன் போல.

இரண்டு பக்ஷத்துக்கும் வேறென்பதைக் காட்டுவது வா (அல்லது) என்பது. மேலே சித்வஸ்துவானது பிரகாசமாகிய ஜாதிகுணசரீரம் போல விசேஷசுபாவமாய், விசிட்டமாகிய (சிவனுரது) ஏகதேச (அம்சமாகக்) கூறப்பட்டது; இங்ஙனம் அசித்வஸ்துவுக்குமாம். மேலே உரைத்த சம்பந்தமுளதாய் ஒரே ரூபமாயிருக்குங்கால்,

ஸர்வோ வை ருத்ர: (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரர்" என்றவாறு சித்தையும் அசித்தையும் ஒரே வார்த்தையில் அடக்கிவிடலாம். மற்றிருபக்ஷத்திலும் பிரமம் தோஷமுடையதென்பதைத் தவிர்த்தல் கூடாது.

யஸ்ய ப்ருதிவீ ஶரீரம் (பிரு. ௫. ௭. ௩)
யஸ்யாத்மா ஶரீரம் (மத்தியந்தினசாகை)

"எவர்க்குப் பிருதிவி சரீரம்; எவர்க்கு ஆன்மா சரீரம்" என்றற்ருெடக்கத்த சுருதிகளானும்,

வித்யேதி சேதநாம் ப்ராஹுரவித்யேத்யசேதநாம்।
வித்யாவித்யாத்மகம் ஸர்வம் விஶ்வம் விஶ்வகுரோர்வபு:।
நிஸ்ஸந்தேஹோ விஶ்வம் யஸ்ய வஶேயத:॥

(வாயு. உத். ௬: ௬, ௭)

"சேதனத்தை வித்தை யென்றும், அசேதனத்தை அவித்தை என்றும் கூறுப; வித்தையும் அவித்தையுமாகிய சமஸ்தப்பிரபஞ்சமும் சந்தேகமின்றி விபுவாகிய விசுவகுருவின் (சிவபெருமானுடைய) சரீரமே; எதனுலெனின், பிரபஞ்சம் அனைத்தும் அவர் வசப்பட்டமையின்" என்றற்ருெடக்கத்த ஸ்மிருதிப்பிரமாணங்களானும், சேதனப்பொருளும் அசேதனப்பொருளும் அஷ்டமூர்த்தியாகிய பிரமத்தின் வடிவம் என்பதும் சித்தமாயிற்று. (௨௮)

வ்ய்திஷெயாச்ச (௩. ௨. ௨௯)

(௩௪௩) மறுத்தலினாலும்.

பிரமம் சேதநா சேதனங்களாயிருப்பினும், அவற்றின் குணமுடைய தன்றென்று,

நாஸ்ய ஜரயெ தஜ்ஜீர்யதி (சாந். அ. க. ரு)

"இதின் ஜரையினால் அது அழியாது"

அஸ்தூலமநண்வஹ்ரஸ்வ (பிரு. ரு. அ. அ)

"ஸ்தூலமன்று, அணுவன்று, குறுக்கமன்று" என்றற்றொடக்கத்த சுருதி களிலே கூறப்படுகின்றது. இஃதன்றி, பிரமம் சேதநா சேதனத்தோடுற்றா லும், அது நிர்த்தோஷமாயும், சமஸ்தமங்கலகுணங்களுக்கு ஆஸ்பதமாயு முள்ளது; அஃதாவது, பிரமமாகிய சிவபெருமான் சேதநாசேதனத்துக்குக் காரணமாயிருப்பினும், அவற்றோடு கூடியிருப்பினும், அவர் விகாரம் அஞ் ஞான முதலிய அபுருஷார்த்தமொன்றுமின்றி, சர்வஞ்ஞதை, நித்தியதிருப் தத்துவம், அநாதிபோதத்துவம், சுவதந்திரத்துவம், அலுப்தசத்தித்துவம், அனந்தசத்தித்துவ முதலிய பரம புருஷார்த்தகுணங்களையும் எப்போதும் உடையராயுள்ளார் என்பது சித்தித்தது. (௨௯)

## (எ) பராதிகரணம்.

---

ஈண்டுச் சகல சேதநாசேதன வடிவாயுள்ள பரமசத்திவிலாச சமரச பரமான்மாவாயுள்ளார்க்குச் சர்வதோஷவாசனைகளங்கமின்மையானும், சர் வஞ்ஞதைமுதலிய சமஸ்த மங்கலகுணரத்திநாகரமுண்மையானும், விரூபா க்ஷமுண்மையானும், இந்தப் பரப்பிரமசிவனார்க்குப் பரமாக மற்றோர் வஸ்து இல்லை என்று இறுத்தற்கு முன்னர்ச் சூத்திரகாரர் ஆசங்கிக்கின்றனர்.

பரமதஃஸேதூந்மாநஸம்பந்தபேதவ்யபதேசேப்ய: (௩. ௨. ௩௦)

(௩௪௪) சேது அளவு சம்பந்தம் பேதம் குறிக்கப்படுத லான், அவர்க்குமேல் ஒன்றுளது.

முதலாம் அத்தியாயத்து முதற்பாதத்து இரண்டாஞ் சூத்திரமுதல் மூன்றாம் அத்தியாயத்து இரண்டாம் பாதத்து இருபத்தொன்பதாஞ் சூத்திர மிறுதியாக, பரமகாரணராகப் பிரதிபாதிக்கப்பட்ட சிவபெருமானுக்கு மேலாக ஓர் வஸ்து உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உளது என்பது.

அத ய ஆத்மா ஸ ஸேதுர் விதிருதி: (சாந். அ. ச. க)

ஏதம் ஸேதும் தீர்த்வாந்த: ஸந்நநந்தோ பவதி (சாந். அ. ச. ௨)

"இந்தப் (பரம) ஆன்மா தாங்குவதாகிய சேது;" "ஒருவன் குருடனுயிருந்தாலும் இந்தச் சேதுவைக் *கடந்து (தீக்ஷா) குருடனுகான்"

அதாஷூாஸ்ரூவஜ (சாங். ங. கஅ. உ)

"நான்குபாதமுள்ளது பிரமம்"

சுரூகமெஷ்யஷ ஸெகூ: (முண்ட. உ. உ. ரு)

"இது சிவபிரானுர் சேது" என்றற்றொடக்கத்த சுருதிகளால் இந்தப் பரப்பிரமம் சேதுவாகவும், கடக்கப்படுவதொன்ருகவும், அளவுபடுத்தப்படுவதொன்ருகவும், அடைவிப்பதொன்ருகவும் கூறப்படுகின்றது. ஆகலின், இவரினும் மேலாக ஓர் வஸ்து உண்டென்று கூறப்படுகின்றது எனின், (ஙo)

(சித்தாந்தம்) இஃதன்றென்று கூறப்படுகின்றது.

ஸாமாநூாத்து (ங. உ. ஙக)

(ஙசரு) ஆனல் அது சமானத்தன்மையுளதாகலின்.

து (ஆனல்) என்னும் பதம் பூருவபக்ஷத்தை மறுப்பதாக உணர்த்துகின்றது. ஆகலின், சர்வோத்தமராகிய சிவபெருமானிலும் மேலாயதொன்றுளதென்னும் வாதம் யுக்தமன்று;

விஶ்வாயிகொ ரூடுரா மஹஷிஃ (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"மகர்ஷியாகிய உருத்திரர் விசுவாதிகர்" என்றற்றொடக்கத்த சுருதிகளால், அவர்க்கு விசுவாதிகத்துவம் (எல்லாவற்றுக்கும் மேலாந்தன்மை) சித்திக்கின்றமையான்.

ஊய ய ஆத்மா ஸெகூ விஃயுதி ரஷாஂலொகாநாமஸஂலெஷாய (சாங். அ. ச. க)

"இவ்வுலகங்களுக்கு யாதும் கலக்கம் நேரிடாவண்ணம் தாங்கும் சேது இந்தப் (பரம) ஆன்மா" எனக் கூறப்படுதலான், அவர் உலகமெல்லாம் கலக்கமடையாது தடுத்துச் சேதுவுக்குச் சமானமாயிருத்தலின், ஈண்டுச் சேது எனவும் பட்டார்.

ஸவஂ வலிஂ ஸூஹ (சாங். ங. கச. க)

"எல்லாமன்றே பிரமம்" என்னுஞ் சுருதியிற் கூறப்பட்டவாறு, உலகத்துக்கு நிமித்தோபாதான இயல்பைப் பூண்டது பிரமமே என்றும்,

வாகஜிக: வெூதாஹி ஸஂஹவிதாஷி।

---

* இதற்கு அடைந்து எனப் பொருள் கோடல் வேண்டுமென்பது ஙசகூ-ஆம் சூத்திரத்து உதகரிக்கப்பட்ட கைவல்லிய சுருதிப் பொருள் கூறப்பட்டவிடத்துக் காண்க.

"இங்கிருந்து புறப்பட்டு அவரிடத்துக்கு நான் போவேன்" என்னுஞ் சுருதியினால், அதுவே அடையற்பாலதென்றும் கொள்ளப்படுகின்றது. பிறிதோரிடத்தில்,

த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம் ... ... ... ... (கைவ)

"முக்கண்ணரும், நீலகண்டரும், பிரசாந்தரும், பூதயோகியும், சமஸ்தசாக்ஷியுமாயுள்ளாரை முனியாவான் தியானித்து இருளுக்கு மேலே போய் அடைகின்றான்" என்னுஞ் சுருதியினாலே தமசுக்கு மேலாய்ச் சகல காரணமும், சர்வஞ்ஞமும், முக்கண்ணுடைமை முதலிய இலக்கணமுமுள்ள பிரமந்தானே அடையற்பாலதென்று உரைக்கப்படுகின்றது. ஆகலின், ஈண்டு (சாந். அ. ௪. க) தரதி என்னும் மொழி பரத்தை அடைதலின் மேற்று; இன்றேல் விசுவாதிகரும் பரமகாரணருமாயுள்ளார்க்கு மேலாகப் பரவஸ்து உளதென்று கொள்ளின், அதற்கு மேலும் மற்றோர் வஸ்து உளது என்னும் பிரசங்கத்தினால் வேதாந்த வாக்கியங்களுக்கெல்லாம் அநவஸ்தா தோஷம் நேரிடும். ஆகலின், எல்லாவற்றிற்கும் அதீதராயுள்ளார் சிவபெருமான் என்பதினால் எல்லாவற்றிற்கும் உற்கிருஷ்டம் பிரமத்துக்கே எய்துகின்றது. (௩க)

பிரமம் அளக்கற்பாற்று என்பதுபற்றிச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

புத்த்யர்த்த: பாதவத் (௩. ௨. ௩௨)

(௩௪௬) தியானத்தின் பொருட்டே, பாதத்திற்போல.

நான்கு பாதத்தையுடைய பிரமமென அளவுபடுத்திக் கூறுவது வாக்கைப் பாதமாயுள்ளது, கண்ணைப் பாதமாயுள்ளது என்பது போலத் தியானத்தின் பொருட்டேயாம். (௩௨)

ஸ்தாநவிசேஷாத் ப்ரகாசாதிவத் (௩. ௨. ௩௩)

(௩௪எ) விசேஷஸ்தானமுண்மையான் பிரகாசாதியிற் போல.

சிவபெருமான் அபரிமிதராகவே உளராயினும், பிரகாசமுதலியன பலகணி முதலிய ஸ்தான சம்பந்தத்தினால் வரையறுக்கப்பட்டுளவாகத் தோற்றல் போல, அவர் ஸ்தானவிசேஷத்தினால் வரையறுக்கப்பட்டவராகக் கோடல் யுக்தம். (௩௩)

அவர் அடையற்பாலராயினும் அவர்தான் (பக்தரை) அவ்வெல்லைக்குட்செலுத்துவோருமாம் எனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

உபபத்தேஸ்ச (௩. ௨. ௩௪)

(௩௪அ) பொருத்தமாதலினாலும்.

யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: (கட. ௨. ௨௨)

"எவனை இவர் விரும்புகின்றாரோ, அவனால் அவர் அடையப்படுகின்றனர்" என்று சுருதி சொல்வதால், அடையற்பாலராய்நின்ற சிவபெருமானே (பக்தனை) அடைவிப்பவருமாம். ஆகலின், சிவபெருமானிலும் மேலாயினார் எவரும் இல்லை என்பது சித்திக்கின்றது. (௩௪)

(அ) அந்நியபிரதிஷேதாதிகரணம்.

---

ததாऽந்யப்ரதிஷேதாத் (௩. ௨. ௩௫)

(௩௪கூ) அங்ஙனமே மற்றொன்றை மறுத்தலான்.

மேலை அதிகரணத்திலே விரூபாக்ஷராகிய பரப்பிரம சிவனார்க்கு மேலாக யாரும் இல்லை என்று நிரூபிக்கப்பட்டது. மீண்டும் இங்கே அவருக்கு ஒப்பாயினார் எவராயினும் உளரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சிவபெருமானிலும் உத்கிருஷ்டவஸ்து இல்லையேனும் உலகத்துக்குக் காரணமாகிய அவ்வீசுவரத்துவ முதலியவற்றோடு துல்லியமாய (வஸ்து) உண்டே.

ஸஹஸ்ர ஶீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்।

(தைத். ஆர. ௩. ௧௨. ௩௩)

"ஆயிரம் தலையுடையரும், ஆயிரம் கண்ணுடையரும், ஆயிரம் காலுடையருமாகிய புருஷர்" என்னும் சுருதியில் ஒரு புருஷர் உளராய் அவரே "ஆயிரந் தலையுடைய புருஷர்" என்றற்றொடக்கத்தவற்றால், அவர் அநேக முகமும் அடி முதலியவு முடையராகவும்,

பாதோऽஸ்ய விஶ்வா பூதாநி (தைத். ஆரணி, ௩. ௧௨. ௩௪)

"அவருடைய பாதம் சமஸ்த உயிர்களுமாம்" என்னுஞ் சுருதியினால், அவர் உலகத்தோடியைந்துளராகவும்,

த்ரிபாதஸ்யாம்ருதம் திவி (தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௪)

"ஆகாயத்தில் அவரது மூன்று பாதம் அமிர்தம்" என்னுஞ் சுருதியினால், அவர் பரமாகாயத்தில் உளராகவும்,

தஸ்மாத்விராளஜாயத। விராஜோ அதி பூருஷ:।

(தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௪)

"அவரிலிருந்து விராட்டுப் பிறந்தனர்; விராட்டுக்கு அடுத்தவர் புருஷர்" என்னுஞ் சுருதியினால், அவ்வியக்தத்துக்கும் இரணியகருப்பருக்கும் அவர் உபாதானராகவும்,

ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே (தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௬)
"ஆதித்தியவர்ணராகிய அவர் தமசுக்கு மேலுள்ளார்" என்னுஞ் சுருதியினால், அவர் தமசைக் கடந்துள்ளாராகவும்,

தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி (தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௬)
"அவரை இங்ஙனம் அறிபவன் சிவனாகின்றான்" என்னுஞ் சுருதியினால், அவர் மோக்ஷஹேதுவாயுள்ளாராகவும் பெறப்படுகின்றது. பின்னர்,

ஸஹஸ்ரசீர்ஷம் தேவம் (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௨௬)
"ஆயிரம் தலையுடைய தேவர்" என்று தொடங்கி,

பதிம் விச்வஸ்ய (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௨௬)
"அவர் விசுவத்துக்குப் பதி" என அவரது விசுவபதித்துவமும்,

நாராயணம் பரம் ப்ரஹ்ம (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௨௬)
"நாராயண பரம்பிரம்ம" என்பதில் நாராயணசப்தத்தின் பொருளானமையும்,

பரமாத்மா வ்யவஸ்திதஃ (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௩௦)
"(இதயத்திலே) பரமான்மா உளர்" என்பதினால் அவர் தஹரத்தில் உபாசிக்கற்பாலர் என்பதும் பெறப்படுகின்றன. ஆகலின், இந்த நாராயணர் சிவபெருமானுக்கு ஒப்பாகிய குணங்களையுடையர்; இவைகளே சிவபிரானார் குணங்களுமாம்.

ஸர்வாநநசிரோக்ரீவஸ்ஸர்வபூதகுஹாசயஃ।
ஸர்வவ்யாபீ ஸ பகவாந்தஸ்மாத்ஸர்வகதச்சிவஃ (சுவே. ௩. ௧௧)

"எங்கும் முகமுடையரும், சிரசுடையரும், கழுத்துடையரும், ஒவ்வோர் ஆன்மாவின் இரகசிய குகைக்கண்ணரும், சர்வவியாபியுமாயுள்ளார் அந்தப் பகவான்; ஆகலின், சிவபிரானே சர்வவியாபி" என்று மந்திரோபநிடதங் கூறுகின்றது.

விச்வதச்சக்ஷுருத விச்வதோமுகஃ।
"எங்கும் கண்களும், எங்கும் முகங்களும் உடையர்" என மகோபநிடதத்தினும், சிவசங்கற்போபநிடதத்தினுங் கூறப்படுகின்றது.

ஸர்வதச்சக்ஷுருத விச்வதோமுகஃ (அதர்வசிரசு)
"எங்கும் கண்கள் எங்கும் முகங்கள்" என அதர்வசிரசிலே சிவபெருமானுக்கு அநேக முகங்களும் பாதங்களும் உள்ளனவாகக் கூறப்படுகின்றது.

ஊயாஞ்ஹ ஹுகூதிம் விஜாநாயிநஞ் ஊஹெறாஜ்|
தஸ்ாவயவஷஹிெதந வ்ாவ்ஹ ஸவமிஜம் ஜமுஜ||

(சுவே. ச. கo)

"மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக; இப்பிரபஞ்சம் அனைத்தும் அவரது அவயவமாயிருக்கும் அதினல் வியாபிக்கப்பட்டது" என்னுஞ் சுருதியினல், அவர் உலகத்தைத் தமது அம்சவிசிட்டமாகவுடையர் என்றும்,

ஹிரண்யமஹிம் வஸ்தி ஜாயமாநம் (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"இரண்ணியகருப்பர் பிறக்கக் காண்பவர்" என்பதில், இவர் இரண்ணிய கருப்பர்க்குக் காரணர் என்றும்,

ஸமஸ்ஸாக்ஷிஞமஸஃ வரஸ்தாஜ (கைவ)

"இருளுக்குமேற் சமஸ்த சாட்சியாயுள்ளார்" என்றற்றொடக்கத்தவற்ருல், அவர் இருளுக்கு மேலாயினர் என்றும்,

ஊஹுாம் விவாவ்ஜ (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"பாவமில்லாத தகரத்துள்ளார்" என்றமையால், அவர் தகரோபாசியர் என்றும்,

ஜூாகூா ஶிவம் பாாஷிதூஞெதி (சுவே. ச. கச)

"அவன் சிவத்தை அறிந்து அத்தியந்தசாந்தி அடைகின்ருன்" என்றற்றொடக்கத்தவற்ருல், அவர் மோக்ஷஹேதுவாயினர் என்றும்,

ஸவெமிஸ்ஷ்ய ஸம்வனஃ (அதர்வசிகை)

"சர்வைசுவரிய சம்பன்னர்" என்றமையால்; அவர் உலகத்துக்கு ஈசர் என்றும் பெறப்படுகின்றது. இங்ஙனம் விசுவரூபத்துவமுதலிய குணங்கள் சமானமாய் நாராயணர்க்கும் சிவபெருமானுக்குமுளவாம். பூஜாவிதானஞ் செய்யும் ஸ்மிருதிமுதலியவைகளில்,

ஶிவம் வா விஷ்ணுமேவவா|

"சிவனையேனும் விஷ்ணுவையேனும்" என்றமையாற் சிவன் விஷ்ணு இருவருள் எவரையேனும் சமானமாகப் பூசிக்கலாம் எனக் கேட்கப்படுகின்றது. உலகத்திலே அவ்விருவர்க்கும் சமமாகப் பூசைக்குரிய ஸ்தலமுதலியனவும், அவ்விருவரையும் பிரதிபாதிக்கும் புராணுகமங்களும் சமானமாயுள்ளன. ஆகலின், சிவபெருமானுக்கு ஒப்பாகிய புருஷர் நாராயணர் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். எங்ஙனம் சிவபெருமானுக்கு மேலாயினர் எவருமில்லையோ, அங்ஙனமே அவருக்கு ஒப்பானவரும் இல்லை; மற்றொருவர் உலகத்துக்குக் காரணமாதலும் பதியாதலும் இல்லையாதலின்.

ஏக ஏவ ருத்³ரோ ந த்³விதீயாய தஸ்து²:|
ய இமாம்ல்லோகாநீஶத ஈஶநீபி⁴: பரமஶக்திபி⁴: (அதர்வசிரசு)

"இவ்வுலகங்களைத் தமது பரமசத்திகளினால் ஆளுகின்ற உருத்திரர் ஒருவரே; அவர்கள் இரண்டாவதற்காக இருந்திலர்" எனவும்,

த்³யாவா ப்⁴ருமீ ஜநயந்தே³வ ஏக: (தைத். ஆரணி. ௧௦. ௧. ௩)

"விண்ணையும் மண்ணையும் படைத்துத் தேவர் ஒருவர்" எனவும்

ய ஏகோ ருத்³ர உச்யதே (தைத். ஆரணி. ௧. ௧௨. ௫௬)

"எவர் ஏகரோ, (அவர்) உருத்திரர் எனப்படுவர்" எனவும்,

க்ஷராத்மாநாவீஶதே தே³வ ஏக: (சுவே. ௧. ௧௦)

"க்ஷரத்தையும் (பாசத்தையும்), ஆன்மாவையும் ஆளுகின்ற அரராகிய தேவர் ஒருவர்" எனவும்,

யதா³ சர்மவதா³காஶம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா:|
ததா³ ஶிவமவிஜ்ஞாய து³:க²ஸ்யாந்தோ ப⁴விஷ்யதி (சுவே. ௬. ௨௦)

"எப்போது மனிதர் ஆகாயத்தைத் தோலாக உடுப்பார்களோ, அப்போது சிவத்தை அறியாது (மனிதருடைய) துக்கத்துக்கு ஈறும் எய்தும்" எனவும்,

ஶிவ ஏகோ த்⁴யேய: ஶிவங்கர: ஸர்வமந்யத் பரித்யஜ்ய (அதர்வசிகை)

"மற்றெல்லோரையும் விடுத்துச் சர்வைசுவரராகிய சிவன் ஒருவரே தியானிக்கற்பாலர்" எனவும்,

யதா³ தமஸ்தந்ந தி³வா ந ராத்ரிர்ந ஸந்ந சாஸச்சி²வ ஏவ கேவல:|
(சுவே. ௪. ௧௮)

"எப்போது இருளிருந்ததோ, அப்போது இரவுமில்லை, பகலுமில்லை, சத்துமில்லை, அசத்துமில்லை, சிவன் ஒருவரே இருந்தார்" எனவும் போந்த சுருதிகளானும் பிறவற்றானும் உலக சிருட்டிவிஷயத்திற் சிவபிரானுக்கு வேறாகப் பிறர் ஒருவர் இல்லை என்று நிஷேதிக்கப்படுகின்றது. ஆகலின், சிவபெருமானுக்கு ஒப்பாயினார் யாரும் இல்லை. பரமசத்தியுடைமையின் சிவபெருமான் நிமித்தகாரணரே. புருஷர் (நாராயணர்) உபாதானமே; உபாதானமாயிருத்தலின், இவர் இரண்ணியகருப்பருக்குக் காரணர்; சிவபிரான் நிமித்தகாரணராகக் கூறப்படுகின்றனர். ஆகலின், (நாராயணர் உபாதானகாரணமும், சிவபெருமான் நிமித்தகாரணமுமாக) இருவரும் ஜகத்காரணராக அறியப்படுகின்றனர்.

தஸ்மாத்³விராட் (தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௪)

"அவரினின்று விராட்டுப் பிறந்தனர்" என்றமையால், புருஷனுக்கு (நாராயணர்க்கு) உபாதானத்துவமும்,

ஹிரண்ய஗ர்ப்பம் பஶ்யத ஜாயமாநம் (தைத். ஆரணி. ௧0. ௧௨. ௨அ)

"இரண்ணியகருப்பர் பிறக்கக் காண்பவர்"

த்யாவா பூமீ ஜநயந் தேவ ஏக꞉ (தைத். ஆரணி. ௧0. ௧. ௩)

"விண்ணையும் மண்ணையும் படைத்துத் தேவர் ஒருவர்" என்ற சுருதியால் சிவபெருமானுக்கு நிமித்தோபாதானமும் கூறப்படுகின்றன. சர்வஞ்ஞரும் சர்வசக்திமானுமாகிய பரப்பிரம சிவனுர் எனப்படும் விசுவாதிகரினின்று முதற்கண்ணே பரப்பிரகிருதியாயுள்ள பராசத்தி உண்டாகின்றது. அந்தச் சத்தி

ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ꞉ (தைத். ஆரணி. ௩. ௧௨. ௩௩)

"அவர் ஆயிரந்தலையுடைய புருஷர்" என்று சுருதியிற் கூறப்பட்டவாறு, பிரதமபோக்தாவாய் அந்தச் சத்தி வெளிப்படும் அவசரத்திற் புருஷன் என்று சொல்லப்படுகின்றது. அந்தப் புருஷர்க்கு ஆன்மாவாய் வியாபித்துநின்ற சிவத்திலிருந்தே சமஸ்த சேதனசேதனப் பிரபஞ்சம் உண்டாகின்றது.

ஸர்வோ வை ருத்ர꞉ (தைத். ஆரணி. ௧0. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரரே" எனச் சிவபெருமான் சர்வான்மாவாய் இருத்தலைக் கூறப்புகுந்து, உபாதானமாதலின் புருஷராகிய நாராயணர்க்கும் சர்வான்மகத்துவம் கூறுமேல், புருஷர்க்குச் சர்வான்மகத்துவம் எங்ஙனமாம்? என ஆக்ஷேபம் நிகழுங்கால்,

புருஷோ வை ருத்ர꞉ (தைத். ஆரணி. ௧0. ௨௪. ௪௨)

"புருஷரே உருத்திரர்"

புருஷஸ்ய வித்ம ஸஹஸ்ராக்ஷஸ்ய மஹாதேவஸ்ய தீமஹி।
(தைத். ஆரணி. ௧0. ௧. ௫)

"நாம் புருஷரைத் தியானிப்பேம், ஆயிரம் கண்களையுடைய மகாதேவரைத் தியானிப்பேம்" என்னும் சுருதிகளாற் புருஷரும் சிவபெருமானுடைய மகாவிபூதியா மியற்கையினர் என்றும், விசுவரூபி என்றும் நிரூபிக்கப்பட்டது. சர்வஞ்ஞரும், சர்வசத்திமானும், நித்தியதிருப்தரும், சுவதந்திரரும், விசுவாதிகரும், நிமித்தபூதருமாகிய பரப்பிரம சிவபெருமானே சிருஷ்டிகாலத்திலே அநேகமாவேனுக எனச் சங்கற்பித்து, தம்மிலிருந்து இந்தப் புருஷரை (நாராயணரைச்) சிருட்டிக்கின்றனர்; (இதனுற் பரப்பிரமமாகிய) தம்மினின்று பிரிந்து தமது அம்சமாயுள்ள (இந்தப் புருஷரால்) உலகம் அனைத்தும் உண்டாகின்றது.

தஸ்ய ஸ்ருஷ்டா ததேவாநு ப்ராவிஶத் தத்நு ப்ரவிஶ்ய ஸச்ச த்யச்சாபவத் (தைத். ௨. ௬)

"அவர் அதனைச் சிருட்டித்து அதினுள்ளே பிரவேசித்துச் சத்தும் அசத்து மாயினர்" என்றற்றொடக்கத்த சுருதியானும்,

மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந்மாயிநந்து மஹேஶ்வரம்।
தஸ்யாவயவபூதைஸ்து வ்யாப்தம் ஸர்வமிதம் ஜகத் (சுவே. ௪. ௧௦)

"மாயையைப் பிரகிருதியென்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறியற்பாற்று; இப்பிரபஞ்சமெல்லாம் அவரது அவயவமாயிருக்கும் அதினால் வியாபிக்கப்பட்டது" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலும் (அவ்வுண்மை) பெறப்படுகின்றது. நிமித்தகாரணரின் சங்கற்பத்தினால் உபாதானத்துவம் உண்டாகின்றது; அதனால் உபாதானத்தினும் நிமித்தகாரணம் உயர்ந்தது. நிமித்தகாரணத்திலிருந்து உபாதானம் பிரிக்கப்படாமையின், நிமித்தகாரணத்தின் குணங்கள் உபாதானத்துக்கு (நாராயணருக்குச்) சாற்றப்படுகின்றன. ஆகலின், சிவபெருமானுக்கு ஒப்பாயினாரும் மேலாயினாரும் இல்லையே. (௩௫)

முன்வரும் நியாயத்தினாலும் சிவபெருமானுக்கு ஒப்பாயதும் மிக்காயதுமாக ஒருவஸ்துவும் இல்லை என்று சூத்திரகாரர் கூறுவாராயினர்,

ஸர்வகதத்வமாயாமஶப்தாதிப்ய: (௩. ௨. ௩௬)

**(௩௬) அதனால் அவருக்குச் சர்வவியாபகம்; ஆயாமசப்த முதலிய வுண்மையான்.**

ஆயாமம் என்பது மகாவியாப்தி, சமஸ்தப் பிரபஞ்சத்தையும் வியாபித்தலைப் பிரதிபாதிக்கும் பரத்தனவாகிய

ஸர்வாநநஶிரோக்ரீவ: (சுவே. ௩. ௧௧)

"எங்கும் முகங்களும், தலைகளும், கழுத்துக்களும்" என்றற்றொடக்கத்த மந்திரோபநிடத வாக்கியங்களானும்,

விஶ்வதஶ்சக்ஷுருத விஶ்வதோமுக: (சுவே. ௩. ௩)

"எங்கும் கண்கள், எங்கும் முகங்கள்" என்னும் சுருதிகளானும்,

அணோரணீயாந் (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௬)

"அணுவுக்கணு" என்று தொடங்கி,

ஸர்வோஹ்யேஷ ருத்ர: (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் இந்த உருத்திரர்" என்பதிறுதியாய்ப் போந்த மகோபநிடத வாக்கியங்களினாலும்,

யோ வை ருத்ரஸ்ஸ பகவாந் (அதர்வசிரசு)

"எவர் உருத்திரரோ அவர் பகவான்" என்று தொடங்கி,

யஶ்ச ஸவ—ஃ (அதர்வசிரசு)

"அவர் எல்லாமாயிருக்கின்றனர்" என்பதிறுதியாய்ப் போந்த அதர்வசிரோபநிடத வாக்கியங்களினாலும், நிமித்தகாரணமாகிய பரப்பிரமத்துக்கு (அதன்) குணமும் அம்சமுமாகிய இந்த உபாதானபுருஷர்வாயிலாகச் சர்வவியாபகத்துவம் எய்துகின்றது. ஆகலின், பிரபஞ்சமனைத்தும் சிவபெருமானுடைய விபூதிமயமாம். அவருக்கு ஒப்பாரும் அவருக்கு மிக்காரும் இல்லையே. (நசு)

## (கூ) பலாதிகரணம்.

---

இங்ஙனம் சர்வேசுவரரும், சர்வான்மகருமாகிய அந்தச் சிவபெருமானே சகல கன்மங்களுக்கும் அந்தந்தத் தேவதா ரூபமாயிருந்து பலம் கொடுப்பவராகின்றனர் என நிரூபிக்குமாறு சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஃலமத உவவத்தேஃ (ந. உ. நஎ)

### (நஙக) ஆதலிற் பயன், பொருத்தமுண்மையான்.

சர்வாநுஷ்டானஞ்செய்பவர்க்கும் அநுஷ்டானபலத்தைக்கொடுப்பது மேலே யாண்டும் சர்வேசுவரத்தன்மையினாற் பிரதிபாதிக்கப்பட்ட பரப்பிரமமா? இன்றேல் மற்றொருவரா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) செய்யப்பட்ட க்ஷணத்திலேதானே அழிந்துபோவதாயினும், கன்மமானது அபூர்வமறைப்பு வாயிலாகக் காலாந்தரத்திலே பலத்தைக் கொடுக்கும் சாமர்த்தியமுடையதே. இங்ஙனம் கன்மந்தானே (தன்) பயனைக் கொடுக்க வன்மையுடையதாகுங்கால், அதற்கு வேறாக அப்பிரசித்தராகிய சிவபெருமானைக் கற்பித்தல் மிகையாமாதலின், சிவபெருமான் பலத்தைக் கொடுப்பாரல்லர் எனின்,

(சித்தாந்தம்) சிவபெருமானை ஆராதித்தலினாற்றானே எல்லோர்க்கும் கன்மபலம் சித்திக்கின்றது; (அது) பொருத்தமாதலின்; சேவிக்கப்பட்ட அரசர் முதலாயினோரிடத்திற் (பெறுதல் போல), உபாசிக்கப்பட்ட சிவபெருமானிடத்திருந்தே உபாசகர்க்குப் பலம் சித்தியாதல் நியாயமாதலின். அசேதனமாகிய கன்மமேனும், அபூருவமேனும் தாரதம்மியமாகப் பிரதிநியதமாய்ப் பலத்தை அறிந்து கொடுத்தற்குச் சாமர்த்தியமுடையதன்று; அசேதனமாயிருக்கும் சேவையாகிய கன்மத்துக்கு அங்ஙனம் காணப்படாமையின். ஈண்டுச் சாஸ்திரப்பிரசித்தமாயுள்ள சிவபெருமானைக் கற்பித்தல் கற்பனைகவுரவமாகாது.

ஸாஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதே। ஏஷ உ ஏவா ஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதே (கௌஷீ. ௩. அ)

"இவ்வுலகங்களிலிருந்து மேலே செலுத்தவேண்டியவனை நற்கன்மஞ் செய்யப்பண்ணுகின்றனர்; இவ்வுலகங்களிலிருந்து கீழே செலுத்தவேண்டியவனைத் தீக்கன்மஞ் செய்யப்பண்ணுகின்றனர்" எனச் சுருதியானது சிவபெருமானே தர்மாதர்மபலத்தைக் கொடுப்பவருஞ் செய்விப்பவருமாகின்றனர் என்று கூறுகின்றது. பின்னர்ச் சுருதியிற் கூறப்படாத அபூர்வத்தைக் கற்பித்தல் மிகையாம். ஆகலின், கன்மங்களினாலே ஆராதிக்கப்படுகின்ற சிவபெருமான் பலதாதாவாய் ஆகின்றனரன்றிக் கன்மம் அன்றென்பது நிர்ணயம். (௩எ)

ச்ருதத்வாச்ச (௩. ௨. ௩அ)

(௩௫௨) கூறப்படலானும்.

சமஸ்த கன்மங்களுக்கும் அதிபதி சிவபெருமானும் எனக் கேட்கப்படுகின்றது; அக்கன்மங்கள் வாயிலாக ஆராதிக்கப்படலானும், அக்கன்மங்களுக்குப் பயனைக் கொடுத்தலானும்.

காதபதிம் மேதபதிம் ருத்ரம் ஜலாஷபேஷஜம்।

(இரு. வே. க. சஈ. ச)

"பாட்டுக்கு அதிபதியும், இன்பத்தைக் கொடுக்கும் ஔஷதங்களையுடைய யாகத்துக்கு அதிபதியுமானவர் உருத்திரர்"

ஹோதாரம் ராஜாநம் அத்வரஸ்ய ருத்ரம் (இரு.வே. ச. ௩. க)

"யஞ்ஞத்துக்கு இராஜாவாக உருத்திரரை நாடுக" என்றற்றொடக்கத்த சுருதிகளினும்,

ஸோமேந ராயதேவம் ஸோமம் ஸோமவிபூஷணம்।

"சோமபூஷணரும் சோமருமாகிய தேவரைச் சோமத்தினாலே வழிபடுக" எனச் சுருதியை ஆதாரமாகக் கொண்ட ஸ்மிருதியினும்,

(ததஸ்தம் பரமம் ஹேஷஜ்யம்ருத்ராவ்ருஷபத்வஜம்)
நாராயணோ ரராயஜ்ஞை (ஸ்ரீயபெஸ்ருவஸோத்தம்।
தஸ்மாத்யஜ்ஞமஹே ஸர்வேஸ்வரோக்திம்ஸர்வமேகம் ஸநாதநம்।
கர்மமேதேநவரேணதாஸ்து ஸர்வ ஏவ த்விஜஸத்தமா:।
ரோசயந்திஸ்ம தம் யஜ்ஞம் ருத்ரஸ்யாராதநம் ப்ரதி।

(வால்மீகிராமாயணம், உத்தரகாண்டம், கூ0 : க௨—கச)

"(இடபாரூடராகிய சிவபெருமானையன்றி ஔஷதமாக மற்றொருவரைக் காண்கிலேன்; பரமான்மாவாகிய சிவபெருமானுக்கு) அசுவமேதயாகத்தினும் பிரீதியான யஞ்ஞம் பிறிதொன்றிலது; (இராஜவிஷயத்திற் பிறராற் செய்யவியலாத அந்த யஞ்ஞத்தைச் செய்வோம் என்று கர்த்தமர் கூற, முனிவரனைவரும்) சிவாராதனத்தைக் குறித்து (உரைக்கப்பட்ட யஞ்ஞத்தைப் பிரீதியோடங்கிகரித்தார்)" என இராமாயணத்தினும், சிவபெருமானுக்குச் சர்வயாகாதிபத்தியம் கூறப்படுகின்றது;

வாஜஶ்ச மே ப்ரஸவஶ்ச மே (யசுர். வே. ௪. ௭. ௧. ௧)
யாதா ச மே விஷ்ணுஶ்ச மே (யசுர். வே. ௪. ௭. ௯. ௨)

"எனக்கு அன்னம் (வருக), எனக்கு அனுமதி (வருக)" "எனக்குத் தாதா (வருக), எனக்கு விஷ்ணு (வருக)" என்றற்றொடக்கத்தனவாகச் சமகங்களிலே போந்தவாற்றால், அன்னமுதலிய வஸ்துக்களும், விஷ்ணு முதலிய தேவர்களும் கொடுக்கப்படும் பொருள்களாகக் கூறப்படுதலான், பாரிசேடப்பிரமாணத்தாற் சிவபிரான் சமஸ்த கன்மபலங்களையும் கொடுப்பவராகச் சித்திக்கின்றது. அதுபற்றிச் சிவபிரானே சமஸ்த யாகங்களினும் ஆராதிக்கற்பாலரும், சமஸ்த பயன்களையும் கொடுப்பவருமாகின்றனர் என்க., (௩௮)

சூத்திரகாரர் மற்றோர் பக்ஷம் கூறுகின்றனர்.

தர்மம் ஜைமினிரத ஏவ (௩. ௨. ௩௯)

(௩௯) ஆதலினாலே ஜைமினி (அதனைத்) தருமம் என்கின்றனர்.

தருமந்தானே (நியாயத்துக்குப்) பொருத்தமாதலினாலும், சுருதியிற் கூறப்படுதலானும், (அத்தருமம்) பலத்தைக் கொடுப்பதாம் என ஜைமினி கொள்கின்றனர். பொருத்தமாவது உழுதல் முதலியன செய்தலானும் உடைத்துப் பண்படுத்தலானும், கன்மம் சாக்ஷாத்தாகவேனும் பரம்பரையாகவேனும் பலங்கொடுப்பது பிரத்தியக்ஷமாதலே. (பலத்தை விரும்புகிற) காமியானவன் அதனைச் செய்யவேண்டிய மார்க்கமாக ஓர் கன்மவிதிக்கு ஓர் வகை சொல்ல இயலாதாமாதலின், சுருதியிற் கூறப்பட்டதாக அபூர்வமாகிய கன்மந்தானே பலத்தைக் கொடுக்கின்றது. (௩௯)

பூர்வம் து பாதராயணோ ஹேதுவ்யபதேஶாத்।
(௩. ௨. ௪௰)

(௪௰) ஆனால் வாதராயணர் காரணம் குறிப்பதினால் முற் கூறப்பட்டவரையே (கொள்கின்றனர்).

மேலேகூறப்பட்ட சிவபெருமானே கன்மபலதாதா வென்று பகவான் வாதராயணர் கொள்கின்றனர்;

வாயவ்யம் ஶ்வேதமாலபேத பூதிகாமோ வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா வாயுமேவ ஸ்வேந பாகதேயேநோபதாவதி ஸ ஏவைநம் பூதிம் கமயதி।

(யசுர். வே. உ. க. க. க)

"செல்வத்தை நாடுகின்றவன் வாயுவின்பொருட்டு ஓர் வெண் மிருகத்தைப் பலிகொடுக்க, இவன் செல்வத்துக்கே பலிசெலுத்துவோனைச் செலுத்துகின்றான்" என்னும் சுருதியினால் வாயுமுதலிய சிவபெருமானால் வியாபிக்கப் பட்டுக் கன்மவிதிகளிலேதான் பலத்துக்கு ஹேதுவாகக் கூறப்படுதலின். அவர் இலராய்விடினன்றோ க்ஷணத்திலே நசிக்கும் கன்மத்தை, பலசாதனத்தை முடிப்பதற்கு அபூருவமாகக் கற்பிக்கவேண்டும். (பின்னையோ எனின்) வாக்கியசேஷத்தினாற் கூறப்பட்ட விதியை அபேக்ஷிக்கும் பலசாதனத்துவப்பிரகாரம் உள்ளபோது அவரே காரணராகச் சுவீகரிக்கற்பாலர்;

ப்ரதிதிஷ்டந்தி ஹவா ய ஏதா ராத்ரீருபயந்தி।

(தாண்டியப் பிராம்மணம்)

"இந்தக் கிரியைகளைச் செய்பவர் நன்றாகப் பிரதிஷ்டை செய்யப்படுகின்றனர்" என்றற்றொடக்கத்தவற்றிலே வாக்கியசேஷத்தினதாய் விதியை அபேக்ஷித்ததாயுள்ள (கன்ம) பலமானது சுவீகரிக்கப்பட்டாற்போலாம். அதர்வசிரசிலே,

யோ வை ருத்ர: ஸ பகவாந்।

"எவர் உருத்திரரோ அவர் பகவான்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறப்பட்டமையின், வாயுமுதலிய சமஸ்ததேவதாரூபத்துவம் சிவபெருமானுக்கு எய்துகின்றது. அந்த உபநிடதத்திலே சிவபெருமானாலே,

யோ மாம் வேத ஸ ஸர்வாந்தேவாந்வேத।

"என்னை அறிபவன் எல்லாத் தேவரையும் அறிகின்றான்" என்னுஞ் சுருதியினால் அவரை அறிதலான் அவரால் வியாபிக்கப்பட்ட சகல தேவர்களும் அறியப்பட்டனரெனக் கூறப்பட்டது. ஆகலின், சகல தேவதாரூபராய்ச் சகலகன்மத்தினால் ஆராதிக்கற்பாலரும், சர்வகன்மபலதாதாவுமாயுள்ளார் பரமேசுவரரும், பரப்பிரமசிவனும், சாக்ஷாத் உமாபதியாயுள்ளாருமாம் என்பது சித்தித்தது. (சo)

---

## மூன்றும் அத்தியாயத்து
# மூன்றும் பாதம்.

### (௧) சர்வவேதாந்தபிரத்தியயாதிகரணம்.

நித்தியத்துவாதி குணமுடைய துவம் பதார்த்த உபாசகனாகிய ஆன்மாவும், சர்வஞ்ஞத்துவாதிகுணமுடைய தத்பதார்த்தராகும் உபாசியராகிய பதியும் மேலே நிரூபிக்கப்பட்டனர். ஈண்டு எங்ஙனம் உபாசிப்பது என ஆக்ஷேபம் நிகழ,

(உத்தரம்) போதருமாறு.

ஸவ௯வெதாந்த ப்ரத்யயம் சோதநாத்யவிஶேஷாத் (௩. ௩. ௧)

**(௩௫௫) வேதாந்தம் அனைத்தினும் அறியப்பட்டது (ஒன்றே); விதிமுதலியவற்றில் யாதும் பேதமின்மையான்.**

வேதாந்தம் (உபநிடதம்) அனைத்தினும் தகராதி உபாசனை கூறப்படுகின்றது.

உபாசனை ஒன்றா? சாகாபேதங்களினாற் பின்னமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சாகாபேதம்பற்றிப் பிரகரணம் பேதித்தலின், ஒவ்வோர் சாகையினும் உபாசனை பேதமுறுகின்றது. அங்ஙனமே சாந்தோக்கியத்தினும், தைத்திரீயத்தினும் தகரோபாசனை கூறப்படுகின்றது. ஒன்றிலே,

ஏஷ ஆத்மாபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு: (சாந். அ. ௧. ௫)

"இந்த ஆன்மா பாவமில்லதும், ஜரையில்லதும், மரணமில்லதும்" எனத் தொடங்கிப் போந்த சுருதியில், பாவமிலாமை முதலிய குணங்கள் கூறப்பட்டன. மற்றொன்றிலே,

ருதம் ஸத்யம் (தைத். ஆரணி. ௧௦. ௨௩. ௪௧)

"இருதம் சத்தியம்" என்று தொடங்கி, கிருஷ்ணபிங்களத்துவகுணங்கள் கூறப்பட்டன. ஈண்டுக் குணங்களிலே பேதமுண்மையான் உபாசனை பேதமுறுகின்றது. சாந்தோக்கியத்திலே பஞ்சாக்கினி வித்தைக்கு "கௌதுமம்" என்று பெயர்; பிருகதாரணியத்திலே "வாஜசநேயகம்" என்று பெயர்; இங்கே நாமபேதத்தினால் உபாசனை பேதிக்கின்றது.

தேஷாமேவைதாம் ப்ரஹ்மவித்யாம் வதேத ஶிரோவ்ரதம் விதிவத்யைஸ்து சீர்ணம் (முண். ௩. ௨. ௧௦)

"சிரோவிரதம் விதிப்படி எவர்களாற் செய்யப்பட்டிருக்கின்றதோ, அவர்களுக்கே இந்தப் பிரமவித்தையைச் சொல்க" என முண்டகோபநிடதத்திலே **சிரோவிரதம்** என்னும் தருமம் கேட்கப்படுகின்றது. சிரோவிரதம் என்பது ஓர் விரதவிசேஷம். அது பிறர்க்கின்றி அதர்வணசாகையினர்க்கு விதிக்கப்பட்டது. (இந்தக்) கிரியாபேதத்தினால் உபாசனை வேறுபடுகின்றது. ஆகலின், சாகாதி பேதங்களினாலே உபாசனைகளுக்குப் பேதமுளதென **ஆக்ஷேபிக்கின்**,

**(சித்தாந்தம்)** சர்வவேதாந்தங்களினும் கூறப்படுவது **தகராதி** உபாசனை ஒன்றுதானே: கன்மவிதிகளிலே போல (ஈண்டு) விதிகளும், பலனும், **தேவதா**ரூபமும், (உபாசனாப்) பெயர்களும் ஒன்றே. (முதலாவது) **அறிக, உபாசிக்க** என்னும் விதிகள் வெவ்வேறு சாகைக்கண்ணவாயினும் ஒன்றே; பிரமத்தை அடைதலாம் பயன்களும் ஒன்றே; வைசுவாநரப்பிரமம் போல, வேத்தியமும் (அறியப்படும் பொருளும்) ஒன்றே. வைசுவாநரவித்தை முதலிய போலப் பெயரும் ஒன்றே. ஆகலின், உபாசனை ஒன்றே. (அவனை **அறிக, உபாசிக்க** என்னும்) விதிகள் பேதித்தலான் உபாசனை வேறுபடாது. சாந்தோக்கியத்திலே,

தஸ்மிந் யதந்தஸ்ததந்வேஷ்டவ்யம் (சாந். அ. க. க)

"தகராகாயத்துள் இருப்பது தேடற்பாற்று" என்பதினாலே தகரவித்தை விதிக்கப்பட்டது.

தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம் (தைத். ஆரணி. க௦. கஉ. உஅ)

"உள்ளே உள்ளது தியானிக்கற்பாற்று" எனத் தைத்திரியத்தினும் (விதிக்கப்படுகின்றது). இந்த விஷயத்தில் (தியான) ஸ்தானாதி ஒன்றுமாதலினாலும், உபாசியமாகிய பிரமம் ஒன்றுமாதலினாலும், இரு உபநிடதங்களினும் கூறப்பட்ட குணங்கள் ஒன்றுக்கொன்று விரோதமுறாமையானும் வித்தை ஒன்றே. சாந்தோக்கியத்தினும் பிருகதாரணியத்தினும் ஆகாயம், மழை, பூமி, புருஷன், ஸ்திரி என்னும் பஞ்சாக்கினிவித்தைகள் அறியற்பாலன எனக் கூறப்பட்ட சொரூபம் இரண்டிடத்தும் சமானமே. ஆகலின், வித்தையிற் பேதமின்று. (க)

பேதாந்நேதி சேந்நைகஸ்யாமபி (௩. ௩. ௨)

**(௩௭௬)** (பேதமுண்மையான்) இங்ஙனமின்றெனின், ஒன்றினும் (அது கூடும்).

(ஆக்ஷேபம்) ஓர் உபாசனாவிஷயத்தைச் சுருதி பின்னரும் மற்றோர் பிரகரணத்திற் கூறுவது பேதத்தை விளக்கின்றது. ஆகலின், உபாசனை ஒன்றன்றெனின்,

(உத்தரம்) உபாசனை ஒன்றுயிருந்தாலும் வெவ்வேறு சாகையில் உபாசகர் வேறுதலினுல் உபாசனையும் பேதமுறும். (௨)

ஸ்வாத்⁴யாயஸ்ய ததா²த்வேந ஹி ஸமாசாரே(அ)தி⁴காராச்ச ஸவவச்ச தந்நியம: (௩. ௩. ௩)

(௩௬௭) (சிரோவிரதம்) வேதாத்தியயனத்துக்குரியது; (அந்தக் கருமத்தின்)பொருட்டுச் சமாசார கிரந்தத்தில் அதிகாரமுண்மையானும், சவஹோமம் போலஅதன் நியமம்.

தேஷாமேவைதாம் ப்³ரஹ்மவித்³யாம் வதே³த (முண். ௩. ௨. ௧௦)

"அவர்க்கே இந்தப் பிரமவித்தையைச் சொல்க" என்பதினுல், அதர்வவேதத்திலே விதிக்கப்பட்ட * சிரோவிரதநியமம் அந்த வேதாத்தியயனத்துக்கு அங்கத்துவமாகவன்றி உபாசனைக்கு அங்கத்துவமாகவன்றும்;

நைதத³சீர்ணவ்ரதோ(அ)தீ⁴தே (முண். ௩. ௨. ௧௧)

"(இந்த) விரதத்தை அநுஷ்டியாதவன் இதனைப் படிப்பானல்லன்" என அந்த வேதாத்தியயனசம்பந்தமாக அறியப்படலானும், சமாசாரம் என்னும் கிரந்தத்தில்,

நைதத³பி வேத³வ்ரதேந வ்யாக்²யாதம்

"இந்த விரதமும் வேதவிரதம் எனக்கூறப்பட்டது" என வேதவிரதமாகக் கூறப்படுதலானுமாம். பிரமவித்தை என்பதிற் பிரமம் என்னும் சப்தம் வேதத்தின் மேற்று. ஆகலின், சவஹோமம் என்பது அவர்களுக்கே (ஆதர்வணிகர்க்கே) உளதாயினுற் போல, சிரோவிரதமுமாம். ஆகலின், அது உபாசனுபேதத்தைக் (காட்டப் போந்த) லிங்கமன்று. (௩)

---

*முண்டகோபநிடதத்து (௧. ௧. ௨, ௫) உபக்கிரமத்திலே, அபரவித்தையும் பரவித்தையுமாகிய கன்மகாண்டம் ஞானகாண்டம் இரண்டும் குறிக்கப்பட்டனவேயாக, அதர்வணகன்மகாண்டம் அத்தியயனஞ் செய்தற்குரியோர், அதற்கு அங்கமாகிய அக்கினிதாரணஞ் செய்யவேண்டினமையின், அம்முண்டகோபநிடதத்து (௩. ௨. ௧௦) உபசங்காரத்திலே காணப்படும் சிரோவிரதம் என்றது அவ்வத்தியயனஞ் செய்வார் சிரசிலே தாங்கும் அக்கினிதாரணம் எனப் பொருட்படுத்தப்படுங்கால், அம்மந்திரத்திற் காணப்படும் பிரமவித்தியா என்னும் பதத்துப்பிரமம் என்பது வேதம் எனப்பட்டு அது வேதாத்தியயனத்தின் மேலதாமென்றும்; பரவித்தையாகிய ஞானகாண்டத்துக்குரியோரெல்லாம் அதற்கு அங்கமாகிய பாசுபதவிரதவிபூதிதாரணம் செய்யவேண்டினமையின், (அச்சிரோவிரதம்) என்றது அதர்வசிரசிலேயுள்ள பாசுபதவிரதவிபூதி எனப்பொருட்படுத்தப்படுங்கால், அம்மந்திரத்துப் பிரமவித்தியா என்பது தகராதி பிரமோபாசனையின் மேலதாமென்றும் ஓர்க. புராணேபப்பிருங்கணங்களினெல்லாம் சிரோவிரதம் என்பது பாசுபதவிரதத்துக்குப் பெயராமாறு எவர்க்கும் பிரசித்தமாய்த் தெரிந்ததொன்றுமாதலின், சைவபாஷ்யகாரர் அதனைப் பொருட்படுத்தாது விடுத்து, சிரோவிரதம் கன்மகாண்டத்துக்கியைய்ப் பொருட்படுத்தப்படுங்கால், பிரமவித்தியா என்றது வேதாத்தியயனத்தின் மேலதாமென விளக்கி, அது அவ்வேதாத்தியயனஜன்னியமாகிய பிரமோபாசனையின் மேலதாமென விளக்காது தவிர்த்தார். அதனுல் விரோதம் இல்லை.

தர்ஶயதி ச (௩. ௩. ௪)

(௩௫௮) (சுருதி) யும் கூறுகின்றது.

சுருதிதானே உபாசனையின் ஏகத்துவத்தைக் காண்பிக்கின்றது. தகர வித்தியா விஷயத்திலே,

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்கலம் ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் (தைத். ஆரணி. ௧௦. ௨௩. ௪௧)

"இருதமும் சத்தியமுமாகிய பரப்பிரம (சிவனார்) புருஷரும், கிருஷ்ணபிங்களரும், ஊர்த்துவரேதரும், விரூபாக்ஷருமாம்" எனவும்,

உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம் (கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், பிரசாந்தரும்" என்றற்றொடக்கத்தனவாகவும், (முறையே) மகோபநிடதத்தினும் கைவல்லியோபநிடதத்தினும் சிவபெருமானுடைய ரூபங் கூறப்பட்டது. ரூபமுடைமையின் சிவபெருமான் பாவம், ஜரை, மரண முதலியவற்றுக் காளாவாரோ எனின், சாந்தோக்கியத்திலே

அத யதிதமஸ்மிந் (சாந். ௮. ௧. ௧)

"இந்தப் பிரமபுரத்திலே" என்று தொடங்கி, அவர் அஷ்டகுணமுடைத்தாதன் மாத்திரம் கூறப்படுகின்றது. குணவிசேஷத்தைக் கூறுஞ் சுருதி பின்னர் உபாசனாபேதத்தைக் கூறுவதெனச் சிறிது ஆசங்கித்தற்கு இடமில்லை. ஆகலின், விதிகள் ஒன்றாயிருத்தலின், அவ்வுபாசனாபேதத்தைக் காட்டும் பிற சொற்கள் காணப்படாமையின், சகல வேதாந்தப்பிரத்தியயம் ஒரே உபாசனையின் மேற்றென்பது சித்தித்தது. (௪)

## (௨) உபசங்காராதிகரணம்.

---

சர்வவேதாந்தங்களினும் விதிக்கப்பட்ட உபாசனைகளின் ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கும் பயனைச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

உபஸம்ஹாரோ(அ)ர்தாபேதாத்விதிஶேஷவத்ஸமாநே ச (௩. ௩. ௫)

**(௩௫௯) அர்த்தத்திற் பேதமின்மையின், (குணங்களைப் பற்றி) உபசங்காரஞ் (செய்யப்படல்வேண்டும்); விதியின் சேஷங்களிற் போலவே சமானமாயுள்ள (உபாசனை) யினும்.**

ஈண்டு உபாசனை ஒன்றாயிருப்பினும், ஒரு சாகையிற் சித்தித்த குணங்கள் மற்றோர் சாகையில் உபசங்காரஞ் செய்யப்படல் வேண்டாமா? வேண்டுமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உபசங்காரஞ் செயற்பாலனவன்று. எங்ஙனமெனின், சாந்தோக்கியத்துத் தகரவித்தையிலே பாவமிலாமை முதலிய குணங்கள் கூறப்பட்டன; தைத்திரீயத்திற் கூறப்படவில்லை. (சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட குணங்கள்) தைத்திரீயத்தில் உபசங்காரஞ் செய்யப்படலாகா; ஆண்டுத் (தைத்திரீயத்திற்) கூறப்படாமையின். உபாசனைக்குச் சகாயம் ஆண்டுக் கூறப்பட்ட கிருஷ்ணபிங்களத்துவாதி குணங்களினால் ஆகும். சுருதியில் விதிக்கப்படாதனவாய்ப் பிறிதோரிடத்திற் கூறப்பட்ட குணங்களை உபசங்காரஞ்செய்தல் எற்றுக்கெனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. சாந்தோக்கியாதிகளிற் காணப்பட்ட தகராதி உபாசனாசம்பந்தமாகக் கூறப்பட்ட அபஹதபாப்மத்துவாதி குணங்கள் மற்றோர் தைத்திரீய முதலிய உபநிடதங்களில் உபசங்காரஞ் செயற்பாலன; உபாசனைக்கு உபகாரமாயுள்ள அபிப்பிராயம் ஒன்றாயிருத்தலின். முக்கிய விசேஷகன்மத்தில் அங்கங்களாக (வெவ்வேறு சாகைகளில்) விதிக்கப்பட்ட உபாங்கங்கள் அக்கினிகோத்திராதிகளில் உபசங்கரிக்கப்பட்டாற் போல, விதிவாக்கியங்களினாற் சமானமாயுள்ள தகராதி உபாசனையினும் (வெவ்வேறு சாகையிற் கூறப்பட்ட) குணங்கள் உபசங்காரஞ் செய்யப்படல் வேண்டும்; (ஆகலின் ஒரே உபாசனை குறித்து வெவ்வேறு சாகைகளிற் கூறப்பட்ட) குணங்கள் உபசங்காரஞ் செய்யப்படல்வேண்டும் என்பது யுக்தமே. (ரு)

## (ங) அந்யதாத்துவாதிகரணம்.

---

ஃந்யதாத்வம் ஶப்தாதிதி சேந்நாவிஶேஷாத் (ங. ங. கூ)

**(ஙகூ0) சுருதியுண்மையாற் பேதமெனின், அன்று; பேதமின்மையான்.**

பிருகதாரணியத்தினும் சாந்தோக்கியத்தினும் சத்துருவைத் தோற்கச் செய்யும் பிராணன்போலுள்ள உற்கிதாத்தியானம் விதிக்கப்படுகின்றது. அதிலே உபாசனைவைக்கியம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) விதிமுதலியன ஒன்றாதலின் உபாசனை ஒன்றே எனின்,

(பூருவபக்ஷியின் ஆக்ஷேபம்) பிருகதாரணியத்திலே விதிக்கப்பட்ட பிராணனைப் போன்ற உபாசனாநோக்கம் உற்கீதத்தைப் பாடுபவனுடைய விஷயம் என்பது.

ஃத ஹேமமாஸந்யம் ப்ராணமூசுஸ்த்வம் ந உத்காயேதி ததேதி தேப்ய ஏஷ ப்ராண உதகாயத் (பிரு. ங. ங. எ)

"அவர்கள் வாய்க்குள் இருக்கும் பிராணனை நோக்கி, நீ எங்களுக்காகப் பாடு என, பிராணன் ஆம் என்று சொல்லிப் பாடிற்று" என்னும் பிராண சப்தத்தினால் அறியப்படுகின்றது. சாந்தோக்கியத்திலோ எனின், (தியானநோக்கம்) உற்கானகர்மவிஷயத்தின் மேற்றும் என்பது

𑌯 𑌏𑌵𑌾𑌯𑌂 𑌮𑍁𑌖𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣 𑌸𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌗𑍀𑌥𑌮𑍁𑌪𑌾𑌸𑌾𑌂𑌚𑌕𑍍𑌰𑌿𑌰𑍇।

(சாந். ௧. ௨. ௭)

"வாய்க்குள்ளே இந்தப் பிராணன் வருகின்றது; அவர்கள் பிராணனைப் போல உற்கிதத்தைத் தியானித்தனர்" என்னுஞ் சுருதியினால் அறியப்படுகின்றது. ஆகலின், உபாசனைகள் பேதமாம் எனின்,

(பூருவபக்ஷியின் உத்தரம்) அன்று; (இரண்டின்) உபக்கிரமங்களும் ஒன்றுதலின்.

𑌦𑍍𑌵𑌯𑌾 𑌹 𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑌾 𑌦𑍇𑌵𑌾𑌶𑍍𑌚𑌾𑌸𑍁𑌰𑌾𑌶𑍍𑌚 𑌤𑌤𑌃 𑌕𑌾𑌨𑍀𑌯𑌸𑌾 𑌏𑌵 𑌦𑍇𑌵𑌾 𑌜𑍍𑌯𑌾𑌯𑌸𑌾 𑌅𑌸𑍁𑌰𑌾𑌸𑍍𑌤 𑌏𑌷𑍁 𑌲𑍋𑌕𑍇𑌷𑍍𑌵𑌸𑍍𑌪𑌰𑍍𑌧𑌨𑍍𑌤 𑌤𑍇 𑌹 𑌦𑍇𑌵𑌾 𑌊𑌚𑍁𑌰𑍍𑌹𑌨𑍍𑌤𑌾𑌸𑍁𑌰𑌾𑌨𑍍𑌯𑌜𑍍𑌞 𑌉𑌦𑍍𑌗𑍀𑌥𑍇𑌨𑌾𑌤𑍍𑌯𑌯𑌾𑌮𑍇𑌤𑌿।

(பிரு. ௩. ௩. ௧)

"பிரஜாபதியின் சந்ததியினர் தேவரும் அசுரரும் என இரு திறத்தினர்; தேவர் இளைஞர்; அசுரர் மூத்தவர்; இவ்வுலகங்களிலே வருத்தப்பட்டுக் கொண்டிருந்த தேவர்கள் உற்கிதவாயிலாக யாகங்களிலே அசுரர்களை செயிப்பேம் என்றனர்" எனப் பிருகதாரணியம் உபக்கிரமித்துக் கூறுகின்றது.

𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰𑌾 𑌹𑌵𑍈 𑌯𑌤𑍍𑌰 𑌸𑌂𑌯𑍇𑌤𑌿𑌰 𑌉𑌭𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑌾 𑌸𑍍𑌤𑌦𑍍𑌧 𑌦𑍇𑌵𑌾 𑌉𑌦𑍍𑌗𑍀𑌥𑌮𑌾𑌜𑌹𑍍𑌰𑍁 𑌰𑌨𑍇𑌨𑍈𑌨𑌾𑌨𑌭𑌿𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌾𑌮 𑌇𑌤𑌿।

(சாந். ௧. ௨. ௧)

"பிரஜாபதியின் சந்ததியினராகிய தேவரும் அசுரரும், யுத்தஞ் செய்யும் போது தேவர் அசுரரை செயிக்கும்பொருட்டு உற்கீதத்தைப் பாடத்தொடங்கினர்" எனச் சாந்தோக்கியம் உபக்கிரமிக்கின்றது. ஆகலின், உபக்கிரமங்கள் ஒன்றுமாதலின் உபாசனைகளும் ஒன்றே எனின், (௬)

(சித்தாந்தம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

𑌨 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌕𑌰𑌣𑌭𑍇𑌦𑌾𑌤𑍍 𑌪𑌰𑍋𑌵𑌰𑍀𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌵𑌤𑍍 (௩. ௩. ௭)

(௩௬௧) **இன்றேற் பிரகரணத்திலே பேதமுண்மையின், (அவை ஒன்று) அன்று; பெரிதினும் பெரிதாயிருத்தன் முதலிய போல.**

இரண்டு உபநிடதங்களினும் கூறப்பட்ட வித்தைகள் ஒன்றன்று; பிரகரணபேதமுண்மையின்.

ஓமித்யேத தக்ஷர முத்கீத முபாஸீத (சாந். க. க. க)
"உற்கீதமாகிய ஓம் என்னும் அக்ஷரத்தை ஒருவன் உபாசிக்க" என்ற வாக்கியத்திற் கண்டவாறு சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட தியானம் உற்கீதத்தின் அவயவமாகிய பிரணவத்தைக் குறித்ததாகும்; வாஜினர்களாற் கூறப்பட்ட தியானம் உற்கீதம் முழுதுக்குமாம். உபக்கிரமத்திலே பேதமுண்மையின் (தியான) ரூபமும் பேதம், உபாசனையும் பேதமாம். ஒரே சாகையிற் கூறப்பட்ட உற்கீதவுபாசனைகளுள்ளே பெரிதினும்பெரிதென்ற தியானம் இரண்டாவதாகிய தியானத்துக்கு வேறுறுகின்றதோ, அங்ஙனமே ஈண்டும் உபாசனைபேதமாம். (எ)

சூத்திரகாரர் ஆக்ஷேபித்து உத்தரம் இறுப்பாராயினர்.

ஸம்ஜ்ஞாதஶ்சேத் தது க்தமஸ்தி து தத‍பி (ந. ந. அ)

(நசுஉ) பெயரைக் குறித்து ஒன்றென்று கூறின், அது இறுக்கப்பட்டதாயிற்று; இதுவும் (பெயர் ஒற்றுமையும்) கூடும்.

உற்கீதவித்தை என்னும் பெயர் ஒற்றுமையால் இரண்டு சாகைகளினும் உபாசனைகள் ஒன்றென்று கூறத்தகாது. விதிக்கப்பட்ட பொருள்கள் பேதமாயிருப்பினும், பெயர் ஒற்றுமையாயிருத்தல் கூடும். எங்ஙனம் நித்திய அக்கினிகோத்திரத்தினும் குண்டபாயின் யஞ்ஞத்துக்குரிய அக்கினிகோத்திரத்தினும் பெயர் ஒன்றுயிருந்தாலும், கிரியைகள் பேதமுறுகின்றன. அங்ஙனம் ஈண்டும் விரோதமில்லை. (அ)

## (ச) வியாப்தியதிகரணம்.

---

வ்யாப்தேஶ்ச ஸமஞ்ஜஸம் (ந. ந. சு)

(நசுந) வியாப்தியினுலும் பொருத்தம்.

ஓமித்யேதத‍க்ஷர முத்கீத முபாஸீத (சாந். க. க. க)

"உற்கீதமாகிய ஓம் என்னும் அக்ஷரத்தை ஒருவன் உபாசிக்க" என்று சாந்தோக்கியத்திற் கூறப்படுகின்றது. இங்கே விதிக்கப்பட்ட பிரணவம் உற்கீதம் என்பவற்றின் உபாசனை ஒன்ருே? இன்றேல் தனித்தனி வேருே? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரணவமும் உற்கீதமும் சமானுதிகரணமாகி விசேஷண விசேடியமாய் இருக்கின்றன. பிரணவந்தான் உற்கீதத்தினுல் விசேடிக்கப்படுகின்றதென்றேனும், உற்கீதந்தான் பிரணவத்தினுல் விசேடிக்கப்படுகின்றதென்றேனும் கோடற்குத் தீர்மானமில்லை. (ஆகலின்), தியானகருமத்தில் (அந்தத் தியானம் அவற்றை இருவேறு பொருளாகக் குறிக்கின்றதாம்) எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். (ஒரேதியானகருமத்தில் அடங்கிய இருவேறு பொருள்களாகப்) பிரணவத்தையும் உற்கீதத்தையும் தியானம் குறிக்கவில்லை.

ஓமிதெ்யதக்ஷரமுத்கீதமுபாஸீத।
ஓமிதிஹ்யுத்காயதி (சாந். க. க. க)

"உற்கீதமாகிய ஓம் என்னும் அக்ஷரத்தை ஒருவன் உபாசிக்க" "ஓம் என்று உற்கீதம் பாடப்படுகின்றது" என்று சாந்தோக்கியத்து முதற்பிரபாடகத்தில் உபக்கிரமித்தாற் போல,

தஸ்யோபவ்யாக்யாநம் பவதி।

(சாந். க. க. ௧௦)

"இந்த அக்ஷரத்தின் உபவியாக்கியானம் இருக்கின்றது" என்று உத்தரத்தினும் கூறப்படுகின்றது. இங்ஙனம் பிரணவமானது உற்கீதத்தினல் விசேடிக்கப்படுகின்றது; உபாசனை பிரணவத்தையே குறிக்கின்றது எனக்கோடல் யுக்தமே. ஆகலின், பிரணவமே உபாசிக்கற்பாற்று. (௯)

## (௫) சர்வபேதாதிகரணம்.

---

ஸர்வாபேதாதந்யத்ரேமே (௩. ௩. ௧௦)

(௩௬௪) அனைத்தினும் அபேதமாதலின் இவை பிறிதோரிடத்தில்.

யோ ஹவை ஜ்யேஷ்டஞ்ச ஶ்ரேஷ்டஞ்ச வேத ஜ்யேஷ்டஶ்ச ஹவை ஶ்ரேஷ்டஶ்ச பவதி ப்ராணோ வாவ ஜ்யேஷ்டஶ்ச ஶ்ரேஷ்டஶ்ச।

(சாந். ௫. க. க; பிரு. அ. க. க)

"ஜ்யேஷ்டத்தையும், சிரேஷ்டத்தையும் அறிபவனே ஜ்யேஷ்டனும் சிரேஷ்டனுமாவான்; பிராணன்தான் ஜ்யேஷ்டமும் சிரேஷ்டமுமாம்" எனப் பிராணோபாசனை விதிக்கும் சந்தோகசாகையினரும், வாஜிசாகையினரும்; கௌஷீதகினரும் பிராணவித்தையிலே பிராணன் ஜ்யேஷ்டத்துவமுதலிய வுடையதாகக் கூறுகின்றனர். வாக்கு முதலிய கரணசமூகத்தின் நிலையும், அவற்றின் காரியங்களும் பிராணனிலே முழுதும் நிலைபெறுதல் காரணமாகச் (சாந்தோக்கியசாகையினர் முதலிய) மூவரானும் பிராணனின் ஜ்யேஷ்டத்துவம் விளக்கப்பட்டது.

யோ ஹ வை வஸிஷ்டம் வேத வஸிஷ்டோ ஹ ஸ்வாநாம் பவதி வாக்வாவ வஸிஷ்ட। யோ ஹ வை ப்ரதிஷ்டாம் வேத ப்ரதிதிஷ்டதி ...

𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑍋𑌽𑌸𑍀𑌤𑌿। 𑌅𑌥 𑌹𑍈𑌨𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑍁𑌵𑌾𑌚 𑌯𑌦𑌹𑌂 𑌸𑌂𑌪𑌦𑌸𑍍𑌮𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍𑌸𑌂𑌪𑌦𑌸𑍀𑌤𑌿। 𑌅𑌥 𑌹𑍈𑌨𑌂 𑌮𑌨 𑌉𑌵𑌾𑌚 𑌯𑌦𑌹𑌮𑌾𑌯𑌤𑌨𑌮𑌸𑍍𑌮𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌤𑌦𑌾𑌯𑌤𑌨𑌮𑌸𑍀𑌤𑌿 (சாந். ௫. ௧. ௧௩, ௧௪)

"பின் வாக்கானது அவனுக்குச் சொல்லியது, நான் மிக்க ஐசுவரியனாயிருப்பேனாயின், நீ மிக்க ஐசுவரியனாயிருப்பை; கண் அவனுக்குச் சொல்லியது, நான் பிரதிஷ்டனாயிருந்தால், நீ பிரதிஷ்டனாயிருப்பாய்; காது அவனுக்குச் சொல்லியது, நான் சம்பத்துடையனானால், நீ சம்பத்துடையனாவை; மனசு அவனுக்குச் சொல்லியது, நான் வீடாயிருந்தால் நீ வீடாவை" என இரண்டினும் (சாந்தோக்கியத்தினும் பிருகதாரணியத்தினும்) வாக்குமுதலியவற்றோடு சேர்ந்த ஐசுவரியத்துவமுதலிய சம்பந்தம் பிராணனுக்குள்ளதென்று கூறப்பட்டிருக்கின்றது. கௌஷீதகிகளுடைய உபநிடதத்திலே கூறப்படாத ஐசுவரியமுதலிய குணங்கள் (உபாசனையில்) உபசங்கரிக்கப்படல் வேண்டுமா? வேண்டாமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

𑌏𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 (கௌஷீ. ௪. ௨௰)

"இங்ஙனம் உபாசிப்பவன்" என்னும் மொழிகளினாற் கௌஷீதகியுபநிடதத்திற் கூறப்பட்ட குணங்கள் (தியானத்தின்பொருட்டு) உறுதியாக விதிக்கப்பட்டமையின், (அக் குணங்கள்) உபசங்கரிக்கப்படுவன அன்றாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். கூறப்படாதிருந்தாலும், ஐசுவரியமுதலிய குணங்கள் உபசங்கரிக்கற்பாலனவே; இங்ஙனம் என்னும் மொழியினாலே (தங்கள் உபநிடதத்திலே) கூறப்படாத குணங்களாயிருந்தாலும், கூறப்பட்ட குணங்கள் போலவே குறிக்கப்படுமாதலினாலும், (கூறப்பட்ட) குணங்களுடைய பிராணன் ஒன்றாதலினாலும், (அதின்) குணமெல்லாம் புத்தியிலமைதலினாலுமாம். மதுராபுரியிலே வேதாத்தியயனஞ் செய்விப்பவராகக் காணப்பட்ட தேவதத்தர் என்பார், (பின்னர்) மாஹிஷ்மதிபுரியில் அத்தியயனஞ் செய்வியாதிருந்தாலும், அத்தியயனஞ் செய்விப்பவராகவே அறியப்பட்டாற்போல, (பிராணன்) சாந்தோக்கியாதியுபநிடதங்களில் ஐசுவரியாதி குணங்களோடு கூறப்பட்டு, பின்னர்ப் பிறிதோரிடத்து அக்குணங்கள் இல்லாமற் கூறப்பட்டாலும், அக்குணங்களோடியைந்ததாகப் புத்தியிற் படுகின்றது. ஆகலின், "இங்ஙனம்" (𑌏𑌵𑌮𑍍) என்னும் மொழிக்குறிப்பினாற் (பிராணோபாசனையில்) ஐசுவரியாதி குணங்கள் உபசங்கரிக்கற்பாலன. (௧௰)

(௯) ஆனந்தாத்தியதிகரணம்.

---

𑌆𑌨𑌨𑍍𑌦𑌾𑌦𑌯𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌸𑍍𑌯 (௩. ௩. ௧௧)

(௩௯௫) (குணியாகிய) முக்கியமாயினார்க்குப் (பேதமில்லாமைபற்றி) ஆனந்தமுதலிய (குணங்கள் உபசங்கரிக்கற்பாலன).

அபேதாத் (பேதமில்லாமையான்) என்பது சூத்திரத்தில் எஞ்சிநின்றது.

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். ௨. ௧)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்"

ஆநந்தோ ப்ரஹ்ம (தைத். ௩. ௬)

"ஆனந்தம் பிரமம்"

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ணபிங்களம்।

(தைத். ஆரணி. ௰. ௨௩. ௪௧)

"இருதமும், சத்தியமுமாகிய பரப்பிரமம், புருஷரும், கிருஷ்ணபிங்களமும்"

ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம (தைத். ௧. ௬)

"ஆகாசத்தைச் சரீரமாகவுடைய பிரமம்"

ஸத்யாத்ம ப்ராணாராமம் (தைத். ௧. ௬)

"சத்தியான்ம பிராணாராமம்"

மந ஆநந்தம் (தைத். ௧. ௬)

"மன ஆனந்தம்"

ஶாந்திஸம்ருத்தமம்ருதம் (தைத். ௧. ௬)

"சாந்திநிறைந்த அமிர்தம்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, ஆனந்தாதி குணங்கள் பிரதானமாகிய பிரமத்துக்குப் பரவித்தைகளிற் கேட்கப்படுகின்றன. அக்குணங்கள் அனைத்தையும் பிரமோபாசனையில் தியானித்தல்வேண்டுமோ? அன்றோ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) எவ்விடத்தினும் அவை அனைத்தும் உபசங்கரிக்கற்பாலனவன்று; பிரமம் ஒன்றாயிருக்க (அதற்கு) ஆனந்தமுதலிய அநேக குணங்கள் விசேடித்து அநேகத்துவப்பிரசங்கம் எய்தலினாலும், அநேக விசேடணங்களால் விசேஷ்யங்கள் பேதமுறுதலானும், இன்றேல் அந்த அந்த இடங்களிலே (உபநிடதங்களிற்) கூறப்பட்ட குணமாத்திரத்தினாலும், அந்த உபாசனை நேர்ந்துவிடுமாதலினாலும் (உபசங்கரித்தல் வேண்டாம் எனின்),

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. குணியாகிய பிரமம் ஒன்றாதலின், ஆனந்தமுதலிய குணங்கள் பரவித்தை அனைத்தினும் உபசங்கரிக்கற்பாலன. நீலம், வெண்மை, சிவப்பு, உடைந்த கொம்பு, முறியாத கொம்பு என்றற்

றொடக்கத்தனவாய் ஒன்றுக்கொன்று விரோதமாயுள்ள குணங்கள் விசேடியத்தைப் பேதப்படுத்தும். ஆனால் நீலமாயும், சுகந்தமாயும், பெரிதாயுமுள்ள நீலோற்பலம் என்னுமிடத்தில் அங்ஙனமின்று. ஆகலின், ஒன்றுக்கொன்று விரோதமுறாத பிரமத்தின் பற்பல குணங்கள் அதனைப் பேதப்படுத்துவன அன்று. அதுபற்றி உபநிடதங்கள் அனைத்தினும் குணங்களினால் விசேடிக்கப்பட்ட பிரமம் ஒன்றாயிருத்தலின் (இங்கும் அங்கும் நேரும்) ஆனந்த முதலிய மற்றைக் குணங்கள் உபசங்கரிக்கற்பாலன. (௧௧)

## (எ) பிரியசிரஸ்துவாதிகரணம்.

---

ப்ரியஶிரஸ்த்வாத்யப்ராப்திருபசயாபசயௌ ஹி பேதே|

(௩. ௩. ௧௨)

(௩.௯௬) பிரியசிரஸ்துவாதி (குணங்கள்) இடம்பெறா; எதனாலெனின், பேதத்தினால் ஏற்றமும் குறைவுமுண்மையின்.

தஸ்ய ப்ரியமேவ ஶிர꞉ (தைத். உ. ரு)

"பிரியமே அவர் சிரசு" என்றற்றொடக்கத்தவற்றின் பிரியசிரஸ்துவமுதலியன பிரமத்தின் குணங்களாகக் கூறப்படுகின்றன. ஆனந்தமுதலிய குணங்கள் போலப் பிரமோபாசனையில் இவைகளும் உபசங்கரிக்கற்பாலனவா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சத்தியசங்கற்பத்துவாதி குணங்கள் போல இந்தக் குணங்களையும் உபசங்காரஞ் செய்தலில் யாது விரோதம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பரவித்தையிற் பிரியசிரஸ்துவமுதலியன உபசங்கரிக்கப்படுவன அன்று; சத்தியசங்கற்பத்துவாதி குணங்கள் போல, அவை பிரமகுணமன்றாமாதலின். பிரமத்தின் குணங்களுள்ளே அவற்றைச் சேர்ப்பது பிரமத்தை அவயவங்களாலாயது போலாக்கி, அதனை வளர்தல் தேய்தல்களுக்கும் உட்படுத்தும். பிரியசிரஸ்துவ முதலியன பிரமத்தின் சுவாபாவிககுணங்களாமாயின், அது பேதிக்கப்படுமன்றோ. ஆகலின், பிரமோபாசனா சம்பந்தத்திலே இந்தக் குணங்கள் கொள்ளப்படுவன அன்று. (௧௨)

ஆனந்த முதலிய குணங்கள் போலச் சர்வஞ்ஞதாதிகளும் பிரமசொரூபத்தில் அந்தர்ப்பூதகுணங்களானமையின் விரோதமின்று. அங்ஙனஞ் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

இதரே த்வர்தஸாமாந்யாத் (௩. ௩. ௧௩)

(௩.௯௭) ஆனால் மற்றவைகள் (சிந்தையில் உபசங்கரிக்கற்பாலன); பொருட் சுபாவத்தில் ஒற்றுமை இருத்தலான்.

சர்வஞ்ஞதை நித்தியதிருப்தி முதலிய மற்றைக் குணங்கள் பிரம்சொரூபத்தில் அந்தர்க்கதமாயுள்ளன. (ஆனந்த முதலிய போல அவை) பொருளொற்றுமையாயிருத்தலின், எங்கும் உபசங்கரிக்கற்பாலன. பிரியசிரஸ்துவ முதலியவோ பிரமத்தில் அந்தர்க்கதமாகாமையின், (அவை) உபசங்கரிக்கற்பாலன அன்று. (கங)

## (அ) ஆத்தியாநாதிகரணம்.

---

ஞூஸ்ரூ நாய வுரயொஜநாஹாவாசு (ங. ங. கச)

**(ஙசூஅ) தியானத்தின் பொருட்டுப் பிரயோசனமின்மையான்.**

ஈண்டு மேலே கூறப்பட்ட ஆனந்தமயாத்துமா தியாநிக்கப்பட்டாற்போல, அன்னமயாதிகளும் தியானிக்கற்பாலனவா? அன்ஞ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அன்னமயமுதலிய அனைத்துள்ளே இருக்கும் ஆனந்தமய ஆன்மாவானது அன்னமயமுதலியவற்றைச் சிந்திக்கும் கிரமமொழிந்து அவற்றுக்குள்ளேயுள்ளதாக அநுசந்தானஞ் செய்யமுடியாமையின், அவைகளை அநுசந்தானஞ்செய்தல் நியமமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. அன்னமயமுதலியவற்றை அநுசந்தானஞ் செய்தல்நியமமின்று; பிரயோசனமின்மையின். அதற்கு (அன்னமயாதிகளை விரித்து விளக்கின நோக்கத்துக்கு) ஆனந்தமய (ஆனந்தமிக்குடைய) பிரமத்தைஅடைதலே பிரயோசனம். ஆகலின், அதைப் பெறும் வரையுமே அன்னமயாதிகளைச் சிந்திக்கவேண்டியது; அவற்றைத் தியானஞ் செய்தல் முழுமையும் ஆவசியகமில்லை. (கச)

ஞூத்ஸஹாஷ (ங. ங. கரு)

**(ஙசூக) ஆன்மசப்தமுண்மையானும்.**

சுஹூயோ தா நூவஸகூரூ (தைத். உ. அ)

"அன்னமய ஆன்மா என்று உபக்கிரமித்து" என்றற்றொடக்கத்தவறில் தனித்தனி ஆன்மசப்தமுண்மையின், அன்னமயாதிகளுக்கு அன்னாதிகளை அதிஷ்டிக்கும் சேதனத்துவம் உளதாகப் பெறப்படுகின்றது. பிரமத்தையொழிந்த சேதனமெல்லாம் தியானத்துக்கு யோக்கியதை இலவாக ஒழிக்கப்பட்டமையான், (பரவித்தியாத்) தியானகாலத்தில் அவை அநுசந்தானம் பண்ணப்படுவன அன்று. அங்ஙனமே,

ஶிவ ஹகொ ஜெஸ்யஶிவஂசுஸூவ-ஜெ நூஷரிதூஜ (அதர்வசிகை)

"மற்றெல்லோரையும் விடுத்து ஆனந்தஞ் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்" என அதர்வசிகை கூறிற்று. இந்தச் சுருதியானது முமூட்சுக்களாற் றியானிக்கற்பாலர் சிவபெருமானைத் தவிரப் பிறர் ஒருவர் இலர் என நிஷேதிக்கின்றது. ஆகலின், அன்னமயமுதலியவற்றை அநுசந்தானஞ் செய்தல் நியமம் அன்று. (கடு)

ஆத்மக்ருஹீதிரிதரவதுத்தராத் (ந. ந. கசு)

(நஎ0) இதரவிஷயத்திற் போல ஆன்மா குறிக்கப்படுகின்றது; உத்தரத்தினுற் காட்டப்பட்டாற் போல.

அந்யோந்தர ஆத்மாநந்தமய: (தைத். உ. ரு)

ஈண்டு, "அன்னியமாகிய அந்தரான்மா ஆனந்தமயர்" என்ற இடத்திற் போதரும் ஆன்மசப்தம் பரமான்மாவின்மேலதன்றி, பிரத்தியகான்மாவின் மேலதன்று.

ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூத: (தைத். உ. க)

"ஆன்மாவிலிருந்து ஆகாயம் பிறந்தது" என்ற சுருதியில், ஆன்மசப்தம் பரமான்மாவின் மேலதானுற் போல,

ஆநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி (தைத். ந. க0. ரு)

"ஆனந்தமயமாகிய ஆன்மாவோடிசைந்து" என்னும் உத்தரவாக்கியத்தினுல், இது (பரமான்மா) பெறப்படுகின்றது. ஆகலின், ஆனந்தமயமாய், (பரம) ஆன்மாவை அநுசந்தானஞ் செய்தலே முக்கியமான பிரமாநுசந்தானம். (கசு)

அந்வயாதிதி சேத்ஸ்யாதவதாரணாத் (ந. ந. கஎ)

(நஎக) தொடர்ச்சியினுல் எனின், வற்புறுத்தலினுலாம்.

(ஆக்ஷேபம்) அன்னமயமுதலியவைகளும் ஆன்மசப்தத்தோடு தொடர்ந்து வருதலாற் பரமான்மாவாய் அவைகளும் தியானிக்கப்பட வேண்டுமென்பதில் யாதும் இழுக்கில்லையே எனின்,

(உத்தரம்) அன்று;

அந்யோந்தர ஆத்மாநந்தமய: (தைத். உ. ரு)

"அந்நிய அந்தரான்மா ஆனந்தமயர்" என்றதினுல், ஆனந்தமயமாகிய சிவபிரான் அன்னமயாதிகளுக்குப் பின்னமாயினர் என்பது பெறப்படுகின்றமை பற்றி,

ஶிவ ஏகோ த்யேயஶ்ஶிவங்கரஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய

(அதர்வசிகை)

"மற்றெல்லாம் விடுத்து இன்பஞ் செய்பவராகிய சிவபெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்" என்னுஞ் சுருதி, அனைத்தையும் விடுத்துச் சிவபெருமான் ஒருவர்க்குமாத்திரம் தியேயத்துவத்தை வற்புறுத்திச் சாற்றுகின்றமையின். ஈண்டுச் சிவபிரான் என்றது சமஸ்தகளங்கமும் ஒழிந்து, நிகிலமங்கலகுணங்களுக்கு இருப்பிடமாகிய பரப்பிரமம் என்பதை விளக்குகின்றது. விரூபாக்ஷரும் கிருஷ்ணபிங்களருமாகியவரை இடைவிடாது சிந்தித்தலாற் பிரமத்தோடு சாரூப்பியமடைதலே முத்தியாம். உபாசனையே பலமாதலின் சிவபெருமானை யொழிந்து மங்களசூன்னியமாயிருப்பவற்றைத் தியானித்தல் சிவத்துவத்தை அடைவிக்காது. ஆகலின், ஆனந்தமயசிவபிரான் ஒருவரே வழிபடற்பாலர். (௧௭)

## (௩) கார்யாக்கியாநாதிகரணம்.

---

கார்யாக்யாநாதபூர்வம். (௩. ௩. ௧௮)

(௩௭௨) காரியமாக விதிக்கப்பட்டமையின், (ஈண்டு) புதியதொன்றே (கருதற்பாற்று).

யோ ஹவை ஜ்யேஷ்டஞ்ச ஶ்ரேஷ்டஞ்ச வேத।

(பிரு. ௮. ௧. ௧; சாந். ௫. ௧. ௧)

"எவன் ஜ்யேஷ்டத்தையும் சிரேஷ்டத்தையும் அறிகின்றனே" என்று தொடங்கி,

கிம் மே வாஸ: (பிரு. ௮. ௧. ௧௪)

"(வாக்குமுதலியவற்றை நோக்கி) எனக்கு யாது உடை" என்று பிராணன் வினவிய வினவுக்கு, "சலமே பிராணனுக்கு உடை" என்று கூறி, பின்னரும்

ஶ்ரோத்ரியா அஶிஷ்யந்த ஆசாமந்த்யஶித்வாசாமந்த்யேதமேவ தத்

அநமநநம் குர்வந்தோ மந்யந்தே (பிரு. ௮. ௧. ௧௪)

"இதனை அறிந்த சுரோத்திரியர்கள் போசனத்துக்கு முன்னும் பின்னும் ஆசமனஞ் செய்து அவ்வன்னத்தை உடையுடையதாக்குகின்றேம் என நினைக்கின்றனர்" என்று கூறியதாகக் காணப்படுகின்றது.

ஈண்டுப் பிராணனுக்கு ஆசமனமும் வஸ்திரத்தன்மையுமாகிய இரண்டுமோ? இன்றேற் பிராணனுக்கு வஸ்திரத்தன்மைமாத்திரமா? விதிக்கப்படுகின்றதென்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இது அது என்று யாதுங் கூறப்படாமையின், இரண்டுமே விதிக்கப்பட்டன எனின்,

(சித்தாந்தம்) ஆசமனம் ஸ்மிருதி ஆசாரத்தினுற் பெறப்பட்டமையால், கூறப்படாத பிராணனுக்குவஸ்திரமாயிருத்தலே புதிதாக விதிக்கப்படுகின்றது; புதிதாயுள்ளதொன்று விதிக்கப்படுமாயின், (சுருதியானது) அதுவாத சொரூபமாக விதி கற்பிக்கின்றது. ஆதலினுல், முன் அறியப்படாததொன்றுயுள்ள பிராணனுக்கு வஸ்திரமாயிருத்தலே ஈண்டு விதிக்கப்பட்டதாகக் கோடற்பாற்றென்பது யுக்தம். (கஅ)

## (கo) சமாநாதிகரணம்.

---

ஸமாந ஏவஞ்சாபேதாத் (ங. ங. ககூ)

(ஙஎங) பேதமில்லாமையால் இங்ஙனம் (குணங்கள்) ஒன்ருயிருக்கின்றன.

அக்கினிரகசியத்தினும் பிருகதாரணியத்தினும் சாண்டில்லியவித்தை கூறப்பட்டிருக்கின்றது; ஒன்றிலே,

ஸ க்ரதும் குர்வீத மநோமயம் ப்ராணஶரீரம் பாரூபம் ஸத்ய ஸங்கல்பமாகாஶாத்மாநம் (மத்தியந்தினசாகை)

“மநோமயமாய், பிராணசரீரமாய், ஒளிரூபமாய், சத்தியசங்கற்பமாய், ஆகாயவியற்கையாயுள்ள (பரம) ஆன்மாவை உபாசிக்க” என்றும், மற்றதிலே

மநோமயோऽயம் புருஷோ பாஸ்ஸத்யஸ்தஸ்மிந்நந்தர்ஹ்ருதயே யதா வ்ரீஹிர்வா யவோ வா ஸ ஏஷ ஸர்வஸ்யேஶாந ஸ்ஸர்வஸ்யாதிபதிஸ்ஸர்வமிதம் ப்ரஶாஸ்தி (பிரு. எ. சு. க)

“ஒளிரூபமாயிருத்தலின் மநோமயமாயுள்ள சத்தியபுருஷர் நெல்லையேனும் யவையையேனும் நிகர்த்து இதயத்துளர், அவர் சர்வத்தையும் வசீகரிப்பவர், சர்வத்துக்கும் ஈசானர், அனைத்துக்கும் அதிபதி; (உள்ளனவாகிய) இவை அனைத்தையும் ஆளுகின்றனர்” என்றுங் கூறப்படுகின்றது.

ஈரிடத்துங் கூறப்பட்ட வித்தைகள் இரண்டும் பின்னமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஓரிடத்திலே (தியானப்பொருளாகிய புருஷர்) ஆகாயான்மாவாதலிற் பெரியர் என்றும், மற்ருேரிடத்திலே யவைக்கொப்பாயிருத்தலிற் சிறியர் என்றும், ஒன்றிலே சத்தியசங்கற்பத்துவமுடையர் என்றும், மற்ருென்றிலே வசித்துவமுடையரென்றும் பிறவுமாகக் குணங்கள் ஒன்றுக்கொன்று பேதமுறக் கூறப்படலான், ஈரிடத்துங்கூறப்பட்ட வித்தைகள் பின்னமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஈரிடத்தினும் ஞான (மனோ) மயத்துவமுதலிய சமமாய்க் கூறப்பட, ஆகாயான்மா என்றது ஆகாயம்போலச் சுவச்சமாயிருத்தலானும், தோத்திரஞ் செய்வதற்கு மகிமையைக் காட்டுவதினாலும், வசித்துவ முதலிய குணங்கள் சத்தியசங்கற்பத்துவ முதலிய குணங்களிலிருந்து பேதமுறுவன அன்றுமாதலினாலும் ஈரிடத்தும் உரைத்த வித்தை ஒன்றேயாம். (௧௯)

## (௧௧) சம்பந்தாதிகரணம்.

---

ஸம்பந்தாதேவமந்யத்ராபி (௩. ௩. ௨௦)

**(௩௭௪) (இரண்டுக்கும் ஒப்பாக அவர்) சம்பந்தமிருத்தலான், அங்ஙனமே பிறவிடத்தினும்.**

ய ஏஷ ஏதஸ்மிந்மண்டலே புருஷோ யஶ்சாயம் தக்ஷிணே க்ஷிணி। (பிரு. எ. ௫. ௨, ௩)

“அந்த மண்டலத்திலேயுள்ள புருஷர் இங்கே வலக்கண்ணினும் உளர்” என்று பிருகதாரணியத்திலே தொடங்கி, வியாகிருதி சரீரங்கொண்டு சத்தியமாகிய பிரமமானது சூரியமண்டலத்தினும் வலக்கண்ணினுமாகத் தியானிக்கற்பாற்று என்று கூறப்படுகின்றது. பின்னரும்,

தஸ்யோபநிஷதஹரிதி (பிரு. எ. ௫. ௩)

தஸ்யோபநிஷதஹமிதி (பிரு. எ. ௫. ௪)

“அவரது இரகசியநாமமாகிய அஹ:” அதிதேவதை என்றும்,

“அவரது இரகசியநாமமாகிய அஹம்” அத்தியாத்மம் என்றும் இரு இரகசிய நாமங்கள் கூறப்படுகின்றன.

ஒவ்வோரிடத்தும் இந்த இரண்டு நாமங்களும் தியானிக்கற்பாலனவா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உபாசிக்கப்படும் பொருளாகிய பிரமம் ஒன்றுமாதலின், வித்தை ஒன்றே ஈரிடத்துங் கூறப்பட்டது. ஆகலின், இரண்டிடத்தும் இரண்டு பெயர்களும் சிந்திக்கப்படல்வேண்டும் எனின், (௨௦)

(சித்தாந்தம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

நவா விஶேஷாத் (௩. ௩. ௨௧)

**(௩௭௫) இன்றேல் (அங்ஙனம்) இன்று; பேதமுறலின்.**

வித்தைகள் ஒன்றன்று; சூரியன் கண் என்னும் ஸ்தானசம்பந்தமாக உபாசனை ஈரிடத்தும் பேதமுறுதலின். ஆகலின், அவ்வவ்விடத்துக்கே அந்தந்த நாமம் இயைந்தது. (௨௧)

## (௧௨) தர்சயத்தியதிகரணம்.

𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌚 (௩. ௩. ௨௨)

### (௩௭௬) சுருதியுஞ் சொல்கின்றது.

சாந்தோக்கியத்திலும் தைத்திரீயத்திலும் மண்டலவித்தை கூறப்படு கின்றது. அந்த வித்தை ஒன்றா? வேறா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌶𑍍𑌮𑌶𑍍𑌰𑍁𑌰𑍍𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌕𑍇𑌶 𑌆𑌪𑍍𑌰𑌣𑌖𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌃 (சாந். க. சு. சு)

"பொற்றாடியும், பொற்கேசமுமுடையராய், நகம்வரையும் எல்லாம் பொன் மயமுடையராய்ச் சூரியனுள்ளே காணப்படும் பொன்மயபுருஷர்" என்று சாந்தோக்கியத்திற் கூறப்படுகின்றது.

𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 (சாந். க. சு. சு)

"சூரியனுள்ளே இருக்கும் புருஷர் பொன்மயபுருஷர்" என மற்றொன்றிலே மூவேதங்களினுலுமாய மண்டலத்துள்ளிருக்கின்ற புருஷனுள்ளே இருக்கும் பொன்மயபுருஷனையுற்றுரைத்து,பின்னர் உபசங்காரத்திலே சுருதியானது

𑌸𑌰𑍍𑌵𑍋 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரர்" என்று தொடங்கி,

𑌨𑌮𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌬𑌾𑌹𑌵𑍇 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾𑌯 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌰𑍂𑌪𑌾𑌯 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌪𑌤𑌯𑍇𑌽𑌮𑍍𑌬𑌿𑌕𑌾𑌪𑌤𑌯 𑌉𑌮𑌾𑌪𑌤𑌯𑍇 𑌪𑌶𑍁𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 (தைத். ஆரணி. ௧௦. ௨௨. ௪௦)

"பொற்கைகளுக்கு நமஸ்காரம், பொன்வர்ணர்க்கு நமஸ்காரம், பொன்வடிவினர்க்கு நமஸ்காரம், பொற்பதிக்கு நமஸ்காரம், அம்பிகாபதிக்கு நமஸ்காரம், உமாபதிக்கு நமஸ்காரம், பசுபதிக்கு நமஸ்காரம்" என்பதிறுதியாகச் சர்வான்மகத்துவமும், இரண்ணியபாகுத்துவமும், உமாபதித்துவமும் கூறப் படுகின்றன. ஓரிடத்துச் சரீரமுழுமையும் பொன்மயமாகவும், மற்றோரிடத் திலே பாகுமாத்திரம் பொன்மயமாகவும் கூறப்படலின் ரூபபேதமும், ஓர் இடத்தில்

𑌸𑌰𑍍𑌵𑍋 𑌵𑍈 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃 (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரரே" எனச் சர்வான்மகத்துவமும், மற்றோரிடத்தில்

𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌯𑍋𑌗𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍇𑌷𑍁।

"எல்லா உலகத்தையும் ஆளுகின்றனர்" எனச் சர்வாதிபத்தியமுமாகிய குண பேதமும் எய்துகின்றமையின், வித்தை ஒன்றன்றே எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். வித்தை பேதமின்று.

ஆதி³த்யே (சாந். ௧. ௬. ௬)

"ஆதித்தியனுள்ளே உள்ளார்" என ஸ்தானம் ஒன்றாயிருத்தலின், வித்தை ஒன்றும் எனக் காட்டுகின்றது. தைத்திரீயத்திலே,

ஹிரண்மய: புருஷ:।

"பொன்மயபுருஷர்" என்று உபக்கிரமித்து, இரண்ணியபாகு என்னும் உபலக்ஷணையினாலே உபசங்காரத்தினும் சர்வாங்கமும் சுவர்ணத்துவமே என்று கூறப்பட்டது. சகத்துக்கு ஈசராளுலும், அவர் அதனைப் பிரவேசித்து நிற்கின்றமையான் உலகமாய் நின்றனர் என்பது யுக்தம் என நிரூபிக்கப்பட்டது. ஆகலின், ஈரிடத்தும் ஒன்றே பிரதிபாதிக்க வேண்டினமையின், உமாபதித்துவமுதலிய குணங்கள் இரண்டிடத்தும் (தியானத்தில்) உபசங்கரிக்கற்பாலனவாம். (௨௨)

## (௧௩) சம்பிருத்தியதிகரணம்.

---

ஸம்ப்⁴ருதித்³யுவ்யாப்த்யபி சாத: (௩. ௩. ௨௩.)

**(௩௭௭) ஆதலினாலும் தொகுத்தலும் ஆகாயவியாபகமும்.**

இராணாயநீயர் உத்தரபாகத்தில்,

ப்³ரஹ்மஜ்யேஷ்டா² வீர்யா ஸம்ப்⁴ருதாநி ப்³ரஹ்மாக்³ரே ஜ்யேஷ்ட²ம் தி³வமாததாந| ப்³ரஹ்மபூ⁴தாநாம் ப்ரத²மோ ஜஜ்ஞே தேநார்ஹதி ப்³ரஹ்மணா ஸ்பர்தி⁴தும் க: (தைத். பிராம். ௨. ௪. ௭. ௭௨)

"பிரமமானது வீரியமாய வலிய செய்கைகளைச் செய்தது; தொடக்கத்திலே ஜ்யேஷ்டமாகிய பிரமம் ஆகாயத்தை ஊடுருவிற்று; பிரமம் பூதங்களுக்கு முன்னே இருந்தது; அந்தப் பிரமத்தோடு எதிர்க்கவல்லார் யார்" என்று கூறப்படுகின்றது. ஹரி (நாராயணர்), அரன் (உருத்திரர்), இரணியகருப்பர் (பிரமா) முதலாயினார்க்கு ஜ்யேஷ்டமாயும், உற்கிருஷ்டகடவுளாயும், இவர்கள் சிருஷ்டிக்கப்படுவதற்கு முன்னே பரமாகாசபதத்தை வியாபித்ததாயும் எவராலும் மேற்கொள்ளப்படாதனவாய், முதிர்ந்தனவாய், பிறராற் செய்ய இயலாதனவாய், உலகத்திலே (பிரசித்த) மாயிருந்த திரிபுரதகனம் காளகூடகபளனமுதலியவற்றை ஸ்ரீகண்டமூர்த்தியாதி வடிவங்கள் வாயிலாகச் செய்துமுடித்ததாயுமுள்ள அந்த மஹத்தான பிரமத்தின் வீரிய சித்திகளும்

ஆகாயவியாபகமும் பரவித்தைகள் அனைத்தினும் உபசங்கரிக்கவேண்டுமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) மற்றவைகள் போல, இந்தச் செய்கைகளும் பிரமத்தின் குணங்களானமையானும், ஓர் விசேஷவிதியைக் குறித்து இவைகள் கூறப்படாமையானும் பரவித்தைகள் அனைத்தினும் உபசங்கரிக்கற்பாலனவாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. வியாபகமானது எல்லா உபாசனைகளினும் உபசங்கரிக்கப்படுவது அன்று. சிறிய ஸ்தானங்கள் ஒழிந்த மற்றை இடங்களிலே சாமர்த்தியத்தினாற் (காரியத்தின் இயற்கைகொண்டு) உபசங்கரிக்கப்படல்வேண்டும்.

தேவா ஹவை ஸ்வர்க்கம் லோகமாயம்ஸ்தே தேவா ருத்ரமப்ருச்சந் கோ பவாநிதி (அதர்வசிரசு)

"தேவர்கள் சுவர்க்கலோகத்தை அடைந்தார்கள்; நீவிர் யார்? என்று அந்தத் தேவர்கள் உருத்திரரைக் கேட்டார்கள்" என்னுஞ் சுருதியினால் நிரதிசயானந்தத்துக்கு ஸ்தானமாதலின் சுவர்க்கம் எனப்படும் அது, பிரமாதிபதவிகளினும் மஹத்தாகிய மகாஸ்தானமாகக் கேட்கப்படுகின்றது. ஆகலின், அற்பஸ்தானங்களுக்கு வேறாயுள்ள வைசுவாநராதி உபாசனைகளிலே ஆகாயவியாபகம் உபசங்கரிக்கப்படல்வேண்டும். அதனோடிசைந்தமையால் மகாவீரியச் செய்கைகளும் அங்கே உபசங்கரிக்கற்பாலன. (௨௫)

## (௧௬) புருஷவித்தியாதிகரணம்.

---

புருஷவித்யாயாமிவ சேதரேஷாமநாம்நாநாத் (௩. ௩. ௨௪)

**(௫.௭௮) புருஷவித்தையினும் அப்படியே; மற்றவைகள் கூறப்படாமையான்.**

புருஷவித்தை சாந்தோக்கியத்தினும் தைத்திரீயத்தினும் கூறப்படுகின்றது.

புருஷோ வாவ யஜ்ஞஸ்தஸ்ய யாநி சதுர்விம்சதி வர்ஷாணி தத்ப்ராதஸ்ஸவநம் (சாந். ௩. ௧௬. ௧)

"புருஷனே யஞ்ஞம்; அவனுடைய இருபத்துநான்கு வயசும் பிராதஸ் சவனம்" என்று புருஷவித்தையானது ஒன்றிலே சொல்லப்படுகின்றது.

தஸ்யைவம் விதுஷோ யஜ்ஞஸ்யாத்மா யஜமாநஶ்ஶ்ரத்தா பத்நீ ஶரீரமித்மமுரோ வேதி: (தைத். ஆரணி, ௧௦. ௮௦. ௧௦௧)

"யாகத்தில் ஆன்மா யஜமானன், அவனது சிரத்தை மனைவி, அவனது சரீரம் இந்தனம், அவனது நெஞ்சு வேதிகை என இங்ஙனம் அறிகின்றவன்" என்று மற்றொன்றிற் கூறப்படுகின்றது.

இந்த இரு உபநிடதங்களினுங் கூறப்பட்ட புருஷவித்தை ஒன்று? பின்னமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இந்த இரண்டு உபநிடதங்களினுமுள்ள வித்தைகள் புருஷவித்தை எனப் பெயரினுற் பேதமுறுமையானும், யஞ்ஞத்தில் வெவ்வேறு அங்கங்கள் இரண்டினும் சமமாகக் கூறப்படலானும் வித்தைகள் ஒன்றேயாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. தைத்திரீயத்திற் கூறப்படும் யஜமானன் பத்தினி முதலிய யஞ்ஞ அவயவங்களும், மூன்று சவனங்களும் சாந்தோக்கியத்திற் பேசப்படாமையானும், ஆங்கு வேறு பிரகாரமாகச் சவநத்திரய முதலிய சொல்லப்படலானும் புருஷவித்தை இரண்டினும் பின்னமேயாம்.

யஜ்ஞாயஂ வ்ராதஃப்ராதர்மத்யந்தினஂ ஸாயஂ ச தானி ஸவநானி।

"மாலை காலை உச்சி என்பனவே சவனங்கள்" என்று தைத்திரீயத்திற் கூறப்படுகின்றது. சாந்தோக்கியத்திலோ புருஷனுடைய ஆயுசு மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுச் சவனங்கள் மூன்றாகக் கூறப்பட்டன; தைத்திரீயத்திலே பலங் கூறப்படாமையின்.

ப்ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மானஂ யுஞ்ஜீத।
(தைத். ஆரணி. க0. எகூ. க00)

"பிரமத்தினொளிக்காக ஒருவன் ஓம் என்று சொல்லி (பரம) ஆன்மாவைத் தியானித்தல்வேண்டும்" எனப் பிரமவித்தையைக் கூறி,

ப்ரஹ்மணோ மஹிமான மாப்னோதி (தைத். ஆரணி. க0. எகூ. க00)

"பிரமத்தின் மகிமைக் குணத்தை அடைகின்றான்" எனப் பலத்தையுங் கூறி,

தமேவஂ விதுஷஃ।

"இங்ஙனம் அறிபவன்" எனக் கூறப்பட்ட புருஷவித்தை இப்போது கூறப்படும் பிரமவித்தைக்கு அங்கமாய் அதன் பலம் பிரமத்தை அடைதலேயாம் என்றும், சாந்தோக்கியத்தில்

ஸஹ ஷோடஶஂ வர்ஷஶதஂ ஜீவதி (சாந். ங. கசு. எ)

"அவன் ஆயிரத்தறுநூறு வருஷம் வசிக்கின்றான்" என்றும் வித்தையின் பலன் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின் பலத்திலே பேதமுண்மையானும், யஞ்ஞ அவயவங்களிலே பேதமுண்மையானும் வித்தை ஒன்றன்று. (உச)

## (கரு) வேதாத்தியதிகரணம்.

வெயாடி௩ு்யூ-ுஹெஷாக (ங. ங. உரு)

(ஙஎகூ) ஊடுருவுதன் முதலிய வேறு பொருள்கள் பேதமுறுதலான்.

தைத்திரீயோபநிடத ஆரம்பத்திலே,

ஶஹொ தி௨ு்ஶு வரு ணஃ (தைத். க. க)

"மித்திரன் எங்களுக்கு இன்பத்தைக் கொடுக்க; வருணன் எங்களுக்கு இன்பத்தைக் கொடுக்க"

ஸஹ நாவவது (தைத். உ. க)

"அவன் எங்கள் இருவரைக் காக்க" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இந்த மந்திரங்கள் வித்தைக்கு அங்கமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வித்தைக்குச் சமீபத்துளவாதலின் அவை வித்தியாங்கமாகும் எனின்,

(சித்தாந்தம்) ஆதர்வணிகருடைய உபநிடத ஆரம்பத்திற் கூறப்பட்ட

ஶுகு௦ வுவிய ஹு௩யம௦ வுவிய|

"சுக்கிரத்தை ஊடுருவி, இதயத்தை ஊடுருவி" என்றற்றொடக்கத்த மந்திரம் இதயத்தை ஊடுருவுவதை உணர்த்துவதாய்ச் (சத்துருவுக்கு மரணத்தை விளைவிக்க) அபிசாரத்தொழில் இருந்தாற்போலவேனும், ஐதரேய வாஜசநேய உபநிடதங்களின் ஆரம்பத்திற் கூறப்பட்ட மகாவிரத பிரவர்க்கிய கருமங்கள் வெளிப்படை விதிகளாக யஞ்ஞகருமங்களுக்கு அங்கங்களாயினாற் போலவேனும், மேலே உரைத்த அவ்விரு மந்திரங்களும்

ஜ௩௦ வதிஷ௱ுமி (தைத். ஆரணி. எ. க. க)

தெஜஸ்வி நாவயீ தமஸு (தைத். ஆரணி. அ. க. க)

"நான் உண்மை சொல்வேன்; எங்கள் படிப்பு தேஜசாகுக" என்றவாறு வேதம் படிப்பதற்கு அங்கங்களாயமைந்தனவன்றி வித்தைக்கு அங்கங்களாவன அன்று; அவற்றின் பயன் வேறுதல்பற்றிச் சுருதி, லிங்கம், வாக்கியம் என்பவற்றினும் சந்நிதி துர்ப்பலமாதலின். (உரு)

## (கசு) ஹாநந்தியதிகரணம்.

ஹாநெள து௨ாயந ஶஶ்ஷெஷக்ஷா த்ுாஹ்ஸு்துவஶா நவதுஜ௩கூதழ (ங. ங. உசு)

(ங௨௰) ஆயின் விமோசனவிஷயத்தில் (அது பிரவேசத்தோடு சேர்த்துக்கொள்ளப்படல்வேண்டும்); இது (விமோசனம்) பிரவேச வாக்கியங்களுக்குச் சேஷமாயிருத்தலின்; குசங்கள், சந்தசுகள், துதி, கானம் என்பவற்றிற்போல; இது விளக்கப்பட்டதாயிற்று.

வேதசாகை ஒன்றிலே, பிரமத்தை அடையும் அறிஞன் புண்ணிய பாவவிமோசனத்தை அடைகின்றனன் என்று கூறப்பட்டிருக்கின்றது. வேதத்தின் மற்றோர் சாகையிலே, அவன் நீங்கப்பெற்ற புண்ணியபாவமிரண்டிற் புண்ணியம் சிநேகிதர்களேயும், பாவம் சத்துருக்களேயும் பிரவேசிக்கின்றன என்று கூறப்படுகின்றது. மற்றோர் சாகையிலே, அவ்விரண்டினின்று நீங்குதலும், அவற்றிற் பிரவேசமுமாம் இரண்டுங் கூறப்பட்டன. இஃதெல்லாந் தியானத்தின்பொருட்டேயாம்.

ஈண்டு (அவற்றை) விடுதலும் (அவற்றிற்) பிரவேசித்தலுமாகிய இரண்டும் எவ்விடத்துந் தியானிக்கற்பாலனவா? இன்றேல் அவற்றுள் ஒன்று சிந்திக்கற்பாலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இதனாற் பெறப்பட்டது யாது? சாட்டியாயனகத்திலே

தஸ்ய புத்ரா தாயமுபயந்தி ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் த்விஷந்த: பாபக்ருத்யாம்।

"அவனுடைய புத்திரர்கள் அவன் ஆஸ்தியையும், அவனது சிநேகிதர்கள் அவன் புண்ணியத்தையும், அவனது சத்துருக்கள் அவன் பாவத்தையும் அடைகின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

அச்வ இவ ரோமாணி விதூய பாபம் சந்த்ர இவ ராஹோர்முகாத் ப்ரமுச்ய (சாந். அ. கங. க)

"ஓர் குதிரை தன் உரோமத்தை உதறுவதுபோலப் பாவத்தை உதறி, இராகுவாயினின்று சந்திரன் விடப்படுவது போல" எனத் தாண்டிசாகையினர் கூறுவர்.

ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி (முண். ங. க. ங)

"அப்போது வித்துவான் புண்ணியபாவங்களே உதறி, நிரஞ்சனனாய்ப் பரம சாமியத்தை அடைகின்றான்" என அதர்வணவேதம் கூறுகின்றது. ஈண்டு வித்துவான் புண்ணியபாவத்தை ஒழித்தல்வேண்டுமென்று கூறிய சுருதியில் விடப்பட்ட அவற்றின் பிரவேச ஸ்தானம் உபசங்கரிக்கப்படவேண்டியதின்று; அதனை ஒழித்தல்வேண்டுமென்று கூறிய சுருதி அதனை வெளிப்படையாகக் கூறாமையான் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஹாநி என்பது விமோசனம். உபாயனம் என்பது பிரவேசம்; விமோசனமாத்திரஞ் சொல்லப்பட்டபோதாவது, பிரவேசமாத்திரஞ் சொல்லப்பட்டபோதாவது, அவற்றுள் ஒன்றை மாத்திரம் குறியாது இரண்டுந் தொகுத்துக் கூறப்பட்டனவாயே கொள்ளற்பாற்று; விகற்பமாயன்று (அஃதாவது இரண்டில் ஒன்றுமாத்திரம் எனக் கோடற்பாற்றன்று). பிரவேசத்தை உணர்த்துஞ் சப்தமானது விமோசனத்தை உணர்த்தும் வாக்கியத்துக்குப் பரிசிஷ்டமாயிருத்தலின், அது சேஷத்துவம் எனப்படும்; எதனாலெனின், விடுக்கப்பட்ட புண்ணியமும் பாவமும் பிரவேசிக்குமிடத்தைக் கூறுதலால் முந்தியதைப் பிந்தியது ஆவசியகம் அபேக்ஷிக்கும்.

(ஆக்ஷேபம்) (வேதத்தின்) ஓர் இடத்திற் கூறப்பட்ட வாக்கியத்துக்குப் பிறிதோரிடத்துக் கூறப்பட்ட வாக்கியம் சேஷமாவதெங்ஙனமெனின்,

(உத்தரம்)

வாநஸ்பத்யாஃ குஶாஃ।

"பூக்காது காய்க்கும் மரத்தினின்று பிறக்கும் குசங்கள்" என்னும் வாக்கியத்துக்கு, விசேஷமாய்ப் பிறிதோரிடத்துப் போந்த

ஔதும்பர்யாஃ குஶாஃ।

"உதும்பரத்தின் மக்களாகிய குசங்களே" என்பது சேஷமானாற் போலவும்,

தேவாஸுராணாம் ச²ந்தோபி⁴ஃ।

"தேவர்களுடையவும் அசுரர்களுடையவும் சந்தசுகளால்" என்பதற்கு, பிறிதோரிடத்துள்ள

தேவச்ச²ந்தாம்ஸி பூர்வாணி।

"(தேவர்களுடைய சந்தசுகள் முதற்கண் வரவேண்டும்)" என்பது சேஷமானாற் போலவும்,

ஷோட³ஶிந꞉ ஸ்தோத்ரம் உபாகரோதி (யசுர். வே. சு. சு. கக. சு)

"ஷோடசிகருமத்துக்கு ஸ்தோத்திரம் செய்கின்றான்" என்னும் வாக்கியத்துக்கு,

ஸமயா விஷிதே ஸூர்யே ஷோட³ஶிந꞉ ஸ்தோத்ரம்।
(யசுர். வே. சு. சு. கக. சு)

"சூரியன் பாதி உதயமாகும்போது ஷோடசிகருமத்தின் ஸ்தோத்திரம் செலுத்தவேண்டும்" என்பது சேஷமானாற் போலவும்,

ஜேத்ரிஜ உவஹாயந்தி।

"இருத்துவிக்குக்கள் பாடுகின்றார்கள்" என்பதற்கு

நாஷ்வர்யு-ருபகாவஹாயெத (யசுர். வே. ௬. ௩. க. ௫)

"அத்துவரியு கானஞ் செய்யப்படாது" என்பது சேஷமானாற் போலவும், பிரவேசத்தைப்பற்றி உணர்த்துஞ் சுருதி (புண்ணியபாவ) விமோசனத்தை உணர்த்தும் வாக்கியத்துக்குச் சேஷமாகக் கொள்ளப்படுங்கால், அவற்றுள் ஒன்றுதான் (சிந்திக்கற்பாலது) என்பது நியாயமன்று. (மீமாஞ்சையின்) முதலாவது தந்திரத்தில்,

அவி து வாக்யஸேஷ ஸ்யாத்-ந்யாயத்வாதிதரஸ்ய।

(பூருவமீமாஞ்சை. க0. அ. ௪)

"ஒன்றைமாத்திரம் அங்கீகரிப்பது நியாயமல்லாமையால், ஒன்றுக்குமற்றது சேஷமாகும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. (ஈண்டு இவ்விஷயத்திற் பிரவேசத்தை உணர்த்திய வாக்கியம் மற்றதிற் கூறப்பட்டதைத்) துதிக்கவேணும், இன்றேல் உயர்ச்சியைக் காட்டவேணும் (உதவுகின்றது).

(ஆக்ஷேபம்) ஓரிடத்தெய்தும் அர்த்தவாதம் மற்றோரிடத்தில் வரும் அர்த்தவாதத்தை அபேக்ஷித்தல் எங்ஙனமாம் எனின்,

(உத்தரம்) அங்ஙனங் கூறல் ஒவ்வாது.

வஏகவிம்ஶோ வா இதொஸாவாதித்ய:।

"இங்கிருந்து சூரியன் இருபத்தொன்றாவதாகக் காணப்படுகின்றது" என்னும் சாமத்தியானத்தைத் துதிக்கப்போந்த அர்த்தவாத சுருதியானது, (சூரியன்) இருபத்தொராவது என நிச்சயஞ் செய்யும்பொருட்டு

த்வாத3ஶமாஸா: பஞ்சர்த்தவஸ்த்ரய இமேலோகா அஸாவாதித்ய ஏக விம்ஶ: (யசுர். வே. ௫. க. க0. ௩)

"பன்னிரு மாசங்களும், ஐந்து இருதுக்களும், மூன்று உலகங்களுமாகிய இருபதும் நீங்கச் சூரியன் இருபத்தொராவதாகவும் (காணப்படும்)" எனத் தொகை நிர்ணயஞ் செய்தற்குக் கூறப்பட்ட (வாக்கியத்தைத்) தைத்திரீய சங்கிதையின் சத்திரப்பிரகரணத்து அர்த்தவாதமாக அபேக்ஷிப்பதாகக் காணப்படுகின்றது. அர்த்தவாதமாயினும் பிரவேசம் உபசங்கரிக்கப்பட வேண்டியது. மேலும்,

தத்ஸுக்ருததுஷ்க்ருதெ விதூநுதெ தஸ்ய ப்ரியா ஜ்ஞாதய ஸுக்ருதமுவயந்த்யப்ரியா து3ஷ்க்ருதம் (கௌஷீ. க. ௪)

"அங்கே தனது புண்ணியபாவங்களை உதறுகின்றான்; அவனுடைய பற்றுள்ள பந்துக்கள் நன்மையைப் பெறுகின்றனர்; அவனுடைய சத்துருக்கள்

தீமையைப் பெறுகின்றனர்'' என்று கௌஷீதகியுபநிடதத்திலே விமோசனம் பிரவேசனம் என்னும் இரண்டும் ஓரிடத்திற் கூறப்பட்டன. ஆகலின், அவை இரண்டுஞ் சமுச்சயம். (உசு)

(கஎ) சாம்பராயாதிகரணம்.

ஸாம்பராயே தர்தவ்யாபாவாத்ததாஹ்யன்யே (௩. ௩. உஎ)

(௩அக) தேகவியோககாலத்தில் அடையவேண்டிய தொன்றுமில்லாமையான்; அங்ஙனமே பிறருஞ் சொல்கின்றனர்.

மேலுரைத்த புண்ணியபாவங்களின் விமோசனம் தேகவியோககாலத்திலா? மார்க்கத்திலா? சிந்திக்கற்பாலது என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரவர்த்திக்கின்றது. ஓரிடத்திலே,

அச்வ இவ ரோமாணி விதூய பாபம் விதூய சரீரம்।
(சாந். அ. கங. க)

"குதிரை தன் உரோமங்களை உதறுவது போல, பாவம் அனைத்தையும் உதறிப் பின்னர்த் தன் சரீரத்தை உதறி'' என்னுஞ் சுருதியிற் றேகவியோக காலத்திலே புண்ணிய பாவவிமோசனம் கூறப்பட்டது. பிறிதோரிடத்தில்,

ஸ ஆகச்சதி விரஜாம் நதீம் தாம் மனஸாத்யேதி தத்ர ஸுக்ருத துஷ்க்ருதே விதூனுதே (கௌஷீ. க. ச)

"அவன் விரஜாநதியை அடைந்து, ஞானத்தினால் அதைக் கடந்து, அங்கே தனது புண்ணியபாவங்களை உதறுகின்றான்'' என வழியிலே அவற்றை விமோசனஞ் செய்தல் கூறப்படுகின்றது. இங்ஙனம் இரண்டு சுருதியிருந்தாலும், தேகவியோககாலத்திலேதான் விமோசனம் சிந்திக்கற்பாற்று; அதன் பின்னர்ப் பிரமப் பிராப்திக்கு வேறாக அடையற்பாலதாம் கன்மத்துக்குச் சுகதுக்க போகமில்லையாதலின்.

தஸ்ய தாவதேவ சிரம் யாவன்ன விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே।
(சாந். சு. கச. உ)

"அவன் (புண்ணியபாவத்தினின்று) விடுபடாதவரையில், அவனுக்கு அங்கே தாமசமே; பின்னர் அவன் (பிரம) சம்பன்னனாவான்'' எனப் பிறரும் கூறுகின்றனரன்றோ. (அங்ஙனம்) தேகவியோககாலத்துக்குப் பின்னர்த்தான் பிரமம் அடையற்பாற்று. (உஎ)

சந்த உபயாவிரோதாத் (௩. ௩. உஅ)

(௩௮௨) விரும்பப்பட்டவாறு; இரண்டும் விரோதமின்மையின்.

தேகவியோககாலத்திற் புண்ணியபாவவிமோசனத்தைப்பற்றிச் சுருதி யுண்மையானும், விமோசனத்துக்குப் பின்னர்ப் பிரமப்பிராப்தி எய்துவதாகச் சுருதி யுண்மையானும், அவ்விரு சுருதிகளும் விரோதமுறாவண்ணம்

தத்ஸுக்ருததுஷ்க்ருதே விதூநுதே (கௌஷீ. ௧. ௪)

"அங்கே அவன் தன்புண்ணியபாவங்களை உதறுகின்றனன்" என்னுஞ் சுருதிபாகங்கொண்டு, பிரகரணத்துக்கியையப் பொருள் கோடற்பாற்று.

ஏதம் தேவயாநம் பந்தாநமாஸாத்ய

"இந்தத் தேவயான மார்க்கத்தை அடைந்து" என்னுஞ் (சுருதி) வாக்கியத்துக்கு முன்னே நேர்வதாக (அந்தச் சுருதிக்குப் பொருள்) கோடற்பாற்று. (உ௮)

உபபந்நஸ்தல்லக்ஷணார்த்தோபலப்தேர்லோகவத் (௩. ௩. உ௯)

(௩௮௩) (அந்த எண்ணம்) நியாயமானது; அப்படிப்பட்டதொன்று காணப்படலான்; உலகத்திற் போல.

தேகவியோககாலத்திற் சர்வகர்மமும் க்ஷயமானுலும், தேவயானத்தை அடையும் விதி பிரமோபாசகர்க்கு நியாயமே; (பிரமப்பொருளை அடைந்த பின்னும் வீடுற்ற ஆன்மா) அங்கே சுகித்துக்கொண்டு சஞ்சரிக்கின்றனன் என்று பெறப்படலின். அது

ஸ ஸ்வராட்பவதி தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி (சாந். ௭. உ௫. உ)

"அவன் சுவராஜாவாகிச் சமஸ்தலோகங்களினும் இஷ்டப்பிரகாரம் திரிகின்றான்" என்னுஞ் சுருதியினுல் அறியப்படுகின்றது; (இது) உலகத்திற் போல (நேர்கின்றது); இராஜனை ஆசிரயித்த புருஷர் பிறர்க்குக் கிட்டாத பொருள்களையெல்லாம் பெறுதல் போலாம். ஆகலின், மார்க்க சுருதிக்கும் விரோதமில்லை. தேகவியோககாலத்திலே சமஸ்த கன்மமும் ஒழிந்துபோனுலும், உபாசனமான்மியத்தாற் சூக்குமசரீரமுளதாய், மார்க்கத்தில் எய்தும் இடங்களிற் சஞ்சரித்தலும், சந்திரனோடு சம்வாதஞ் செய்தன் முதலிய மற்றெல்லாப் பொருட்சித்திகளும் கூடுமே எனின், (உ௯)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

யதே ரஸம்வர்த்தோ லக்ஷய்யா ஹி விரோத: (௩. ௩. ௩0)

(௩.அச) இரு சமயத்தினும் (தேவயான) கதி பிரயோசனமுடைத்து; இன்றேல் அங்கே விரோதமுளது,

தேகவியோக காலத்தினும், விரஜாநதியைத் தாண்டிப் போகும் காலத்தினுமாகிய இரு சமயத்தினும், கன்மக்ஷயம் எய்தியபோதே தேவயான கதியிற் பிரயோசனமுளது. இன்றேல், தேகவியோககாலத்திற்றான் கன்மமுழுதும் க்ஷயமாக ஆன்மா உடனே முக்தனாகின்றான் எனின், தேவயானம் நிஷ்பிரயோசனமாய் முடியும். (இதனால்) தேவயானத்தையுற்றுப் பேசுஞ் சுருதிக்கும்,

பரஞ்ஜோதி ருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே।
(சாங். அ. கஉ. ௩)

"பரஞ்சோதியோடிசைந்து தனது ரூபத்தை அடைகின்றனன்" எனத் தேவயானம் வாயிலாகப் பிரமத்தை அடைந்த பின்னர் அறிவுவிகசித்தன் முதலிய சொரூபாவிர்ப்பாவத்தை உணர்த்துஞ் சுருதிக்கும் விரோதமுண்டாம். ஆகலின், இந்த உபாசனா சாமர்த்தியத்தினால் தேவயானகதியும், அந்த அந்த இடங்களிற் சஞ்சரித்தலும், சந்திரனோடு சம்வாதஞ் செய்தலுமாகிய எல்லாம் பின் எய்துஞ் சஞ்சரித்தன் முதலிய போலப் பொருத்தமாம். அங்ஙனமாயினும், பிரமத்தை அடையும் வரையும் புத்தி சங்கோசமாய்ச் சம்சாரம் நிலைத்தலும் உபாசனா சாமர்த்தியத்தினால் எய்துவதின்று. சம்சாரத்துக்கு மூலகாரணமாயுள்ள கன்மலேசம் நிலைத்துளதாகக் கோடல் ஆவசியகம் அங்கிகரிக்கற்பாற்று. இந்தச் சம்சாராநுவிருத்தி கன்மத்தினாலன்றிப் பரமேசுவரர் சங்கற்பவிசேடத்தினால் எனக் கோடற்பாற்றன்று; சிவபெருமானது சங்கற்பந்தான் (ஆன்மாவின்) கன்மத்தை வரையறுத்ததென நம்மாற் கூறப்படுதலின். எங்கள் மதத்திலே (சுருதி) விதித்தனவும் விலக்கினவுமாகிய ஆசரணங்களினாலே பிரயோகிக்கப்பட்ட சிவபெருமானது சங்கற்பம் யாதுமில்லை யன்றோ; இன்றேல் அவர் சங்கற்பத்தை அபேக்ஷியாத புண்ணியபாவங்களுமில்லை.

(ஆக்ஷேபம்) பிரமத்தை அடைந்த பிற்பாடு அறிவு விகாச முதலியவும் சொரூபாவிர்ப்பாவமும் உளவாயின், அது பரியந்தம் புத்திசங்கோசத்துக்குக் காரணம் கன்மம் நிலைத்தலால் எனக் கோடல் வேண்டும், விரஜாநதியைக் கடந்தவுடனே கன்மக்ஷயம் எங்ஙனமாகும்? எனின்,

(உத்தரம்) கூறப்படுகின்றது. பிராகிருத பிரபஞ்ச எல்லையைக் கடத்தல்தான் பரமாகாயரூபமாகிய சிவபதப்பிராப்தியாம்.

பரஞ்ஜோதி ருபஸம்பத்ய (சாங். அ. கஉ. ௩)

"பரஞ்சோதியை அடைந்து" என்னுஞ் சுருதியினால், அந்தப் பிரமப்பிராப்தி கூறப்பட்டது. விஷ்ணுபத சம்பந்தமாகிய விரஜாநதிதான் பிராகிருத பிர

பஞ்ச எல்லையாகும். நதியைக் கடக்கும்போது, சர்வகன்மங்களினின்றும் நீங்கிய யோகிகள் விஷ்ணுபதத்தைக் கடந்து, பரமானந்தமயமாகிய சிவபதத்தைப் பிரவேசிக்கின்றனர். இதுபற்றியே,

ஸோऽத்⁴வந꞉ பாரமாப்நோதி தத்³விஷ்ணோ꞉ பரமம் பத³ம் (கட. ௩. ௯)

"அவன் அத்துவாவின் கரைக்கண்ணதாகிய அச்சிவபெருமானுடைய (பரமாகாய) பரமபதத்தை அடைகின்றான்" என்றது சுருதி. ஆதலால் விரோதமின்று. (௩0)

## (௧அ) அதிகாரிகாதிகரணம்.

யாவத³தி⁴காரமவஸ்தி²திராதி⁴காரிகாணாம் (௩. ௩. ௩௧)

**(௩அரு) அதிகாரம் இருக்கும் வரையும் அதிகாரிகளுக்கு நிலை உளது.**

உபாசகர்களுக்குப் புண்ணியபாவவிமோசனமாதலும் பிரமத்தை அடைதலும் மேலே கூறப்பட்டன.

ஈண்டு அதிகாரபுருஷர்களுக்கு அதிகார போகங்களைவிட்டு முத்தி உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வசிஷ்டர்முதலிய அதிகாரிகளுக்கு அந்தந்தப் புராணாதிகளிலே சென்மாந்தரம் கூறப்படுதலின், அவர்க்கு முத்தி இல்லையே. ஆகலின், தத்துவங்களை அறிந்தவருட் சிலரே மோக்ஷத்தை அடைகின்றனர், (மற்றவர் அடைகின்றிலர்) எனின்,

(சித்தாந்தம்) அதிகாரபுருஷர்க்குத் தேகம் விடுத்த பின்னரும், (தம்மைப்பற்றிய) பிராரப்த அதிகாரத்துக்குக் காரணமாயுள்ள கன்மம் நசிக்கவேண்டினமையின், (அதுவரையும்) வேறு பலன்கள் அநுபவிக்கவேண்டும். அங்ஙனமே அதிகாரம் முடியும் வரையும் அதிகாரங்களோடு தம்மிற்பொருந்த கன்மபலன்களைத் துய்த்து ஒழிக்கும் வரையும் அவர்கள் அங்கே நிலைத்தல் வேண்டும்; அதுவரையும் அர்ச்சிராதிகதி அவர்க்கின்று. ஞானிகளுக்கும் பிராரப்தகன்மம் அநுபவத்தினாற்றான் நசிக்கின்றது. ஆகலின், அதிகாரிகளுக்கு அதிகாரம் நிவிர்த்தியான பின்னர் (அர்ச்சிராதிவாயிலாக) முத்தி சித்திக்கும். இதனால் தத்துவஞானிகள் நியதமாய் மோக்ஷமடைகின்றார்கள் என்பதாம். (௩௧)

## (௧௯) அநியமாதிகரணம்.

அநியம꞉ ஸர்வேஷாமவிரோத⁴꞉ ஶப்³தா³நுமாநாப்⁴யாம் (௩. ௩. ௩௨)

**(௩-௬௯) எந்த வித்தைக்கென்று நியமமில்லை; (ஆகலின்) சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமில்லை.**

உபகோசலவித்தை முதலிய உபாசனைகளிலே அர்ச்சிராதிகதி கூறப்படுகின்றது.

அந்த அர்ச்சிராதிகதி அந்த (உபகோசலாதி) வித்தையுடையோர்க்கா? இன்றேல் உபாசகர் எல்லோர்க்குமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சாந்தோக்கியத்திற் பஞ்சாக்கினி வித்தையினும் உபகோசலவித்தையினும் அர்ச்சிராதிகதி கூறப்பட்டது. அதர்வசிரசிலே பாசுபத வித்தையிற் சிறிது சூசிக்கப்பட்டிருக்கின்றது. சாண்டில்லியாதி வித்தையிற் கூறப்படவில்லை. பிரகரணவசத்தினால் எவற்றிற் கூறப்பட்டிருக்கின்றதோ, அவற்றிலேதான் நியதமாகக் கொள்ளற்பாற்று; மற்றவைகளுக்கின்று எனின்,

(சித்தாந்தம்) கூறுவம். எந்த வித்தைகளிலே சொல்லப்பட்டுளதோ, அந்த வித்தைகளிலேதான் (அர்ச்சிராதிகதி உண்டென்று கோடற்கு) நியமமில்லை. பின்னையோ, இது எல்லா உபாசனைகளுக்கும் செல்வதாகும். அப்போதுதான் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமின்று.

𑌯𑍇 𑌚𑌾𑌮𑍀 𑌅𑌰𑌣𑍍𑌯𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌂 𑌸𑌤𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 𑌤𑍇𑌽𑌰𑍍𑌚𑌿𑌷𑌮𑌭𑌿𑌸𑌂𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 (பிரு. ௬. ௨. ௧௫)

"அரண்ணியத்திலிருந்து சிரத்தையையும் சத்தியத்தையும் உபாசிப்போர் அர்ச்சிராதிகதியை அடைகின்றனர்" எனச் சுருதியானது பஞ்சாக்கினி வித்தைபேசுமிடத்து எல்லோர்க்கும் அந்த மார்க்கத்தைப் பேதமின்றிக் கூறுகின்றது.

𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑌹𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲𑌃।

"அக்கினி, சோதி, பகல், சுக்கிலபக்ஷம்" என ஸ்மிருதியும் அதனையே (மார்க்கத்தையே) எல்லோர்க்கும் பேதமின்றிக் கூறுகின்றது. ஆகலின், உபாசகர் எல்லோர்க்கும் அர்ச்சிராதிகதி நியமமே.* (௩௨)

*மாயாவாதிகட்குரிய நிர்க்குணோபாசனை பற்றி எதுவும் பிரதிபாதிக்கப்படாத பிரம சூத்திரங்களுக்கும் இவற்றுக்கு மூலமாகிய முக்கியஉபநிடதங்களுக்கும் சங்கராசாரியர் வலிந்து பொருள் செய்தீர்த்து அவற்றைத் தம்பக்கத்துக்கிணக்கத் துணிந்தாற்போன்றும், அப்பயதீக்ஷிதயோகியார் சைவபாஷ்யத்துக்கு உயர்வுகாட்டிமுதற்கண்ணே இயற்றிவைத்த சிவாத்துவைதவிநிர்ணயம் என்னும் நூலைத்தீக்ஷிதயோகியார்க்குப் பின்னிருந்த மாயாவாத பண்டிதர்கள் திரிவுபடுத்திச் சிவாத்துவைதசைவத்தினுந் தம் மாயாவாதத்துக்கு உயர்வுகாட்டிப் படைத்துவைத்தாற்போன்றும், அங்ஙனம் அப்பண்டிதர்கள் அத்தீக்ஷிதயோகியார் இயற்றிய ஆனந்தலகரியையும் இரத்தினத்திரயபரீக்ஷையில் ஸ்ரீமத் கூர்மேண (𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌕𑍂𑌰𑍍𑌮𑍇𑌣) என்னும் சுலோகவியாக்

## (உ०) அக்ஷரத்தியதிகரணம்.

அக்ஷரயியாம ஃவவரோயஸ்ஸாமா நூ தஷாவாஹூா ஔவஸஃவ தஃதூ
(ங. ங. ஙங)

(கஅஎ) ஆயின் அக்ஷரத்தைப்பற்றிய (நிஷேத) குணங்கள் தொகுக்கற்பாலன; அது (பிரமம்) ஒன்ருயிருத்தலானும், (அந்த அஸ்தூலத்துவாதி குணங்கள் பிரமத்தில்) இருத்தலானும்; உபசத்துக்குரிய மந்திரவிஷயம் போல; இது விளக்கப்பட்டது.

கார்க்கிப்பிராம்மணத்திற் பிரமத்தைப் போதிக்கும்பொருட்டு

அஸ்தூலம் அநணு அஹ்ரஸ்வம் (பிரு. ரு. அ. அ)

"(அது) ஸ்தூலமல்லாதது, அணுவல்லாதது, குறுக்கமல்லாதது" என்றற்ருெடக்கத்தவைகளிலே சில நிஷேதங்கள் கேட்கப்படுகின்றன; கடவல்லியிலே,

அஶப்தம் அஸ்பர்ஶம் அரூபம் (கட. ங. கரு)

"சப்தமல்லாததும், பரிசமல்லாததும், ரூபமல்லாததும்" என்றற்ருெடக்கத்தவற்றினும், ஆதர்வணத்திலே

யத்தத்³ரேஶ்யம் அக்³ராஹ்யம் அகோ³த்ரம் அவர்ணம் (முண். க. க. சு)

"காணப்படாதது, பற்றப்படாதது, கோத்திரமில்லாதது, வர்ணமில்லாதது" என்றற்ருெடக்கத்தவைகளினும் கேட்கப்படுகின்றன.

அந்த நிஷேதகுணங்கள் ஆனந்தாதி (குணங்கள்) போலப் (பிரமோபாசனையில்) உபசங்கரிக்கற்பாலனவா? அன்ரு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஆனந்தாதிபோன்ற குணங்களல்லாமையின், அந்த நிஷேதங்களைப் பரவித்தை அனைத்தினும் உபசங்கரித்தலின் யாதுபயன் எனின்,

---

கியானத்தையுந் திரிவுபடுத்திக்கெடுத்தாற் போன்றும், சைவபாஷ்யகாரரும் தீக்ஷித யோகியாரும் "நிர்க்குணோபாசகர்க்கு அர்ச்சிராதிகதி அபேக்ஷையில்லை" என்றற்ருெடக்கத்தனவாகவும், "அவ்வுபாசகர்கள் (போக்குமீட்சியின்றி) இங்கே இலயமடைந்து விடுகின்ருர்கள்" என்றற்ருெடக்கதனவாகவும் மாயாவாதிகட்குச் சார்பாக முறையே வரைந்து வைத்தாற் போல இந்த (ங. ங. ஙஉ-ஆஞ்) சூத்திர சைவ பாஷ்யத்திறுதிக்கண்ணும் சிவார்க்கமணிதீபிகை இறுதிக்கண்ணும் அம்மாயாவாதிகள் பிற்காலத்திலே பொறித்துவைத்த அப்பொய்யுரைகளைப் பொருட்படுத்தாது, இந்தச் சூத்திரபாஷ்யத்து இறுதியிலே பொருத்திவைத்த அக்கற்பனுவாக்கியங்களை ஈண்டு மொழிபெயர்க்காது தவிர்த்துவிட்டேம்.

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. அக்ஷரசம்பந்தமாகிய நிஷேதகுணங்களும் பரவித்தை அனைத்தினும் உபசங்கரித்தல் நியாயமே; குணியாகிய பிரமம் யாண்டும் ஒருபெற்றித்தாதலின். இந்தக் குணங்களினாலேதான் பிரமோபாசனையைப் பிறவனைத்தினின்றும் பிரிக்க இயல்வதாகும்; மற்றோர் பிரகாரத்தாலன்று. ஹேயகுணசம்பந்தமுறாத ஆனந்தமுதலிய குணங்கள் பிரத்தியக்கான்மாவிலிருந்து பிரமத்தைப் பிரித்துக் காட்டும் பொருட்டே போந்தன. பிரதானப்பொருளை இயைந்திருத்தல்தான் குணத்தின் சுபாவம். சாமதக்கினிக்குள்ள நான்கு இராத்திரிப்புரோடாசத்துக்குரிய உபசத்துக்குக் குணமாக விதிக்கப்பட்ட

கூஹெஹொ தூo வெ௱ஜுஃ।

"அக்கினி! ஹோதாவின் செய்கையையும் யஞ்ஞத்தையும் அறிதி" (என்றற்றொடக்கத்த) மந்திரம் சாமவேதத்திலே கூறப்படுவதாய்ச் சாமவேத உச்சசுவரத்தோடு படிக்கப்படுவதாயிருந்தாலும், (அது) யசுர்வேதத்துக்குரிய பிரதான (குணியாகிய) உபசத்தைத் தொடர்ந்து உபாம்சுவாக (மெதுவாக) உச்சரிக்கப்பட வேண்டியதாகின்றது. இது முதற்காண்டத்திற் (பூருவமீமாஞ்சை, ங. ங. கூ) கூறப்பட்டுள்ளது. (ஙங)

இதனாற் குணங்களெல்லாம் தியானத்தில் உபசங்கரிக்கப்படவேண்டியதில்லையோ? என, சூத்திரகாரர் சொல்வாராயினர்.

ஐயஷாஃநநாகஃ (ங. ங. ஙச)

(ஙஅஅ) இவ்வளவுமாத்திரந்தான் தியானத்தின் பொருட்டு.

ஆமனனம் என்றது அன்பினோடு தியானஞ் செய்தல். இவ்வளவு குணத்தொகுதியும் எவ்விடத்தினும் உபசங்கரிக்கற்பாலன. இந்தக் குணத்தொகுதியினாற் பிறவனைத்தினின்றும் நீங்கியதாகப் பிரமத்தியானம் உண்டாகின்றது. ஆகலின், அக்ஷரப்பிரம சம்பந்தமாகக் கூறப்பட்ட அஸ்தூலத்துவாதி நிஷேத (எதிர்மறைக்) குணங்களே பிறவனைத்தினின்று பிரமத்தைப் பிரித்தறியச் செய்யும் குணங்களாதலால், அவை பரவித்தைகளில் உபசங்கரிக்கற்பாலன. "சர்வகர்மா, சர்வகாமர், சர்வகந்தர், சர்வரசர்" என்பவற்றை (உபசங்கரிக்கவேண்டியது) இன்று. (ஙச)

## (உக) அந்தராபூதக்கிராமாதிகரணம்.

---

கஙாா ஹூ-ஒதஹூாஃவகஃ ஸ்வாதூெநாzநூயாஹெஷாநூவவதீஸிதி ெவெஹாவஷெ௱லவகஃ (ங. ங. ஙரு)

(ங௲க) (அனைத்தின்) உள்ளும் (இருக்கிற அவரை யுற்றுப் பேசும் வாக்கியத்திலே), பூதத்தொகுதிச் (சரீரசம் பந்த) முடைய (தன் னைப்பேசுவதாகச்) சுருதி கூறுவதாகவும், இன்றேற் பேதஞ் சொல்ல இயலாதாகவுமிருப்பின்; அஃ தன்று; (சத்வித்தையின்) உபதேசம்போல்வது.

பிருகதாரணியோபநிடதத்திலே,

யஸாக்ஷாஉபரோக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தரஸ்தம் மே வ்யாசக்ஷ்வ (பிரு. ரு. ச. க)

"(யாஞ்ஞவற்கியரே!) சாக்ஷாத்தாகவும் அபரோக்ஷமாகவும் உள்ளதாய், அனைத்துள்ளுமிருக்கின்ற (பரம) ஆன்மாவுமாகிய பிரமத்தை எனக்குச் சொல்க" என உஷஸ்தி கேட்க,

யஃ ப்ராணேந ப்ராணிதி ஸத ஆத்மா ஸர்வாந்தரோ யோ அபாநேநாபாநிதி ஸ த ஆத்மா ஸர்வாந்தரஃ (பிரு. ரு. ச. க)

"உச்சுவாசத்திற் சுவாசிக்கின்றவரே உன் (பரம) ஆன்மாவாய் அனைத் தின்ளுமிருக்கின்றனர்; நிச்சுவாசத்திற் சுவாசிக்கின்றவரே உன் (பரம) ஆன் மாவாய் அனைத்துள்ளுமிருக்கின்றனர்,"

அதோऽந்யதார்த்தம் (பிரு. ரு. ச. உ)

"மற்றெல்லாம் தீமையின் பாலன" என உத்தரமிறுக்கப்பட்டது. பின்னர்,

யதேவ ஸாக்ஷாத்ப்ரஹ்ம ய ஆத்மா ஸர்வாந்தரஸ்தம்மேவ்யாசக்ஷ்வ (பிரு. ரு. ச. உ)

"(யாஞ்ஞவற்கியரே!) சாக்ஷாத்தாக அனைத்துள்ளும் இருக்கின்ற (பரம) ஆன்மாவாகிய பிரமத்தைக் கூறும்" என்று ககோளர் கேட்ப, அதற்கு

யோऽஶநாயா பிபாஸே ஶோகம் மோஹம் ஜராம் ம்ருத்யுமத்யேதி ஏதம் வை தமாத்மாநம் விதித்வா(ப்ராஹ்மணா பிக்ஷாசர்யம் சரந்தி) (பிரு. ரு. ரு. க)

"பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணம் என்பவற்றைக் கடந்தவ ராகிய அந்தப் (பரம) ஆன்மாவை அறிந்து (பிராமணர்கள் யாசகர்களாகத் திரிகின்றனர்),"

அதோऽந்யதார்த்தம் (பிரு. ரு. ரு. க)

"மற்றெல்லாந் தீமை" என்பதிறுதியாக உத்தரம் இறுக்கப்பட்டது.

ஈண்டு ஈரிடத்தும் கூறப்பட்ட வித்தை ஒன்று? அன்று? என்பது சந் தேகம்.

(பூருவபக்ஷம்) ஈண்டுப் பூதத்தோடியைந்த பிரத்தியகான்மவிஷயத்தை யுற்றே உஷஸ்தி வினவியது. இன்றேல்,

யஃ ப்ராணெந ப்ராணிதி ஸ த ஆத்மா (பிரு. ரு. ச. க)

"நிச்சுவாசத்திற் சுவாசிக்கின்றவர் ஆன்மா" என அந்த வினவுக்கு விடுத்த உத்தரவிஷயத்துக்கும், கஹோளர் விடுத்த வினவுக்கு, பசிமுதலியவற்றை செயிப்பதென உத்தரமாகக் கூறப்பட்ட விஷயத்துக்கும் பேதம் காண்டல் அரிதாமெனின்,

(சித்தாந்தம்) அங்ஙனம் கோடல் கூடாது; இவ்விஷயம் (சத்வித்தை யின்) உபதேசம் போல்வது.

ய ஆத்மா ஸவாந்தரஃ (பிரு. ரு. ச. க; ரு. ச. உ)

"எல்லாவற்றுள்ளும் இருக்கின்ற ஆன்மா" என ஈரிடத்தும் நிகழ்ந்த வினக்கள் ஒன்றுயிருத்தலின், சிவபெருமானே ஈரிடத்தும் கொள்ளப்பட்ட பிரசின விஷயம். உபாதியில்லாததாயும், உச்சுவாசாதிகளுக்குக் காரணமாயும், போசனதிகளைக் கடந்திருப்பதாயும் இயைந்த (பிரசின) உத்தரம் அந்தச் சிவபெருமானிலே முற்றுகின்றது. சத்வித்தியாவிஷயத்திற் போல, வினவும் விடையும் ஒரே விஷயத்தில் முற்றுகின்றன. வினவினவரின் பேதமும் ரூப பேதமும் வித்தையிலே யாதும் பேதத்தை விளைக்கவில்லை. (ௐரு)

அங்ஙனஞ் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

வ்யதிஹாரொ விஶிஷந்தி ஹீதரவத் (ௐ. ௐ. ௐசு)

(ௐ௰) மாறுபாடு (நிகழவேண்டும்); (அவை இரண்டும் பிரமத்தையே) விசேடிக்கின்றன; பிறவற்றிற் போல.

(ஓர்கால்) விஷயமொன்றெனநிச்சயித்தபோது, வினவினோர்க்குள்ளே ஒருவர்க்கொருவர் கருத்து மாறுபாடு நிகழ்தல் வேண்டும். (அஃதாவது) உஷஸ்தி பசிமுதலியவற்றைச் செயித்ததாகப் பிரமத்தைத் தியானிக்குங் கால், கஹோளரும் நிச்சுவாசாதிக்குக் காரணமாக அதனைத் தியானிக்கவேண் டும். சத்வித்தையிற் போல ஈரிடத்துமுள்ள வாக்கியங்கள் சிவபெருமானை விசேடிக்கின்றன. ஆகலின், வினவினும் விடையினும் ஒரே விஷயமே கூறப் பட்டமையின், வித்தையிற் பேதமின்று. "அது நீயாகின்றனை" என்றதிற் போல, சந்தேகம் அறுக்கும்பொருட்டே புநருத்தி (எய்திற்று). (ௐசு)

(உஉ) சத்தியாதியதிகரணம்.

---

ஸைவ ஹி ஸத்யாஒயஃ (ௐ. ௐ. ௐஎ)

(௩௯௧) (தேவதை) ஒன்றே (கூறப்பட்டது); சத்திய முதலிய (கூறப்பட்டன).

திருட்டாந்தமாக மேலை அதிகரணத்திலே நிர்ணயிக்கப்பட்டிருந்தாலும், சத்வித்தை பேதமா? அபேதமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரசினத்தில் ஆவிருத்தி (கூறியது கூறல்) காணப்படலானும், உத்தரத்திலே பேதம் காணப்படலானும் வித்தை பேதமென்றே கொள்ளப்படுமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சத்வித்தையிற் பேதமில்லை;

ஸேயம் தேவதா (சாந். சு. ௩. ௨)

"இந்தத் தேவதை" என்றற்றொடக்கத்தவற்றால் உரைக்கப்பட்ட *மகா தேவதை ஒவ்வோர் வினாவினும் உத்தரத்தினும் காணப்படுகின்றமையின்.

தத்ஸத்யம் ஸ ஆத்மா தத்த்வமஸி (சாந். சு. அ. எ)

"அது சத்தியம், அது (பரம)ஆன்மா, அது நீயாகின்றனை" என மீட்டும் மீட்டும் சத்தியமுதலிய குணங்கள் ஆவிருத்தியாகக் காணப்படுகின்றன. ஆகலின், வஸ்து ஒன்றாக, வித்தையும் ஒன்றாம் என்க. (௩எ)

(௨௩) காமாதியதிகரணம்.

---

காமாதீதரத்ர தத்ர சாயதநாதிப்ய: (௩. ௩. ௩அ)

(௩௯௨) (சத்திய) காமாதிகுணங்கள் அங்கங்கே (உபசங்காரஞ்செய்யற்பாலன); ஸ்தானமுதலியன (ஒன்றா) யிருத்தலின்.

சாந்தோக்கியம், தைத்திரீயம், பிருகதாரணியம், கைவல்லியம் என்னும் உபநிடதங்களிலே தகரவித்தை கூறப்படுகின்றது.

இது அபின்னமா? இன்றேற் பின்னமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

யதிதமஸ்மின் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேஶ்ம தஹரோ'ஸ்மிந்நந்தராகாஶ: (சாந். அ. க. க)

சாந்தோக்கியத்திலே,

---

* ஈண்டு மகாதேவதை என்றது (ச. ௨. கச-ஆஞ்) சூத்திரபாஷ்யத்திற் குறிக்கப்பட்ட (கு. ச. ௨எ-ஆம்) பாணினிசூத்திரவிதிப்பிரகாரம் மகாதேவரின் மேலாயிற்று.

"இந்தப் பிரமபுரத்துத் தகரபுண்டரீகத்திலே தகராகாயம் உள்ளது" என்று தொடங்கித் தகராகாச மொழியினுற் கூறப்பட்ட தகரபுண்டரீகத்திருப்பவர்க்குப் பாவமில்லாமை முதலிய எண் குணங்கள் முக்கியமாகக் கூறப்பட்டன.

தைத்திரீயத்திலே,

ஓஹுஂ விபாப்ஜ (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"பாவமில்லாத தகரம்" என்று தொடங்கித் தகரபுண்டரீகத்தில் இருப்பவர்க்குப் பிரணவப் பிரகிருதியாதலும், மகேசுவரர் எனப்படுதலும், கிருஷ்ணபிங்கள விரூபாக்ஷத்துவ முதலிய குணங்கள் உளவாதலும் காட்டப்பட்டன.

பிருகதாரணியத்திலே,

வஷொஹுஂ ஹுர்ய தூகாஸ்ஹுஸிஞெக ஸவஸ்ய வஶீ ஸவஸ்யெரா ஸவஸ்யாயிவதிஃ (பிரு. சு. ச. உஉ)

"இதயத்துள்ளே ஆகாயம் உள்ளது; அதிற் சர்வத்தையும் வசீகரிப்பவரும், சர்வத்துக்கும் ஈசானரும், சர்வத்துக்கும் அதிபதியுமானவர் அமர்கின்றார்" என வசித்துவாதி குணங்கள் (கூறப்பட்டிருக்கின்றன).

கைவல்லியோபநிடதத்திலே

ஹுத்புண்டரீகஂ விரஜஂ (கைவ)

"துகளற்ற இதய புண்டரீகம்" என்று தொடங்கி,

விஹுஂவிதாநஂத ரூவ அதூதஂ உமாஸஹாயஂ வரமெஶ்வரஂ வுஹுஂ திரிலொசநஂ நீலகண்டஂ வுஶாந்தஂ (கைவ)

"வியாபகரும், சிதானந்தரும், அரூபரும், அற்புதரும், உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், திரிநேத்திரரும், நீலகண்டரும், பிரசாந்தரும்" என்பதிறுதியாக இருதயபுண்டரீகத்திலிருக்கும் பரவஸ்துவுக்குத் திரிநேத்திரத்துவம், நீலகண்டத்துவம், சிதானந்தரூபத்துவம், உமாசகாயத்துவமுதலிய குணங்கள் (கூறப்பட்டிருக்கின்றன). ஈண்டு நீலகண்டத்துவமுதலிய குணங்கள் சரீரதர்மமாகவும், சத்தியகாமத்துவமுதலிய குணங்கள் ஆன்மதருமமுமாகி விரோதமுறுதலின் உபசங்காரம் நியாயமின்று. ஆகலின், வித்தைகள் பின்னமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. ஆங்காங்குக் கூறப்பட்ட இருதய புண்டரீக ஸ்தானமுதலியன ஒன்றுமாதலின், வித்தைகள் ஒன்றே. ஆகலின், சத்தியகாமத்துவ முதலிய குணங்கள் யாண்டும் உபசங்கரிக்கற்பாலன. சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட அபகதபாப்மத்துவாதி குணங்களும், பிருகதார

ணியத்திற் கூறப்பட்ட வசித்துவாதி குணங்களும், தைத்திரீயத்திற் கூறப் பட்ட பிரணவவாச்சியத்துவாதி குணங்களும், கைவல்லியத்திற் கூறப்பட்ட சிதானந்தரூபத்துவாதி குணங்களுமாகிய இவையெல்லாம் தகரவித்தையிலே பிரமத்தின் குணங்களாக உபசங்கரிக்கற்பாலன. கைவல்லியத்திற் கூறப் பட்ட உமாசகாயத்துவமும் திரிலோசனத்துவமும் மற்ருேரிடத்திற் (கூறப் பட்ட) கிருஷ்ணபிங்களத்துவமும் விரூபாக்ஷத்துவமும் (முறையே) ஒரே அர்த்தமுடையன. மீட்டும் மீட்டும் கூறுதல் ஆதரத்தை (பிரியத்தை) பிறப் பித்தற்காம். மீட்டும் மீட்டும் குணங்கள் கூறப்படும் இடங்களினெல்லாம் அங் ஙனமே பொருள் கோடற்பாற்று. ஈண்டுக் குணமுடையதாகக் (கூறப்படும்) பிரமம் ஒன்றே உபாசிக்கற்பாலதாகலின், பாவமில்லாமை முதலிய குணங் களோடு சர்வேசுவரமும், ஓங்காரவாச்சியமும், உமாசகாயமும், திரிலோச னமும், நீலகண்டமும், சிதானந்தரூபமும், அனந்தமும், அமிர்தமும், அற் புதமுமாகிய பரப்பிரமம் தகரபுண்டரீகமத்தியிலே அனுசந்தானஞ் செய் யற்பாற்று. * இந்தத் தகரோபாசனேயே பரவித்தைகளுட் பிரதானமாயிருக் கின்றது. சாந்தோக்கியத்திலும் கைவல்லியத்திலும் இந்தத் தகரோபாசக நிஷ்டன்,

வரஂஜ்யோதி ரூவஸஂவத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே।
(சாந். அ. கஉ. ங)

“பரஞ்சோதிரூபத்தை அடைந்து அதன் சொரூபமாய் விளங்குகின்றனன்” என்றும்,

ஞாத்வா முநிர்கச்சதி பூதயோநிஂ ஸமஸ்தஸாக்ஷிஂ தமஸ: பரஸ்தாத் (கைவ)

“முனியானவன் தியானித்துத் தமசுக்கு மேலே பூதயோநியும் சமஸ்தசாட்சி யுமாயுள்ளாரை அடைகின்ருன்” என்றும் கூறிச் சாக்ஷாத்தாகப் பிரகி ருதி மண்டலத்துக்கு மேலே உள்ள அந்த உபாசியமாகிய பரப்பிரமத்தை அடைதலன்ருே பயனுகப் பெறப்படுகின்றது. நீலகண்டத்துவ திரிலோச னத்துவாதி குணங்களும், அபகதபாப்மத்துவாதி குணங்களும், பிரமத்தில் நித்தியமாயிருத்தலானும், அந்நியோந்நியமாய் ஒன்றை ஒன்று அபேக்ஷித் தலானும், அவை உபசங்கரிக்கப்படுதலின் விரோதமின்று. நிஷேதகுணங்கள்

---

* உபக்கிரமணிகை (உ0க-ஆம் இலக்கந் தொடுத்து உகூ௬-ஆம் இலக்கம்) வரை யிற் கூறியாங்கு, திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் முதலிய சைவசமயஸ்தாபனுசாரி யர் முதலாயினேர் திருவுளப்பிரகாரம் இச்சைவபாஷ்யகாரராகிய ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர்க்கும் சூத்திரகாரராகிய வியாசருக்கும் சமஸ்த உபநிடதங்களின் முடி வாகிய திருச்சிற்றம்பலமே முடிந்தநிலையாகக் கொள்ளப்பட்டிருக்கின்றதன்றி, ஏகான் மமாயாவாதமதமேனும் வைணவமதமேனும் முடிந்தநிலையாகக் கொள்ளப்பட்டில தென்பது உறுதியேயாம்.

பொருத்தமில்லாவிடத்து இடம்பெறுவாம். பரப்பிரமத்துக்குத் திரிநேத்திரங்களையுடைய திருமேனி கூறப்படுதலின், சரீரத்துக்குரிய பாவம், ஜரை, மரணம், பசி, தாகம், அசத்தியகாமம், அசத்தியசங்கற்பமென்னுங் குணங்கள் சொல்லநேருமெனக்கொண்டு, இவற்றை நிஷேதிக்கும்பொருட்டன்றோ அபகதபாப்மத்துவாதி குணங்கள் பிரதிபாதிக்கப்பட்டன. திரிலோசனத்துவமுதலிய லக்ஷணமுடைய சரீரமுடையரேனும், அப்பரப்பிரமம் பாவம், ஜரை, சோகம், பசி, தாகமென்பவற்றினின்று நீங்கி, சத்தியகாம சத்தியசங்கற்ப சிதானந்தரூபமாயிருத்தலின் விரோதமின்று. (ஙஅ)

## (உச) அலோபாதிகரணம்.

(ஆக்ஷேபம்) பிரியசிரஸ்துவமுதலிய போல நீலகண்டத்துவாதி அவயவங்கள் பிரமத்துள் அந்தர்ப்பாவமாயுளவேல், பின் அவர் தேய்வு வளர்ச்சிகளுக்குட்படுதல் வாயிலாக, நீலகண்டத்துவாதிகள் இலவாயொழியுமோ? எனின்,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்.

சூஊரா ஓவொவஃ (ங. ங. ஙக)

### (ஙகங) ஆதரத்தினாலாதலின் உலோபமில்லை.

மேலே நீலகண்டத்துவாதி விசிட்டரூபமும், உமை எனப்படும் பராசத்தியோடிசைதலும், சத்தியசங்கற்பத்துவமுதலிய குணத்தொகுதியும் நிரூபிக்கப்பட்டன.

ஈண்டு அவை பரப்பிரமத்தில் ஒர்கால் உலோபமாய் இருக்குமா? இன்றேல் ஒர்காலும் இருக்கமாட்டாவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) தியானத்தின்பொருட்டுப் பரப்பிரமத்திலே கற்பிக்கப்பட்டமையின், அவை ஒர்கால் உலோபமாகும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பரப்பிரமத்துக்கு உமாசகாயத்துவாதி குணங்கள் சுருதியில் யாண்டும் அப்பியாச லிங்கத்தினாலும் ஆதரத்தினாலும் உலோபமின்றிக் கூறப்படுகின்றன. ஆகலின், அலுப்தசக்தியையுடையது பரப்பிரமம். எங்கே ஆதரத்தினாலும் அப்பியாசத்தினாலும் கூறப்பட்டதெனின்?

யாண்டுமே. கிருஷ்ணபிங்களம் விரூபாக்ஷம் என்றமையாற் சத்தியோடிசைதலும் திரிநேத்திரமுடைமையும் சித்தித்தவிடத்தும், மீட்டும் ஆதரத்தினால் அவை

உரோஸஹாயஂ வரமெ"ராஂ வுஹூஂ த்ரிவொவநஜ (கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், திரிலோசனரும்" என அப்பியசிக்கப்பட்டனவன்றே. ஆதித்தியமண்டலவித்தையினும்,

நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யபதயே அம்பிகாபதய உமாபதயே (தைத். ஆரணி. ௧௦. ௨௨. ௪௦)

"இரண்ணியபாகுவினர்க்கு நமஸ்காரம், இரண்ணியபதிக்கு நமஸ்காரம், அம்பிகாபதிக்கு நமஸ்காரம், உமாபதிக்கு நமஸ்காரம்" என ஆதரத்தினால் உமாபதித்துவம் அப்பியசிக்கப்பட்டது. மற்றோரிடத்தில்,

நீலக்ரீவோ விலோஹித: (யசுர். வே. ௪. ௫. ௧. ௩)

நீலக்ரீவாய ச ஶிதிகண்டாய ச (யசுர். வே. ௪. ௫. ௫. ௧)

"நீலக்கிரீவர், விலோகிதர்," "நீலக்கிரீவர்க்கு நமஸ்காரம், சிதிகண்டர்க்கு நமஸ்காரம்" என்றற்றொடக்கத்தவாக நீலக்கிரீவத்துவம் சிவபெருமானுக்கு ஆதரத்தினால் அப்பியசிக்கப்பட்டது.

சத்தியசங்கற்பத்துவாதி குணங்கள் ஓரிடத்திற் கூறப்பட்டிருந்தாலும் பிறிதோரிடத்திற் கூறினமை ஆதரத்தினாலேயாம்.

ஆகலின், உமாபதித்துவாதி குணங்கள் அப்பியாசத்தினாலும் ஆதரத்தினாலும் பரப்பிரமத்துக்கு உலோபமில்லையே. வேறு பிரமாணங்களால் அறியப்படாத தர்மம் பிரமம் என்னும் விஷயத்திலே திவ்விய சுருதியானது எவ்வியல்பினதாகிய சொரூபத்தைச் சொல்கின்றதோ, அவ்வியல்பையே சுருதியைப் பற்றுக்கோடாகக் கொண்டவர்கள் அங்கிகரித்தல்வேண்டும். இன்றேல் அதற்கு விருத்தமாகிய தர்க்கத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டால் உலக உபாதானத்துவாதிகம் சித்திக்கமாட்டாது. சுருதியே

ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம (தைத். ௨. ௧)

"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்" எனச் சத்திய ஞானகாரமாய் அவற்றினின்று பிரியாததாயுள்ளது பிரமம் என்று கூறி,

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம (தைத். ஆரணி. ௧௦. ௨௩. ௪௧)

"இருதம் சத்தியம் பரம் பிரம்ம" என்றற்றொடக்கத்தவாகக் கூறப்பட்டவருக்கே திரிலோசனத்துவமும் பரமசத்தியாகிய உமாசபளிதரூபமும் விசேஷமாகக் கூறுகின்றது. பின்னரும்,

ஸ ஏகோ ப்ரஹ்மண ஆனந்த: (தைத். ௨. ௮)

"அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என நிரதிசயானந்தமுடைமை கூறி, பின்னரும் அவர்க்கே

ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம (தைத். ௧. ௬)

"ஆகாயசரீரம் பிரமம்" என்றற்றொடக்கத்தவற்றால், சித்பிரகாசரூபத்தையும் ஆன்மாராமத்தையும், பாகிய கரணமின்றி அந்தக்கரணத்தினால் அனுபவிக்கப்படும் பரமானந்த விலாசத்தையும், சமஸ்த உபத்திரவகளங்கமில்லாமையையும், அநாதிமுத்தத்துவத்தையுஞ் சுருதி பிரகாசிப்பிக்கின்றது. இவர்க்கு விரூபாக்ஷத்துவாதி லக்ஷணங்களையுடைய சரீரசம்பந்தமுண்மையின், ஆன்மாவுக்குப் போல எய்தற்பாலனவாம் தோஷங்களை அபகதபாப்மத்துவாதி குணங்களாற் சுருதி நிராகரிக்கின்றது.

யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் (முண். க. க. கூ)

"சர்வஞ்ஞரும் எல்லாம் அறிபவரும்"

பராஸ்ய ஸக்திர்விவிதைவ ஸ்ரூயதே (சுவே. சு. அ)

"இவரது பராசத்தி நாநாப்பிரகாரமாகக் கேட்கப்படுகின்றது"

பஸூநாம் பதயே (யசுர். வே. ச. ரு. உ. க)

"பசுக்களுக்குப் பதியாயுள்ளவர்க்கு" எனப் போந்தவாற்றால், அவருக்குச் சர்வஞ்ஞத்துவம், சர்வசக்தித்துவம், சுவதந்திரத்துவ முதலியன நிரூபிக்கப்படுகின்றன. இங்ஙனம் சுருதிதானே சமஸ்தப் பிரமாணங்களுக்கும் தலையாயதாகி, சத்தியஞானானந்தத்தினின்று நீங்காத சுவரூபத்தையும், சர்வஞ்ஞதையையும், நித்தியதிருப்தியையும், சுவதந்திரத்தையும், அநாதிபிரகாசத்தையும், அனந்தசத்தியையும், அலுப்தசத்தியையும், ஆன்மராமத்தையும், உள்ளே அநுபவிக்கப் பாலதாம் பரமானந்தத்தையும், உபசாந்தத்தையும், அமிர்தத்தையும், நீலகண்டத்தையும், விரூபாக்ஷத்தையும், உமாசகாயத்தையும் பிரமமுடையதாக யாண்டும் கோஷிக்கின்றது. இங்ஙனங்கூறுஞ் சுருதிகளைத் தடுக்கவல்லார் யார்? ஆகலின், மேலே கூறிய விசேஷகுணங்கள் பிரமத்தினின்று ஒர்காலும் இலவாயொழியமாட்டாவே. (ந௯)

## (உரு) தத்வசநாதிகரணம்.

---

தத்வசநாத் (ந. ந. ௪0)

(நகூச) (பிரமத்தை) அடைந்தவன் விஷயத்தில்; அது பற்றி இதற்கு வசனமுண்மையான்.

ஈண்டு முத்தரால் அடையப்படும் பயன் பூருவாதிகரணத்திற் கூறப்பட்ட பிரமசொரூபமா? மற்றொன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

நிஷ்களம் நிஷ்க்ரியம் ஸாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம் (சுவே. சு. ககூ)

"நிஷ்களமாயும், நிஷ்கிரியமாயும், சாந்தமாயும், சொல்லொணாததாயும், பாவமிலாததாயும்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே பிரமம் நிர்விசேட மாகவே கூறப்படுகின்றது.

ப்³ரஹ்மவேத³ ப்³ரஹ்மைவ ப⁴வதி (முண். ௩, ௨, ௯)

"பிரமத்தை அறிபவன் பிரமமாயே ஆகின்றான்" என்னுஞ் சுருதியினால் முத்தன் பிரமசொரூபத்தை அடைதலே முத்தி. ஆகலின், நிர்விசேடப்பிர மமே முத்தனால் அடையற்பாற்று, மற்றொன்றன்றெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். முன்னர்க் கூறப்பட்ட சவிசேஷப்பிரமசொரூ பமே முத்தனால் அடையற்பாற்று; தகரபுண்டரீகத்துள்ளே இருப்பதாகப் பிரதிபாதிக்கப்பட்ட விரூபாக்ஷத்துவமுடைய பரப்பிரமத்தைத் தியானித்த லால்,

பரம் ஜ்யோதிருபஸம்பத்³ய (சாந். அ. ௧௨. ௩)

"பரஞ்சோதிரூபத்தை அடைந்து" என்னுஞ் சுருதிப்பிரகாரம் முத்தனால் அடையப்பட்டவிடத்து,

ஸ்வேந ரூபேணாபி⁴நிஷ்பத்³யதே (சாந். அ. ௧௨. ௩)

"தனது ரூபத்தோடுதோற்றுகின்றான்" என்றவாறு தனது ரூபம் ஆவிர்ப்ப வித்தல் காரணமாக,

ஜக்ஷத் க்ரீட³ந் ரமமாண: ஸ்த்ரீபி⁴ர்வா யாநைர்வா ஜ்ஞாதிபி⁴ர்வா।

(சாந். அ. ௧௨. ௩)

"பெண்களோடாயினும், யானங்களோடாயினும், ஞாதிகளோடாயினும், உண்டு திரிந்து கிரீடித்து மகிழ்கின்றான்" என்றற்றொடக்கத்தவற்றால் தன் இஷ்டப்படி ஞாதி முதலாயினாரோடு சேர்தல் கூறப்படுதலினாலும்,

பரமம் ஸாம்யமுபைதி (முண். ௩. ௧. ௩)

"பரமாகிய சாமியத்தை அடைகின்றான்" என்னுஞ் சுருதியினாலும்

முக்த: ஶிவஸமோ ப⁴வேத் (வாயு. பூ. ௨அ: ௨௨)

"முக்தன் சிவசமமாகின்றான்" என்னும் ஸ்மிருதியினாலும் முக்தன் பரப் பிரமசாமியத்தை அடைதல் கூறப்படுதலானுமாம். மேலே கூறப்பட்ட நீல கண்டத்துவாதி இலக்ஷணத்தையுடைய பரப்பிரமசொரூபந்தான் சாக்ஷாத் தாக முக்தன் அடையவேண்டிய மோக்ஷபயன்; இந்தப் பிரமசொரூபம் சம் சாரநிலைமைக்குரியதன்று; அபகதபாப்மா (சாந். அ. ௧. ௫) என்றற்றொ டக்கத்தவற்றாற் சாம்சாரிக தருமம் நிஷேதிக்கப்படுதலான். ஆகலின், பர வித்தை சகுணமே. நிஷ்களம் நிஷ்கிரியம் என்றற்றொடக்கத்தவற்றில் ஹேய

குணங்கள் நிஷேதிக்கப்படுகின்றன; கல்யாணகுணங்கள் நிஷேதிக்கப்படவில்லை.

நிஷ்கலம் நிஷ்க்ரியம் (சுவே. சு. கக)

"நிஷ்களம் நிஷ்கிரியம்" என்றற்றொடக்கத்தவற்றானும்,

ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞபதிர் குணேச: (சுவே. சு. கசு)

"பிரதானமாகிய (பாசத்துக்கும்), க்ஷேத்திரஞ்ஞனாகிய (பசுவுக்கும்) பதியாயினர் குணங்களையுடைய ஈசர்" என்றற்றொடக்கத்தவற்றானும் நிர்க்குணத்துவமும் சகுணத்துவமும் சாமானியமாக எய்துமிடத்து,

அபஹதபாப்மா (சாந். அ. க. ரு)

"அபகதபாப்மா"

ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் (முண். க. க. க)

"எவர் சர்வஞ்ஞரும், எல்லாம் அறிபவரும்" என்றற்றொடக்கத்த விசேஷசுருதிகள்கொண்டு, நிர்க்குண சுருதிக்கு ஹேய குணம் இல்லையென்பதும், சகுணசுருதிக்குக் கல்யாணகுணம் உள்ளதென்பதும் பொருளாம் என்றறியப்படுகின்றது. மேலும், மோக்ஷபலம் சகுணமென்றே வசனமும் சாதிக்கின்றது.

ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா।

(தைத். உ. க)

"அவன் சர்வஞ்ஞதையுடைய பிரம (ஆனந்தத்) தோடு கூடச் சமஸ்த போகத்தையும் அடைகின்றான்" என்னும் வசனத்தினுள்ள கூட (ஸஹ) என்னும் சப்தம் பிரமானந்த போகத்தோடுகூட மற்றைப் போகங்களையும் ஏககாலத்திலே முக்தன் அடைகின்றனன் என்பதின் மேற்று. ஆகலின், சகுணப் பிரமசோருபமே முக்தனால் அடையற்பாலதாம் பயன். (சo)

## (உகூ) தந்நிர்த்தாரணாநியமாதிகரணம்.

---

தந்நிர்த்தாரணாநியமஸ்தத்த்ருஷ்டே: ப்ருதக்த்யப்ரதிபந்த: பலம்।

(ங. ங. சக)

**(ஙகூரு) செய்யவேண்டுமென்பது நியமமில்லை, இது காணப்படலான்; தடையின்மையாகிய வேறு பயன் இருத்தலின்.**

கன்மாங்கமாயுள்ள உற்கீத வித்தை முதலிய உபாசனைகள் கன்மங்களில் நியமமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) (யஞ்ஞ) கருமாநுஷ்டானத்திலே கன்மங்களுக்கு அங்கமாயிருத்தலின், அந்தத் தியானங்கள் நியமமாக அநுஷ்டிக்கற்பாலன. கன்மப்பிரகரணங்களுக்குப் புறம்பாக அவை படிக்கப்பட்டாலும், வாக்கியத்தினாலே அவைகள் யஞ்ஞங்களோடு சம்பந்தப்படுகின்றன. எங்ஙனமெனின்,

யஸ்ய பர்ணமயீ ஜுஹூர்ப்பவதி (யசுர். வே. ௩. ௫. எ. ௨)

"யஞ்ஞத்துக்குச் சட்டுவம் பர்ணத்தினாலாகின்றது" என்னுமிடத்துப் பர்ணத்தினாலாவதென்பது புறம்பே கூறப்படினும், அது யஞ்ஞத்துக்கு இன்றியமையாது சட்டுவவாயிலாக யஞ்ஞத்தோடு சம்பந்தமுறுகின்றது. அங்ஙனமே,

ய ஏவம் வித்வாநுக்தாயதி।

ய ஏததேவம் வித்வாந்ஸாமகாயதி (சாந். ௧. எ. எ)

"இங்ஙனம் அறிந்த எவன் உரத்துப்பாடுகின்றானோ", "இங்ஙனம் அறிந்த எவன் சாமத்தைப் பாடுகின்றானோ" என யஞ்ஞத்துக்கு இன்றியமையாத சாமம் உற்கீதமுதலியவாயிலாக, அந்த உபாசனைகள் யஞ்ஞசம்பந்தமுடையவாகின்றன. ஆகலின், யஞ்ஞகன்மங்களில் நியமமாக உற்கீதாதி உபாசனைகள் வேண்டியவாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். கோதோஹனமுதலியவை நியமமில்லாமை போல, உபாசனைகளும் (ஆவசியகமின்று); அஃதாவது,

சமஸேந ப்ரணயேத் கோதோஹநேந பசுகாமஸ்ய।

"சமசமென்னும் பாத்திரத்தில் அவன் சலத்தைக் கொண்டுபோக, (ஆயின்) பசுவை விரும்பியவன் விஷயத்திலே கோதோகனத்திற் கொண்டுபோக" எனச் சுருதி கூறுகின்றது. ஈண்டுச் சலங் கொண்டுபோதற்குக் கோதோகனத்தை விதித்தமையும் யஞ்ஞகருமத்தின்பொருட்டாகாது எஜமானுடைய இச்சாவிஷயம்பற்றியாம்; இது சலத்தைக் கொண்டுபோதல் போல நியதமின்று. அங்ஙனம், கன்மங்களை உத்தேசித்து விதிக்கப்படும் உபாசனைகள் யஞ்ஞகன்மபயன்பற்றி விதிக்கப்பட்டில;

தேநோபௌ குருதோ யஶ்சைததேவம் வேத யஶ்ச ந வேத।

(சாந். ௧. ௧. ௧௦)

"இதனை இங்ஙனம் அறிந்தவனும் அறியாதவனுமாம் இருவரும் அந்த யஞ்ஞத்தைச் செய்கின்றனர்" என உற்கீதமுதலியவற்றின் உபாசனை இல்லாதவனும் யஞ்ஞாநுஷ்டானஞ் செய்யக்காண்டலான்.

யதேவ வித்யயா கரோதி ஶ்ரத்தயோபநிஷதா ததேவ வீர்யவத்தரம் பவதி (சாந். ௧. ௧. ௧௦)

"ஆகலின், ஞானத்தோடும், சிரத்தையோடும், உபநிடதங்கொண்டும் ஒருவன் செய்கின்ற யஞ்ஞம் அதிவீரியமுடையதாகின்றது;" "செய்கின்றனன்" (கரோதி) என்னும் வினை நிகழ்காலத்திருப்பினும், யஞ்ஞத்தை அதிவீரியமுடையதாக்குதற்குச் சாதனமாக உபாசநாவிதி கற்பிக்கப்படுகின்றது. அதிவீரியமுடையதாகின்றதென்பது பிரபலகன்மாந்தரத்தினால் தடை ஒன்றும் நேராது விரைந்து பயன் கொடுக்கவேண்டியதென்பதின் மேற்று. அங்ஙனம் காமமும் விருஷ்டிமுதலியவும் போல வேறு பலன்களைக் கொடுப்பனவாகக் கேட்கப்படலானும், யஞ்ஞகன்மங்களில் உபாசனைகள் நியமமில்லை. (௪௧)

## (உஏ) பிரதாநாதிகரணம்.

---

ப்ரதாநவதேவ தது³க்தம் (௩. ௩. ௪௨)

**(௩௯௯) ஹவிகள் போலவே (உபாசனைகள் பேதம்); இது கூறப்பட்டது.**

ஏகராகிய பரப்பிரமசிவனார் பரவித்தைகளிலே அந்தந்தக் குணவிசிஷ்டங்களோடு வெவ்வேறாகத் தியானிக்கற்பாலர் எனக் கூறப்பட்டது. இது ஈண்டுப் பொருந்துமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) குணங்களிற் பேதமிருப்பினும், குணியாகிய பிரமம் ஒன்றாமாதலின் உபாசனை பேதமுறாது; எங்ஙனம் ஒரே அரசன் பல்வகை ஆபரணவேறுபாட்டோடியைந்து கொலுவிருத்தல், தேகப்பயிற்சி செய்தல், போசனஞ் செய்தல், இருத்தல், வேட்டையாடல், போர்புரிதல் முதலிய அவ்வத்தொழில்களிலே சிங்காசனமுதலிய ஸ்தானபேதங்களினாற் பேதமுறானோ, அங்ஙனமே தகராதி ஸ்தானபேதத்தில் அவ்வக்குணங்கள் பேதமுற்றிருந்தாலும் பிரமம் ஒன்றாமாதலின் அதின் உபாசனையும் ஒன்றாயிருத்தல் வேண்டும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும்; ஏகராகிய பரப்பிரம சிவபிரான் சொரூபத்திற் பேதமிலரேனும், அந்தந்தக் குணவிசிஷ்ட சொரூபத்தினாற் குணவிசேஷ பேதம்பற்றிப் பேதமெய்துவதாக, (அந்தப்) பேதகுணங்களுடையாராகத் தியானித்தலால் உபாசனாப்பிரயோகம் வேறுபடுகின்றது; இந்திரனுக்குப் பலிகொடுத்தல் போல. எங்ஙனமெனின்,

இந்த்³ராயராஜ்ஞே புரோடா³ஶம் இந்த்³ராயாதி⁴ராஜாயேந்த்³ராய ஸ்வராஜ்ஞே (யசுர். வே. உ. ௩. ௬. க, உ)

"இராஜனாகிய இந்திரனுக்குப் புரோடாசத்தைக் கொடுக்க"; "அதிராஜனாகிய இந்திரனுக்கும், சுவராஜனாகிய இந்திரனுக்கும் (கொடுக்க)" எனச் சுருதி கூறுமாறு, குணங்கள் வேறுபடுதற்கியைய வெவ்வேறு புரோடாசங்கள் பலிகொடுக்கப்படுகின்றன. (அங்ஙனம்)

நாநாவா ஜெவதா வூரயக்|

"(வெவ்வேருகத் தியானிக்கப்படுதலின்) தேவதைகள் வெவ்வேறு" எனச் சங்கர்ஷகாண்டத் (தேவதாதிகரண) த்திற் கூறப்பட்டவாறே, ஈண்டுப் பரப்பிரமம் ஒன்ருயினும் வெவ்வேறு குணங்கள்பற்றி உபாசனை பேதமுறுகின்றது. அரசன் ஒருவனுயிருப்ப, அவன் சொரூபம் பேதமுருதிருந்தாலும், ஸ்தான குணமுதலிய பேதங்களால் வேலைக்காரராற் செய்யப்படும் வழிபாடுகளும் பின்னமே. (சஉ)

## (உஅ) இலிங்கபலீயஸ்துவாதிகரணம்.

---

ஷிംഗഭூயஸ்த்வாத் தத்தி பலீயஸ்த்தபி (க. க. சக)

**(கசுள) இலிங்கத்திலே ஆதிக்கிய முண்மையின்; அதுவே அதிகபலம்; அதுவும் (கூறப்பட்டது).**

முன்னர்ப் பரவித்தைகள் அனைத்தினும் பிரமம் உபாசிக்கற்பாற்றென ஸ்தாபிக்கப்பட்டது. அந்த உபாசியப்பிரமத்தை விசேடித்து நிச்சயிக்கும்பொருட்டே எழுந்தது இவ்வதிகரணம்.

ஸவெ-ா வெெ ருத்ரஸ்தஸ்மெ ருத்ராய நமோ அஸ்து|
புருஷோ வெெ ருத்ரஸ்ஸந்மஹோ நமோ நம:||

(தைத். ஆரணி. கo. உச. சஉ)

"எல்லாம் உருத்திரே; அந்த உருத்திரர்க்கு நமஸ்காரம்; சத்தும் மகத்துமாயுள்ள உருத்திரர் புருஷர்; அவர்க்கு நமஸ்காரம், நமஸ்காரம்" எனவும்,

விஶ்வம் பூதம் புவநம் சித்ரம் பஹுதா ஜாதம் ஜாயமாநஞ்ச யத்|
ஸவெ-ாஹ்யேஷ ருத்ரஸ்தஸ்மெ ருத்ராய நமோ அஸ்து||

(தைத். ஆரணி. கo. உச. சஉ)

"விசுவமும், பூதமும், புவனமும், விசித்திரமாகப் பிறந்தனவும், பிறக்கின்றனவுமாகிய இவையனைத்தும் உருத்திரர்; அந்த உருத்திரர்க்கு நமஸ்காரம்" எனவும்,

கத்ருத்ராய ப்ரசேதஸே மீடுஷ்டமாய தவ்யஸே| வோசேம
ஶந்தமம் ஹ்ருதே| ஸவெ-ாஹ்யேஷ ருத்ரஸ்தஸ்மெ ருத்ராய நமோ அஸ்து|

(தைத். ஆரணி. கo. உரு. சக)

"மேலாகிய உருத்திரர்க்கும், மிகுந்த ஞானமுள்ளார்க்கும், அநுக்கிரகஞ் செய்பவர்க்கும், வணங்கற்பாலருக்கும், இருதயத்துள்ளார்க்கும் இந்த இனிய வார்த்தையைச் சொல்வேம்; இவையெல்லாம் உருத்திரர்; அந்த உருத்திரர்க்கு நமஸ்காரமாகுக" எனவும்,

நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ஹிரண்யபதயே அம்பிகாபதய உமாபதயே பசுபதயே நமோ நம: (தைத். ஆரணி. ௧0. உஉ. ௪0)

"சுவர்ணபாகுவுடையார்க்கு, சுவர்ணவர்ணருக்கு, சுவர்ணரூபர்க்கு, அம்பிகாபதிக்கு நமஸ்காரம், உமாபதிக்கு நமஸ்காரம், பசுபதிக்கு நமஸ்காரம் நமஸ்காரம்" எனவும் தைத்திரீயத்திற் கூறப்படுகின்றது.

ஈண்டு எல்லோர்க்கும் சர்வான்மகமாகவும் உமாபதியாகவும் கூறப்படுகின்ற பரப்பிரமம் பிரகிருதத்திலே ஆதித்தியமண்டல உபாசனையில் மாத்திரமா? இன்றேற் பரவித்தை அனைத்தினுமா? உபாசிக்கற்பாலது என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரகரணத்தில் யாதும் விரோதமின்மையின், இப்போது கூறப்பட்ட சூரியமண்டலவித்தையிலேதான் பிரமம் உபாசிக்கற்பாற்றெனின்,

(சித்தாந்தம்) சொல்லுதும். இந்தச் சர்வான்மகமாய் உமாசகிதமாயுள்ள பரப்பிரமமே பரவித்தைகள் அனைத்தினும் உபாசிக்கற்பாற்று; அவ்வவ்வுபாசனைகளிற் கூறப்படும் குணலிங்கசம்பந்தமாயுள்ள வாக்கியங்கள் மிகுத்துண்மையின். அங்ஙனமே,

ஸர்வோ ஹ்யேஷ ருத்ர: (தைத். ஆரணி. ௧0. உ௪. ௪உ)

"எல்லாம் உருத்திரரே" என்னும் வாக்கியத்தில்,

ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத।

(சாந். ௩. ௧௪. ௧)

"இஃதெல்லாம் பிரமம்; (இந்த உலகம்) அந்தப் பிரமத்திலே தோற்றி, நிச்சுவாசித்து, ஒடுங்குவதாக ஒருவன் தியானிக்க" என்று கூறும் சாண்டில்லிய வித்தையிற்றியானிக்கற்பாலதாகிய (பிரமத்தின் குண) லிங்கம் உள்ளது.

புருஷோ வை ருத்ர: (தைத். ஆரணி. ௧0. உ௪. ௪உ)

"புருஷர்தான் உருத்திரர்" என்னும் வாக்கியத்திலே, புருஷசூக்த உபகோசலவித்தைமுதலியவற்றிற் கூறப்பட்ட உபாசிக்கற்பாலதாம் (பிரமத்தின்) லிங்கம் (காணப்படுகின்றது). எங்ஙனமெனின், ஈண்டுப் போந்த சத்தென்பது

ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் (சாந். ௬. உ. ௧)

"சௌமிய, சத்தாம் இதுவே முதற்கண் இருந்தது" எனச் சத்வித்தையில் உபாசிக்கற்பாலதாம் (பிரமத்தின்) இலிங்கமாய்ப் போந்தது.

மஹ இதி தஹ்ம। ஸ ஆத்மா। அங்கான்யந்யா தேவதா: (தைத். க. ௫)

" மஹ என்னும் அது பிரமம்; அது ஆன்மா; அதின் அவயவங்கள் மற்றத் தேவதைகள்" என்னுமிடத்து மஹ: என்பது வியாகிருதி வித்தையில் உபாசிக்கப்படும் பிரமத்தின் இலிங்கம்.

ஸாந்தம் ஹ்ருதே (தைத். ஆரணி. க0. உ௫. ௪௩)

"இருதயத்தில அதிக சாந்தம்" என்னும் சுருதியானது இருதயத்தைச் சுட்டுதலான், அது தகரவித்தையில் உபாசியமாகிய பிரமத்தின் குணலிங்கத்தைக் குறிக்கின்றது.

ஹிரண்யபாஹவே (தைத். ஆரணி. க0. உ௨. ௪0)

"இரண்ணியபாகுவின் பொருட்டு" என்பதிற் சுவர்ணரூபத்துவம் ஆதித்திய மண்டலவித்தையில் உபாசிக்கப்படும் (பிரமத்தின்) லிங்கம்.

உமாபதயே (தைத். ஆரணி. க0. உ௨. ௪0)

"உமாபதிக்கு" என்பது பரவித்தைகள் அனைத்தினும் உபாசிக்கப்படும் (பிரமத்தின்) லிங்கம். சம்சாரநோயை உருக்கிவிடுதலால் உருத்திரர் எனப் படுவர் பரமான்மாவாகிய சிவபிரானுர். இங்ஙனம் உமாபதியாகிய பரப்பிரம சிவனுர்க்குப் பரவித்தைகள் அனைத்தினும் உபாசியத்துவம் உளதென்பது (மேலே போந்த) வாக்கியங்களான் முடிவு பெறுகின்றது. வாக்கியம் பிரகரணத்தினும் பலமுடைத்தன்றே. இது பூருவமீமாஞ்சை, ௩. ௩. க௪-ற் கூறப்பட்டுள்ளது. ஆகலின், உமையோடிசைந்து சம்சாரநோயை ஒழிக்கும் பரவஸ்துவானது எல்லா வித்தைகளினும் உபாசிக்கற்பாலதென்பது சித்தித்தது. (௪௩)

## (உ௯) பூருவவிகற்பாதிகரணம்.

---

பூர்வவிகல்ப: ப்ரகரணாத்ஸ்யாத் க்ரியா மாநஸவத் (௩. ௩. ௪௪)

**(௩.௯.௮) பிரகரணத்தினுல் முந்தியதற்கு விகற்பம்; (ஆகலின்), கிரியை உண்டு; மானசபாத்திரத்திற் போல.**

ஷட்த்ரிம்ஸதம் ஸஹஸ்ராண்யபஸ்யதாத்மநோऽக்நீநர்காந்மநோமயாந் மநஸ்சித: (சத்பதப்பிராம்மணம், அக்கினிரகசியம், ௫. ௩)

" மநோமயமாய், மனசினுற் கட்டப்பட்டுத் தனக்குரிய முப்பத்தாறுயிரம் பிரகாசம் பொருந்திய அக்கினிவேதிகைகளை அது கண்டது" எனச் (சதபதப்) பிராம்மணத்தைச் (சார்ந்த) அக்கினிரகசியத்திற் கூறப்படுகின்றது. அங்ஙனமே,

வாக்ஞ்சித: ப்ராணசித: சக்ஷுச்சித: ச்ரோத்ரசித: கர்மசித: அக்னிசித: (அக்கினிரகசியம்)

"வாக்கினாற் கட்டப்பட்டனவும், பிராணனாற் கட்டப்பட்டனவும், கண்களினாற் கட்டப்பட்டனவும், காதினாற் கட்டப்பட்டனவும், கன்மத்தினாற் கட்டப்பட்டனவும், அக்கினியினாற் கட்டப்பட்டனவும்" ஆகிய வேறு அக்கினி வேதிகைகளும் கூறப்பட்டிருக்கின்றன. நூறு வருஷமடங்கிய மனுஷனுடைய சீவகாலத்தில் முப்பத்தாறாயிரம் தினங்கள் உள்ளன. ஒரே அக்கினியாக மனசின் முழுவிருத்தியையும் எவ்வளவென்று கணக்கிடின் முப்பத்தாறாயிரம் அக்கினிகளாம். இவைகள் பிரத்தியகான்மாவாகத் தியானிக்கற்பாலன. இவ்வாறே வாக்குமுதலியவற்றாற் கட்டப்பட்ட அக்கினிவேதிகைகளினும் கொள்ளப்படும்.

அவை வித்தியாமயமாகிய யஞ்ஞத்துக்கு அங்கமா? அல்லது கிரியாமயமாகிய யஞ்ஞத்துக்கு அங்கமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வாக்கு மனமுதலியவற்றால் ஆகி நினைக்கப்படும் இந்த அக்கினிகள்

அஸத்வா இதமக்ர ஆஸீத் (சதபதப்பிராம்மணம், ௬. க. க)

"அசத்துத்தானே முதற்கண் இருந்தது" என்றற்றொடக்கத்தவற்றால் மேலே கூறப்பட்ட இஷ்டிகா அக்கினிக்குச் சேஷமாகிக் கிரியாமயமாகிய யஞ்ஞத்தில் இடம் பெறுகின்றன. ஆகலின், இந்த அக்கினிகள் மானசபாத்திரம் போல இஷ்டிகா அக்கினியோடு விகற்பமாய் வருகின்றன. அஃதாவது துவாதசாகம் என்னும் சோமயஞ்ஞத்தில் அவிவாக்கியம் எனப்படும் பத்தாம் தினத்திற் பூமி பாத்திரம் எனவும், பிரஜாபதி தேவதை எனவும், சமுத்திரம் (சோம) திரவியம் எனவுங் கொள்ளப்படலான், அம்மானசபாத்திரத்தை எடுத்தலும் வைத்தலும் ஒமித்தலும் (எஞ்சிய ரசத்தை) எடுத்தலும் (இருத்துவிக்குக்களை) அழைத்தலும் பானஞ்செய்தலுமாகியவெல்லாம் மனசினன் மாத்திரம் முடிக்கப்படுவனவாயினும், கிரியாமயமாகிய யஞ்ஞத்துக்கு அவை அங்கமாவன போல, இந்த மானசிக அக்கினிகளும் கிரியாமய யஞ்ஞத்துக்கு அங்கங்களாம். (௪௪)

அதிதேசாச்ச (ங. ங. ௪ரு)

(ஙகூ) பிறிதொன்றுக்கு இயைத்தலானும்.

தேஷாமேகைக ஏவ தாவாந்யாவாநஸௌ பூர்வ:।

"அவைகளில் ஒவ்வொன்றும் முந்தினதெவ்வளவோ அவ்வளவாயிருக்கும்" என்னும் சுருதியால் இஷ்டிகா அக்கினியோடு சம்பந்தமுற்ற காரி

யங்கள் மனசினுலாய அக்கினி முதலானவைகளுக்கு இயைக்கப்படலான், இந்த அக்கினிகளும் கன்மயஞ்ஞத்துக்கு அங்கமாகின்றன எனின்,› (௪௫)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

விெெஜ்வ த்ு நிஜ்லாரணாஜ்ரா நாது (௩. ௩. ௪௬)

(௪௦௦) ஆயின், வித்தையே வற்புறுத்தலானும் சுருதியினுலும்.

அவை வித்தையே; (அஃதாவது, அவை) என்பது வித்தியாமயமாகிய யஞ்ஞாங்கங்கள் என்பது. அவைகள் எண்ணப்பட்ட அக்கினிகளாயிருத்தலாலே அவைகளுக்கு வித்தியாமயம் எய்தியவிடத்தும்

தெ ஹெதெ விஜ்யாவித வவ (அக்கினிரகசியம்)

"இவைகள் வித்தையினுற் கட்டப்பட்டவை" என்று வற்புறுத்தல் அவைகள் வித்தியாமய யஞ்ஞத்தின் அங்கங்களாம் எனக் காட்டும் பொருட்டேயாம். வித்தியாமய யஞ்ஞமாவது இங்கே

உநஸெவ வா வீயகு உநஸெஷு ஹ்ஹா கஹ்ஹ்க உநஸா ஸ்துவத உநஸா ஸஂஸ_ந்ஜ்ஞ யஜ்ஞ கூூ கியதெ யஜ்ஞ யஜ்ஞியஂ கூூ உநஸெவ தெஷு உநாஉயெஷு உநஸ்வித்து உநாயஃ கியதெ (அக்கினிரகசியம்)

"அவை மனசினுற் கட்டப்பட்டன; இவற்றில் ஆகுதிகள் மனசினுற் செய்யப்பட்டன; மனசினுலே துதித்தன; மனசினுற் புகழ்ந்தன; யஞ்ஞத்தில் எந்தக் கன்மஞ் செய்யப்பட்டாலும், யஞ்ஞத்துக்கு எந்தக் கன்மம் உரித்தாயிருந்தாலும் இவையெல்லாம் மனசினுற் கட்டப்பட்ட மனேவக்கினிகளின் மனவடிவங்களாய் (மனசிலே) செய்யப்பட்டன" என்னுஞ் சுருதியினுற் கூறப்படுகின்றது. ஆகலின், இவைகள் வித்தியாமயமாகிய யஞ்ஞத்தின் அங்கங்களே.

ஸுத்யாதி வ்லீயஸ்வாது ந வாயஃ (௩. ௩. ௪௭)

(௪௦௧) சுருதிமுதலிய அதிபலமாயிருத்தலானும்; பாதை இல்லை.

தெ ஹெதெ விஜ்யாவித வவ। விஜ்யயாஹெ வெத வவஂ விஜ்விதா ஹவக்தி। தாந் ஹெதாநவஂ விஜெ ஸவஜா ஸவாணி ஹுதாநி விநுவ்விஸ்வதெ (அக்கினிரகசியம்)

"அவை வித்தையினுல் மாத்திரம் கட்டப்பட்டன; இங்ஙனம் அறிபவனுக்காக அவை ஞானத்தினுற் கட்டப்பட்டன; நித்திரை செய்யும் அறிஞன் பொருட்டுச் சமஸ்த பூதங்களும் எப்போதும் அவைகளை (வேதிகைகளை)

கட்டுகின்றன" என்றது சுருதி. சுருதியையும், வாக்கியத்தையும், இலிங்கத்தையும் நோக்கத் துர்ப்பலமாகிய பிரகரணம் மேலே பெறப்பட்ட ஞானமய யஞ்ஞத்துக்கு அவை அங்கம் என்பதைப் பாதிக்காது.

(ஆக்ஷேபம்)

உந வைஷு ஜூஹா சஜ்ஜஹுங (அக்கினிரகயசிம்)

"இவைகளில் ஆகுதிகள் மனசினாற் கொள்ளப்படுகின்றன" என்றற்றொடக்கத்தவற்றில் விதிப்பிரத்தியயம் ஒன்றும் கேட்கப்படாமையான், கன்மயஞ்ஞத்தினின்று வேறாக ஞானமய யஞ்ஞம் ஒன்று இல்லையாமெனின், (௪௭)

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுகின்றனர்.

சுநுவயாதிஜ்ய: ப்ரஜ்ஞாநா வ்யக்ஷவஷ்ரஷு தஉக்ஷ்)

(௩. ௩. ௪௮)

(௪௦௨) தொடர்ச்சிமுதலியவற்றினின்று மற்ற ஞானம் வேறுதல் போல, (கன்மயஞ்ஞத்தினின்று) இவை வேறும்; (அது பிறவிடத்தினும்) காணப்படுகின்றது; இது உரைத்தாயிற்று.

ஜூஹா சஜ்ஜஹுங (அக்கினிரகசியம்)

"ஆகுதிகள் மனசினாற் கிரகிக்கப்படுகின்றன" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலும் வித்தியாமய யஞ்ஞவிதி கற்பிக்கற்பாற்று. தகரவித்தைமுதலியன கன்மயஞ்ஞங்களினின்று வேறாயினாற் போல, (ஈண்டும்) யஞ்ஞ சம்பந்த சுருதிகளினால் வித்தியாமய யஞ்ஞமும் (கன்மயஞ்ஞத்தினின்று) வேறெனப் பெறப்படுகின்றது.

யதெவ விஷ்யா கரொதி (சாங். க. க. ௧௦)

"ஞானத்தினோடு செய்யப்படுவதுதான் அதிவீரியமுடைத்து" என்றற்றொடக்கத்த சுருதியில் அநுவாத ரூபமாய் விதிகள் காணப்பட்டன. இது பூருவமீமாஞ்சை, ௧௦. ௪. ௨௨. ற் கூறப்படுகின்றது. ஆகலின், (இந்த அக்கினிகள்) ஞானயஞ்ஞத்துக்கு அங்கம் என்று சொல்வதே யுக்தம். (௪௮)

சூத்திரகாரர் ஆசங்கித்துப் பரிகரிக்கின்றனர்.

ந ஸாமாந்யா உவஷுவஸ்யெவ்வு்-க்யு வஹி லொகாவத்தி:।

(௩. ௩. ௪௯)

(௪௦௩) (அங்ஙனம்) அன்று, ஒப்புமைபற்றி (இது) காணப்படலான்; மிருத்தியுவைப் போல; ஏனெனின், (மிருத்தியுவின்) உலகப் பிராப்தி இல்லை.

தேஷா மேகைக ஏவ தாவாந்யாவா நஸௌ।

(அக்கினிரகசியம்)

"அவற்றின் ஒவ்வொன்றும் முந்தினதெவ்வளவோ அவ்வளவாய் இருக்கும்" என்னும் சுருதியினால் இஷ்டிகைகொண்டு கட்டப்பட்ட அக்கினி (சம்பந்தமுற்ற விஷயங்கள்) பயன் ஒப்புமைபற்றி மன அக்கினிக்கு மாற்றப்படுகின்றன. இஷ்டிகா அக்கினிக்கு யஞ்ஞவாயிலாக யாது பயன் கூறப்பட்டதோ, அந்தப் பயனே வித்தியாமய யஞ்ஞத்தின் பிரவேசத்துக்குமாம். இஷ்டிகையினாலே கட்டப்பட்ட அக்கினிபோல ஒரே அளவுள்ள இடத்தை இந்த மானசாக்கினிகள் கொள்வன (எனச் சுருதி கருத)வில்லை; சில ஒப்புவமைபற்றி ஒரே பொருளோடு சம்பந்தமுற்ற விஷயங்கள் மற்றொன்றுக்கும் செல்லக் காண்டலான்.

ஸ ஏவ ம்ருத்யு:। ய ஏஷ ஏதஸ்மிந்மண்டலே புருஷ:।

(தைத். ஆரணி. ௧௦. ௧௪. ௩௧)

"இந்த மண்டலத்திலே எந்தப் புருஷர் இருக்கின்றாரோ," "அவரே மிருத்தியு" என்னுஞ் சுருதியானது சங்காரஞ் செய்தல் மாத்திரத்தினால் மண்டலபுருஷர்க்கு மிருத்தியுவைப் போலத் துல்லியஸ்தானம் இருக்கவேண்டுமென்பதில்லை என்று கூறுகின்றது. ஆகலின், யாதாயினுமோர் ஒற்றுமைபற்றி அதிதேசஞ் செய்வதில் யாதும் விரோதமில்லை. (௪௯)

சூத்திரகாரர் மற்றோர் ஏதுக் கூறுகின்றனர்.

ப்ராஹ்மணாச்ச பரஸ்தாத்ஸ்ய ததேகவாக்யதயாநுபந்த:।

(௩. ௩. ௫௦)

(௩௦௪) பின் வரும் (பிராம்மணத்தி) னுலும் சப்தத்துக்கு அதுதான் பொருள்; ஆயின், மிகுதிபற்றி அநுபந்தம்.

பின்வரும் பிராம்மணத்தினால் "மனசினாற் கட்டிய அக்கினியையுற்றுப்" பேசும் வாக்கியத்துக்கு இந்த அக்கினிகள் வித்தியாமயத்தைப் பிரதிபாதிப்பதே பொருளாகப் பெறப்படுகின்றது.

அயம் வாவ லோக ஏஷோ(அ)க்நிசித:।

(சதபதப்பிராம்மணம். ௧௦. ௫. ௪)

"இந்த இட்டிகையாலாய அக்கினி வேதியே இந்த உலகம்" என்றற்றொடக்கத்த சுருதியினால் வேறு பலத்தைக் கொடுக்கும் உபாசனை விதிக்கப்படுகின்றது. கிரியாப்பிரகரணத்தில் மனசினாற் கட்டப்படும் அக்கினிகளையுடைய அநுபந்த (பிரகரண) மானது நினைக்கப்படுகின்ற அக்கினி அங்கங்களின் மிகுதியையுடைமையின், இவைகள் (இந்த அக்கினிகள்) ஞானயஞ்ஞத்துக்கு அங்கமாகின்றன. (௫௦)

## (கூo) சரீரேபாவாதிகரணம்.

வைக ஸூத்ரம் - ஏக ஆத்மந: ஶரீரே பாவாத் (ங. ங. ருக)

(சoரு) சரீரத்திலே ஆன்மா இருப்பதாற் சிலர் (அது யுக்தம் அன்று என்பர்).

இப்போது மேலே கூறப்பட்ட பிரமசொரூபத்தைப் பரவித்தைகள் அனைத்தினும் தியானஞ் செய்தல் பொருந்துமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உபாசிப்பவன் சரீரத்துள்ளே இருத்தலானும், கர்த்தாவும் போக்தாவுமாகத் தான் இருத்தலானும், அங்ஙனமிருப்பவன் பரவித்தைகளிலே தனக்கு ஆன்மாவாகவும், முக்கணுடைமைமுதலிய இலக்ஷணமுடைய சொரூபராகவும் சிவபெருமானை அநுசந்தானஞ் செய்தல் கூடாதெனச் சிலர் கூறுகின்றனர் எனின், (ருக)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

வ்யதிரேகஸ் தத்பாவ பாவித்வாந் ந தூபலப்திவத் (ங. ங. ருஉ)

(சoசூ) ஆயின், (அது அங்ஙன) மன்று; (பின்) வியதிரேகம்; அதனியல்பை (அவன்) அடைதலின்; உபலப்தியிற் போல.

கர்த்தாவும் போக்தாவுமாகத் தன்னைக் குறிக்கும் உபாசகனிடத்துப் பரமான்மாவானவர் ஆன்மாவாகத் தியானிக்கப்படுவரல்லர்; பின்னையோவெனில், சாம்சாரிக சுவபாவத்தினின்று நீங்கினவனுக்கு (முக்தனுக்குப்) புலப்படும் எந்த (வியதிரேக) எதிர்மறைவியல்பினவாய அபகதபாப்மத்துவாதி குணரூபம் உண்டோ, அது தியானிக்கற்பாற்று; அங்ஙனம் எப்பொழுதுந் தியானித்துக்கொண்டிருத்தலினாலேதான், பிரமசொரூபம் புலப்படுகின்றமையின். எவ்வெவ்வாறு சொரூபப்பிரமத்தின் தியானபாவனை இருக்கின்றதோ, பிரமத்தின் சொரூபத்தை அடைதலும் அவ்வாறாம்;

யதா க்ரதுர் அஸ்மிந் லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி (சாந். ங. கச. க)

"இந்த உலகத்திற் புருஷனுடைய கருத்து எங்ஙனம் இருக்கின்றதோ, இந்த உலகத்தை விட்ட பின்னும் அவன் அங்ஙனமே இருப்பன்" எனச் சுருதி கூறுகின்றமையின். ஆகலின், சம்சாரத்துக்குரிய சுவபாவத்தினின்று நீங்கினவனைக் குறிக்கும் அபகதபாப்மத்துவாதி குணங்களையுடையனாக உபாசிப்பவன் தியானிக்கற்பாலனாகலின், அப்பொழுது அவ்வுபாசகனுக்கு ஆன்மாவாகத் தியானிக்கற்பாலராகிய சிவபிரானைத் திரிலோசனமுதலிய இலக்ஷணசொருபமுடையராகத் தியானஞ்செய்தலில் விரோதம் யாதுமின்று. (ருஉ)

## (௩௧) அங்காவபத்தாதிகரணம்.

அங்காவபத்தாஸ்து ந ஶாகாஸு ஹி ப்ரதிவேதம் (௩. ௩. ௫௩)

(௪௦௭) அங்கங்களோடு சேர்ந்தவை அவைகளுக்கு மாத்திரங் கட்டுப்பட்டன அன்று; ஒவ்வோர் வேதத்தின் எல்லாச் சாகைகளுக்கும் (அவை பொது)வன்றோ.

தியானத்துக்கு அங்கமாக வேதத்திற் சில சாகைகளிலே விதிக்கப்பட்டவை தியானங்கள் அனைத்தினும் அங்கங்களாகக் கொள்ளவேண்டுமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ஆத்மாநம் அரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம்।
த்யாநநிர்மதநாப்யாஸாத் பாஶம் தஹதி பண்டித: (கைவ)

“ஆன்மாவைக் கீழ்க்கடைகோலாகவும், பிரணவத்தை மேற்கடைகோலாகவுங் கொண்டு கடைதலாம் தியானப்பியாசத்தினாலே பண்டிதன் பாசத்தைத் தகிக்கின்றான்” எனக் கைவல்லியோபநிடதத்துத் தகரோபாசனையிலே பிரணவத்தியானம் விதிக்கப்பட்டிருக்கின்றது.

அக்நிரித்யாதிநா பஸ்ம க்ருஹீத்வா தேந விம்ருஜ்யாங்காநி ஸம்ஸ்ப்ருசேத்। தஸ்மாத் வ்ரதமேதத் பாசுபதம் பசுபாசவிமோக்ஷாய। (அதர்வசிரசு)

*“அக்கினி என்பது பஸ்மம் என்றற்றொடக்கத்த மந்திரத்தினாற் பஸ்மத்தை எடுத்து, அதனால் அங்கங்களிற் பூசி அவற்றைத் தடவுக; இந்தப் (பாசுபத) விரதம் பசுவைப் பந்தத்தினின்று நீக்குதற்குப் போந்த பசுபதிதருமம்” என அதர்வசிரசிற் கூறப்பட்ட பாசுபதவித்தையிலே பஸ்மோத்தூளனம் கேட்கப்படுகின்றது. மற்றோரிடத்திலே,

திஸ்ரோ ரேகா: ப்ரகுர்வீத (காலாக்கினிருத்திரம்)

“அவன் மூன்று ரேகை செய்வானாக” எனத் திரிபுண்டரதாரணவிதி கூறப்படுகின்றது. அந்த வழிபாட்டுக்குச் சிவசாயுச்சியமே பலம் என்று கேட்கப்படுகின்றமையின், அது பரவித்தைக்கு அங்கமாம். இங்ஙனம் எந்தச் சாகைகளிலே (பஸ்மோத்தூளன முதலியன) கூறப்பட்டிருக்கின்றனவோ, அந்தச் சாகைகளிலேயுள்ள உபாசனைகளில் உபாசகர்களாற் சந்நிதிபற்றி அவை வித்தியாங்கமாகச் சேர்ந்தவெனக் கோடற்பாற்றெனின்,

---

*இந்தப் பாசுபதவிரதானுட்டானம் உபக்கிரமணிகையினும் (௩௪௦—௩௫௪) சைவசித்தாந்த தத்துவப்பட வினாவிடையினும் (௧௬௪—௧௬௭) சூசிக்கப்பட்டுள்ளது. மேலும், அது பாஷ்யகாரரால் (௩. ௪. ௪௮, ௪௧-ஆஞ்) சூத்திர பாசுபதவிரதாதிகரணத்தினும் உரைக்கப்பட்டிருக்கின்றது.

(சித்தாந்தம்) கூறுதும். பஸ்மோத்தூளனமுதலியன உபாசனங்கங்களாக எந்தச் சாகைகளிற் கூறப்பட்டனவோ, (அவை) அந்தச் சாகைகளுக்கேயாம் என ஓர் நியமமில்லை. பின், ஒவ்வோர் வேதத்துச் சாகைகள் அனைத்தினும் பிரமோபாசகர்கள் அனைவராலும் அவை அநுஷ்டிக்கற்பாலனவே. சுருதி கொண்டு சந்நிதி தவிர்க்கப்படல் வேண்டும். (௫௩)

மந்த்ராதிவத்³வா(அ)விரோத⁴: (௩. ௩. ௫௪)

(௪௦அ) அல்லது மந்திராதியிற்போல விரோதம் இன்று.

வா என்பது வற்புறுத்துதலின் மேற்று. எங்ஙனம் யஞ்ஞாங்கமாயுள்ள மந்திரங்கள் ஒவ்வோர் சாகைபற்றியிருப்பினும், அவை சர்வசாகைகளினுமுள்ள யஞ்ஞத்துக்குப் பிரயோசனப்படுதலின் விரோதமின்றோ, அங்ஙனமே ஈண்டுமாம். (௫௪)

(௩௦) கிரதுவச்சியாயஸ்துவாதிகரணம்.

---

பூ⁴ம்ந: க்ரதுவஜ்ஜ்யாயஸ்த்வம் ததா² ஹி த³ர்சயதி (௩. ௩. ௫௫)

(௪௦௧) யஞ்ஞகருமத்திற் போலச் சமஸ்தோபாசனை முக்கியம்; அங்ஙனமே சுருதி கூறுகின்றது.

ஈண்டு வைசுவாநரவித்தையிலே உபாசனை அம்சமாகவா? சமஸ்தமாகவா? கொள்ளப்படல் வேண்டும் என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வானலோகம், சூரியன், வாயு, ஆகாசம், நீர், பூமி என்பன வைசுவாநரர்க்கு (முறையே) தலையும், கண்ணும், பிராணனும், உடலும், உபஸ்தங்களும், பாதமுமாகத் தியானிக்கவேண்டும் என்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

அத்த்யன்னம் பச்யதி ப்ரியம் ப⁴வத்யஸ்ய ப்³ரஹ்மவர்சஸம் ய ஏதமேவமாத்மாநம் வைச்வாநரமுபாஸ்தே (சாங். ௫. ௧௨. ௨)

"வைசுவாநரரைத் தியானிப்பவன் அன்னம் அயில்கின்றனன்; இனியதைப் பார்க்கின்றான்; இவன் பிரம தேஜசை அடைகின்றான்" என வெவ்வேறாக வான முதலியவற்றுக்குப் பரியாயமாயுள்ள வாக்கியங்களினாலே, அவ்வவங்கங்களையும் வெவ்வேறாக உபாசிக்க எனக் கூறப்பட்டது. அங்ஙனமே, உபாசனா மொழியும் பலத்தைக் குறிக்கும் வசனமும் தனித்தனி வேறாகக் கூறப்படுதலின், அம்சவுபாசனை உசிதமாம் எனின்,

(சித்தாந்தம்) சமஸ்தோபாசனைதான் முக்கியமென்று கூறப்படுகின்றது. மூவுலகத்தையும் சரீரமாகவுடையராய்த் தியானிக்கற்பாலராகிய வைசுவாநரர்க்கு வானமுதற் பிருதிவியந்தமாயுள்ளவற்றைத் தலைமுதற் பாதாந்தமாகக் கூறிய பின்னர்,

யஸ்த்வேதமேவம் ப்ராதேஶமாத்ரமபிவிமாநமாத்மாநம் வைஶ்வாநரமுபாஸ்தே ஸ ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஷ்வாத்மஸ்வந்நமத்தி (சாந். ரு. ௧௮. ௧)

"சாணளவாகவும் தன் அளவாகவும் வைசுவாநரரைத் தியானிப்பவன் சர்வலோகங்களினும், சர்வபூதங்களினும், சர்வான்மாக்களினும் போகந் துய்க்கின்றனன்" எனப் பிரமாநுபவமும் பலமும் கூறப்பட்டிருக்கின்றன. (அவருடைய) தலை முதலிய அவயவோபாசனையினும், (வைசுவாநரருடைய) பிருதியாகிய சமஸ்தோபாசனையே பிராமாணிகமுடையதாய் முக்கியமாயிருக்கின்றது; இவ்வுபாசனையிலேதான் பிரமாநுபவமும் பலமும் கேட்கப்படுதலின். அங்கே (வைசுவாநரருடைய) அவயவோபாசனையும் (அதன்) பலமும் (சுருதியில்) யஞ்ஞம்போலக் கூறப்படவில்லை.

வைஶ்வாநரம் த்வாதஶகபாலம் நிர்வபேத்புத்ரே ஜாதே।
(யசுர். வே. ௨. ௨. ரு. ௩)

"புத்திரன் பிறந்தபோது வைசுவாநரருக்குப் பன்னிரண்டு கபாலத்திலே ஆகுதி கொடுத்தல்வேண்டும்" என்று சுருதி விதித்த பின்னர்,

யதஷ்டாகபாலோ பவதி காயத்ர்யைவைநம் ப்ரஹ்மவர்சஸேந புநாதி (யசுர். வே. ௨. ௨. ரு. ௩)

"எட்டுக் கபாலத்திலே கொடுக்கப்பட்டது காயத்திரியைப் போலப் பிரமதேஜசாகச் சுத்திகரிக்கின்றது" என்றற்றொடக்கத்தவற்றாற் கூறப்படும் எட்டுக் கபாலத்தையும் அவற்றின் பலத்தையும் எடுத்துச் சுருதி விதவாமை போலவே, வைசுவாநரவித்தையினுமாம். அங்ஙனமே சுருதியானது சமஸ்தோபாசனையையே முக்கியமாகக் கூறுகின்றது.

ஔபமந்யவகம் த்வமாத்மாநமுபாஸ்ஸே (சாந். ரு. ௧௨. ௧)

"உபமன்னியுபுதல்வனே! நீ எந்த ஆன்மாவை உபாசிக்கின்றனை?"

ப்ராசீநயோக்யகம் த்வமாத்மாநமுபாஸ்ஸே (சாந். ரு. ௧௩. ௧)

"பிராசீனயோக்கியனே! நீ எந்த ஆன்மாவை உபாசிக்கின்றனை?" என்னும் வினுக்களுக்கு, (முறையே) பின்னர்

திவமேவ பகவோ ராஜந் (சாந். ரு. ௧௨. ௧)

"பகவானே, இராஜாவே, ஆகாயத்தையே உபாசிக்கின்றேன்"

ஆதித்யமேவ பகவோ ராஜந் (சாந். ரு. ௧௩. ௧)

"பகவானே, இராஜாவே, ஆதித்தியனையே உபாசிக்கின்றேன்" என்றற்றொடக்கத்த விடைகளான் அவயவோபாசனை கூறி,

ஸுதேஜா வஸ்த்ரியே (சாந். ரு. ௧௨. ௧)

"அன்னத்தை அயில்கின்றான்; இனியதைப் பார்க்கின்றனன்" என்றற் றொடக்கத்தவற்றால் அங்கங்கே (சுருதியிற்) பலம் குறிக்கப்படுகின்றமையை,

மூர்தா த்வேஷ ஆத்மந இதி ஹோவாச மூர்தா தே வ்யபதிஷ்யத்யந்மாம் நாகமிஷ்ய (சாங். ரு. கஉ. உ)

"அது (பரம) ஆன்மாவின் தலை; நீ என்னிடம் வாராதுபோனால் உன்தலை விழுந்துபோம்" என்றற்றொடக்கத்த இராஜவசனங்கொண்டு, அவயவத் தியானத்தினால் (விளையும்) அநர்த்தத்தைச் (சுருதி) கூறுகின்றது. ஆகலின், சமஸ்தோபாசனையே முக்கியம். (௫௫)

## (௩௩) நாநாசப்தாத்தியதிகரணம்.

நாநாஶப்தாதிபேதாத் (௩. ௩. ௫௬)

### (சுகo) நாநாசப்தமுதலிய பற்றி, அவை பேதம்.

தகரவித்தையிலே (பிரமத்தைப்பற்றிய) உபாசனைகள் அனைத்தையும் ஒருங்கு சேர்த்துத் தியானஞ் செய்தல் வேண்டுமா? இன்றேல் ஒவ்வொன்றையும் வெவ்வேறாகத் தியானஞ் செய்தல் வேண்டுமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) நாநாசாகைகளையுடைய வேதங்களிலே பலவாறாகத் தியானங்கள் கூறப்படினும், உபாசியமாகிய பிரமம் ஏகமாயிருத்தலின் உபாசனை அனைத்தையும் ஒருங்கு சேர்த்து உபாசித்தல் வேண்டும் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. அனந்த சுருதிகளிற் கூறப்பட்ட அனந்த உபாசனைகளையும் ஒருங்கு சேர்த்து அநுஷ்டித்தல் கூடாமையின், சொரூபத்திலே (பிரமம்) ஒன்றாமாயினும், (அந்தப்) பிரமத்துக்குக் குணங்கள் வேறுபடுதலான் உபாசனைகளும் வேறுபடும். எந்தவிடத்திற் குணவேறுபாடுகள் இல்லையோ, அந்தவிடத்திலே ஸ்தானாதிபேதத்தினால் உபாசனைகள் பேதமுறும். அரசன் முதலாயினோருடைய குணபேதம்பற்றி இந்திரனுக்குக் கொடுக்கப்படும் புரோடாசங்கள் வெவ்வேறானாற் போலவேனும், கார்ஹபத்தியமுதலிய ஸ்தானாதி பேதத்தினால் யாகாக்கினிக்கு வழிபாடு வேறுபட்டாற்போலவேனும், உபாசனாபேதம் (உளதாதல்) பொருத்தமாம் என நிரூபிக்கப்பட்டது. ஆகலின், (உபாசனை) நாநாப்பிரகாரமாயுள்ளது; பெயரினுந் தொடர்ச்சியினும் பேதமுண்மையின்; என்பது நிர்ணயம். (௫௬)

(உபாசனா) வித்தை விதிக்கப்படவில்லை என்பதை நிரசிக்கும்பொருட்டே போந்தது இந்த அதிகரணம்.

## (௩௪) விகற்பாதிகரணம்.

விகல்போ ऽவிஶிஷ்டஃபலத்வாத் (௩. ௩. ௫௭)

(௪௧௧) விகற்பம்; (அவற்றின்) பயன் ஒன்றாயிருத்தலின்.

இங்ஙனம் நாநாப்பிரகாரங்களாகப் பரவித்தைகள் நிரூபிக்கப்பட்டன.

உபாசகன் விஷயத்தில் அவ்வுபாசனைகள் விகற்பமாகக் கோடற்பாலனவா? அவை ஒருங்கு தியானிக்கற்பாலனவா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) தகரவித்தை சத்வித்தை முதலியன ஒருங்கு தியானிக்கப்படல் வேண்டும்; முயற்சி மிகுதிப்படுங்கால், பலமும் மிகுதியாகுமாதலின் அவைகள் விகற்பமாகக் கொள்ளவேண்டும் என்றற்கு விதி இல்லையாமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஒரு உபாசகன் விஷயத்திற் பரவித்தைகள் எல்லாம் விகற்பங்களே; எதனாலெனின், நிரதிசயானந்தாநுபவ பிரமசாக்ஷாத்காரபலம் (எல்லாவற்றினும்) ஒன்றுமாதலின். ஒரே உபாசனையினாற் பலன் பெறப்படுமாயின், அப்பிரயோசனமாகிய பிறவற்றை ஒருவன் (அப்பியசித்தல்) எற்றுக்கு? மேலும், ஒரே உபாசனையினாற் பிரமாண ஜன்னியமாகிய பிரமசொரூபசாக்ஷாத்காரம் தியேயப்பொருளோடு தாதான்மியபாவனையுறுதல் காரணமாக நிரதிசயானந்த அநுபவத்தினாற் சித்திக்கின்றது. ஒன்றைவிட்டு மற்றொன்றைத் தொடர்வதாற் சித்தம் சலனமெய்தும். ஆகலின், அவை விகற்பங்களாகக் கொள்ளற்பாலன. (௫௭)

## (௩௫) யதாகாமாதிகரணம்.

---

காம்யாஸ்து யதாகாமம் ஸமுச்சீயேரந்ந வா பூர்வஹேத்வபாவாத் ।
(௩. ௩. ௫௮)

(௪௧௨) காமியங்கள் காமித்தவாறு ஒருங்கு சேர்க்கப்படலாம் அல்லது ஒருங்கு சேராதுவிடலாம்; முந்திய ஏது இல்லாமையான்.

ஈண்டுப் பிரமசாக்ஷாத்காரபலத்துக்கு வேறாகிய பலத்தைத் தருவனவாகக் கருதப்படும் உபாசனைகளுக்கும் பூருவாதிகரணத்திற் (கூறப்பட்ட) நியாயம் செல்லுமா? என்பது சந்தேகம்.

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. மேலை அதிகரணத்திற் கூறப்பட்ட நியாயம் ஈண்டுச் செல்லாது; (இருவகை உபாசனைகளுக்கும்) பேதமுண்மையின்.

தேவோ பூத்வா தேவாநப்யேதி (பிரு. ௬. ௧. ௩)

"தேவனாகித் தேவர்களைப்போய் அடைகின்றனன்" எனப் பாவனாதிக்கிய வசத்தினால் தேவபாவத்தைச் சீவித்திருக்குங்காலத்திற்றான் அடைவதாகக் கூறப்படுகின்றது. (பரப்பிரமத்தைத்) தானாக உபாசிக்கும் பரவித்தைகள் போல, பிரமமுதலிய நாமங்களை உபாசித்தல் போன்ற காமியவுபாசனைகள் (பிரம) சாக்ஷாத்காரபலத்தைக் கொடுக்கும் என்பதற்குச் சிறிதும் பிரமாண மில்லை. அந்தப் பலமில்லாவிடத்து, ஆங்காங்குப் போகத்தை மிகுதியும் துய்க்கவேண்டும் என்னும் அபேக்ஷைகொண்டு அநேக உபாசனை செய்வதே யுக்தம்; பிரமத்தை அடைதலாம் பயன்போல ஒன்றுபிராமையின். ஆகலின், ஒன்றையேனும் பலவற்றையேனும் ஆசிரயித்து அநுஷ்டிக்கவேண்டும் என்பது நிச்சயம். (௫௮)

## (௩௬) யதாசிரயபாவாதிகரணம்.

---

கூமெஷ யயாமூயஜாவஃ (௩. ௩. ௫௯)

**(௬௧௩) (யஞ்ஞ கன்ம) அங்கங்களிற் போல, (அவை தமக்குரிய கன்மங்களை) ஆசிரயிப்பன.**

ஈண்டு உற்கீத முதலிய அங்கங்களோடு சம்பந்தப்பட்ட (உபாசனைகள்) யஞ்ஞத்துக்கு அங்கமா? இன்றேற் சுவாதந்திரியமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) நியாயம் (சூத்திரகாரராற்) கூறப்படுகின்றது. (யஞ்ஞ கன்மங்களிலே) உற்கீதமுதலிய அங்கங்களிற் கூறப்படும் உபாசனைகள் உற்கீத முதலிய (அங்கங்கள்) போல யஞ்ஞ கன்மங்களுக்கு அங்கங்களே; கோதோகநாதிபோலச் சுருதியிலே பலங் கேட்கப்படாமையின். (௫௯)

மிஷெஷ (௩. ௩. ௬௦)

**(௬௧௪) விதித்தலானும்.**

உஜீய உவாஸீக (சாந். க. க. க)

"அவன் உற்கீதத்தை உபாசிக்க" எனச் சுருதி விதித்தல் காணப்படுதலானும்,

யஜெவ விஷூயா கூமொதி (சாந். க. க. க௦)

"உபாசனையோடு எவன் எதைச் செய்கின்றனனோ" என்னுஞ் சுருதியில் விதித்தல் காணப்படாமையானும், (குறிக்கப்பட்ட உபாசனைகள் யஞ்ஞ கன்மங்களுக்கு) அங்கமாகின்றனவே. (௬௦)

ஸஊஹாராக (௩. ௩. ௬௧)

(௪௧௫) திருத்தமுண்மையான்.

ஸய ஏவம் வேத யஉத்கீத ஸ ப்ரணவோ ய: ப்ரணவ ஸ உத்கீத இதி ஹோத்ருஷதநாத்தைவாபி துருத்கீதமநுஸமாஹரதி|

(சாந். க. ரு. ரு)

"உற்கீதத்தைப் பிரணவம் எனவும், பிரணவத்தை உற்கீதம் எனவும் அறிகின்றவன் ஹோதாவின் தானத்திலிருந்து உற்கீதவிஷயத்தில் (உற்காதாவிடும்) பிழையைத் திருத்துகின்றான்" என்னுஞ் சுருதியினால் உபாசனையின் சமாகாரம் (பிழைதிருத்தம்) நியமமாகக் காணப்படுகின்றது; இந்த நியாயத்தினாலும் (உபாசனைகள்) யஞ்ஞங்களுக்கு அங்கங்களாகின்றன. ஞானமில்லாமையாற்றான் உற்கீதவிஷயத்திற் பிழை நேர்கின்றது. ஞானமில்லாவிடின் வேறு பிரகாரமாகத் திருத்துதலாம் சமாதானம் செய்யவேண்டும் என்று கூறும் சுருதியானது யஞ்ஞத்துக்கு உபாசனம் அங்கமென்று காட்டுகின்றது; இந்த நியாயத்தினாலும் உபாசனை யஞ்ஞத்துக்கு அங்கமாகின்றது. (௬௧)

குணஸாதாரண்யஶ்ருதேஶ்ச (௩. ௩. ௬௨)

(௪௧௬) குணஞ் சாதாரணமென்று சுருதி கூறலானும்.

தேநேயம் த்ரயீவித்யா வர்த்ததே ஓமித்யாஶ்ராவயதி ஓமிதி ஶம்ஸதி ஓமித்யுத்காயதி (சாந். க. க. ௯)

"அதினால் (அக்ஷரத்தினால்) அந்த மூன்று வேதத்தின் வித்தை உண்டாகின்றது; ஓம் என்று அத்துவர்யு ஓர் ஆஞ்ஞை கொடுத்தனர்; ஓம் என்று ஹோதாக் கூறினர்; ஓம் என்று உற்காதா பாடுகின்றனர்" எனப் (பிரணவம்) யாண்டுஞ் சேர்ந்திருக்கின்றது. (இங்கே கூறப்பட்ட) உபாசனை பிரணவத்தின் குணமாகச் சேர்தலான், உபாசனை (யஞ்ஞகன்மத்துக்கு) உபாதான நியமாங்கமென்று பெறப்படுகின்றது. பிரகிருதத்திற் கூறப்பட்டதொன்றைக் குறிக்கும் "அதனால்" (தேந) என்னும் சப்தமானது பிரகிருத உபாசனையோடு சேர்ந்த பிரணவத்தையே குறிக்கின்றது. ஆகலின், முன்னர்க் கூறிய உற்கீத முதலியவற்றோடு சேர்ந்த உபாசனைகள் (குறிக்கப்பட்ட யஞ்ஞகன்மங்களுக்கு) நியமமாம் எனின், (௬௨)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

நவா தத்ஸஹபாவாஶ்ருதே: (௩. ௩. ௬௩)

(௪௧௭) நிச்சயமாயில்லை; அவை ஒன்று சேருமென்று சுருதி சொல்லாமையான்.

(யஞ்ஞகன்மங்களோடு உபாசனைகள்) ஒன்று சேருமென்பது அங்கங்களாதலாம் என்பதின் மேலதன்றே. இது கூறப்படாமையால் உபாசனைகள் யஞ்ஞகன்மங்களுக்கு அங்கமாகமாட்டா;

யதெ³வ வித்³யயா கரோதி ததெ³வ வீர்யவத்தரம்।
(சாந். க. க. ௧௦)

"உபாசனையோடு செய்யப்படுவதுதான் அதிவீரியமுடைத்து" என்னும் சுருதியினால் வேறு பயன்களைச் சாதிப்பனவாக அறியப்படும் உபாசனைகள் (யஞ்ஞங்களுக்கு) அங்கமாகமாட்டாமையின்.

உத்³கீ³த²முபாஸீத (சாந். க. க. க)

"அவன் உற்கீதத்தைப் பாடுக" என்னுஞ் சுருதியானது ஈண்டு உபாசனைகள் உற்கீதத்தைமாத்திரம் சார்ந்தன என்று கூறுதலின், யஞ்ஞகன்ம அங்கங்களோடு சம்பந்தப்பட்ட அந்த உபாசனைகள் அந்த யஞ்ஞகன்மங்களுக்கு (நியம) அங்கங்கள் ஆகா. (சுங)

த³ர்ஶநாச்ச (௩. ௩. சுச)

(சுசஅ) (சுருதியிற்) காணப்படலானும்.

ஏவம் வித்³த⁴ வை ப்³ரஹ்மா யஜ்ஞம் யஜமாநம் ஸர்வாம்ஶ்சர்த்விஜோऽபி⁴ரக்ஷதி (சாந். ச. கஎ. ௧௦)

"இருத்துவிக்குக்களுள் ஒருவனாகிய இதனை அறிந்த பிராமணன் யஞ்ஞத்தையும், யஜமானனையும், மற்றெல்லாவற்றையும் இரக்ஷிக்கின்றனன்" என இங்ஙனம் பிராம்மணசாரியரின் ஞானத்தினால் எல்லாம் இரக்ஷிக்கப்பட்டனவாகக் கூறுஞ் சுருதியானது உற்காதா முதலாயினோர்க்கு ஞானம் நியமமில்லையாமாதலின், யஞ்ஞ கன்மத்திலே ஞானம் அங்கமில்லை என்று காட்டுகின்றது. ஆகலின், மேலே உரைக்கப்பட்ட உபாசனைகள் யஞ்ஞகன்மங்களுக்கு இருக்கவேண்டுமென்ற நியமமில்லை என்பது யுக்தமே. (சுச)

---

## மூன்றும் அத்தியாயத்து
# நான்காம் பாதம்.

---*---

## (க) புருஷார்த்தாதிகரணம்.

---

புருஷார்த்தோऽத: ஶப்தாதிதி பாதராயண: (ங. ச. க)

**(சகக) அங்கிருந்து புருஷார்த்தம் (எய்துகின்றது), சுருதியுண்மையான்; இங்ஙனம் பாதராயணர் (கூறுகின்றனர்).**

*மூந்திய பாதத்திலே பரவித்தியாப்பிரகாரம் கூறப்பட்டது. ஈண்டு வித்தைக்கு உடன்றுணையாயுள்ள ஆச்சிரமதருமாதிகளை நிரூபிக்கும்பொருட்டு ஞானத்தினுலேதான் புருஷார்த்தம் என்று (சூத்திரகாரர்) காண்பிப்பாராயினர்.*

ப்ரஹ்மவிதாப்நோதி பரம் (தைத். உ. க)

*"பிரமத்தை அறிபவன் பரமானந்தத்தை அடைகின்றான்"*

ஜ்ஞாத்வா ஶிவம் ஶாந்திமத்யந்தமேதி (சுவே. ச. கச)

*"சிவத்தை அறிந்து அத்தியந்த உபசாந்தியை அடைகின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளாற் புருஷார்த்தம் ஞானத்தினுலேதான் எய்துகின்றதெனப் பகவானுகிய பாதராயணர் கொள்கின்றனர்.*

*சுருதி இருபிரகாரமாகக் காணப்படுதலின், அது கூடுமா? கூடாதா? என்பது சந்தேகம்.* (க)

(பூருவபக்ஷம்) வருமாறு.

ஶேஷத்வாத்புருஷார்த்தவாதோ யதாந்யேஷ்விதி ஜைமினி: (ங. ச. உ)

**(சஉ0) சேஷமுண்மையான், பிறவற்றிலே போலப் புருஷனைக்குறித்து (அது) அர்த்தவாதம்; இங்ஙனம் சைமினி கொள்கின்றனர்.**

*ஞானத்தினுற் புருஷார்த்தமில்லை; எதனுல்,*

தத்த்வமஸி (சாங். சு. அ. எ)

*"அது நீயாகின்றனை" என்றற்றொடக்கத்த சாமானுதிகரண (வாக்கியங்களாற்) கர்மங்களிற் கர்த்தாவாயுள்ளவனே பிரமமாம் என அறியப்படுதலான்; அந்த ஞானம் அதற்குச் சம்ஸ்காரமாய்க் கன்மத்துக்குச் சேஷமாயிருத்தலான். (ஞானத்துக்குப்) பலம் கூறுஞ் சுருதி (பூருவமீமாஞ்சை, ச. ங. க-ஆம் சூத்திர நியாயத்தினுல்) அர்த்தவாதமே. ஆகலின், புருஷார்த்தம் ஞானத்தினுல் எய்தவில்லை என்று சைமினியாசாரியர் கொள்கின்றனர்.* (உ)

ஆசாரதர்சநாத் (ரு. ச. ரு)

, (சஉக) (அது) ஆசாரமாகக் காணப்படலான்

(அதுபற்றி) ஆசாரமும் காணப்படுகின்றது.

யக்ஷ்யமாணோ வை பகவந்தோ(அ)ஹமஸ்மி (சாந். ரு. கக. ரு)

"பகவான்களே! நான் யஞ்ஞஞ் செய்யப்போகின்றேன்" என்று பிர மத்தை அறிந்த அசுவபதி கேகயர் என்பார் கூறுகின்றனர் என்பதினுற் கேகயர் முதலாகிய பிரமவித்துக்களுக்கும் கன்மம் பிரதானமாகப் புலப்படு கின்றது. அதனுலும், ஞானம் கன்மத்துக்கு அங்கமே. (ரு)

தச்ச்ருதே: (ரு. ச. ச)

(சஉஉ) அதற்குச் சுருதியுண்மையான்.

யதேவ வித்யயா கரோதி (சாந். க. க. க0)

"ஞானத்தோடு ஒருவன் எதனைச் செய்கின்ருனே" என்னுஞ் சுருதி கொண்டே ஞானம் கன்மத்துக்கு அங்கமாகக் கூறப்படுதலின், கன்மத் துக்கு (ஞானம்) அங்கம். எவன் இதனைச் செய்கின்ருனே, அது ஞானத் தோடு செய்யப்படுகின்றதென்பதே சுருதியர்த்தம். (ச)

ஸமந்வாரம்பணாத் (ரு. ச. ரு)

(சஉரு) ஒன்று சேர்ந்திருத்தலான்.

தம் வித்யாகர்மணீ ஸமந்வாரபேதே (பிரு. சா. ச. உ)

"அவனை ஞானமும் கன்மமுந் தழுவுகின்றன" என்னுஞ் சுருதியினுல் வித்தையும் கன்மமும் ஒரே புருஷனிடத்திற் சேர்ந்திருப்பனவாகக் காணப் படுகின்றது. ஆதலினுலும், ஞானம் கன்மத்துக்கு அங்கமே. (ரு)

தத்வதோ விதாநாத் (ரு. ச. சா)

(சஉச) அதனை (ஞானத்தை) உடையவனுக்கு விதி யுண்மையான்.

ஆசார்யகுலாத்வேதமதீத்ய யதாவிதாநம் குரோ: கர்மாதிசேஷேணாபிஸமாவ்ருத்ய குடும்பே சுசௌ தேசே ஸ்வாத்யாயமதீயாநோ தார்மிகாந்விதயந் (சாந். அ. கரு. க)

"விதிப்பிரகாரம் ஆசாரியர் குலத்திலே வேதாத்தியயனஞ் செய்து குரு வுக்குச் செயப்படும் பணிவிடையினின்று நீங்கி, சுசிஸ்தானமாயுள்ள குடும் பத்திலே வேதாத்தியயனஞ் செய்து கொண்டு சற்புத்திரரைப் பெற்று" என்றற்ருெடக்கத்த சுருதியினுல், அர்த்த ஞானம் வரையும் வேதத்தைப் படிப்பவனுக்குக் கன்மம் விதிக்கப்பட்டிருக்கின்றது. அதனுலும், ஞானம் கன்மத்துக்கு அங்கமாம். (சா)

நியோகஃ (௩. ௪. ௭)

(௪௨௫) நியமமுண்மையான்.

குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச்சதஸமா: (ஈசா. ௨)

"ஈண்டுக் கன்மங்கள் செய்துகொண்டே ஒருவன் நூறு வருஷம் சீவிக்க விரும்பவேண்டும்" எனப் (பரம) ஆன்மாவை அறிந்தவன் கன்மங்களுக்குத் தன் ஆயுசைச் செலுத்தவேண்டும் என்று நேரே நியமிக்கப்பட்டிருக்கின்றது. இதனாலும், ஞானம் கன்மத்துக்கு அங்கமாம். ஆகலின், புருஷார்த்தம் இன்றாமெனின், (௭)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

அதிகோபதேஶாத்து பாதராயணஸ்யைவம் தத்தர்ஶநாத்| (௩. ௪. ௮)

(௪௨௬) அதிகரை உபதேசித்தமையாற் பாதராயணரது (கருத்து உறுதியானது); அது காணப்படுகின்றமையான்.

ஞானம் கன்மத்துக்கு அங்கமன்று. பின்னையோ, ஞானத்தினாலேதான் புருஷார்த்தம் என்னும் பாதராயணர் மதமே யுக்தம்; கர்த்தாவாகிய பிரத்தியக்கான்மாவுக்கு வேறாயுள்ளதே அறியற்பாலதெனக் கூறப்படலான்.

பஹுஸ்யாம் ப்ரஜாயேய (சாந். ௬. ௨. ௩)

"நான் அநேகமாக ஆவேனாக"

ஸ காரணம் கரணாதிபாதிப: (சுவே. ௬. ௯)

"அவர் காரணம், கரணங்களின் அதிபர்க்கு அதிபதி"

விஶ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௮)

"விசுவாதிகராகிய உருத்திரர் மகர்ஷி" என்றற்றொடக்கத்த வாக்கியங்களில் அறியற்பாலதாகிய பிரமத்துக்கு ஆதிக்கியம் காணப்படுகின்றது. ஆகலின், ஞானம் கன்மத்துக்கு அங்கமன்று. (௮)

ஆசாரம் காட்டுகின்றதென்றமைபற்றிச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

துல்யந்து தர்ஶநம் (௩. ௪. ௯)

(௪௨௭) ஆயின் துல்லியமாயுள்ளது சுருதி.

கேவலம் கன்மத்துக்கன்றி ஞானத்துக்கே பிரதானமென்று ஆசாரமுந் துல்லியமாய்க் காட்டுகின்றது.

ஸதஹஸ்ம வை தத்விதாம்ஸ ஆஹுர்ருஷய: காவஷேயா: கிம் ஆர்த்யா அத்யேஷ்யாமஹே கிமர்த்யா வயம் யக்ஷ்யாமஹே கிம் ப்ரஜயா கரிஷ்யாம:|

"அவரை அறிந்த காவஷேய விருஷிகள் இதனைக் கூறினர்:— எதற்காக நாங்கள் படிப்பேம்? எதற்காக யாகஞ் செய்வேம்? சந்ததியைக் கொண்டு யாது செய்வேம்?" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே பிரமத்தை அறிந்தவர்களுக்குக் கன்மத் தியாகம் காணப்படுகின்றதன்றோ. பலத்தை விரும்பாது செய்யும் கன்மம் ஞானத்துக்கு அங்கமென அநுட்டித்து, பலத்தை நோக்கிச் செய்யும் கன்மத்தை ஒழித்தல் வேண்டும் எனல் விரோதமின்மையான், கன்மமே ஞானத்துக்கு அங்கம் என்றமைகொண்டு ஞானம் பிரதானமே. (௯)

யதேவ வித்யயா (சாந். ௧. ௧. ௰)

"எதனை ஞானத்தோடு (செய்கின்றானோ)" என்னுஞ் சுருதிபற்றிச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ஸவாவர்த்திரகீ (ங. ச. ௰)

(சூஉஅ) எல்லாவற்றையுமின்று.

யதேவ வித்யயா கரோதி (சாந். ௧. ௧. ௰)

"எதனை ஒருவன் ஞானத்தோடு செய்கின்றானோ" என்னுஞ் சுருதியினால், வித்தையானது (கர்மாங்கமென்று) எல்லாவற்றையும் (எல்லாவித்தையையும்) கூறவில்லை; பிரசித்தமாயுள்ள வித்தையைப்பற்றி (அச்சுருதி) யுண்மையான்; பிரசித்தமாயுள்ளதும் உற்கீதவித்தையைப் பற்றியதே.

யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம்|

(சாந். ௧. ௧. ௰)

"எதனை ஒருவன் ஞானத்தோடு செய்கின்றானோ, அதுதான் அதிவீரியமுடைத்து" என்னுஞ் சுருதியினால், பிரகிருத உற்கீத வித்தையானது தன்னோடியைந்த கன்மத்தை அதிவீரியமுடையதாகச் செய்தற்குச் சாதனமாயுள்ளது என்று விதிக்கப்படுகின்றது. ஆகலின், ஞானம் கன்மத்துக்கு அங்கமாகவில்லை.

தம் வித்யாகர்மணீ (பிரு. ௬. ௪. ௨)

"அவனை ஞானமும் கன்மமுந் (தழுவுகின்றன)" என்னுஞ் சுருதிபற்றிச் சூத்திரகாரர் சொல்கின்றனர். (௰)

விபாகஶ்ஶதவத் (ங. ச. ௧௧)

(௪௨௧) பிரிவு நூற்றிற் போல.

விதுாகமேணீ ஸமநாரமெ‌ஹெதெ (பிரு. ௬. ௪. ௨)

"(அவனை) ஞானமும் கன்மமுந் தழுவுகின்றன" என்றவிடத்து, ஞானமும் கன்மமும் வெவ்வேறு பயனைக் கொடுப்பனவாக, "ஞானம் தன் பயனைக் கொடுப்பதற்கு (ஆன்மாவைச்) சேர்கின்றது; கன்மந் தன் பயனைக் கொடுப்பதற்கு (ஆன்மாவைச்) சேர்கின்றது எனப் பிரிவு எய்துகின்றது; நிலத்தையும் இரத்தினத்தையும் விற்றமையால் இருநூறு (கிடைத்தது) என்றவிடத்து, நிலத்துக்கு நூறும் இரத்தினத்துக்கு நூறுமாம் என ஓர் விபாகம் எய்துவது போல. (௧௧)

கஊயநமாத்ரவதஃ (௩. ௪. ௧௨)

(௪௩௦) அத்தியயனமாத்திரமுடையனுக்கு.

வெஉமயீதூ

"வேதாத்தியயனஞ் செய்து" என்னுஞ் சுருதி அத்தியயனமாத்திரமுடையவனுக்கே கன்மத்தை விதித்தலால், ஞானம் கன்மத்துக்கு அங்கமன்று. அத்தியயனவிதியும் வேதத்தைப் படித்தலிலேமாத்திரம் முற்றுகின்றது. (இந்த விதியை) அர்த்தஞானம் வரையும் கொண்டாலும், வித்தை என்பது அதற்கு வேறுபட்டதாயிருக்கின்றது. "அவன் உபாசிக்க" என்னுமிடத்து விதிக்கப்பட்ட உபாசனையானது ஒன்றைப்பற்றி அன்பினுலாகும் ஆவிருத்தியின் மேற்று. ஆகலின், இது எவ்விடத்தும் அங்கமாகாது. (௧௨)

நாவிஶெஷாத் (௩. ௪. ௧௩)

(௪௩௧) (அங்ஙனம்) இல்லை, விசேஷமின்மையான்.

குவனெனவெஹ கமாணி (ஈசா. ௨)

"ஈண்டுக் கன்மங்களைச் செய்துகொண்டே" என்னுஞ் சுருதியில், வித்துவானுடைய சீவியகாலமுழுமையும் சுவதந்திர கன்மத்துக்காகச் செலுத்தப்படல் வேண்டும் என்பதற்கு விசேஷ ஏது யாதும் காணப்படவில்லை.

௦ஶாவாஸுஇஉ ஸவவஂ (ஈசா. ௧)

"ஈசராலே இவையெல்லாம் காக்கப்படுகின்றன" என்னும் வித்தியாப்பிரகரணத்தினுலும் ஞானத்துக்கு அங்கமாயுள்ளது இந்தக் கன்மம் என அறியப்படுகின்றது. ஆகலின், ஞானம் கன்மத்துக்கு அங்கமன்று. (௧௩)

ஸ்துதயெநுமதிவா (௩. ௪. ௧௪)

(௪௩௨) இன்றேல், (ஞானத்தின்) ஸ்துதிக்காகஅநுஞ்ஞை.

எப்போதும் கன்மங்களைச் செய்தாலும், ஞான மான்மியம்பற்றி அவைகளாற் றொடக்குறுவானல்லன் என்பது வாக்கியசேஷம். ஆகலின், ஞானமே பிரதானம். (கச)

காமகாரேணசைகே (ந. ச. கரு)

(சநந) இச்சை காரணவாயிலாகச் சிலரும் (கன்மத்தை விடவேண்டும் என்பர்).

கிம் ப்ரஜயா கரிஷ்யாம: (பிரு. சு. ச. உஉ)

"புதல்வரைக்கொண்டு யாது செய்வேம்" என்றற்றொடக்கத்தவற்றால், இச்சை மிகுதியினாற் கிரகஸ்தாச்சிரமத்தை வித்துவான் ஒழிக்கலாம் எனச் சிலர் சொல்லுவர். ஆதலினாலும், ஞானம் பிரதானமாகத் தோன்றுகின்றது. (கரு)

உபமர்த்தம் (ந. ச. கசு)

(சநச) அழிவும்.

க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்ருஷ்டே பராவரே।

(முண். உ. உ. அ)

"உயர்வும் தாழ்வுமாயுள்ள அவர் காணப்படுங்கால், அவனுடைய கன்மங்களும் அழிந்துபோகின்றன" என்னுஞ் சுருதி பற்றி, ஞானத்தினால் எல்லாக் கன்மங்களும் அழிகின்றன எனச் சிலர் படிக்கின்றனர். ஆகலின், கன்மம் பிரதானமன்று. (கசு)

ஊர்த்வரேதஸ்ஸு ச ஶப்தே ஹி (ந. ச. கள)

(சநரு) (ஞானம்) ஊர்த்துவரேதசுடையாரிடத்துக் (காணப்படுகின்றது); சுருதியினுமன்றோ (அவை கூறப்படுகின்றன).

ஊர்த்துவரேதசையுடைய ஆச்சிரமிகளினும் ஞானம் காணப்படலானும், அவருக்கு அக்கினி ஹோத்திரமுதலிய செய்யக் கூடாமையானும் ஞானம் கன்மத்துக்கு அங்கமாகாது. அங்ஙனம்

த்ரயோ தர்மஸ்கந்தா: (சாந். உ. உந. க)

"மூன்று தரும ஸ்கந்தங்கள்" என வேதத்திலே தருமத்தைப் பற்றிய மூவகை ஆச்சிரமங்களே கூறப்படுகின்றன. ஆகலின், ஞானந்தான் புருஷார்த்த ஹேதுவாய்ப் பிரதானமாகிப் பலத்தை நோக்காத விகிதகன்மங்களைத் தனக்கு அங்கமாகக்கொண்டுளதாம் என்று கூறுவதே முடிவு. (கள)

## (உ) பராமரிசாதிகரணம்.

---

பராமர்ஶம் ஜைமிநிரசோதநா சாபவததி ஹி (ந. ச. கஅ)

(சநசு) விதியின்மையாற் பராமரிசம் (என்று) ஜைமினி (கொள்கின்றனர்); சுருதியும் மறுக்கின்றதன்றோ.

"மூன்று தரும ஸ்கந்தங்கள்" என்னுஞ் சுருதியினால் மூவகை ஆச்சிரமங்களே தர்மத்துக்கு ஆதாரமென மேலே அதிகரணத்திற் கூறப்பட்டது. ஆகவின், நான்காவது ஆச்சிரமம் உளது என்பது பற்றிச் சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

த்ரயோ தர்மஸ்கந்தா: (சாந். உ. உந. க)

"மூன்று தரும ஸ்கந்தங்கள்" என்றற்றொடக்கத்தவற்றிலே நான்காவது ஆச்சிரமவிதியின்மையான்,

ஏதமேவ ப்ரவ்ராஜிநோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி।

(பிரு. சு. ச. உஉ)

"அந்தப் (பிரம) லோகத்தை விருப்பித் துறவிகள் தங்கள் வீடுகளைத் துறக்கின்றார்கள்" என்றற்றொடக்கத்த சுருதியினாற் கூறப்பட்ட நான்காவது ஆச்சிரமவசனம் உபாசனையின் ஸ்துத்தியர்த்தவாதமே என்று சைமினி கொள்கின்றனர்.

வீரஹா வா ஏஷ தேவாநாம் யோऽக்நிமுத்வாஸயதே।

(யசுர். வே. க. ரு. உ. ரு)

"அக்கினியைத் தவிர்ப்பவன் தேவர்களின் புதல்வனைக் கொல்பவனே" எனச் சுருதியும் நான்காவது ஆச்சிரமத்தைத் தவிர்க்கின்றது; அக்கினி கோத்திரத்தை விடுதலாற் பெருந் தீமை விளைகின்றது. அதுபற்றி அதனை விடுதலால் எந்த ஆச்சிரமத்தையும் பிரவேசிக்கக் கூடாதெனக் கொள்ளப் படுமாம் எனின், (கஅ)

(சித்தாந்தம்) வருமாறு.

அநுஷ்டேயம் பாதராயண: ஸாம்யஶ்ருதே: (ந. ச. கசு)

(சநஎ) பாதராயணர் (கொள்ளுமாறு) அநுஷ்டிக்கற்பாற்று; சுருதி சமானமாகச் (சுட்டுதலான்).

கிரகஸ்தாச்சிரமமுதலியபோல, மற்ற ஆச்சிரமமும் அநுஷ்டிக்கற்பாற்றென்பது பகவானாகிய பாதராயணர் மதம்.

த்ரயோ தர்ம ஸ்கந்தா: (சாந். உ. உந. க)

ஸ்ரீ த்ரயோ தர்மஸ்கந்தா: ... ஏதமேவ ப்ரவ்ராஜினோ லோகமிச்சந்த: ப்ரவ்ரஜந்தி।

(பிரு. சு. ௪. ௨௨)

"மூன்று தருமஸ்கந்தங்கள்; அந்தப் (பிரம) லோகத்தை விரும்பித் துறவிகள் தங்கள் வீடுகளைத் துறக்கின்றார்கள்" எனச் சுருதியும் ஆச்சிரமங்கள் அனைத்தையும் சமமாகக் கூறுகின்றமையால், அக்கினியைத் தவிர்க்கும் தோஷம் கிரகஸ்தாச்சிரமவிஷயத்திலேதான். ஆகலின், நான்காவது ஆச்சிரம தருமம் உள்ளது. (௧௧)

விதிர்வா தாரணவத் (௩. ௪. ௨௰)

(௪௩அ) இன்றேல் ஒரு விதி; கொண்டு போதலிற் போல.

உபரி ஹி தேவேப்யோ தாரயதி।

"தேவர்களுக்காக அவன் அதனை மேலே கொண்டுபோகின்றான்" என்று, எந்தவிடத்தினும் விதிக்கப்படாதிருக்க, (தேவர்களுக்கு மேலே இந்தனத்தைக் கொண்டுபோதல்) விதிக்கப்பட்டிருத்தல் போல, இவ்விஷயத்து விதியுமாம். இன்றேல்

ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் க்ருஹீ வநீ பூத்வா ப்ரவ்ரஜேத் (ஜாபாலம்)

"பிரமசரியத்தை முடித்துக் கிரகஸ்தாச்சிரமியாதல்வேண்டும்; கிரகஸ்தனாயாவது வானப்பிரஸ்தனாயாவது இருந்து துறவு செய்தல் வேண்டும்" என ஜாபாலசுருதியிற் பிரத்தியக்ஷமாக விதி இருக்கின்றது. இந்தக் கிரமத்தில் நியமமில்லை;

உத்ஸந்நாக்நிரநக்நிகோ வா யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத் (ஜாபாலம்)

"அக்கினியை விட்டேனும், அக்கினியை மூட்டாதேனும், எந்தத் தினத்தில் விரத்தியுண்டாயிற்றோ, அந்தத் தினத்திலே துறவு செய்க" எனச் சுருதியுண்மையான். முற் சென்னங்களில் ஈட்டிய புண்ணியபரிபாகத்தினால், அந்தக்கரணங்கள் சுத்தமாயிருக்கப்பெற்ற ஒருவன் பிரமசரியத்தில் இருந்தவாறே துறவு செய்யலாம்.

ருணானி த்ரீண்யபாக்ருத்ய மநோ மோக்ஷே நிவேசயேத்।
அநபாக்ருத்ய மோக்ஷம் து ஸேவமாநோ வ்ரஜத்யத:।

(மனுஸ்மிருதி. சு. ௩௫)

"முக்கடன்களையும் இறுத்தே ஒருவன் மனசை முத்திக்குச் செலுத்தல் வேண்டும்; கடன்களை இறுக்காது மோக்ஷத்தை விரும்புவோன் அதோ

கதி அடைகின்றனன்” என்னும் வாக்கியம் உலகத்தை வெறுக்காதோன் மேற்று.

வீரஹா வா ஏஷ தேவாநாம் யோऽக்நிமுத்வாஸயதே।

(யசுர். வே. க. ரு. உ. ரு)

“அக்கினியை விடுப்பவன் தேவர்களின் புதல்வனைக் கொல்பவனே” என அக்கினியை விடுத்தல் கூடாதென நிஷேதித்தலான், துறவை அடைதல் பிரமசரியத்தினின்றே நிகழ்தல்வேண்டும் என்றும், கிரகஸ்தாச்சிரமத்திற் புகுந்தபின் அன்றும் என்றும் சிலர் கூறுவர். அங்ஙனமாயின்,

வநீ பூத்வா ப்ரவ்ரஜேத் (ஜாபாலம்)

“வானப்பிரஸ்தனாகி அவன் துறவு செய்க”

உத்ஸந்நாக்நிரநக்நிகோ வா யதஹரேவ விரஜேத்ததஹரேவ ப்ரவ்ரஜேத் (ஜாபாலம்)

“அக்கினியை விட்டேனும், அக்கினியை மூட்டாதேனும், எந்தத் தினத்தில் விரத்தி யுண்டாயிற்றோ, அந்தத் தினத்திலே துறவு செய்க” என்னும் விதிகள் வியர்த்தமாய்விடும். ஆகலின், பிரமசரியத்திருந்துதான், வானப்பிரஸ்தத்தி லிருந்துதான் துறவு செயல் வேண்டும் என்று நிர்ப்பந்தமில்லை. அக்கினி கொண்டும்கொள்ளாமலும் உள்ள ஆச்சிரமம் இரண்டேயாம்; அவற்றுள்ளே பிரமசாரியும் துறவியும் அக்கினி கொள்ளாதவராவர்; கிரகஸ்தனும் வானப் பிரஸ்தனும் அக்கினிகொள்பவராவர்; அக்கினியை மூட்டிப் பின் அதனை விடுத்துத் துறப்பவனினும் பிரமசரியத்தினின்றவாறு துறப்பதுதான் முக் கியம் என்பதே பிரமசரியத்தினின்றே துறக்கவேண்டுமென்பவரின் அபிப் பிராயம். இங்ஙனம் பொருள் கொள்ளாக்காற் சுருதி விரோதமுறும். ஆக லின், எல்லா ஆச்சிரமதருமங்களும் சித்தித்தன. (௨௦)

## (௬) ஸ்துதிமாத்திராதிகரணம்.

ஸ்துதிமாத்ரமுபாதாநாதிதி சேந்நாபூர்வத்வாத்।

(௬. ௪. ௨௧)

(௪௬௯) (யஞ்ஞ கன்மங்களை) யுற்றிருத்தலான் அவை ஸ்துதி மாத்திரம் எனின்; அன்று, அவை புதியவாதலின் (அபூர்வமாதலின்).

ஓமித்யேததக்ஷரமுத்கீதமுபாஸீத (சாந். க. க. க)

“ஒருவன் உற்கீதம் எனப்படும் ஓம் என்னும் அக்ஷரத்தைத் தியானிக்க” என்று தொடங்கி,

ஸ ஷஷரஸாநாம் ரஸதம: பரம: பரார்த்யோ ஷ்டமோ யதுத்கீத: (சாந். க. க. ந)

"அந்த உற்கீதம் இரசங்களுளெல்லாஞ் உத்தமமாயும், எட்டாவதாகிய உயர்ந்த தானத்தைப்பற்றி உயர்ந்ததாயும்" எனப் போந்த இவ்வியல்பினவாய உதாகரணங்களில், உற்கீதமுதலியவற்றின் தியானம் இரசங்களுளெல்லாஞ் சிறந்ததாக விதிக்கப்படுகின்றதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இரசங்களுளெல்லாம் சிறந்ததாக உற்கீதமுதலியவற்றின் தியானம் விதிக்கப்படவில்லை. ஆயின்,

இயமேவ ஜுஹூ: ஸ்வர்கோ லோக ஆஹவநீய: |

"இதுதான் (பூமிதான்) சட்டுவம்; சுவர்க்கலோகம் ஆகவநீயம்" என்னும் வாக்கியங்களிற்போல, யஞ்ஞகன்மங்களுக்கு அங்கங்களாகிய உற்கீதமுதலியவற்றைக் குறித்து, இரசத்தில் இரசமாகச் சிறந்தது என்றதும் ஸ்துதிமாத்திரமாம் எனின்,

(சித்தாந்தம்) அன்று; அவை அபூர்வமாதலின். அவை ஸ்துதிமாத்திரங்களன்று; பின் இரசங்களுளெல்லாஞ் சிறந்ததாகவுரைத்த உற்கீதாதி தியானம் விதிக்கப்பட்டதொன்றே; அவை அபூர்வமாதலின். ஆகலின், சட்டுவமுதலியவாகக் கூறப்பட்ட நியாயம் ஈண்டு அடாது; சட்டுவமுதலியவற்றிற் போல உற்கீதாதி விதி சந்நிதியில் இல்லையாதலின். ஆகலின், இரசங்களுளெல்லாம் இரசமாகிய உற்கீதமுதலியவற்றின் தியானம் விதிக்கப்பட்டதேயாம். (உக)

ஶப்தாச்ச (ந. ச. உஉ)

(சசO) விதிசப்தமுண்மையானும்.

உத்கீதம் உபாஸீத (சாந். க. க. க)

"ஒருவன் உற்கீதத்தைத் தியானிக்க" என்னுமிடத்தில் விதிசப்தம் கேட்கப்படுகின்றது. இந்நியாயத்தினாலும் இரசங்களுளெல்லாஞ் சிறந்ததாக உற்கீத முதலியவற்றின் தியானத்துக்கு ஓர் விதி உண்டு. (உஉ)

## (ச) பாரிப்பிலவாதிகரணம்.

---

பாரிப்லவார்தா இதி சேந்ந விஶேஷிதத்வாத் (ந. ச. உந)

(சசக) பாரிப்பிலவ உபயோகத்துக்காக (அவைகள்) (உரைக்கப்படுகின்றன) எனின், அன்று; அப்படிப்பட்டன விசேஷிக்கப்படுதலின்.

ப்ரதர்தநோ ஹ வை தைவோதாஸிரிந்த்ரஸ்ய ப்ரியம் தாமோ பஜகாம யுத்தேந பௌருஷேண ச (கௌஷீ. ந. க)

"திவோதாசன் குமாரனாகிய பிரதர்த்தனன் என்பான் யுத்தம் பௌருஷம் என்பன காரணமாக உண்மையாய் இந்திரனுடைய இனிய இல்லத்துக்கு வந்தான்" என உபநிடதங்களில் அந்தந்த வித்தைகளின் முதற்கண்ணே கதைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவை பாரிப்பிலவத்தின் பொருட்டா? இன்றேல் உபாசனா ஸ்துதிபொருட்டா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பாரிப்பிலவத்தின் பொருட்டே அசுவமேதயாகத்திலே அரசனைக் குடும்பத்தோடிருக்கச் செய்து, அத்துவரியுவினாலே அவன் சமுகத்தில் வைதிகக் கதைகள் கூறற்பாலன.

வாரிப்லவமாசக்ஷீத (ஆசுவலாயன சிரௌதசூத்திரம். ௧௦. ௬. ௧௦)

"அவன் பாரிப்பிலவத்தைச் சொல்க" என்னும் விதியினாற் பாரிப்பிலவம் என்னும் கர்மம் விதிக்கப்பட்டது;

ஸவாண்யாக்யாநாநி வாரிப்லவெ ஸாஂஸந்தி।

(ஆசுவலாயன சிரௌதசூத்திரம். ௧௦. ௬. ௧௦)

"பாரிப்பிலவத்தில் எல்லாக் கதைகளையும் அவர்கள் கூறுகின்றனர்" எனக் கூறப்படலான், உபநிடத ஆரம்பத்திலே நேரும் கதைகள் பாரிப்பிலவத்தின் பொருட்டேயாம் எனின்,

(சித்தாந்தம்) "விசேடிக்கப்படுதலின்" (என்று சூத்திரகாரர் கூறுகின்றமையின்) அவைகள் பாரிப்பிலவத்தின் பொருட்டன்று;

ப்ரயமெஹநி மநுவைவஸ்வதோ ராஜா த்விதீயெஹநி யமோ வைவஸ்வதோ ராஜா (ஆசுவலாயன சிரௌத சூத்திரம். ௧௦. ௭. ௧, ௨)

"முதற்றினத்திலே விவஸ்வான் குமாரனாகிய மனு என்பான் அரசனாயிருந்தமையும், இரண்டாம் தினத்தில் விவஸ்வான்குமாரனாகிய யமன் அரசனாயிருந்தமையும் (கூறப்படல் வேண்டும்)" என்றற்றொடக்கத்தவற்றால், பாரிப்பிலவத்துக்குரிய கதைகள் விசேடிக்கப்பட்டமையான். (௨௩)

உபநிடதங்களிலே நேரும் கதைகள் அடுத்துப்போதரும் உபாசனாவிதிகளோடு ஏகவாக்கியமாயிருத்தலான், அவை உபாசனைகளைத் துதித்தலின் பொருட்டாம் என்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

ததாசைகவாக்யதோவவஂயாச (௩. ௪. ௨௪)

(௬௪௨) **அந்தப் பிரகாரம் அவை ஏகவாக்கியமாகப் பொருத்தப்பட்டிருத்தலான்.**

ஸோ ரோதீச் (யசுர். வே. ௧. ௫. ௧. ௧)

"அவன் அழுதான்" என்றற்றொடக்கத்த கதைகள் எங்ஙனம் யஞ்ஞகன்ம விதிகளோடு ஒன்றாய் இயைந்து நிற்கின்றனவோ, அங்ஙனம் இக்கதைகளும்

உபாசனுவிதிகளோடு ஏகமாய் இயைந்து உபாசனைகளைத் துதிக்கும்பொருட்டே உள்ளன. (உச)

## (௫) அக்கினீந்தநாத்தியதிகரணம்.

ஊத ஸவவாதீநெ௰ய நாநூ௱நவெக்ஷா (ந. ச. உ௫)

(சசங) ஆகலின், அக்கினி யாதான முதலியவற்றுக்கு அபேகைஷ இன்று.

மேலை அதிகரணத்தில் இறுதி ஆச்சிரமமுளதாகக் கூறப்பட்டது.

வித்தைக்குச் சாதனமாக அக்கினி யாதானம் ஆவசியகமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) கன்மம் ஞானத்துக்கு அங்கமாக விதிக்கப்பட்டமையான், வித்தையையுடைய துறவிகளும் வித்தைக்கு அங்கமாக யஞ்ஞாக்கினி முதலியவற்றை அநுட்டித்தல் சால்பாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அவர்களுடைய வித்தையானது யாகாக்கினி யாதான முதலியவற்றை அபேக்ஷிக்கவில்லை;

ஊத ெவ ப்ரவ்ராஜிெநா லோகமிஜ்ஜந்தஃ ப்ரவ்ரஜந்தி।
(பிரு. சு. ச. உஉ)

"அந்தப் (பிரம) லோகத்தை விரும்பித்துறவிகள் வீடுகளைத் துறக்கின்றார்கள்" என்றற்றொடக்கத்த சுருதியானது கன்மத்தை விடுத்தே வித்தையைப் பெற்றார் என அறிவுறுத்துகின்றமையின். ஆகலின், தமது ஆச்சிரமத்துக்குரிய தருமங்களைச் செய்வதில் அபேகைஷயுடையது அவர்கள் வித்தை; அவர்களுக்கு அக்கினியை வளர்த்தன்முதலிய பொருந்தாமையின். (உ௫)

## (சு) சர்வாபேக்ஷாதிகரணம்.

ஸவ௱ாவெக்ஷா ச யஜ்ஞாதி ஶ்ருதெ ரஶ்வவத (ந. ச. உசு)

(சசச) **யார்க்கும் அபேகைஷ உண்டு; யஞ்ஞ கன்மமுதலியவைகளை விதிக்கும் சுருதியுண்மையான், குதிரை விஷயத்திற் போல.**

மேலை அதிகாணத்தில் இறுதி ஆச்சிரமத்தார்க்குரிய வித்தைக்குப் பொருந்தாமையான், அது அக்கினி யாதானத்தை அபேக்ஷிக்கவில்லை என நிரூபிக்கப்பட்டது.

இப்போது கிரகஸ்தாச்சிரமவிஷயத்திலே வித்தை கன்மத்தை அபேக்ஷிக்கின்றதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இங்ஙனமாகக் கிரகஸ்தர் விஷயத்தினும் யஞ்ஞாக்கினி யாதானமாகிய கன்மத்தை வித்தை அபேக்ஷியாது என்பேம். அது அந்தி

யாசிரமிகள் விஷயத்திற் சேராமையான், கன்மம் வித்தைக்கு அங்கமாக மாட்டாது. ஐயத்துக்கிடனுடைய வித்தையானது தனக்கு அங்கமாயுள்ள கன்மத்தை அபேக்ஷிக்கும், அங்கியாதலின்; பிரயாஜைமுதலியன தரிசம் பூரணமாச முதலியவைகளுக்கு (உதவுதல்) போல என்பது அனுமானம். ஈண்டு அக்கினியாதான முதலிய கன்மம் வித்தைக்கு எங்ஙனம் அங்கமாகும்? பிரயாஜை முதலிய (தரிசத்துக்கு) உதவுதல் போல, (வித்தைக்குப்) பலோபகாரியாயுள்ளதா? இன்றேல் உமியைப்போக்குதன்முதலிய தரிசத்துக்கு உபகாரமாதல் போல (ஆதானம் வித்தைக்குச்) சொரூபோபகாரியாயுளதா? முதற்கட் கூறிய பிரகாரம் இருக்கமாட்டாது; கன்மத்தின்பயனுயிருப்பின், முத்தி அநித்தியமாய்விடும். பிந்தியதாயின் தரிசத்துக்கும் பிரயாஜைக்கும் அப்படிப்பட்ட சம்பந்தமில்லாமையால் திருஷ்டாந்தம் தவறுபடும். ஆகலின், கன்மம் ஞானத்துக்கு அங்கமாகாது. அதுபற்றிக் கிரகஸ்தர்விஷயத்தினும் ஞானமானது கன்மத்தை அபேக்ஷித்திலது எனின்,

(சித்தாந்தம்) யஞ்ஞகன்மங்களைச் செய்யவேண்டியவராகிய கிரகஸ்தர் விஷயத்திலே அக்கினிகோத்திரமுதலிய சமஸ்த கன்மங்களை ஞானம் அவாவிற்று;

தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா நாஶகேந (பிரு. சு. ச. உஉ)

"பிராமணர் வேதாத்தியயனத்தினாலும், யஞ்ஞத்தினாலும், தானத்தினாலும், தவத்தினாலும், விரதத்தினாலும் அவரைஅறிகின்றார்கள்" எனச் சுருதி கூறுதலானும், யாகாதிகளும் சிவபெருமானால் நியோகிக்கப்பட்டிருத்தலானுமாம். குதிரை கமனத்துக்குச் சாதனமாயிருந்தாலும், அது கமனத்துக்கு உடுப்பு முதலியவற்றை வேண்டிநிற்றல்போல, ஞானம் கன்மத்தை அபேக்ஷிக்கும். பலத்தை அபேக்ஷியாது செய்யப்படும் கன்மமானது ஞானத்துக்குச் சொரூப உபகாரமாகி அங்கமாயிருத்தலின், முத்திபலம் அந்தக் கன்மத்தினால் எய்தவில்லை. ஆனால் சாக்ஷாத்தாக ஞானபலமே மோக்ஷம்; ஆதலின், கிரகஸ்தர் விஷயத்தில் ஞானம் யஞ்ஞமுதலிய கன்மங்களை அபேக்ஷிக்கின்றது. எல்லா ஆச்சிரமிகளுக்கும் அவ்வவர் ஆச்சிரமத்துக்குரிய கன்மங்களோடு ஞானம் இசைந்திருக்கவேண்டும். ஆகலின், வித்தை கன்மத்தோடு சேர்ந்திருக்கவேண்டும் என்பது யுக்தம். (உசு)

## (எ) சமதமாத்தியதிகரணம்.

---

ஶமதமாத்யுபேதஸ்யாத் ததாபி து தத்விதே ஸ்ததங்கதயா தேஷாம் அவஶ்யாநுஷ்டேயத்வாத் (ந. ச. உஎ)

(௪௪௫) மேலும் (அவன்) சமம் தமமுதலியவற்றோடு இயைந்திருத்தல் வேண்டும்; அவைகள் விதிக்கப்பட்டபடி யானும், அதற்கு அங்கங்களாதல்பற்றி அவை அவசியம் அநுஷ்டிக்கப்படல்வேண்டுமாதலினாலும்.

ஶாந்தோ தாந்த உபரத ஸ்திதிக்ஷு ஸமாஹிதோ பூத்வாத்மந்யேவாத்மாநம் பஶ்யேத் (பிரு. ௬. ௪. ௨௩)

"சாந்தமும், தாந்தமும், உபரதியும், பொறுதியும் இயைந்தவனாய் அவன் ஆன்மாவில் (பரம) ஆன்மாவைப் பார்க்கவேண்டும்"

ஶ்ரத்தாபக்திஃத்யாநயோகாதவேஹி (கைவ)

"சிரத்தையினாலும் பக்தியினாலும் தியானத்தினாலும் நீ அறிதி" என்றற்றொடக்கத்த வாக்கியத்தினால், வித்தையானது சமை முதலிய சம்பத்தியை அபேக்ஷிப்பதாகக் கேட்கப்படுகின்றது.

கிரகஸ்தாச்சிரமிகளுக்குச் சமைமுதலிய சம்பத்தி எய்துமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) யஞ்ஞாதியோடியைந்தமையால் வெகுவியாபாரவியாகுலங்களையுடைய அவர்களுக்கு, அந்த உபரதிரூபமாயுள்ள சமதமாதிசம்பத்தி எய்தமாட்டாதெனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. கிரகஸ்தன் விஹிதகன்மங்களில் வியாபரித்துக்கொண்டிருப்பவனாயினும், நிஷித்தகாமியாதிகன்மங்களில் வியாபாரரஹிதனாய்ச் சாந்திமுதலியவற்றையுடையனாயிருத்தல்வேண்டும்;

ஶாந்தோ தாந்தஃ (பிரு. ௬. ௪. ௨௩)

"சாந்தம் தாந்த" முதலியவற்றானும்,

ஶ்ரத்தாபக்திஃத்யாநயோகா தவேஹி (கைவ)

"சிரத்தா பக்தி தியானயோகத்தினால் அறிகுதி" என்றற்றொடக்கத்தவற்றானும், சமைமுதலியன விதிக்கப்பட்டமையால், வித்தையை அடையும் பொருட்டு, அவை அங்கங்களாக அவசியம் கோடற்பாற்றுமாதலினாலுமாம். உள்ளுணர்ச்சிகளாகிய ராகத் துவேஷமுதலியவற்றை அடக்குதலே சமம்; விதிக்கப்படாத வியாபாரங்களிலிருந்து இந்திரியங்கள் அனைத்தையும் திருப்புவதே தமம்; நிஷித்தகாமிய கன்மவியாபாரத்திருந்து நீங்குதலே உபரதி; துவந்துவங்களைச் சகிப்பதே திதிக்ஷை; காமாதிதடைகளிலிருந்து நீங்கினவனாய்ப் பரத்தை நோக்குதலே சித்தத்தின் சமாதானம்; புருஷார்த்தமில்லாத சகல இதர சாஸ்திரங்களிலே பராமுகமாய்ப் பரவித்தியாமயமாகிய பரமான்ம தந்திர உபநிடத கோஷ்டியிலே மிகுந்த ஆசைகொண்டிருக்கின்ற சத்துவ

கலேயே சிரத்தை; சகல இதர தேவதா பூஜையிற் பற்றின்றி மூவித கரணங்களோடு அடையற்பாலதாய் விசிஷ்டமாயுள்ள அஷ்டாங்கங்களோடு இயைந்து சிவபெருமானுக்குத் தொண்டுசெய்தலாகிய வைதிகக் கிரியையே பக்தி; பரமானந்தாவேசமாகிய மகாமோக்ஷலட்சுமியைத் தரிசிக்கவேண்டும் என்னும் (ஆசையின்) வேகமே முமுட்சுத்துவம்; வைராக்கியமுடையனுய், இம்மை மறுமை இன்பங்களிலே நொதுமலனுய், நித்தியாநித்தியங்களை நிச்சயிக்கும் விவேகமுடையனுயுள்ள அவனுலே சமை தமை முதலியன அடைதல்வாயிலாக, இந்த மோக்ஷ இச்சை எய்துகின்றது. இந்த விவேகமுதல் முமுக்ஷுத்துவம் இறுதியாயுள்ள பரதருமங்கள் வித்தையின்பொருட்டு எல்லா ஆச்சிரமிகளாலும் விசேஷமாக அநுஷ்டிக்கற்பாலனவாம். (உள)

## (அ) சர்வாந்நாநுமத்யதிகரணம்.

---

ஸவ-ா்ஹா-நாநு௨ஜ்ஞு ஷ்ராணா-த்ய்யெ த்ஊ-நாக (ங. ச. உஅ)

(சசரு) பிராணனுக்கு மோசம் வருங்கால் எவ்வகை உணவுக்கும் அநுமதி உண்டு; அதற்குச் சுருதி காணப்படலான்.

நஹவா ஹஸ்ய விதி கிஞ நா நஷ்ஹவதி (சாந். ரு. உ.க)

"இதை அறிந்தவனுக்கு அன்னமாகாததொன்றுமில்லை" எனப் பிராணவித்தையிலே சுருதி கூறுகின்றது. இந்த வாக்கியம் பிராணவித்தையுடையானுக்கு எல்லா அன்னமும் (உண்ண) அநுமதி செய்யப்பட்டதாக அறிய வருகின்றது. இது நியாயமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வேறுவகையால் யாவர்க்கும் கிடைக்கற்பாலதாகிய போசனம் சுருதியில் விதிக்கப்படவேண்டியதின்மையின், அறியப்படாதனவாய்க் கிடந்த உணவுவகை அனைத்தையும் உண்ண அநுமதி செய்தலே ஈண்டு விதிக்கப்பட்டதாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. பிராணவித்தியாநிஷ்டனும் எக்காலத்தும் எல்லா அன்னத்தையும் உண்ணுதற்கு அனுமதி செய்யவில்லை; ஆனல் பிராணுபாயத்திலாம். அதிகசத்தியுடைய உஷஸ்தி பிரமத்தை அறிந்தானுயினும், பிராணுபாயகாலத்திலேதான் உச்சிஷ்டபோசனஞ் செய்ததாகச் சுருதி கூறுகின்றது.

மடீஹதேஷு குருஷ்வாடிக்யா ஸஹ ஜாயயோஷஸ்திஹ சாக்ராயண இப்யக்ராமே ப்ரத்ராணக உவாஸ| ஸ ஹேப்யம் குல்மாஷாந் வாதஞ்ம் விஷிகெ .தம் ஹோவாச| நேதோ ந்யே விக்யஞெ யச்சயெ ஜெ உபகிஹிதா ஜதி | ஹதேஷாம் மெ தேஹீதி ஹோவாச

தா நமெஷ்௦ ப்ரதெள ஹஸா நாவா ந கிஞ்சிஷ்டஂ ஜெயெஷ வீதஂ ஸ்யாதிதி ஹொவாச। நஸ்விதெதெ உபாதஷிஷா இதி நவா அஜீவிஷ்யமிமாநவாத்தி நிதி ஹொவாச। காமொ ம உதவாநமிதி (சாங். ௧. ௧௦. ௧)

"கன்மழைகளாற் குருதேசங்கள் அழியும்போது, உஷஸ்தி சாக்கிராயணர் என்பார் தம் கன்னிகையாகிய மனைவியோடு இப்பியகிராமத்தில் யாசகராய் வசித்தார்; ஓர் பிரபு பயறுண்பதைக் கண்டு, அவரை இவர் யாசித்தார்; அதற்குப் பிரபு சேஷமாயிருப்பனவேயன்றி வேறு அதிகம் இல்லை என்றார்; உஷஸ்தி அவற்றை உண்ணக்கொடும் என்றார்; அவர் அந்தப் பயற்றை அவர்க்குக் கொடுத்துப் பானஞ் செய்தற்கும் சிறிது இருக்கின்றதென்றார்; பின்னர் அதற்கு உஷஸ்தி நான் அதைக் குடித்தால் மற்றொருவனுற் குடித்து எஞ்சியதை நான் குடித்தேனாகி அசுத்தனாவேன் என்றார்; அதற்குப் பிரபு அந்தப் பயறுகளும் சேஷித்தனவன்றோ, அதனால் அவைகளும் அசுத்தமன்றோ என்றார்; அதற்கு உஷஸ்தி (அங்ஙனம்) அன்று, நான் அவற்றை உண்ணுவிடிற் சீவித்திருக்கமாட்டேன்; ஆனால் ஜலபானம் பண்ணுதல் இன்பமாத்திரமேயாம்" என்று சுருதியிற் கூறப்படுகின்றது. ஆகலின், பிராணன் அபாயத்திருக்கும்போதுதான் பரவித்தையுடையானும் எவ்வகையாகிய உணவையும் உண்ணலாம் என்று அநுமதி உண்டு. (உ௮)

அபாயாச்ச (௩. ௪. உ௯)

(௪௪௭) பாதை இன்மையானும்.

ஆஹாரஶுத்தௌ ஸத்வஶுத்தி: ஸத்வஶுத்தௌ த்ருவா ஸ்ம்ருதி: ஸ்ம்ருதிலம்பே ஸர்வக்ரந்தீநாம் விப்ரமோக்ஷ: (சாங். ௭. உ௬. உ)

"ஆகாரம் சுத்தமாயிருக்குங்காற் சத்துவசுத்தி உண்டாகின்றது; சத்துவசுத்தியாகுங்கால் உறுதியாகிய ஞாபகம் எய்துகின்றது; ஞாபகம் உறுதியாகுங்கால் எல்லாக் கட்டும் மோசனமாகின்றன" என்னுஞ் சுருதிவாயிலாக ஆஹாரசுத்திக்குப் பாதை (தடை)யாதுமின்மையானும், உயிர் சந்தேகத்துக் கிடமாயிருக்கும்போதுதான் எவ்வகை உணவுக்கும் அநுமதி (செயற்பாற்று). (உ௯)

அபி ச ஸ்மர்யதே (௩. ௪. ௩௦)

(௪௪௮) ஸ்மிருதியினுங் கூறப்படுகின்றது.

ப்ராணஸம்ஶயமாபந்நோ யோ(அ)ந்நமத்தி யதஸ்தத:।
லிப்யதே ந ஸ பாபேந பத்மபத்ரமிவாம்பஸா॥

"ஆன்மா அபாயத்திருக்கும்போது எவ்விடத்திருந்தேனும் அன்னத்தை ஒருவன் உண்ணுங்கால், அவன் தாமரையில் நீர்போலப் பாவத்தினற்றொடக்குண்ணான்" என ஸ்மிருதியிற் கூறப்படலான், சீவாபாயத்திலேதான்

எவ்வகை அன்னமும் (உண்ண) அநுமதி ஸ்மிருதியிற் கூறப்பட்டிருக்கின்றது. (௩0)

ஶப்3தா3ஶ்சாதோ(அ)காமகாரே (௩. ௪. ௩௧)

(௪௪௯) ஆகலின் இச்சித்தவாறு செய்தல் கூடாதெனச் சுருதியுண்மையானும்.

தஸ்மாத் ப்3ராஹ்மண: ஸுராம் ந பிபே3த்।

"ஆகலின், பிராமணன் சுராபானஞ் செய்யப்படாது" என்பதினால் ஆசை ஒழிக்கவேண்டுமென்பதுபற்றிச் சுருதியும் இருக்கின்றது. ஆகலின், பிராண சம்சயம் எய்துங் காலத்திலேதான் வித்துவானும் எவ்வகை உணவையும் உண்ணலாம் என்னும் அநுமதி (போதரும்). அஃதொழிந்து நிஷித்தாசரணஞ் செய்தாற் சிவபெருமானது ஆஞ்ஞைக்குத் துரோகியாவான் என்பது கருத்து. (௩௧)

## (௯) ஆச்சிரமகர்மாதிகரணம்.

---

விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி (௩. ௪. ௩௨)

(௪௫0) விதிக்கப்பட்டமையானும் ஆச்சிரமதருமங்களும் (கவனிக்கற்பாலன).

யாவஜ்ஜீவ மக்3நிஹோத்ரம் ஜுஹோதி।

"ஜீவபரியந்தம் அக்கினிகோத்திரத்தைச் செய்கின்றான்" என விதிக்கப்பட்டமையானும்,

யஜ்ஞேந தா3நேந (பிரு. ௬. ௪. ௨௨)

"யஞ்ஞத்தினாலும் தானத்தினாலும்" எனச் சுருதியானது வித்தையைத் தேடுதற்கு (அவை) சாதனமென்று கூறுதலானும், ஞானஹீனனாகிய கிரகஸ்தனுக்கு ஆச்சிரம கன்ம யாகமுதலியன அநுஷ்டிக்கற்பாலன எனப் பெறப்படுகின்றது. (௩௨)

ஸஹகாரித்வேந ச (௩. ௪. ௩௩)

(௪௫௧) உடந்தையாயிருத்தலானும்.

வித்தையுடையவன் விஷயத்தினும்,

வித்3யாஞ்சாவித்3யாஞ்ச (ஈசா. ௧௧)

"வித்தையையும் அவித்தையையும் (அறிந்தவன்)" என்னுஞ் சுருதியானது அவை வித்தைக்கு அங்கமாயிருப்பன என்று விதித்தலான், அவை அநுஷ்டிக்கற்பாலன எனப் பெறப்படுகின்றது. வித்தையில்லாதவனாலும் வித்தை

யுடையவனுலும் யஞ்ஞமுதலியன வித்தியாசாதனமாகவும் வித்தியாங்க மாகவும் இரு முறையோ ஒரு முறையோ அநுஷ்டிக்கற்பாலன? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இரு விதியும் பலமாயுண்மையான், அவை இரு முறை அநுஷ்டிக்கற்பாலன எனின், (௩௩)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

ஸவ-ீயாzவி த ஞவொஹயஷி௦ஙாஜ (௩. ௪. ௩௪)

**(௪௫௨) எப்பிர்காரத்தாலும் அவை ஒன்றும்; உபய லிங்கங்களுண்மையின்.**

இருவேறு பிரகரணங்களிலே நேரும் இரு விதிகளால் அந்த யஞ்ஞ முதலியன இருவகை உருவங்களை அடைவனவாகவிருந்தாலும், அவை எவ் விடத்தும் (ஒன்றும்); அங்ஙனம் அறியப்படலான். இங்ஙனம் கருமசொரூ பம் ஒன்றுயிருத்தலாற் சம்யோக பிருதக்துவ நியாயத்தினுல் விரோதமின்று; ஒரேதரத்திற் பிரயோகிக்கப்பட்டாலும் இரு விதியின் பலத்தினுல் ஒரே கன்மமானது இருவேறு உருவங்கள் எய்துமாதலின். "யஞ்ஞயூபம் காதிர மரத்தினுல் ஆகின்றது" எனவும், "வீரியகாமன் காதிரமரத்தினுல் யஞ்ஞ யூபத்தைச் செய்க" எனவும் போந்த இருவசனபலத்தினுல் நித்தியகாமிய கன்மங்களுள்ளே ஒரே யஞ்ஞயூபம் (பிரவேசித்தல் போல), வித்தையுடைய வன் விஷயத்தில் அங்கமாகவும், வித்தியாஹீனன் விஷயத்திற் சாதனமாக வும் யஞ்ஞகன்மங்கள் விதிக்கப்பட்டமையால், இந்த (இரண்டுக்குமாக) ஓர் கால் யஞ்ஞமுதலியன அநுஷ்டிக்கற்பாலன. (௩௪)

ஐநஹிஸவஞ உஶ-ீயதி (௩. ௪. ௩௫)

**(௪௫௩) இசைவாயிருத்தலையுஞ் சுருதி கூறுகின்றது.**

யஜெ-ீண வாவ ஙெ-நுஷதி (தைத். ஆரணி. ௧௦. எ௬. ௧௦௦)

"தருமத்தினுலே பாவத்தைப் போக்குகின்றுன்" என்னுஞ் சுருதியானது வித்தையின் உற்பத்தியைத் தடுக்கும் பாவத்தைப் போக்குதல் வாயிலாக, வித்தைக்கு இசைவாகிய கன்மாநுஷ்டான காரியத்தையும் கூறுகின்றது. ஆகலின், முன் சொல்லியது விரோதமின்று. (௩௫)

## (௧௦) அந்தராதிகரணம்.

---

ஐ஌ராவாஷி த- தஜ்ரெஷ்ே (௩. ௪. ௩௬)

**(௪௫௪) விலக்காயுள்ளோர்க்கும் அது காணப்படலான்.**

ஆச்சிரமிகளுக்கு ஞானம் வேண்டற்பாலதாகக் கூறப்பட்டது. ஈண்டு

ஆச்சிரமங்களிலே சேராதோர்க்கும் ஞானம் வேண்டியதா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) (பிரமசரியத்தை விடுத்துக் கிரகஸ்தாச்சிரமத்திலே பிரவேசியாத) ஸ்நாதகனும், தாரமிழந்தவர்களும் அநாச்சிரமிகள் ஆவர். இவர்களுக்குப் பிரமவித்தை எய்தாது; வித்தையைச் சம்பாதித்தற்குச் சாதனமாய்ப் போந்த ஆச்சிரம தருமங்கள் யாதுமின்றாமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். இரைவகர்முதலாயினோரும் வித்தையைப் பெற்றாரெனச் சுருதியிற் காணப்படுதலான் ஞானம் அநாச்சிரமிகளுக்கு எய்துகின்றதன்றோ. (௩௬)

வித்தைக்குச் சாதனமாகிய ஆச்சிரமதருமங்கள் இல்லை எனக் கூறப்பட்டதுபற்றிச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

அபி ச ஸ்மர்யதே (௩. ௪. ௩௭)

(௪௫௫) ஸ்மிருதியினுங் கூறப்படுகின்றது.

ஜப்யேநைவ து ஸம்ஸித்த்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்ஶய꞉।
குர்யாதந்யந்ந வா குர்யாந்மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே।
(மனுஸ்மிருதி. ௨. ௧௭)

"செபத்தினன்மாத்திரம் பிராமணன் சித்தியடையவேண்டும்; இதிற் சந்தேகமின்று; ஏனையவற்றைச் செய்யினும் செய்யலாம், விடினும் விடலாம்; தண்ணளியுடையவனே பிராமணன் எனப்படுவன்" என்னும் ஸ்மிருதியினால், அநாச்சிரமிகளும் செபமுதலியவற்றால் வித்தியாநுக்கிரகம் எய்துகின்றார் எனக் கூறப்படுகின்றது. (௩௭)

விஶேஷாநுக்ரஹஶ்ச (௩. ௪. ௩௮)

(௪௫௬) விசேஷகருமங்களானும் அநுக்கிரகம் எய்துகின்றது.

தபஸா ப்ரஹ்மசர்யேண ஶ்ரத்தயா வித்யயாऽऽத்மாநமந்விஷ்ய।
(பிர. ௧. ௧௦)

"தபசினாலும், பிரமசரியத்தினாலும், சிரத்தையினாலும், ஞானத்தினாலும் (பர)மான்மாவை நாடி" என்னுஞ் சுருதியானது ஆச்சிரமங்களுக்கு நியதமாகிய தருமவிசேஷத்தினாலும் ஞானுநுக்கிரகம் எய்துவதாகக் கூறப்படுகின்றது. (௩௮)

அதஸ்த்விதரஜ்ஜ்யாயோ லிங்காச்ச (௩. ௪. ௩௯)

(௪௫௭) ஆகலின் மற்றது உயர்ந்தது; இலிங்கவுண்மையானும்.

ஆச்சிரமம் யாதும் இலாமையைவிட ஆச்சிரமமுடைமை சிரேட்டமாகும்; தருமம் மிகுதியாய் எய்துவதாகலின்.

ஊநாமூ்ரீ நகிஷெ்தகிநமெகூவிஜிஜஃ (தக்ஷஸ்மிருதி. க. ௧௦)

"ஆச்சிரமங்கள் ஒன்றுக்கேனும் சேராமல் ஓர் தினமாயினும் இரு பிறப்பாளன் இருத்தல் கூடாது" என ஸ்மிருதியுங் கூறுகின்றது. இங்ஙனம் ஆச்சிரம மில்லாமையினும் ஆச்சிரமமுடைமை சிரேட்டமே. அங்ஙனமாயினும், ஆபத்தாகிய விஷயங்களில் ஆச்சிரமமில்லாதோர்க்கும் சேபமுதலிய சாதனத்தினால் ஞானம் எய்துகின்றதே. (௩௯)

## (௧௧) தத்பூதாதிகரணம்.

---

தஷ-ூதஸ்யதா நாதஷாவொ ஜெஜிநெராவி நியஊாதஈூ வாஹாவெஹஃ (௩. ௪. ௪௦)

**(௪௫அ) அவ்வாருகிய புருடனுக்கு அவ்வாருதலினின்று நீங்குதல் கூடாது; சைமினி அங்ஙனங் கொள்ளுதலான்; நிலையினின்று இறங்குதல் தடுக்கப்படுதலின்.**

ஈண்டுத் துறவுபூண்டோர் பூருவாச்சிரமத்துக்கு மீடலாகிய இறக்கம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ஐஹசுயமு௰ ஸஊவ்ய ஜுஹீ ஹவெக|
ஜுஹாஜுவநீ ஹஞுகா வஜுவஜெக (ஜாபாலம்)

"பிரமசரியத்தை முடித்துக் கிரகஸ்தாச்சிரமியாதல்வேண்டும்; கிரகத்தை விட்டு வானப்பிரஸ்தனுகித் துறவு செய்தல்வேண்டும்" என்னும் வாக்கியத்தினால் ஆச்சிரம ஏற்றம் எவ்வாறு சுவேச்சாதீனமோ, அவ்வாறே (ஆச்சிரமத்தினின்று) இறக்கமும் எய்தலாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். நைஷ்டிகாதி ஆச்சிரமத்தை அடைந்தவனுக்கு அதினின்று இறங்குதல் கூடாது; அந்நிலையினின்று இறங்குதல் தடுக்கப்படுகின்றமையான்.

ஊதுஜஊதாந ஊசாமூகூெ ஜவஸாஷயநீ (சாங். உ. ௨௩. க)

"ஆசாரியகுலத்திலே தன்னை மிகுதியும் ஒறுத்து" என்னும் சுருதியினால், அது நிச்சயமாய்த் தடைப்படுத்தப்படுகின்றது.

ஊஷுயாதுெதாந வாநஙெயாக|

"அவன் காட்டுக்குப் போய் அங்கிருந்து மீண்டு வாராதிருப்பானாக" எனவும்,

ஸஹ்யஸ்யாதீநு வாநராவத்தயெஷ।

" அக்கினிகளை விடுத்துப்போய் அவன் மீண்டு வாராதிருப்பானாக " எனவும் சாஸ்திரங்கள் இறங்குதலைத் தடைப்படுத்துகின்றன. ஆச்சிரமத்தினின்று ஏறுதற்கு விதி இருத்தல்போல, இறங்குதற்குச் சாஸ்திரங்களில்லை. அவ்வாறே இறக்கத்தைச் சுருதிகள் வெளிப்படையாய்த் தவிர்த்தலானும், இறக்கத்துக்கு உடன்படுஞ் சுருதியின்மையானும், (உயர்ந்த ஆச்சிரமத்தினின்று இறங்குகின்ற அவர்களுக்கு) ஞானாதிகாரமில்லை; சைமினிக்கும் இதுவே சம்மதம். (௪௦)

உயர்ந்த பதவியிலிருந்து இறங்கிறவனுக்குப் பிராயச்சித்தாதியினால் வித்தியாதிகாரம் இல்லை என்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

நவாயிகாஸிகவேி வதநாநு ௦நா தஜயொமாக (௩. ௪. ௪௧)

(௪௫௩) யோக்கியதையைக் கொடுக்கத்தக்க பிராயச்சித்தமும் இல்லை; ஸ்மிருதி கூறுமாறு வழுவுதல்பற்றி அது அவர்கட்கியையாமையின்.

மீமாஞ்சாதிகரணத்து (கூ. அ. ௨௨-இல்) நெறி தவறிய பிரமசாரிக்குக் கர்த்தபபலி (கூறப்பட்டாற் போல, யோக்கியதா) அதிகாரத்துக்கு இலக்ஷணமாகச் சொல்லப்பட்ட பிராயச்சித்தமானது (ஆச்சிரமத்தில்) உயர்ந்து வழுவினவனுக்கு எய்தாது;

ஆரூடொ நைஷ்டிகம் யூா்ம் யஸ்து ப்ரச்யவதெ நரஃ।
ப்ராயசித்தம் நவஸ்யாமி யெந ஶுத்யெத் ஸ ஆத்மஹா॥

" நைஷ்டிகப் பிரமசரியத்துக்கு ஏறிய மனுஷன் அதினின்று தவறுவானாயின், அந்த ஆன்மாவைக் கொன்ற அவன் சுத்தி எய்துமாறுள்ள கழுவாயைக் காண்கிலேன் " என்று ஸ்மிருதியானது அவனுக்குத் தகுதியாக்கப் பிராயச்சித்தத்தை மறுத்தலான்; அவன் அந்தப் பிராயச்சித்தத்துக்கு யோக்கியனுகான். (௪௧)

உவவாவெ-ிவேி கெகெஹாவ௱ நவத்தஜாககு (௩. ௪. ௪௨)

(௪௫௦) உபபாதகம் (என்ப) சிலர்; போசன (விஷய)த்திற்போலப் (பிராயச்சித்தம்) உண்டு (என்ப); இது கூறப்பட்டது.

உபபாதகமாயிருத்தலான், சிலர் பிராயச்சித்தத்தை அங்கீகரிக்கின்றார்; மதுவை உண்டு பிராயச்சித்தங் கோடல் போல.

உத்தரெஷாவெணுதஜவிரொயி।

" பிரமசரிய விஷயத்திற் கூறப்பட்டது விரோதமில்லாவிடத்து உயர்ந்த ஆச்

சிரமிகளுக்கு எய்துவதாம்'' என்னும் வாக்கியத்தினற் பிரமசாரிக்கு எது கூறப்பட்டதோ, அது விரோதமில்லாவிடத்து மற்ற ஆச்சிரமிகளுக்கும் பொருந்தும் என்பது பெறப்பட்டது. (சஉ)

஬ஹிஸ்தூ஭யயாவி ஸ்ஸ்ருதெ ராசாராசூ (ங. ச. சங)

(சகூக) ஆயின் அவர் இரு பிரகாரத்தானும் புறத்தே நிற்கின்றார்; ஸ்மிருதியும் ஆசாரமுமுண்மையான்.

உபபாதகமாயிருந்தாலும் மகாபாதகமாயிருந்தாலும், இந்த (அதிக் கிரமிகள் வைதிக) கன்ம அதிகாரமுதலியவற்றினின்று பஹிஷ்கரிக்கப்படு கின்றனர்;

ப்ராயஸ்சித்தஂ ந பஶ்யாமி யெந ஶுத்த்யெத் ஸ ஆத்மஹா।

"ஆன்மாவைக் கொல்பவன் சுத்தியடைதற்குரிய பிராயச்சித்தத்தைக் காண்கிலேன்'' என ஸ்மிருதியிற் கூறப்படுதலானும், சிஷ்டர் (சங்கத்தி) னின்று பகிஷ்கரிக்கப்படுதலானுமாம். ஆகலின், ஆரூட பதிதற்கு (உயர்ந்து வழுவினர்க்கு) ஞானதிகாரம் எப்பிரகாரத்தானும் இல்லை. (சங)

## (கஉ) சுவாம்மியதிகரணம்.

---

ஸ்வாமிநஃ ஃலஶ்ருதெ ரித்யாத்ரெயஃ (ங. ச. சச).

(சகூஉ) யஜமானனுக்குப் பலம் கூறப்படலான், என்பர் ஆத்திரேயர்.

முற் கூறப்பட்ட உற்கீதாதி உபாசனனுஷ்டானம் யஜமானனுக்கா? இன்றேல் இருத்துவிக்குக்களுக்கா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உற்கீதமுதலிய உபாசனை யஜமானன்பொருட்டே அநுஷ்டிக்கற்பாற்று; அவனுக்கே அதிவீரியமாகிய பலத்தைக் கொடுப்பதாகக் கேட்கப்படலான். இருத்துவிக்குக்களால் (அநுஷ்டிக்கற்பாலது) என்பது ஆத்திரேயர் கொள்கை (எனின்), (சச)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

ஆர்த்விஜ்யமித்யௌடுலொமிஸ்தஸ்மை ஹி பரிக்ரீயதெ।

(ங. ச. சரு)

(சகூங) அவை இருத்துவிக்கின் கன்மம் என்பது ஔடுலோமி (கொள்கை); அவர்க்குத் தக்ஷிணை கொடுக்கப்படுகின்றதன்றோ.

தஸ்மா உ ஹைவம் விதுத்காதா ப்ரூயாத் (சாந். க. எ. அ)

"இதனை அறிந்த உற்காதா கூறுவாராக" என்னும் சுருதிவாக்கியசேஷத்தான், உற்காதாவே உபாசிக்கவேண்டும் என்று வெளிப்படையாகச் சொல்லப்படுகின்றது. இருத்துவிக்குக்கே அவ்வநுஷ்டானம் உரியதென்பது ஒளடுலோமிமதம்.

(ஆக்ஷேபம்) ஒருவன் ஒன்றைச் செய்ய, அதன் பலம் மற்றொருவனுக்குச் சேறல் எங்ஙனமெனின்,

(உத்தரம்) (முக்கிய) கருமத்துக்குப் போல மற்றை அங்க கருமங்கள் அனைத்தையுஞ் செய்யும்பொருட்டு யஜமானனாலே இருத்துவிக்குக்கள் (தக்ஷிணை) கொடுக்கப்படுதலான், சாங்ககருமாநுஷ்டானத்தின் பொருட்டே இருத்துவிக்குக்கள் எஜமானனால் (தக்ஷிணை) இறுக்கப்படுகின்றார்கள். ஆதலின் இருத்துவிக்கினாலே செய்யப்பட்டது யஜமானனாலே செய்யப்பட்டதே. ஆகலின், யாககர்த்தாவுக்கே பலமுஞ்சேருமென்பதில் விரோதமில்லை. (சரு)

## (கஙு) சககாரியந்தரவித்தியதிகரணம்.

---

ஸஹகாய்ாந்தரவியிஃ வக்ஷெண த்ரு தீயஂ தத்வதோ விய்யாதிவத்॥
(ங. ச. சஎ)

(சஎச) வித்தையுடையானுக்கு யஞ்ஞவிதிமுதலியபோல, மூன்றாவதாகிய (மௌனம்) மற்றோர் சககாரியாக விதிக்கப்படுகின்றது; பிரசித்தமாதலின்.

தஸ்மாத் ப்ராஹ்மணஃ வாண்டித்யஂ நிவிய்ய பால்யேந திஷ்டாஸேத் பால்யஂ ச வாண்டித்யஂ ச நிவிய்யாய முநிஃ (பிரு. ரு. ரு. க)

"ஆகலின் பிராமணன் பாண்டித்தியம் எய்திய பின்னர்ப் பால்லியமாயிருக்க நாடுவானாக; பாண்டித்தியத்தையும் பால்யத்தையும் விடுத்த பிற்பாடு முனியாய் இருப்பானாக" என்று ககோளப்பிராம்மணத்திலே கூறப்படுகின்றது. அநேக உபநிடதங்களின் தாற்பரிய நிர்ணய ரூபமாகிய பாண்டித்திய முழுமையும் அடைந்து (பிராமணன் ஒருவன்) பால்லியமாய் (இருக்கவேண்டும்; அஃதாவது) இராகத்துவேஷமுதலிய அனைத்தையும் விடுத்துப் பால்லியத்தை ஒத்த மற்றோர் நிலையிலே நிற்கவேண்டும் (என்பதே); பாண்டித்தியம் பால்லியம் என்பனவற்றை முழுதும் நாடிக்கொண்டு பின்னர் முனியாதல் வேண்டும்.

ஈண்டுப் பாண்டித்தியமும் பால்லியமும் விதிக்கப்பட்டாற்போல, முனியின் நிலையும் (மௌனமும்) விதிக்கப்பட்டதா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) முனி என்றவிடத்து "ஆருக" (ஸ்யாத்) என்னும் விதிப்பிரயோகமின்மையான், அது விதிக்கப்படவில்லை எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. வித்தையுடையானுக்கு யஞ்ஞாதிகள் போலப் பாண்டித்தியம் பால்லியம் என்பவற்றுக்கு மூன்றுவதாகிய மற்றோர் சககாரியமாய் மௌனம் விதிக்கப்படுகின்றதே; மிருதியும் தியானஞ் செய்பவனுக்கே முனி என்னும் சப்தம் பிரசித்தமாதலின். வித்தையைப் பெறும்பொருட்டு உபாசியவிஷயமாயுள்ளதை இடைவிடாது அப்பியாசஞ் செய்வதாயுள்ள இந்தப் பிரகிருஷ்டமாகிய தியானத்தில் "அவன் நிற்க" (திஷ்டேஸ) என்னும் சப்தத்தை வருவித்துக்கொள்வதினால் விதிக்கப்படுகின்றது. ஆகலின், வித்தையுடையானுக்கு மௌனவிதி நேர்ந்திருக்கின்றது. (௪௯)

## (௧௪) கிருத்சிநபாவாதியதிகரணம்.

க்ருத்ஸ்நபாவாத்து க்ருஹிணோபஸம்ஹார꞉ (௩. ௪. ௫௰)

(௩௫௫) ஆயின் எல்லோரினும் (வித்தை) உண்மையின், (சுருதி) கிரகஸ்தனோடு முடிக்கின்றது.

ஈண்டு வித்தை எல்லா ஆச்சிரமிகளுக்கும் சாதாரணமாயுள்ளதா? இன்றேல் சிலர்க்குமாத்திரம் உளதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரமசாரிகள் வேதாப்பியாசம் செய்கின்ற ஆசாரியர் வசப்பட்டவராதலினாலும், கிரகஸ்தன் குடும்பத்தைத் தாங்குதலிலே முயற்சித்திருத்தலானும், வானப்பிரஸ்தன் துறவிலே முயற்சித்திருத்தலானும், அவர்களுக்கு ஞானமுந் தியானமும் எய்தமாட்டா.

வேதாந்தவிஜ்ஞாநஸுநிஶ்சிதார்த்தா꞉ ஸந்ந்யாஸயோகாத்யதய꞉ ஶுத்தஸத்வா꞉ (கைவ)

"வேதாந்த ஞானத்தினாலே நன்கு நிச்சயிக்கப்பட்டவர்களாய், சந்நியாச யோகத்தினாலே சுத்தசத்துவமனமுடையவர்களாயுள்ள யதிகள்" என்னும் சுருதியினால் வேதாந்தார்த்த ஞானமுடையவர்களுக்குச் சந்நியாசயோகம் கேட்கப்படலானும்,

அத்யாஶ்ரமஸ்தே꞉ (கைவ)

"அத்தியாசிரமத்தினின்று" என்பதினாற் றியானவிதி பெறப்படலானும், துரியாச்சிரமிகளுக்கே ஞானமுந் தியானமுமாம், மற்றவர்களுக்கில்லையாம் எனின்,

(சித்தாந்தம்) வித்தை எல்லோர்க்கும் உரித்தே;

குடும்பே ஶுசௌ தேஶே ஸ்வாத்யாயமதீயான꞉।
தார்மிகாந்விதத்தாத்மநி ஸர்வேந்த்ரியாணி ஸம்ப்ரதிஷ்டாப்யாஹிம்ஸந்ஸர்வபூதாந்யந்யத்ர தீர்த்தேப்ய꞉।
ஸ கல்வேவம் வர்த்தயந்யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே।
ந ச புநராவர்த்ததே (சாந். அ. ௧௫. ௧)

"குடும்பஸ்தனுய், பரிசுத்தமாகிய ஸ்தானத்திருந்து வேதாத்தியயனஞ் செய்துகொண்டு" என்று தொடங்கி, "இங்ஙனம் ஆயுசுபரியந்தம் ஒழுகுகின்றவன் பிரமலோகத்தை அடைந்து மீளத்திரும்புவானல்லன்" எனச் சாந்தோக்கியத்திற் கூறப்பட்டமைபற்றி, எல்லா ஆச்சிரமிகளிடத்திலும் வித்தை உளதாகக் காணப்படலான். இங்கே கிரகஸ்தாச்சிரமத்தோடு சுருதி இங்ஙனம் உபசங்கரித்தல் எல்லா ஆச்சிரமிகளுக்கும் அது உண்டெனக் காட்டும் பொருட்டன்றே; இங்ஙனம் அத்தியாசிரமவசனமும் எல்லா ஆச்சிரமிகளுக்கும் அது உண்டெனக்காட்டும்பொருட்டேயாம். ஆகலின், எல்லா ஆச்சிரமிகளுக்கும் வித்தை உண்டே. சந்நியாசம் என்னும் பதம் பலங்களையெல்லாம் விடுத்தலின் மேற்று. யதித்தன்மை என்பது ஜிதேந்திரியத்தின் மேற்று. ஈதெல்லாம் எல்லா ஆச்சிரமிகளுக்கும் நேர்கின்றனவே. (சஎ)

## (கரு) பாசுபதவிரதாதிகரணம்.

---

மௌநவ திதரேஷா உவ௱வடெஶாக (கூ. ச. சஅ)

**(சசுசு) மௌனம் போல மற்றவர்களுக்குங் கூறப்படலான்.**

த்ருஷ்ணாம் ஹித்வா ஹேதுஜாலஸ்ய மூலம்। புத்த்யா ஸஞ்சிந்த்ய ஸ்தாபயித்வா து ருத்ரே। ருத்ரே ஏகத்வமாஹு:। ருத்ரம் ஶாஶ்வதம் வை புராணமிஷமூர்ஜம் தபஸா நியச்சத। வ்ரதமேதத் பாஶுபதம் (அதர்வசிரசு)

"ஆசையை அறுத்து, ஏதுஜாலங்களின்மூலத்தைப் புத்தியினுற் சிந்தித்து உருத்திரரிடத்தே மனசை நிறுத்துக; உருத்திரரிலே ஏகத்துவம் கூறுப; அன்னமும் பலமுமாகி, நித்தியரும் பழையோருமாகிய உருத்திரரைத் தபசினுலே (ஞானத்தினுலே) நீவிர் ஒருக்கிப் பற்றுக, இது **பாசுபதவிரதம்**" எனப் பாசுபதவிரதம் அதர்வசிரசிற் கூறப்படுகின்றது. புராணங்களினும் பிரசித்தம்.

இந்தப் பாசுபதநிஷ்டர்க்கு ஞானப்பேறும் முத்தியும் எய்துமா? எய்தாவா? என்பது சந்தேகம்.

**(பூருவபக்ஷம்)** இந்தப் பாசுபதவிரதம் ஆச்சிரமங்களுக்குள் அடங்காமையானும், காலவரையறையுடைமையானும், கிருஷ்ணர் முதலாயினோராற் புத்திரப்பேற்றின் பொருட்டு அநுஷ்டிக்கப்பட்டிருத்தலானும், அவாந்தர பலப்பேறெழிந்து அவர்களுக்கு மோக்ஷசித்தியில்லையாம் எனின்,

**(சித்தாந்தம்)** கூறுதும். இந்த விரதத்தை மரணபரியந்தம் அநுஷ்டிப்பவர்களுக்கு முத்தியே பேறு; ஞானப்பேறும் பரப்பிரமமாகிய சிவபெரு

மாணைத் தியானஞ்செய்தலேயாம்; முனியின் நிலைமைபோலப் பிக்ஷையேற்ற லும் சமம் தமமுதலிய மற்றைப் பரதருமங்களும் பாசுபதம் எனப்படும் விர தத்திலும் உபதேசிக்கப்பட்டிருத்தலினாலும்,

𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑍍𑌯 𑌏𑌕𑌤𑍍𑌵𑌮𑌾𑌹𑍁𑌃। 𑌰𑍁𑌦𑍍𑌰𑌂 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌂 𑌵𑍈 𑌪𑍁𑌰𑌾𑌣𑌮𑌿𑌷𑌮𑍂𑌰𑍍𑌜𑌂 𑌤𑌪𑌸𑌾 𑌨𑌿𑌯𑌚𑍍𑌛𑌤। 𑌵𑍍𑌰𑌤𑌮𑍇𑌤𑌤𑍍 𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌮𑍍। 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌨𑌾 𑌭𑌸𑍍𑌮 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍃𑌜𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍 𑌵𑍍𑌰𑌤𑌮𑍇𑌤𑌤𑍍𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌪𑌶𑍁𑌪𑌾𑌶𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 (அதர்வசிரசு)

"உருத்திரரில் ஏகத்துவம் கூறுப; அன்னமும் பலமுமாக நித்தியரும் புரா ணருமாகிய உருத்திரரைத் தபசினால் ஒருக்கிப் பற்றுக;' 'அக்கினி என்பது பசுமம்' என்றற்றொடக்கத்த மந்திரத்தினாலே விபூதியை எடுத்து, அங்கங் ளிலே தொட்டு, அவற்றைப் பூசிவிடுக; ஆகலின், இந்தப் பாசுபதவிரதம் பாசத்தினின்று பசுவை மீட்கும் பொருட்டுள்ளது" என அப்பாசுபத நிஷ் டர்க்கும் சிவத்தியானத்தினாற் பாசத்தை அறுத்தலாகிய மோக்ஷபலத்தின் சம்பந்தம் பெறப்படுகின்றமையானுமாம். ஆகலின், ஆயுசுபரியந்தம் (வை திக)பாசுபதவிரதத்தைஅநுஷ்டிப்பவர்க்கு முத்திதான் பலம்.

ஆச்சிரமங்களுள்ளே அது அடங்கவில்லை என்பதுபற்றிச் சூத்திரகாரர் கூறுவாராயினர். (சஅ)

𑌅𑌨𑌾𑌵𑌿𑌷𑍍𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌨𑌨𑍍𑌵𑌯𑌾𑌤𑍍 (ந. ச. சக)

## (சகூஎ) தன்னைக் காட்டாமல்; சம்பந்தமுண்மையின்.

மற்றோர் ஆச்சிரமமாகத் தன்னைக் காட்டாது அவ்வியக்தமாயிருந்தா லும், பாசுபதாச்சிரமமானது ஞானசாதனத்துக்குரிய பிரமசரியமுதலிய யதி தர்மங்களை அடக்கி, அத்தியாசிரமம் எனப் பெயர் படைத்து, பரசிவனை அடைதற்குக் காரணமாய், சுவதந்திரமாய் (வாய்ந்தது) இந்த ஆச்சிரமபே தம்.

𑌯𑌾𑌵𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌪𑌾𑌤𑌂 𑌵𑌾 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌬𑍍𑌦𑌮𑌥𑌾𑌪𑌿 𑌵𑌾 (வாயு. பூர். உகூ: அ)

"சரீராந்தம் வரையுமேனும், பன்னிருவருஷமேனும் அநுஷ்டிக்க" என் னும் சுலோகத்திற் கூறப்பட்டவாறு, பாசுபதவிரதமானது சீவபரியந்தமே னும், சொற்பகாலத்துக்கேனும் அநுஷ்டிக்கப்படுவதென இருவகைப்படும். இந்த இரண்டிலே சீவபரியந்தம் அநுஷ்டிக்கப்படுவது * அத்தியாசிரமம்

---

*உபக்கிரமணிகை (ருசகூ—ருசகூ-ஆம்) இலக்கம் வரையும் உபப்பிருங்கணப் பிரமாணசகிதமாய்க் காட்டப்பட்டவாறு இச்சைவபாஷ்யகாரரும் அத்தியாசிரமம் என்றதற்குப் பாசுபதவிரதம் என்று பொருட்படுத்தினாராக, சங்கராசாரியர் (சுவே. சூ. உக-இற்) கண்ட அந்த அத்தியாசிரம சப்தத்துக்குப் பரமகம்சசன்னியாசியென் று உபப்பிருங்கணங்களுக்கெல்லாம் முரணுறப் பொருள்செய்து தவறுண்டார். அந்

எனப்பட்டு மோக்ஷத்துக்கு வாயிலாகும்; மற்றது போகஹேதுவாயுள்ளது. இங்ஙனம் போகமோக்ஷஹேதுவாய் இருதிறப்படும் அந்த விரதமானது சிவப்பிரசாதத்தைப் பாலிப்பதெனச் சுருதி விதிக்கின்றது. சுருதிவாக்கியம் அப்பிராமாண்ணியமாகாதிருக்கப் பொருள்செய்யப்பற்பாற்று. (சகூ)

## (கசு) ஐகிகாதிகரணம்.

---

ஐஹிக ஈ வ்யஸ்துதப்ரதிபந்தெ தத்ஃஶநாத் (ந. சு. ருo)

(சகூஅ) இந்தப் பிறப்பிற் பிரதிபந்தமில்லாதொழியிற் (பயன் சித்தியாகின்றது); அங்ஙனஞ் சுருதி காட்டுதலான்.

மேலே கூறப்பட்ட உபாசனநிஷ்டர்களுக்கு மோக்ஷபலம் இச்செனனத்திலா? இன்றேல் மறுசெனனத்திலா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அது ஆராயப்படுகின்றது. இந்தச் சென்மத்திலே முக்தி எய்துவதென்று விசுவசித்துப் புருஷன் உபாசனையிற் பிரவர்த்திக்கின்றானன்றி, சென்மாந்தரத்தையுற்றன்று. பயனைக் குறித்து எவன் தாமசத்தை விரும்புவன்? ஆகலின், பயனுளதாயின் அது இச்செனனத்தில் முக்திபலம் எய்தும், இன்றேல் ஒர்காலும் எய்தாதெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிரபலமாகிய மற்றோர் கருமப் பிரதிபந்தம் இல்லாதபோது, பரத்தின் உபாசனபலம் இந்தச் சென்மத்தில் எய்தும்; பிரதிபந்தமுளதாயின் அடுத்த சென்மத்தில் எய்தும்; உலகத்தில் நன்மையானது தனக்குச் சாதனமாயிருக்கும் புண்ணியஞ்செய்த பின்னர்த்தான் எய்தவேண்டும் என்பது நியமமன்று. பின் பிரதிபந்தங்கள் உள்ளபோது அது மற்றோர் சென்மத்தில் எய்துகின்றது. அதுபோலாம்; சென்மாந்தரத்திலே செய்யப்பட்ட சிரவணாதி பலத்தினாலே வாமதேவர் முதலியோரும் அப்பிரமவித்தியா பலத்தை அடுத்த சென்மத்திலே எய்தினர் என்று சுருதியிற் காணப்படலான். ஆகலின், இப்பிறப்பிலே வீடுபேறு எய்தவேண்டும் என்பது நியமமன்று. (ருo)

## (கஎ) முக்திபலாநியமாதிகரணம்.

---

ஏவம் முக்தி ஃலாநியமஸ்தத³வஸ்தாவத்⁴ருதெஸ்தத³வஸ்தாவத்⁴ருதெ:|
(ந. சு. ருக)

(சகூகூ) இங்ஙனம் முக்திப்பயனிற் பேதமின்று; அதின்

---

தியாச்சிரமம் என்பது துரியாச்சிரமத்தின் மேற்று; அத்தியாசிரமம் என்பது (வைதிக)பாசுபதவிரதத்தின் மேற்று.

நிலைமை நிச்சயிக்கப்படுகின்றமையின், அதின் நிலைமை நிச்சயிக்குப்படுகின்றமையின்.

கேவலம் கன்மங்களினால் எய்தும் பலப்பேறுகள் போல முக்திப்பயனும் பிரபலகர்மாந்தரப் பிரதிபந்தமில்லாவிடத்து எய்துமென்று நிரூபிக்கப்பட்டது.

அந்த நியாயத்தினாலே (யஞ்ஞ) கன்மபலங்களிலே (பேதமுளதாதல்) போல, ஞானபலனாக எய்தும் முக்தியினும் பேதமுளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) கன்மபலம் போல முக்திபலமும் பேதமாம்.

ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்காமோ யஜேத|

"சுவர்க்ககாமன் ஜ்யோதிஷ்டோமத்தினால் வேட்க"

வாஜபேயேந ஸ்வாராஜ்யகாமோ யஜேத |

"சுவராச்சியகாமன் வாஜபேயத்தினால் வேட்க" என்றற்றொடக்கத்தவற்றாற் கன்மபலம் பலவாகக் காணப்படுதல்போல, உபாசனாஞானபலத்துக்குமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. கன்மபலன்களைப் போல ஞானோபாசனாபலம் பேதமடையும் நியமம் இல்லை; பிரமசொரூபத்தையடைதலே பலமாயிருத்தலின். வித்தையுடையார் அனைவர்க்கும் பிரமசொரூபமடைதல் ஒன்றேயாதலின் ஈண்டுப் பேதம் எய்தாது. உபாசனையின் வேறுபாட்டினால் முக்திசொரூபமாகிய அந்தப் பலம் வேறுபாடுடையதெனக் கூறுதல் அடாது; உபாசனாகருமங்களுக்கு முக்தி பலத்தையொழிந்து வேறுபலமின்மையானும், பிரமம் ஒன்றாயிருத்தலின் அந்தப் பிரமரூப முக்திபலமும் ஒன்றாயிருத்தலானுமாம். ஆகலின், மோக்ஷபலத்திற் பேதமில்லை. (ருக)

---

## நான்காம் அத்தியாயத்து

# முதலாம் பாதம்.

## (௧) ஆவிருத்தியதிகரணம்.

ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத் (௪. ௧. ௧)

(௪௭௦) அடிக்கடி ஆவிருத்தி (கருதப்படுகின்றது); உபதேசத்தினல்.

மூன்றும் அத்தியாயத்திலே உபாசகன், உபாசியம், உபாசனுபேதம், ஆச்சிரமதருமமுதலியன விசாரிக்கப்பட்டன.

ஈண்டுப் பின்னரும் நான்காம் அத்தியாயத்து முதலாம் பாதத்திலே உபாசனுப்பிரகாரமும்,

இரண்டாம் பாதத்திலே சீவோபாசகனுடைய உற்கிராந்திதசையும்,

மூன்றும் பாதத்திலே அர்ச்சிராதிகதியும்,

நான்காம் பாதத்திலே பிரமத்தைஅடைந்தவனுடைய நிலைமையும் நிருபிக்கப்படுகின்றன.

ஈண்டு முதலதிகரணத்தில்

ப்ரஹ்மவிதாப்நோதி பரம் (தைத். ௨. ௧)

ஜ்ஞாத்வா சிவம் சாந்திமத்யந்தமேதி (சுவே. ௪. ௧௪)

"பிரமத்தை அறிந்தவன் பரமானந்தத்தை அடைகின்முன்;" "சிவபெருமானை அறிந்து அத்தியந்த சாந்திஅடைகின்முன்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலேமோக்ஷசாதனமாக விதிக்கப்பட்ட (வேதனத்தை) அறியுந்தொழிலை ஒருமுறை அநுஷ்டிக்க வேண்டுமோ? இன்றேல் அடிக்கடி அநுஷ்டிக்க வேண்டுமோ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஓர்கால் அநுஷ்டிக்கற்பாற்று; "ஒருமுறை செய்தாற் சாஸ்திரார்த்தம் நிறைவேறிற்று" என்னும் நியாயத்தினற் பிரயாஜாதி போல, ஒருமுறை அநுஷ்டித்தாலும் வேதனம் ஞானம் என்னும் மொழிகளின் அர்த்தம் சித்தியாய்விட்டது எனின்,

(சித்தாந்தம்) கூறுதும்.

ப்ரஹ்மவிதாப்நோதி பரம் (தைத். ௨. ௧)

"பிரமத்தை அறிபவன் பரமானந்தத்தை அடைகின்முன்" என்றற்றொடக்கத்த சுருதிகளில்மோக்ஷசாதனமாய் விதிக்கப்பட்ட (வேதனம்) ஓர்கால் ஆவர்த்திக்கத்தக்கது;

ஜெநாஸ்ஹெஹ்ஹாவாவீத (சாங். ௩. க௮. க)

"மனசைப் பிரமமாக ஒருவன் உபாசிக்க"

ஸாதிவதவதிவ கீத்யா யஶஸா ப்ரஹ்மவர்சஸேந ய ஏவம் வேத (௩. க௮. ௩)

யஜ்வேத ஸ்ஜெயெத ஜாநாதி (சாங். ௪. க. ௪)

"இதனை (வேதத்தை) அறிகின்றவன் கீர்த்தியினாலும் யசசினாலும் பிரமவர்ச்சசினாலும், பிரகாசித்துத் தபிக்கின்றான், தான் அறிகிறதை அறிகிறவன் என்னால் இங்ஙனம் கூறப்படுகின்றான்"

அநுஶாதி ஸாதாம் ஹஹவோ தெவதாம் யாஂயியாம் தெவதாமுபாஸ்ஸெ (சாங். ௪. உ. உ)

"பகவானே, நீவிர் உபாசிக்கும் தெய்வத்தைச் சொல்லும்" என்றற்றொடக்கத்த சுருதிகளின் உபக்கிரமோபசங்காரங்களிலே, அறிதல் உபாசித்தல் என்னும் இரு மொழிகளும் மாறிமாறி எய்தலானும், மோக்ஷத்தின் சாதனமாகிய வேதனம் உபாசனாரூபமாக இருக்கின்றமையானும், உபாசனாசப்தமும் இடையீடின்றிச் செல்லும் சிந்தனையின்மேற்றாமாதலினாலுமாம். பிரயாஜாதிபோல என்றமை:— இதன் பயன் அதிர்ஷ்டமாதலின், இது ஒருமுறை அநுஷ்டித்தால் அமையும்; அறிதற்றொழிற் பயன் சாக்ஷாத்காரதிருஷ்டமாதலினால் அதன் பலோதயம் வரையும் ஆவிருத்தி செய்யவேண்டும், நெற்குத்தல் முதலிய போல. (க)

லிங்காச்ச (௪. க. உ)

(௫௭க) குறிகளானும்.

க்ஷேத்ரஜ்ஞஸ்ய ஶிவஜ்ஞாநாத்ஶுசிதா பரமா மதா। மஹாபாதகீ யோ ஜ்ஞாநாதுபபாதகிநோ ரஜ॥ ப்ரவிஶ்யாஜ்ஞீவாதம் ப்ரஹ்மஜ்ஞாநம் ஸமப்யஸேத்।

ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்தம் புருஷம் பரம்॥

"சிவ ஞானத்தினால் ஆன்மாவுக்கு எய்தும் தூய்மை பரமாக மதிக்கப்படுகின்றது; மகாபாதகஞ்செய்தானாயினும், உபபாதகஞ் செய்தானாயினும் இரவில் ஓர்சாமம் பிரமத்தியானஞ்செய்வானாக;" "ஆன்மாவுக்கு விதிக்கப்பட்ட யோகத்தை ஒருவன்பயில்க;" "பொன்வண்ணரும் சொப்பனத்தில் அடையற்பாலருமாகிய பரமபுருஷரை அறிக" என்னும் (ஸ்மிருதி) வாக்கியங்கள் அவ்விஷயத்திற் குறிகளாயுள்ளன. ஆகலின், பிரம வேதனம் ஆவிருத்தி செய்யற்பாற்று. (உ)

## (உ) ஆத்துமாதிகரணம்.

---

ஆத்மேதி தூபக³ச்ச²ந்தி க்³ராஹயந்தி ச (ச. க. ங)

(கஎஉ) ஆன்மாவாக்வே அவரை அடைகின்றூர்கள்; பற்றுதலுஞ் செய்கின்றூர்கள்.

மேலை அதிகரணத்திலே பிரமோபாசனை ஆவிருத்தி செய்யப்படல் வேண்டும் என்று கூறப்பட்டது. பிரமத்தைத் தனக்கு ஆன்மாவாய்க் கொண்ட ஆன்மா தன்னைப் பிரமத்தோடு ஒன்றுகவா? இன்றேல் அதற்கு வேறுகவா? கொள்ளல்வேண்டும் என்னும் விசாரம் உண்டாகின்றது. (முதலாவது)

விஶ்வாதி⁴கோ ருத்³ரோ மஹர்ஷி꞉ (தைத். ஆரணி. க0. கஉ. உஅ)

"விசுவாதிகர் மகர்ஷியாகிய உருத்திரர்" என்னுஞ் சுருதியினுலும், (உ. க. உஉ-ஆம்) சூத்திரத்தினுலும் பிரத்தியகான்மா எனப்படும் ஆன்மாவினின்று பதியாகிய பரப்பிரமம் வேறென்று நிரூபிக்கப்பட்டமையானும், (இரண்டாவது) சர்வஞ்ஞதையுடைய பிரமமாக ஆன்மா ஒர்போதும் ஆகானுதலினுலும், ஆன்மா பிமத்தைத் தனக்கு வேறுகக் கொண்டுதான் உபாசிக்கவேண்டுமென்று கொள்ளின்,

(சித்தாந்தம்) சிவன் எனப் பெயர்கொண்ட பரப்பிரமம் ஆன்மாவுக்கு மேலாய விடத்தும், உபாசகன் "நான் பிரமமாகின்றேன்" என்றுஅவரைத் தியானித்தல்வேண்டும். பூருவோபாசகர்களும்

த்வம் வா அஹமஸ்மி ப⁴க³வோ தே³வதே | அஹம் வை த்வமஸி|

"பகவாஞகிய தேவரே! நீவிரே நான், நானே நீவிர்" என்று ஆன்மாவாகத் தியானித்தார்கள். உபாசகனுக்கு உபாசியர் வேறுயவழியும், பரப்பிரமம் தனது ரூபத்தை அவர்க்குக் கொடுத்து அநுக்கிரகிக்கின்றது. "அது நீயாகின்றனை" என்றற்றொடக்கத்தவற்றுல் அவர்களும் தமது சிடர்களுக்குப் (பிரமத்தைத்) தமது ஆன்மாவாகவே அறியுமாறு உபதேசிக்கின்றூர். நிரதிசயதுக்கான்மகமாகிய நிகிலபாசபந்தச்சேதமும், எல்லைபிறந்த பரமானந்தமய நிஷ்களங்கமாகிய சிவத்துவம் அடைதலுமே முக்தியாகும். ஆன்மாவுக்குப் பசுத்துவநிவிர்த்திபின்றிச் சிவத்துவப் பிராப்தி இல்லை. பசுத்துவநிவிர்த்தியும் அந்தச் சிவத்துவபாவனைபின்றி இல்லை. ஆகலின், நிரந்தரம் சிவோகம் எனக் கொள்ளும் பாவனுப் பிரவாகத்தினுலே பாசம் இளக, அதனுற் பசுத்தன்மை நீங்கிய உபாசகன் சிவனேயாகின்றுன். சமஸ்த தோஷகளங்கம் நீங்கிய நிரதிசயமங்களாஸ்பதமன்றே சிவத்துவம். பரப்பிரமமும் அவ்வியல்பினதே. அவ்வப் பாவனைபினுலே உபாசகனும் அவ்வாறேயாகின்றுன். அதனுற்றுன்,

ஶிவ ஏகோ த்⁴யேய ஶிவங்கர ஸர்வமந்யத் பரித்யஜ்ய (அதர்வசிகை)

"பிற எல்லாம் விடுத்து இன்பஞ் செய்பவராகிய சிவன் ஒருவரே தியானிக்கற்பாலர்" என்றற்றொடக்கத்த சுருதிகளினாலே முமூட்சுவுக்குச் சிவபெருமானையொழிந்து பிறவெல்லாம் தியானயோக்கியமன்றென நிஷேதிக்கப்படுகின்றன. பிராம்மணாதி தேகாபிமான முதலியவாய பசுவினியல்பு நீங்கி, நிரதிசயசொரூபானந்த சாட்சியாகிய சுவப்பிரகாச சிவரூபபராஹம்பாவத்தை அடைவதே முத்தி என்பது சமஸ்த சுருதிதாற்பரியமாதலின், பிரமபாவனோபாசனை உபாசகனுக்கு முத்திகரமாகின்றது. இல்லையேற் சம்சாரநிவிர்த்தி எங்ஙனமாம்!! (௩)

## (௩) பிரதீகாதிகரணம்.

---

சூத்திரகாரர் பின்னோர் விசேஷங் கூறுவாராயினர்.

ந ப்ரதீகே ந ஹி ஸ: (௪. க. ௪)

(௫௭௩) குறியில் (ஆன்மாவாகத் தியானம்) இல்லை, உண்மையாய் (அங்கே வழிபடற்பாலர்) அவர் அல்லர்.

மநோ ப்³ரஹ்மேத்யுபாஸீத (சாந். ௩. க௮. க)

"பிரமமாக மனசைத் (தியானிக்க)" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே மனமுதலியவற்றிற் பிரமத்தை உபாசித்தல் காணப்படுகின்றது. அவற்றினும் பிரமம் ஆன்மாவாகத் தியானிக்கற்பாலதா? இன்றேல் வேறாய்த் தியானிக்கற்பாலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

மநோ ப்³ரஹ்மேத்யுபாஸீத (சாந். ௩. க௮. க)
ஆதி³த்யோ ப்³ரஹ்மேத்யுபாஸீத।

"மனசைப் பிரமமாகத் தியானிக்க; சூரியனைப் பிரமமாகத் தியானிக்க" என்றற்றொடக்கத்த சுருதிகளினாற் பெறப்பட்ட பிரதீகோபாசனைகளிலே பிரமதிருஷ்டியினாற் சம்ஸ்காரஞ் செய்யப்பட்ட மனமுதலியன உபாசிக்கற்பாலன எனப் பெறப்படுகின்றது. ஆகலின், பிரதீகமானது உபாசகனாலே பிரமமாகப் பாவிக்கப்படுங்கால் அதனை ஆன்மாவாக உபாசித்தலில் யாது விரோதம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. பிரதீகங்கள் ஆன்மாவாகப் பாவிக்கப்படமாட்டா. பரப்பிரமம் உபாசிக்கப்படுவது அவைகளில் அன்று; ஆனாற் பிரமதிருஷ்டியினாலே மனமுதலிய உபாசிக்கற்பாலன. அங்கே மனாதிகளால் விசேடிக்கப்பட்ட பிரமமே உபாசிக்கற்பாலதாகக் கொண்டாலும், மனமுதலியவற்றுக்கும் பிரமகுணம் இல்லாமையால் விகாரமுறுதலின், இந்த விசேஷத்தையுடைய பிரமம் ஆன்மாவாகப் பாவிக்கப்படமாட்டாது. ஆயின்

சத்தியசங்கற்பமுதலிய (குணங்கள்) விசேடித்துள்ளபோது (பிரமமே ஆன்மாவாகப் பாவிக்கப்பட்டது); இன்றேல், ஆன்மாவும் விகாரமுறுதற்கு ஏதுவாகுமன்றே. ஆகலின், குறியிலே உபாசகர் (பரம) ஆன்மாவைத் தியானித்தல் கூடாது. சண்டுச் சிவபிரான் சாக்ஷாத்தாக உபாசியராகாரன்றே. (ச)

## (ச) பிரமதிருஷ்டியதிகரணம்.

---

ப்ரஹ்மத்ருஷ்டி ருத்கர்ஷாத் (ச. க. ரு)

**(சஎச) (பிரதீகத்திற்) பிரமோபாசனை (கருதப்படுகின்றது); அதின் உற்கர்ஷத்தினுல்.**

பிரதீகோபாசனுவிஷயத்தில் மனம் சூரியன்முதலிய பிரதீகங்களைப் பிரமமாகத் தியானித்தல் வேண்டுமோ? இன்றேற் பிரமத்தை மனமுதலியவைகளாகப் பாவித்தல் வேண்டுமோ? என்பது சந்தேகம்.

**(பூருவபக்ஷம்)** பிரமத்தையே மனமுதலியவாகக் கருதிப் பிரமோபாசனை செய்யற்பாற்று. அவர் ஒருவரே பலதாதாவாக இருத்தலான் எனின்,

**(சித்தாந்தம்)** கூறுதும்.

விஶ்வாயிகொ ருஜ்ரஃ (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"விசுவாதிகர் உருத்திரர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே பிரமம் உற்கிருஷ்டம் எனப் பெறப்படுதலின், நிகிர்ஷ்டமாகிய மனமுதலியவைகளைப் பிரமமாகக் கோடற்பாற்று. உலகத்திலே நிகிர்ஷ்டனுகிய இராசசேவகனை இராசாவாகக்கருதி அவனை வழிபடுகின்றுர். பின், இராசாவைச் சேவகனுகக் கொண்டு எவரும் வழிபடுவாரல்லர். இதுதான் மிகவும் உசிதமானது. எது உற்கிருஷ்டமாகிய வஸ்துவாயிருக்கின்றதோ, அதனையே எல்லோரும் வழிபடுகின்றுர். ஆகலின், பரப்பிரமம் சர்வோற்கிருஷ்டமாயிருத்தலின், அது சர்வநமஸ்காரவிஷயமாய்ப் போந்தது. "இருதம் சத்தியம்" என்னும் மந்திரத்திற் கூறப்பட்ட விசேஷத்தோடியைந்த யாதொரு பிரமமுண்டோ, அந்த விசுவரூபர்க்கு நமஸ்காரம். நமஸ்காரம் அனைத்தும் யாண்டும் மற்றையோர்க்கில்லை. இன்னும் அந்தப் பிரமம் உற்கிருஷ்டமாயிருத்தலின், நமஸ்காரவிஷயலக்ஷணம் கூறப்பட்டது. எங்ஙனமெனின்,

யஸ்ய ஶிரஸ்ததோ ஸ்ரேயஸே நம: ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம ஸ்தாராஷ்ர நம
யஜ்ஞோ ஶயரானீவிஷ்ணுர்ஹ்ருதயம் ஸம்வத்ஸர: ப்ரஜநநம்।

(தைத். ஆரணி. உ. கசு. உரு)

"எவர் சிரசாயுள்ளாரோ, அவர்க்கு நமஸ்காரம்; தருமம் நெற்றி, பிரமா மேல் அலகு, யஞ்ஞம் கீழ் அலகு, விஷ்ணு இருதயம், சம்வற்சரம் பிரஜநநம்"

என்றற்றொடக்கத்த தைத்திரீய சுருதியிற் சிம்சுமாரான்ம நிரூபணவிஷயத்தில், இருதயாதி ரூபங்களையுடைய விஷ்ணுவாதியர்க்கு வேறாகச் சர்வோற்கிருஷ்டதேவராகிய *பரப்பிரமசிவனார்க்கே பிரதானசிரோரூபத்துவம்

யஸ்மை நமஸ்ஸிர: (தைத். ஆரணி. உ. கசு. உரு)

"சிரசாயுள்ள யாதொருத்தருக்கு நமஸ்காரம்" என்னும் நமஸ்காரவிஷயமாயுள்ள இலக்ஷணத்தினாலேதான் பொருத்திக் கூறப்பட்டது. இறுதியினும்,

த்வம் ஜந்தூநாமதிபதிரஸி த்வம் ஜந்தூநாம் ஸ்ரேஷ்டோ பவஸி|

(தைத். ஆரணி. உ. கசு. உரு)

"நீவிர் செந்துக்களுக்கெல்லாம் அதிபதியாகின்றீர்; நீவிர் செந்துக்களுக்கெல்லாம்சிரேஷ்டராகின்றீர்" என அவரே சமஸ்தசெந்துக்களுக்கும் அதிபதித்தன்மையாயுஞ் சிரேட்டத்தன்மையாயும் இருத்தலைக் கூறி,

நமஸ்தே நமஸ்ஸர்வஸ்மை நமோ நம: (தைத். ஆரணி. உ. கசு. உரு)

"உமக்கு நமஸ்காரம்! நமஸ்காரம்!! எல்லா நமஸ்காரமும் உமக்கே" எனச் சமஸ்த செந்துக்களுக்கும் உற்கிருஷ்டமாயிருத்தலினாற் சித்தித்த அகில நமஸ்கார பரியவசான எல்லை கூறப்பட்டது.

நமஸ்தே ருத்ர மந்யவே (யசு. வே. சு. ரு. க. க)

"உருத்திரரே! உமது ஞானத்துக்கு நமஸ்காரம்" என்றற்றொடக்கத்தவைகளினால் எல்லாவற்றுக்கும் மேலாயிருத்தலினாலன்றோ மீட்டும் மீட்டும் நமஸ்காரங் குறிக்கப்பட்டது. செல்வமுதலியவற்றாற் சிறந்தவனையன்றோ உலகத்தில் வணங்குகின்றார். சர்வ நமஸ்கார விஷயத்தினாற் சர்வோற்கிருஷ்டரும், உமாசகாயரும், விரூபாக்ஷரும், ஈசுவர சப்தவிஷயமாயுமுள்ளார் பரப்பிரமவஸ்துவாகிய சிவபிரானே. சர்வோற்கிருஷ்டரும் அனைவராலும் நமஸ்கரிக்கற்பாலருமாகிய அவர் வியாபித்திருத்தலினால் மனம் ஆதித்தியன் முதலிய பிரதிகங்கள் அனைத்துக்கும் உபாசியத்துவம் எய்திற்று. ஆதலினாற்றான்

ஸ்வப்ய: ஸ்வபதிப்யஶ்ச வோ நமோ நம: (யசுர். வே. சு. ரு. சு. உ)

"சுவானங்களுக்கும், சுவானபதிகளுக்கும் நமஸ்காரம், நமஸ்காரம்" என்றற்றொடக்கத்தவைகளிலே சுவானமுதலிய அத்தியந்த நிகிருஷ்ட செந்துக்களினும் சர்வோற்கிருஷ்டராகிய பிரமம் வியாபித்திருத்தலின் சுருதியானது நமஸ்காரம் கூறுகின்றது. ஆகலின், உற்கிருஷ்டசம்பந்தத்தினாலே நிகிருஷ்டசெந்துக்களுக்கும் உபசாரம் சொல்லக் காணப்படலான், விசுவாதிகமாகிய பிரமதிருஷ்டியினாலே மனமுதலியவற்றுக்கும் உபாசியத்துவம் சித்தித்தது. (ரு)

* சிவபெருமானைத் திவ்ய சிம்சுமார விருக்ஷத்தின் சிரசென்று கூறும் இவ்வுண்மையை அரதத்தாசாரியரருளிய யஸ்மை நம:(யஸ்மை நம:) என்னும் சதுர்வேத தாற்பரியசங்கிரகசுலோகத்தானும் அறிக.

## (ரு) ஆதித்தியாதிமத்தியதிகரணம்.

ஆதித்யாதி மதயஸ்சாங்க உபபத்தே: (ச. க. கூ)

**(சஎரு) அங்கத்திலே ஆதித்தியன் முதலாயினோர் திருஷ்டிகளும் (தியானிக்கப்படல்வேண்டும்); பொருத்தமாதலின்.**

மேலை அதிகரணத்திலே பிரமம் மேலாதலின், ஆதித்தியன் முதலாயினோர் உபாசனையிற் பிரமமாக உபாசிக்கற்பாலர் எனக் கூறப்பட்டது.

ய ஏவாஸௌ தபதி தமுத்கீதமுபாஸீத (சாங். க. ங. க)

"இங்கே எரிகிறவனை உற்கீதமாகத் தியானிக்க" என்றற்றொடக்கத்தவைகளிலே (விதிக்கப்பட்டவாறு) கர்மாங்கோபாசனைகளில், ஞாயிறு முதலியவற்றை உற்கீதமாகவா? அல்லது உற்கீதத்தை ஆதித்தியனாகவா? தியானிக்கவேண்டும் என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உற்கீதமுதலியவும் ஞாயிறுமுதலியவும் (யஞ்ஞ) கன்மாங்கங்களாகவும் பிரமரூபங்களாகவும் இருத்தலினால், இரண்டில் ஒன்றுக்கேனும் நியமம் விதிக்கப்படவில்லையாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். ஆதித்தியன் முதலாயினோர் கன்மங்களில் ஆராதிக்கற்பாலராய் உற்கிருஷ்டமாயிருத்தலின், கர்மாங்கமாயுள்ள உற்கீதமுதலியன ஞாயிறு முதலியவாக மதிக்கற்பாலன. அங்ஙனம் ஆதித்தியன் முதலியவாக மதிக்கப்பட்ட உற்கீதாதி கன்மங்கள் பெரும்பயனை விளைப்பனவாம்.

யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம் பவதி (சாங். க. க. கo)

"ஞானத்தோடு செய்யப்படும் எதுவும் அதிபலமாகும்" என்னுஞ் சுருதியினால், சுவயமாகச் செய்யப்படும்போது வீரியமாயுள்ளது ஞானத்தோடியைந்து செய்யப்படும்போது மகா வீரியமுடையதாயும் பெரும்பயனை விளைக்கக் கூடியதாயுமிருக்கும் என அறியப்படுகின்றது. இங்ஙனம் அவ்விரண்டும் பிரமமுதலிய விஷயத்திற் சமமாயிருப்பினும், உற்கீதமுதலியன யஞ்ஞ கருமங்களாக விதிக்கப்பட்டிருந்தாலும், அவ்வுற்கீதமுதலியன செய்யப்படவேண்டியவாய பலசாதனமுடைமையானும், ஆதித்தியன் முதலாயினோர் அதற்கு மாறாயிருங்குமியல்பினராய், அங்ஙனம் பலசாதனமாகாமையானும் உற்கீதமுதலிய கர்மாங்கங்கள் ஆதித்தியன் முதலியோராக உபாசிக்கற்பாலனவாம். (கூ)

## (கூ) ஆசீநாதிகரணம்.

* ஆஸீநஸ்ஸம்பவாத் (சூ. க. எ)

### (௫௭௬) இருத்தல்; கூடுமாதலின்.

உபாசனை எப்படிச் செய்யவேண்டும் என்று விளக்கப்பட்டது. ஈண்டு உபாசனத்துக்கு ஆசன நியமம் உண்டா? இன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சுருதியானது ஒருவன் இருந்து உபாசித்தல் வேண்டும் என ஓரிடத்தும் நியமம் விதிக்காமையானும், மானச வியாபாரமாகிய உபாசனை எல்லா நிலையினும் பொருந்துமாதலானும், உபாசகனுக்கு ஆசன நியமம் இல்லை எனின்,

(சித்தாந்தம்) ஒருவன் இருந்துகொண்டே தியானித்தல் வேண்டும். எதனாலெனின், அவ்வியல்பினனுக்குத்தான் ஏகாக்கிரசித்தம் நேரும். ஆசன நியமச்சுருதியும் இருக்கின்றது. அது வருமாறு:—

விவிக்ததேஶே ச ஸுகாஸநஸ்த: ஶுசி: ஸமக்ரீவஶிரஶ்ஶரீர:|
அத்யாஶ்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்ய|
ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விஶுத்தம் விசிந்த்ய மத்யே விஶதம் விஶோகம்|
அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம் ஶிவம் ப்ரஶாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம்|
தமாதிமத்யாந்தவிஹீநமேகம் விபும் சிதாநந்தமரூபமத்புதம் | உமாஸ
ஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம்| த்யா
த்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் (கைவ)

"தனியிடத்திலே சுகாசனத்திருந்து, சுத்தனாகி நேரிய கழுத்துத்தலை சரீரமுடையனாய், வைதிக பாசுபதவிரதமுடையனாய், இந்திரியங்கள் அனைத்தையுமடக்கி அன்பினோடு தன் குருவை வணங்கி, இதயகமலத்தைத் துகளற்றதாய்ச் சுத்தமாகக் கருதி, அதனடுவே தெளிவுடையராய், சோகமிலராய், அனந்தராய், வெளிப்படாதவராய், நினைத்தற்கரியராய், பிரசாந்தராய், அமிர்தராய், பிரமகாரணராய், முதனடுவீறிலராய், ஏகராய், வியாபியாய், சிதாநந்தரூபியாய், நிஷ்களராய், அற்புதராய், உமாசகாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண்ணராய், நீலகண்டராய், பிரசன்னராயுள்ளாரைத் தியா

---

* ஆசன நியமம் கூறிய இச்சூத்திரத்துக்கு மூலமாயுள்ளது நீலகண்ட சிவாசாரியரால் இச்சூத்திர பாஷ்யத்திலே பிரமாணமாக உதகரிக்கப்பட்டதும், சிவபெருமானை உமாசகாயர் என்று நேரே உணர்த்தியதுமாகிய கைவல்லிய சுருதியேயாம். இப்பரசுருதியை நிர்க்குணப் பிரமத்துக்குத் தாழ்ந்த சகுணப்பிரம சுருதி என்று திரிவுபட உணர்ந்துகொண்ட சங்கராசாரியர்க்கும், சைவசுருதி என்றுணர்ந்துகொண்ட இராமாநுஜர்க்கும் உருசிக்காமையால் இக்கைவல்லிய சுருதி இந்த ஆசன நியமம் உணர்த்திய சூத்திரத்துக்குப் பிரமாணமாக அவ்விருவராலும் உதகரிக்கப்படாது தவிர்க்கப்பட்டது. இதனால் வியாசர் சூத்திரக்கருத்து ஓர்புறமும் மாயாவாதாசாரியர் வைணவாசாரியர் கருத்து மற்றோர் புறமுமாக முரணுண்டு போனமை வெளிப்படை. அஃதன்றிக் கைவல்லியோபநிடதத்தை நவீனோபநிடதமென்பார் கூற்றும் போலியாமென மறுக்க.

னித்து, முனியானவன் பூதகாரணராய், சமஸ்த சாக்ஷியாயிருப்பவரை இருளுக்குமேலேபோயடைகின்றான்'' எனக் கைவல்லியோபநிஷதம் கூறுகின்றது. ஆகலின், ஒருவர் இருந்தேபிரமத்தைத் தியானித்தல் வேண்டும். (எ)

த்⁴யாநாச்ச (ச. க. அ)

## (சஎஎ) தியானத்தினாலும்.

த்⁴யாத்வா முனிர்க³ச்ச²தி பூ⁴தயோனிம் (கைவ)

"உயிர்களுக்குக் காரணராயிருப்பவரைத் தியானித்துப் போயடைகின்றான்"

காரணந்து த்⁴யேய ஸர்வைஶ்வர்யஸம்பன்னஸ்ஸர்வேஶ்வரஶ்ஶம்பு⁴ராகாஶமத்⁴யே (அதர்வசிகை)

"சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், சம்புவும், காரணருமாயுள்ளார் ஆகாயமத்தியிலே தியானிக்கற்பாலர்"

த்⁴யாந நிர்மத²னாதே³வ (கைவ)

"தியானமாகிய மதனத்தினாலேதான்'' என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, பாசத்தைச்சேதிக்கும் காரணமாய உபாசனை தியானரூபமாய் இருப்பதாகப் புலப்படலானும்,

த்⁴யாயதிப³கோ த்⁴யாயதிப்ரோஷிதப³ந்து⁴꞉।

"கொக்குத் தியானிக்கின்றது; பந்துவானவன் இல்லாதோனையுற்றுச் சிந்திக்கின்றான்'' என்பனவகளிலே கூறுதல் போல, அங்கசேட்டையற்றவராய், உறுதியாகிய கட்பார்வை உற்றவராய், ஒரேவிஷயத்தில் மனஞ் செலுத்தினவராயுள்ளவர்களிடத்திலே தியானம் விவகரிக்கப்படுகின்றமையானும், மற்றோரியல்பினதாகிய அன்னிய சிந்தனையினால் தடுக்கப்படாது தைல தாரைபோலப் பிரிவுபடாத நினைவின் தொடர்ச்சிரூபமாகிய ஏகாக்கிரசித்தம் தியானத்தில் ஆவசியகம் இன்றியமையாததலினாலும், தியானஞ் சித்திக்குமாறு ஆசனநியமம் ஆவசியகம் கவனிக்கற்பாற்று. (அ)

அசலத்வஞ்சாபேக்ஷ்ய (ச. க. கூ)

## (சஎஅ) சலியாமையையும் அபேக்ஷித்து.

த்⁴யாயதீவ ப்ருதி²வீ த்⁴யாயதீவாந்தரிக்ஷம் (சாந். எ. சு. க)

"பிருதிவி தியானித்தல்போல, அந்தரிக்ஷம் தியானித்தல்போல'' என்றற்றொடக்கத்தவாக்கியங்களிலே பிருதிவியாதிகளின் சலியாமையை அபேக்ஷித்துத் (தியானம்) பிரயோகிக்கப்படுகின்றமையான், ஒருவர் இருந்தே தியானித்தல்வேண்டும். பூமிமுதலியபோலச் சலனமற்றிருப்பவனுக்கே தியான சந்ததி கூடும். (கூ)

ஸ்மரந்தி ச (ச. க. கo)

(சஎகூ) ஸ்மிருதியும் கூறுகின்றது.

ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸநமாத்மநஃ | நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜிநகுஶோத்தரம்‌| தத்ரைகாக்ரம் மநஃ க்ருத்வா யதசித்தேந்த்ரியக்ரியஃ| உபவிஶ்யாஸநே யுஞ்ஜ்யாத் யோகமாத்மவிஶுத்தயே (பகவற்கீதை. சு. கக, கஉ)

"பரிசுத்தமாகிய ஓர் ஸ்தானத்திலே அதிக உயரமல்லாததும், அதிக தாழ்வில்லாததும், தருப்பை, மான்றேல், வஸ்திரம் என்பவைகளின் ஒன்றினால் ஆக்கப்பட்டதுமாகிய தன் ஆசனத்தை ஸ்திரமாக்கி, அதில் உட்கார்ந்து, மனசை ஏகாக்கிரமாக்கி, சித்த இந்திரியங்களை அடக்கி, ஆன்மசுத்தியின் பொருட்டு யோகஞ் செய்க என உபாசகர்களுக்கு ஆசனநியமாதிகளை ஸ்மிருதி விதித்தலின், ஒருவர் இருந்துகொண்டே பிரமத்தை உபாசிப்பாராகளென்பது சித்திக்கின்றது. (கo)

(எ) யத்திரைகாக்கிராதிகரணம்.

---

யத்ரைகாக்ரதா தத்ராவிஶேஷாத் (ச. க. கக)

**(சஅo) எங்கே ஏகாக்கிரம் (இயலுமோ), அங்கே தியானம் கூடும்; பேதமில்லாமையான்.**

உபாசகனுக்கு ஆசனநியமம் கூறப்பட்டது. அதுபோலத் தேசமும் காலமும் நியமமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அங்ஙனமோர் நியமம் இருத்தல்வேண்டும் என்பது யதார்த்தமே. எங்ஙனமெனின்,

ப்ரஹ்மயஜ்ஞேந யக்ஷ்யமாணஃ ப்ராச்யாம்திஶி (தைத். ஆரணி. உ. கக. கரு)
"பிரம யஞ்ஞஞ் செய்யமுயன்றோன் கிழக்கு நோக்கி அங்ஙனஞ் செய்வானாக" எனத் திக்கு நியமமும்,

ப்ராசீந ப்ரவணே வைஶ்வதேவேந யஜேத|

"கிழக்குச் சரிந்த இடத்தில் வைசுவதேவரைக்கொண்டு யஞ்ஞஞ் செய்க" எனத்தேசநியமமும்,

அபராஹ்ணே பிண்ட பித்ருயஜ்ஞேந சரந்தி|

"பிண்டப்பிதிர் யஞ்ஞங்கொண்டு பிற்பகலில் யஞ்ஞஞ் செய்கின்றார்" எனக் காலநியமமும் இருத்தல் போல, ஈண்டும் உபாசன கன்மம் சுருதியில் விதிக்கப்பட்டமையின் பேதமில்லையாமெனின், திக்கு முதலிய நியமம் யுக்தமாம் எனின்,

(சித்தாந்தம்) உபாசனாவிஷயத்திலே திக்குமுதலிய நியமம் இல்லை. ஏகாக்கிர சித்தமே உபாசனைக்கு முக்கியசாதனம். உண்மையில் அங்குத் திக்குமுதலிய அபேக்ஷை யில்லை. எங்கே இராகத்துவேஷ முதலிய குற்றங்களுக்கு ஏதுவில்லையோ, அங்கே மனசு ஏகாக்கிரமாய் இருக்கின்றது. அவ்வளவுதான் வேண்டியது;

விவிக்தடுதெஶெ சு ஸுவாஸநஸ்தஃ (கைவ)

"தனியிடத்திலே சுகாசனஸ்தனாய்" என்று சுருதி கூறுதலின். சிவசந்நிதியிற் செய்தால் அனந்தமாம் என்றது ஜபமுதலிய விஷயம் பற்றியன்றித் தியானவிஷயம் பற்றி அன்று. ஏகாக்கிரம் முக்கியமாய் வாய்ப்பின் அங்குஞ் செய்யலாம். ஆகலின், ஏகாக்கிரசித்தத்தைமாத்திரம் சாதகஞ் செய்யும் தியானரூபமாயுள்ள உபாசனைக்குத் திக்குத் தேச கால நியமமில்லை. (கக)

(அ) ஆப்பிராயணாதிகரணம்.

---

ஆப்ராயணாத்தத்ராபி ஹி த்ருஷ்டம் (௪. க. கஉ)

(௪-அக) (உபாசனை) மரணாந்தம் வரையும் (அப்பியசித்தல் வேண்டும்); யாதினாலெனின், அங்கும் அது காணப்பட்டிருக்கின்றது.

மேலை அதிகரணத்திற் பிரமோபாசனையிலே திக்காதி நியமம் இல்லை என்று கூறப்பட்டது. ஈண்டுப் பின்னர் அதற்கு ஒரு முடிபு உண்டா? இல்லையா? என விசாரிக்குமிடத்து,

(பூருவபக்ஷம்) விருப்பமுள்ளவரையில் உபாசனை அநுஷ்டிக்கலாம், இன்றேல் நிறுத்திவிடலாம் எனின்,

(சித்தாந்தம்) மரணபரியந்தம் தினந்தோறும் உபாசனை செய்யற்பாற்று, ஓர்போதும் நிறுத்தற்பாற்றன்று;

ஶஹரஹர்வா ஸம்விஶ ஸ்வர்கம் லொகமெதி (சாந். அ. ந. ந)

"இங்ஙனம் தினந்தோறும் தியானிப்பவன் சுவர்க்கத்தை அடைகின்றான்" எனவும்,

ஸ வெல்வம் வர்த்தயந்யாவதாயுஷம் ப்ரஹ்மலொகமபிஸம்பத்யதெ।

(சாந். அ. கரு. க)

"சீவகால முழுமையும் இங்ஙனம் ஒழுகுகின்றவன் பிரமலோகத்தை அடைகின்றான்" எனவும் மரணாந்தம் வரையில் உபாசனை உளதாகச் சுருதியிற் கூறப்படலான். பிரமநிலைக்குச் செலுத்தும் பிரமபாவனை செய்துவருங்கால் அதனை இடையில் விட்டுவிடுதலாகாது. உபாசகர்கள் பிரமத்தைத் தமது ஆன்மாவாக இடையீடின்றித் தியானித்த பின்னரே பிரமரூபம் உபாசகர்

களிற் பிரகாசிக்கின்றது. ஆகலின், பிரமரூபம் பிரகாசிக்கும்பொருட்டு முற்றறிவும், வரம்பிலின்பமும், சுவயம்பிரகாசமும், தன்வயமும், பேரருளும், முடிவிலாற்றலுமுடைய பரப்பிரமம் இடையீடின்றிப் பாவிக்கற்பாற்று.

யாதே ருத்ர ஶிவா தநூரகோராऽபாபகாஶிநீ | தயா நஸ்தநுவா ஶந்தமயா கிரிஶந்தாபிசாகஶீஹி (யசுர். வே. ச. ரு. க. க)

"உருத்திரரே! காருண்ணியமும் மனோகரமுமாய்ப் பாவமில்லாதோரிடத்து விளங்குவதாயும் ஆனந்தரூபமாத்திரமாயுமுள்ள எந்தத் தனுவுண்டோ, அந்தத் தனுவோடு மங்களரூபமாகக் கிரியிலிருந்து உமது பூரணப் பிரகாசத்தோடு எங்களுக்கு விளங்குவீராக" என்னும் உருத்திரத்தினாலே, பிரமசொரூபம் உபாசகரிடத்துப் பிரகாசிப்பதாகக் கேட்கப்படுகின்றது. அஃதாவது: அநாதிமல கன்மவாசனைகளால் ஏறுண்ட தேவாதி சரீராபிமான பிரவாக சித்தமாயும், ஆத்தியான்மிகாதிபேத பின்னமாயும், சகித்தற்கரிதாயுமுள்ள சம்சாரநோயை உபாசகர்களிலிருந்து உருக்கிவிடுதலினால் உருத்திரர் எனப்படுகின்றார். பரப்பிரமசிவனாராகிய பரமேசுவரரே (ஈண்டு) உருத்திரர் என விளிக்கப்பட்டனர்.

ஹே ருத்ர—பரமேசுவரரே!

யாதே தநூঃ ஶிவா—உமது சரீரம் எதுவோ, அது சிவை(அருள்); அஃதாவது அது நித்தியப்பிரசித்தமாய், பாவமிலாததாய், (அதனால்) பரமவிசுத்தமாய், பரமமங்களமயமாய், பரமமங்களத்தைக் கொடுப்பதென்பது. (அதனால்) அது கோரமிலாது சிவத்துவத்தோடியைந்தது என்பது.

பாப என்றமையால் உபலக்ஷணைகொண்டு புண்ணியமுங் கொள்ளப்பட்டது. புண்ணியபாவங்களையெல்லாம் ஞானக்கினிகொண்டு தகிக்கும் முத்தான்மாக்கள் அபாபா எனப்படுவர்.

தாபகாஶிநீ—இவர்களிடத்தில் (சிவபிரான்) விளங்குதலால் அபாபகாசினி எனப்படுவர்.

தயா ஶந்தமயா—(ஆநந்தோ ப்ரஹ்மண ஆநந்தঃ) "அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என்றற்றொடக்கத்த சுருதியினாலே சித்தித்தவாறு, ஒப்பிறந்த ஆனந்தரூபமாகிய எந்த உமது தனு உண்டோ, அதனால் எங்களுடைய சம்சாரகாரணமாகிய புண்ணியபாவத்தொகுதியை அகற்றி, எங்களிடத்திலே சுவப்பிரகாசத்தோடு சாக்ஷாத்காரமாக மிகுதியும் விளங்குக" என உபாசகர் வேண்டுகின்றனர்.

ஆகலின், உபாசகருடைய ஆன்மாவிற் பிரமசொரூபம் பிரகாசிப்பதால் அந்தப் பிரகாசத்துக்குக் காரணபூதமாகிய பிரமபாவனையானது சீவபரியந்தம் அப்பியசித்தல்வேண்டும், ஓர்காலும் அதனை இடையில் விச்சேதம் செய்தல் கூடாது. (கஉ)

## (கூ) தததிகமாதிகரணம்.

ததயிமூ உத்தரபூவா3வஷ்லாவயொரஸ்லூஷவிநாஸௌ தத்3வ்யபதே3ஸாத் (ச. க. கரு)

(சஅஉ) இதன் பேற்றிலே, உத்தரபாவங்களின் பற்றுமையும், பூருவபாவங்களின் அழிவும் (எய்தும்); இது கூறப்பட்டிருத்தலின்.

மேலை அதிகரணத்திலே பாவங்கள் நீங்கிய உபாசகருடைய ஆன்மாவிலே மிருதியும் பிரமசொரூபம் பிரகாசிப்பதென நியாயங்களோடு கூறப்பட்டது.

இப்போது உபாசகன் விஷயத்திற் பாவக்ஷயம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) உபாசகர்களுக்கும் (பாவ) போகமில்லாது பாபக்ஷயம் இல்லை;

நாபு4க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஸதைரபி।

"கற்பகோடி காலஞ் சென்றாலும், துய்க்கப்படாது கன்மம் நசியாது" என்னும் வசன முண்மையான். போகத்தின்பொருட்டே சரீரமெய்துங்காற் பின்னரும் கன்மம் வருகின்றமையின், மோக்ஷத்துக்குக் காலம் வாராது எனின்,

(சித்தாந்தம்) உபாசகர் விஷயத்திற் சகல பாவகன்மமும் ஒழிந்து போம். என்னை! உபாசனை தொடங்கியபோதே அதின் சாமர்த்தியத்தினாலேதான் முன் செய்த பாவங்களின் விநாசமும், பின் செய்யும் பாவங்களிற் றொடக்குண்ணுமையும் எய்துகின்றன; எங்ஙனமெனின்,

தத்3யதே2ஷீகாதூலமக்3நௌ ப்ரோதம் ப்ரதூ3யேதைவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ3யந்தே (சாந். ரு. உச. ந)

*"பஞ்சு அக்கினியிலிடப்பட்டு எரிந்துபோதல் போல, அவன் பாவங்க

* யதா2வஹ்நிர்மஹாதீ3ப்த: ஸு2ஷ்கமார்த்3ரஞ்ச நிர்த3ஹேத்।
ததா2ஸு2பா4ஸு2ப4ம் கர்ம ஜ்ஞாநாக்3நிர்த3ஹதே க்ஷணாத்।
பத்3மபத்ரம் யதா2தோயை: ஸ்வஸ்தை2ரபி ந லிப்யதே।
ஸ்வபா4விவிஷயாம்ஸோஹி ஸ்வயுஞ்ஜாநீ ந லிப்யதே।

"எங்ஙனம் பேரொளியுடைய அக்கினியானது உலர்ந்த விறகையும் உலராவிறகையும் தகிக்கின்றதோ, அங்ஙனம் ஞானக்கினியானது புண்ணியபாவங்களை க்ஷணப்போதிலே தகித்துவிடுகின்றது" எனவும், எங்ஙனம் தாமரையிலையானது தனக்கு ஆதாரமாய் நிலைத்த ஜலங்களினாற்றொடக்குண்ணவில்லையோ, அங்ஙனம் ஞானி சப்தாதிவிஷயங்களினாற்றொடக்குண்ணான்" எனவும் சிவதருமோத்தராகமம் சாந்தோக்

ளெல்லாம் எரிந்துபோம்''

யதா புஷ்கரபலாச ஆபோ ந ச்லிஷ்யந்த ஏவமேவம் விதி பாபம் கர்ம ந ச்லிஷ்யதே (சாந். ச. கச. ரு).

'தாமரையிலையில் நீர் ஒட்டாதது போல, அதனை அறிந்தவரிடத்துப் பாவ கர்மம் பற்றாது'' என்று சுருதி கூறுதலின். ஆகலின், முற்பாவங்களின் நாசமும் பிற்பாவங்களின் தொடக்குறாமையும் எய்துகின்றனவே. பாவப்பயன் துய்க்கப்படாது தொலையாதென்பது அஞ்ஞானியின் விஷயமாதலின், ஈண்டு விரோதமுறாது. (கந)

## (கய) இதராச்சிலேஷாதிகரணம்.

---

இதரஸ்யாப்யேவமஸம்ச்லேஷ: பாதே து (ச. க. கச)

(சஅந) மற்றதற்கும் அவ்வாறே பற்றில்லை; ஆனால் மரணத்தில்.

வித்துவானுக்குப் பாவலேசம் இல்லை என நிரூபிக்கப்பட்டது. ஈண்டு அதற்கு விரோதமாகிய புண்ணியலேசம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) ஞானவிரோதமாகிய பாவத்துக்கு க்ஷயமிருத்தல் யுக்தம். வித்தைக்கு அங்கமாக உடன் செல்லவேண்டுதலின் புண்ணியத்துக் கன்றும் எனின்,

(சித்தாந்தம்) நிரூபிக்கப்படுகின்றது. வித்துவானுடைய புண்ணியமும் முத்திக்கு விரோதமாய், விரும்பாத பலத்தையுடைமையால் (அவனைப்)பற்றாது நாசமுறும். வித்தைக்கு அநுகுணமாய ஆரோக்கிய முதலிய பயனாகிய புண்ணியம் மரணகாலத்தில் ஒழிந்துபோம். வித்தைக்கு அங்கமாகிய கன்மமோ எனின், காமிய பலாதி சம்பந்தமில்லாமையாற் பற்றாது. ஆகலின், வித்துவான் விஷயத்திற் புண்ணிய லேசமும் இல்லை என நிர்ணயிக்கப்பட்டது. (கச)

## (கக) அநாரப்தகாரியாதிகரணம்.

---

அநாரப்தகார்யே ஏவ து பூர்வே ததவதே: (ச. க. கரு)

(சஅச) ஆனால் பயன்கள் கொடுக்க ஆரம்பிக்காத முந்

---

கிய சுருதிப்பொருட்கியைந்து கூறிற்று.

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

(திருக்குறள். ஙசுo)

தியபுண்ணியபாவங்கள் மாத்திரம்; அது எல்லையாகக் குறிக்கப்பட்டமையின்.

மேலை அதிகரணத்திலே, வித்துவானுக்கு உத்தர பூருவ புண்ணிய பாவகளின் தொடக்குறுமையும் நாசமும் நிரூபிக்கப்பட்டன.

ஈண்டு அந்தப் பிராரப்தகன்ம காரியங்களுக்கும் நாசமுண்டா? இல்லையா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ஸவெ-லிவாபூா நஃ வூ-ஒ-வியஜெ|

"பாவமெலாம் ஒழிகின்றன" எனச் சுருதியானது பேதமின்றிச் (சகலபாவங்களையும்) கூறினமையின், வித்தியாமார்க்கத்திற் பிரவேசித்தற்கு முன்னர்ச் செய்யப்பட்ட புண்ணியபாவங்களும் நாசமுறுமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். வித்தையிலே பிரவேசித்தற்கு முன்னர்ச் செய்யப்பட்ட பலத்தைக் கொடுக்கப் பிரவிருத்திக்கும் புண்ணியபாவங்களுக்கு விநாசம் எய்தும்.

தஸ்ய தாவதெவ விரஂ யாவஂ விமொக்ஷ்யெ௨ய ஸஂவத்ஸ்யெ|
(சாந். சு. கச. உ)

"சரீரத்திருந்து விடுபடாதகாலம்வரையும் அவனுக்குத் தாமசம், பின்னர்ப் பூரணனுவன்" எனச் சுருதியானது சரீரபதனத்தை எல்லையாக வைத்துக் கூறலின், பேற்றைக் கொடுக்க முயன்ற பிராரப்த புண்ணிய பாவத்துக்கு நாசமில்லை. (கரு)

## (கஉ) அக்கினிகோத்திராதிகரணம்.

---

அக்நிஹொத்ராதி து தத்காயாயைவ தத்தா்ஶநாத் (ச. க. கசு)

**(சஅரு) ஆயின் அக்கினி கோத்திரமுதலியன அது அடைதற்கே காரணமாகின்றன; சுருதியிலே காணப்படுகின்றமையான்.**

மேலை அதிகரணத்திலே வித்துவானுக்குப் புண்ணியபாவங்கள் பற்றுமையும் (அவை) நாசமுறுதலும் நிரூபிக்கப்பட்டன. மரணபரியந்தம் உபாசனை நிலைக்கவேண்டும் எனவுங் கூறப்பட்டது.

ஆயின் இப்போது அக்கினிகோத்திரமுதலியவும் மரணபரியந்தம் நிலைத்தல் வேண்டுமா? இன்றேல் மத்தியில் விடப்படல்வேண்டுமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) அக்கினிகோத்திரமுதலியன மரணபரியந்தம் அநுட்

டிக்கவேண்டியதில்லை; செய்தாலும் அது நாசமுறுதலான். அப்பிரயோசன மாகிய விஷயத்தில் எவனுக்கும் மனசு பிரவிருத்திக்காதெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அக்கினிகோத்திரமுதலியன வித்தைக்கு அநுகூலமாயிருத்தலின், மரணபரியந்தம் அநுட்டிக்கத்தக்கது. அவ்வாறே சுருதியும்

தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா நாஶகேந (பிரு. சு. ச. உஉ)

"பிராமணர் வேதாநுவசனத்தினாலும், யஞ்ஞத்தினாலும், தானத்தினாலும், தபசினாலும், உபவாசத்தினாலும் பிரமத்தை அறிய நாடுகின்றனர்" என்று கூறுகின்றது. ஈண்டு வேதாநுவசனம் என்றது வேதாப்பியாசத்தின் மேற்று. (அஃதாவது) சிவபெருமானை அடைதற்குச் சாதனமாகிய பரம ஞான ஹேதுவாயுள்ள அத்தியான்ம வாதங்களாகிய வேதமந்திரங்களின் ஜப ஆவிருத்தியேயாம்.

அத ஹைநம் ப்ரஹ்மசாரிண ஊசு:| கிம் ஜப்யேநாம்ருதத்வம் ப்ரூஹீதி| ஸ ஹோவாச யாஜ்ஞவல்க்ய: ஶதருத்ரீயேணேதி| ஏதாநி ஹவா அம்ருதஸ்ய நாமதேயாநி ஏதைர்ஹவா அம்ருதோ பவதி (ஜாபாலம்)

"பின்னர்ப் பிரமசாரிகள் அவரை நோக்கி, பகவானே! அமிர்தத்துவத்தை அடைதற்கு எம்மந்திரங்கள் செபிக்கற்பாலன என்று கேட்ப, யாஞ்ஞவற்கியர் சதருத்திரீயத்தினாலே என்றும், இவை அமிர்தத்தின் பெயர்களாம் என்றும், அவற்றால் ஒருவன் அமிர்தத்துவத்தை அடைகின்றான்" என்றும் கூறினராக ஜாபாலோபநிடதத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

ய: ஶதருத்ரீயமதீதே ஸோऽக்நிபூதோ பவதி| ஸ வாயுபூதோ பவதி| ஸ ஸுராபாநாத் பூதோ பவதி| ஸ ப்ரஹ்மஹத்யாத் பூதோ பவதி| அத்யாஶ்ரமீ ஸர்வதா ஸக்ருத்வா ஜபேத் அநேந ஜ்ஞாநமாப்நோதி ஸம்ஸாரார்ணவநாஶநம் (கைவ)

"தினந்தோறும் பிராமணன் சதருத்திரீயத்தைப் படிக்கின்றான்; அக்கினியினாலே சுத்தமாகின்றான்; வாயுவினாலே சுத்தமாகின்றான்; சுராபானத்தினின்று நீங்கிச் சுத்தனாகின்றான்; பிரமகத்தியினின்று சுத்தனாகின்றான்; எவன் அத்தியாசிரமியாய்ப் (பாசுபதவிரதனாய்) எப்போதுமேனும், ஓர் முறையேனும் ஒருவன் (அதனை) செபிக்க; இதனால் ஞானத்தை அடைகின்றான்; சம்சாரசாகரம் ஒழிந்துபோகின்றது" எனக் கைவல்லியோபநிடதத்திற் கூறப்படுகின்றது. (ஈண்டு) பிரமத்தைப் போதிக்கும் சதருத்ரீயமந்திரங்

களை அப்பியசித்தலாற் சம்சாரத்தை நாசமாக்கும் பரமஞானம் எய்துகின்றது. ஞானத்துக்கு விரோதமாகிய பாவத்தின் க்ஷயமும் எய்துகின்றதெனப் புலப்படுகின்றது.

ஊ_தா_நிஹவா கூ்ரு_தஸ்ய நாமெயெயா்_நி (ஜாபாலம்)

"இவை அமிர்தத்தின் பெயர்கள்" என்றமையால் அமிர்தரும், அநாதிமுத்தருமாகிய சிவனரது நாமங்களை அடக்கிய சதருத்திரீயசேபத்தினல், சகலபாவங்களும் க்ஷயமாகும் என்று பிரதிபாதிக்கப்படுகின்றமையின், பரமசிவனரதுசிவமுதலிய நாமதேயங்களின் அப்பியாசமும் வித்தியாவிரோதியாகிய சகல பாவக்ஷய ஹேதுவெனப் பெறப்படுகின்றது. அங்ஙனம் முண்டகோபநிடதமும்,

சுவிவா ய ஞ்ணா ஊஸ்லிவ ஐ_தி வாசு0 வெ_தெ_தநஸஹ ஸ0வஷெ_தெ_தநஸஹ ஸ0வெஸெ_தெ_தநஸஹ ஹ்ரு_ஜீ_த (முண். ங. உ. கூ)

*"சண்டாளனுயிருப்பினும் சிவஎன்று சொல்வானேல், ஒருவர் அவனோடு பேசுக, அவனோடு வசிக்க, அவனோடிருந்துண்க" என்று கூறுகின்றது. ஈண்டுப் பிரமத்தை உணர்த்தும் சிவசப்தத்தை உச்சாரணஞ் செய்தன்மாத்திரத்தினலே, அத்தியந்த அசுத்தனுகிய பாதகனும் பரமசுத்தனுகின்றுன் எனப் பெறப்படுகின்றது. பின்னரும் பிறிதோரிடத்தில்,

யொ zஷவஶிரஸ0 ஬்ராஹணொ_நி_த்யெ_மீதெ|

"அதர்வசிரசைப் பிராம்மணன் தினந்தோறும் படிக்கின்றுன்" என்றுதொடங்கி, அப்படிப்படிப்பவனுக்குச் சகல பாவமும் க்ஷயமாகும் என்று கூறி,

ஸக்ரு_ஜஜ்ஷ்வா ஶுசிঃ வ_தঃ க0ணொ்_ஹவதி| த்வி_தீய0 ஜஷ்வா நாணவ_த்யொவெ_தி| த்ரு_தீய0 ஜஷ்வா ஷெவமெவா_நுவ_ரவிஶதி|
(அதர்வசிரசு)

"ஒருமுறைசெபித்தாற் சுசியுடையனும், சுத்தனும், கன்மத்துக்குயோக்கியனுமாகின்றுன்; இருமுறைசெபித்தாற் காணபத்தியத்தை அடைகின்றுன்; மும்முறைசெபித்தாற் சிவபிரானைப் போய் அடைகின்றுன்" என மோக்ஷபலமும் பெறப்படுகின்றது.

ஆ_த்மா_நமரணி0 க்ருத்வா ப்ரணவமுத்தராரணிம் (கைவ)

"ஆன்மாவை அரணியாகவும், பிரணவத்தைமேல் அரணியாகவுங் கொண்டு" என்று கூறிய சுருதியாற் பிரணவாதியப்பியாசம் பாசத்தைச்சேதிக்கும்ஏது

*இந்தச் சுருதி சங்கராசாரியர் காலத்துக்குப் பிற்பட்டிலதாய், அச்சங்கராசாரியர் காலத்துக்கு முற்பட்டிருந்த நீலகண்டசிவாசாரியர் காலத்துளதாய்ப் போந்ததென்பதற்கு இச்சைவபாடியத்து (உக-ஆம்) பக்கத்து உதகரிக்கப்பட்ட வாசிஷ்டலிங்கோபப்பிருங்கணமே போதியசான்றும்.

வாதல் கூறப்படுகின்றது. இங்ஙனம் பிறவிடத்தினும் காணப்படுகின்றது. ஆகலின்; சிவசம்பந்தமாகிய வேதமந்திரங்கள் பாவக்ஷயம் செய்தல்வாயிலாகப் பரமஞானத்துக்கு ஹேதுவாகி மோக்ஷசாதனமாயிருத்தலினால், வித்துவானும் அந்த வேதாப்பியாசத்தைச் சீவபரியந்தம் அப்பியசிக்க. இங்ஙனஞ் சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட பலங்களையுடையனவாய அக்கினிகோத்திராதி யஞ்ஞங்களும் அவரால் ஆஞ்ஞாபிக்கப்பட்டு அவரை ஆராதிக்கும் ரூபமுடைமையான் அவை அப்பியசிக்கப்படல் வேண்டும். இங்ஙனம் தானாதிகளும் ஆவசியகம்செயற்பாலன. ஆகலின், வித்துவானும் பூசனைப் பூரணமாக்குமாறு அக்கினிகோத்திரமுதலியவற்றை அநுட்டிக்க வேண்டும். ஈசுரோபாசனையானது கன்ம தப சேப தியான ஞானவடிவாய் உள்ளது. அவற்றுள்ளே கன்மம் அக்கினிகோத்திரம்; தபசு நியமம், அல்லது சரீரத்தை வாட்டுதல்; சேபம் மேலே கூறப்பட்ட பிரணவாதி அப்பியாசம்; இவை பாவத்தை நீக்குதல் வாயிலாக மோக்ஷகாரணமாம். ஞான தியானமும் பிரமசொரூபத்தை நேரே அடைதற்கு ஹேதுவாம். ஆகலின், யாவும் அநுஷ்டிக்க வேண்டும்.

(ஆக்ஷேபம்) அக்கினிகோத்திராதி கன்மங்கள் ஞானோற்பத்தியின் பொருட்டேயாமாயின், இவையொழிந்த முன்செய்யப்பட்ட நற்கருமங்கள் வித்தையிற்றொடங்கும்போது ஒழியும்; அங்ஙனமாயின், (மரணகாலத்திலே) வித்துவானுடைய மித்திரர் எந்த நற்கருமங்களை அடைவர் என, (கசு)

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுவாராயினர்,

அதோऽந்யாபி ஹ்யேகேஷாமுபயோ: (ச. க. கஎ)

(சூஅகூ) இவற்றைப் பார்க்கினும் வேறு (கன்மங்களும் (உண்டு; அவற்றின்) இருவகையைப்பற்றிச் சிலர் (கூறுவர்) அன்றே.

தஸ்ய ஸுஹ்ருத: ஸாது க்ருத்யாமுபயந்தி த்விஷந்த: பாபக்ருத்யாம்।

"அவன் சினேகிதர் நற்கன்மங்களையும் அவன் சத்துருக்கள் தீக்கன்மங்களையும்" அடைகின்றார் என்பது சாட்டியாயன சாகையுடையார் வசனம். ஞானத்தை உண்டாக்கும் அக்கினிகோத்திரமுதலியவற்றுக்கு அன்னியமாயும், பிரபல கன்மங்களினாலே தடைப்படுத்தப்படுகின்ற பயன்களையுடையனவாயும், சகாயமாகிய ஆரோக்கியம் சித்தசுத்திமுதலியவற்றைப் பிறப்பித்தற்கு இயைந்து ஞானத்துக்குவாய்ந்த பயன்களையுடையனவாயும், அதனால் ஞானத்தினாலும் அழிவு எய்தாதனவாயுமுள்ள பூருவோத்தர இருவகைக் கன்மங்களே ஈண்டுக் கூறப்பட்ட விஷயம். (கஎ)

யதேவ வித்யயேதி ஹி (ச. க. கஅ)

(சூஅஎ) வித்தையோடு எதுதான் (செய்யப்படுகின்றது)

என்று (சொல்லப்படுகின்றது) தன்றே.

யதேவ வித்யயா கரோதி (சாந். க. க. க0)

"ஞானத்தோடு செய்யப்படுவதே பலமுடைத்து" என்னுஞ் சுருதியிலே, கன்மபலத்தின் சடையை நீக்குவதே உற்கீதவித்தையின் நோக்கமெனக் கூறப்பட்டமையின், பிரபலமாகிய மற்றோர்கன்மம் குறிக்கப்பட்ட கன்மத்தின்பயனைத் தடுக்கலாம், இன்றேல் அப்பயனுக்குச் சகாயமாகலாம். ஆகலின், வித்தைக்குச் சகாயமாகிய கன்மபலப்பிரதிபந்தத்தை நீக்கும்பொருட்டே அக்கினிகோத்திரமுதலியன அநுட்டிக்கப்படல் வேண்டுமென்பது (சூத்திரத்தின்) கருத்து. (கஅ)

(கசு) இதராக்ஷபணுதிகரணம்.

---

போகேந த்விதரே க்ஷபயித்வாஸம்பத்யதே (ச. க. கசு)

(சஅஅ) போகத்தினலே பிறவற்றைப் போக்கிய பின்னர் அவன் உய்கின்றான்.

ஈண்டு உபாசனையுடையவர்களால், அதிகாரபதத்தில் உள்ளவர்களுக்கு அவர்கள் பதங்களுக்கு வேறாக மோக்ஷபலம் உண்டா? இல்லையா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிராரப்தபோகத்தின் பொருட்டு அநேக சென்மம் உண்டெனக்கொள்ளின், ஓர் சென்மத்திலே அடைந்த வித்தை அடுத்த சென்மத்திலே அழிந்துபோகின்றது. அதனால் யாதொருகன்மஞ் செய்யப்படுகின்றதோ, அதுவும் பலத்தை அநுபவித்தற்கு ஏதுவாகின்றது. ஆகலின், சென்மபரம்பரை இருத்தலால் அவர்களுக்கு முத்தியில்லையாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். பிராரப்தகன்மம் தன்பயனை அடையுமாறு செலுத்துகின்றது. அவை முற்செனனத்தீட்டிய வித்தியாலோபத்துக்கு ஏதுவாயிரா. ஆகலின், அவர்க்கு முத்தியே; சென்மபரம்பராகாரணமின்மையின். சுழுப்திகாலத்திலே மறைப்புளதாயினுற் போல சுழுப்தி மறைப்பைப்போலிருக்கும் சனனமரணமறைப்பும் அவர்கள் வித்தியாலோபத்துக்கு ஏதுவாயில்லை. (கசு)

---

## நான்காம் அத்தியாயத்து
# இரண்டாம் பாதம்.

### (க) வாக்சம்பத்தியதிகரணம்.

வாஜ்மநஸி ஃஶநாஜ்ஜநாத் (௪. ௨. க)
அத ஏவ ச ஸர்வாண்யநு (௪. ௨. ௨)

**(௪அகூ) வாக்குமனசிலே (இலயமாகின்றது); அநுபவமும் சுருதியும் (உண்மையின்).**

**(௪கூ0) அதினுலேதான் எல்லாம் (மனசைத்) தொடர்கின்றன.**

முந்திய பாதத்திலே உபாசகனுடைய உபாசனவியவஸ்தைமுதலாயின கூறப்பட்டன. இந்தப் பாதத்திலே அவன் சரீரத்தை விடுத்து உற்கிராந்தி செய்வதைப் (புறப்படுவதைக்) குறித்து நிரூபிக்கப்படுகின்றது.

அஸ்ய ஸோம்ய புருஷஸ்ய ப்ரயதோ வாஜ்மநஸி ஸம்பத்யதே மநஃ ப்ராணே ப்ராணஸ்தேஜஸி தேஜஃ பரஸ்யாம் தேவதாயாம்। (சாந். சு. அ. சு)

"சௌமிய, இந்த உற்கிராந்தி செய்பவனுடைய வாக்கு மனசிலும், மனசு பிராணனிலும், பிராணன் அக்கினியிலும், அக்கினி பரதேவதையினும் இலயமாகின்றன" என்னும் சுருதியிலே, உற்கிராந்தி செய்பவனுடைய வாக்காதிகள் மனசில் இலயமாகின்றன எனப் பெறப்படுகின்றது. இது நியாயமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) காரியம் உபாதானத்தில் இலயமாகின்றதன்றே; கடமுதலாயின மண்ணிலே இலயமாதல் காணப்படலான். வாக்காதிகளுக்குப் பிரமம் உபாதானம்; மனம் அன்று. ஆகலின், பிரமத்திலேதான் அவை இலயமாதல் யுக்தமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

அஸ்ய ஸோம்ய புருஷஸ்ய ப்ரயதோ வாஜ்மநஸிஸம்பத்யதே। (சாந். சு. அ. சு)

"சௌமிய! இந்த உற்கிராந்தி செய்பவனுடைய வாக்கு மனசிலே இலயமாகின்றது"

ஜிஹ்வயை மநஸி ஸம்பத்யமாநே (பிர. ௩. கூ)

'மனசிலே இலயமுறும் இந்திரியங்களோடு'' என்னும் சுருதிபற்றி, உற்கிராந்தியில் மனசுக்கு முன்னே வாக்குமுதலியவைகள் ஒய்ந்துபோதல்காணப்படுகின்றமையானும், முதற்கண்ணே வாக்கு மனசிலே இலயமாகின்றது. பின் எல்லா இந்திரியங்களும் மனசிலே இலயமாகின்றன. (காரியம்) உபாதானத்தில் இலயமாம் என்றது யுக்தம் அன்று. (காரியத்தின்) சொரூபலயத்துக்குத்தான் உபாதானம் அபேக்ஷிக்கப்படுவது. வாக்காதிகள் மனசில் ஒடுங்குதல் சொரூபலயம் எனப்படாது; பின் அது விருத்திலயம் (என்று கூறப்படும்); ஜலமத்தியிலே எறியப்பட்ட எரிகரியின் பிரகாசமுதலாயின விருத்தி லயமாதல் போல, உபாதானமல்லாதிருப்பினும் மனசில் எய்தும் வாக்காதிகளின் லயத்தை விருத்திலயம் எனக் கூறல் யுக்தமே; விருத்தியுடைய வாக்காதிகள் (மேலே கூறிய) இலய சுருதியினுல் இலயமடைதல் விருத்திலயம் எனப்படும்; விருத்திகளுக்கும் அந்த விருத்தியையுடைய பொருள்களுக்கும் பேதமிலாது அங்கே கூறினமை உபசாரத்தினுல். (க, உ)

## (உ) மநவஸ்சம்பத்தியதிகரணம்.

---

தந்மந: ப்ராண உத்தராத் (ச. உ. ௩)

(சகூக) அந்த மனசு பிராணனில், உத்தரவாக்கியத்தினுல்.

மந: ப்ராணே (சாந். சு. அ. சு)

"மனம் பிராணனிலே (ஒடுங்குகின்றது)'' என்றமையான், வாக்குமுதலிய சர்வேந்திரியங்களோடு கூடிய மனசு பிராணனிலே லயமாகின்றது என்று கேட்கப்படுகின்றது. அந்த லயம் எவ்வியல்பினதென்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) வாக்குமுதலியன உபாதானமல்லாத மனசிலே விருத்திலயம் எய்துக. மனசு பிராணனிற் சொரூபலயமே; பிராணன் மனசுக்கு உபாதானமாயிருத்தலின்.

அந்நமயம் ஹி ஸௌம்ய மந ஆபோமய: ப்ராண: (சாந். சு. ரு. ச)

"சௌமிய! மனம் அன்னமயமே; பிராணன் அப்புமயம்'' என்னும் சுருதி பற்றி, அன்னமயமாதலினுற் பிருதிவியினுலாயது மனசு; அப்புமயமாதலினுற் பிராணன் மனசுக்கு உபாதானம்; (அதனுற்) சொரூபலயம்பற்றி விரோதமில்லையாம் எனின்,

(சித்தாந்தம்) முன்போல (வாக்கிந்திரிய விஷயத்திற்போல); மனசும் பிராணனில் விருத்திலயமே;

மந: ப்ராணே (சாந். சு. அ. சு)

"மனசு பிராணனில் (ஒடுங்குகின்றது)'' என உத்தரவாக்கியமுண்மையான்.

(மனசு பிராணனிலே) சொரூபலயமன்று; பிராணன் மனசுக்கு முக்கியோபாதானமல்லாமைபற்றி அம்மனசு அங்கிருந்து பிறக்காமையான். ஆகலின், பிராணனிலே மனசு விருத்திலயமாயிருப்பதே நியாயம். (ங)

(ங) பிராணசம்பத்தியதிகரணம்.

---

ஸோ॰ ஽ஷ்யக்ஷே தது³பக³மாதி³ப்⁴ய꞉ (ச. உ. ச)

(சகூஉ) அது (பிராணன்) அதிபனோடு (சேர்ந்திருக்கின்றது), அதனோடு இசைதல் முதலியன (கூறப்படலான்).

மேலே சர்வேந்திரியங்களோடு கூடிய மனசு பிராணனிலே இலயம் அடைகின்றதென்று கூறப்பட்டது. இப்போது பிராணன் எங்கே இலயமாகின்றதென்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ப்ராணஸ்தேஜஸி (சாந். சு. அ. சு)

"பிராணன் தேயுவிலே (ஒடுங்குகின்றது)" என்னுஞ் சுருதியினாற் பிராணன் தேயுவிலே ஒடுங்குகின்றதெனின்,

(சித்தாந்தம்) அந்தப்பிராணன் அதிபனாகிய ஆன்மாவோடு கூடுகின்றது; அது தேயுவில் இலயமாகவில்லை;

ஏவமேவேமமாத்மாநமந்தகாலே ஸர்வே ப்ராணா அபி⁴ஸமாயந்தி

(பிரு. சு. ங. ங அ)

"இங்ஙனமே மரணகாலத்தில் ஆன்மாவைச் சூழ்ந்து எல்லாப் பிராணன்களும் கூடுகின்றன" என அந்தப் பிராணன் ஆன்மாவோடு இயைவதாகக் கேட்கப்படுகின்றமையின்.

ப்ராணஸ்தேஜஸி (சாந். சு. அ. சு)

"பிராணன் தேயுவிலே (ஒடுங்குகின்றது)" என்னும் சுருதியிலே தோற்றும் கிரமவிரோதத்தைச் சூத்திரகாரர் பரிகரிக்கின்றனர். (ச)

பூ⁴தேஷு தச்ச்²ருதே꞉ (ச. உ. ரு)

(சகூங) பூதங்களிலே (அது சேர்கின்றது), அவற்றைக் குறித்துச் சுருதியுண்மையின்.

"பிராணன் தேயுவில் ஒடுங்குகின்றது" என்னும் சுருதியில் மற்றைப் பூதங்களோடு கூடிய தேயுவே கூறப்படுகின்றது. ஆகலின், ஆன்மாவோடு கூடப் பிராணனானது பூதங்களிற் கூடுகின்றதென்பதுபற்றி விரோதமில்லை. (ரு)

நைகஸ்மிந் த³ர்ஶயதோ ஹி (ச. உ. சு)

(சகூச) ஒன்றிலே அன்று; (அவை அங்ஙன)மன்றே கூறுகின்றன.

தேயுவிலேமாத்திரம் பிராணன் இலயமாகவில்லை; முப்பிரகாரத்தைப் பற்றிக் கூறிய சுருதி மற்றைப் பூதங்களோடு இசைதலைக்காண்பிக்கின்றது. ஆகலின், ஆன்மாவோடு கூடப் பிராணன் பூதங்களில் இயைகின்றதென்பது பற்றிச் சுருதிவிரோதமில்லை. (சு)

## (௪) அசிருத்தியுபக்கிரமாதிகரணம்.

ஸமாநா சாஸ்ருத்யுபக்ரமாதம்ருதத்வம் சாநுபோஷ்ய (௪. ௨. எ)

(௪கரு) மார்க்கத் தொடக்கத்துக்கு முன்னும் சமானமே; (சரீரசம்பந்தத்தை) தகிக்காமல் அமிர்தத்துவமும்.

ஈண்டு நிரூபிக்கற்பாலதாகிய உற்கிராந்தியானது அர்ச்சிராதி கதித் தொடக்கத்துக்கு முன் வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் சமானமா? இன்றேல் வேறு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சம்சாரபலமும் மோக்ஷபலமும் இரு வேறு காரியங்களாயிருத்தலின், ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் உற்கிராந்தி பேதமாயிருந்ததாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அர்ச்சிராதி மார்க்கத்தொடக்கத்துக்கு முன் வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் உற்கிராந்தி சமமாய் இருந்தது. ஞானிக்குத் தலைநாடி வாயிலாகவே உற்கிராந்தியும் அமிர்தத்துவமுமாம்; மற்றவனுக்கன்று; இதுதான் பேதம்.

ஶதஞ்சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்தாநமபிநிஸ்ஸ்ருதைகா। தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி। (கட. ௬. கசு)

"இதயத்தில் நூற்றோர் நாடிகள் உள்ளன; அவைகளுள்ளே ஒன்று தலையைப் பிரவேசிக்கின்றது; அதுவாயிலாக மேலே போய் ஒருவன் அமிர்தத்துவத்தை அடைகின்றான்; மற்றநாடிகளும் வெவ்வேறு திக்குநோக்கி உற்கிரமணஞ் செய்தற்கு உதவுகின்றன" என்னுஞ் சுருதியுண்மையின். இதற்கு முன் உற்கிராந்தி சமமாய் உள்ளதே. (எ)

## (ரு) ததாபீத்தியதிகரணம்.

ததாபீதே: ஸம்ஸாரவ்யபதேஶாத் (௪. ௨. அ)

(௪கசு) அதனோடு ஐக்கியமாதற்கு முன்னே (சுருதி) சம்சாரநிலையைக் குறித்தலின்.

தலைநாடிவாயிலாக வித்துவானுக்கு உற்கிராந்தி உளதென்றும், பின் அர்ச்சிராதிகதி உளதென்றும் மேலே கூறப்பட்டது.

ஈண்டுச் சரீரத்தைவிட்டுப் புறப்பட்ட வித்துவானுக்கு அர்ச்சிராதிகதி இயையுமா? அன்றா? என்பது சந்தேகம்.

யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேஸ்ய ஹ்ருதி ஶ்ரிதா:। அத மர்த்யோ ம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஶ்நுதே (பிரு. சு. ச. எ)

"அவன் இதயத்தில் ஒர்காற் பிரவேசித்த எல்லா ஆசைகளும் அற்றபின்னர் மரணத்துக்குரியான் அமிர்தனாகின்றான், அங்கே பிரமானந்தத்தைத் துய்க்கின்றான்" எனத் தேகம் விழுந்தபின்னர் அமிர்தத்துவம் எய்துவதாகக் கூறப்படுகின்றது.

தே ர்சிஷமபிஸம்பவந்தி (சாந். ரு. கo. க)

"அவர்கள் அர்ச்சியை அடைகின்றார்கள்" என அர்ச்சிராதிகதியும் கேட்கப்படுகின்றது. அங்ஙனம் இரண்டும் கூறப்படலாற் சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பிரமத்திலே லயமாகிய வாக்கு முதலியன பின்னர்த் தோற்றுதல் கூடாமையான், ஆன்மாவுக்குப் (புறத்தே செல்லும்) கதிகூடாமையான், முக்தான்மாக்களுக்கு அர்ச்சிராதி இல்லையாமெனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. அர்ச்சிமுதலியவாயிலாகப் பிரமத்தை அடைதற்குமுன், சரீரசம்பந்தம் குறித்துச் சம்சாரம் நீங்கவில்லை. விரைவிலே பிரமத்தை அடைகுவன் என்னும அபிப்பிராயம் பற்றியே சுருதியானது (முக்தான்மா) உடனே (அத்ர) அமிர்தத்துவத்தை அடைகின்றான் என்று கூறியதாம். ஆகலின், உற்கிராந்தனுக்கு அர்ச்சிராதிகதியுக்தமே. (அ)

வாக்குமுதலாயின ஒடுங்கிப்போனமையான் அவனுக்குக் கதி ஒவ்வாதாம் என்பது பற்றிச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

ஸூக்ஷ்மம் ப்ரமாணதஶ்ச ததோபலப்தே: (ச. உ. கூ)

**(சகள) அளவினாற் சூக்குமமாகிய (சரீரமுடையன்), அங்ஙனம் (சுருதியிற்) பெறப்படலான்.**

அவன் சரீரத்திருந்து புறப்படலானும் சூக்குமசரீரம் கூடவிருக்கின்றது. இல்லாக்கால், கதி கூடாமைபற்றிச் சந்திரசம்வாதம் எய்தமாட்டாது.

யே வை கே சாஸ்மால்லோகாத்ப்ரயந்தி சந்த்ரமஸமேவ தே ஸர்வே கச்சந்தி।
(கௌஷீ. க. உ)

"இவ்வுலகைவிட்டுப் புறப்படுகின்றவர்கள் சந்திரனை அடைகின்றார்கள்" என்று தொடங்கி,

தமாகதம் ப்ருச்சதி கோஸீதி தம் ப்ரதிப்ரூயாத் விசக்ஷணாத்ருதவோ ரேத ஆப்ருதம் பஞ்சதஶாத்ப்ரஸூதாத் பித்ர்யாவதஸ்தம்

தீஹஸக்ஷெ்ட்ராவாவதப்ரொவாஸகூநிவர்த்தாத்ருதீயொ வா ஸிஹொ வா உெக்ஷ்றா வா வர்ஹா வா வாராஷொ வா ஜெர்ரா வெஷெத்ஷா ஸூநெஷா வாத்யா ஜாயதெ யயாகஷு யயாவித்யெ ஹ ரதஹதம் வயூதி கொ ஜவீதிதம் வாதிவாயாஸு (கௌஷீ. க. உ)

“சந்திரன்தான் சுவர்க்கலோகத்துக்கு வாயில்; சந்திரன் சொல்வனவற்றை அவன் ஆக்ஷேபிப்பானுயின், அவனை இஷ்டப்படி போகவிட்டுவிடுகின்றான்; ஒருவன் சந்திரனை ஆக்ஷேபியாதிருப்பானுயின், சந்திரன் அவனை மழையாகப் போமாறு கீழே அனுப்புகின்றான்; அவன் கன்மங்களுக்கும் ஞானத்துக்கும் இயையப் புழுவாயோ, பூச்சியாயோ, பட்சியாயோ, புலியாயோ, சிங்கமாயோ, மீனாயோ, பாம்பாயோ, மனிதனுயோ, வெவ்வேறிடங்களில் மற்றொன்றாயோ பின்னர்ப் பிறக்கின்றான். இங்ஙனம் பூமிக்குத் திரும்பி வருகின்றவனை (நோக்கி) நீ யார் என்று (ஓர் துறவி) அவனைக் கேட்கின்றான்; அவன் உத்தரமிறுக்கின்றான்” எனச் சுருதியிற் கண்ட பரியங்கவித்தையிலே தேவயானமார்க்கத்தில் ஓர் வித்துவானுக்கும் சந்திரனுக்கும் இடையே நேர்ந்த சம்வாதம் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், சரீரத்தைவிட்டுப் புறப்படும் வித்துவானுக்கு அர்ச்சிராதிகதி எய்துவதாகும். (கூ)

நாவ உெஷொ்நாதஃ (சு. உ. க0)

## (சகூஅ) ஆகலின் அழிவினுல் அன்று.

மேலே கூறிய நியாயத்தினுல்,

உெத்யொ் ஜஷ்யெதா ஹவதி (பிரு. கூ. சு. எ)

“மனிதன் அமிர்தத்துவத்தை அடைகின்றான்” என்னுஞ் சுருதியிற் கண்ட அமிர்தவசனமானது சரீரசம்பந்தம் அற்றவுடனேதானே அமிர்தத்துவம் எய்துவதென்று கருத்தன்று. (க0)

ஸுெஹ்வவொவவதெ்ரெஷ ஊஷ்ா (சு. உ. கக)

## (சகூகூ) அதற்கே பொருத்தமாதலினுலும், இந்த உஷ்ணம் (உளது).

இந்தச் சூக்குமசரீரம் (தூலசரீரத்தின்) ஓரிடத்திருத்தல் பொருத்தமாதலினுல், சூக்குமதேககுணமாயுள்ள உஷ்ணமானது உற்கிராந்தி செய்யும் வித்துவானுக்கும் ஓரிடத்திலே இருப்பதாகப் பெறப்படுகின்றது. அந்த உஷ்ணம் ஸ்தூலதேகத்தின் குணமன்று, பிறிதிடத்தின் (மரணத்தின்) உணரப்படாமையின். ஆதலினுலும் கதியிருத்தல் பொருத்தமே. (கக)

வாதிஷெயாஜீதிவெஹ ஶாரீரஸு ஹூஷா ஹெ்கெஷாழ்

(சு. உ. கஉ)

(௫௦௦) நிஷேதித்தலினல் (அது அங்ஙனமன்று) என்று கூறின், அன்று; ஆன்மாவினின்று (பிராணன்கள் பிரிய) வில்லை; யாதினலெனின், சிலசாகையில் (அது) வெளிப்படை.

தஸ்ய ஹைதஸ்ய ஹ்ருதயஸ்யாக்ரம் ப்ரத்யோததே। தேந ப்ரத்யோதேந ஏஷ ஆத்மா நிஷ்க்ராமதி। சக்ஷுஷ்டோ வா மூர்த்நோ வா அந்யேப்யோ வா ஶரீரதேஶேப்யஸ் தமுத்க்ராமந்தம் ப்ராணோ(அ)நூத்க்ராமதி ப்ராணமநூத்க்ராமந்தம் ஸர்வே ப்ராணா அநூத்க்ராமந்தி।

(பிரு. ௬. ௪. ௨)

"அவன் இதயத்தின் கொழுந்து பிரகாசத்தை அடைகின்றது; அந்தப் பிரகாசத்தினல் ஆன்மாவானது கண்வாயிலாகவோ, தலைவாயிலாகவோ, சரீரத்தின் பிறவிடங்கள் வாயிலாகவோ புறப்படுகின்றது; அவன் புறப்படுங்காற் பிராணன் அவனுக்குப்பின்னே புறப்படும்போது, எல்லாப் பிராணன்களும் அதற்குப்பின்னே புறப்படுகின்றன''' என்றற்றொடக்கத்த வாக்கியங்களால் அவித்துவான் (சரீரத்தினின்று) எவ்வாறு புறப்படுகின்றன் என்று கூறி,

இதி நு காமயமாந: (பிரு. ௬. ௪. ௬)

"ஆசையுடையவனுக்கு அவ்வளவுதான்'' என அவித்துவத் விஷயத்தை முடித்துக்கொண்டு,

அதாகாமயமாநோ யோ(அ)காமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி।

(பிரு. ௬. ௪. ௬)

"விரும்பாதவனுய், விருப்பத்தினின்று நீங்கினவனுய், தன் விருப்பங்களில் திருத்திப்பட்டவனுய், பரமான்மாவை விரும்புவோனுயுள்ள பற்றற்ற அவனுக்குப் பிராணன்கள் உக்கிரமிப்பதில்லை; பிரமமாகிப் பிரமத்தைப் போய் அடைகின்றன்'' என்று வித்துவானுக்கு உற்கிராந்தி (வெளிப்போதல்) மறுக்கப்படலான், இங்கேதானே பிரமத்தை அடைகின்றன் எனின்,

(சித்தாந்தம்) அன்று;

ந * தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி (பிரு. ௬. ௪. ௬)

---

* (௪. ௨. ௧௨-ஆம்) சூத்திரத்தைச் சங்கராசாரியர் இரண்டாகப் பிளந்தமையும்,

ப்ரதிஷேதாதிதி சேந்ந ஶாரீராத்।

என அவர் முற்பாதிச் சூத்திரத்தைத் தமது பாஷ்யத்து (௪. ௨. ௧௨-ஆம்) முற்சூத்திரமாக, நிறுத்தி அதிலே (தமது சூத்திரபாஷ்யத்திலே) நீலகண்டசிவாசாரியர் சார்பாகக் கூறுபவர் போலக் கூறி, பின் அதனை

ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் (வே. சூ. ௪. ௨. ௧௩)

"பிராணன்கள் அவனுக்கு உற்கிரமிக்கின்றில" என்னுஞ் சுருதியினல் உற்கிரமணஞ் செய்து அர்ச்சிராதிகமனத்தின்பொருட்டுப் புறப்பட்ட வித்துவானுடைய பிராணன்கள் அவனைவிட்டுப் பிரிகின்றில என்று கூறப்படுகின்றது; இதன் பொருள் மாத்தியந்தினர் சாகையிலே வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கின்றது;

---

பிற் சூத்திரமாக நிறுத்தப்பட்ட இந்தப் பிற்பாதிச் சூத்திரத்தினற் கண்டித்தற்கு, மற்றோர் அவித்துவான் விஷயம்பற்றி

(க) யத்ராயம் புருஷோ ம்ரியத உதஸ்மாத்ப்ராணா: க்ராமந்த்யாஹோ3நேதி (பிரு. ரு. உ. கக)

"இந்தப் புருஷன் (அவித்துவான்) சாகும்போது பிராணன்கள் அவனைவிட்டு உற்கிரமிக்கின்றனவா? அன்றோ?" என்று ஆர்த்தபாகர் என்பார் வினவிய வினவுக்கு

(உ) நேதி ஹோவாச யாஜ்ஞவல்க்யோ ‘த்ரைவ ஸமவநீயந்தே ஸ உச்வயத்யாத்4மாயத்யாத்4மாதோ ம்ருதஃ சேதே (பிரு. ரு. உ. கக)

" யாஞ்ஞவற்கியர் அன்று (என்று தொடங்கி), இவனிலேதான் (பிராணன்கள்) கூடுகின்றன; அவன் வீங்கி உப்பிச்செத்துக்கிடக்கின்றான்" என்று அந்த யாஞ்ஞவற்கியர் உத்தரமிறுத்தாராக, அச்சங்கராசாரியர் இந்த (க) முதலாம் (உ) இரண்டாம் சுருதி வாக்கியங்களின் தலையையும் அடியையும் தட்டிவிட்டு, எஞ்சியவற்றிற் சில சொற்பொடியிட்டு உண்மைப்பொருள் பிறழ்ந்துபோகப் பொய்படத் திரித்து இயைத்து, (ச. உ. கரு-ஆம்) பிற்பாதிச் சூத்திர மாயாவாதபாஷ்யத்திலே

ந தஸ்மாத்ப்ராணா உத்க்ராமந்த்யத்ரைவ ஸமவநீயந்தே।

"அவனைவிட்டுப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை;இங்கேதான் இலயமடைகின்றன" என்று பொருட்படப் பாவத்துக்கும் நிந்தைக்கும் சிறிதும் அஞ்சாது புகுத்தி உரைத்தமையும்,

ஸமேகேஷாம்।

சில சாகையினர் கூறுமாறு என்று சூத்திரக்கருத்துப் பிரகாரம் கண்ணுவசாகையாகிய பிருகதாரணியத்துக்கு அன்னியமாகிய மற்றோர் மத்தியந்தினசாகை முதலியவற்றினின்று (பிரமாணம் காட்டாது), அந்தக் கண்ணுவசாகையினின்றே தவறுற அவித்துவான் விஷயமாகிய (பிரு. ரு. உ. கக-ஆஞ்) சுருதியை வித்துவான் விஷயமென்று பிழைபட அவர் உதகரித்தமையும், முற்சூத்திரத்தைப் பூருவபக்ஷத்தினிறுத்திப் பிற்சூத்திரம் கண்டிப்பதாயின் ஆனல் (து) என்னும் பதம் எய்தற்பாலதேயாக, முற் சூத்திரபாகத்தை மறுக்காது நியாயம் கொண்டு சாதிக்குமாறு சூத்திரகாரராற் பிரயோகிக்கப்பட்ட (ஹி) என்னும் மொழியை நிறுத்திப் பிற் சூத்திரமாகத் தவறுண்டு அவர் (ச. உ. கரு-ஆஞ்) சூத்திரஞ் செய்தமையும் பிறவும் தவறுமென்று உபக்கிரமணிகை (உகஅ-ஆம்) இலக்கந்தொடுத்து (ருகரு-ஆம்) இலக்கம் வரையும், சச0-ஆம்) இலக்கம் தொடுத்து (சருஉ-ஆம்) இலக்கம்வரையும் நிரூபித்திருக்கின்றேமன்றோ. அங்ஙனமாக,

நீலகண்ட சிவாசாரியாராற் பூருவபக்ஷத்தில் நிறுத்தி மத்தியந்தின சாகை கொண்டு, "அவனைவிட்டுப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" எனப் பொருட்படுத்தப்பட்ட (பிரு. கூ. ச. கூ-இல்), உள்ள

ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி।

என்னுஞ் சுருதியையும், (பிரு. ரு. ரு. கக-இலே)

யொ ऽகாமொ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமொ நதஸ்யப்ராணா உத்க்ராமந்தி (மாத்தியந்தினசாகை)

"எவன் அகாமனுய், நிஷ்காமனுய், ஆப்தகாமனுய், ஆத்துமகாமனுய் இருக்கின்ருனே, அவனினின்று பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது. (கஉ)

*ஸ்மர்யதே ச (சு. உ. கங)

(ருoக) ஸ்மிருதியுஞ் சொல்கின்றது.

ஊர்த்வமேகஃஸ்திதஸ்தேஷாம் யோ பித்வா ஸூர்யமண்டலம் ।
ப்ரஹ்மலோகமதிக்ரம்ய தேந யாதி பராம் கதிம் ॥

(யாஞ்ஞவற்கியஸ்மிருதி. ங. கசுஎ)

---

அத்ரைவ ஸமவநீயந்தே ।

"இவனிலே பிராணன்கள் கூடுகின்றன" என்று சுருதி உள்ளபடி இருந்தமையானும், இது அவித்துவத்விஷயம்பற்றி யிருந்தமையானும் சைவபாஷ்யகாரராற் பொருட்படுத்தாது தவிர்க்கப்பட்டதேயாக, பின்னர் மேலே கூறியவாறு திரிக்கப்பட்ட

அத்ரைவ ஸமவலீயந்தே ।

என்னுஞ் சுருதியையும் மாயாவாதிகளுக்குச் சார்பாக அப்பயதீக்ஷிதயோகியார் சித்தாந்தமாக எழுதிவைத்திருக்கின்ருர் என்று யாரையும் வஞ்சிக்குமாறு, மாயாவாத பண்டிதர்கள் சிவார்க்கமணிதீபிகை (ங. ங. ஙஉ-இல்) ஆக்ஷேபத்துக்கிடனுமென்று முன்பின் ஆலோசனையின்றிப் புகுத்திவைத்தமை விந்தையினும் விந்தையேயாமென்று சைவநேயர்கள் யாவரும் உணர்வாராக. இங்ஙனம் சாமானியருக்கும் பிரத்தியக்ஷமாய் விளங்கக்கிடக்கும் சுருதியைப் பிரித்தும், திரித்தும், இயைத்தும் வஞ்சிக்கப்போந்த மாயாவாதாசாரியர் விசேஷவறிவினர்க்கும் புலப்படாத சூத்திரங்களுக்கு யாது திரிவுபொருள்தான் செய்துவைக்கமாட்டாரென்பதைச் சிறிது யூகிப்பாராக.

*இந்த (சு. உ. கங-ஆம்) சூத்திரத்துக்குச் சைவபாஷ்யகாரர் உதகரித்த சுலோகத்துக்கு மாறுபடச் சங்கராசாரியரால் மாயாவாதிகளுக்குப் போக்குமீட்சி இல்லை என்று காட்டுதற்குத் தமது (சு. உ. கச-ஆஞ்) சூத்திரபாஷ்யத்தில் உதகரிக்கப்பட்ட (ஸ்மிருதி) சுலோகமும் பொருத்தமில்லையாமென்று அறிஞர் உணர்ந்து கொள்வாராக. மாயாவாதிகள் போனகதி தேவர்களுக்கும் காணப்படாமை போல, காணப்படாக் கதியை உணர்த்திய அச்சுலோகமும் மகாபாரத ஸ்மிருதியில் எவ்விடத்தும் காணப்படவில்லை; சாந்திபருவத்து மோக்ஷதருமத்திலே

ஸாங்க்யம் யோகம் பாஞ்சராத்ரம் வேதாஃ பாசுபதம் ததா ।

"சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வைதிகம், பாசுபதம்" என்னும் சுலோகத்தினுல் தியானயோகத்தை உணர்த்தும் வைதிக பாசுபதத்தை முடிவாக உணர்த்திய மகாபாரதமானது ஞானத்து ஞானபாதத்தார்க்கு எய்துவதாகக் கொள்ளப்படும் போக்குமீட்சியில்லாத முத்தியை அம்மாயாவாதிகளுக்குச் சார்பாகக் கூறியதெனக் கருதிச் சங்கராசாரியர் புகுத்தி உதகரித்த அக்கபடச் சுலோகமானது அம்மகாபாரதத்தில் ஓர்போது காணப்படினும் அது ஓர்காலும் அப்போக்குமீட்சியில்லா முத்திப்பொருளைப் பயக்காதென்றும், அங்ஙனம் அப்பொருட்பட மகாபாரதம் ஓர்காலும் கூருதென்றும் ஓர்ந்து மறுக்க.

"அவைகளுள்ளே ஒன்று மேற்கொண்டு சூரியமண்டலத்தைப் பிளந்து போகின்றது; அதனால் அவன் பிரமலோகத்தை அடைந்து மேலான கதியை அடைகின்றான்" என வித்துவானுக்குத் தலைநாடிவாயிலாகக் கமனம் கூறப்பட்டிருக்கின்றது. ஆகலின், அர்ச்சிராதிகதி வித்துவானுடைய உற்கிராந்தி செய்யும் ஆன்மாவுக்கியைந்ததே*. (கரு)

## (சூ) பரசம்பத்தியதிகரணம்.

தாநிவரெதயாஹ்யாஹ (ச. உ. கச)

(ருoஉ) அவைகள் பரத்திலே (ஒடுங்குகின்றன), அங்ஙனஞ் சுருதி கூறுகின்றதன்றே.

மேலை அதிகரணத்திலே பிராணன்களோடு கூடிய சீவான்மா தேயுவோடு கூடிய பூதங்களிலே அடங்குகின்றதென்று கூறப்பட்டது.

தெஜஃ வரஸ்யாං தெவதாயாழ (சாந். சு. அ. சு)

"தேயுவானது பரதேவதையில்" என்பதினால் மற்றப் பூதங்களோடு இயைந்தும், ஆன்மாவோடு கூடியுமுள்ள தேயுவானது பரதேவதையிலே ஒடுங்குகின்றதெனப் பெறப்படுகின்றது.

அந்த லயம் பரப்பிரமத்திற் சொரூபலயமாகக் கூறப்படுகின்றதா? இன்றேற் பகுக்கக்கூடாதவாறு இயைகின்றதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சொரூபலயம் என்பதே யுக்தம்.

தெவாத்தீ (பா. வி. ரு. ச. உஎ)

என்ற வியாகரணசூத்திரப்பிரகாரம், தேவ சப்தமே தேவதா எனப்படும். பரசப்தமானது மகத்துவத்தைக் காட்டுகின்றது. ஆகலின், பரதேவதை என்பது மகாதேவரின் மேற்று.

ஸெயம் தெவதெக்ஷத (சாந். சு. ௩. உ)

"அந்தத் தேவதை விரும்பிற்று"

த்யாவாவ்ருயிவீ ஜநயநெவஏகஃ (தைத். ஆரணி. க0. க. ௩)

"ஆகாயத்தையும் பூமியையும் சிருட்டித்துத் தேவர் ஏகர்" என்னும் சுருதிகளான், அந்த மகாதேவரே சகல பூதகாரணராகிய பரப்பிரமம் எனக் கேட்கப்படுகின்றது. ஆகலின்,அந்த உபாதானமாகிய அவரிலே ஆன்மாக்களோடு கூடப் பூதங்களும் சொரூபலயம் அடைகின்றன என்று கூறுதலே யுக்தமாம் எனின்,

---

*நிர்க்குணோபாசகர்களுக்கு அர்ச்சிராதிகதி இல்லை என்று (௩. ௩. ௩உ-இற்) போல ஈண்டும் புகுத்தப்பட்ட வாக்கியம் மொழிபெயர்க்காது தவிர்க்கப்பட்டது.

(சித்தாந்தம்) பிரமம் உபாதானமாயிருந்தாலும் பூதங்கள் சொரூபலயம் எய்தா? ஆனல் அவை பிரிக்கப்படாதிருத்தல் மாத்திரமே;

வாஜ்ஙவஸி ஸம்வக்ஷ்யெத (சாங். சு. அ. சு)

"வாக்கானது மனசிலே இலயமாகின்றது" என்னும் சுருதியினற் கூறப்பட்ட (இலய) அர்த்தம் இங்கே மற்றோர் பிரகாரமாகப் பொருள்கோடற்கு யாதும் பிரமாணமின்மையின். ஆகலின், மனமுதலியனபோல ஈண்டும் விருத்திலயமாம் என்று சுருதி கூறுகின்றது. (கச)

அவிஹாமொ வவநாத (ச. உ. கரு)

(ருoகூ) பிரிக்கப்படாமை (கொள்ளப்படுகின்றது) வசனமுண்மையான்.

சம்பத்திவசனத்தினற் (சாங். சு. அ. சு) பிரமத்திலே பூதங்கள் பிரிக்கப்படாதிருத்தல் மாத்திரம் என்று பொருள் கொள்வதே யுக்தம். (கரு)

(எ) ததோகோக்கிராதிகரணம்.

---

தடொகொஹ்ஜ்வ நஙக வ்ரகாஶிதஊாரொ விஷ்யா ஸாமஹ்யா-
தெத்ஷஹத்யநுஹ யொ ஹாத்து ஹாதி-நுஷ்ஹ வீதஸநாயிகயா॥
(ச. உ. கசு)

(ருoச) அவன் உறைவிடத்தின் அக்கிரத்திற் சுவாலிப்பு உள்ளது; அதனற் பிரகாசிக்கப்பெற்ற துவாரத்தனுய் வித்தியாசாமர்த்தியத்தினலும், மார்க்கத்தின் அங்கியானத்தினலும், இதயத்துள்ள ஏகரால் அநுக்கிரகிக்கப்பட நூற்றுக்கு மேற்பட்டிருக்கும் பாதையினலே புறப்படுகின்றான்.

மேலை அதிகரணத்திலே வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் அர்ச்சிராதிகதித் தொடக்கம் வரையும் உற்கிராந்தியானது சமானம் என்று கூறப்பட்டது.

புறப்படும் வேளையில் இருவர்க்கும் பேதம் உளதா? இலதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

தெஜஃ வரஸ்யாம் தெவதாயாமு॥

"தேயு பரதேவதையிலே" என்னும் சுருதியினற் பூதங்களோடு கூடப் பரம்காரணரும், பரதேவரும், பரப்பிரமமும், பரமாகாசரூபருமாயினரிலே

வித்துவானும் அவித்துவானும் பிரிக்கப்படாது ஒடுங்கி, க்ஷணம் இளைப்பாறி இருக்கின்றார்கள் என்று சமமாகக் கூறப்பட்டது. ஆகலின், (அவர்களுக்கு) உற்கிராந்தி சமமே.

தஸ்ய ஹைதஸ்ய ஹ்ருதயஸ்யாக்ரம் ப்ரத்யோததே | தேந ப்ரத்யோதேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்நோ வா அந்யேப்யோ வா சரீரதேசேப்ய: (பிரு. சு. ச. உ)

"அவனது இதயக்கொழுந்து பிரகாசிக்கின்றது; அவ்வொளியினால் ஆன்மா கண்வாயிலாகவோ, தலைவாயிலாகவோ, சரீரத்தின் பிற இடங்கள் வாயிலாகவோ புறப்படுகின்றது" எனச் சுருதி கூறுதலின், அவ்விருவர்க்கும் இருதயப்பிரகாசமுதலிய சமமாகக் கேட்கப்படுகின்றன. அதுகொண்டு அவ்விருவர்க்கும் உற்கிராந்தி சமமாயிருத்தலின் பேதமில்லை எனின்,

(சித்தாந்தம்) அன்புடையரும் இதயத்துள்ளாருமாகிய சிவபெருமானுடைய ஆராதனரூபமாயுள்ள ஞானவலிமையினாலும், அந்த ஒளிமார்க்கத்தைத் தியானித்தலாலும், பிரீதிகொண்ட சர்வாநுக்கிரகராகிய அவரால் அநுக்கிரகிக்கப்பட்டு, தனது சொரூபத்தை மறைக்கும் மலமானது துவம்சம் பண்ணத்தக்க வன்மையுடைய அநுக்கிரகதிருட்டியினாற் பார்க்கப்பட்டு அந்த அநுக்கிரகத்தினாலே பிரகாசிக்கப்பெற்ற வாயிலையுடையனாய் நூற்றுக்கு மேற்பட்டுள்ள தலைநாடி வாயிலாக வித்துவான் புறப்படுகின்றான். அவ்வாறு மற்றவன் (போவானல்லன்), பின் அவன் மற்றை நாடிகள் வாயிலாகப் போகின்றான்.

சதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்ய: தாஸாம் மூர்த்தாநமபி நி:ஸ்ருதைகா | தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ஙந்யா உத்க்ரமணே பவந்தி (கட. சு. கசு)

"இதயத்தில் நூற்றோர் நாடிகள் உள்ளன; அவைகளுள் ஒன்று சிரசைப் பிரவேசிக்கின்றது; அதனால் மேலேபோய் ஒருவன் அமிர்தத்துவத்தை அடைகின்றான், மற்றைநாடிகள் வெவ்வேறு திக்குகளில் உற்கிரமணஞ் செய்தற்கு உதவுகின்றன" என்று சுருதி கூறுகின்றது. வித்துவானுடைய உற்கிரமணத்தில் இதுதான் விசேஷம். மேலே கூறப்பட்டவற்றிற் பின்வருவனவெல்லாம் அமைந்துள்ளன:—

ருத்ரோ ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட: |

"உருத்திரர் சனங்களுடைய இதயத்தின்கண்ணே வசிக்கின்றார்"

ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விசுத்தம் (கைவ)

"இதயபுண்டரீகம் துகளற்றதும் அதி தூய்தாயுமுள்ளது" என்றற்றொடக்கத்த சுருதிகளினும்,

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ

(பகவற்கீதை. ௧அ: ௬௧)

"அர்ச்சுன! எல்லாச்செந்துக்களுடைய இதயதேசத்திலே சிவன் இருக்கின்றார்" என்றற்றொடக்கத்த ஸ்மிருதிகளினும் சிவபிரான் சர்வஜன ஹிருதயங்களினும் இருக்கின்றார் எனப் பெறப்படுகின்றது. சுழுப்தியிலே சீவான்மா சுவேந்திரிய விருத்திகளோடுகூட லயமாகி அவரோடு ஏகரசமாகின்றான்.

விஸ்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி: (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨அ)

"விசுவாதிகராயுள்ள மகர்ஷி உருத்திரர்"

ஸர்வோ ஹ்யேஷ ருத்ர: (தைத். ஆரணி. ௧௦. ௨௪. ௪௨)

"எல்லாம் உருத்திரரே" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே நிமித்தகாரணமாயிருத்தலின் விசுவாதிகர் என்றும், உபாதானமாயிருத்தலால் விசுவான்மகர் என்றும் பெறப்படுகின்றது.

ஏக ஏவ ருத்ரோ ந த்விதீயாய தஸ்து: (சுவே. ௩. ௨)

"உருத்திரர் ஏகரே! (அவர்கள்) இரண்டாவதற்காக நிற்கின்றிலர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே அவருக்கு விசுவாதிபத்தியம் கேட்கப்படுகின்றது.

ஶிவ ஏகோ த்யேய: (அதர்வசிகை)

"சிவன் ஒருவரே தியானிக்கற்பாலர்"

யதா சர்மவதாகாஶம் (சுவே. ௬. ௨௦)

"எப்போது ஆகாயத்தைத் தோலாக உடுக்கின்றாரோ" என்னுஞ் சுருதிகளான் இவரையொழிந்து முமூட்சுக்களுக்குத் தியேயமும் ஞேயமுமாகிய வஸ்து இல்லை என அறியப்படுகின்றது.

அஸ்ய ஹி ஜந்தோ: ப்ராணேஷூத்க்ரமமாணேஷு ருத்ரஸ்தாரகம் ப்ரஹ்மவ்யாசஷ்டே யேநாஸாவம்ருதீபூத்வா மோக்ஷீபவதி (ஜாபாலம்)

"அந்தச் செந்துவினுடைய பிராணன் உற்கிரமிக்கும் போது உருத்திரர் தாரகப்பிரமத்தை உபதேசிக்கின்றார்; அதனாலே அவன் சிவனாகின்றான்; உற்கிராந்திசமயத்திலே வித்துவான்களுக்குச் சொரூபப் பிரகாசமுள்ள தாரகப் பிரமத்தை உபதேசிக்கின்றார்" என்று (சுருதி) கூறுகின்றது.

த்வா ராஜாநம் ருத்ரம் (இரு. வே. ௪. ௩. ௧)

"உன்னைக் காத்துக்கொள்ளும்பொருட்டு உன் யஞ்ஞத்துக்குக் கர்த்தாவாக உருத்திரரைத் தேடிக்கொள்" என்ற சுருதிகளிலே, அவர் ஆராதிக்கப்படுதலான் அவருக்குச் சர்வயஞ்ஞாதிபத்தியம் வர்ணிக்கப்படுகின்றது.

உஹொ வீரா ஃவெஷ்ய லெஷஜெஷி ஷிஷஜ ஹ்ணாஷிஷஜாஂ ஶ்ரு ணொகி (இரு. வே. ௨. ௩௩. ௪)

"உருத்திரரே! எங்கள் புதல்வர்களை உமது வைத்திய ஔஷதங்களினுற் பலப்படுத்தும்; ஏனென்றுல் வைத்தியர்களுக்குள்ளே நும்மை மகாவைத்தியர் என்று கேள்விப்படுகின்றேன்" என்று சுருதி கூறுதலின், அவர் சம்சார நோய்க்கு உத்தமவைத்தியர் என நிரூபிக்கப்படுகின்றுர்.

ஃயாஂ து ஹ்ரகூதிஂ விஷ்ாநாயிநஂ து ஃமஹெஶ்வரஂ (சுவே. ௪. ௧௦)

"மாயையைப் பிரகிருதியென்றும், மாயையுடையாரை மகேசுவரர் என்றும் அறிக" என்னுஞ் சுருதியினுற் சகல பிரபஞ்சமாகிய விசித்திர புஷ்ப சமூகங்களைப்பற்றியிருப்பவராய், மாயை எனப்படுபவராயுள்ள பராசத்தியார் அவர்க்கு ரூபமும் ஏகதேச சுபாவமுமுடையராய்ப் பிரதிபாதிக்கப்படுகின்றுர். இதயத்துள்ளாராய், இனியவராய், பிரமமாய், பரமேசுவரராய், பரமமங்கள சொரூபராய், உமாபதியாய், பரமான்மாவாயுள்ள அவர் தமது ஆஞ்ஞாரூபமாகச் சுருதியிலே விதிக்கப்பட்ட சுவாராதன ரூபமாயுள்ள அக்கினிகோத்திராதி கன்மங்களிலே நியதனும், விதிக்கப்படாத சமஸ்த கன்மங்களிலே நின்று நீங்கினவனும், தன்னுற் (சிவனுர்க்கு) அர்ப்பணஞ் செய்யப்பட்ட சகல கன்மபலத்தையுடையனும், அச்சிவனுர்க்கு ஒப்பிக்கப்பட்ட சித்தத்தையுடையனும், சிவனுருடைய ஞானமிர்தத்தினுலே நிறைந்தவனும், சமஸ்த காமியபலன்களையும் ஒழித்தவனும், விவேகாதியுடையனும், சிவபக்தியிலேமாத்திரம் விருப்புடையனும், சிவப்பிரசாதத்தை விரும்பினவனும், வித்தியாவந்தனும், சாதகனுமுள்ள பக்தனைப்பார்த்துச் சரீரம் நீங்குங்காலத்திலே, அவனிடத்திலே கிருபையுடையராய், சம்சாரகளங்கத்தை ஒழிக்கும் அநுக்கிரக திருஷ்டியை அவன்மாட்டுப் பாலிக்கின்றுர். அவருடைய அநுக்கிரக விசேடத்தினுலே இவன் சம்சாரத்துக்குரிய மலம் நீங்கப்பெற்று, பிரகாசமுடைய பரமான்மாவினுல் விளங்கிய சோதியினுல் தலைநாடிவாயிலாகப் புறப்பட்டு ஒளிமார்க்கம் வாயிலாக அவருடைய அப்பிராகிருதமாய நிரதிசயானந்த இயல்புடைய பரமபதத்தை அடைந்து அந்தச் சிவாகாரமாகி, நித்தியநிரதிசயானந்த சொரூபனுகின்றுன். ஆகலின், வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் உள்ள கதி பேதமாம் என்பது யுக்தமே. (௧௬)

## (அ) இரச்சுமியநுசாரியதிகரணம்.

---

ரஶ்ம்யநுஸாரீ (௪. ௨. ௧௭)

(௫௦௫) ஒளியைத் தொடர்ந்தவனுய்.

மேலை அதிகரணத்திலே இதயத்திருக்கும் சிவபெருமானல் அநுக்கிரகிக்கப்பட்ட பக்தன் தலைநாடிவாயிலாகப் புறப்படுதல் கூறப்பட்டது.

அங்ஙனம் புறப்படுபவனுக்கு ஊர்த்துவகதி இரவிலா? பகலிலா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

யத்ரைதத³ஸ்மாச்ச²ரீராது³த்க்ராமத்யதை²தைரேவ ரஶ்மிபி⁴ரூர்த்⁴வ-மாக்ரமதே (சாங். அ. சூ. ரு)

"இந்தச் சரீரத்தினின்று புறப்படும்போது, அந்த ஒளிவாயிலாக அவன் மேலே போகின்றான்" என்னுஞ் சுருதியினல், உற்கிராந்தி செய்பவனுக்கு ஒளிசம்பந்தமாய் மேனேக்கிப்போதல் அறியப்படுகின்றது. ஒளிசம்பந்தமோ பகலிலேதான் எய்தக்கூடியது; இராத்திரியிலன்றும் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். உற்கிராந்தனகிய வித்துவான் ஒளிசம்பந்தத்தினலேதான் ஊர்த்துவமாகப்போகின்றான் என்பது சத்தியம். அது பகலினும் இரவினும் நேரும். கோடை இராத்திரிகாலங்களிலே உஷ்ணம் காணப்படுதலின், இராத்திரியினும் சூரியகிரணங்கள் உள்ளன. ஆகலின், இரவிலேனும் பகலிலேனும் (சூரியன்) ஒளியைத் தொடர்ந்து அவன் ஆன்மா மேலே போகின்றதென நிர்ணயிக்கப்பட்டது. (கஎ)

சூத்திரகாரர் ஆசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

நிஶி நேதி சேந்ந ஸம்ப³ந்த⁴ஸ்ய யாவத்³தே³ஹபா⁴வித்வாத்³ த³ர்ஶயதி ச।
(ச. ௨. கஅ)

**(ருoசூ) இராத்திரியிலே (அது எய்தாது) என்றுகூறின், அன்று; சரீரம் இருக்கும் வரையும் சம்பந்த மிருத்தலின். சுருதியுஞ் சொல்கின்றது.**

(ஆக்ஷேபம்) ஒருவன் இராத்திரியிலே இறந்தாலும் ஒளிசம்பந்தத்தினற் பிரமப்பிராப்தி எய்தும் என்று கூறப்பட்டது. அது இரவில் இயையாது.

தி³வா ச ஶுக்லபக்ஷஶ்ச உத்தராயணமேவ ச।
முமூர்ஷூணாம் ப்ரஶஸ்தாநி விபரீதம் து க³ர்ஹிதம்॥

"பகற்போதும் சுக்கிலபக்ஷமும் உத்தராயணமுமாகிய இவை சாகப்போபவர்களுக்கு நல்லன; அதற்கு மாறானவை கண்டிக்கப்படுகின்றன" என்பதினல், இராமரணம் நிந்திக்கப்படுகின்றதே எனின்,

(உத்தரம்) அன்று; சம்சாரபந்தம் சரீரம் இருக்கும்வரையும் நிலைத்தலானும், இச்செனனத்தில் எய்திய பிராரப்தகன்மமானது—பந்தத்துக்கு

ஏதுவாய்த் தொடங்கப்படாதனவாயுள்ள கன்மங்கள் ஞானத்தினால் அழிந்து போம்போது—இறுதிச் சரீரம் முடியும் வரையும் இருக்கின்றமையானும், இறுதித்தேகமுடிவில் அப்பிராரப்தம் நஷ்டமாகும்போது பிரமத்தை அடைதலில் விக்கினவேது யாதுமின்மையானுமாம்.

தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே।
(சாந். சு. கச. உ)

“சரீரத்திருந்து அவன் விடுபடாதவரையும் அவனுக்குத் தாமசமுண்டு; பின் அவன் பூரணனுபிருக்கின்றான்'' என்னுஞ் சுருதியினால் இரவை மேலே நிந்தித்தமை பிறர் விஷயம்பற்றியது. ஆகலின், இரவில் இறந்தோனும் பிரமத்தை அடைதலின் விரோதமின்று. (கஅ)

அதஶ்சாயநேऽபி தக்ஷிணே (சூ. உ. கக)

(௫0எ) ஆகலினாலும் தக்ஷிணாயனகாலத்தினும்.

ஆகலின், பந்தகேதுத்துவம் இன்மையான் தக்ஷிணாயனத்தில் இறக்கும் வித்துவானுக்கும் பிரமப்பிராப்தி உண்டு. (கக)

யோகிந: ப்ரதி ஸ்மர்யேதே ஸ்மார்த்தே சைதே (சூ. உ. உ0)

(௫0அ) யோகிகளைக் குறித்து இவ்விரு (பாதைகளும்) நினைக்கற்பாலனவாக ஸ்மிருதியிற் கூறப்படுகின்றது.

(ஆக்ஷேபம்) மோக்ஷ இச்சையுடைய வித்துவானைக் குறித்துப் புநராவர்த்திக்கு ஏதுவாகிய காலவிசேஷத்தை ஸ்மிருதி கூறுகின்றது.

யத்ர காலே த்வநாவ்ருத்திமாவ்ருத்திம் சைவ யோகிந:।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥
அக்நிர்ஜ்யோதிரஹ: ஶுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:॥
தூமோ ராத்ரிஸ்ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம்।
தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர்யோகீ ப்ராப்ய நிவர்த்ததே॥
ஶுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே।
ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயாவர்த்ததே புந:॥
(பகவற்கீதை. அ: உ௩—உ௬)

“பரதருள்ளே வலியனே! எக்காலத்துப் புறப்படின் யோகிகள் மீள்வார் என்றும் மீளமாட்டார் என்றும் உள்ள அந்தக் காலத்தை உனக்குச் சொல்வேன்; அக்கினி, சோதி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயணஆறுமாசம் என்பவற்றிற் புறப்படின் பிரமத்தை அறிந்தவர்கள் பிரமத்தை அடைகின்றார்கள். புகை, இராக்காலம், கிருஷ்ணபக்கம், தக்ஷிணாயன ஆறுமாசம் என்பவற்

றில்யோகி சந்திரன் ஒளியை அடைந்து திரும்புகின்றான்; உலகத்தில் இந்தக் கிருஷ்ணசுக்கில பாதைகள் நித்தியம் என்றே மதிக்கப்படுகின்றன. ஒரு மார்க்கத்தினால் மீண்டு வராதிருக்க ஒருவன் போகின்றான். மற்ற மார்க்கத்தினாலேஅவன் திரும்புகின்றான்''. ஆகலின், இராக்காலத்தையும் தக்ஷிணாயனத்தையும் நிந்தித்தமை அவித்துவான்களையுற்றே என்று கோடல் யுக்தம் அன்றெனின்,

(உத்தரம்) கூறுதும். இச்சூத்திரம் மேலே கூறிய ஆக்ஷேபத்துக்கு உத்தரம் என்று கொள்ளப்படுகின்றது. (மேலே கூறப்பட்ட வாக்கியங்களிலே) பிதிர்யானம், தேவயானம் என்னும் இரு பாதைகளுள்ளே (தேவயான) ஒளிமார்க்கத்தினால் வித்துவான்கள் செல்கின்றார்கள் என்றும், மற்றவர்கள் (பிதிர்யான) எதிர்மார்க்கத்தினாற் செல்கின்றார்கள் என்றும், யோகத்துக்கு அங்கமாகக்கொண்டு யோகத்தில் முயன்றோர் நாடோறும் தியானித்தல் வேண்டும் என்று ஸ்மிருதி சொல்கின்றது. முமுட்சுக்களுடைய மரணத்துக்கு எந்த விசேஷகாலங்கள்தான் இயைந்தன என்று சொல்லப்படவில்லை.

நைதே ஸ்ருதீ பார்த² ஜாநந் யோகீ முஹ்யதி கஶ்சந।
தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ ப⁴வார்ஜுந॥
(பகவற்கீதை, அ: ௨எ)

''பிருதாவின் குமாரனே! இந்தப் பாதைகளை அறிந்து யோகி ஒருவனும் மயங்குவானல்லன். ஆகலின, அர்ச்சுன! எக்காலத்தும் யோகத்தில் உறுதியாய் இரு'' என ஸ்மிருதியும் கூறுகின்றது. மேலே உரைக்கப்பட்ட இரண்டாவது மூன்றாவது சுலோகங்களிற் குறிக்கப்பட்டன பிதிர்யான தேவயான பாதைகளாம். மேலே கூறப்பட்ட வாக்கியங்களின் முதலிலே நேர்ந்த காலம் என்னும் பதம் ஆதிவாகிககணங்களைச் சுட்டியது; காலாபிமான தேவதைகள் மிகுதியாயிருத்தலின். ஆகலின, எப்பிரகாரத்தானும் வித்துவானுக்குப் பிரமப்பிராப்தியிலே இரா, தக்ஷிணாயனம், கிருஷ்ணபக்ஷம் என்னும் நிஷேதம் இல்லையே. எப்போது தேகம் நீங்குகின்றதோ அப்போதே பிரமப்பிராப்தி எய்துகின்றது. (௨0)

---

## நான்காம் அத்தியாயத்து

# மூன்றும் பாதம்.

### (க) அர்ச்சிராத்தியதிகரணம்.

அர்சிராதிநா தத்ப்ரதிதே: (ச. ங. க)

(ருoகூ) ஒளி முதலியவற்றால், அது பிரசித்தமாதலின்.

முந்தியபாதத்தில் இதயத்துள்ள சிவபெருமான் அநுக்கிரகத்தினுல் துவாரம் பிரகாசிக்க, உபாசகன் தலைநாடிவாயிலாகத் தேகத்தை விட்டுப் புறப்படுகின்றான் என்று கூறப்பட்டது.

இவ்வியல்பினனுக்குப் பிரமப்பேறானது ஒளியோடுதொடங்கிய மார்க்கத்தினுலேயா? இன்றேல் வேறு பிரகாரத்தினுலுமா? எய்துகின்றதென்பது முதற்கண்ணே விசாரிக்கப்படுகின்றது.

(பூருவபக்ஷம்)

யத்ரஈஸௌ கேஶாந்தோ விவர்த்ததே। வ்யபோஹ்ய ஶீர்ஷகபாலே। பூரித்யக்னௌ ப்ரதிதிஷ்டதி। புவ இதிவாயௌ। ஸுவரித்யாதித்யே। மஹ இதி ப்ரஹ்மணி। ஆப்னோதி ஸ்வாராஜ்யம் (தைத். க. சு)

"உரோமத்தின் வேர் பிரியுமிடத்தில், அவன் தலையின் இரு பக்கங்களையும் பிளந்து, பூ என்று கூறி அக்கினியிற் பிரவேசித்து, புவ என்று சொல்லி வாயுவிற் பிரவேசித்து, சுவ என்று சொல்லி ஆதித்தியனிற் பிரவேசித்து, மஹ என்று சொல்லிப் பிரமத்தைப் பிரவேசித்து, அங்கே சுவராச்சியத்தை அடைகின்றான்" எனப் பிரமப்பிராப்தியானது ஒளிமார்க்கத்தை ஒழிந்தும் அடையப்படுவதாக ஒரிடத்திற் பெறப்படுகின்றது. ஆகலின், பிரமப்பிராப்திக்கு ஒளிமார்க்கம் நியமமின்றும் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. வித்துவான் ஒளிமார்க்கத்தினுலே தான் பிரமத்தை அடைகின்றான்; பஞ்சாக்கினிவித்தை முதலியவற்றிற் (கண்டவாறு)

தே அர்சிஷமபிஸம்பவந்தி (சாந். ரு. கo. க)

"அவர்கள் ஒளியை அடைகின்றார்கள்" என்றற்றொடக்கத்தவற்றால் ஒளிமார்க்கமே பிரமத்தை அடைவிப்பதாகப் பிரசித்தமாயிருத்தலின். "பூ என்று (கூறி) அக்கினியிற் (பிரவேசித்தனன்)" என்றற்றொடக்கத்த மந்திரங்களிலே பிரமத்தை அடையும் மார்க்கம் கூறப்படவில்லை. பின்னையோ அங்

தந்த விபூதிப் பிராப்தியே கூறப்பட்டது. ஆகலின், பரப்பிராப்தி ஒளிமார்க்கத்தினாலேயாம்.* (௧)

## (௨) வாயுவதிகரணம்.

---

வாயுமப்தாதவிஶேஷவிஶேஷாப்யாம் (௪. ௩. ௨)

**(௫௰) வருஷத்திலிருந்து வாயுவை (அறியவேண்டும்), அவிசேஷத்தினாலும் விசேஷத்தினாலும்.**

இங்கே கேட்கப்பட்ட அர்ச்சிராதி மார்க்கக் கிரமத்தின் மத்தியிலே மற்றோர் சுருதியில் எய்திய கிரமம் இங்கே புகுத்தற்பாலதா? இன்றேல் இதுவே மார்க்கக் கிரமமா? என்பது சந்தேகம்.

தே(அ)ர்சிஷமபிஸம்பவந்த்யர்சிஷோ(அ)ஹரஹ்ந ஆபூர்யமாணபக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யான்ஷடுதங்ஙேதி மாஸாம்ஸ்தான்மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யமாதித்யாச்சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம் தத்புருஷோ(அ)மாநவ: ஸ ஏநான்ப்ரஹ்ம கமயதி।

(சாந். ௫. ௰. ௧, ௨)

"அவர்கள் ஒளியை அடைந்து, ஒளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூருவபக்ஷத்துக்கும், பூருவபக்ஷத்திலிருந்து உத்தராயணத்துக்கும், (உத்தராயண) மாசங்களிலிருந்து வருஷத்துக்கும், வருஷத்திலிருந்து சூரியனுக்கும், சூரியனிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னலுக்கும் போகின்றனர்; அங்கே இருக்கும் ஓர் அமானவன் இவர்களைப் பிரமத்துக்கு வழிகாட்டுகின்றான்" என ஒளிமார்க்கக் கிரமம் சாந்தோக்கிய சுருதியினாற் சித்தமாயிருக்கின்றது.

யதா வை புருஷோ(அ)ஸ்மால்லோகாத்ப்ரைதி ஸ வாயுமாகச்சதி தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே யதா ரதசக்ரஸ்ய கம் தேந ஸ ஊர்த்வ ஆக்ரமதே ஸ ஆதித்யமாகச்சதி (பிரு. எ. ௰. ௧)

"இவ்வுலகத்தை விட்டுப் புருஷன் புறப்படும்போது அவன் வாயுவுக்கு வருகின்றான்; வாயு ரதசக்கரத்தின் துவாரம்போல அவனுக்கு இடங்கொடுக்கின்றான்; அவன் அதற்கூடாக மேலே ஏறிச் சூரியனை அடைகின்றான்" என்னும் பிருகதாரணிய சுருதியினால் வருஷத்துக்கும் ஆதித்தியனுக்கும் இடையிலே வாயு ஒன்று கேட்கப்படுகின்றது.

---

* (௩. ௩. ௩௨-இற்) போல நிர்க்குணோபாசகர்களுக்கு அர்ச்சிராதிகதி இல்லை என்று இந்த இடத்தினும் புகுத்திய கபடவாக்கியம் மொழிபெயர்க்காது தவிர்க்கப்பட்டது.

அது அவற்றுக்கிடையில் வைக்கப்படவேண்டுமோ? இன்றோ? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இடையிற் புகுத்தப்படுவதன்று; சுருதியிற் கேட்கப்படாமையான் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். குணோபசங்காரநியாயத்தினாற் சம்வற்சரத்துக்குப் பின்னும், ஆதித்தியனுக்கு முன்னும் வாயு வைக்கற்பாற்று. பிருகதாரணியத்து மற்றோரிடத்தில்,

மாஸெஹ்யோ தெவலொகம் தெவலொகாதாதித்யம் (பிரு. அ. ௨.௧௫)

"மாசங்களிலிருந்து தேவலோகத்தையும், தேவலோகத்திலிருந்து ஆதித்தியனையும்" என்று ஒளிமார்க்கத்திலே தேவலோகம் கூறப்படுகின்றது. சாந்தோக்கியத்திற் கூறப்பட்ட உபசங்காரத்தினால் (வருஷம்) அதிககாலத்தையுடைமையான், மாசங்களுக்கு மேல் வைக்கப்பட்ட வருஷங்களுக்கு அப்பால் தேவலோகம் எய்தவேண்டும். அந்தத் தேவலோகம் வாயுவே. தேவலோக சப்தமானது தேவர்களுடைய உலகம் என்னும் வியுற்பத்தியினால், அவிசேஷமாக வாயுவைக் குறிக்கின்றது. வாயுசப்தமே (விசேஷமாக) வாயுவைக் குறிக்கின்றது. இங்ஙனம் அவிசேஷ விசேஷங்களையுடைய தேவலோக வாயுசப்தங்களால், வாயு ஒன்றே குறிக்கப்படுகின்றான். ஆகலின், வருஷத்துக்குப்பின்னும் ஆதித்தியனுக்கு முன்னும் வாயு வைக்கற்பாலன்.

வாயுர்தேவாநாமாவஸநம்

"வாயுவானவன் தேவர்களுக்கு இருப்பிடமானவன்" என்றும்,

யோயம் பவத ஏஷதேவாநாம் க்ருஹ:

"(ஈண்டு) வீசும் இந்த வாயு தேவர்களுடைய கிரஹம்" என்றும் கூறப்படுகின்றது. (௨)

(௩) தடிததிகரணம்.

---

தடிதோதிவருணஸ்ஸம்பந்தாத் (ச. ௩. ௩)

(௩௧௧) மின்னலுக்குமேல் வருணன்; சம்பந்தமுண்மையான்.

ஸ ஏதம் தெவயாநம் பந்தாநமாபத்யாக்நிலொகமாகச்சதி ஸ வாயுலொகம் ஸ வருணலொகம் ஸ இந்த்ரலொகம் ஸ ப்ரஜாபதிலொகம் ஸ ப்ரஹ்மலொகம் (கௌஷீ. ௧. ௩)

"அவன் இந்தத் தேவயானத்தை அடைந்து அக்கினி உலகத்தையும், வாயு

லோகத்தையும், வருணலோகத்தையும், இந்திரலோகக்தையும், பிரஜாபதி லோகத்தையும், பிரமலோகத்தையும் அடைகின்றனன்'' எனக் கௌஷீதகியுபநிடதத்திற் கேட்கப்படுகின்றது. அங்கே அக்கினி லோக சப்தத்தினுற் குறிக்கப்பட்ட ஒளியின் முதன்மை விரோதமுறாது. வாயுவுக்கும் ஆதித்தியனுக்கும் வேறு சுருதியிலே சித்தித்த சுருதிக்கிரமத்தோடு இந்தப் பாடக்கிரமம் பாதிக்கப்படுதலின், சம்வற்சரத்துக்குப்பின்னே அவை கிரமமாக வைக்கற்பாலன. ஈண்டு வருணதியரும் கேட்கப்படுகின்றனர்.

அவர் அர்ச்சிராதி மார்க்கத்திலே வைத்தற்கு யோக்கியமுடையவரா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) நியாமகமில்லாமையான் வைத்தல் கூடாதாமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். வருணதியரை வைப்பது உசிதம்; அங்கே மின்னுலகத்துக்கு மேலே வருணலோக சம்பந்தமுண்மையின். அந்த வியவஸ்தை யுக்தம். மின்னல் பூருவமாக எய்தும் மழையை உண்டாக்குதற்கு வருணனே அதிபதி என்பது பிரசித்தமாயிருப்பது பற்றி, மின்னலுக்கும் வருணனுக்கும் சம்பந்தமுண்டு. அதற்குப் பின்னர் இந்திரபிரஜாபதிலோகங்களும் பாரிசேடக் கிரமத்தால் உண்டு. ஆகலின், விரோதமின்று. (௩)

## (௪) ஆதிவாகிகாதிகரணம்.

---

ஆதிவாஹிகாஸ்தல்லிங்காத் (௪. ௩. ௪)

(௩௧௨) நடாத்துவோர்கள், அந்த இலிங்கமுண்மையான்.

அர்ச்சிராதிகள் வழியின் அடையாளங்களாகிய ஸ்தானபேதங்களா? இன்றேல் வித்துவான்களைக் கூட்டிச்செல்லுந் தேவதாவிசேடங்களா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) முதற்கட்பெறப்படுவதுயாதெனின்? ஸ்தானபேதங்கள்; அவற்றின் குறியுண்மையான். உலகத்திலே கிராமத்தைவிட்டுப் புறப்பட்டு, நதியை அடைந்து, இடைச்சேரியை அடைகின்றனர் என வியவகரிக்கின்றார்கள். அதுபோல, ஒளிமார்க்க முதலியனவுமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. ஒளிமுதலிய மார்க்கங்கள் மார்க்கத்தில் அபிமானிகளாய் வித்துவான்களைக் கூட்டிச்செல்லும் தேவதா விசேஷங்களே;

தத்புருஷோ'மாநவஸ் ஸ ஏதாந் ப்ரஹ்ம கமயதி (சாந். ு. ௧௦. ௨)

"அந்த அமானவனாகிய புருஷன் இவர்களைப் பிரமத்தையடையும் வண்ணஞ்

செய்கின்ருன்" என மின்னற் புருஷனுக்குக் கூட்டிச் செல்லும் இலிங்கமுண்மையான், சாமானியமாக அர்ச்சிராதிகளினுற் குறிக்கப்பட்ட தேவதைகளுக்கும் கூட்டிச்செல்லுதலே சம்பந்தம் என நிச்சயித்தல் நியாயமாதலின்.

மின்னற் புருஷனுக்குப் பிரமத்தை அடைவித்தலிலே வருணன் முதலாயினேரால் யாதுபயன் எனச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

வைத்யுதேநைவ ததஸ்தச்ச்ருதே: (ச. ҧ. ரு)

(ருகரு) மின்னற்குரியவனுலே தான், அங்கிருந்து அதனைச் சுருதி கூறுகின்றமையின்.

மின்னற் புருடனை அடைந்த பின்னர், அவனே (மின்னற் புருஷனே) பிரமத்தை அடைவிக்கின்ருன்;

தத்புருஷோ அமாநவஸ் ஸ ஏதாந் ப்ரஹ்ம கமயதி (சாங். ரு. க0. உ)

"அமானவனுகிய அந்தப்புருஷன் அவர்களைப் பிரமத்தை அடையச்செய்கின்ருன்" எனச் சுருதியுண்மையின். வருணன் முதலாயினேர் அநுக்கிரகம் பண்ணுவது காரணமாகப் பிரமத்தை அடைவிக்கின்ருர்கள் என்பதில் விரோதமின்று. (ரு)

## (ரு) காரியாதிகரணம்.

---

கார்யம் பாதரிரஸ்ய கத்யுபபத்தே: (ச. ҧ. சு)

(ருகச) காரியப் (பிரமத்துக்குக் கூட்டிப்போகின்ருன்); அதனையே அடைதல் கூடுமாதலின் எனப் பாதரி (கூறுகின்றனர்).

அமானவபுருஷன் உபாசகர்களைப் பிரமத்துக்கு நேராகவே நடாத்துகின்ருனு? இன்றேல் மற்றொருவரை அடைவிக்கின்ருனு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) காரியமூர்த்தியாகிய இரண்ணியகருப்பரையே அடைவிக்கின்ருன். அவரை அடைதலன்றோ பொருத்தமாகின்றது, வியாபியாகிய பரப்பிரமத்தை அன்று. (சு)

பின்னரும் பொருத்தமுண்மையைக் கூறுகின்றனர்.

விசேஷிதத்வாச்ச (ச. ҧ. எ)

(ருகரு) (அது) விசேடிக்கப்பட்டிருத்தலானும்.

ப்ரஜாபதே ஸபாம் வேச்ம ப்ரபத்யே (சாங். அ. கச. க)

"பிரஜாபதியுடைய சபையாம் வீட்டை அடைகின்றேன்" என்று விசேடிக்

கப்படுதலின், (அமானவன் முக்தர்களை) இரண்ணியகருப்பருடைய ஸ்தானத்தையே அடைவிக்கின்றான். (எ)

ஸாமீப்யாத்து தத்வ்யபதேஶ: (ச. ந. அ)

**(ருககூ) ஆயின் அப் (பிரமத்தைக்) கூறுதல் சாமீப்பியத்தினால்.**

ப்ரஹ்ம கமயதி (சாந். ரு. கo. உ)

"பிரமத்தை அடைவிக்கின்றனன்" என்றவிடத்தில், இரண்ணியகருப்பருக்குப் பிரமம் என்னும் பெயர் எய்தியது, (அவர்) அப்பிரமத்துக்குச் சமீபத்திருந்தமையின்.

ஹிரண்யகர்பம் பஶ்யத ஜாயமாநம் (தைத். ஆரணி. கo. கஉ. உஅ)

"இரண்ணியகருப்பர் பிறக்கக் காண்கின்றீர்" எனப் பிரதம காரியமாகக் கேட்கப்படலான் அவருக்குச் சாமீப்பியம் எய்திற்று. (அ)

கார்யாத்யயே ததத்யக்ஷேண ஸஹாத: பரமபிதாநாத் (ச. ந. கூ)

**(ருகஎ) சிருட்டி யொழிவில் அந்த அத்தியக்ஷரோடு அவன் அதற்கு அப்புறம் போகின்றான்; சுருதி கூறுதலின்.**

முதற்கண்ணே இரண்ணியகருப்பர் பதத்தை அடைந்தாலும் மீளத் திரும்புதல் இல்லை என்னுஞ் சுருதியும் விரோதமுறாது. இரண்ணியகருப்ப லோகம் ஒழியுங்கால் அத்தியக்ஷராகிய இரண்ணியகருப்பரோடு கூட அதற்கு மேலாகிய காரியப்பிரமாவின் உலகத்துக்கு மேலேயுள்ள பரமபதத்தை அடைகின்றார்கள்;

தே ப்ரஹ்மலோகேது பராந்தகாலே பராம்ருதா: பரிமுச்யந்தி ஸர்வே (கைவ)

"அவர்கள் பிரமலோகத்திலே அவருடைய ஆயுள்முடிவிலே, பராமிர்தராய்ப் பாசத்தினின்று வீடுறுகின்றனர்" என்னுஞ் சுருதியினால் அங்ஙனம் கூறப்படுகின்றது. ஆகலின் விரோதமின்று. (கூ)

ஸ்ம்ருதேஶ்ச (ச. ந. கo

**(ருகஅ) ஸ்மிருதி கூறலானும்.**

ப்ரஹ்மணா ஸஹ தே ஸர்வே ஸம்ப்ராப்தே ப்ரதிஸஞ்சரே பரஸ்யாந்தே க்ருதாத்மாந: ப்ரவிஶந்தி பரம் பதம் |

"பிரளயகாலம் எய்திப் பரத்தின் (இரண்ணியகருப்பரின்) முடிவும் எய்திய போது, அவரெல்லாம் பிரமாவோடு கூடப் பரமபதத்தை அடைகின்றார்

கள்'' என ஸ்மிருதியினாலும் பெறப்படுகின்றது. ஆகலின், இரண்ணியகருப்பர் பதத்தில் ஒளிமார்க்கத்துள்ள (தேவ) கணம் முதற்கண்ணே (அவர்களை) அடைவிக்கின்றது; பின்னர்ப் பிரளயகாலத்திலே அவரோடுகூடப் பரப்பிரமம் அடையப்படுகின்றது. (௧௦)

வரம் ஜைமிநி முக்யத்வாத் (ச. ௩. ௧௧)

(௫௧௯) பரத்தை (அடைகின்றான்) என்று சைமுனி கொள்கின்றார்; அது முக்கியப்பொருளாகலின்.

"பிரமத்தை அடைவிக்கின்றான்'' என்றதற்கு இரண்ணியகருப்பருக்குப்பரமோற்கிருஷ்டராகிய நாராயணரையே அர்ச்சிராதிதேவர் அடைவிக்கின்றார் (என்பது பொருள்; இந்தப்) பரப்பிரமமே (பிரபஞ்சத்துக்கு உபாதானமாயிருத்தலின். முக்கியார்த்தத்திலே நாராயணர் பிரமம் எனப் படலாம் எனச் சைமினி கொள்கின்றார். (௧௧)

அதற்குப் பொருத்தமாகச் சூத்திரகாரர் கூறுகின்றனர்.

தர்சநாச்ச (ச. ௩. ௧௨)

(௫௨௦) (சுருதியிற்) காண்டலானும்.

ஸோऽத்⁴வந꞉ பாரமாப்நோதி தத்³விஷ்ணோ꞉ பரமம் பத³ம் ।

(கட. ௩. ௯)

"அவன் அத்துவாவின் கரைக்கண்ணதாய அந்த விஷ்ணுவின் பரமபதத்தை அடைகின்றான்'' என அந்த விஷ்ணுவின் பதத்தை ஆன்மாவானது அடைவதாகக் காணப்படுகின்றது. ஆகலானும் ஆன்மா விஷ்ணுவையே அடையப் பெறுகின்றது. (௧௨)

ந ச கார்யே ப்ரத்யபி⁴ஸந்தி⁴꞉ (ச. ௩. ௧௩)

(௫௨௧) காரியப்பிரமத்தில் இலக்கில்லை.

ப்ரஜாபதே꞉ ஸபா⁴ம் வேஸ்ம ப்ரபத்³யே (சாந். அ. ௧௪. ௧)

"பிரஜாபதியினுடைய சபையாம் வீட்டை அடைகின்றேன்'' என்னும் வாக்கியத்திற் கூறப்பட்டது காரியமாகிய இரண்ணியகருப்பரை இலக்காகக் கொள்ளவில்லை; பிரஜாபதி சப்தமானது பிரசைகளைக் காத்தலினாலே நாராயணர்க்கு எய்துகின்றமையின்.

தே ப்³ரஹ்மலோகே து பராந்தகாலே ।

{ தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௮ / முண். ௩. ௨. ௬; கைவ }

"அவர்கள்பிரமலோகத்திலே சரமதேகாவசான காலத்திலே எல்லாரும்

பராமிர்தராய் வீடுறுகின்றனர்'' என்னும் வாக்கியத்திற் பிரம சப்தமானது நாராயணரின் மேற்று. அவருடைய உலகமாகிய பதத்திலே யோகிகள் இருந்து, இறுதித்தேகம் முடிந்தபோது பராமிர்தமாகிய விசுவாதிகப்பிரமத்தை அடைந்து முக்தராகின்றனர் என்பதுபற்றி விரோதமில்லை.

ஊதாநி ஹ வா ஃரூதஸ்ய நாமெயெயநி (ஜாபாலம்)

"இவை அமிர்தத்தின் பெயர்கள்'' என்றற்றொடக்கத்த சுருதிகளிலே சிவனாகிய பரப்பிரமத்துக்கு அமிர்த சப்தப்பெயர் அநாதிமுத்தத்துவத்தினாற் பெறப்பட்டது. ஆகலின், விஷ்ணு பதத்திலே யோகிகள் பிராரப்த போக பரியந்தம் இருந்து, பிராரப்தகாரியதேகம் முடிந்தபோது பராமிர்தமாகிய விசுவாதிகப்பிரமத்தை அடைந்து முக்தராகின்றார் (எனின்), (கரு)

(சித்தாந்தம்) பின்னர்க் கூறப்படுகின்றது.

ஃவுரதீகாஸாவ நாஷய தீதி வாஜ்ராயண உஹயயா ச ஜொஷா தூதூ கூஹு (ச. ங. கச)

**(ருஉஉ) பிரதீகங்களை வழிபடாதவர்களை அவன் (பிரமத்துக்கு) வழிகாட்டுகின்றான் என்று பாதராயணர் (கொள்கின்றார்); (மேற்கூறிய) இரு பிரகாரத்தினும் தோஷமுண்மையின்; பிரமத்தைத் தியானிப்போன் (பிரமத்தை அடைகின்றான்).**

எவர்கள் சேதனத்தையோ அசேதனத்தையோ கேவலம் பிரமதிருஷ்டியினால் உபாசிக்கின்றார்களோ, அவர்கள் பிரதீகங்களை வழிபடுபவர்களே. ஆயின், எவர்கள் விசுவாதிகமாகிய பிரமத்தைச் சாக்ஷாத்தாக உபாசிக்கின்றார்களோ, அவர்கள் பிரதீகங்களை வழிபடாதவர்களே. சாக்ஷாத்தாகத் பிரமத்தை உபாசிப்போர்களைப் புருஷன் (அமானவன்) சாக்ஷாத் பிரமத்தையே அடைவிக்கின்றான். பிரமமானது விசுவாதிகமாயும், கிருஷ்ணபிங்களமாயும், விரூபாக்ஷமாயும் கூறப்படுகின்றது. சாக்ஷாத் பிரமோபாசகன்

வரஂஜெ்யாதிரூவஸஂவஜ்ய ஸெ்நரூூ வெணாஹிகிஷ்ஷஜ்யெத।

(சாங். அ. கஉ. ங)

"பரஞ்சோதியோடியைந்து அதன் சொரூபத்தை அடைகின்றான்''

உமாஸஹாயஂ வரமெ்ஸ்வரஂவுஹுஂ ஃஜிலொசநஂ நீலகணுஂ வுஶாஷ்ழ। ஸ்யாகவா ஊமிரூஹுதிஹூதயொநிஂ ஸஊஸாக்ஷிஂ தஊஸஃ வர ஸ்தூாஜ (கைவ)

"உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், திரிலோசனரும், நீலகண்டரும், பிரசாந்தருமாயினரைத் தியானித்து, முனியானவன் பூதகாரணரும்,

சமஸ்தசாக்ஷியுமாயினுரை இருளுக்குமேலே போய் அடைகின்றான்" என்றற் ரெடக்கத்த சுருதிகளிலே சாக்ஷாத் பிரமப்பிராப்தி பெறப்படுகின்றமையின், மேலே கூறப்பட்ட இருபக்ஷத்தினும் தோஷம் சுருதியைவிரோதித்தலினுல் எய்துகின்றது. பிரமோபாசகன் பிரமத்தையே அடைகின்றான். இடையிற்றுமதிப்பானல்லன்; பிரயோசனமின்மையின். சகல காரியசமஷ்டிரூபராயுள்ள இரண்ணியகருப்பரின் மேலாயுள்ளார் நாராயணர்; இரண்ணியகருப்பர்க்கு உபாதானமாயிருத்தலின். அவரினும் மேலாயுள்ளார் நிமித்தகாரணரும், விரூபாக்ஷரும், பரப்பிரமமும், சர்வஞ்ஞரும், சர்வ சக்தியினரும், நித்திய திருப்தரும், சுவதந்திரரும், சுவப்பிரகாசருமாயுள்ள சிவபெருமான் எனப் பெயர்படைத்தவரேயாம்.

வராத்வரதரோஹ்யஹா தத்வராத்வரதோ ஹரிஃ| தத்வராத்வரதோஈயீஶஃ (சிவசங்கற்போபநிடதம், சரபோபநிடதம்)

"பரத்துக்குமேற் பரமாயுள்ளார் (பிரமன்) இரண்ணியகருப்பர், அவருக்கு மேற் பரமாயுள்ளார் அரி (விஷ்ணு); அவருக்குமேற் பரமாயுள்ளார் சிவபெருமான் என்று சிவசங்கற்போபநிடதத்தினும், மற்றோரிடத்தில்

நாராயணவரஂஹ்யஹ (தைத். ஆரணி. ௧௦. ௧௩. ௨௯)

"நாராயண பரம்பிரம்ம" என்றவிடத்தினும், நாராயணர்க்கு மேலாகவும்பிரமம் கூறப்படுகின்றது. அந்தப் பிரமம் எப்படிப்பட்டதென்று ஆக்ஷேபிக்குங்கால்,

ஜதஂ ஸத்யஂ (தைத். ஆரணி. ௧௦. ௨௩. ௪௧)

"இருதம் சத்தியம்" என்னும் மந்திரத்திறை் சர்வஞ்ஞதைபற்றி மனோவாக்குத்தோஷம் இல்லாததும், தனது சத்தி ஒளிகளிறை் சகல செகத்தையும் நிறைந்திருப்பதும், தன்னிடத்தினின்று பிரியாத பரப்பிரகிருதிரூபமாய், பரமானந்த ஞான ஏகரச பரமாகாச இலக்ஷணமுடையதாய், தன்னிலையினின்று வேறுறாத பரம சேதனராகிய நாராயணர் தொடங்கி இரண்ணியகருப்பாதி சமஸ்த காரியப்பிரபஞ்சமாய்ப் பரமசத்தியாயுள்ள உமையோடிசைந்த ரூபமுடையதாய், நிர்விகாரமாய், திரிலோசனமுடையதாயுள்ள பரப்பிரமமே எல்லாவற்றுக்கும் உயர்ந்ததென நிரூபிக்கப்பட்டது.

விஶ்வாயிகொருத்ரஃ (தைத். ஆரணி. ௧௦. ௧௨. ௨௮)

"விசுவாதிகர் உருத்திரஃ" என்றமையால் விசுவத்தைக் கடந்திருத்தலும் புலப்படுகின்றது. ஆகலின், வைதிகர்க்கு இப்பிரமத்தையொழிந்து மற்றொன்றைக் கற்பிப்பது அநியாயமே. (௧௪)

விஶெஷஞ ஃஶயதி (ச. ௩. ௧௫)

(௫௨௩) (சுருதி) பேதத்தையும் காட்டுகின்றது.

பராத்பரதரோ ப்ரஹ்மா தத்பராத்பரதோ ஹரி:। தத்பராத்பரதோ ஈஶ: (சிவசங்கற்போபநிடதம்)

"பரத்துக்குப் பரமாயுள்ளவர் பிரமா; அதற்குப் பரமாயுள்ளார் நாராயணர்; அதற்குப் பரமாயுள்ளார் சிவபிரான்"

ஹிரண்யகர்ப்பம் பஶ்யத ஜாயமானம் (தைத். ஆரணி. க0. கஉ. உஅ)

"இரண்ணியகருப்பர் பிறக்கக் காண்கின்றீர்"

புருஷோ வை ருத்ர: (தைத். ஆரணி. க0. உச. சஉ)

"புருஷர் தான் உருத்திரர்" என்றற்றொடக்கத்த சுருதிகள் விசுவாதிகமாகிய பிரமத்தையும், அதன் அவஸ்தாபேதமாகிய உபாதான விஷ்ணுவையும், விஷ்ணுவினின்று உதித்த இரண்ணியகருப்பரையும் பேதித்துக் காட்டுகின்றன. பிரமவிஷ்ணுக்களுக்கு மேலாயுள்ள பரப்பிரம்மசிவனுருடைய பதமாகிய பரமாகாயரூப பரமானந்தமயத்தை அமானவபுருஷன் அடைவிக்கின்றான் என்பதே யுக்தம்.

ஸோऽத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்।
(கட. ந. கூ)

"அவன் அத்துவாவின் கரையாய அந்த விஷ்ணுவின் பரமபதத்தை அடைகின்றான்" என்று சங்கிக்கப்பட்ட வாக்கியத்தில் விஷ்ணு சப்தமானது பரப்பிரமத்தைக் காட்டுகின்றது. அறுவித அத்துவாவையும் கடந்த பதமானது விசுவாதிகராகிய சிவபெருமானுக்கே பொருத்தமாயுள்ளது; இன்றேல், பிரபஞ்ச அவஸ்தையையுடைய விஷ்ணுவுக்குப் பரமோற்கிருஷ்டமாய், பரமசொரூபமாய், பரமாகாசரூபமாய், பரமானந்த இலக்ஷணமாயுள்ளது பரப்பிரம சிவனுருடைய பதமேன்று கூறுதலுமாம். இங்கேயுள்ள இந்தப்பரமான்மாவானவர் பிரபஞ்சாகாரமாயிருந்தாலும் சம்சாரியாகார். அதுபற்றி யாதும் விரோதமின்று *. (கரு)

---

*(உ. உ. சஉ-ஆஞ்) சூத்திரபாஷ்யத்திறுதியிலே நூதனமாய்ப் புகுத்தப்பட்ட சில வாக்கியங்கள் மொழிபெயர்க்காது தவிர்க்கப்பட்டாற்போல, ஈண்டுச் சிலர் கூறுகின்றார்" என்றற்றொடக்கத்தனவாகப்போந்தனவும் கூறியது கூறலாய்முடிதலின், மொழிபெயர்க்காது ஒழிக்கப்பட்டன.

## நான்காம் அத்தியாயத்து
# நான்காம் பாதம்.

## (௧) சம்பத்தியாவிர்ப்பாவாதிகரணம்.

ஸம்பத்யாவிர்பாவ: ஸ்வேந ஶப்தாத் (௪. ௪. ௧)

**(௫௨௪) (பரஞ்சோதியை) அடையுமிடத்துத் தனது ரூபத்தோடு ஆவிர்ப்பாவம் உளதாகின்றது; சுருதி கூறலின்.**

மேலைப் பாதத்தில் அர்ச்சிராதிமார்க்கத்தினால் வித்துவான்களுக்கு இரண்ணியகருப்பர் நாராயணர் எனப்படுவோர் பதங்களுக்கு அதீதமாகிய பரப்பிரம சிவனுடைய பரமானந்தரூப சுவர்க்கம் எனப்படும் பதம் எய்தப் பெறுவதென நிரூபிக்கப்பட்டது.

ஈண்டு அதை அடைந்தவர்களுக்குச் சொரூபாவிர்ப்பாவாதிப்பிரகாரம் நிரூபிக்கப்படுகின்றது.

ஏஷ ஸம்ப்ரஸாதோ(அ)ஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம்ஜ்யோதி ரூபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே (சாந். அ. ௧௨. ௩)

"இந்தச் சரீரத்தினின்றெழுந்து பரஞ்சோதியோடியைந்து, தன்சொரூபத்தோடு ஆவிர்ப்பாவமாகின்றான்" எனப் பரஞ்சோதிரூபமாகிய மகாப் பிரகாச பரப்பிரமத்தை அடைந்தவனுக்குச் சொரூபாவிர்ப்பாவம் கூறப்படுகின்றது.

அந்தச் சொரூபம் அந்த யோகிக்குஅவ்வேளையில் உண்டானதா? முன்னிருந்ததா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) முன் இருந்ததன்று. ஆனாற் சுருதியானது அந்த வடிவம் எய்தப்பெற்றதாகக் கூறலின், அது சுவர்க்கம்போல இடையிற் போந்ததே. முன் இருந்ததாயின் இவனுக்குச் சம்சாரம் எங்ஙனம் எய்தும்? ஆகலின், அவ்வுபாசகர்களுக்கு எய்திய முக்திப்பயனாகிய வடிவம் ஆகந்துகமே எனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. பிரமத்தை அடைந்த ஆன்மாவுக்கு மலத்தினால் மறைபட்டபிரமசாமியகுணமாகிய சொரூபம் முன்னரே சத்தாயிருந்து மலாவரணம் நீங்கியபோது வெளிப்படுகின்றது. தன்ரூபத்தோடு என்றமையால் அங்ஙனம் பெறப்படுகின்றது. இன்றேல் இடையிற் போந்த சொரூபம் ஆன்மாவுக்கு அசாதாரணமாயிருத்தலின், தான் என்னும் விசே

ஷணம் பிரயோசனமின்றாய் முடியும். அங்கே சர்வாநுக்கிரகராகிய பரப்பிரம சிவனாருடைய பிரசாதத்தினாலே தன்னை மூடிய மலம் நீங்கும்போது, அப்பிரமசாமியகுணமாகிய ஆன்மசோரூபம் வெளிப்படுகின்றது. கன்மபலம்போல இது புதிதாக எய்தியதன்று. மலம் அநாதியாயிருத்தலின் சம்சாரம் உளதாயிற்று. பின்னர் முக்தனுக்குச் சர்வஞ்ஞதாதி விசிட்டகுணமுடைய ஞானானந்தகனமாயிருக்கும் அவனது இயற்கைச் சொரூபமே ஆவிர்ப்பவிக்கின்றது. (௧)

முக்தஃ ப்ரதிஜ்ஞாநாத் (௪. ௪. ௨)

(௫௨௫) முக்தன், பிரதிஞ்ஞையால்.

ஆன்மாவிலே சொரூபமாத்திரம் முன்னரே சித்தமாயிருந்தாலும், மலம் நீங்கிய முக்தனுக்கு அபரிச்சின்னமாகிய ஆனந்தமுதலிய ஆவிர்ப்பவிப்பனவாகக் கூறப்படுகின்றது;

ஏதந்த்வேவ தே பூயோऽநுவ்யாக்யாஸ்யாமி (சாங். அ. ௯. ௩)

"நான் உனக்குப் பின்னரும் ஆன்மாவின் சொரூபத்தை வியாக்கியானஞ் செய்வேன்" என மலத்தினால் எய்திய சாக்கிர முதலிய அவஸ்தையினின்று நீங்கினவனையுற்றுச் சொல்லவேண்டியதாகச் (சுருதி) பிரதிஞ்ஞை செய்தலின். (௨)

ஆத்மா ப்ரகரணாத் (௪. ௪. ௩)

(௫௨௬) (ஈண்டுக் கருதப்பட்டவன்) ஆன்மா; பிரகரணத்தினால்.

அங்கே

பூயோऽநுவ்யாக்யாஸ்யாமி (சாங். அ. ௯. ௩)

"பின்னரும் வியாக்கியானஞ் செய்வேன்" என்றவிடத்துப் பிரகிருதமாகிய அபகதபாப்மத்துவாதி குணங்களையுடைய ஆன்மா என்று கோடற்பாற்று. இது பிரகரணத்தினாற் பெறப்படுகின்றது;

ய ஆத்மா அபஹதபாப்மா (சாங். அ. ௧. ௫)

"மலத்தினின்று நீங்கிய ஆன்மா" என்றற்றொடக்கத்தனவாகத் தொடங்கி, "மேலும் உனக்கு அதை விளக்குகின்றேன்" என்று சுருதி கூறுதலின். ஆகலின், சுவாபாவிக அபகதபாத்மத்துவாதி குணங்கள் ஆவிர்ப்பவிக்கப் பெற்ற முக்தான்மா பிரமசாமிய சோருபனாகின்றான் என்பது சித்தம். (௩)

(௨) அவிபாகேநதிருஷ்டத்துவாதிகரணம்.

---

ஃவிஹாமெந ஜ்ருஷூஃவாஃ (ச. ச. ச)

(நிஉஎ) பேதமின்றி (முக்தான்மா கூறப்பட்டவனுகக்) காணப்படலான்.

மேலை அதிகரணத்திலே பிரமகுணசொரூப சாமியம் முக்தனுக்குக் குணசொரூபம் என்று பிரதிஞ்ஞை செய்யப்பட்டது.

அந்தச் சாமியம் முக்தனுக்குப் பொருந்துமா? அன்று? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இவ்விரண்டில் எது கோடற்பாற்று?

ஏகஏவ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே: (சுவே. ந. உ)

"உருத்திரர் ஏகர்; (அவர்கள்) இரண்டாவதற்காக இலர்" என்றற்றொடக்கத்தவற்றிற் (சுருதியானது) பிரமத்துக்குச் சமானமாக இரண்டாவது வஸ்து இன்றென மறுத்தலின், எந்த (மல) பத்தனுக்கேனும் முத்தனுக்கேனும் அந்தப் பிரமசாமியம் பொருத்தமாகாதெனின்,

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது. முக்தனுக்குப் பிரமசாமியகுணம் உண்டு. எதனுல்?

நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி (முண். ங. க. ங)

"மல மிலனுய்ப் பரமசாமியத்தை அடைகின்றுன்"

முக்தஶ்ஶிவஸமோ பவேத் (வாயு. பூ. உஅ: உஉ)

"முக்தன் சிவசமமாகின்றுன்" என முக்தனுக்குப் பிரமகுணசோரூபம் வேறுபடாது பிரமத்துக்குச் சாமியமாகவே காணப்படலான். ஆகலின்,

ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி (முண். ங. உ. கூ)

"பிரமத்தை அறிபவன் பிரமமாகவே ஆகின்றுன்" என்பதிற் பிரமசாமியமே கூறப்படுகின்றது. முத்தான்மா சாமியத்தினுற் பிரமசொரூபத்தில் வேறுபடாதுநின்று சிவசொரூபத்தை அநுபவிக்கின்றுன். "ஏகர்தான் உருத்திரர்" என்றற்றொடக்கத்தவற்றுற் சாதிருசிய நிஷேதம் செய்யப்படுகின்றதேனின், அது ஆன்மாவுக்கு உலகவியாபாரமுதலிய இல்லாமைபற்றிப் போந்ததாம். சூத்திரகாரர் (ச. ச. உக-ஆம்) சூத்திரத்தில் (சீவான்மா) அநுபவமாத்திரத்திற் சாமியம் என்று கூறுவர். பிரமத்துக்குப்போல வேண்டியவெல்லாம் அவனுக்கெய்துதலிற் சாமியம் என்று கூறப்படுகின்றது.

ஸோ ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா|
(தைத். உ. க)

"முற்றறிவுடைய பிரமத்தின் ஆனந்தத்தோடு கூட வேட்ட போகங்களை யெல்லாம் துய்க்கின்றான்" எனச் சுருதியும் கூறுகின்றது. அதுபற்றி முக்த னுக்குப் பிரமசாமியம் எய்துகின்றது. (௪)

## (௩) பிரம்மாதிகரணம்.

---

ப்ராஹ்மேண ஜைமிநிருபந்யாஸாதிப்ய: (௪. ௪. ௫)

(௫௨௮) **பிரமகுணங்களினாலென்று சைமினி கொள்கின் றார்; (சுருதி) உபன்னியாசமுதலியன உணர்த்துதலின்.**

மேலே ஆன்மா முக்தனுக்குங்காற் சுவயம்பிரகாசமும் அபகதபாப்மத் துவாதி குணவிசிட்டமுமுடைய பிரமத்துக்குச் சமமாக முக்தனுடைய சொ ரூபம் ஆவிர்ப்பவிக்கின்றதென்று கூறப்பட்டது.

அவ்விரு ரூபமும் கூடுமா? கூடாதா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) இங்ஙனமாகப் பிறர் மதப்பிரகாரம் பூருவபக்ஷம் உண் டாகின்றது.

ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே (சாங். அ. ௧௨. ௩)

"அவன் தன் சொரூபத்தோடு ஆவிர்ப்பவிக்கின்றான்" என்று சுருதி கூறிய வாறு முக்தனுடைய சொரூபத்தின் ஆவிர்ப்பாவம் பிரமத்தின் அபகதபாப் மத்துவாதி குணங்களைக் குறிக்கின்றன (என்று சைமினி கூறுவர்). இந்தப் பிரமகுணங்களன்றோ பிரத்தியக்கான்மாவுக்கும் இயல்பாயுள்ளன;

ய ஆத்மா அபஹதபாப்மா (சாங். அ. ௧. ௫)

"இந்த ஆன்மா அபகதபாப்மத்துவாதிகுணங்களையுடையது" என்றற்றொ டக்கத்த உபன்னியாசத்தினாலும்,

ஜக்ஷத்க்ரீடந்ரமமாண: (சாங். அ. ௧௨. ௩)

"உண்டு, களித்து, ரமித்து" என்றற்றொடக்கத்தவற்றினாலும் பெறப்படுகின் றது. ஆகலின், பிரமசம்பந்தமாகிய குணத்தினோடு (முக்தன்) சாமியமாகின் றான் என்று சைமினிகொள்கின்றார். (௫)

சிதிதந்மாத்ரேண ததாத்மகத்வாதித்யௌடுலோமி: (௪. ௪. ௬)

(௫௨௯) **அறிவுமாத்திரத்தினால்; அது அவன் சொரூப மாயிருத்தலின்; என்று ஔடுலோமி கூறுகின்றனர்.**

ஏவமப்யுபந்யாஸாத்பூர்வபாவாதவிரோதம் பாதராயண:

யதா ஸைந்தவகநோऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்நோ ரஸகந ஏவைவம் வா அரேऽயமாத்மாऽநந்தரோऽபாஹ்ய: க்ருத்ஸ்ந: ப்ரஜ்ஞா நகந ஏவ (பிரு. சு. ரு. கரு)

"உப்புக்கட்டி உள்ளுமின்றி வெளியுமின்றி எங்ஙனம் எல்லாம் உப்புரசமாயிருக்கின்றதோ, அங்ஙனம் உள்ளும் வெளியுமின்றி இந்த ஆன்மாவானது ஞானகனமாயே இருக்கின்றது" என்றும்,

விஜ்ஞாநகந ஏவ (பிரு. ச. ச. கஉ)

"விஞ்ஞானகனமே" என்றும் வற்புறுத்தலின் (முத்தனும் பிரமமும்) விஞ்ஞானசொரூபமாத்திரமாயிருத்தலினுற் சாமியம் என்று ஔடுலோமி கூறுவர். இங்ஙனம் (அபிப்பிராயமும்) இருபிரகாரமாகச் (சுருதியிற்) காணப் படலான், (ஆன்மாவும் பிரமமும்) சவிசேஷமும் நிர்விசேஷமுமாம் என்று சித்திக்கும். (சவிசேஷம் நிர்விசேஷம்) இரண்டும் ஒரேகாலத்தில் நிகழமாட்டாமையின், அவை வெவ்வேறு காலத்தில் நிகழ்வன என்றே கோடற்பாற்றும் எனின், (சு)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

ஏவமப்யுபந்யாஸாத் பூர்வபாவாதவிரோதம் பாதராயண:

(ச. ச. எ)

(ருகூ0) (ஆன்மா) இப்படிப்பட்டவனுயிருந்தாலும், உபந்நியாசித்தலான் மேலே கூறப்பட்ட குணங்கள் அவனுக்குண்மையின், விரோதமின்றென்பர் பாதராயணர்.

பாதராயணரோவெனின் இரு அபிப்பிராயத்தினும் பரஸ்பர விரோதமின்மையின், இரு சுருதிகளானும் புலப்பட்ட சொரூபமும் குணமுமாம் இரண்டும் (பிரமத்துக்குச் சாமியமாக) முத்தனுக்கு உண்டென்று பிரதிபாதிக்கின்றூர். எங்ஙனமெனின்,

விஜ்ஞாநகந ஏவ (பிரு. ச. ச. கஉ)

"விஞ்ஞானகனமே" என்றற்றொடக்கத்தவற்றுல் முக்தன் சுவப்பிரகாசமுடையன் என்று கூறப்பட்டாலும்,

ய ஆத்மா அபஹதபாப்மா (சாந். அ. க. ரு)

"ஆன்மா அபகதபாப்மத்துவாதி குணமுடையன்" எனச் சுருதி உபந்நியாசிக்கின்றமையின், மேலே கூறிய அபகதபாப்மத்துவாதி குணங்கள் முக்தனுக்கு உரியன என்று பெறப்படுகின்றது. ஆகலின், உபயப்பிரமாண சித்தமாயுள்ள ரூபம் இரண்டும் பரஸ்பரவிரோதமில்லாது ஒருங்குளவாம் எனல் உசிதமாயிற்று. விரோதம் என்றது காலபேதமுதலியவற்றை அபேக்ஷித்தே.

அதுகொண்டு ஞானசொரூபத்தினுற் சுவப்பிரகாசமும், அபகதபாப்மத்துவாதிகுணங்களோடியைந்திருத்தலிற் கல்யாணகுண விசிட்டமுமே, பிரமசாமிய முற்ற முக்தனது சொரூபம் என்று கூறப்பட்டது. (எ)

(அ) சங்கற்பாதிகரணம்.

---

ஸம்கல்பாதேவ து தச்ச்ருதே: (ச. ச. அ)

**(நிகக) சங்கற்பமாத்திரத்திஞலேதான் (அவன் போகம் அனைத்தையும் துய்க்கின்ருன்); சுருதி அங்ஙனம் கூறுகின்றமையின்.**

சுவப்பிரகாசனுகிய முக்தனுக்குச் சத்திய சங்கற்பத்துவாதி குணங்கள் கூறப்பட்டன.

அது பொருத்தமா? அன்ரு? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) முக்தனுக்குப் போக்கியவஸ்துவிஷயத்திலே சங்கற்பமாத்திரம் காரணமன்று; பாகியகாரணத்தை அபேட்சியாது அது சித்தியாதாமெனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சங்கற்பமாத்திரத்திஞலே (முக்தனுக்குச்) சகல போக்கிய வஸ்துக்களும் சித்தியாகின்றன. அங்ஙனம்,

ஸயதி பித்ருலோககாமோ பவதி ஸம்கல்பாதேவாஸ்ய பிதர: ஸமுத்திஷ்டந்தி (சாந். அ. உ. க)

"பிதிர்லோகத்தை விரும்பினல் அவனது சங்கற்பமாத்திரத்திஞலே பிதிர்கள் (அவனை) எதிர்கொள்ளுமாறு எழுந்திருக்கின்றனர்" என்றற்ருெடக்கத்த சுருதிகளும் கூறுகின்றன. ஆகலின், சகல போக்கியவஸ்துவைச் சம்பாதித்தற்குச் சங்கற்பமாத்திரமே ஏதுவாயிருக்கின்றது. அதுபற்றிப் புறக்கரணம் யாதும் வேண்டியதில்லை. (அ)

அத ஏவ சாநந்யாதிபதி: (ச. ச. கூ)

**(நிகஉ) ஆதலிஞலும் அவனுக்கு அதிபதியாக மற்றொருவன் இல்லை.**

எந்த நியாயத்திஞற் பிரமசொரூபத்தை அடைந்து இவன் அபகதபாப்மத்துவாதி குணங்களையுடையனுயிருக்கின்ருனே, அந்த நியாயத்திஞல் மற்ருேர் அதிபதி தனக்கின்றிச் சுவதந்திரனுய் இருக்கின்ருன். ஒர்காலும் கன்மவசப்பட்டவனல்லன்; கன்மங்கள் நட்டமடைதலின். அவனுக்குச் சிவபெருமான் நியாமகரல்லர்; பிரவாகசித்தமாயுள்ள அவருடைய ஆஞ்ஞாரூப

விதிநிஷேதங்கள் கூறும் சாஸ்திரவழியைக் கடந்திருத்தலின். எங்ஙனமெனின், அவன் பசுத்துவம் நீங்கினமைபற்றி, மலம் நீங்கினமையாலன்றே அவனுக்குச் சிவத்துவமே எய்தல் சித்தமாயிற்று. சிவத்துவம் என்பது சமஸ்த மலத்தொடர்ச்சியின்றி நிரதிசய மங்கலாஸ்பதரூபமெய்தலேயாம். சிவபெருமானுக்கு ஒப்பாகிய சுவதந்திரத்துவ சர்வஞ்ஞதாதி குணங்களையுடைமையே ஈண்டுச் சிவசாமிய இயற்கை (எனப்பட்டது). ஆகலின், சிவசாமியமுடைய அந்த முத்தனுக்குச் சர்வஞ்ஞதை, இயல்பாகவே பாசஞ்களினீங்கிநிற்றல், நித்தியானந்தம், தன்வயமுடைமை, சமஸ்த ஆற்றலுடைமை, பேரருளுடைமை, அனந்தசத்தியுடைமை உளவாம் என்க. ஆன்மஞான சங்கோசரூபமே சம்சாரம். ஆகலின், சங்கோசகாரணமாகிய மலம் நீங்கியபோது அவனுக்குச் சர்வஞ்ஞதை எய்துகின்றது. அதுபற்றிச் சம்சாரத்துக்குக் காரணமாகிய அஞ்ஞானம் சமூலமாய் நிவிர்த்தியாங்கால், பெரிதாயோ சிறிதாயோவுள்ள தேகாதியபிமானரூபப்பிரமையானது நீங்கிவிடுகின்றது. எதுபற்றி அவனுக்கு ஜரை, மரணம், சோகமுதலிய இல்லையோ, அதுபற்றிக் கன்மவசப்படாமையின் சுவதந்திரத்துவம் எய்துகின்றது. நிரதிசய சொரூபானந்தானுபவத்தில் அமிழ்ந்தினமை பற்றி எய்தும் சுவாத்துமாராமத்தினாலும் அவனுக்கு வரம்பிலின்பமுடைமை (எய்துகின்றது); அதனால் அவனுக்குப் பசிதாகம் இன்று. பேரருளுடைமையாற் சத்தியகாமம் சத்தியசங்கற்பமுதலியன எய்துகின்றன. அங்ஙனமாதலின் முக்தனும் சிவபெருமானும் அந்த அபகத பாப்மத்துவாதி எண்குணங்களையுடையராகக் கூறப்படுகின்றார். அதுபற்றிச் சிவசாமியமுடைய முக்தனுக்குச் சுவாதந்திரியம் கூறல் யுக்தமே. (கூ)

## (ரு) அபாவாதிகரணம்.

ஃஹாவம் ஃபாஉரிராஹஹெஹ்வஃ (ச. ச. கo)

**(ருகூ) (சரீர)மின்மையைப் பாதரி கொள்கின்றார்; இங்ஙனம் (சுருதி) கூறுகின்றமையின்.**

மேலை அதிகரணத்தில் முக்தனுக்குச் சுவம்பிரகாசத்தன்மையும் சத்தியசங்கற்பத்துவாதி விசிட்டகுணமும் உண்டெனக் கூறப்பட்டது.

ஈண்டு அவன் சரீரமுடையனாகவா? சரீரமிலனாகவா? இன்றேல் இரண்டுமுடையனாகவா? இருக்கின்றான் என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) பாதரியோவெனின் முக்தனுக்குத் தேகேந்திரியாதி உபகரணங்கள் இல்லை என்று கொள்கின்றனர்; "நிஷ்களம் நிஷ்கிரியம்" என்றற்றொடக்கத்த சுருதிகள் பிரமத்துக்கு அவை இல என்று கூறுகின்றனவன்றே. (ஆகலின்), அந்தச் சொரூபமுடைய முக்தனும் அவ்வியல்பினனாகின்றான். (கo)

ஹாவ௦ ஜெஜிநி விகலூா8நநாகு (ச. ச. ௧௧)

(ருகச) (சரீர) வுண்மையைச் சைமினி கொள்கின்றனர்; சுருதியில் விகற்பங்களைப் பற்றிக் கூறப்படுகின்றமையின்.

ஸ ஏகயா ஹவதி த்ரியா ஹவதி (சாந். எ. உசு. உ)

"அவன் ஒருபிரகாரமாகின்றான், மூன்று பிரகாரமாகின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே தேகேந்திரியாதிகளோடு கூட முக்தன் அநேக பிரகாரமாதலைப்பற்றிச் சுருதி கூறுதலின், அவனுக்குச் சரீரமுளதெனச் சைமினி கொள்கின்றனர். இங்ஙனம் முக்தனுக்கு உளதெனவும் இலதெனவும் சுருதி கூறலின், அவனுக்கு உண்மையானது யாது? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) சரீரமில்லாமை உண்மை.

மநஸைதாந் காமாந் பஶ்யந்ரமதே (சாந். அ. ௧௨. ரு)

"ஞானத்தினால் வேட்ட பொருள்களையெல்லாம் கண்டு களிக்கின்றான்" எனப் பாகியேந்திரியாதிகள் முக்தனுக்கு இல்லை என்று கூறப்படுகின்றது. பிரமத்துக்கும் பாகியேந்திரியம் இல்லை என்று கேட்கப்படுகின்றது.

ஸத்யாத்ம ப்ராணாராமம் மந ஆநந்தம் (தைத். க. சு)

"சத்தியான்ம பிராணாராமம்; மன ஆனந்தம்" எனச் சுருதி கூறுதலின் ஆன்மாவிலே (தம்மிலே) தான் ஆராமம் புறப்பொருளிலன்று என்பதும் ஞான சத்தியிலேதான் ஆனந்தம் புறக்கரணத்திலன்று என்பதுமே (அச்சுருதியின்) பொருள். அதுகொண்டு முக்தனுக்குத் தேகமில்லையே. தேகத்தோடு கூடினவனென்றது வெவ்வேறு அவஸ்தை அடையும் ஆன்மாக்களைப் பற்றியேயாமெனின், (௧௧)

(சித்தாந்தம்) கூறப்படுகின்றது.

ஆாதஶாஹவதுஹயவிய௦ ஶாதராயணொ zதஃ (ச. ச. ௧௨)

(ருகரு) பன்னிருதினத்து யாகம் போல, இரண்டும் கூடும் என்ற நியாயப் பிரகாரம் பாதராயணர் கொள்கின்றனர்.

சரீரம் உளதாதலையும் சரீரம் இலதாதலையும் சுருதி கூறலின், சுவேச்சையினாலே முக்தன் இருபிரகாரமாயும் உளனென்று பகவான் பாதராயணர் கொள்கின்றார். பன்னிரு தினஞ் செய்யப்படும் யாகமானது (அநேக முக்கிய யஜமான்கள் சங்கற்பத்தினாலாம்) சத்திரயாகமாகவேனும், (ஒருமுக்கிய யஜமான் சங்கற்பத்தினாலாகும்) அஹீநயாகமாகவேனும் செய்யப்படும் எனச் சுருதி இருபிரகாரம் கூறுகின்றது; அதுபோல ஈண்டுமாம். அங்ஙனமே,

ஸவக்ஜ்ஞாஸ்ஸர்வகாஸ்ஸுத்தா: பரிபூர்ணாஸ்ஸிவோபமா:|
ஸிவஸாயுஜ்யமாபன்னா: பரமைஸ்வர்யஸம்யுதா:|
ஸதேஹாஸ்ச விதேஹாஸ்ச ஸவச்சந்தேச்சயா புன:|

'இயல்பாகவே சர்வஞ்ஞர்களாயும், சர்வவியாபகர்களாயும், சுத்தர்களாயும், பரிபூரணர்களாயும், சிவனை ஒத்த பலமுடையர்களாயும், பரமைசுவரியத்தோடியைந்தவர்களாயுமுள்ள (ஞானயோகியர்) தாம் விரும்பியவாறு சதேகர்களாயேனும் விதேகர்களாயேனும் மீண்டும் உளராயினர்'' என்றற்றொடக்கத்தனவாகச் சிவபதத்தை அடைந்தவர்களின் நிலைமைபற்றிப் பௌராணிகரும் கூறுகின்றனர். ஆகலின், முக்தர்க்கு இருபிரகாரமும் பொருந்துகின்றன. (௧௨)

ஒருவனுக்கே வெவ்வேறு காலத்தில் இரு வியவஸ்தை உண்டென்று சூத்திரகாரர் கூறுகின்றனர்.

தந்வபாவே ஸந்த்யவதுபபத்தே: (௪. ௪. ௧௩)

(௫௩௬) சரீரமில்லாவிடத்துப் (போகந் துய்த்தல்) கூடுமாதலின்; கனவிற்போல.

முக்தன் சுவேச்சையினால் ஓர்கால் அநேகசரீரங்களைச் சிருட்டித்து அவற்றுட் பிரவேசித்து விளையாடுகின்றனன். சிலபோது சரீரங்களைத் தவிர்த்து விட்டும் இருக்கின்றான். சரீரமுதலிய கொள்ளாவிடத்து முக்தனானவன்—சொப்பனத்திற் சிவபெருமானாற் சிருட்டிக்கப்பட்ட இரதமுதலியவற்றை மலத்தினாற் கட்டுண்ட புருஷன் மனசினாலே (அநுபவித்தல்) போல—சிவபெருமானால் ஆக்கப்பட்ட ஆனந்தத்தைத் துய்க்கின்றான். இதனால் என் சொல்லியவாறோ எனின்? எங்ஙனம் புருஷன் சிவபெருமானால் உண்டாக்கப்பட்ட பொருள்களைச் சரீரேந்திரியங்கள் வேண்டாதுகேவலம் மனசினாலே சொப்பனத்திற் புசிக்கின்றானோ, அங்ஙனமே முத்தனும் தனது இயற்கை ஞானத்தினாலே பிரமசொரூபானந்தத்தை அநுபவிக்கின்றான். (௧௩)

பாவே ஜாக்ரத்வத் (௪. ௪. ௧௪)

(௫௩௭) (சரீர)மிருக்கும்போது நனவிற்போல.

சுவேச்சையினாலே சிருட்டிக்கப்பட்ட சரீரமுதலிய உபகரணமுள்ளவிடத்து நனவிற்புருஷன் போலச் சகல வேட்ட பொருள்களையும் புசிக்கின்றான்.

(ஆக்ஷேபம்) முக்தனுக்குப் பிரபஞ்சத்தைக் காண்டலாகிய இன்பங் கூடுமாயின், அபுருஷார்த்தமாகிய பிரபஞ்சத்தைக் காணும் அம்முக்தனுக்குச் சம்சார துக்கத்தொடர்ச்சி நீங்கமாட்டாதே யெனின்,

(உத்தரம்) அன்று. முக்தன் பிரபஞ்சத்தை அபுருஷார்த்தரூபமாகப் பாராமையான், முக்தனுக்கு இந்தப்பிரபஞ்சம் பிரமாகாரமாகவே காணப் படுகின்றது.

𑌤𑌤𑍍𑌤𑍇𑌕𑍋 𑌭𑌵𑌤𑌿 (தைத். க. சு)

“பின் இது (பிரமம்) ஆகின்றது”

𑌆𑌕𑌾𑌶𑌶𑌰𑍀𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 (தைத். க. சு)

“ஆகாசசரீரம் பிரமம்”

𑌸𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌰𑌾𑌮𑌂 𑌮𑌨 𑌆𑌨𑌨𑍍𑌦𑌮𑍍 (தைத். க. சு)

“சத்தியான்ம பிராணாராமம்; மன ஆனந்தம்”

𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑌮𑌮𑍃𑌤𑌮𑍍 (தைத். க. சு)

“சாந்தியினால் நிறைந்த அமிர்தம்” என்று சுருதியிலே கூறப்படுகின்றது. மேலே,

𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌸𑍍𑌵𑌾𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌮𑌨𑌸𑌸𑍍𑌪𑌤𑌿𑌮𑍍 (தைத். க. சு)

“அவன் சுவர்க்க ராச்சியத்தை அடைகின்றான்; அவன் ஞானத்துக்குப் பதியாயுள்ளதை அடைகின்றான்” என்னும் சுருதிகளில் ஸ்வாராஜ்யம் என்பது இன்பமே இரசமாயுள்ள பரப்பிரமசிவனாருடைய பதத்தையும், மனசஸ்பதிம் என்றமையான் ஞானசத்திக்கு அதிபதியாயிருக்கும் இயல்பையும் (ஞான) யோகி அடைகின்றான் எனக் கூறப்பட்டது. அங்ஙனமிருப்பின், யாது விசேடம் என ஆக்ஷேபிக்கின்,

𑌵𑌾𑌕𑍍𑌪𑌤𑌿𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑍍𑌪𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌪𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑌤𑌿𑌃 (தைத். க. சு)

“வாக்குக்குப் பதி, கண்ணுக்குப் பதி, காதுக்குப் பதி, ஞானத்துக்குப் பதி” என்றற்றொடக்கத்த சுருதிகளான் வாக்கு முதலிய அனைத்தும் அவன் இஷ்டப்பிரகாரம் வசப்பட்டமையின், அவற்றுக்கு அதிபதியாகக் கூறப்பட்டான். இவ்வியல்பினனாகிய முக்தன் பரமாகாசரூப சிவபதத்தை அடைந்தவனாய்ச் சுவேச்சையினால் வசப்பட்ட தூயவாக்காதி கரணமுடையனாய், அந்தப் பதத்தை அடைந்தபிற்பாடு (அவனுக்கு) இந்தப் பிரபஞ்ச முழுமையும் ஆகாசசரீரமாய், அஃதாவது பரமானந்தலக்ஷண பரமாகாசசரீரமுடைய பிரமமாகவே ஆகின்றதென்பது; பரப்பிரகிருதி ரூபையாய், பரமசத்தையாய், பிரகாசானந்த சமரசமாயுள்ள பரமசத்தியே பிரமத்துக்குச் சொரூபத்தினாற் பரமாகாசம் என்று கூறப்படுகின்றது; எந்தச் சத்தி முக்தர்களுக்கும் சிவபெருமானுக்கும் சாக்ஷாத் அர்த்தத்தையும் கிரியையையும் அடைதற்கு ஏதுவாயுள்ளதோ, அதுவே மற்றையோர்கட்கும் பரம்பரையாயுண்டாம். எங்ஙனமெனின்,

கொஹெவா_ந்யாத்கஃ ஷ்ராண்யாத்| யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத் (தைத். உ. எ)

"இந்த ஆகாயம் ஆனந்தமாகாவிடின், எவன் சுவாசிப்பான்; எவன் உயிர்ப்பான்"

ஏஷ ஹ்யேவாநந்தயாதி (தைத். உ. எ)

"இவர் ஆனந்தத்தை விளைவிக்கின்றனர்"

ரஸோ வை ஸஃ (தைத். உ. எ)

"அவரே இரசம்"

ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி (தைத். உ. எ)

"இவன் ஆனந்தத்தை அடைந்து ஆனந்திக்கின்றான்" என அவனுக்குப் பராசக்தி சர்வாநுபவவிஷயமாக உளதென்று கேட்கப்படுகின்றது. அங்ஙனமே,

ஸ ஏகோ மாநுஷ ஆநந்தஃ (தைத். உ. அ)

"அது ஏகமாகிய மாநுஷ ஆனந்தம்" என்று தொடங்கி,

ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்தஃ (தைத். உ. அ)

"அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" எனப் பிரமபரியந்தம் உபாதியின் மறைப்பினால் ஆனந்தத்தின் உற்பத்தி தாரதம்மியமாகக் கேட்கப்படுகின்றது. பிரமத்தினும் முக்தனிலும் நிருபாதிகத்தினால் அந்த ஆனந்தம் பரிபூரணமாய் இருக்கின்றது;

ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய| (தைத். உ. அ)

"அது பிரமத்தினதும் ஆசையறுத்த வேதவித்துவானதும் ஓர் ஆனந்தம்" என்று கேட்கப்படுதலின். பிரமத்துக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்ட பக்தியோடு நிஷ்காமமாய் அநுஷ்டிக்கப்பட்ட அக்கினிகோத்திராதி கன்மத்தையுடைய பரமவித்துவானே "ஆசையறுத்த வேதவித்துவான்" என்று கூறப்பட்டான். உயிரோடிருக்குங்கால் முக்ததசை அடைந்தவனுக்கும் பிரமத்துக்கும் ஆனந்தம் துல்லியமே. யோகமிகுதியினால் அந்தந்த உலகத்தை அடைந்த யோகிக்கு முன்முன் உள்ள பூமிகளை நோக்கிச் செய்த யோகாப்பியாசம் அற்பமாம். அந்தந்த (யோக) அநுசாரமாக அந்தந்தப் பூமியிலே அதற்குரியதாய் எய்தும் ஆனந்தத்தை மனுஷ்யாதி ஆனந்தத்தோடு சாமியமாகக் கூறல் விரோதமின்று. ஆகலின், இதுவே பாமானந்த பரப்பிரகிருதிப் பரமாகாசம்; இது பரத்தினின்று வேறுருமையின்.

ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத் (தைத். ௬. ௬)

"ஆனந்தம் பிரமம் என அறிந்தான்" என்னுஞ் சுருதியினால், ஜகத்காரணமாகிய பிரமமாகவே (அது) கேட்கப்படுகின்றது.

ஸைஷா பா⁴ர்க³வீ வாருணீ வித்³யா பரமே வ்யோமந் ப்ரதிஷ்டி²தா|
(தைத். ௩. ௬)

"அந்தப் பார்க்கவி வாருணி வித்தையானது பரமவியோமத்திலே பிரதிஷ்டை செய்யப்பட்டது" என்னுஞ் சுருதியினால் இந்த ஆனந்தத்தின் அபிவியக்தி கேட்கப்படுகின்றது. ஆகலின், முக்தர்களுக்குப் பரமானந்தரூப பரமாகாச சரீரத்தையுடைய பிரமமாகவே பிரபஞ்சம் ஆகின்றது. அவர்கள் இந்தப் பரமானந்தத்திலே பிரவேசித்த முக்தர்களுக்குப் பிரமத்துக்குப் போலத் துக்கத் தொடர்ச்சி இல்லை. (கச)

## (கூ) பிரதீபவதாவேசாதிகரணம்.

ப்ரதீ³பவதா³வேஶஸ்ததா² ஹி த³ர்ஶயதி (ச. ச. கரு)

(௫௩அ) தீபம்போல வியாபிக்கின்றான்; அங்ஙனஞ் சுருதி கூறுகின்றதன்றே.

மேலை அதிகரணத்திலே முக்தான்மாக்களும் சுவேச்சையினாலே அனந்த சரீரங்களை எடுக்கும் சாமர்த்தியத்தினால் வியாபகமுடையனவென்று சூசிப்பிக்கப்பட்டது.

அந்தச் சர்வவியாபகம் ஈண்டுப் பொருந்துமா? அன்றா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்)

ஸர்வேஷு லோகேஷு காமசாரோ ப⁴வதி (சாந். எ. ௨௫. ௨)

"எல்லா உலகங்களினும் விரும்பியவாறு சஞ்சரிக்கின்றான்"

இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந் (தைத். ௩. ௧௦. ௫)

"வேண்டிய வடிவங்களை எடுத்து இவ்வுலகங்களிற் சஞ்சரித்து வேண்டிய போகங்களைத் துய்க்கின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே, முக்தனுக்குப் பரிச்சின்னமாகச் சஞ்சாரம் பெறப்படுதலின், அவன் வியாபகமாதல் உசிதமில்லை. அதுபற்றி அநேக சரீரத்தை எடுத்தல் கிரமமாகவேயன்றி ஒரே காலத்தில் அன்று எனின்,

(சித்தாந்தம்) கடத்துள் இடப்பட்ட தீபமானது தடைநீங்கியபோது தன் பிரகாசத்தினாற் கிரகத்தை வியாபித்தல் போல, முக்தனும் சத்தியை மறைத்த மலம் நீங்கியவிடத்துத் தன் சத்தியினாலே பிரபஞ்சத்தைப் பிரவேசித்து வியாபிக்கின்றான்.

𑌸𑌨𑍋 𑌬𑌨𑍍𑌧𑍁𑌰𑍍𑌜𑌨𑌿𑌤𑌾 𑌸 𑌵𑌿𑌧𑌾𑌤𑌾 𑌧𑌾𑌮𑌾𑌨𑌿 𑌵𑍇𑌦 𑌭𑍁𑌵𑌨𑌾𑌨𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾। 𑌯𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌮𑍃𑌤𑌮𑌾𑌨𑌶𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑍇 𑌧𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌭𑍍𑌯𑍈𑌰𑌯𑌨𑍍𑌤। 𑌪𑌰𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑌦𑍍𑌯𑌃 𑌪𑌰𑌿𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌦𑌿𑌶𑌃 𑌪𑌰𑌿𑌸𑍁𑌵𑌃। 𑌋𑌤𑌸𑍍𑌯 𑌤𑌨𑍍𑌤𑍁𑌂 𑌵𑌿𑌤𑌤𑌂 𑌵𑌿𑌚𑍃𑌤𑍍𑌯 𑌤𑌦𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌤𑌦𑌭𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌜𑌾𑌸𑍁 (தைத். ஆரணி. ௧௦. ௧. ௪)

"அந்தப் பரமான்மா நமக்குப் பந்து; பிதாவுமாகின்றனர்; அவர் பயன்களை விளைவிக்கின்றனர்; எல்லாப் புவனஸ்தானங்களையும் அறிகின்றனர்; எந்தப் பரமான்மாவிடத்திற் சிவானந்தத்தைப் பெரியோர்கள் அநுபவிக்கின்றார்களோ, அவர்கள் மூன்றாவதாகிய சிவலோகத்தை அடைகின்றார்கள்; அவர்கள் ஆகாயம் பூமிக்கு மேலும், எல்லா உலகங்களுக்கு மேலும், எல்லாத்திக்குகளுக்கு மேலும், சுவர்க்கலோகத்துக்கு மேலும் ஓர்கால் வியாபிக்கின்றார்கள்; கன்மத்தின் தந்துவை அறுத்துச் செந்துக்கள் அனைத்தினும் ஏகராயினாரைக் கண்டு, அந்த ஏகராகின்றார்" என்று சுருதியும் கூறுகின்றது. இச்சுருதிகள் ஜகத்கர்த்தாவும் விசுவரூபருமாகிய மகாதேவருடைய பிரகரணத்திலே சேர்கின்றன. அச்சுருதிப் பொருள் வருமாறு:—

𑌸𑌃=அந்த மகாதேவர்

𑌨𑌃=எங்களுக்கு

𑌬𑌨𑍍𑌧𑍁𑌰𑍍𑌜𑌨𑌿𑌤𑌾=பந்துவாகிய பிதாவுமாயினர்;

𑌸 𑌵𑌿𑌧𑌾𑌤𑌾=சகல நன்மைகளுக்கும் கர்த்தா;

𑌧𑌾𑌮𑌾𑌨𑌿 𑌵𑍇𑌦=ஒளிமயமாகிய அப்பிராகிருத உலகங்களை அறிகின்றனர்;

அவர் நமக்குப் பந்துவாகி எல்லா உலகங்களையும் அறிதலினாற் போதரும் பிரயோஜனம் (முன்னர்க்) கூறப்படுகின்றது.

𑌯𑌤𑍍𑌰=எந்த மகாதேவரிடத்தில்

𑌅𑌮𑍃𑌤𑌂=கைவல்லிய இலட்சுமியை

𑌆𑌨𑌶𑌾𑌨𑌾𑌃=அடைந்து அநுபவிப்பவர்களாய்

𑌦𑍇𑌵𑌾𑌃=அநுபவத்தால் விளங்குகின்றவராயுள்ள பெரியோர்

𑌤𑍃𑌤𑍀𑌯𑍇=மூன்றாவதாகிய (தியு எனப் பெயரிய மாயாதீதமாகிய அந்தப் பதத்திலுள்ள),

𑌧𑌾𑌮𑌾𑌨𑌿=ஒளியைப் பிரதானமாகக் கொண்டு தங்களால் அபிமானிக்கப்பட்ட ஸ்தானங்களை,

𑌅𑌭𑍍𑌯𑍈𑌰𑌯𑌨𑍍𑌤=சுவீகரிக்கின்றனர்.

இதனால் என் சொல்லியவாறோ எனின், உறவினர் போலப் பிதாப்போல, சமஸ்த உலகத்துக்கும் நன்மை செய்பவராயும், சர்வஞ்ஞராயும்

பரப்பிரமமாயும், பிரசன்னராயுமுள்ள மகாதேவரால், நீங்கப்பட்ட பாச பந்தத்தையுடையராய், சிவத்துவத்தை அடைந்தவர்களாய், மகாப்பிரகாச முடையராயுள்ள முக்தர்கள் மூன்றாவதாகிய பரமாகாச இலக்ஷணமுடைய சுவ பதத்திலே கற்பிக்கப்பட்ட தாமங்களாகிய பிரகாசம் பொருந்திய பதங் களை அடைந்து இருக்கின்றனர் என்பதாம்.

அதன் பின் இவர்களுக்கு வியாபகம் கூறப்படுகின்றது.

வஸிஷ்ரா வ்யாபிவீவஸியநி=முக்தான்மாக்கள் சுவதந்திர ஒளிக ளினாலே ஆகாயத்தையும் பூமியை யும் வியாபிக்கின்றனர்;

வஸி ஜொகா நீ=இரண்ணியகருப்ப லோகங்களையும் வியாபிக்கின்ற னர்;

திஶஸ்=திக்குகளையும்

ஸுவஸ்=சுவர்க்கத்தையும்

(வஸியநி)=வியாபிக்கின்றனர்.

இங்ஙனம் சகல ஜகத் வியாபிகளாய் இருக்கின்றனர்; எங்ஙனமெனின், அவர்கள் சர்வஞ்ஞர்களாய்,

ஐதஸ்=கர்மத்தின்

விதகம=விஸ்தீர்ணமாயுள்ள போகங்களை

விவ்ருத்ய=ஒழித்து (அஃதாவது, புண்ணியபாவங்களினின்று) நீங்கி னவர்களாய்,

ப்ரஜாஸு=சர்வப்பிராணிகளினும்,

தத=அந்த (மகாதேவர் என்று பெயர் கொண்ட பொருளை)

கவஶ்ய நீ=கண்டு, சர்வான்மகமாய் அவரேயாகி அவ்வியல்பினரா கின்றனர்.

ஆகலின், சிவானந்தத்தை அடைந்த முக்தான்மாக்களுக்கு வியாபகத் துவம் உளதே. அம்முக்தான்மாக்கள் சிவபெருமானுடைய குணங்களையு டையராய், ஆகாயமுதலியவற்றை வியாபிக்கும் தேவர்களாகக் கூறப்படுகின் றனர்.

யெ தெவா திவிஷஃ॥

"சுவர்க்கத்திலிருக்கும் இந்தத் தேவர்கள்" என்று தொடங்கும் தேவவிர தம் எனப்படும் சாமவேதத்திலே துதிக்கப்படுபவராகின்றார்.

தெ ஹி ஸாக்ஷா திவிஷஸ்ஸந்தரிக்ஷஸஸ்ஸயா।

வ்யாபிவீஷ ஐதெ்ய தெ தெவவ்ரதெ ஸ்தாஃ॥

"அவர்கள் சுவர்க்கத்துள்ள தேவர்களாயும், அந்தரிக்ஷத்துள்ள தேவர்களாயும், பிருதிவியிலுள்ள தேவர்களாயும் இருக்கின்றார்கள்; இந்தத் தேவர்கள் தேவவிரதத்திலே துதிக்கப்படுபவராயினர்" என்று புராணத்திலும் கூறப்படுகின்றது. (சண்டுப்) பிருதிவி என்றது பிரமாண்டத்தையும், அந்தரிக்ஷம் என்றது இரண்டாவதாகிய மாயாபதத்தையும், தியௌ என்றது மூன்றாவதாகிய பரமாகாச பரியாயமாகிய சுத்த சத்திருப சிவருபபதத்தையும் குறித்தன. ஆகலின், முக்தான்மாக்களுக்கு வியாபகமுண்டு. (கரு)

ஸ்வாப்யயஸம்பத்த்யோரந்யதராபேக்ஷமாவிஷ்க்ருதம் ஹி (ச. ச. கசு)

**(ருகசு) நித்திரை மரணம் என்னும் இரண்டவஸ்தையின் ஒன்றை அது குறிக்கின்றது; அங்ஙனம் சுருதியில் விளக்கப்பட்டிருக்கின்றதன்றோ.**

ப்ராஜ்ஞேநாத்மநா ஸம்பரிஷ்வக்தோ ந பாஹ்யம் கிஞ்சந வேத நாந்தரம் (பிரு. சு. ரு. உக)

(பூருவபக்ஷம்) "பிராஞ்ஞனாகிய (பரம) ஆன்மாவினாற் றழுவப்பட்டு அகம்புறம் அறிந்திலன்" எனப் பிரமத்தை அடைந்தவன் உள்ளும் வெளியும் அறிந்திலன் எனச் சுருதி கூறுகின்றது. அவனுக்குச் சத்திருபமாகிய ஞானவியாபகம் எங்ஙனம் என ஆக்ஷேபிக்கின்,

(உத்தரம்) இது ஆக்ஷேபிக்கப்படுவதன்று. ஆன்மாவிடத்துள்ள அறிதலின்மையை உணர்த்தும் வசனம் சுழுப்தி மரணம் என்பவற்றில் ஒன்றைக் குறிக்கின்றது.

நாஹ கல்வயமேவம் ஸம்ப்ரத்யாத்மாநம் ஜாநாத்யயமஹமஸ்மீதி நோ ஏவேமாநி பூதாநி (சாந். அ. கக. க)

"உண்மையாய் அவன் நான் என்று ஆன்மாவை அறிந்திலன்; இருக்கின்ற மற்றொன்றையும் அறிந்திலன்" எனச் சுழுப்தியையும்,

ஏதேப்யோ பூதேப்ய: ஸமுத்தாய தாந்யேவாநு விநஶ்யதி ந ப்ரேத்ய ஸம்ஜ்ஞாஸ்தி (பிரு. சு. ரு. கங)

"இந்தப் பூதங்களிலிருந்து எழுந்து பின் அவற்றுள்ளே அழிகின்றான்; அவன் புறப்பட்ட போது பிரஞ்ஞை இல்லை" என்று மரணத்தையும் குறிக்கும் சுருதியினால் வெளிப்படுத்தப்பட்டதன்றோ; இவ்விரு அவஸ்தைக்கும் வேறாகிய மோக்ஷதசையில் அங்ஙனம் அறியாமை முதலிய இல்லை; பின் மலமறைப்பு நீங்கியபோது (முக்தன்) சர்வஞ்ஞத்துவமும் சர்வகர்த்திருத்துவமும் எய்துகின்றான். (ஆகவே), முக்தனிடத்தில் ஞானமுதலாயின நிஷேதிக்கப்படுதல் இல்லை. (கசு)

## (௭) ஜகத்வியாபாராதிகரணம்.

ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச (௪. ௪. ௧௭)

(௫௪௦) உலகத்தோடு சம்பந்தமுற்ற வியாபாரம் இல்லை; பிரகரணத்தினாலும் சமீபத்தின்மையாலும்.

முக்தான்மாக்களுக்குச் சுவப்பிரகாசத்துவம், வியாபகத்துவம், சர்வஞ்ஞத்துவ முதலிய குணங்களினாற் சிவபெருமானோடு சாமியம் என்று கூறப்பட்டது. அங்ஙனமாகுங்கால் உலகசிருட்டிமுதலியவற்றினும் சாமியத்தைத் தவிர்த்தல் கூடாது;

பரமம் ஸாம்யமுபைதி (முண். ௩. ௧. ௩)

"பரமசாமியத்தை அடைகின்றான்" எனப்பேதமின்றிக் கேட்கப்படுதலின். உலகசிருஷ்டி முதலியவற்றிற் சாமியத்தை அங்கீகரிப்பின், அநேகேசுவரத்தினாற் சிவபெருமானுக்கு அத்துவிதீயத்துவ பங்கப்பிரசங்கம் ஆய்தும்; ஆகலின், சிவபெருமானோடு முக்தான்மாக்களுக்குச் சாமியம் எவ்வியல்பினதெனக் கூறப்பட்டது.

ஜகத் சிருட்டியாதியோடு சேர்த்தா? தவிர்த்தா? சாமியம் என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) என் சொல்லியவாறோ எனின்,

ஸ யதி பித்ருலோக காமோ பவதி (சாந். அ. ௨. ௧)

"அவன் பிதிர்லோக காமனாகின்றான்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே சங்கற்பமாத்திரத்தினாற் பிதிர்லோகமுதலியவற்றைச் சிருட்டிக்கும் சாமர்த்தியம் கேட்கப்படுதலானும்,

இமாம்ல்லோகாந்காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந் (தைத். ௩. ௧௦. ௫)

"இந்த உலகங்களை அடைந்து தான் வேண்டிய ரூபங்களையுடையவனாய் வேண்டியபோகங்களை அடைகின்றான்" என்று யாண்டும் வியாபாரம் கேட்கப்படுதலானும், சிவசாமியத்திற் சங்கோசமின்மையானும் முக்தனுக்கு உலகசிருட்டியாதி வியாபாரமும் உளதாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். முக்தனுக்குச் சிவசாமியம் உளதாயினும் ஜகத்சிருட்டியாதி வியாபாரமின்றே; தனது போக்கிய வஸ்துக்களிலே சுவாதந்திரியம் உண்டு.

யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே (தைத். ௩. ௧)

"எவ்விடத்திலிருந்து இந்தச் செந்துக்கள் பிறக்கின்றனவோ"

த்யாவா பூமீ ஜநயந் தேவ ஏக: (தைத். ஆரணி. ௧௦. ௧. ௩)

"ஆகாயத்தையும் பூமியையும் சிருட்டித்துத் தேவர் ஒருவர்" என்றற்றொடக்கத்தவற்றிலே கேட்கப்படும் ஜகத் சிருட்டி முதலியன சிவபெருமானுக்கே பிரகரணத்தினுற் பெறப்படுகின்றது; சிருட்டியாதி பிரகரணங்களிலே ஆன்மாவுக்கு (அங்ஙனம் கூறச்) சிறிதும் இடமின்றே. ஆகலின், முக்தனுக்கு ஜகத் சிருட்டியாதி வியாபாரம் இன்று. (கஎ)

ப்ரத்யக்ஷோபதேசாதிதி சேந்நாதிகாரிகமண்டலஸ்தோக்தே:।

(ச. ச. கஅ)

**(ருசக) வெளிப்படையாகக் கூறப்பட்டமையால் எனின், அன்று; அதிகாரமுடையாரது மண்டலத்தில் இருப்பதையே அது குறிக்கின்றமையின்.**

(பூருவபக்ஷம்)

இமாம்ல்லோகாந்காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந் (தைத். ௩. ௧௦. ரு)

"இந்த உலகங்களை அடைந்து, வேண்டிய ரூபங்களை எடுத்து வேண்டிய போகங்களைத் துய்க்கின்றான்" என்றற்றொடக்கத்தவற்றிலே, முக்தனிடத்தில் ஜகத்வியாபாரம் பிரத்தியக்ஷமாகக் கூறப்படுதலின் அந்தச் சம்பந்தம் உளதாமே எனின்,

(சித்தாந்தம்) அன்று; இந்தச் சுருதியானது வேண்டிய போகங்களைப் புசித்தலைக் குறித்தலாற் பிரமாதி சதாசிவாந்த அதிகாரிகள் மண்டலங்களிலேயுள்ள போகங்களை அடைதலே கூறப்படுகின்றது. ஆகலின், அவனுக்கு ஜகத்சிருட்டியாதி வியாபாரம் இல்லை. (கஅ)

(ஆக்ஷேபம்) அங்ஙனமாயின் போகசம்பந்தத்தினுல் விகாரத்துவம் உளதாமோ என,

(உத்தரம்) சூத்திரகாரர் கூறுகின்றனர்.

விகாராவர்த்தி சததா ஹி ஸ்திதிமாஹ (ச. ச. கக)

**(ருசஉ) அது விகாரத்துக்கு அமைந்ததன்று; இங்ஙனம் சுருதி (ஆன்மாவின்) நிலையைக் கூறுகின்றது.**

அவன் அநுபவிக்க வேண்டிய ஆனந்தம் விகாரத்தொடக்குண்ணுதுதாய்ப் பரிபூரணமாயுள்ள பிரம சொரூபமே.

ரஸோ வை ஸ:। ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி।

(தைத். உ. எ)

"அவர் இரசம்;" "இவன் ஆனந்தத்தை அடைந்து ஆனந்தமாகின்றான்" என இவனுடைய ஸ்திதியைச் சுருதி கூறுகின்றது.

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம (தைத். உ. ௧)
"சத்தியம் ஞானம் அனந்தம் பிரமம்"
ஆநந்தோ ப்ரஹ்ம (தைத். ௩. ௬)

"ஆனந்தம் பிரமம்" என்றற்றொடக்கத்தவற்றிற் பிரமசொரூபம் விகாரமில்லாததென்றே கேட்கப்படுகின்றது. ஆகலின், மோக்ஷவின்பம் பாசவின்பம் போல விகாரமிலாதது. சதாசிவர் முதற் பிரமாவீறுயுள்ள அதிகாரிகளுடைய மண்டலங்களிலே இஷ்டப்பிரகாரம் சஞ்சரிப்பவனாய், வேண்டிய ரூபங்களை யுடையனாய், மனுஷ்யாதி தேகாபிமான மில்லாதவனாய், விரிந்த முச்சத்தி வியாபாரமுடையனாய், பரமானந்த பிரகாச விபூதிமயமாகிய சத்தி சிவங்களின் சமரசமாகிய பரப்பிரமசொரூபைகரசமாகிய பிரபஞ்சத்துள் மூழ்கிய பரிபூரண அகம்பாவப் பிரகாசத்தை அநுபவிக்கின்றான்.

அஹமந்நமஹமந்நமஹமந்நம் | அஹமந்நாதோ௨ஹமந்நாதோ௨ஹமந்நாதஃ (தைத். ௩. ௧௦. ௬)

"நான் அன்னம்; நான் அன்னம்; நான் அன்னம்; அன்னம் புசிப்பவன் யான்; அன்னம் புசிப்பவன் யான்; அன்னம் புசிப்பவன் யான்" என்றற்றொடக்கத்தவற்றாற் போக்கிய போக்தா முதலிய சகலப் பிரபஞ்சான்மபாவ பரிபூரண அஹம்பாவனையானது அவனுக்கு எய்துகின்றது. ஈண்டு அகங்காரமானது சம்சாரத்துக்குரியதன்று; சமஸ்தப் பிரபஞ்சத்தினும் மூழ்கிப் பரிபூரணமாயிருத்தலின். பின் அந்த அகங்காரத்தினால் முக்தனுடைய இயற்கையே கூறப்பட்டமையால், "நான் தேவன்," "நான் மனிதன்" எனத் தேகமாத்திரமாய் அடக்கிக் கற்பிக்கப்படும் பரிச்சின்ன சாம்சாரிகமாகிய அகங்காரத்துக்கு இது வேறேயாம். ஆகலின், அதற்கு ஈண்டுப் பிராகிருத அகங்கார சம்பந்தமில்லை. அஃதொழிந்து அகம் (அஹம்) என்பது சத்தி சிவாத்துவயமாகிய பிரமத்தின் மேற்று. அந்த அன்னமுதலியவற்றை அடக்கிய பிரபஞ்சஜாலம் (நானன்றி வேறில்லை) என்பதே முக்தனுடைய பாவனை.

அநுத்தரவிஸர்காத்மஶிவஶக்த்யத்வயாத்மநஃ|
பராமர்ஶோ நிர்வர்ணஶ்வாஷஹமித்யுச்யதே விபோஃ|
ஹ்ருத்யகாரோ த்வாதஶாந்தே ஹகாரஸ்திதம் விதுஃ|
அஹமாத்மகமேவைதம் யத்ப்ரகாஶாத்மவிஶ்ரமைஃ|

"நிரதிசயமாய், முடிவிலதாய், சிவசத்தித்துவயமாய், வியாபகமாயுள்ள பரமான்மாவானது பரிச்சேதமாக ஹேயகுணமிலதாயிருத்தல்பற்றி அகம் (அஹம்) என்று கூறப்படும்; இதயத்தில் அகாரமாய், துவாதசாந்தத்திலே ஹகாரமாய் இருக்கின்றது, ஆகலின், பெரியோர் பிரகாசமாகிய ஆன்மாவிலே முற்றும் அத்துவைத அகமாக இதனைப் (பிரபஞ்சத்தை) அறிகின்றனர்" என்பது ஆப்தவசனம். ஈண்டு நிரதிசய பிரமானந்த பதத்தைப் பிர

வேசித்த [illegible]முடைய சகலப் பிரபஞ்சாகார சிவன் எனப்பெயரிய பிரசாத அக்ஷரத்தை அநுசந்தானஞ் செய்தல் பூருவமாக உள்ள கானம் செய்யப் [illegible] விதிக்கப்படவில்லை. பின் ஆனந்தத்தைத் துய்த்தலாற் பரம உல்லாசத்தை வெளிப்படுத்தும் பொருட்டுள்ளதே அந்த ஸ்தோத்திரம். ஆகலின், முக்தர்களுக்குப் பிரமானந்த அநுபவவியாபாரமன்றிச் சிருட்டியாதி வியாபாரம் சுவேச்சையினல் இல்லை. (கக)

ஃப்ரத்யக்ஷாநுமாநே ச (ச. ச. உ௦)

(ருசரு) இங்ஙனம் பிரத்தியக்ஷமும் அநுமானமும் காட்டுகின்றன.

இங்ஙனம் மேலே கூறப்பட்ட பொருளை (முறையே) பிரத்தியக்ஷ அநுமானங்களாகிய சுருதியும் ஸ்மிருதியும் காட்டுகின்றன.

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத: (தைத். உ. க)

"ஆகலின் இந்த (பரம) ஆன்மாவிலிருந்து ஆகாசம் பிறந்தது" என்றற்றொடக்கத்த சுருதிகளும்,

அப ஏவ ஸஸர்ஜாதௌ (மனுஸ்மிருதி. க. அ)

"அப்புக்களையே முதற்கட் சிருட்டித்தனர்" என்றற்றொடக்கத்த ஸ்மிருதியும் (கூறுகின்றன). ஆகலின் பிரமமே ஜகத்துக்குக் காரணமுதலியவாக உள்ளது.

(பூருவபக்ஷம்) அங்ஙனமாகுங்கால்,

நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி (முண். ரு. க. ரு)

"துகளற்றவனுய்ப் பரமசாமியத்தை அடைகின்றுன்"

முக்தஶ்ஶிவஸமோ பவேத் (வாயு. பூ. உஅ: உஉ)

"முக்தன் சிவசமமாகின்றுன்" என்றற்றொடக்கத்தவற்றில் முக்தனுக்கும் பிரமமாகிய சிவத்தோடு பரமசாதிருசியம் உண்டெனப் பிரதிபாதித்தலின், சிவபிரானுக்கு ஜகத் சிருட்டிமுதலியன இயற்றற்கு எவ்வதிகாரம் உண்டோ, அஃதெல்லாம் முக்தனுக்கும் வரையறுப்பின்றி உளவாம்; இன்றேற் பரம சாதிருசியம் என்றதற்கு ஹாநி எய்தும் எனின், (உ௦)

(சித்தாந்தம்) இதற்கு மாறுகச் சூத்திரகாரர் கூறுவாராயினர்.

போகமாத்ரஸாம்யலிங்காச்ச (ச. ச. உக)

(ருசச) போகமாத்திரத்திலே சாமியம் என இலிங்கமுண்மையானும்.

முக்தனுக்குப் பிரமத்தோடு சாமியம் சகல காமியபோகமாத்திரத்தினுலேயன்றி ஜகத்சிருட்டி முதலியவைகளால் அன்று. அங்ஙனம் இருக்கு

மேல், அநேகேசுவரப்பிரசங்கத்தினல் அநவஸ்தை (என்னும் தோஷம்) உளதாகும். அங்ஙனமே சுருதியும்,

ஸொऽஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா।

(தைத். உ. க)

"சர்வஞ்ஞதையுடைய பிரமத்தின் ஆனந்தத்தோடு கூட அவன் சமஸ்த காமங்களையும் அநுபவிக்கின்றான்" என்று சுருதி கூறுகின்றது. பலவற்றையும் பார்க்கின்ற சித்ரூபமாகிய ஞானசத்தியோடியைந்தமையாற் பிரமமானது விபச்சித் எனப்படுகின்றது. தேசகால விசேஷ சூனியமாயுள்ள பிரமமாகிய சிவபெருமானுக்குச் சர்வஞ்ஞத்துவம், சர்வகாரணத்துவம், சர்வான்மகத்துவம், சர்வசக்திமத்துவம், அலுப்தசத்தித்துவம், சுவதந்திரத்துவம், நித்திய திருப்தத்துவம், நிரதிசய ஐசுவரியத்துவம், சர்வாநுக்கிராககத்துவம், சமஸ்த முக்தான்மாக்கள் அடையற்பாலதாம் ஆனந்தரூபத்துவம் என்பன இயற்கையாய் இதயமாய்ப் பரம சத்தாக ஸ்புரிக்கும் ரூபமாயுள்ள எந்த ஞானசத்தியினல் உண்டாகின்றனவோ, அவ்வியல்பினதாகிய ஞானசத்தியோடியைந்த பரப்பிரமசிவனர் விபச்சித் எனப்படுகின்றார். அவ்வியல்பினராகிய பரப்பிரமசிவனரோடு முக்தனானவன் பரமசாமியத்தை அடைந்து சகல போகங்களையும் அந்தக்கரண இயற்கையாகிய மனசு எனப்படும் ஞானத்தினல் அநுபவித்துக் கண்டு களிக்கின்றனன். அங்ஙனமே,

மநஸைதாந் காமாந்பஶ்யந்ரமதே। மநோऽஸ்ய தைவம் சக்ஷுः।

(சாந். அ. கஉ. ரு)

"ஞானத்தினலே இப்போகங்களைக் கண்டு களிக்கின்றனன்; ஞானமே அவனுடைய திவ்ய கண்" எனச் சுருதி கூறுகின்றது.

ஸத்யாத்ம ப்ராணாராமம்। மந ஆநந்தம் (தைத். க. சு)

"சத்தியான்ம பிராணாராமம்; மனஆனந்தம்" என்றவிடத்துப் பிரமத்துக்கும் புறக்கரணம் வேண்டாத ஞானத்திலேதான் ஆனந்தபோகம்; பிரமத்துக்கும் முக்தனுக்கும் சரீரேந்திரியாதியைக்கோடல் இஷ்டப்படி போகத்தின் பொருட்டேயாம். இதுபற்றிப் தோஷமில்லை. ஆகலின், எங்ஙனம் பிரமம் சமஸ்த போகங்களையும் புசிக்கின்றதோ, அங்ஙனமே முக்தனும் போக மாத்திரத்திலே சாமியம்; (இது தான்) முக்தன் பிரமத்தோடு (சாமியம் என்றதின்) உண்மைப்பொருள். உலகத்திலே சில குணங்கள் பொருத்தமாயிருத்தலினல் "தேவதத்தன் சிங்கம்" என்று கூறுமிடங்களிலே சாமியவியவகாரம் காணப்படலான், பிரமத்தோடு முக்தான்மா சாமியமுறுகின்றான் என்னும் வசனத்துக்கு ஹாநி இல்லை. (உக)

அநாவ்ருத்திஃஶப்தாதநாவ்ருத்திஃஶப்தாத் (ச. ச. உஉ)

(ருசரு) திரும்பிவருதல் இன்றெனச் சுருதி கூறலின், திரும்பிவருதல் இன்றெனச் சுருதி கூறலின்.

முக்தான்மாக்களுக்குப் பிரமத்தோடு சாமியமாதலே சாயுச்சியம் என்று கூறப்பட்டது; போகமுதலியவற்றிற் சாதிருசியமுண்மையின்.

ஈண்டு அவர்களுக்குப் பின்னும் ஓர்காற் சம்சாரம் உளதா? அன்றா? என்பது சந்தேகம்.

கன்மவிசேஷத்தினால் இந்திராதிபதங்களை அடைந்தவர்க்கு மீளத்திரும்பிவருதல் காணப்படலின், அது சந்தேகத்துக்குக் காரணமாயிருக்கின்றது.

(பூருவபக்ஷம்) இதனால் என் சொல்லியவாறோ எனின்,

காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரந் (தைத். ந. க௦. ரு)

"தான் வேண்டிய வடிவங்களை எடுத்து வேண்டிய போகங்களைத் துய்த்துச் சஞ்சரிக்கின்றான்" என்றற்றொடக்கத்தவற்றினால் ஆன்மாக்களுக்கு அநேக சரீரம் உளதாதல் பெறப்படுகின்றது. முக்தான்மாக்களுக்கு அந்தச் சரீர சம்பந்தம் உளதாங்கால், பின்னும் அவர்க்குப் புண்ணியபாவச் செய்கை உண்டாகின்றது. முன் செய்த உபாசனையின் மிகுதிப்பாடு அநேகமாகப் போகத்தினால் க்ஷயமாகுங்கால், அக்காலத்திற் பாகமாகும் கன்ம வசத்தினால் மீளவும் ஹீந இன்பமாகிய சம்சாரம் எய்துகின்றது. அங்ஙனமே, * இந்திராதிபதங்களை அடைந்தவர்களும் புண்ணிய மிகுதிப்பாடு குறையுங்கால் அங்கிருந்து மீண்டுவந்து பிராமணர் முதலியோராய்ப் பிறக்கின்றனர். ஆகலின், பிரமபதத்தை அடைந்தவர்களும் போக்கியம் போக்தா முதலிய சம்பந்தம் காரணமாகப் போகத்துக்குரிய புண்ணிய மிகுதிப்பாடு க்ஷயமாகுங்காற் சம்சாரத்துக்கு மீளத்திரும்புவார் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். சாக்ஷாத்கரிக்கப்பட்ட பரப்பிரம ஜ்யோதியினராய், அந்தப் பரப்பிரம பதத்தைப் பிரவேசித்தவர்களாயுள்ள முக்தான்மாக்களுககுச் சம்சாரத்திலே புநராவர்த்தி இல்லை. எதனால்,

ஸ வல்வேவம் வர்த்தயந்யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே ந ச புநராவர்த்ததே (சாங். அ. கரு. க)

"அவன் இந்தப் பிரகாரம் ஆயுள்வரையுமிருந்து * பிரமலோகத்தை அடைகின்றான், மீளத் திரும்புவானல்லன், மீளத்திரும்புவானல்லன்" என்றற்றொடக்கத்த சுருதியுண்மையின். பிரம விஷ்ணு முதலாயினோருடைய பதங்

* இந்திராதிபதங்களையடைந்தவர்க்குத் புநராவர்த்தியினாற் பிறப்புண்டாமாதலின், அப்பதகங்களைச் சிவனடியார் பொருட்படுத்தார்;

மங்குறோய்மணிமாடமதிதவழுநெடுவீதிச்
சங்கெலாங்கரைபொருதுதிரைபுலம்புஞ்சாய்க்காட்டான்
கொங்குலாவரிவண்டினிசைபாடுமலர்க்கொன்றைத்
தொங்கலானடியார்க்குச்சுவர்க்கங்கள்பொருளல்வே.

(திருச்சாய்க்காடு. ஞான, எ)

களைக் கூறி விடுத்து, அவற்றுக்கு விலக்ஷணமாயுள்ள சிவமாகிய பரப்பிரமத்தின் விசேஷத்தைப் புராணம் கூறுகின்றது. எங்ஙனமெனின்,

𑌉𑌮𑌾𑌪𑌤𑍇𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌕𑍋𑌟𑌿𑌸𑌮𑌪𑍍𑌰𑌭𑌮𑍍।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌷𑌯𑌮𑍍।
𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌤𑌤𑍍𑌪𑌦𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑍍𑌲𑍇𑌶𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌾𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵𑌗𑌾𑌃 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌃 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇।
𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌕𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑌣𑌾𑌃 𑌪𑌰𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌸𑌂𑌯𑍁𑌤𑌾𑌃।
𑌸𑌦𑍇𑌹𑌾𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑍇𑌹𑌾𑌶𑍍𑌚 𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑍇𑌚𑍍𑌛𑌯𑌾 𑌪𑍁𑌨𑌃।
𑌯𑍇 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌃 𑌪𑌰𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌰𑌤𑌾 𑌨𑌰𑌾𑌃।
𑌨 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌘𑍋𑌰𑍇 𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑌣𑍍𑌡𑌲𑍇।

‘உமாபதியாருடைய முதலாவதாய ஸ்தானம் கோடி சூரியப்பிரகாசமுடையதாய், சர்வபோகங்களோடு கூடியதாய், விசுத்தமாய், நித்தியமாய், அக்ஷயமாயுள்ளது; அந்தத் திவ்யபதத்தை அடைந்து சமஸ்த கிலேசமிலராய், சர்வஞ்ஞராய், சர்வவியாபகராய், சுத்தர்களாய், பரிபூரணராயிருக்கின்றார்கள்; அவர்கள் தாம் விரும்பியவாறு விசுத்தகாரியகரணங்களையுடையவர்களாய், பரமைசுவரியங்களோடியைந்தவர்களாய், விரும்பியவாறு சதேகர்களாயேனும் விதேகர்களாயேனுமாகின்றார்கள்; ஞானயோகத்திலே விருப்பமுடையர்களாய் எந்த மனிதர்கள் அந்தப் பரமஸ்தானத்தை அடைகின்றார்களோ அவர்களுக்குக் கோரமாகிய சம்சாரமண்டலத்திலே மீளத்திரும்புதல் இல்லை” என்பதாம்.

இதன் தாற்பரியம் கூறப்படுமாறு:—

𑌪𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌰𑍁𑌪𑌸𑌂𑌪𑌦𑍍𑌯 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑌾𑌭𑌿𑌨𑌿𑌷𑍍𑌪𑌦𑍍𑌯𑌤𑍇।

(சாந். அ. ௧௨. ௩)

---

*இப்பிரமலோகம் சிவலோகம் எனப்படும். இச்சாந்தோக்கிய சுருதிப்பொருட்கும் இச்சுருதியை ஆதாரமாகக்கொண்ட (ச. ச. ௨௨-ஆஞ்) சூத்திரத்துக்கும் இயைந்ததே தேவார முதலிய திராவிட வேதங்கள் அப்பிரமலோகத்தை சிவலோகம் சிவபுரம் என்றற்றொடக்கத்தனவாக விதந்து துதிப்பனவாயின.

எய்தவொண்ணாவிறைவன்னுறைகின்றபுகலியைக்
கைதவமில்லாக்கவுணியன்ஞானசம்பந்தன்சீர்
செய்தபத்தும்மிவைசெப்பவல்லார்சிவலோகத்தி
லெய்திநல்லவிமையோர்களேத்தவிருப்பார்களே.

(திருப்புகலி, ஞான, ௧௧)

பந்தணைவிரலாள்பங்கநீயல்லாற்பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செந்தழல்போல்வாய்சிவபுரத்தரசேதிருப்பெருந்துறையுறைசிவனே
யந்தமிலமுதேயரும்பெரும்பொருளேயாரமுதேயடியேனை
வந்துயவாண்டாய்வாழ்கிலேன்கண்டாய்வருகவென்றருள்புரியாயே.

(வாழாப்பத்து, ௮)

(௧) பரஞ்சோதிரூபத்தை அடைந்து தன் குணங்களினால் ஆவிர்ப்பவிக்கின்றான்'' எனப் பரஞ்சோதி ரூபமே முக்தனால் அடையப்படுகின்ற உமாசகிதமாகிய பரப்பிரமம் என்று கேட்கப்படுகின்றது. அளவிலா ஆதித்தியப் பிரகாசத்தையெல்லாம் மழுக்கும் அவரது பிரகாசத்தினால் இவையெல்லாம் பிரகாசிக்கும்.

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நிः। தமேவ பாந்தமநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி (கட. ரு. கரு)

"அங்கே சூரியன் பிரகாசிப்பதில்லை; சந்திரதாரகைகளேனும், இந்த மின்னல்களேனும், இந்த அக்கினியேனும் பிரகாசிப்பதில்லை; அவர் பிரகாசிக்கும்போது அவரைத் தொடர்ந்து எல்லாம் பிரகாசிக்கின்றன; அவருடைய ஒளியால் இஃதெல்லாம் பிரகாசிக்கின்றன'' என்று சுருதி கூறுகின்றது.

பரமேஶ்வரோऽஹம் புஷ்கரோऽஹம் பவித்ரோऽஹம் உக்ரோऽஹம் மத்யோऽஹம் பஹிஶ்சாஹம் புரஸ்தாஜ்ஜ்யோதிரித்யஹமேகः ஸர்வே ச மாமேவ மாம் யோ வேத ஸ ஸர்வாந் தேவாந் வேத (அதர்வசிரசு)

"பரமேசுவரன் நான், புஷ்கரம் நான், பவித்திரம் நான், நுனியும் நடுவும், வெளியும் முன்னும் ஜ்யோதியுமாகிய நானே ஏகன்; எல்லாம் நான் என்று என்னை எவன் அறிகின்றானோ, அவன் எல்லாத் தேவர்களையும் அறிகின்றான்'' எனச் சிவபெருமானால் அதர்வசிரசில் நிரூபிக்கப்பட்டது.

ஸர்வதः பாணிபாதம் தம் ஸர்வதோ ऽக்ஷிஶிரோமுகம்।
ஸர்வமாவ்ருத்ய திஷ்டந்தம் தேஜோராஶிம் ஶிவம் ஸ்மரேத்॥

"எங்கும் கையும் பாதகமலமுமாய், எங்கும் கண்ணும் சிரசும் முகமுமாய் எல்லாவற்றையும் சூழ்ந்துநிற்கும் ஒளி சமூகத்தினதுமாயுள்ள சிவத்தைத் தியானிக்க'' என்று ஸ்மிருதியுங் கூறுகின்றது.

ஆகனின், பரஞ்சோதி ரூபமாய் உமாசகித சிவன் எனப் பெயரிய பரப்பிரமம் அதிஷ்டித்த பதத்தைக் கோடியசூரியப்பிரகாசம் என்று கூறுவதிற்றடை என்னை? நிரதிசய தேஜோமாத்திர இரத்தினமயமாயுள்ள துவே நிரதிசய ஆனந்தத்துக்கு உறைவிடமாயிருத்தலிற் * சுவர்க்கம் எனப்படும்.

---

*அதர்வசிரசு ஐதரேய முதலிய உபநிடதங்களிலே சிவலோகமானது சுவர்க்கலோகம் என்று கூறப்பட்டாற் போல, தேவார திருவாசகங்களினும் அச்சிவலோகம் வானுலகம் அண்டர்நாடு என்றற்றொடக்கத்தனவாகக் கூறப்படுகின்றது;

உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைவோர்க்குக்
கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தல்கருத்தானீர்
பொருவார்ந்ததெண்கடலொண்சங்கர் திளைக்கும்பூம்புகலித்
திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே.

(திருப்புகலி, ஞான, ௧)

ஸுவர்கோ லோகோ ஜ்யோதிஷாவ்ருத:।
(தைத். ஆரணி. க. உஎ. ககசு)

தேவாஹவை ஸ்வர்க்கம் லோகமாயம்ஸ்தே தேவா ருத்ரமப்ருச்சந்।
(அதர்வசிரசு)

"சுவர்க்கலோகம் ஜ்யோதியினற் சூழப்பட்டது;" "தேவர்கள் சுவர்க்க லோகத்தை அடைந்தார்கள்; அந்தத் தேவர்கள் உருத்திரரைக் கேட்டார்கள்" என்றற்றொடக்கத்த சுருதிகளிற் கூறப்பட்ட ஸ்தானம் துரியமும் துரியாதீதமுமாம்; அங்ஙனமே உத்தரகீதையும்,

துர்யம் துர்யாதீதஞ் சிவஸ்தானமநாமயம்।
(உத்தரகீதை)

"துரியமும் துரியாதீதமுமாயுள்ளது அநாமயமாகிய சிவபிரானுடைய ஸ்தானம்" என்று (கூறுகின்றது).

(உ) சமஸ்த உலகங்களையும் கடந்திருத்தலானும், (அனைத்துக்கும்) காரணமாயிருத்தலானும் அந்த ஸ்தானம் ஆத்யம் (முதலாயது) எனக் கூறப்பட்டது.

சிவலோகாத்பஹிர்ஜ்ஞேயா ந்யண்டஸ்யாவரணாநிச।

"சிவலோகத்துக்குப் புறத்தே அறியற்பாலன அண்டத்தின் ஆவரணங்களுமாம்" என்றற்றொடக்கத்தவற்றால், சிவலோகத்துக்குப் புறத்தே கீழ்ப்பாகத்திற் பிரமாண்டத்தின் சப்தாவரணங்கள் உள்ளன என்பதாம்.

பராத்பரதரோ ப்ரஹ்மா தத்பராத்பரதோ ஹரி:। தத்பராத்பரத: சிவ: (சிவசங்கற்பம், சரபம்)

"பரத்துக்குமேற் பரமாயுள்ளார் பிரமா; அவருக்குமேற் பரமாயினர் விஷ்ணு; அவருக்குமேற் பரமாயுள்ளார் சிவன்" என்னுஞ் சுருதியினற் பிரமாதி விசுவாதிகமாகிய பரப்பிரமத்தின் பதம் விசுவங்களுக்கெல்லாம் அப்பாலுள்ளது.

(௩) அது ஆதியாம் உமாபதி எனப்படும் பரப்பிரம சிவனரது ஸ்தானம்.

உமாஸஹாயம் பரமேஶ்வரம் விபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசா

---

தொண்டகாள்செல்லீர்பத்தர்காள்சூழப்போகீ
ரொண்டிறல்யோகிகளேபேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களேகடைக்கூழைசென்மின்க
ளண்டர்நாடாள்வோநாமல்லற்படவாராமே.
திருப்படையெழுச்சி, உ)

ஷழ| க்யாதவா ஶிவம் ஶாந்தம் ஸமஸ்த ஸாக்ஷிணம் தமஸ: பரஸ்தாத் (கைவ)

"உமாசகாயராய், பரமேசுவரராய், விபுவாய், முக்கண்ணராய், நீலகண்டராய், பிரசாந்தராயுள்ளாரைத் தியானித்து, பூதகாரணரும், சமஸ்த சாட்சியாயுமாயினாரைத் துறவியானவன் இருளுக்குமேற் போயடைகின்றான்" என்னும் சுருதியினால் உமாசகிதரும், நீலகண்டரும், முக்கண்ணருமாகிய சிவபெருமானே தியேயப் பொருளாம் என்றும், தமசாகிய பிரகிருதிக்கு மேலேதான் அச்சிவபொருள் அடையற்பாலதாம் என்றும் அறியப்படுகின்றது.

ஸர்வோ வை ருத்ர: (தைத். ஆரணி. கம. உச. சஉ)

"எல்லாம் உருத்திரரே" என்று தொடங்கி, எல்லாவற்றுக்கும் முதன்மை சிவனுக்காமெனக் கூறி, உபசங்காரத்திலே

ஹிரண்யபாஹவே ஹிரண்யபதயே அம்பிகாபதய உமாபதயே|
(தைத். ஆரணி. கம. உஉ. சம)

"இரண்ணியபாகுவினர்க்கு, இரண்ணியபதிக்கு, அம்பிகாபதிக்கு, உமாபதிக்கு (நமஸ்காரம்) என்று முடித்தது. பிரணவபரியாயமாகிய உமாசப்தத்தினாலே பரப்பிரகிருதிரூப பராசத்தியார் கூறப்பட்டனர்.

க்ருஷ்ணபிங்களம் ப்ரஹ்ம (தைத். ஆரணி. கம. உரு. சக)

"கிருஷ்ணபிங்களம் பிரமம்" என்றவிடத்து அவ்வுமையம்மையார் பிரமத்துக்குச் சாமரசியமாகச் சாதிக்கப்பட்டனர். ஆகலின், அந்த ஸ்தானம் உமாபதியாகிய பரப்பிரமத்துக்குரியதேயாம்.

(ச) அதுபின் எவ்வியல்பிற்று? அது சர்வகாமசமாயுக்தமாயது; (அஃதாவது) அது எஞ்ஞான்றும் போகங்களோடியைந்ததென்பதாம். அது பற்றியன்றோ,

ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா |
(தைத். உ. க)

"சர்வஞ்ஞதையுடைய பிரமத்தின் ஆனந்தத்தோடு கூடச் சமஸ்த போகங்களையும் அவன் துய்க்கின்றான்" என முக்தான்மாவுக்குப் பிரமானந்தத்தோடு கூடச் சமஸ்த போகங்களும் எய்துவனவாக நிரூபிக்கப்பட்டது.

(ரு) விசுத்தம் என்றது விகாரத்தினற்றொடக்குண்ணாது என்னும் பொருட்டு;

ஸமஸ்த ஸாக்ஷிணம் தமஸ: பரஸ்தாத் (கைவ)

ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் (தைத். ஆரணி. ரு. கரு. சம)

"தமசுக்குமேலே சமஸ்தசாட்சியாய்" "தமசுக்குமேல் ஆதித்தியவர்ணர்" என்றற்றொடக்கத்த சுருதிகளிலே பிரகிருதி விகாரங்களைக் [illegible] பெறப்படுகின்றமையின்.

பிரகிருதி விகாரத்துக்குரிய இராகத் துவேஷ கோப முதலியவற்றைப் பிறப்பிக்காமையின் அது சிவமயமாகிய பதம் என்பது போதர விசுத்தம் எனப்பட்டது. இதனால் அது பரதத்துவப்பிரகாசமயமாய், மகானந்தத் தினற் றேங்கிய பரமாகாசரூபமாய் (இருப்பதெனக்) கூறப்பட்டவாறாயிற்று.

(௬) விகாரமுடைய பிராகிருதப் பொருள்கட்கே சிருட்டியாதி கேட்கப்படலானும், அது அவற்றைக் கடந்திருத்தலானும் நித்தியம் எனப்பட்டது. பூதாகாயமுதலிய தேகப் பிரபஞ்சத்துக்கே சிருட்டி முதலியன எய்தும். பரமாகாச ரூபமாயுள்ள அப்பதத்துக்கு அவை இல்லை.

(ஆக்ஷேபம்)

𑌯𑌦𑌾 𑌤𑌮𑌸𑍍𑌤𑌨𑍍𑌨 𑌦𑌿𑌵𑌾 𑌨 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌰𑍍𑌨 𑌸𑌨𑍍𑌨𑌚𑌾𑌸𑌚𑍍𑌛𑌿𑌵 𑌏𑌵 𑌕𑍇𑌵𑌲𑌃।
(சுவே. ௪. ௧௮)

"எப்போது இருள் உளதாய், பகலும் இரவும் இலவாய், சத்தும் அசத்தும் இலவாய் இருந்ததோ, அப்போதே கேவலப்பொருளாகிய சிவன் ஒருவரே இருந்தார்" என்று கேட்கப்படலாற் சிவபெருமானொழிந்த பிற அனைத்துக்கும் பிரளயம் எய்துகின்றது. அங்ஙனமாயின், முத்தான்மாக்களுடைய அந்தப்பதம் நித்தியமாதல் எங்ஙனமாமெனின்,

(உத்தரம்) அன்று; முத்தான்மாக்களுடைய அப்பதமும் சிவதத்துவத்துள் அந்தர்ப்பாவமாதலின். தூய்மையுடைமையாற் சிவதத்துவமானது இவர்கட்கும் சமானமாயுண்டே. சிருட்டிமுதலிய சக்கரத்துட்பட்ட பசுபாசங்களுக்கு விலக்ஷணமாயுள்ளது சிவதத்துவம். ஆதலின், பசுபாச விலக்ஷணயுள்ள சிவபிரானார் பதத்துக்கு அநித்தியதத்துவப் பிரசங்கம் இல்லை.

(௭) அக்ஷயம் என்றது குறைதலும் கூடுதலும் இல்லை என்னும் பொருட்டு. குறைதல் மிகுதியாய்க்கொண்டு கன்மபலத்தையுடைய சுவர்க்க முதலியவற்றுக்கு விலக்ஷணமாதல்பற்றி அவ்வியல்பினதாயிற்று.

𑌸𑍋𑌽𑌧𑍍𑌵𑌨𑌃 𑌪𑌾𑌰𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑍍 (கட. ௩. ௯)

"அவன் அத்துவாவின் கரைக்கண்ணதாகிய அந்தச் சிவபிரானாருடைய பரம பதத்தை அடைகின்றான்" என்று சுருதி கூறுகின்றது. "விஷ்ணுவின் பரமசோரூபம்" என்றது அறுவித அத்துவாவையும் கடந்த பரமாகாசம் எனப்படும் சிவனாருடைய ஸ்தானம் என்றன்றோ கூறப்படுகின்றது.

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌮𑌭𑌿𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌚 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।
(சாந். அ. ௧௫. ௪)

"பிரமலோகத்தை அடைந்து, அவன் மீளத் திரும்புவானல்லன்" என்றவிடத்து அநாவிருத்திலக்ஷணத்தையுடைய பிரமலோகம் என்று கூறப்படுவது இந்த ஸ்தானமே.

ஸாவ்ராவ்ஹ தகுவஹ௦ திவ்ய௦ ஸக்ஷேஹக்ஷுவஜிடிதாஃ|

(அ) "அந்தத் திவ்யபதத்தை அடைந்து சமஸ்த கிலேசங்கள் ஒழிந்தவர்களாய்" என்றமையால், அப்பதத்தை அடைந்த பிரமசாதிருசிய முற்ற முக்தர்களின் இலக்ஷணம் கூறப்படுகின்றது. வாக்கு மனசுக்கு அகோசரமாய்த் திவ்ய சுவபாவமாயுள்ள மகாதேவரது பதத்தை எய்தி, அதற்கு வாய்ந்த ஞானயோகத்தினல் அடைந்த முக்தான்மாக்களோ சமஸ்தகிலேசம் ஒழிந்தவர்களாய் இருப்பார்கள்.

அஸ்தம் எனப்படும் விநாசமும் கிலேசம் எனப்படும் அவித்தை முதலியவும் முற்றும் ஒழிந்தவர்களாய் இருக்கின்றனர். இதனல் முக்தான்மாக்கள் ஹேயகுணம் இல்லாதிருப்பார்கள் என்று கூறப்பட்டது. ஆகலின், அவர்கள் கல்யாணகுணமுடையர் என்று கூறப்பட்டதாயிற்று.

(கூ) சிவத்துவத்தை அடைந்த அவர்கள் சர்வஞ்ஞர் என்றமையால் அவர்கள் ஞானத்தை மூடியமலம் நாசமுற, யாண்டும் ஊடுருவிய ஞானசத்தியுடையவர்களாயும், சர்வஞ்ஞர்களாயும், எங்கும் நிறைந்தவர்களாயுமிருக்கின்றனர். அவர்கள் எங்கும் நிறைந்தவர் என்றது அனந்தசத்தியுடைமையின். இது (௪. ௪. கரு-ஆம்) சூத்திரத்தினற் கூறப்பட்டது.

(க0) அவர்கள் சுத்தர்கள் என்றது அவர்க்கு மலம் நீங்கியபோது உண்டாகிய சிவனரியல்புகள் தூயனவாய்ப் பிரகாசரூபமாய் ஞானகனமாய் இருந்தமையினலாம். (௪. ௪. எ-ஆம்) சூத்திரத்தில் ஆன்மாவானது சுவயம் பிரகாசமுடையதென்றும் சத்தியசங்கற்பத்துவாதி விசேஷகுணமுடையதென்றும் கூறப்பட்டது.

(கக) பரிபூரணர்களாய் இருக்கின்றார்கள் என்றது நித்தியதிருப்தர்களாய் இருப்பவர்களின் மேற்று; நிரதிசயானந்த சொரூப முண்மையானும், விரும்பிய சகல போகங்களையுடைமையினுலுமாம். நிர்விகாரநிரதிசயானந்தத்தை அநுபவித்தலே அவர்கள் சுபாவம். இது (௪. ௪. கரு-ஆம்) சூத்திரத்திற் கூறப்பட்டது. ஆதலின், அவர்கள் பரிபூரணர்களும், தூயகாரியகரணங்களையுடையவர்களும், விகாரங்களினற் றொடக்குண்ணுத சரீரேந்திரியங்களையுடையவர்களுமாம் என்பது;

ஹகயா தியா ஹவதி (சாந். எ. உகூ. உ)

"ஒரு பிரகாரமாகின்றனர்; மூன்று பிரகாரமாகின்றனர்" என முக்தன் சுவேச்சையினுலே அநேக சரீரமெடுப்பதாகச் சுருதியினற் பெறப்பட்டது. ஆகலின், முக்தர்கள் விரும்பி எடுத்த சரீரமுதலியன தூயனவே; தூய்தாகிய மகாமாயையினின்றுண்டானமையின்.

விசுத்தம் என்றது ஆசிரயவிகாரத்துக்கு (முக்தான்மா) ஹேதுவாகா மையினாலாம்.

ஊடெூா ஊயாஹிஃ வ௲௲ஷிவஹ௦யடெத (பிரு. ௪. ௫. ௧௯)

"இறைவர் (மகா) மாயைவாயிலாக அநேக வடிவங்கொண்டாராகத் தோற்றுகின்றது" என்ற மந்திரத்தினாற் சிவபெருமானும் மகாமாயாசத்திகள் வாயிலாக நீலகண்டத்துவாதி இலக்ஷணமுடைய அநேக சரீரங் கொள்வாராகக் கேட்கப்படுகின்றது.

ஹூரெஹி ஙபெஹ: வ௲௲ஷிவ உஙூ |

(இரு. வே. ௨. ௩௩. ௯)

"உக்கிரர் (சிவபெருமான்) ஸ்திரமாகிய அங்கங்களோடு பலரூபமுடையர்" என்னும் மந்திரபாகம் சிவபெருமான் எடுக்கும் அப்பிராகிருதமாய் விசுத்த ஞான மயமாயுள்ள சரீரங்கள் உறுதியாயுள்ளன என்று கூறுகின்றது. எங்ஙனம் சிவபெருமான் விசுத்தமாகிய அநேக சரீரங்களை எடுக்கின்றாரோ, அங்ஙனம் முக்தர்களுமாம்.

(௧௨) பரமைசுவரியத்தோடு இசைந்தவர் என்பது சுவாதீனப் பிரவிருத்தியுடையவராய்ப் பிறராற் செலுத்தப்படுகின்ற கார்ப்பண்ணியம் இல்லாத பரம விபூதியோடிசைந்தவர் எனப் பொருள்படும். (௪. ௪. ௯-ஆம்) சூத்திரத்தில் முக்தன் கன்மமுதலியவற்றால் வசியப்படாது பரமசுவாதந்திரியமாயிருப்பன் என்று கூறப்பட்டது. ஆகலின், முக்தான்மாக்கள் சுவதந்திரர்களாதலிற் பரமைசுவரியத்தோடிசைந்தார்கள் என்பதாம்.

ஸஜெஹாஶ்ச விஜெஹாஶ்ச ஸ்வஜ்ஞாரெத்யாவ௲நஃ |

(௧௩) "பின்னரும் சுவேச்சையினாலே சதேகர்களாயேனும் விதேகர்களாயேனும் இருக்கின்றார்கள்" என்றமையாற் சிவபதத்தை அடைந்த அவர்கள் சிவ சங்கற்பமின்றி ஓர் கால் தூய சரீரேந்திரியங்களையுடையர்களாகப் போகந் துய்ப்பவராகின்றார்கள் என்பதாம். ஓர்கால் தேகேந்திரியங்களில்லாது கேவலம் இயல்பாகிய வியாபக ஞானத்தினாற் சகல போகத்தையும் அநுபவிப்பவர்களாகின்றார்கள். அதுமேலே (௪. ௪. ௧௨-௧ஆம்) சூத்திரத்தில் அதற்கு வாய்ந்த சுருதியை அநுசரித்துக் கூறப்பட்டது. ஆகலின், அவர்கள் இஷ்டப்பிரகாரம் சதேகர்களாயேனும் விதேகர்களாயேனும் ஆகின்றார்கள்.

விரூஷிவெஹ்யா விஶ்வரூஷிவெஹ்யஶ்ச வொநஃ |

(யசுர். வே. ௪. ௫. ௪. ௧)

"விரூபர்க்கும் விசுவரூபர்க்கும் நமஸ்காரம்" என்று சுருதி கூறுகின்றது. சிவபெருமானுடைய சாமியகுணங்களுடையர்களாய் நித்திய சித்தர்களாயுள்ளார்க்கு ரூபமிலதாதலும் அநேகரூபங்கொள்ளுதலும் உளவாம். அநே

கசரீரமுளவாய் விசுவரூபசரீரமெடுத்தலாற் சிவபெருமானுடைய சரீரங்கள் எவ்வாறோ, அவ்வாறே நீலகண்டத்துவாதி இலக்ஷணங்கள் அவர் சாமிய குணமுடையராயினோர்க்கு உளவாம்; சிலர்

நீலக்ரீவா ஶிதிகண்டா: (யசுர். வே. ச. ரு. கக. க)

"நீலக்கிரீவர் சிதிகண்டர்" என்றற்றொடக்கத்தனவாகச் சுருதிகள் கூறலான்.

(கச) இங்ஙனம் எவர்கள் இயமாதியுடையராய் வேதாந்த ஜன்னிய மாகிய ஞானயோகத்திலே தாற்பரியமுடையவர்களாயிருக்கின்றார்களோ, மேலே கூறிய குணங்களையுடைய சிவ சாதிருச்சியமுற்ற அந்த முக்தர்கள் அந்தச் சிவனுருடைய பரமபதத்தை அடைந்து நிரதிசய தாபரூபமாய்ச் சகிக்கவியலாத கோரமாயுள்ள சம்சாரமண்டலத்திலே மீளத்திரும்புவாரல்லர். அவரைச் சம்சார தருமம் மீளப்பற்றாது. ஆகலின், *"பிரமலோகத்தை அடைந்து மீளத்திரும்புவானல்லன்" என்று கூறப்பட்டது. சர்வஞ்ஞரும், சர்வசத்தியினரும், சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வாநுக்கிரகரும், சர்வகர்ம சமாராத்தியரும், நிரஸ்த சமஸ்த தோஷ களங்கரும், நிரதிசய மங்கலகுண இரத்திநாகரரும், விரூபாக்ஷருமாகிய பரப்பிரம உமாபதியாருடைய எல்லையிறந்த ஆனந்த பிரகாசமாய், நித்தியமாய், அக்ஷயமாயுள்ள உலக பதத்தை அடைந்தவர்கள் சர்வஞ்ஞத்துவாதி குணங்களையுடையவர்களாய் மீளத்திரும்புதலின்றி அங்கே வசிக்கின்றனர்.

யத்ர தேவா அம்ருதமானஶானா ஸ்த்ருதீயே தாமாந்யப்யைரயந்த।
(தைத். ஆரணி. கO. க. ச)

---

*வேதாந்த சூத்திரத்து முதற் சூத்திரத்திற் கண்ட பிரமம் சத்தியோடியைந்த சிவபெருமான் என்று சிவபுராண கைலாசசங்கிதை (கக: சO-ஆஞ்) சுலோகங் கொண்டு நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ஆகலின் இந்தப் பிரமம் (உநரு-ஆம், உநகூ-ஆம்) உபக்கிரமணிகா இலக்கங்களிற் கண்ட (திருக்குறள், ந) ஏசினுறகிய ஆதிபகவன் மேற்று. (உகரு-ஆம்) இலக்கந் தொடுத்து (உகூரு-ஆம்) இலக்கம் வரையினும், தகராதிகரணத்தினும் (க. ந. கந), அலோபாதிகரணத்தினும் (ந. ந. நக), மற்றைய அதிகரணங்களினும் ஒரே முடிவுற மிகுத்துத் துதிக்கப்பட்ட திருச்சிற்றம்பலத்தினராகிய நிஷ்கள பரப்பிரம சிவபிரானை ஆப்பிராயணாதிகரணத்தினும் (ச. க. கஉ), ஆத்துமாதிகரணத்தினும் (ச. க. ந-னும், க. ந. உக-னும்) கண்டவாறு, இடையீடின்றி மரணாந்தம் வரையும் சேர்தலாகிய உபாசனையினாற் பரமசாமியமுற்ற சிவயோகிகள் (ச. ச. உஉ-ஆஞ்) சூத்திரத்துக்கு மூலமாய்நின்ற இந்த (சாந். அ. கரு. க-ஆஞ்) சுருதியிற் கண்ட பிரமலோகம் எனப்படும் சிவலோகமாகிய நிலத்தில், ஆத்தியானாதிகரணத்திற் (ந. ந. கச) கண்டவாறு சிவசாரூப்பியமடைந்து, (தைத். உ. க. னும், சாந். அ. கஉ. ந) னும் கண்டவாறு பிரமானந்தத்தோடு சமஸ்தபோகங்களையும் துய்த்து ரமித்துக் கிரீடித்து நீடுவாழ்வார் என்று இந்த இறுதி அதிகரணத்தினால் நிரூபிக்கப்பட்டது.

சிவாகமங்களையும் சிவாலயங்களையும் ஆதிசைவர்களாகிய சிவத்துவிஜர்களையும் நிந்தனை செய்யும் இயற்கை பூண்ட மாயாவாதிகளுடைய வாயை அடக்குதற்கும், வேதோபப்பிருங்கண நெறியானே சைவசமயத்தை ஸ்தாபனஞ்செய்தற்கும் வாய்ந்த மகாபாசுபதாஸ்திரமாகிப் பெருமை படைத்தது இந்த நீலகண்டசிவாசாரியரருளிய வைதிக சைவபாஷ்யமேயாம்.

(௬௫) "எங்கே வித்துவான்கள் சிவானந்தந் துய்த்து மூன்றுவதிலுள்ள தானங்களுட் பிரவேசிக்கின்றூர்களோ" என்று சுருதி கூறுவதால் நிரதிசயானந்த பிரகாசகனமாகிய பரப்பிரம சிவத்திலே சமரசத்தை அடைந்த முக்தர்கள் பிரகாச சரீரங்களையுடையவர்களாய், சர்வஞ்ஞர்களாய், சர்வகதர்களாய், சாந்தர்களாய், பரிபூரணர்களாய் நித்திய பரமைசுவரியங்களுக்கு ஆதாரர்களாய், முற்றும் நீங்கிய மலாவரணங்களையுடையவர்களாய், யாண்டும் சிவத்தைப் பார்ப்பவர்களாய், அந்தச் சிவபிரானுரை ஆன்மாவாகக் கொண்டவர்களாய், அவர்க்குரிய பரமாகாசத்திலேயுள்ளனவாம் விரும்பிய ஸ்தானங்களை அடைந்து இஷ்டப்பிரகாரம் வாய்த்த சகல போகங்களைத் துய்ப்பவர்களாய், அவரோடு கூட எப்போதும் யாண்டும் பிரகாசிக்கின்றூர்கள் என்பதாம். சர்வம் சமஞ்சசமே.

ஶ்வேதாசார்யபாதத்வந்த்வஶுஶ்ரூஷாஜ்யோதிதாத்மநா |
க்ருதமேதந்மயா பாஷ்யம் கேவலம் பக்திமார்க்கத: ||

சுவேதாசாரியருடைய இரு பதங்களுக்குந் தொண்டு செய்தலாற் பிரகாசிக்கப்பட்ட மார்க்கத்திறற் கேவலம் பக்தி மார்க்கமாய் இந்தப் பாஷ்யம் எம்மால் இயற்றப்பட்டது.

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர்
அருளிய
பிரமசூத்திர சிவாத்துவித சைவபாஷ்யம்
முற்றுப்பெற்றது.

---

## ஸ்ரீ நீலகண்டசிவாசாரியசுவாமிகள் விம்பப் பிரதிஷ்டை.

☞ மத்துவர்களுக்கு ஆனந்ததீர்த்தரும், வைணவர்களுக்கு இராமாநுஜாசாரியரும், ஏகான்மவாதிகளுக்குச் சங்கராசாரியரும் ஆசாரியர்களாய் அமர்ந்தாற் போல, சிவபெருமானை ஆண்டவர் என்றும் ஆன்மாக்களை அடிமை என்றுங் கொண்டு சிவபெருமானுக்குத் தொண்டு பூண்டொழுகும் சிவத்துவிஜர்களுக்கும் மற்றைச் சைவசமயிகளுக்கும் ஆசாரியராய், (ஒரே முக்கியப் பொருள் பொதிந்த) பிரமசூத்திரங்களுக்குச் சத்தியார்த்தஞ் செய்து வைதிகசைவசமயஸ்தாபனஞ் செய்த பரமாசாரியராகிய ஸ்ரீநீலகண்டசிவாசாரியரது திருவுருவவிம்பத்தைத் தொண்டைமண்டலத்து வடதிருமுல்லைவாயிலிற் போல மற்றைய சிவாலயங்கடோறும் பிரதிட்டை செய்து ஆவணி மாசத்துப் பூசநக்ஷத்திரத்திற் குருபூசை செய்து, இராப்போதிலே உற்சவம் நடாத்தி வைதிக சைவசமயப் பிரபுதிலகர்கள்யாவரும் பெரும்புகழையும் சிவபுண்ணியத்தையும் பெற்று நீடு வாழ்வாராக.

இங்ஙனம்,
ஸ்ரீகாசிவாசி—செந்திநாதையர்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫ | ௪ | பதினெட்டுமாகிய | எட்டுமாகிய |
| ௭ | ௧௧ | இந்ரியாயக்கொண்டே | ஊஜ்வாத்ராஹ்ய (பா. வி. உ. உ. ௩௪) என்னுஞ் சூத்திரத்தைப் பொருட்படுத்தாது. |
| ௨௪ | ௩௦ | ஊஜவ நா | ஊஜ்வ நா |
| ௸ | ௸ | ஊஜவவ | ஊஜ்வவ |
| ௸ | ௸ | ஊஜவ நஃ | ஊஜ்வ நஃ |
| ௬௪ | ௯ | பட்டது | பாலது |
| ௮௮ | ௧௨ | வாயூர்யா | வாயூர்யா |
| ௮௯ | ௬ | உ) ற் | க) ற் |
| ௨௦௦ | ௧௮ | சுக்திர | சூத்திர |
| ௨௭௯ | ௨௩ | யுிதாஃ | ஷுிதாஃ |
| ௨௮௦ | ௩௨ | தாமடிமை | தாடுமடிமை |
| ௨௮௯ | ௩௧ | துய்த்துபுத் | துய்த்துப்பு |
| ௨௯௧ | ௪ | வ்யயக | வ்யயக் |
| ௨௯௨ | ௧௫ | ஷஶய்யா | ஷஶய்யர்ா |
| ௸ | ௧௬ | வாயிவீ | வ்யயிவீ |
| ௩௦௦ | ௨௧ | ஞ்ஶஒஜ | ஞ்ஶஒஜ |
| ௩௦௨ | ௩௧ | வித்தலா | வித்தாலா |
| ௩௦௬ | ௧ | ஶஶ | ஶஶ |
| ௩௩௦ | ௨௯ | என்று | என்றன்றோ |
| ௩௩௪ | ௩௦ | எதனுற் | எதனுல் |
| ௩௪௯ | ௨௪ | படுவனவாய் | படுவதாய் |
| ௩௫௮ | ௯ | இங்ஙனம் | (ஆக்ஷேபம்) இங்ஙனம் |
| ௩௭௨ | ௩௨ | (எ) | (அ) |
| ௩௭௮ | ௭ | ௨௧. ௩௯ | ௧௦. ௨௧. ௩௯ |
| ௩௭௯ | ௩௭ | ஃஞ்ரஂ. | தஞ்ரஂ |
| ௩௯௨ | ௨௩ | யாஸிணி | யாஸிணீ |
| ௪௦௦ | ௩௦ | ஃரூஷஃ | ஊரூஷஃ |
| ௪௦௯ | ௨௯ | கூழ|| | கூழ (வாயு. உத். ச: உஅ |
| ௪௧௧ | ௨௩ | போவிகளே | போலிகளே |
| ௪௨௧ | ௧௨ | களவித் | கீளவித் |
| ௪௨௪ | ௨௭ | னின்று | னின்றுமுதற்கண் |
| ௫௨௯ | ௭ | என்பதுவித்தி | வித்தி |
| ௫௩௦ | ௫ | ரகயசிம் | ரகசியம் |
| ௬௦௭ | ௨௦ | வானன் | வானவன் |

௯௪-ஆம் பக்கத்து ௪-ஆம் வரியில் "தேவனென்றோ" என்றற்றொடர்க்கத்த எழு வரிகளையும் நீக்கி வாசிக்க.

பிருகதாரணியம் (௪. ௪. ௫-இற்) காணப்படும்

ஆத்மா வா அரே த்³ரஷ்டவ்ய꞉ ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதி³த்⁴யாஸிதவ்ய꞉।

"(பரம) ஆன்மாவானவர் காணற்பாலர், சிரவணஞ்செய்யற்பாலர், மனனஞ் செய்யற்பாலர், தியானஞ் செய்யற்பாலர்" என்னும் மந்திரத்துக்கு உபப் பிருங்கணமாக உள்ளது

ஶ்ரோதவ்ய꞉ ஸததம் ஶம்பு⁴ர்மந்தவ்யஶ்சோபபத்திபி⁴꞉।
ஜ்ஞாத்வா ச ஸததம் த்⁴யேயோ வேதா³ந்தைரிதி ஶங்கர꞉॥

"சம்புவானவர் எஞ்ஞான்றும் கேட்கற்பாலர், பொருந்துமாற்றாற் சிந்திக் கற்பாலர், வேதாந்தங்களால் எஞ்ஞான்றும் அறிந்து சங்கரர் தியானிக்கற் பாலர்" என்னும் உபதேசகாண்டத்து (சஅ: அ, கூ-ஆம்) சுலோகமேயாம். உபதேசகாண்டத்துள்ள சுலோகத்திற் சம்பு சங்கரர் என்னும் திருநாமங் களோடு சைவபாஷ்யத்தில் இந்தச் சுலோகம் காணப்பட்டதேயாக, பிற் காலத்து மாயாவாத பண்டிதரால் அத்திருநாமங்கள் தொலைத்துச் சுலோ கம் சரிப்படுத்தப்பட்டிருந்தமையின், மேலே குறித்த உபதேசகாண்ட சுலோகத்தையும் அதன் அர்த்தத்தையும் (கஅக-ஆம்) பக்கத்து (கூ-ஆம்) வரியில் ஶ்ரோதவ்ய என்று தொடங்கி கஈ-ஆம் வரியில் ஏதுக்கள் என்று முடியும் வரையுமுள்ள வரிகளுக்குப் பதிலாகக் கொண்டு வாசிக்க.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# விளம்பரம்.

———o———

| | | |
|---|---|---|
| (1) கந்தபுராணநவநீதம் ... ... | | ரூ 1—0—0 |
| (2) சென்னை ஆரியனூர் பிரமம் பரப்பிரமமாகாத சிவப்பிரமம் ... ... ... | | 0—4—0 |
| (3) நீலகண்டபாஷ்யத் தமிழ்மொழிபெயர்ப்பு | 1-ஆம் பாகம் | 2—0—0 |
| (4) ... ... ... ... | 2-ஆம் ஷை | 2—0—0 |
| (5) ... ... ... ... | 3-ஆம் ஷை | 2—0—0 |
| (6) வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படம் | | 3—0—0 |
| (7) வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்பட வினாவிடை ... ... | | 1—0—0 |
| (8) விவிலியகுற்சிதக் குறிப்பு ... ... ... | | 0—1—0 |
| (9) ஸ்ரீசீகாழிப்பெருவாழ்வின் சிவகாருண்ணியமாட்சி | | 0—4—0 |

ஸ்ரீநீலகண்டபாஷ்ய மூன்று பாகங்களையும் ஒருங்கு கட்டடமிலாது வாங்குவோர்க்கு ரூபா ஐந்தரையாகவும், கட்டடத்தோடு வாங்குவோர்க்கு ரூபா ஆறாகவும் விற்கப்படும்.

ஸ்ரீநீலகண்டபாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பும், சைவசித்தாந்த தத்துவப்படமும், இதன் வினாவிடையும் ஒருங்கு சேர்த்துக் கட்டடஞ் செய்யப்பட்ட பிரதி ஒன்று ரூபா பத்து.

(இவற்றிற்குத் தபாற்சார்ஜ் வேறு)

இங்ஙனம்,

**சி. சிவசம்புநாதையர்,**

திருப்பரங்குன்றம்

(மதுரை ஜில்லா)

☞ தேவாரம் வேதசாரம் என்னும் புஸ்தகம் அச்சியற்றப்படப் போகின்றது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

——o——

வைதிக சுத்தாத்துவித

# சைவசித்தாந்த தத்துவப்பட

## வினா விடை

——o——

இது

## காசிவாசி.செந்திநாதையரால்

இயற்றி

தமது

திருமங்கலம்
செந்திநாதசுவாமி யந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

பிலவங்க௵ கார்த்திகைமீ

௧௯௦௭

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# உபோற்காதம்.

---

புண்ணியபூமியாகிய பரதகண்டத்திலே வழங்கிவரும் மத்துவம், வைணவம், ஏகான்மவாதம், சிவாத்துவிதம், சுத்தாத்துவித சைவசித்தாந்தம் என்னும் வைதிக மதங்களுள்ளே, மத்துவமதமும் வைணவமதமும் நாராயணர் சகுணவழிபாட்டினும், ஏகான்மவாதம் நிர்க்குணோபாசனையினும், சிவாத்துவிதம் அத்தியாசிரம பாசுபத யோகத்தினும், சுத்தாத்துவித சைவசித்தாந்தம் ஞானபாதத்தினும் அமைவனவாமென்றும், சகுணோபாசனை முதற்படிக்கண்ணும் (1st Stage), நிர்க்குணோபாசனை இரண்டாவது படிக்கண்ணும் (2nd Stage), சிவாத்துவிதம் மூன்றாவது படிக்கண்ணும் (3rd Stage), சுத்தாத்துவித சைவசித்தாந்தம் நான்காவது படிக்கண்ணும் (4th Stage) நிலையுறுவனவாம் என்றும், நாராயணம் சுபாலமுதலிய நாராயணோபநிடதப் பொருள்களும், இவ்வுபநிடதங்களுக்கியைய இராமாநுஜர்களாற் பொருள் திரித்து இயற்றப்பட்ட ஈசகேநாதி வைணவ பாடியப் பொருள்களும், பிரமசூத்திர வைணவ பாடியப்பொருள்களும், நாலாயிரப்பிரபந்தப் பொருள்களும், பாஞ்சராத்திராகமப் பொருள்களும் சகுணோபாசனையினும்; சர்வசாரம், நிராலம்பம், தேஜோவிந்துமுதலிய ஏகான்மவாதப் பொருள்களும், இவ்வுபநிடதங்களுக்கியைய வலிந்து பொருள் திரிவுபடுத்திச் சங்கராசாரியரால் இயற்றப்பட்ட ஈசகேநாதி ஏகான்மவாத பாடியப் பொருள்களும், பிரமசூத்திர ஏகான்மவாத பாடியப்பொருள்களும், இரத்திநப்பிரபை, பாமதி, நியாய நிர்ணயம், கற்பதரு, பரிமளம், பிரமானந்தீய முதலிய வடமொழி வியாக்கியானங்களும், சித்தாந்தலேச சங்கிரகம், சிற்சுகிமுதலியவும், இவற்றை ஆதாரமாய்க்கொண்டு தமிழிலே கிளர்ந்த கைவல்லிய நவநீதம், பஞ்சதசப்பிரகரணம், ஞானவாசிட்டம், ரிபுகீதை, பிரமகீதை பிரபோதசந்திரோதயம், வேதாந்த சூடாமணி, தத்துவராயர்பாடல், விசாரசாகரம், விசாரசந்திரோதயமுதலிய ஏகான்மவாத நூற்பொருள்களும் நிர்க்குணோபாசனையினும்; ஸ்ரீநீலகண்டசிவாசாரியரால் ஈசகேநாதி உபநிடத மந்திரங்களுக்கும், இவற்றை ஆதாரமாய்க்கொண்டு கிளர்ந்த பிரமசூத்திரத்துக்கும் பொருட்டிரிவுபடுத்தாது சத்தியார்த்தமுற இயற்றப்பெற்ற சிவாத்துவித சைவபாடியப்பொருளும் அத்தியாசிரம பாசுபதயோகத்தினும், சிவஞானபோதம் ஞானபாதத்தினும் முற்றி நிற்பனவாம் என்றும் உணர்த்துமாறு நாம் இயற்றிய சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படத்தின் தத்துவங்களை நிரூபித்து விளக்குமாறு வரையப்பட்டது இந்த வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்பட வினுவிடையாம்.

---

இந்த வினுவிடை அச்சிடுமாறு திரவியசகாயஞ்செய்த சிவநேசர்கள்:—

1. ம-ா-ா-ஸ்ரீ சிதம்பரநாத முதலியாரவர்கள், மிட்டாதார், சீகாழி.
2. ,, ஸ்ரீநிவாசம்பிள்ளையவர்கள், வைக்கீல், தஞ்சை.
3. ,, மு. ரா. ம. சி. லெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள், தேவிகோட்டை.

# குறிப்புவிளக்கம்.

———:o:———

அ. சி=அதர்வசிகோபநிடதம்
இரு. வே=இருக்குவேதம்
இலிங். உத்=இலிங்கபுராண உத்தர பாகம்
இலிங். பூரு=இலிங்கபுராண பூருவ பாகம்
ஈசா=ஈசாவாசியோபநிடதம்
ஐத=ஐதரேயோபநிடதம்
க=கடோபநிடதம்
கி. ய. வே=கிருஷ்ணயசுர்வேதம்
கே=கேநோபநிடதம்
கூர்=கூர்மபுராணம்
கை=கைவல்லியோபநிடதம்
ச. உ=சங்கரசங்கிதை உபதேச காண்டம்
ச. த=சங்கரசங்கிதை தக்ஷகாண்டம்
ச. ப=சதபதப்பிராம்மணம்
ச. ரு=சதருத்திரீயம்
சா=சாந்தோக்கியோபநிடதம்
சா. வே=சாமவேதம்
சாங்=சாங்கியசூத்திரம்
சர்வ=சர்வசாரோபநிடதம்
சி=அதர்வசிரோபநிடதம்
சி. க. பா=ஸ்ரீகண்டபாடியம்
சித். ஞான=சித்தாந்த சாராவளி ஞானபாதம்
சூ. சூ=சூதசங்கிதை சூதகீதை
சு. ய. வே=சுக்கிலயசுர்வேதம்.
சுவே=சுவேதாசுவதரோபநிடதம்
சை. கை=சைவபுராண கைலாச சங்கிதை
சை. வா. Pt. I=சைவபுராண வாயு சங்கிதை பூருவ பாகம்
சை. வா. Pt. II=சைவபுராண வாயு சங்கிதை உத்தர பாகம்
தை=தைத்திரீயோபநிடதம்
பிரு=பிருகதாரணியோபநிடதம்
பிருக=பிருகச்சாபாலோபநிடதம்
நிரா=நிராலம்போபநிடதம்
ப. ஆ=பவுட்கராகமம்
பிர=பிரசிநோபநிடதம்
ம. நா=மகாநாராயணோபநிடதம்
மகாபா=மகாபாரதம்
மாண்டூ=மாண்டூக்கியோபநிடதம்
முண்ட=முண்டகோபநிடதம்

———

# பிரணவம்.

பிரணவம் தேவநாகரலிபியிற் காணப்படும் ஆகிருதியாயிருக்கவேண்டுமா? கிரந்தலிபியிற் காணப்படும் ஆகிருதியாயிருக்கவேண்டுமா? என்பது சந்தேகம்.

(பூருவபக்ஷம்) நாகரலிபியிற் காணப்படும் பிரணவாகிருதியாயிருக்க வேண்டும்; ஆரியா தேசத்தில் வழங்கப்படுவதொன்றாகலானும், தேவ என்னும் விசேடணத்தோடியைந்து தேவநாகரி எனப்படுதலானுமாம் எனின்,

(சித்தாந்தம்) கூறுதும். அது ஒவ்வாது; கிரந்தலிபியிற் காணப்படும் பிரணவாகிருதியே கோடற்பாற்று;

வரா வாகீஶ்வரீ வித்யா மாயா வித்யா வரா ஸ்ம்ருதா।
வரபிந்து: வராஶக்தி மஹாமாயா ச குண்டலீ।
.........தஸ்யா: பர்யாயவாசகா:।

"பரை, வாகீசுவரி, வித்தை, மாயை, பராவித்தை, பரவிந்து, பராசத்தி, மகாமாயை, குண்டலி என்பன (பிரணவகுண்டலியின்) பரியாயநாமங்கள்" என்று சிந்தியவிசுவசாதாக்கியத்திற் காணப்பட,

ப்ரணவோ தநு:।

1. "பிரணவம் வில்லு" என்று முண்டகோபநிடதத்திற் கூறப்படலானும்,

நாடிரூபா ப்ரஸாரஞ்சாஹிகுண்டலீ ஹம்ஸநி: ஸ்வநா।

2. "மூலநாடியாயும், வளைந்த சர்ப்பவடிவமாகிய குண்டலியாயும், ஹம்சத்தொனியுடையதாயுமுள்ளது (பிரணவம்)" என்று ஞானசித்தியாகமத்திற் கூறப்படலானும்,

ப்ரதமம் தாரகாகாரம் த்விதீயம் தண்ட ரூபவத்।
த்ருதீயம் குண்டலாகாரம் சதுர்த்தம் அர்த்தசந்த்ரகம்।
பஞ்சமம் பிந்துஸம்யுக்தம் ப்ரணவம் பஞ்சலக்ஷணம்।

3. "முதலாம் உறுப்பு நக்ஷத்திர வடிவமாயும், இரண்டாம் உறுப்பு தண்ட வடிவமாயும், மூன்றும் உறுப்பு குண்டலாகாரமாயும், நான்காம் உறுப்பு அர்த்தசந்திரவடிவமாயும், ஐந்தாம் உறுப்பு விந்துவோடியைந்த தாயுமுள்ள ஐந்து இலக்கணமுடையது பிரணவம்" என்று சிவாகமத்திற் கூறப்படலானும்,

ஶிரஶ்சோத்தரதோ யஸ்ய பாதௌ தக்ஷிணத ஸ்ததா।
யஸ்ய ஸர்வோத்தர ஸ்வாக்ஷா ஓங்காரோதஹ த்ரிமாத்ரக:।

4. "(எழுத ஆரம்பிக்குங்கால்) எதற்குச் சிரசு வடபுறத்தினும், (முடிக்குங்காற்) பாதம் தென்புறத்தினும் இருக்கின்றதோ, எது எல்லா

வற்றுக்கும் மேலாய் உள்ளதோ, அந்த மும்மாத்திரையுடைய சாக்ஷாத் பிரணவம் நான்" என்று பதுமபுராணசிவகீதையிற் கூறப்படலாலும்,

ஶாயா கூணஜலீ ஹ்ரியா ஜநஹேத ஆ஧ாரவழு।

5. "உலகத்துச் சராசரப்பொருளனைத்தும் மாயையாம் குண்டலியால் வியாபிக்கப்பட்டது" என்று ஞானசித்தியிற் கூறப்படலாலும்,

தஸ்யாஃ வக்ஷவஶேந ஸூஷ்வஶ்தே ஸவாக்ருதி ஸ்திவே।
தவஃ கூரூ தஷா உக்ஷவ்ஜாஷ்வதி ஷூஷிகழு।
தத்ர வக்ஷஹஷெ ஶஷ்ஷெ ஸவாநிவ தஷலூதழு।
ஶஷ்ஷீகா வரஶோநம் ஷாகா ஶநவஷி ஷூஷிதா।
ஷாகா யஷியஶ நாஶே ஸவஂ வஷெ உஜஸஹ॥
(ச. ந. 5: 33, 37, 40)

மூலமெய்யெழுத்தன்னதோர் முதுவலம்புரியின்
கோலமாகிநோற்றிருத்தியாலுலகருள்குறிப்பால்
(கந்தபுராணம், உமைகயிலைநீங்குபடலம், சஎ)

வேதமூலநேர்வால்வளையுருக்கொடுவிளங்கி
யேதமில்லதோர்பதுமபீடத்தின்மேலிருந்தாள்
(உமைகயிலைநீங்குபடலம், நிக)

தேனிமிர்கமலமொன்றிற்சிவனிடத்திருந்ததெய்வ
வானிமிர்பணிலம்வைகமற்றவனதுகண்ணுற்றான்
(காளிந்திப்படலம், கஎ)

6. பிரணவம் வலம்புரிச்சங்குவடிவினதென்று ஸ்காந்தபுராண சங்கர சங்கிதையைச் சார்ந்த தக்ஷகாண்டத்திற் கூறப்படலாலும்,

7. "ஓங்காரவடிவானவுன்பாததாமரையும்" என விநாயகர் ஓங்கார வடிவினர் என்று துண்டிவிநாயகர் திருவருட்பாவிற் கூறப்படலாலும்,

ஓஂகார ஶஷ்தம் ஸ்ரஹ ஶிவ ஶக்ஷா ஶேஷயழு।
யஶநஷி வெஷெஷூ தம் ஷ்ரவஷ்ஷெ விநாயகழு।

8. "அமிர்தம் என்றும், பிரமம் என்றும், சிவம் என்றும், அக்ஷரம் என்றும், அவ்வியயம் என்றும் எதனைக் கூறுகின்றனரோ, அந்த ஓங்காரத்தை விநாயகர் என நமஸ்கரிக்கின்றேன்" என விநாயகரை ஓங்கார வடிவாகக்கொண்டு ஸ்தவராஜத்திற் கூறப்படலாலும்,

9. "ஓங்காரமே நற்றிருவாசி" எனத் திராவிட சித்தாந்த சாஸ்திரம் பதினான்கனுள் ஒன்றாகிய உண்மை விளக்கத்திற் கூறப்படலாலுமாம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# வைதிக சுத்தாத்துவித
# சைவசித்தாந்த தத்துவப்பட
# வினு விடை.

---

1\. வைதிக சைவத்திற் கூறப்படும் தத்துவம் எத்தனை?

முப்பத்தாறு.

2\. இத்தத்துவம் முப்பத்தாறும் எத்தனை வகைப்படும்?

ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவமென மூவகைப்படும்.

3\. இதற்குப் பிரமாணம் என்னை?

ஆத்மதத்வமதோபாகே வித்யாதத்வம் ச மத்யமே |
ஊர்த்வே ஶிவதத்வம் ஸர்வதத்வாநி ஸந்தி ஹி ||

ஆன்மதத்துவம் அதோபாகத்தினும், வித்தியாதத்துவம் மத்தியபாகத்தினும், சிவதத்துவம் ஊர்த்துவபாகத்தினும் உள்ளனவாம் எனப் பிருகச்சாபாலோபநிடதத்தினும் அகஸ்தியசங்கிதையினும் கூறப்படுகின்றது.

4\. இதற்குப் புராணப்பிரும்கணம் என்னை?

ஶிவவித்யாத்மதத்வாக்யம் தத்வத்ரயமுதாஹ்ருதம் |

"சிவதத்துவம் வித்தியாதத்துவம் ஆன்மதத்துவம் என மூவகைத் தத்துவம் கூறப்பட்டது" (சை. வா. Pt. I. 17: 28; 23: 17.)

5\. ஆன்மதத்துவத்தடங்கிய தத்துவங்கள் யாவை?

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் (என்னும் மகாபூதம் ஐந்தும்); கந்தம், இரசம், ரூபம், பரிசம், சப்தம் (என்னும் சப்ததன்மாத்திரையாகிய சூக்குமபூதம் ஐந்தும்); உபஸ்தம், பாயுரு, பாணி, பாதம், வாக்கு (என்னும் கன்மேந்திரியம் ஐந்தும்); ஆக்கிராணம், சிங்குவை, சட்சு, துவக்கு, சோத்திரம் (என்னும் ஞானேந்திரியம் ஐந்தும்); மனம், புத்தி, சித்தம், அகங்காரம் (என்னும் அந்தக்கரணம் நான்குமாகச்) சேர்ந்த இருபத்துநான்கு தத்துவமும் ஆன்மதத்துவம் எனப்படும்.

சித்தத்தை நீக்கிப் பிரகிருதியையேனும், குணதத்துவத்தையேனுஞ் சேர்த்து ஆன்மதத்துவம் இருபத்துநான்கு என்பாரும் உளர்.

6. தத்துவம் இருபத்துநான்கிற்கும் சுருதிப்பிரமாணம் என்னை ?

𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌚 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌚𑌾𑌪𑌶𑍍𑌚𑌾𑌪𑍋𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌤𑍇𑌜𑌶𑍍𑌚 𑌤𑍇𑌜𑍋𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌾𑌯𑍁𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌚𑌾𑌕𑌾𑌶𑌶𑍍𑌚𑌾𑌕𑌾𑌶𑌮𑌾𑌤𑍍𑌰𑌾 𑌚 𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌘𑍍𑌰𑌾𑌣𑌂 𑌚 𑌘𑍍𑌰𑌾𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌰𑌸𑌶𑍍𑌚 𑌰𑌸𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌤𑍍𑌵𑌕𑍍𑌚 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌵𑌾𑌕𑍍𑌚 𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌹𑌸𑍍𑌤𑍌 𑌚𑌾𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚𑍋𑌪𑌸𑍍𑌥𑌶𑍍𑌚𑌾𑌨𑌨𑍍𑌦𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌪𑌾𑌯𑍁𑌶𑍍𑌚 𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌪𑌾𑌦𑍌 𑌚 𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌮𑌨𑌶𑍍𑌚 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌚𑌾𑌹𑌂𑌕𑌾𑌰𑌶𑍍𑌚𑌾𑌹𑌂𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌚 𑌚𑍇𑌤𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌂 𑌚 (பிர. 4. 8)

7. இத்தத்துவங்களுக்குப் புராணோபப்பிருங்கணம் என்னை ?

(*I*) 𑌭𑍂𑌮𑌿𑌰𑌾𑌪𑍋𑌽𑌨𑌲𑍋 𑌵𑌾𑌯𑍁𑌰𑌾𑌕𑌾𑌶𑌂 𑌮𑌨 𑌏𑌵 𑌚।
𑌰𑌸𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌶𑌬𑍍𑌦𑍌 𑌗𑌨𑍍𑌧𑌵𑌾𑌯𑍂𑌪𑌸𑍍𑌥𑌪𑌾𑌯𑍁 𑌚।
𑌪𑌾𑌣𑌿 𑌪𑌾𑌦𑌾𑌵𑍍𑌘𑍍𑌰𑌾𑌣𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌤𑍍𑌵𑌕𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌃𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑍇𑌵 𑌚।
𑌚𑌾𑌹𑌂𑌕𑌾𑌰𑌶𑍍𑌚 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌮𑌨𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿............॥

எனப் பிரமாண்டபுராணத்து முப்பத்திரண்டாம் அத்தியாயத்தினும்,

(*II*) 𑌪𑌞𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚𑌕𑌰𑍍𑌮𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌰𑍍𑌮𑌵𑌿𑌭𑍇𑌦𑍇𑌨 𑌪𑌞𑍍𑌚𑌪𑌞𑍍𑌚 𑌵𑌿𑌭𑌾𑌗𑌶𑌃।
𑌕𑍍𑌷𑌮𑌾𑌦𑌿 𑌯𑌾𑌵𑌦𑍍𑌵𑌸𑍍𑌤𑍁 𑌪𑌞𑍍𑌚 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌦𑌿𑌵𑌾𑌯𑌵𑌃।
𑌮𑌨𑍋 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿 𑌰𑌹𑌂𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌾𑌃......॥

(பிருதிவி முதலிய) பூதங்கள் ஐந்தும், (சப்த முதலிய) தன்மாத்திரை ஐந்தும், (வாக்காதி) கன்மேந்திரியம் ஐந்தும், (சுரோத்திராதி) ஞானேந்திரியம் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், குணம் என்னும் இருபத்து நான்கும் (சை. வா. Pt. I. 29: 13, 14) னும், தேவீபாகவதத்தினும்,

(*III*) 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌦𑍀𑌚 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌬𑌾𑌹𑍍𑌯𑌂 𑌪𑌞𑍍𑌚𑌕𑌂𑌮𑌤𑌃।
𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌂 (𑌶𑌿𑌰𑌃 𑌪𑌾𑌶𑍍𑌵𑍇𑌪𑍃𑌷𑍍𑌠𑍋𑌦𑌰 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌂)
𑌮𑌨𑍋 (𑌰𑌤𑌶𑍍𑌚) 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚𑌾𑌹𑌂𑌕𑍃𑌤𑌿𑌃 (𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌿𑌰𑍇𑌵 𑌚)।
(𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌂) 𑌗𑍁𑌣𑌾𑌃....................................॥

என (சை. கை. 9: 25—28) னுங் கூறப்பட்டிருக்கின்றது.

8. வித்தியாதத்துவம் எவை ?

காலம், கலை, நியதி, ராகம், வித்தை, மாயை, புருடன் என்னும் எழுமாம்,

9. இதற்குச் சுருதிப்பிரமாணம் என்னை ?

𑌕𑌾𑌲𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋 𑌨𑌿𑌯𑌤𑌿 𑌯𑌦𑍃𑌚𑍍𑌛𑌾 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑍋𑌨𑌿𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌾 |

என்றது சுவேதாசுவதரோபநிடதம் (சுவே. 1. 2)

10. இந்தச் சுவேதாசுவதரோபநிடத மந்திரத்தினல் வித்தியாதத்துவம் எழென்று கோடற்கட் பிரமாணம் என்னை ?

(I) ..............................𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌯 𑌤𑍁 |
𑌅𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗𑌤𑌯𑌾 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑌞𑍍𑌚𑌕𑌂 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 |
𑌨𑌿𑌯𑌤𑌿𑌃 𑌕𑌾𑌲𑌰𑌾𑌗𑌶𑍍𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌚 𑌤𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 |
𑌕𑌲𑌾 𑌚 𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍇𑌤𑌤𑍍 𑌮𑌾𑌯𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌂 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰 |
(𑌮𑌾𑌯𑌾𑌂 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌯𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑌿𑌤𑍀𑌰𑌿𑌤𑌾)
𑌤𑌜𑍍𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃 |
𑌕𑌾𑌲𑌃𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋 𑌨𑌿𑌯𑌤𑌿𑌰𑌿𑌤𑌿 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌰𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍 |
𑌅𑌤𑌸𑍍𑌤𑌤𑍍 𑌪𑌞𑍍𑌚𑌕𑌵𑍇𑌷𑌸𑍍𑌯 𑌪𑌞𑍍𑌚𑌕𑌞𑍍𑌚𑍁𑌕𑌤𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 |
𑌅𑌜𑌾𑌨𑌨𑍍 𑌪𑌞𑍍𑌚𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑌪𑌿 𑌵𑌿𑌮𑍂𑌢𑌧𑍀𑌃 |
𑌨𑌿𑌯𑌤𑍍𑌯𑌧𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍁𑌪𑌰𑌿𑌷𑍍𑌠𑌃 𑌪𑍁𑌮𑌾𑌨𑌯𑌮𑍍 |
𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂..........................||

புருடனுக்கு நியதி (1), காலம் (2), ராகம் (3), வித்தை (4), கலை (5), என்னும் தத்துவங்கள் ஐந்தும் அந்தரங்கமாகக் கூறப்பட்டன எனவும், இவை மாயை (6) யினின்றுண்டாயினவெனவும், இதற்குப் பிரமாணம் (9-ஆம் விஞவிடையிற்காட்டிய) "காலஸ்சுவபாவோநியதி" என்னும் (சுவே தாசுவதர) சுருதியாமெனவும், புருடனுக்கு இந்த ஐந்தும் பஞ்சகஞ்சுகம் எனப்படும் எனவும், இதனை உணராதோன் வித்துவாஞயினும் மூடனே எனவும், பிரகிருதிக்கு மேலும் நியதிக்குக் கீழுமுள்ளான் புருடன் (7) எனவும், இவ்வேழும் வித்தியாதத்துவம் எனவும் (சை. கை. 9: 29—34) கூறப்பட்டமையானும்,

(II) மேலும்,

....................(𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿) 𑌪𑍂𑌰𑍁𑌷𑍌 |
𑌨𑌿𑌯𑌤𑌿𑌃 𑌕𑌾𑌲𑌰𑌾𑌗𑍌 𑌚 𑌕𑌲𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑍇 𑌚 𑌮𑌾𑌯𑌯𑌾 ||

எனப் பிரமாண்டபுராணத்தினும்,

(III) ..........................𑌮𑌾𑌯𑌾𑌕𑌾𑌲𑌮𑌵𑌾𑌸𑍃𑌜𑌤𑍍 |
𑌨𑌿𑌯𑌤𑌿𑌂 𑌚 𑌕𑌲𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌂 𑌕𑌲𑌾𑌤𑍋 𑌰𑌾𑌗𑌪𑍂𑌰𑍁𑌷𑍌 |

என (சை. வா. Pt. II. 5: 22.) னுங் கூறப்பட்டமையானும் அறிக.

11. *சிவதத்துவங்கள் யாவை?*

சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்னும் ஐந்தாம்.

12. *இதற்குச் சுருதிப் பிரமாணம் என்னை?*

𑌶𑌿𑌵𑌂 𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌸𑌾𑌦𑌾𑌖𑍍𑌯𑌂 𑌈𑌶𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌂 𑌏𑌵 𑌚।

என்னும் பிருகச்சாபாலோபநிடதமந்திரமே பிரமாணம். (பிருக. 4. 19.)

13. *இதற்குப் புராணப் பிரமாணம் என்னை?*

(*I*) 𑌶𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌦𑍍𑌯𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑌾𑌦𑌾𑌶𑌿𑌵𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑌿𑌵𑌾𑌦𑌿।

சுத்தவித்தை, ஈசுவரம், சாதாக்கியம், சத்தி, சிவம் எனப் பிரமாண்ட புராணத்தினும்,

(*II*) 𑌨𑌾𑌦𑌾𑌦𑍍𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌸𑍍𑌤𑌤𑍋 𑌬𑌿𑌨𑍍𑌦𑍋𑌸𑍍𑌤𑌤𑍋 𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌃।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌜𑌾𑌤𑌶𑍍𑌶𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌤𑍍॥

என (சை. வா. **Pt. II.** 5: 20) னும்,

(*III*) ..............................𑌶𑍁𑌦𑍍𑌧𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌶𑍍𑌚 𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌶𑌿𑌵𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌚 𑌪𑌞𑍍𑌚𑌕𑌂।
𑌶𑌿𑌵𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨 𑌪𑍍𑌰𑌹𑍍𑌵𑌵𑌾𑌕𑍍𑌯𑌤𑌃॥

என (சை. கை. 9: 34, 35) னும் கூறப்பட்டமை காண்க.

14. *மூவகைத் தத்துவங்களின் தொகுப்பு யாது?*

*சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை; அசுத்தமாயை, காலம், கலை, நியதி, வித்தை, ராகம், புருடன்; (பிரகிருதி), சித்தம், புத்தி, அகங்காரம், மனம்; சோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம்; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம்; சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்; ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் முப்பத்தாறுமாம்.*

15. *சாங்கியநூலிற் கூறப்பட்ட தத்துவங்கள் யாவை?*

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌰𑌜𑌸𑍍𑌤𑌮𑌸𑌾𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌮𑌹𑌾𑌨𑍍 𑌮𑌹𑌤𑍋𑌽𑌹𑌂𑌕𑌾𑌰𑍋𑌽𑌹𑌂𑌕𑌾𑌰𑌾𑌤𑍍 𑌪𑌞𑍍𑌚 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌉𑌭𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑌨𑍍𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌭𑍍𑌯𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌰𑍍𑌗𑌣𑌃।

*சத்துவ ரஜஸ் தமஸ் என்னும் மூன்றன் சாமியாவஸ்தையையுடைய (மூலப்) பகுதியும், இதினின்று மகானும், இதினின்று அகங்காரமும், இதினின்று ஐந்து தன்மாத்திரைகளும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும்,*

தன்மாத்திரையினின்று தூலபூதங்களும், புருஷனுமாகத் தத்துவம் இருபத்தைந்தாம் (சாங். 1. 61).

16. இச்சாங்கிய தத்துவங்கள் இருபத்தைந்தும் சைவசாஸ்திரங்களிற் கூறப்பட்ட எத்தத்துவங்களுள் அடங்குவன?

அவை ஆன்மதத்துவம் இருபத்துநான்கின்பாலனவாயடங்கும்.

17. இருபத்துநான்கிற்கு மேலுள்ள வித்தியாதத்துவ சிவதத்துவங்கள் சாங்கிய நூலிற் கூறப்பட்டனவா?

இல்லை.

18. வைஷ்ணவத்திற் கூறப்பட்ட தத்துவங்கள் யாவை?

"பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், இந்திரியங்கள், தன்மாத்திரைகள், பூதாதிகள், மகான், அவ்வியக்தம், அக்ஷரம், தமசு" என்பனவாம் என்று சுபாலோபநிடதத்திற் காணப்படுகின்றது.

19. இப்பிருதிவி முதலிய தத்துவங்களும் சைவத்திற் கூறிய எத்தத்துவத்துள் அடங்கின?

இவ்விருபத்துநான்கும் ஆன்மதத்துவம் இருபத்துநான்கில் அடங்கின.

20. ஏகான்மவாதோபநிடதங்களினும் மற்றை ஏகான்மவாத நூல்களினும் கூறப்பட்ட தத்துவங்கள் யாவை?

(I) ஜ்ஞாநேந்த்ரியாணி பஞ்சைவ ஶ்ரோத்ரத்வக்லோசநாதய:|
கர்மேந்த்ரியாணி பஞ்சைவ வாக்பாண்யங்க்ர்யாதய: க்ரமாத்|
ப்ராணாதயஸ்து பஞ்சைவ பஞ்ச ஶப்தாதயஸ்ததா|
மநோ புத்திரஹங்காரஶ்சித்தஞ்சேதி சதுஷ்டயம்|
சதுர்விம்ஶதிதத்வாநி தாநி ப்ரஹ்மவிதோ விது:||

"சுரோத்திரம் துவக்குமுதலிய ஞானேந்திரியம் ஐந்தும், வாக்குப் பாணி முதலிய கன்மேந்திரியம் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் ஐந்தும், சப்தாதி ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணம் நான்குமாகிய இருபத்துநான்கு தத்துவங்கள்" என ஏகான்மவாத வராகோபநிடதத்தினும்,

(II) ஶப்தாதீநி பூதாநி பஞ்சைஷாம் வ்ருத்தய:|
ஹ்ராணாஸ்யபாதய: பஞ்ச பஞ்சகர்மேந்த்ரியாணி ச|
ஜ்ஞாநேந்த்ரியாணி பஞ்சைவ ப்ராணாத்யா: பஞ்ச வாயவ:|
மநோ புத்திரஹங்காரஶ்சித்தஞ்சேதி சதுஷ்டயம்|

தேஷாம் காரணம்ருபமேகம் அவித்யாஷ்டிமிகம் பரம்।
விஶ்வஸ்ய ஜநகம் க்ருத்வா பமோ நந்யோ பரிஶ்யிஷே॥

"ஆகாசமுதலிய பூதம் ஐந்தும், சப்தமுதலிய தன்மாத்திரை ஐந்தும், வாக்குமுதலிய கன்மேந்திரியம் ஐந்தும், சுரோத்திரமுதலிய ஞானேந்திரியம் ஐந்தும், பிராணன் முதலிய வாயுப் பத்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணம் நான்கும், இவற்றிற்குக் காரணமாகிய (மூலப்பிரகிருதி எனப்படும்) அவித்தையும், சீவனுமாகிய முப்பத்தாறு தத்துவங்கள்" என (சூ. சூ. 2: 3—5) னும் கூறப்பட்டது.

21. *மாயாவாதத்தினும் சைவசாஸ்திரத்தினும் முப்பத்தாறு தத்துவங் கூறப்படுதலின், இரண்டின் முடிவும் ஒன்றுமா?*

சைவத்திலே ஏகான்மவாதிகள் கூறிய முப்பத்தாறு தத்துவங்களிற் பிராணுதி வாயுக்கள் பத்தும் பூதங்களுள் ஒன்றாகிய வாயுவில் அடங்குதலானும், அவித்தை என்பது மூலப்பிரகிருதியேயாகலானும், சீவன் ராசசகுணத்தின் பாலதாகலானும், அவர் கூறிய முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மதத்துவத்தில் அடங்குதலான் அவற்றின் முடிவு ஒன்றாகாது.

22. *உபநிடதங்களான் மேலே சித்திக்கப்பெற்ற வித்தியாதத்துவ சிவதத்துவங்கள் மூலப்பிரகிருதியாதி த்த்துவங்களுள் எவ்வாற்றானும் அடங்கும் இயல்பினவா?*

பிருதிவி தத்துவமுதற் புத்தி தத்துவமீறாய இருபத்துநான்கு தத்துவங்கட்கும் வியாபகமாகிய மூலப்பிரகிருதிக்குள், இதற்கு மேல் வியாபகமாய் நின்ற வித்தியாதத்துவ சிவதத்துவங்கள் எவ்வாற்றானும் அடங்குமாறின்று.

23. *மாயாவாதத்திலே தத்துவங்கள் குறைவுறவும், (வேத) ஆகம (புராண)ங்களில் விரிவுறவும் கூறப்பட்டன என்பதற்குப் பிரமாணம் என்னை?*

ஸாங்க்யயோகப்ரஸித்தாநி தத்வாநி கதிசித்॥
ஶிவஶாஸ்த்ர ப்ரஸித்தாநி தேஷாமந்யாநி க்ருத்ஸ்நஶ:॥

"சில தத்துவங்கள் மாத்திரம் *சாங்கியயோகத்திற் பிரசித்தமாயுள்ளன; அவற்றின் வேறாகிய தத்துவங்களெல்லாம் சிவாகமங்களிலே பிரசித்தமாயுள்ளன" என்னும் சிவபுராணவாக்கியம் பிரமாணம். (சை. வா. Pt. I. 25: 15)

---

* சாங்கியயோகம் என்றது ஏகான்மவாதமாகிய மாயாவாதத்தின் மேற்று. இவ்வுண்மை எமது பிரமசூத்திர சிவாத்துவித சைவபாடியத் தமிழ் மொழி பெயர்ப்பின் 86-ஆம் பக்கத்து (365, 366) ஆம் இலக்கங்களினும், கூர்மபுராண ஈசுரகீதை இரண்டாம் அத்தியாயத்தினும், இப்புஸ்தகத்திலே மூவிதபாவனை கூறும் வினாவிடைகளினும் காண்க.

24. மாயாவாதம் என்றதின் பொருள் என்னை ?

(ஜகத் சீவனும்) மாயையிலே வாதம் (விசாரம்) என்பது பொருள்.

25. இதற்கு பிரமாணம் என்னை ?

தஸ்ரா ஸ்தா விசாரயெஜ்ஜ ஜீவபரமாத்மநோ ஜீவஜாவஜஜ்ஜாவ வொயெ பரமாத்மைவ ஸிஷ்யதெ।

என்னும் ஏகான்மவாத பைங்கலோபநிடதவாக்கியமே பிரமாணம்.

26. இவ் வாக்கியத்தின் பொருள் யாது ?

"ஜகத்து சீவன் பரமான்மா என்பவற்றைச் சதாகாலமும் விசாரிக்க, வாதிக்க என்று (ஆசாரியர் சீடனுக்கறிவுறுப்ப, சீடன் வந்தியாபுத்திரனைப் போன்றிருக்கும் ஜகத்தையும் சீவனையும் விசாரிக்க வேண்டியது, வாதிக்க வேண்டியது எற்றுக்கு? பரமான்மாவையன்றோ விசாரிக்கவேண்டும் என, அதற்கு ஆசாரியர் மாயையாகிய) ஜகத்தையும் சீவனையும் விசாரித்தலான், வாதித்தலான் ஆன்மாவே சேஷிக்கின்றது" என்று உத்தரம் இறுத்ததாக, சங்கராசாரியர் சீடராகிய வித்தியாரணியர் தாம் இயற்றிய பஞ்சதசியின் சித்திரதீபப்பிரகரணத்தில் மேலே உரைத்த பைங்கலவாக்கியப்பொருளை

ஸதா விசாரயெத்தஸ்மாஜ்ஜகஜ்ஜீவபரமாத்மநः।
ஜீவஜாவஜஜ்ஜாவவொயெ ஸ்வாத்மைவ ஸிஷ்யதெ।

எனச் சுலோகமாக இயற்றிவிளக்கினமையான், அப்பொருள் உணரப்படும்.

27 இம் மாயாவாதம் என்னும் பதம் எங்கே காணப்படுகின்றது ?

பதுமபுராண உத்தரகாண்டத்து, 263-ஆம் அத்தியாயத்து 70-ஆஞ் சுலோகத்திற் காணப்படுகின்றது. (பூனாநகரத்து ஆனந்தாசிரமயந்திரசாலையில் அச்சியற்றப்பெற்ற பதுமபுராணத்து 1834-ஆம் பக்கத்திற் பார்க்க)

28. ஏகான்மவாதிகளும் பாஞ்சராத்திரிகளும் எதனை அவலம்பித்து நிற்கின்றார் ?

இவ்விரு மதஸ்தர்களும் பிருதிவிமுதற் சிவதத்துவாந்தம் வரையினுமுள்ள முப்பத்தாறு தத்துவங்களுள்ளே அதமபாகத்துப் பிரகிருதிப் பாற்பட்ட ஆன்மாவை முறையே நிர்க்குணமும் சகுணமுமாகக் கொண்டு அவலம்பித்து நிற்கின்றனர்.

29. தத்விஷ்ணோः பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரயः।

(இரு. வே. 1. 22. 20)

"அந்த விஷ்ணுவினது பரமபதத்தைப் பெரியோர் சதாகாலமும் பார்க்கின்றார்" என்னும் இருக்குவேத மந்திரத்திற் கண்ட விஷ்ணு என்னும் பதம் எவர் மேலாயது எனப் பிரமாணத்தோடு நிரூபணஞ் செய்க ?

ஶிவோ மஹேஶ்வரஶ்சைவ ருத்ரோ விஷ்ணு: பிதாமஹ:।
ஸம்ஸாரவைத்ய: ஸர்வஜ்ஞ: பரமாத்மேதி முக்யத:॥

"சிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிதாமகர், சம்சாரவைத்தியர், சர்வஞ்ஞர், பரமாத்துமா" என்னும் சிவபிரானது நாமாஷ்டகங்களுள் விஷ்ணு என்னும் சப்தம் படிக்கப்படுதலான், மேலே உரைத்த விஷ்ணு நாமம் சிவபிரான் மேலதேயாம். (சை. வா. Pt. I. 28: 22, 23)

30. அவ் விஷ்ணு நாமத்தின் பொருள் என்னை ?

ஶிவதத்வாதி ப்ருத்வ்யந்தம் ஶரீராதிஷு ஸங்ஸ்திதம்।
வ்யாப்யாதிஷ்டதி ஶிவஸ்ததோ விஷ்ணு ருதாஹ்ருத:॥

"சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவம் ஈறுகச் சரீராதிகளையும் கடாதிகளையும் வியாபித்து நிற்கின்றமையாற் சிவபிரான் விஷ்ணு எனப்படுவர்" (சை. வா. Pt. I. 28: 36, 37)

31. இந்த விஷ்ணு சப்தத்திற்கு வாசுதேவர் எனப் பொருள் கொண்டால் என்னை ?

வாசுதேவரது வியாபகம் சிவதத்துவ வித்தியாதத்துவங்களில் இலாது மூலப்பிரகிருதி வரையில் உண்மையான், அவர்க்கு விஷ்ணு என்னும் பெயர் வாஸ்தவமாய்ச் செல்லாது உபசாரமாத்திரையாற் செல்லும்.

32. மேலே உதகரித்த இருக்குவேத மந்திரத்தின் பொருள் எச்சுருதியினால் வலியுறுத்தப்படும் ?

ஸோத்⁴வன: பாரமாப்னோதி தத்³விஷ்ணோ: பரமம் பத³ம்
(க. 3: 9)

"அவன் அத்துவாவின் கரைக்கண்ணதாகிய சிவனாரது (பரமாகாய) பரம பதத்தை அடைகின்றான்" என்னும் கடவல்லி சுருதியான் வலியுறுத்தப்படும். எங்ஙனமெனில், அத்துவா என்பது முன்னர்ப் போதருமாறு மந்திராத்துவாமுதல் அறுவகைப்பட, இவற்றுள் ஒன்றாகிய தத்துவாத்துவாவில் விஷ்ணு என்னும் பதத்தின் அர்த்தம் முடிவுறுதலானென்க.

33. அத்துவா எத்தனை வகைப்படும் ?

மந்த்ராத்⁴வா ச பதா³த்⁴வா ச வர்ணாத்⁴வா ச புராத்மக:।
புவனாத்⁴வா ச தத்த்வாத்⁴வா கலாத்⁴வா ஷட்³விதோ⁴த்⁴வக:॥

"மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்னும் ஆறும் அத்துவா எனப்படும்." (சை. வா. Pt. I. 25: 10)

கலா தத்வஞ் ச புவநம் வர்ணம் பதம் ச மந்த்ரகம்।
ஷடத்வேதி ஸமாஸேந ஷடத்வா பரிகீர்த்திதா॥

"கலை, தத்துவம், புவனம், வர்ணம், பதம், மந்திரம் என்பன தொகுப்பாய் ஆறத்துவா எனப்படும்." (சை. வா. **Pt. II.** 15: 2)

34. *கலாத்துவா யாது?*

நிவ்ருத்த்யாத்யா: கலா: பஞ்ச கலாத்வாக்யேதி ஸம்ஜ்ஞயா:।

நிவிர்த்திகலை முதலிய (பிரதிஷ்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலை) ஐந்தும் கலாத்துவா எனப்படும் (சை. வா. **Pt. II.** 15: 3)

35. *தத்துவாத்துவா யாது?*

ஶிவதத்வாதி ப்ருத்வ்யந்தம் தத்வாத்வா ஸமுதாஹ்ருத:।

சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவம் இறுதியாயுள்ள தத்துவம் முப்பத்தாறும் தத்துவாத்துவா எனப்படும் (சை. வா. **Pt. II.** 15: 4)

36. *புவனத்துவா யாது?*

ஆதாராத்யுந்மநாந்தஸ்து புவநாத்வா ப்ரகீர்த்தித:।

ஆதார (காலாக்கினிருத்திர புவனமுதல்) உன்மனு (அநாசிருத புவனு) ந்தம் வரையும் உள்ள 224 புவனமும் புவனுத்துவா எனப்படும். (சை. வா. **Pt. II.** 15: 5)

37. *வர்ணுத்துவா யாது?*

வர்ணா: ஶுத்தாதி ஶிவாத்மாநோ வர்ணாத்வ ஸம்ஜ்ஞிதா:।

"(அகாராதி க்ஷகாராந்தமாயுள்ள) சிவரூப *ஐம்பத்தொரு அக்ஷரங்கள் வர்ணுத்துவா எனப்படும்" (சை. வா. **Pt. II.** 15: 6)

38. *பதாத்துவா யாது?*

அநேகபேத ஸம்பந்ந: பதாத்வா ஸமுதாஹ்ருத:।

அநேகபேதங்களையுடைய (வியோமவியாபினிமுதலிய எண்பத்தொரு) பதம் பதாத்துவா எனப்படும். (சை. வா. **Pt. II.** 15: 6)

39. *மந்திராத்துவா யாது?*

ஸப்தகோடி மஹாமந்த்ரா மந்த்ராத்வா ஸமுதாஹ்ருத:।

ஏழு பல்லவங்களையுமிறுதியிலுடைய (பதினொரு) மந்திரங்களும் மந்திராத்துவா எனப்படும். (சை. வா. **Pt. II.** 15: 8)

---

* ஐம்பத்தொன்றெனற்பாலது ஐம்பதெனச் சுலோகத்திலே பொதுவுறக் கூறப்பட்டது.

40. இந்த ஆறத்துவாவும் ஒன்றுக்கொன்று வியாபக வியாப்பியமாதலுளவோ?

மந்த்ரா: ஸர்வே பதைர்வ்யாப்தா: [illegible] பதாநி ச |
வர்ணை: (வர்ணா: [illegible]) |
வர்ணாஸ்து புவநைர்வ்யாப்தாஸ் தத்வைஶ்ச புவநாநி ச |
புவநாந்யபி [illegible] கலாபி: க்ரமாத் |
வ்யாப்தாநி ([illegible]) |
ஸ்ருஷ்டாநி தத்வாநி வ்யாப்தாந்யேவ யதா ததா ||

ஆம். மந்திரங்கள் பதங்களானும், பதங்கள் வர்ணங்களானும், வர்ணங்கள் புவனங்களானும், புவனங்கள் தத்துவங்களானும், தத்துவங்கள் கலைகளானும் வியாபிக்கப்பட்டன என்று கூறப்பட்டது.

(சை. வா. Pt. I. 25: 11, 16)

41. நிவிர்த்திகலையினுல் வியாபிக்கப்பட்ட தத்துவம் யாது?

பிருதிவிதத்துவம்.

42. பிரதிஷ்டாகலையினுல் வியாபிக்கப்பட்டவை யாவை?

அப்புமுதற் பிரகிருதி ஈருயுள்ள தத்துவங்களாம்.

43. வித்தியாகலையினுல் வியாபிக்கப்பட்டவை யாவை?

புருஷன்முதல் மாயையீருகிய தத்துவம் எழுமாம்.

44. சாந்திகலையினுல் வியாபிக்கப்பட்டவை யாவை?

சுத்தவித்தை முதலிய மூன்றுமாம்.

45. சாந்தியாதீதகலையினுல் வியாபிக்கப்பட்டவை யாவை?

சத்திதத்துவம் சிவதத்துவம் என்னும் இரண்டுமாம்.

46. நிவிர்த்தி கலை யாது சக்கரம் எனப்படும்? இதை அதிஷ்டிப்பவர் யாவர்?

நிவ்ருத்திரேவ ஸா வ்யாப்தா [illegible] |
விதாதா ஹ்யதிஷ்டிதஸ் [illegible] |

ஹிரண்யகர்ப [illegible] வ்யஷ்டிரேவ [illegible] |
ஹிரண்யகர்போ விராட் புருஷ: காலஏவ ச |
[illegible] வ்யூஹா [illegible] ||

நிவிர்த்திகலாரூபம் சிருஷ்டிசக்கரம்; இதை அதிஷ்டிப்பவர் பிரமா; இந்தப் பிரமாவுக்கு இரண்ணியகருப்பர், விராட்டு, புருஷர், காலர் என நான்கு வியூகர் உளர்; இவரைத் தியானிப்போர் எய்தும் பதம் இந்நிவிர்த்திகலா சக்கரமாம். (சை. கை. 10: 73, 69, 74)

47. *பிரதிஷ்டாகலை யாது சக்கரம் எனப்படும்? இதை அதிஷ்டிப்பவர் யாவர்?*

𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌪𑌦𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌰𑌮𑌾𑌶𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌤𑌾𑌵𑌾𑌮𑍇 𑌸𑌰𑍍𑌵𑌰𑌕𑍍𑌷𑌾𑌕𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 ।
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌾𑌦𑌿 𑌚𑌤𑍁𑌷𑍍𑌕𑌂 𑌵𑍍𑌯𑍂𑌹𑌿𑌤𑌾𑌂𑌗𑌤𑌮𑍍 ।
𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑍋 𑌽𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌶𑍍𑌚 𑌤𑌤𑌸𑍍𑌸𑌂𑌕𑌰𑍍𑌷𑌣𑌃 𑌪𑌰𑌃 ।
𑌪𑍍𑌰𑌦𑍍𑌯𑍁𑌮𑍍𑌨𑌶𑍍𑌚𑍇𑌤𑌿 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌚𑌕𑍍𑌰𑌮𑌿𑌦𑌂𑌪𑌰𑌮𑍍 ।
𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌸𑍍𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑍁𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌤𑍄𑌣𑌾𑌞𑍍𑌚 𑌪𑌾𑌲𑌨𑌮𑍍 ।
𑌏𑌤𑌦𑍇𑌵 𑌪𑌦𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌾𑌦𑌪𑍍𑌰𑌸𑍇𑌵𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

**"பிரதிஷ்டாகலாரூபம் ஸ்திதிசக்கரம்;** *இப்பதத்தை அதிஷ்டிப்பவர்* **விஷ்ணு;** *இவர் ரமாசத்தி வாமபாகத்தில் மேவ, அனைத்தையும் காக்கவல்லுநரும் மகானுமாய் விளங்குவர்; இவர்க்கு* **வாசுதேவர், அநிருத்தர், பிரத்தியும்நர், சங்கர்ஷணர்** *என நான்கு வியூகர் உளர்; இவர் படைத்தற் கர்த்தா வாகிய பிரமன் முதலாயினோர்க்கும் இரக்ஷகராவர்;* **விஷ்ணு சேவைசெய்** *வோர் அடையும் பரமபதம் இதுவாம்."* (சை. கை. 10: 61—66)

48. *வித்தியாகலை யாது சக்கரம் எனப்படும்? இதை அதிஷ்டிப்பவர் யாவர்?*

𑌸𑌂𑌹𑌾𑌰𑌾𑌖𑍍𑌯𑌮𑌿𑌦𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑍂𑌪𑌮𑍇𑌵 𑌕𑌲𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚 𑌰𑍁𑌦𑍍𑌰𑍇𑌣𑌪𑌦𑌮𑍇𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑍍𑌯𑍂𑌹𑌰𑍂𑌪𑌂 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑌿𑌵𑌾𑌦𑍍𑌯𑌞𑍍𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 ।
𑌶𑌿𑌵𑍋𑌹𑌰𑍋 𑌮𑍃𑌡𑌭𑌵𑍌𑌵𑌿𑌦𑌿𑌤𑌂 𑌚𑌕𑍍𑌰𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌮𑍍 ।
𑌏𑌤𑌦𑍇𑌵𑌪𑌦𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌰𑌾𑌧𑌨 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍 ॥

**"வித்தியாகலாரூபம் சங்காரசக்கரம்;** *இது* **உருத்திரரால்** *அதிஷ்டிக்கப்படும்; இந்த உருத்திரர்க்குச்* **சிவன் ஹரர் மிருடர் பவர்** *என நான்கு வியூகர் உளர்; இந்நிராமயமாகிய பதமே உருத்திரரைப் பூசிப்போர் அடையும் பதமாம்."* (சை. கை. 10: 58, 52, 53, 59)

49. *சாந்திகலை யாது சக்கரம் எனப்படும்? இதை அதிஷ்டிப்பவர்யாவர்?*

𑌤𑌿𑌰𑍋𑌭𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌚𑌕𑍍𑌰𑌂 𑌭𑌵𑍇 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌲𑌾𑌮𑌯𑌮𑍍 ।
𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌾𑌧𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌞𑍍𑌚𑌪𑌦𑌮𑍇𑌤𑌦𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌯𑍈𑌵 𑌵𑍍𑌯𑍂𑌹𑌰𑍂𑌪𑌂𑌸𑍍𑌯𑌾 𑌦𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌦𑌿 𑌚𑌤𑍁𑌷𑍍𑌟𑌯𑌮𑍍 ।
𑌈𑌶𑍋𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌪𑌰𑌮𑍇𑌶𑌸𑍍𑌤𑌤𑌃 𑌪𑌰𑌮𑍍 ।
𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰 𑌇𑌤𑍀𑌹𑍈𑌤𑍇 𑌤𑌿𑌰𑍋𑌧𑌾𑌯𑌾𑌚𑌕𑍍𑌰𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।
𑌏𑌤𑌦𑍇𑌵𑌪𑌦𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌂𑌮𑌹𑍇𑌶𑌪𑌦𑌸𑍇𑌵𑌿𑌨𑌾𑌮𑍍 ॥

"சாந்திகலாரூபம் திரோபவசக்கரம்; இது மகேசுவரரால் அதிஷ்டிக்கப்படும்; இம்மகேசுவரர்க்கு ஈசர், விசுவேசர், பரமேசர், சர்வேசுவரர் என நான்கு வியூகர் உளர்; இந்த உத்தமமாகிய பதமே மகேசுவ்ரரை உபாசிப்போர் அடையும் பதமாம்." (சை. கை. 10: 49, 45, 46, 50)

50. *சாந்தியாதீதகலை யாது சக்கரம் எனப்படும்? இதை அதிஷ்டிப்பவர் யாவர்?*

अनुग्रहमयं चक्रं शान्त्यतीतकलामयम्।
सदाशिवाधिष्ठितञ्च परमं पदमुच्यते।
अत्रैव व्यष्टितापन्नं महेशादिचतुष्टयम्।
एतत्पदं प्राप्यं यतीनां भावितात्मनाम्।
सदाशिवोपासकानां प्रणवासक्तचेतसाम्।
एतत्पदं प्राप्य तेन साकं मुनीश्वराः।
भुञ्जते विपुलान् भोगान् शिवेन ब्रह्मरूपिणा।

"சாந்தியாதீதகலாரூபம் அநுக்கிரகசக்கரம்; இது சதாசிவரால் அதிஷ்டிக்கப்பட்ட பரமபதம்; இவர்க்குத் (திரோபவாதி நான்கு சக்கரங்களிலுள்ள) மகேசுவரர், உருத்திரர், விஷ்ணு, பிரமா என்னும் நால்வர் வியஷ்டிரூபர்; பிரணவத்திருத்திய அறிவுடையராய்ப் பாவிக்குஞ் சதாசிவோபாசகர்களாகிய துறவிகள் அடையும் பதம் இதுவே; இவ்வுபாசகர்கள் பிரமசொரூபியாகிய சிவனுரோடு மிகுந்த விரிவாகிய போகங்களைத் துய்க்கின்றார்." (சை. கை. 10: 27—30)

51. *மேலே உரைத்த ஐவகைச் சக்கரங்களுக்கும் ஆதாரம் என்னை?*

पञ्चारं चक्रं परिवर्ततेऽव्ययम्।

இவ்வைந்து சக்கரங்களுக்கும் சிருட்டியாதி "ஐந்து ஆரங்களையுடைய சக்கரம் மேலே விரிவாயுள்ளது" என்னும் தைத்திரீய ஆரணியகத்து மூன்றாவது பிரசினத்துப் பதினொராம் அநுவாகத்திற் கண்ட மந்திரம்.

52. *இதற்கு உபப்பிருங்கணப் பிரமாணம் என்னை?*

சைவபுராண கைலாசசம்கிதை பத்தாம் அத்தியாயத்து இருபத்து நான்காம் சுலோகமுதல் எழுபத்தாறும் சுலோகம் இறுதியாய்ப் போந்த ஐம்பத்திரண்டு சுலோகங்களே பிரமாணம்.

53. *சிவாத்துவித சைவபாடியத் தமிழ் மொழி பெயர்ப்பின் 2-ஆம் பக்கத்திலே பிரம உருத்திரர்களை ஓர்போது தோற்றுவித்தவர் விஷ்ணு என்றும், 6-ஆம் பக்கத்து, 16-ல் அந்த உருத்திரர் துரியருத்திரர் அன்றென்றும் கூறப்பட்டவிடத்*

தும், அங்ஙனமே நாலாயிரப்பிரபந்தத்தினும் பிரம உருத்திரர்களுக்கு மேலாய் விஷ்ணு துதிக்கப்பட்டவிடத்தும்

நமோ ஸ்ரீரங்கநாதாய நமஸ்து ப்யம் ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகாரிணே।

(சேதுமான்மியம், 3: 32)

"யாவுந் தந்து வைத்தழிக்கும் வானோர் தலைவனே (நாராயணரே) போற்றி யென்ருன்" எனப் படைத்தல் காத்தல் அழித்தல் செய்யும் பிரமா விஷ்ணு உருத்திரர்களுக்குத் தலைவர் காத்தற்கடவுளாகிய விஷ்ணு வென்று கோடல் பொருந்துமா?

வாஸுதேவாஹ்வயாநா ஸா குணாதீதா ஸுநிஷ்கலா।
ராஜஸீசாநிருத்தாக்யா யாஸுஷ ஸ்ருஷ்டிகாரிகா।
ஸத்வோத்ரிக்தா த்ருதீயா ந்யா ப்ரத்யும்நேதி ச ஸம்ஜ்ஞிதா।
த்ருதீயா ஸங்கர்ஷணாக்யா தாமஸீ ஸேஷஸம்ஜ்ஞிதா।

(46-ஆம் விஞவிடையிற் கூறியாங்கு) படைத்தற் கர்த்தாவாகிய பிரமாவுக்கு விராட்டு, புருஷர், காலர் என்பார் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில் செய்தற்கு அமைந்தாற் போன்றும், (48-ற் கூறியாங்கு) சங்காரகர்த்தாவாகிய உருத்திரர்க்கு ஹரர், மிருடர், பவர் என்பார் படைத்தலாதி செய்தற்கு அமைந்தாற் போன்றும், (47-ஆம் விஞவிடையிற் கூறியாங்கு) காத்தற் கடவுளாகிய விஷ்ணுவுக்கு ராசசகுணத்தினராகிய (பிரமா எனப்படும்) அநிருத்தர், சத்துவகுணத்தினராகிய (விஷ்ணு எனப்படும்) பிரத்தியும்நர், தாமசகுணத்தினராகிய (ருத்திரர் எனப்படும்) சங்கர்ஷணர் என்பார் படைத்தல் காத்தல் அழித்தல்செய்தற்கு அமைந்தாரென்று வாயுசங்கிதை முதலியகூறலின், அது பொருந்தும்.

54. விஷ்ணு உலகை உண்டவிடத்தும் அளந்தவிடத்தும் சிவபெருமான் அவற்றுக்குட்படாது மேலோங்கி நின்ருர் என்பதைத் திராவிட சுருதிகளான் விளக்குக?

"மாவலிவேள்வியில் மாணுருவாய்ச் சென்று
மூவடிதாவென் றிரந்தவிம்மண்ணினை
ஓரடியிட்டிரண்டாமடி தனிலே
தாவடியிட்டான்,"

"ஞாலமேழும் உண்டு மண்டியாலிலைத் துயின்றவாதிதேவனே" என்றற்றொடக்கத்தனவாக நாலாயிரப்பிரபந்தங் கூற,

"முன்னந் தாவியடிமூன் றளந்தவன் ருன்முகன்
றன்னந் தாளுற்றுணராததோர் தவநீதியே"

(திருப்பாதிரிப்புலியூர், ஞா., 9)

" மண்டான்முழுதுமுண்டமாலுமலர்மிசைமேலயனு
மெண்டானறியாவண்ணநின்றவிறைவன்மறையோதி"
(திருச்சண்பைநகர், ஞா., 9)

என்றற்றொடக்கத்தனவாகத் திராவிட சுருதி உரைக்கின்றமையான், பிரகிருதிவரையில் வியாபித்துநின்ற நாராயணரினும் சூக்குமப்பிரகிருதி பரப்பிரகிருதிகளைக் கடந்து நின்ற சிவபிரானுரது நிரவதிவியாபகப்பெருமை நன்கு புலப்படும்.

55. ஏகான்மவாதச் சுருதிகளிலே ஆன்மாவானது பிரம விஷ்ணு உருத்திரர்களுக்குத் துரியமாகக் கூறப்படுகின்றதா?

சிந்மாத்ரம் கேவலம் சாஹம் நாஸ்த்யந்யதிதி நிஸ்சிநு।
ரக்ஷகோ விஷ்ணு ரித்யாதி ப்ரஹ்மா ஸ்ருஷ்டேஸ்து காரணம்।
ஸம்ஹாரே ருத்ர இத்யேவம் ஸர்வம் மித்யேதி நிஸ்சிநு।

"(ஆன்மாவாகிய) நான் சின்மாத்திரமாகவே இருக்கின்றேன்; அநாத்துமா இல்லை என நிச்சயி; காப்பவர் விஷ்ணு என்பதும், படைப்பவர் பிரமா என்பதும், அழிப்பவர் உருத்திரர் என்பதும் பிறவும் பொய்" என ஆன்மாவைத் துரியமாகநிறுத்தி மாயாவாத தேஜோவிந்தூபநிடதங் கூறுகின்றது.

56. (46-ஆம் இலக்க வினாவிடையிற் கண்ட) பிரமாவுக்கும், (47-ற் கண்ட) விஷ்ணுவுக்கும், (48-ற் கண்ட) உருத்திரர்க்கும் துரியராகிய (50-ஆம் இலக்கத்துச்) சிவபிரானே (55-ஆம் இலக்கத்திற் கண்ட) பிரம விஷ்ணுக்களுக்கு மேலாகக் கூறப்பட்ட ஆன்மாவினும் சிறந்த வாஸ்தவப் பிரமம் என்பதைச் சிறிது நிரூபணஞ்செய்க?

I. அநாத்துமாவுக்கு வேறுயுள்ளது ஆன்மா என்று, இதனையே ஏகான்மவாதிகள் முடிவாகக் கூற, அவ்வான்மாவை

அநாத்மந: பரே ஸர்வே ஜீவா ஏவ நஸம்ஸய:।

"அநாத்துமாவுக்கு மேலுள்ளவெல்லாம் பசுக்கள், சந்தேகமில்லை" என்று சிவபுராணங் கூறுகின்றது.

தயோ ரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஸ்நந்நந்யோ அபிசாகஸீதி।

II. "(ஒரு விருக்ஷத்திருந்த இரு அழகிய பட்சிகளுள்) ஒன்று இனிய பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணுது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்னும் முண்டகோபநிடத சுருதியானது ஆன்மாவையும் சிவபெருமானையும் உணர்த்துவதாமென, வெளிப்படையாய் விளங்கற்பாலதாயவிடத்தும், இச்சுருதிக்குப் பொருள் செய்கின்றேமென்று ஏகான்மவாதியார் தொடங்கி, ஆன்மாவைச் சத்துவம் (அந்தக்கரணம்) என்றும், ஈசனை

க்ஷேத்திரஞ்ஞன் (ஆன்மா) என்றுந் தமது சூத்திர பாடியத்திற் பொருட் படுத்திக் கீழே ஈர்த்தார்; அங்ஙனமாயின்,

ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர்குணேசஃ (சுவே. 6. 16)

"பிரதானம் (பாசம்), க்ஷேத்திரஞ்ஞன் (பசு) என்னும் இரண்டுக்கும் பதியாயுள்ளார் சர்வஞ்ஞதாதி குணங்களையுடைய சிவபெருமான்" என்னுஞ் சுவேதாசுவதர மந்திரத்திற் கண்ட க்ஷேத்திரஞ்ஞனிலே இந்த க்ஷேத்திரஞ்ஞனும் முற்றுமாயின், அதற்கு மேலுள்ள குணேசராகிய சிவபெருமான் சாந்தியாதீதகலாசக்கரத்தின் பாலராகிய சிவபெருமானேயாய் முற்றுவர். (முண்ட. 3.1: 1, 2, 3) ற் கண்ட "உண்ணாத பட்சியாகிய (ஈசர்) அந்தக் குணேசராயே (சிவபெருமானுயே) முற்றுவாரன்றி, ஏகான்மவாதியார் கூறியவாறு ஓர்காலும் க்ஷேத்திரஞ்ஞனுகமுற்றமாட்டார். ஆகலின், அன்னத்தைப் பிரமம் என்றும், பிராணனைப் பிரமம் என்றும், மனசைப் பிரமம் என்றும், அக்கினியைப் பிரமம் என்றும், ஆதித்தியனைப் பிரமம் என்றும், இந்திரனைப் பிரமம் என்றும் சுருதிகள் சிற்சில கூறுமாறு போல, சில உபநிடதங்களினும் க்ஷேத்திரஞ்ஞனாகிய ஆன்மாவானது பிரமம் எனக் கூறப்படுகின்றது.

57. ஆன்மாவைப் பிரமம் என்று உபநிடதங்களும் சங்கராசாரியர் முதலாயினோருங் கூற, அதனைப் பசு என்றும், சீவன் என்றும் கூறல் அடுக்குமா?

அடுக்கும்! அடுக்கும்!! ஒரு ஊரிலே சிற்றரசராகிய ஓர் பூபதியானவர் **(Zemindar)** மஹாராஜா, சுவாமிகள் என்றற்றொடக்கத்தனவாக வாழ்த்திப் பூஜிக்கப்படினும், அவர் பூமண்டல ஏகசக்கிராதிபதியாகார். அதுபோல மாயாவாதச்சுருதிகளிலே அப்பசுக்களாகிய ஆன்மாக்கள் பிரமம் எனப்படினும், அவை (50-ஆம் இலக்கவிஞவிடையிற் கண்டவாறு) ஈசகேநாதி பரசுருதிகளினும், பிரமசூத்திரமுதலியவைகளினும் பிரதிபாதிக்கப்பட்ட பிரமமாகாவென்க.

58. மாயை எத்தனை வகைப்படும்?

மாயா மாயாச மாயாச மாயாசைவ த்ரிதாஸ்ம்ருதா।

"மாயை (மகாமாயை), மாயை (அசுத்தமாயை), மாயை (பிரகிருதி) என மாயை மூன்று" எனச் சிவாகமங் கூறுகின்றது.

59. அவை புராணத்தினும் கூறப்படுகின்றனவா?

மஹாமாயாச மாயாச ப்ரக்ருதிஸ்த்ரிகுணாத்மிகா।

*மகாமாயை, மாயை, முக்குணத்தோடியன்ற பிரகிருதி என மாயை முத்திறப்படும் (சை. வா. **Pt. I.** 25: 34)

*மாயாவாத மகாநாராயணோபநிடதத்துக் காணப்படும் "மகாமாயை" மூலப்பிரகிருதி "மாயை"யைச் சுட்டுமன்றி, ஈண்டுக் கூறப்பட்ட மகாமாயையை உணர்த்தாது.

60. மகாமாயையும், மாயையும், பிரகிருதியும் வேறு எங்ஙனம் கூறப்படும்?

ப்ரக்ருதிஸ்த்ரேதா ஸூக்ஷ்மா ஸ்தூலா பரேத்யஸௌ ।

அவை "(மகாமாயை) பரப்பிரகிருதி எனவும், (மாயை) சூக்குமப்பிரகிருதி எனவும், (பிரகிருதி) தூலப்பிரகிருதி எனவும் பெயர் பெறு"மெனச் சிவாகமங் கூறுகின்றது.

61. மகாமாயையின் பரியாயநாமங்கள் யாவை?

"விந்து, குண்டலிநீ எனப் பவுட்கராகமத்தினும், வித்தை, மாயை, பரை, பரவாகீசுவரி" எனச் சிந்தியவிசுவசாதாக்கிய முதலியவற்றினும் கூறப்படுகின்றது.

62. சிவதத்துவம் என்பது யாது?

ஸ்ருஷ்டிகாலே து குடிலா குண்டல்யாகாரஸம்ஸ்திதா ।
தந்மத்யே ஜ்ஞானமுத்பன்னம் தத்ரூபம் நாதமுச்யதே ।
ததேதத் பரமோ ஹ்யேவ பரதத்த்வம் நிராமயம் ।
ஶுத்தஸ்படிகஸங்காஶம் ஶிவதத்த்வம் ததஸ் ஸ்ம்ருதம் ।

அமேயமநிர்தேஶ்யமநௌபம்யமநாமயம் ।
ஸூக்ஷ்மம் ஸர்வகதம் நித்யம் த்ருவமவ்யயமீஶ்வரம் ।
ஶிவதத்த்வமிதம் ப்ரோக்தம் ஸர்வோர்த்வாதிஸம்ஸ்திதம் ।
ஓங்காரத்வதயா பாதி ஶாந்த்யாதீதஃ பரஶ்ஶிவஃ ॥

"சிருஷ்டிகாலத்திலே குடிலை குண்டலியாகாரமாயுற்றது; அதன் மத்தியிலே ஞானம் உதித்தது; அதன் வடிவம் நாதமெனப்படும்; இது நிராமயமாகிய பரதத்துவமாய், சுத்தஸ்படிகசங்காசமாயுள்ள சிவதத்துவ"மென ஞான சித்தியாகமமும்,

"அளக்கவும் உரைக்கவும் இயலாததும், உபமனிலாததும், அநாமய மாயதும், சர்வவியாபகமாயதும், நித்தியமாயதும், நிலையாயதும், எல்லா வற்றுக்கும் மேலாய நாயகத்தன்மை பூண்டதாயுமுள்ளது சிவதத்துவம்; சாந்தியாதீதராய்ப் பரசிவனுருளராக, இது ஓங்கார சுவரூபமாய் விளங் குவது" என்று சுவாயம்புவாகமமும் கூறுகின்றன.

63. சிவதத்துவம் ஐந்தின் உற்பத்தியும் வியாபாரமும் என்னை?

உத்யோகாச்சக்திதத்த்வம் ப்ரஸாரிச விஸ்தாரஸ்து ச ஸதாக்யம் விஶ்வ
கேஷா பிந்தோஃ ப்ராதுர்க்ரியாஜ்ஞானம் ஸமத்வம் ஈஶ்வராத்மகம் ஸ
தேஶாவித்யாதத்த்வம்। ஜ்ஞானக்ரியேஶதத்த்வம் ஸ்தாவதிஸம்ஹிதம் தச்ச க்ரியா

ஶக்தியோ ஹாஜ ஜ்ஞாநாவ்யாஶக்தியோ ஹாந்நாநிவஹாலெவெஶாஜவிஷ்யா வ்யக்தவு॥

"உலகத்தைச் சிருஷ்டி செய்ய விருப்பமுற்ற பரமசிவனுடைய வியாபாரத்தினல் விந்துவினின்று ஆதியிற் கலாபுவனங்களானிறைந்த சத்திதத்துவம் உண்டாயிற்று; அப்பரமேசுரரால் சத்திதத்துவத்தினின்றும் ஞானக்கிரியைகள் சாமியமாய சாதாக்கியதத்துவம் உண்டாயிற்று; கிரியாசத்திசம்பந்தத்தினல் அதினின்று மந்திரேசுவரர் அனந்தாதியரோடு ஈசுவரதத்துவம் உண்டாயிற்று. ஞானசத்திசம்பந்தத்தினல் அதினின்று சப்தகோடி மகாமந்திரர் முதலாயினரோடு சுத்தவித்தியாதத்துவம் உண்டாயிற்று." (சித். ஞான. 9)

64. இவ்வைந்து தத்துவங்களும் எவர்க்கு ஸ்தானம்?

த்ரிவிய௦ வபுஶெவஸ்ய வபுஷெ-ாகெ வ்யஸ்ய தெ ।
நிஷ்கல௦ வ்யய௦வெணெ ஜ தஸகலநிஷ்கலவு ।
த்ருதீய௦ ஸகல௦ வெவ நாந்யெதி ஜிவொதூரா: ।

வகல௦ ஸூக்ஷ்ம௦ஸக்ஷ ஷேகல௦ ஸாஸஸ்ஷு௦ஶக்தா ஶக்தா௦ ஶக்தஷெகல௦ஹ்ய ஶக்தஷு॥

"சிவத்துக்குள்ள வடிவம் மூன்றனுள்ளே (சிவதத்துவ சத்திதத்துவங்களை அதிஷ்டித்து நிற்பவர்) தலையாய சூக்ஷ்ம நிஷ்கள வடிவினராகிய சிவன்; (சாதாக்கிய தத்துவத்தை அதிஷ்டித்துநிற்பவர்) இரண்டாவதாகிய சூக்ஷ்ம சகள நிஷ்கள வடிவினராகிய சதாசிவர்; (ஈசுவரம் சுத்தவித்தைகளை அதிஷ்டிப்பவர்) மூன்றாவதாகிய ஸ்தூல சகள வடிவினராகிய மகேசுவரர்." (இலிங். பூரு. 75: 30, 31; 72: 164)

65. தத்துவம் என்றால் என்னை?

ஆவ்ரலய௦ யத்திஷ்டதிஸவெஷா௦ ஹொஹஜாயி ஹஷதாநா௦ ।
தகவதிவொக்தஶரீர வடாதிதகவதஃ॥

"தாத்துவிகமாகிய சரீராதிகள்போல உடனே அழிவதன்றிப் பிரளயகாலம் வரையும் நிலையுறுதலான் தத்துவம் எனப்படும்" என்று ஆகமம் கூறுகின்றது.

66. தத்துவங்களுக்கும் அதை அதிஷ்டிக்கும் தத்துவாதிபர்க்கும் பெயர் ஒன்றாதற்குப் பிரமாணம் என்னை?

யாநிநாமாநி தத்வாநா௦தாநி தத்வாயிவெஷ்வபி ।
ஜ்ஞாவெவ௦யொஜயெந்நு௦யஸிந்ய: வ்யாவ்ருதீஷத॥

"எவ்வெப்பெயர்கள் எவ்வெத்தத்துவங்கட்குளவோ, அவ்வப்பெயர்கள் அவ்வவற்றை அதிஷ்டிக்கும் அதிபர்களுக்குமாம்" எனச் சர்வஞ்ஞானோத்தராகமம் கூறுகின்றது.

67. *வித்தியாதத்துவ ஆன்மதத்துவங்களின் தோற்றம் எவ்வாறு?*

மாயாதோ ऽநந்தயோகாத் ப்ரஸூதிஶ்ச கலாகாலதத்த்வம் நியத்யா
விஷ்யாராகௌ கலாதஃ ப்ரக்ருதிஸஹிதோ ருத்ரயுக்தோ ஹ்ருணஸ்தாஶ்।
புஞ்ஜீஸ்ஞாதோவ்யஹங்க்ருச்ச த்ரிவிதகுணயுதாயாம் த்ரிதைஜஸம்
ப்ராக் கர்மாக்ஷாணி வைகாரிகாத் ஸ்வதந்மாத்ரஸ்தத்ஸாத் பூதாநி
தாஸ்யூ॥

"சூக்குமப் பிரகிருதி எனப்படும் மாயையினின்று ஈசுவரதத்துவத்தினராகிய அனந்தருடைய நியோகத்தினுற் கலாதத்துவமும் காலதத்துவமும் நியதிதத்துவமும், கலாதத்துவத்தினின்று வித்தியாதத்துவமும் ராகதத்துவமும் உண்டாயின. முற்கூறிய மாயையினின்று உருத்திரரோடு புருடதத்துவம் உண்டாயிற்று; பின்னர்க் கலாதத்துவத்தினின்று பிரகிருதியும், இதினின்று (சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும்) குணதத்துவமும், இதினின்று முக்குணரூபமாகிய புத்திதத்துவமும், இதினின்று முக்குணரூபமாகிய அகங்காரமும், சாத்துவிககுணமாகிய தைசசவகங்காரத்தினின்று மனசும், (சித்தமும்), சுரோத்திராதி ஞானேந்திரியம் ஐந்தும், இராசசகுணமாகிய வைகரியகங்காரத்தினின்று வாக்காதி கன்மேந்திரியம் ஐந்தும், தாமசகுணமாகிய பூதாதியகங்காரத்தினின்று சப்தாதி தன்மாத்திரை ஐந்தும், இத்தன்மாத்திரைகள் ஐந்தினின்று ஆகாசாதி பஞ்சபூதங்களும் தோன்றின." (சித். ஞான். 10)

68. *பிருதிவியாதி தத்துவங்கள் ஒன்றுக்குமேலொன்று எவ்வாறு வியாபகப்படும்?*

பிருதிவியிற் பத்துமடங்கு அப்பு, இதிற் பத்துமடங்கு தேயு, இதிற் பத்துமடங்கு வாயு, இதிற் பத்துமடங்கு ஆகாசம், இதிற் பத்துமடங்கு (ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன்மாத்திரை, மனங்களடங்கிய) அகங்காரம், இதிற் பத்துமடங்கு புத்தி, இதிற் பத்துமடங்கு குணம், இதிற் பத்துமடங்கு பிரகிருதி, இதில் நூறுமடங்கு ராகம், இதில் நூறுமடங்கு வித்தை, இதில் நூறுமடங்கு நியதி, இதில் நூறுமடங்கு கலை, இதில் நூறுமடங்கு காலம், இதில் நூறுமடங்கு அசுத்தமாயை, இதில் ஆயிரமடங்கு சுத்தவித்தை, இதில் ஆயிரமடங்கு ஈசுவரதத்துவம், இதில் ஆயிரமடங்கு சாதாக்கியதத்துவம், இதில் இலக்ஷமடங்கு சத்திதத்துவம், இதில் இலக்ஷமடங்கு சிவதத்துவம் என்க.

69. இத் தத்துவங்கள் ஒன்றின்மேலொன்று சூக்குமமாயுளவோ?

தந்மாத்ராணி ப்ருதிவ்யாதேஸ்ஸூக்ஷ்மாண்யஹங்க்ருதி:|
தஸ்யாஸ்ஸூக்ஷ்மதரா புத்திஸ்தஸ்யா: ப்ரக்ருதிரேவ ச |
தஸ்யா: கலாதிவர்க்கஸ்து மாயாஸூக்ஷ்மதரா தத:||

"சப்தாதி தன்மாத்திரைகள் பிருதிவியாதி ஐந்து தத்துவங்களினும் சூக்குமம்; அகங்காரதத்துவம் அவற்றினும் சூக்குமம்; அதினும் புத்திதத்துவம் அதிசூக்குமம்; அதினும் பிரகிருதி அத்தியந்த சூக்குமம்; அதினும் கலாதி தத்துவங்கள் சூக்குமம்; அவற்றினும் அசுத்தமாயை அதிசூக்குமம்." (ப. ஆ. மாயா. 7, 8)

70. சிருட்டி எத்தனை வகைப்படும்?

மாயாயா த்விவிதாஸ்ருஷ்டி: ஸ்தூலாஸூக்ஷ்மாதிகேத்யபி |
ஜ்ஞசக்திவ்யஞ்ஜிகா ஸூக்ஷ்மா ஸ்திதா தத்வாத்மநாத்மநி |
ஸ்தூலா புவநரூபேண ஶரீராத்யாத்மநா ஸ்திதா||

"மாயையினின்றுமுண்டாகிய சிருட்டி சூக்குமம் தூலம் என இருவகைப்படும்; ஆன்மாவில் தத்துவரூபமாக ஞானசத்தி வியஞ்சகமாயிருக்கும் கலாதிதத்துவம் சூக்குமசிருட்டி எனவும், புவனரூபமும் சரீரேந்திரியமும் தூலசிருட்டி எனவும்படும்" (ப. ஆ. மாயா. 60, 61)

71. தத்துவங்கள் பின் எத்தனை வகைப்படும்?

தத்துவங்கள் பொதுவும், சிறப்பும், பொதுச்சிறப்புமென முத்திறப்படும்; புவனவடிவாகிய தத்துவங்கள் எல்லோர்க்கும் பயன்றருதலிற் பொதுவாம்; சூக்குமதேகவடிவாகிய தத்துவங்கள் போகநுகர்ச்சியின் பொருட்டுத் தனக்குப் பயன்றருதலிற் சிறப்பாம். தூலதேகவடிவாகிய தத்துவங்கள் தனது போக நுகர்ச்சிக்கும், சந்தனம் பூமாலைபோல மனைவி முதலியோர் அநுபவித்தற்கும் வாய்ந்தமையிற் பொதுச்சிறப்பாம். இதனுற் புவனவடிவாகிய தத்துவங்கள் முப்பத்தாறுய்ப் பொதுவாய்ப் புறத்தே நிற்றல்போல, அகத்தே ஆன்மாவைப்பற்றி முப்பத்தாறு தத்துவங்களும் சூக்குமமாய்நிற்குமென்றுணர்க.

72. இம்முப்பத்தாறு தத்துவங்களினும் அடங்கிய புவனங்கள் யாவை?

பிருதிவிதத்துவத்தில் நூற்றெட்டுப்புவனங்களும், அப்புமுதலிய இருபத்துமூன்று தத்துவங்களில் ஐம்பத்தாறு புவனங்களும், வித்தியாதத்துவங்கள் ஏழினும் இருபத்தேழு புவனங்களும், சுத்தவித்தைமுதலிய மூன்று தத்துவங்களிற் பதினெட்டுப் புவனங்களும், சத்திதத்துவ சிவதத்துவங்களிற் பதினைந்து புவனங்களும் உளவாம்.

73. *சிவதத்துவ சத்திதத்துவங்களிலுள்ள புவனங்கள் யாவை?*

அநாசிருதை, அநாதை, அனந்தை, வியோமரூபிநீ, வியாபினி, ஊர்த்துவகை, மோசிகை, ரோசிகை, தீபிகை, இந்திகை, சாந்தியாதீதை, சாந்தி, வித்தை, பிரதிஷ்டை, நிவிர்த்தி என்னும் புவனங்களாம். மற்றைய தத்துவங்களிலுள்ள புவனங்களின் பெயர்களைச் சிவாகமங்களினும் சைவபுராணங்களினுங் காண்க.

74. *முண்டகம், பிருகதாரணியம், கைவல்லியம், தைத்திரீயமகாநாராயணம் என்னும் உபநிடதங்களிலே "பிரமலோகேஷு" (பிரமலோகங்களில்) எனப் பன்மையிற் கூறியதற்குக் காரணம் என்னை?*

(73-ஆம்) இலக்க வினுவிடையிற் கண்டவாறு அநேக புவனங்கள் பிரமலோகத்தினவாய சத்திதத்துவ சிவதத்துவங்களில் உளவாமாதனுேக்கியாம்.

75. *ஈண்டுப் பிரமலோகம் என்பது பிரமாவுடைய உலகம் எனப்படாதா?*

படாது. பிரமாவின் உலகம் தத்துவங்களுள்ளே கீழுற்றதாயும், புநராவர்த்தி (மீளச் செனனம்) கொடுப்பதாயுமிருத்தலின், அது பொருந்தாது.

76. *அந்தப் பிரமலோகம் என்பது விஷ்ணுவுலகமாகாதா?*

விஷ்ணுவினுடையவுலகம் மூலப்பிரகிருதிப் பாலதாமாதலின் அதுவும் உபசாரமாத்திரையாய்ச் செல்லுமன்றி வாஸ்தவத்திற் செல்லுமாறின்று.

77. *மாயாவாதி கூறும் தன்னைப் பார்ப்பதாகிய பிரகிருதிப்பாற்பட்ட பிரமத்தில் அது முற்றுதா?*

(I) அதுவும் முற்றுது; அவர் புருடதத்துவத்துக்கு மேலுள்ள தத்துவ விசாரணை இலராமாதலினுலும்,

(II) ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே (சா. 8. 15. 1)

"அவன் *பிரமலோகத்தை அடைந்து மீளத்திரும்புவனல்லன் மீளத்திரும்புவனல்லன்" எனச் சாந்தோக்கியோபநிடதம் சிவலோகத்தையே முடிவாகக் கூற, இதனை ஆதாரமாகக்கொண்டே வேதவியாசர்

(III) அநாவ்ருத்தி: ஶப்தாத் அநாவ்ருத்தி: ஶப்தாத் ‖

"மீளத்திரும்புவதில்லை மீளத்திரும்புவதில்லை" என வேதாந்த சூத்திரஞ் (4. 4. 22) செய்தமையானுமாம்.

* சிவாத்துவித சைவபாடியத் தமிழ் மொழி பெயர்ப்பு 72-ஆம் பக்கம், 317.

78. சிவதத்துவமாவது யாது?

இதை (62-ஆம்) இலக்கவிஞவிடையிற் காண்க.

79. சத்திதத்துவமாவது யாது?

ஜ்ஞாநேந நாதத: க்ரியோத்பந்நா தத்வபுர்பிந்துருச்யதே|

"ஞானம் (நாதம்) வாயிலாகக் கிரியை தோற்றிற்று; இதன் (சத்திதத்துவத்தின்) வடிவம் விந்து எனப்படும்" என்று ஞானசித்தி கூறுகின்றது.

80. சாதாக்கியதத்துவமாவது யாது?

ஜ்ஞாநக்ரியாஸமவ்யாப்தம் கர்த்ருஸாதாக்யவிக்ரஹம்|
ஸதாஶிவாக்யதத்த்வஞ்ச ஸகளம் நிஷ்களம் பவேத்||

"ஞானக்கிரியை ஒத்துவியாபித்தது கர்த்திரு சாதாக்கியவடிவம்; இச்சதாசிவதத்துவம் சகளநிஷ்களமாகும்" என்று ஞானசித்தியிற் கூறப்பட்டது.

81. ஈசுவரதத்துவமாவது யாது?

ஜ்ஞாநந்யூநம் க்ரியாதிக்யம் மஹேஶதத்த்வவிக்ரஹம்|

"ஞானம் குறைந்து கிரியை அதிகரித்தது மகேசுவரதத்துவம்" என்றது ஞானசித்தி.

82. சுத்தவித்தியாதத்துவமாவது யாது?

க்ரியாஶக்திம் பஹிஷ்க்ருத்ய ஜ்ஞாநஶக்த்யுல்பணம் ததா|
வித்யாதத்த்வஸ்ய சோத்பத்தி ஜ்ஞாநமஹிமாபவத்ததா||

"கிரியை குறைந்து ஞானமேறியிருத்தல் சுத்தவித்தியாதத்துவம்" என்று சிந்தியாகமத்திற் கூறப்பட்டது.

83. அசுத்தமாயையாவது யாது?

யதுபாதாநஜம் விஶ்வம் மாயா தேந ஸமீரிதா|
நித்யைகா வ்யாபிநீ வஸ்துரூபா கர்மாஶ்ரயாऽஶிவா|
ஸாதாரணீ ச ஸர்வேஷாம் ஸகலாநாம் ச பந்தநீஸ்வரா:|

"பிரபஞ்சம் அனைத்தையும் தன்விகாரமாகச் செய்வது மாயை எனக் கூறப்படும்; அது நித்தியமாய், ஒன்ருய், (எவற்றினும்) வியாபகமாய், பாவரூபமாய், கன்மங்கட்காசிரயமாய், பசுக்களுக்குச் சம்சாரத்தைப் பிறப்பிப்பதாய், பிரளயாகலர் சகலர் யாவர்க்கும் சாதாரணமாயிருக்கும்." (ப. ஆ. மாயா. 1, 2)

84. அசுத்தமாயையினின்று தோற்றிய ஐந்து தத்துவங்கள் யாவை?

கலாவித்யா ச ராகஶ்ச காலோ நியதிரேவ ச|
பஞ்சைதாநி ச தத்த்வாநி மாயேயாநி த்விஜோத்தமா:||

"**கலை, வித்தை, ராகம், காலம்,** நியதி என்னும் ஐந்தும் மாயாகாரிய **தத்துவங்கள்.**" (ப. ஆ. பாச. 1, 2)

85. கலை என்பது யாது?

ஈஷதுத்காடிதா நாதி கலா சைதந்ய வ்யஞ்ஜனாத்மகா।

"சைதன்னியம் வெளிப்படுதற்கு எப்பிரகாரத்தினாலும் மலத்தைச் சிறிது நீக்குவது **கலாதத்துவம்**" (ப. ஆ. பாச. 3)

86. காலதத்துவமாவது யாது?

அனந்தசக்திமாயாயா ஜாத: கால ஸம்பவ:।
பூதபவ்ய பவிஷ்யஞ்ச த்ரிதா ஸம்பேதபேத வர்த்தன:।
ஜாதோ மலபரிபக்வார்த்தம் காலதத்வஸ்ய ஸம்பவ:॥

"அனந்தசக்தியையுடைய மாயையினின்று உண்டாயதாய், இறந்தகால நிகழ்கால எதிர்காலமென மூவகைத்தாய், மலத்தைப் பரிபக்குவப்படுத்தும் பொருட்டாயுள்ளது காலதத்துவம்" எனச் சிந்தியாகமம் கூறுகின்றது.

87. வித்தையாவது யாது?

ததோ வித்யாகலாதத்வாதுத்புத்தா போக்யகாரணீ ஜாதத:।
கலயாகர்த்ருதாத்மஸ்ய புத்திகர்மக்ஷணகாரிணீ।
போகோபநயகாரணம் ஸாவித்யா சிவசாஸனே।

"ஆன்மாவிற்குப் போகநிமித்தம் கலாதத்துவத்தினின்று தோற்றியதாய், கலையினாற் கர்த்திருபூதனுயுள்ள ஆன்மாவுக்குப் புத்தி கன்மத்தை அறிதற்குக் கரணமாயதெதுவோ அது சிவசாஸ்திரத்தில் வித்தை எனப்படும்." (ப. ஆ. பாச. 8, 9)

88. ராகமாவது யாது?

ப்ரவ்ருத்தஸ்ய ப்ரவ்ருத்யர்த்தம் ராக: ப்ரவர்த்தகோ மத:।

"விடயங்களிற் பிரவிருத்தியுள்ளவனுக்கு மிகுதியாகப் பற்றுண்டாமாறு பிரவர்த்திப்பது ராகம்." (ப. ஆ. பாச. 22)

89. நியதியாவது யாது?

நியதிஸ்துதயா கர்மணி நியமயத்யணூன்।

"கன்மபலத்தில் ஆன்மாவைப் பிரவர்த்திப்பது நியதி" (ப. ஆ. பாச. 24)

90. புருடதத்துவமாவது யாது?

பும்ஸ்கஞ்சுகஸம்யுக்த: ப்ரக்ருதிம் போக்த்ருதாம் கத:।
அவித்யாராகஸம்யுக்த: புருஷ: பரிகீர்த்தித:॥

"கலாதி பஞ்சகஞ்சுகங்களோடு கூடினவனும், அவித்தையோடிசைந்தவனும், பிரகிருதிபோக்கியத்தைப் புசித்தற்கு உத்தியுக்தனுமுள்ளவன் புருடன் எனப்படுவான்." (ப. ஆ. பும். 1, 2)

91. *பிரகிருதி எங்கிருந்து தோற்றிற்று?*

𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌕𑌲𑌾𑌤𑌃 𑌸𑍍𑌥𑍂𑌲𑌤𑌾𑌂 𑌗𑌤𑌮𑍍।
𑌗𑍁𑌣𑌾𑌦𑌿𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌜𑌾𑌤𑌂 𑌯𑌤𑍋𑌽𑌭𑌵𑌤𑍍॥

"மாயையினின்று தோற்றிக் கலையினின்று ஸ்தூலரூபத்தை அடைந்தது மூலப்பிரகிருதிதத்துவம்; இதினின்று குணதத்துவமுதற் பிருதிவியீறாகிய தத்துவசமூகம் பிறந்தது" (ப. ஆ. பும். 17, 18)

92. *பசு எத்தன்மைத்து?*

𑌪𑌶𑍁𑌃 𑌪𑌶𑍁𑌤𑍍𑌵𑌸𑌂𑌯𑍋𑌗𑌾𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌶𑍁𑌰𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌶𑌾𑌲𑍀𑌕𑌲𑌾𑌹𑍀𑌨𑍋𑌨𑌾𑌪𑍍𑌯𑌨𑍀𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑌯𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌃 𑌶𑌿𑌵𑌵𑌤𑍍𑌸𑌂𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌃॥

"மலசம்பந்தத்தினாலே ஆன்மா பசு எனப்படுவன், முத்தன் எனப்படான்; கலைகளோடு கூடாது ஞானக்கிரியைகளையுடையவனாய் ஈசனல்லாதவனாயினும், அவன் வியாபகனும், சின்மயனும், சூக்குமனுமாய்ச் சிவனைப்போலுள்ளான்." (ப. ஆ. பசு. 1, 2)

93. *பசுக்கள் எத்தனை வகைப்படும்?*

𑌪𑌶𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌾 𑌜𑍍𑌞𑍇𑌯𑌾𑌃 𑌸𑌕𑌲𑌾𑌃 𑌪𑍍𑌰𑌳𑌯𑌾𑌕𑌲𑌾𑌃 |
𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑌲𑌾𑌃................................॥

" பசுக்கள் சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என மூவகைப்படுவர்."
(ப. ஆ. பசு. 2, 3)

94. *அவருட் சகலராவார் யாவர்?*

𑌮𑌲𑌾𑌵𑌰𑍁𑌦𑍍𑌧𑌦𑍃𑌕𑍍𑌛𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍁 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌤𑍍𑌯 𑌕𑌲𑌾𑌦𑌿𑌭𑌿𑌃।
𑌭𑍋𑌗𑌾𑌯𑌕𑌰𑍍𑌮𑌸𑌂𑌬𑌦𑍍𑌧𑌾𑌃 𑌸𑌕𑌲𑌾𑌃 𑌪𑌰𑌿𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍇॥

"மலத்தினாற் றடையுண்ட ஞானக்கிரியாசத்திகளையுடையராய், அந்த ஞானக்கிரியைகளின் ஏகதேசப்படர்ச்சி காரணமாகக் கலாதிதத்துவங்களோடு கூடினவராய், போகநுகர்ச்சியின் பொருட்டுக் கன்மசம்பந்தமுடையராய் இருப்பவர் சகலர்." (ப. ஆ. பசு. 4)

95. ஆன்மாவைப் போக நுகர்ச்சியின் பொருட்டுச் செலுத்தும் கலாதி தத்துவங்கள் எவ்வாறு பெயர் பெறும்?

**பஞ்சகஞ்சுகம் எனப் பெயர் பெறும்.**

96. *இங்கே கூறப்பட்ட ஆன்மாவை மாயாவாதிகள் தம்மாயாவாதோபநிடத நெறியானே எங்ஙனம் கூறுப?*

வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படத்து D[1] ற் கண்டவாறு ஆன்மாவை நிர்க்குணப்பிரமம், கூடஸ்தப்பிரமம், சிவன், பரமசிவ முதலிய பெயர்களாற் கூறுப.

97. *மாயாவாதோபநிடதங்களினன்றிச் சைவோபநிடதங்களினும் உபப்பிருங் கணங்களினும் அங்ஙனம் கூறப்படுதல் உண்டா?*

ஆம். தத்துவப்படத்தில் D[2]ற் கண்டவாறு ஆன்மா சிவன், பரப்பிரமம், அரன், க்ஷேத்திரஞ்ஞன்முதலிய பெயர்களாற் கூறப்படுதல் காண்க.

98. *ஆன்மாவாகிய சிவன் பஞ்சகஞ்சுக முறுமென்றமைக்கு உபப்பிருங்கணப் பிரமாணம் என்னை?*

ஸர்வகர்த்ருத்வரூபா ச ஸர்வஜ்ஞத்வஸ்வரூபிணீ।
பூர்ணத்வரூபா நித்யத்வவ்யாபகத்வஸ்வரூபிணீ।
ஶிவஸ்ய ஶக்தய: பஞ்ச ஸங்குசத்ரூப பாஸுரா:।
அபி ஸங்கோசரூபேண பாந்த்யணு இதி [illegible]:।
ததா: கலாவித்யேதி ராககாலௌ நியத்யபி।
[illegible] ரூபேண [illegible] க்ரமேதிமா।
கிஞ்சித்கர்த்ருத்வ ஹேதுத்வாத் கிஞ்சித் தத்வ [illegible]।
ஸா வித்யா தாஸக்தஹேதூ ராகோ விஷயேஷு ரஞ்ஜக:।
காலோ ஹி பாவாபாவாநாம் பாஸநாபாஸநாத்மக:।
க்ருத்யம் [illegible] [illegible]।
இதம் [illegible] இதி நியாமிகா।
நியதிஸ்யா [illegible] பஶுஸஞ்ஞ:॥

"மலத்தாற் றடுக்கப்பட்ட 1. முற்றுத்தொழில், 2. முற்றறிவு, 3. பூரணத் துவம், 4. நித்தியத்துவம், 5. வியாபகத்துவம் என்னும் இவ்வைந்து சத்திகள் சிவனுக்கு (ஆன்மாவுக்குப்) பொதுவகையான் விளங்கினும், (சிறப்பு வகையான் அவை விளங்குமாறு), அவற்றிற்கியைய 1. சிறுதொழிலை விளக்குதற்குக் காரணமாகிய கலை, 2. சிற்றறிவை விளக்குதற்குக் காரணமாகிய வித்தை, 3. விடயங்களில் இச்சையைப் பிறப்பித்தற்குக் காரணமாகிய ராகம், 4. உளவும் இலவுமாம் பொருள்களின் விளக்கம் விளக்கமின்மைகளை உணர்த்தற்குக் காரணமாகிய காலம், 5. இது என்னாற் செயற்பாலது செயற்பாலதன்று என நியமனத்திற்குக் காரணமாகிய நியதி என்னும் பஞ்சகஞ்சுகரூபம் பொருந்தினமையின், அவன் பசுவாக (புருடனாக) நவுற்றனன்" எனக் கூறப்பட்டது. (சை. கை. 10: 158—166)

99. ஆன்மா சீவன் எனவும், பசு எனவும், பஞ்சகஞ்சுகன் எனவும் பெயர் பெற்று நிற்கும் நிலை தத்துவப்படத்தில் எவ்வெழுத்தினாற் குறிக்கப்பட்டது?

$E^2$ என்னும் எழுத்தினாற் குறிக்கப்பட்டது.

100. ஆன்மாவுக்குக் கலாதி பஞ்சகஞ்சுகங்களை மாயையினின்று பிறப்பித்த அனந்தர் எத்தத்துவத்தில் இருப்பவர்?

படத்திற் கண்டவாறு (33-ஆம்) தத்துவமாகிய ஈசுவரதத்துவத்தில் உள்ளவர்.

101. ஆன்மா எனப்படும் சிவன் கலாதிபஞ்சகம் வாயிலாகச் சீவனாதல் (பசுவாதல்) ஒழிந்து, வேறு பிரகாரமாகச் சீவனாதலும் (பசுவாதலுங்) கூறப்பட்டுளதா?

ஆம்.

स्वांशभूतेषु तत्त्वेषु मायातत्त्वविभेदतः।
शिवो यदा निजं रूपं परैश्वर्यपूर्वकम्।
निरुध्य मायया विश्वपदार्थान् ग्राहको भवेत्।
तदा पुरुष इत्याख्यस्तत्सृष्ट्वेत्यब्रवीच्छ्रुतिः।
अयमेव हि संसारी मायया मोहितः पशुः।
शिवाद्भिन्नं जगच्चात्मानं भिन्नमित्यपि।
ज्ञानं तस्य पशोरेव मोहाय भवति न प्रभोः।
यथैन्द्रजालिकस्यापि योगिनो न भवेद्भ्रमः।
गुरुणाज्ञापिते तस्मिन् शिवो भवति निर्गुणः॥

"சுவாங்கரூபமாயுள்ள தத்துவங்களுள்ளே மாயையினாலுண்டாகிய தத்துவ விபேதங்களினாலே "தியாதா"வாகிய சிவன் (ஆன்மா) பரமைசுவரிய பூருவமாகத் தனதுரூபத்தை மாயையினாலே மறைத்துப் பதார்த்தம் அனைத்தையும் விஷயீகரிக்கப் புகுந்தவிடத்துப் புருஷன் எனப்படுகின்றான். இதுபற்றியே (தைத்திரீயசுருதியல்லாத மாயாவாத) சுருதி *"தத்சிருஷ்டுவா" (அதைச் சிருஷ்டித்து) என்று கூறித் தொடக்கிக் காட்டிற்று; இந்தப் புருஷன் மாயையினாலே மோகிக்கப்பட்ட சம்சாரியாகிய பசுவாயினான்; இவனை விட்டு உலகம் பின்னம் என்றும், அந்தச் சிவனுக்குச் சீவன் பின்னம் என்றும் அறிகின்ற பசுவுக்கு என்றும் மோகமேயாம், (அந்த மோகம்) சிவனுக்கின்றாம். இந்திரசாலிகனுக்குப் போல யோகிக்குப் பிரமையில்லை; உபதேசத்தினாலே (மாயாவர்தோபநிடதப் பிரகாரம் சச்சிதானந்த நித்திய பரிபூரணமுதலிய ஐசுவரியமுள்ள முன்னைப்) பரமைசுவரிய தருமம் இதுவாமென்று (மாயாவாத சர்வசாரோபநிடதத்துத் தத்துவமசி மகாவாக்கியத்தின் அசிபதலட்சியார்த்தம் வாயிலாக) உபதேசிக்கப்பட்டவுடன் அறிவுசொரூபனாகிய † சிவனாய் விடுகின்றான்" (சை. கை. 10: 153—157) என்று கூறப்பட்டது.

* நிராலம்போபநிடதம். † நிர்க்குணப்பிரமம்.

102. *இந்தச் சிவன் (பிரமம்) தத்துவப்படத்தில் எவ்வாகிருதியாய் எவ்வெழுத்தினுற் குறிக்கப்படுகின்றது?*

நேத்திராகிருதியாய் இயற்றப்பட்ட D[1] என்னும் எழுத்தினுற் குறிக்கப்படுகின்றது.

103. *கண்ணுகிருதியாக இயற்றப்பட்டமைக்குக் காரணம் என்னே?*

சூரியனும் ஒளியுடைப் பதார்த்தமாக, கண்ணும் * ஒளியுடைப்பதார்த்தமாக, சூரியனிலே இருள்பற்ருது கண்ணிலே இருள்பற்றுகின்றமை போல, பரப்பிரமசிவபெருமானும் சச்சிதானந்தர் எனப்படுவாராக, (ஏகான்மவாதிகளுடைய) நிர்க்குணப்பிரமமும் சச்சிதானந்தம் எனப்படுவதாக, சச்சிதானந்தகுணத்தையுடைய சிவபெருமானிலே மாயை அவலம்பியாது, நிர்க்குணப்பிரமத்திலே மாயை அவலம்பித்தலினுல், மாயை பற்றப்பெறும் நிர்க்குணப்பிரமமானது இருள்பற்றப்பெறும் கண்ணுகிருதியாகப் படத்திலே நிருமிக்கப்பட்டது.

104. *உபாதியுற்ற சீவன் (பசு) எவ்வெழுத்தினுற் குறிக்கப்படுகின்றது?*

E[1] என்னும் எழுத்தினுற் குறிக்கப்படுகின்றது.

105. *இந்த* E[1] *எழுத்தினுற் குறிக்கப்பட்ட உபாதியுற்ற சீவனுக்கும்,* E[2] *எழுத்தினுற் குறிக்கப்பட்ட பஞ்சகஞ்சுகமுற்ற சீவனுக்கும் பேதமுண்டா?*

இடத்தினுற் பேதமுறினும் விஷயத்தினுற் பேதமின்ரும்.

106. *இதற்குப் பிரமாணம் என்னே?*

അദ്വൈതശൈവവേദാന്തം ദ്വൈതം നസഹതേ ക്വചിത്।
സർവജ്ഞഃ സർവകർത്താ ച ശിവസ്സ്വമായയാ।
സംകുചദ്രൂപ ഏവസൻ പാശസംബന്ധവിഗ്രഹഃ।
ക്ഷേത്രജ്ഞശ്ചൈവ ഹേതുത്വേന പ്രകീർത്തിതഃ।
പ്രകൃതിസ്ഥഃ പുമാനേഷ ഭുങ്ക്തേ പ്രകൃതിജാൻ ഗുണാൻ।
ഇതി സ്ഥാനദ്വയാരൂഢഃ പുമാനേഷോ ന വിശേഷകഃ॥

“*அத்துவைதசைவம் துவிதத்தை ஓரிடத்தும் சகிக்காது; சர்வஞ்ஞனும் சர்வகர்த்தாவுமாகிய* (98-ஆம் *விஞவிடையிற் கண்ட*) *சிவனே* D[1] *தனது மாயையினுலே* (101-ஆம் *விஞவிடையிற் கண்டவாறு*) *சுருங்கிய வடிவுடையவனைப் போலாகிப் புருஷனுயினுன்* (பசுவாயினுன்) E[1]; (வைதிக பாசுபதோபநிடதப்பிரகாரம்) *சர்வஞ்ஞனும் சர்வகர்த்தாவுமாகிய சிவன்*

---

* *சங்கராசாரியர்* (பிரு. 4. 3. 4) *ஆம் மந்திரபாடியத்தில்* ജ്യോതിസ്സംഹിതം ഹി ചക്ഷുഃ “*ஒளியுடைப்பொருளன்றே கண்*” *என்று வரைந்திருக்கின்ரூர்; ஆண்டுக் காண்க.*

$D^2$ கலாதி பஞ்சகத்தினுலே போக்தாவாக [98-ஆம் வினுவிடையிற் கண்டவாறு பசுவாக $E^2$ (புருடனுக)] கற்பிக்கப்பட்டான்; மூலப்பிரகிருதியின் மேலுள்ள போக்தாவாம் புருஷனே மூலப்பிரகிருதியிற் பிறந்த போகங்களைப் புசிக்கின்றுன்; (இவ்வாறு மாயாவாதோபநிடத நெறியானும் பாசுபதோபநிடதநெறியானும்) இரண்டிடத்தும் நேர்ந்த புருஷன் (பசு) விரோதமடைவானல்லன்" எனக் கைலாசசங்கிதை கூறிற்று. (சை. கை. 10: 166—169)

107. கலாதி பஞ்சகஞ்சுகமுற்ற சீவனும் உபாதியுற்ற சீவனும் ஒன்றுமாயின், கலாதி பஞ்சகஞ்சுகமுறுதற்கு முன் நின்ற சிவனுகிய ஆன்மப்பிரமமும், உபாதி புறுதற்கு முன் நின்ற சிவனுகிய ஆன்மப்பிரமமும் வேறுபடுவனவா?

வேறுபடுவனவன்று.

108. அங்ஙனமாயின் மாயாவாதிகள் தமது மதத்தை முடிந்த எல்லையாகக் கோடல் நீதியா?

அன்று: அவர்கள் பிரமம் மாயாவாதோபநிடதங்களினும், அவற்றைப் போதிக்கும் சிவபுராணங்களினும் பிருதிவிமுதன் மூலப்பிரகிருதிவரையுமுள்ள (20-ஆம் வினுவிடையிற் கண்டவாறு) முப்பத்தாறு தத்துவமுடிவிலேயே உளதென்பது பெறப்படுதலானும், அதற்குமேற் சுருதிப்பிரதிபாதிதமாகிய வித்தியாதத்துவங்கள் ஏழும் சிவதத்துவம் ஐந்தும் சேர்ந்த பன்னிரு தத்துவங்கட்கப்பால் மற்றேர் சிவப்பிரமம் வேதோபப்பிருங்கணங்கள் வாயிலாகப் பெறப்படுதலானும், சிவதத்துவத்தின்பாற்பட்ட சிவபெருமானே சிவன் எனவும், அதற்குப் பன்னிரு தத்துவங்கட்குக் கீழ் $D^1$ எழுத்தினுற் குறிக்கப்பட்டு மூலப்பிரகிருதிப்பாற்படும் சிவப்பிரமமானது (சீவ) ஆன்மா எனவும் நிச்சயிக்கப்படுதலான், அவர்கள் அதனை முடிந்த இடமாகக் கோடல் தவறும்.

109. மாயாவாதிகள் மூலப்பிரகிருதியும், சைவர்கள் மூலப்பிரகிருதியும் தத்துவப்படத்தில் எவ்வாறு குறிக்கப்பட்டன?

மாயாவாதிகள் மூலப்பிரகிருதி $F^1$ என்னும் எழுத்தினுலும், சைவர்கள் மூலப்பிரகிருதி $F^2$ என்னும் எழுத்தினுலும் குறிக்கப்பட்டன.

110. மாயாவாதிகளுடையவும் சைவர்களுடையவும் புத்தி, அகங்காரம், மனம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் தத்துவப்படத்தில் எவ்வாறு குறிக்கப்பட்டன?

மாயாவாதிகளுடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன முறையே 29, 28, 27, 26 என்னும் இலக்கங்களானும், சைவர்களுடைய மனமுதலியவை 22, 24, 21, 23 என்னும் இலக்கங்களானும் குறிக்கப்பட்டன.

111. மாயாவாதிகளுடைய ஞானேந்திரியம் ஐந்தும், வாயுக்கள் பத்தும், கன்மேந்திரியம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், மகாபூதம் ஐந்தும் தத்துவப்படத்தில் எவ்வாறு குறிக்கப்பட்டன?

அவை முறையே **$H^1$ $M^1$ $J^1$ $K^1$ $L^1$** என்னும் எழுத்துக்களாற் குறிக்கப்பட்டன.

112. சைவர்களுடைய ஞானேந்திரியம் ஐந்தும், வாயுக்கள்பத்தும், கன்மேந்திரியம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், பூதாதி ஐந்தும் எவ்வாறு தத்துவப்படத்திற் குறிக்கப்பட்டன?

அவை முறையே **$H^2$ $M^2$ $J^2$ $K^2$ $L^2$** என்பவைகளாற் குறிக்கப்பட்டன.

113. பஞ்சகஞ்சுகமுறப்போகும் ஆன்மாவும் சீவோபாதியுறப்போகும் பிரமமும் ஒன்றும் என்பது தத்துவப்படத்தில் எவ்வாறு குறிக்கப்பட்டது?

**$D^1$** எழுத்திலிருந்து **$D^2$** எழுத்துவரையும் இழுக்கப்பட்ட புள்ளிரேகையினுற் குறிக்கப்பட்டது.

114. உபாதியுற்ற பசுவும் (சீவனும்) பஞ்சகஞ்சுகமுற்ற (சீவனும்) பசுவுந் தத்துவப்படத்தில் ஒப்பாமென்று எவ்வாறு குறிக்கப்பட்டது?

**$E^1$** எழுத்திலிருந்து **$E^2$** வரையும் இழுக்கப்பட்ட புள்ளிரேகையினுற் குறிக்கப்பட்டது.

115. வைதிக சைவசாஸ்திரத்து மூலப்பிரகிருதியும் மாயாவாதசாஸ்திரத்து மூலப்பிரகிருதியும் ஒன்றுமென்பது எவ்வாறு குறிக்கப்பட்டது?

**$F^1$** எழுத்திலிருந்து **$F^2$** எழுத்துவரையும் இழுக்கப்பட்ட புள்ளிரேகையினுற் குறிக்கப்பட்டது.

116. பரப்பிரகிருதியிலுள்ள சிவதத்துவ சத்திதத்துவத்தினராகிய உமையோடு (ஆதியோடு) கூடிய சிவனும் (பதியும்), மூலப்பிரகிருதிப்பாற்பட்ட சத்துவ குணப்பிரதிவிம்பராகிய ஈசரும் (பதியும்) ஒருவரா?

இல்லை. மூலப்பிரகிருதி அநிர்வசனீயமாய்ப் பொய்ப்பட்டொழிய, அந்தச் சத்துவகுணப் பிரதிவிம்ப ஈசுவரனும் கற்பிதமாய்ப்போமென மாயாவாத சரசுவதிரகசியோபநிடதம், உருத்திரகிருதயோபநிடதம், அன்னபூர்ணியுபநிடத முதலியன கூறுதலானும், முப்பத்தாறும் தத்துவத்தினராகிய உமாசகாய சிவனர் ஈசகேநாதி முக்கியோபநிடதங்களிலே நித்தியராகக் காணப்படுகின்றாரன்றிக் கற்பிதராக யாண்டும் கூறப்படாமையானும், அவ்வாறு

நித்யோ நித்யாநாஞ்சேதநஶ்சேதநாநாம்।

(கட. 5. 13; சுவே. 6. 13)

"நித்தியப்பொருள்களுள் நித்தியர்; சேதனப்பொருள்களுட் சேதனர்" என்றும்,

அஜாத இத்யேவம் கஶ்சித்³ பீ⁴ரு: ப்ரதிபத்³யதே।

"ஒருவர் நீர் பிறவாதுள்ளீர் என்னும் இம்மொழிகளைக் கூறிப் பயமுற்று நும்மை அணுகுகின்றார்" என்றும் (சுவே. 4. 21) ற் புகழப்படுதலானும், இவ்வீசர் கற்பிதராகார் என்பது பெறப்பட்டு, அவ்விரு ஈசரும் ஒருவராகார் என்க.

117. மாயாவாத சாஸ்திரத்து மூலப்பிரகிருதி ரசோகுணப் பிரதிவிம்பஞகிய சீவனும் E[1], சைவசாஸ்திரத்து D[2] என்னும் எழுத்திஞற் குறிக்கப்பட்ட சீவான்மாவும் ஒன்றுமா?

அன்றும்,

அந்த:கரணோபாதி⁴கா: ஸர்வே ஜீவா: ।
மயி ஜீவத்வமீஶத்வம் கல்பிதம் வஸ்துதோ நஹி।

"சகல சீவர்களும் அந்தக்கரணேபாதிகர்; என்னிடத்திலே (பிரமத்திலே) சீவத்தன்மையும் ஈசுரத்தன்மையும் கற்பிக்கப்பட்டன; வாஸ்தவத்தில் இல்லை" என்று மாயாவாத மகாநாராயணேபநிடதமும் சரசுவதிரகசியோபநிடதமும் கூறலானும், D[2] எழுத்திஞற் குறிக்கப்பட்ட

நஜீவோ ம்ரியதே (சாந். 6. 11. 3)
நஜாயதே ம்ரியதே வா விபஶ்சித் (க. 2. 18)

"ஜீவான்மான்மா அழிவதில்லை" என்று சாந்தோக்கியோபநிடதமும் கடவல்லியுபநிடதமும் கூறுதலானும், அவ்விரு சீவான்மாவும் பெயரால் ஒன்றுமாயினும் விஷயத்தில் முழுமையும் வேறும் என்க.

118. மாயாவாத சாஸ்திரத்து D[1] பிரமத்தைப் பற்றிய மாயாசத்தியும், முப்பத்தாறும் முப்பத்தைந்தாம் சிவதத்துவ சத்திதத்துவத்தினராகிய சிவஞேரடு கூடிய உமாசத்தியும் ஒன்றுமா?

அன்று; D[1] எழுத்திஞற் குறிக்கப்பட்ட பிரமத்தைப் பற்றிய மாயாசத்தி அத்தியாச (பொய்ச்) சத்தியாய் முடிதலிஞலும், முப்பத்தாறும் தத்துவமுடிவிலுள்ள சிவஞரும் உமாசத்தியும் சமவாயசம்பந்தத்தினராய், அக்கினியும் சூடும்போலத் தருமதருமிபாவத்திஞல் தாதான்மியமாய் உளர் என்றும், கிரணம் சூரியனை விட்டிராதவாறுபோலச் சத்தியார் சிவபிரானைப் பிரிந்திலராம்

ஸமவேதா பராஶக்தி: ஶிவஸ்யாஸ்ய ஸ்வபா⁴வினீ।
தாதா³த்ம்யேநயோ: ஸித்³த⁴ஸம்ப³ந்தோ⁴ ஹ்யக்³நிஸூர்யயோரிவ।

சுதஸ்ஸஹூ யதீக்ஷாஜூராஸக்திஃ வராநூநீ|
வூஹயாஹி விநாயஜூாநபெரஷநவிஜ்ழெத|
ந ஶிவென விநா ஶக்தி நசஶக்யா ச விநாஶிவஃ||

என்றும் சைவபுராணோபப்பிருங்கணம் கூறுதலானும், இப்பராசத்தியார் அழிவிலராய், கற்பிதமாகிய மாயாசத்தியினின்று பெரிதும் வேறுபாடுடையராம். (சை. வா. Pt. I. 25. 32; சிவாத்துவித சைவபாஷ்யம் 1. 2. 1; சை. வா. Pt. II. 5: 11, 12)

119. மாயாவாதிகளுடைய சர்வசாரம், நிராலம்பம், தேசோவிந்து, சுகரகசியம், மகோபநிடதம், வராகம், உருத்திரகிருதயம், அன்னபூர்ணி, சாண்டில்லியம், யோகசிகை முதலிய உபநிடதங்களில் அங்கங்கே காணப்படும் மாயோபாதி, கானற்சலம், மலடிமகன், தாணுபுருஷன், வேதாளம், கந்தருவநகரம், இரச்சுசர்ப்பம், அத்தியாசம், ஆரோபம், சொப்பனவுலகு, கற்பனை முதலிய பதவழக்குக்கள் ஈசகேன முதலிய முக்கியோபநிடதங்களிற் காணப்படுகின்றனவா?

இல்லை.

120. ஈசகேநாதி உபநிடதங்களிலே மாயாவாதோபநிடதங்கள் கூறிய பிரகாரம் சீவேசுவரர் கற்பிதராய் மித்தியராய்க் கூறப்படுகின்றனரா?

இல்லை: இவ்வுபநிடதங்களிலே சீவேசுவரர் கற்பிதராகக் கூறப்படாது அத்துவா, (கார்க்கி) ஆகாசம் (சிதம்பரம்), தகராகாசம், வியோமம், பராசத்தி, சிவனருள் (தாதுப்பிரசாதம்), உமாசகாயம், அம்பிகாபதி, உமாபதி, கிருஷ்ணபிங்களம், பொன்வண்ணர், ஈசானம், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம், பிரணவம், விபூதியை உணர்த்துஞ் சிரோவிரதம் பஸ்மம் அத்தியாசிரமம் சாம்பவம் விரதம் பூதி, ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்கள், பரமசாமியம், பரமாநந்தம், பூமா (முடிவிறந்த இன்பம்), பிரமலோகம் (சிவலோகம்) முதலிய வைதிக சைவப் பத வழக்குக்கள் காணப்படுகின்றன; இவை மாயாவாதோபநிடதங்களிற் காணப்பட்டில.

121. அவ்வீசகேந முதலிய உபநிடதங்கள் யாவை?

அவை ஈச, கேந, கட, பிரசின, முண்டக, மாண்டூக்கிய, ஐதரேய, தைத்திரீய, சாந்தோக்கிய, பிருகதாரணிய, கௌஷீதகிப்பிராம்மண, மகோபநிடத, பிருகச்சாபால, சரப, ஜாபால, கைவல்லிய, காலாக்கினிருத்திர, சுவேதாசுவதர, மைத்திராயண, அதர்வசிரசு, அதர்வசிகை முதலிய உபநிடதங்களாம்.

122. அவ்விருதிறத்து உபநிடதங்களும் வேறுபடுவனவா?

ஆம்: வைஷ்ணவர்களுக்கு நாராயணம் சுபாலமுதலிய உபநிடதங்

கள் உளவாமாறு போல, மாயாவாதிகளுக்கும் சர்வசாரம் நிராலம்பமுத லிய உபநிடதங்கள் உளவாய், அவை ஈச கேநாதி உபநிடதங்களினின்று முற்றும் வேறுபாடுடையனவாம்.

123. மாயாவாதோபநிடதங்களிலே சீவேசுவரர் கற்பிதராகக் கூறப்பட்ட இருவாக்கியங்கள் எடுத்துதகரிக்க?

(*I*) கார்யோபாதிரயம் ஜீவ: காரணோபாதிரீஶ்வர:।

"சீவன் காரியோபாதிகன்; ஈசுவரன் காரணோபாதிகன்" என மாயாவாத சுகரகசியோபநிடதமும்

(*II*) யதாகாஶோ கடாகாஶோ மடாகாஶ இதீரித:। ததா
ப்ராந்தைர்த்விதா ப்ரோக்தோ ஹ்யாத்மா ஜீவேஶ்வராத்மநா॥

"ஆகாசமானது கடாகாசம் என்றும் மடாகாசம் என்றும் கூறப்படுமாறு போல, பிராந்தர்களால் ஆன்மாவானவன் சீவேசுவரரென இருபிரகாரமாகக் கூறப்படுகின்ருன்" என மாயாவாத தரிசநோபநிடதமும் கூறுகின்றன.

124. இனி ஈசகேநாதி உபநிடதங்களிற் சீவன் மித்தையாகக் கூறப்பட வில்லையென்றமைக்குப் பிரமாணம் என்னை?

(*I*) நஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்।

"அறிஞன் (ஆன்மா) பிறப்பதில்லை, இறப்பதில்லை" என்று (க. 2. 18) னும்,

(*II*) நஜீவோ ம்ரியதே।

"சீவன் இறப்பதில்லை" என்று (சாந். 6. 11. 3) னும்

(*III*) ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶாநீஶௌ।

"பிறவாதவராகிய ஞனும் அஞ்ஞனும் (சீவனும்) ஆகிய இருவரும் (முறையே) ஈசரும் *அநீசனுமாம்" என்று (சுவே. 1. 9) னும்

(*IV*) க்ஷராத்மாநாவக்ஷரம் ஹர:।

"அழியாத அக்ஷரமாயுள்ளவன் அரன் (சீவான்மா)" என்று (சுவே. 1. 10) னும்

(*V*) க்ஷரந்த்வவித்யா।

"அழியாதது வித்தை (சீவான்மா)" என்று (சுவே. 5. 1) னும், மற்றைய உபப்பிருங்கண மகோபப்பிருங்கணங்களினும் ஜீவான்மா அழியாப் பொருள் என்று கூறப்பட்டிருக்கின்றது.

---

*92-ஆம் விஞவிடையிலே பவுட்கராகமமும் இச்சுருதிக்கியைந்து அநீசன் (ஈச னல்லன்) என்று கூறினமை காண்க.

125. மாயாவாதோபநிடதங்களை ஈசகேநாதி உபநிடதங்களினுஞ் சிறந்தன வாய்க் கொண்டு அம்மாயாவாதோபநிடதப் பிரகாரம் யாவரும் பொருள் கொண்டால் என்னை ?

வியாசரருளிய வேதாந்த சூத்திரம் இந்த ஈசகேநாதி உபநிடதப்பொருள்களை ஆதாரமாகக் கொண்டு பிறந்தனவன்றி மாயாவாதோபநிடதங்களை ஆதாரமாகக்கொண்டு பிறந்தனவன்று. இவ்வுண்மை வியாசரருளிய வேதாந்தசூத்திரங்களான் உணரப்படும். ஆகலின், மாயாவாதோபநிடதங்களினும் ஈசகேநாதி உபநிடதங்களே முக்கியமாம் என்க.

126. இந்த ஈசகேநாதி உபநிடதங்கள் யாது பெயர் பெறும்?

வைதிக சைவ சிதம்பரோபநிடதங்கள் எனப்படும்.

127. வைதிகசைவம் என்றதில் வைதிகம் சைவம் என்பவற்றைத் தனித்தனி விளக்கி, அவ்வைதிகசைவம் யாதென்றும், அதனைப் பிரதிபாதிக்கும் நூல்கள் யாவை என்றும் நிரூபிக்க ?

இருக்காதி வேதோபநிடதங்களோடு சம்பந்தமுற்றது வைதிகம் எனப்படும்; சிவத்தோடு (ஆன்மா) சம்பந்தமுற்றது சைவம் எனப்படும்; இது பற்றியே "சைவஞ்சிவனுடன்சம்பந்தமாவது" என்று திருமூலரும், "இறைகளோடிசைந்தவின்பமின்பத்தோடிசைந்தவாழ்வு" என்று ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனாரும் அருளினர். இங்ஙனம் ஆன்மாச் சிவத்திலே திளைத்து இன்பமுறும் அத்தியுத்கிருஷ்ட சிவசம்பந்தப்பேரின்ப நிலையைப் "பூமா" என்னும் மொழியினால் உணர்த்துவது வேதோபநிடதமாதலின், வைதிக சைவம் எனப் பெயர் போந்தது. இந்நிலையையே, "அந்தமிலாவானந்த மணிகொடில்லைகண்டேனே" என்று ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகள் அருளிச் செய்தனர். உபநிடதங்கள் என்றது 121-ஆம் வினாவிடையிற் கண்ட ஈசகேநாதி உபநிடதங்களாம். ஆகவே, இவ்வுபநிடதங்களை ஆதாரமாய்க் கொண்டு கிளர்ந்த வியாசரருளிய பிரமசூத்திரங்களும், அவ்வுபநிடதங்களுக்கு உபப்பிருங்கணங்களாகிய இதிகாச சிவபுராணங்களும், மகோபப்பிருங்கணங்களாகிய சிவாகமங்களும் வைதிகசைவத்திறத்தனவாம் என்று நன்கு கடைப்பிடிக்க.

128. யாது காரணத்தினால் அவை வைதிகசைவ சிதம்பரோபநிடதங்கள் எனப்படும்?

சிதம்பரமானது *ஞானாகாசம் எனப் பொருட்படலானும், அந்த ஆகாசம் வியோமம் என்பன பரப்பிரகிருதியாகிய பராசத்திக்குப் பெயராமாற்றை

---

* திருச்சிற்றம்பலம்.

யஸ்ய ஸா பரமேசாநீ ஶக்தி ராகாஶ ஸம்ஜ்ஞிதா|

என்று கூர்மபுராணம் கூறுகின்றமையானும்,

வ்யோமஸம்ஜ்ஞா பராகாஷ்டாஸெயம் ஹைமவதீ மதா|

ஐமவதியார் வியோமம் எனப் பெயருடையரென்று (கூர். பூரு. 12) கூறுதலானும், இந்த ஆகாசம் வியோமம் என்னும் பராசத்திப் பிரயோகம் தைத்திரீயம், சாந்தோக்கியம், மகாநாராயணம், சுவேதாசுவதரமுதலிய உபநிடதங்களிற் காணப்படலானும், அவ்வாறு பராசத்தி விலாசப் பெயர்களாய பிரஞ்ஞானம், திருதி முதலியன ஐதரேயம், கடவல்லி, பிருகதாரணிய முதலியவைகளிற் காணப்படலானும், இவ்வுபநிடதங்கள் அநிர்வசனீய மாயாவிலாசத்தை விதந்து உரைக்கும் மாயாவாதோபநிடதங்களினின்றும் வேறு பிரித்து வைக்க வைதிகசைவ சிதம்பரவாதோபநிடதங்கள் எனப்பட்டன.

129. இவ்வுபநிடதமுடிவுகளெல்லாம் எவ்விடத்தில் நிலையுறுகின்றன?

தகராகாய மகாப்பிரணவநிலையிலே முடிவுறுகின்றன.

130. பின் சங்கராசாரியர் தமது ஆன்மப் பிரமத்தில் முற்றவும், இராமாநுசர் தமது நாராயணப்பிரமத்திலே முற்றவும் ஈசகேநாதி உபநிடதங்களுக்குப் பொருளுரைத்தமை யுக்தமன்றாம் என்பதை நிரூபணஞ் செய்க?

அவ்விருவரும் சுருதிபுராண வாகமப் பிரதிபாதிதராய்ப் பரப்பிரகிருதிப்பாலராயுள்ள உமாசமேத சிவபிரானை மறைத்து, அதோபாகத்துள்ள மூலப்பிரகிருதி பற்றி (போக்தாவையே) ஆன்மாவையே நிர்க்குணமும் சகுணமுமாகக் கொண்டு, அவைகளிலே தத்தம் மாயாவாதோபநிடதப்பொருளையும் நாராயணோபநிடதப்பொருளையும் முறையே முடித்துநின்றமையான், அவர் கொண்ட பொருள் *அமுக்கியமாம் என்க.

* A என்பானுடைய வைரிகளாகிய B C D என்பார் தங்களுள்ளே தாங்கள் ஒற்றுமையிலராயவிடத்தும், அந்த A என்பானுடைய சொந்த ஆஸ்தியாகிய நிலத்தைத் தம்முடையதாக்கத் துணிந்து, அந்நிலத்திலே A என்பானுக்குரியவென்று உணர்த்தற்கு நாட்டப்பட்டிருந்த எல்லைக் கற்களைப் பிடுங்கியும், கள்ளச் சாசனங்கள் பிறப்பித்தும், அந்நிலம் அந்த A என்பானுக்குரியதாகாதவாறு செய்தும், அந்நிலமுடையானைத் தூஷித்தும், அந்நிலத்தைத் "தம்முடைய ஆஸ்தி" "தம்முடைய ஆஸ்தி" "பொதுவாகிய ஆஸ்தி" என்று நெடுங்காலமாக எழுதியும், பேசியும் ஆண்டுவருவாராக, அதைக் கண்ட A என்பானுடைய சந்ததியாரும், பந்துக்களும், சிநேகரும், அந்த B C D என்பாருடைய வமிசத்தாரும், அவரைக் கதாநுகதநியாயமாகத் தொடர்ந்து நிற்பாரும் அந்நிலம் A என்பானுடையதன்று, B C D என்பார்க்குப் பொதுவாகிய ஆஸ்திபோலுமென்று நம்பியும் சொல்லியும் எழுதியும் வந்தகாலத்தில், அந்த A என்பவன் சந்ததியார்மேற் பற்றுடையானொருவனுக்குச் சிற்சில குறிகளால் அந்நிலம் A என்பானுக்குரியதென உண்மை புலப்பட்டவிடத்து, B C D என்பார் இன்ன இன்னவாறு மோசஞ் செய்து

131. க்ஷேத்திரம், க்ஷேத்திரஞ்ஞன், சிவன் என்பவர் யாவர்?

"(ஆன்மதத்துவம்) இருபத்துநான்கும் க்ஷேத்திரம் எனவும், இதற்கு மேலாய ஆன்மா க்ஷேத்திரஞ்ஞன் எனவும், க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞன் என்னும் இரண்டையும் தனக்கு ரூபமாகக்கொண்டவர் (முப்பத்தாறும் தத்துவத்தினராகிய) சிவனுர்"

சதுர்விம்ஶதி தத்வானி க்ஷேத்ரஸம்ஜ்ஞானி ஸூரய꞉।
ப்ராஹு꞉ க்ஷேத்ரஜ்ஞஸம்ஜ்ஞோ ஹ்யாத்மானம் புருஷர்ஷபா।

---

அந்த A என்பானுடைய நிலத்தைக் கவர்ந்துகொண்டார் என்றும், A என்பவனுடைய ஆஸ்தி என்றமைக்குப் பிரமாணசாசனம் இன்னது இன்னது என்றும் காட்டி, அந்த A என்பானுக்கே அந்நிலமுரியதென்று நீதிஸ்தலம்வாயிலாகத் திருடீகாரஞ் செய்து காட்டிவிட்டாற் போல, ஈசகேநாதி உபநிடதங்களும் பிரமசூத்திரங்களும் வைதிகசைவருடைய சொந்த ஆஸ்தியேயாக, அவ்வாஸ்திக்குரியராய், அதைப் பராமரித்தற்குப் பூரண அதிகாரிகளாயுற்ற" "முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்" எனப்படும் ஆதிசைவப்பிராமணர் திருமேனி தீண்டுதலிலே தங்காலமுழுமையும் போக்கிப் பராக்காயிருந்தாராக, மகாசைவருள்ளும் பெரும்பான்மையும் படித்தவர் இலாது அரியராய்விட, அவ்வாய்ப்பாகிய சமயமுணர்ந்த ஏகான்மவாதாசாரியரும், வைணவாசாரியரும், மத்துவாசாரியருமாகிய மூவரும் அவ்வுபநிடத பிரமசூத்திர ஆஸ்தி வைதிகசைவர்க்குரிய தன்றென்று அவ்வாஸ்திக்குரியராகிய ஆதிசைவரை அலட்சியஞ் செய்தும், பிரமகீதை முதலிய கள்ளச்சாசனங்கள் பிறப்பித்தும், உபநிடதம் பிரமசூத்திரம் என்பன "தம்முடைய" "தம்முடைய" வென்றும், "பொது உபநிடத"மென்றும் காட்டியும், நாட்டியும், எழுதியும், பேசியும், பிரசங்கித்தும் வந்தாராக, அதைக் கண்ட ஆதிசைவரது வமிசத்தாரும் சிவன்மேற் பற்றுடைய பிறரும், அவர்கள் கூறுவது மெய்போலுமென்று மனவருத்தத்தோடு தம்மீது எற்றுந் தூற்றுதல்களையுஞ் சகித்துக்கொண்டு வந்தகாலத்தில், திருவருள் உணர்த்தினமையினுற்போலும் ஏகான்மவாதாசாரியர் முதலாயினோர் உபநிடதங்களுக்கும் பிரமசூத்திரங்களுக்கும் உரைத்த உரைகள் ஒவ்வாவென்றும், அவ்வுபநிடத சூத்திராதிகளுக்குப் பொருளாக ஸ்ரீநீலகண்டசிவாசாரியரும், ஸ்ரீஅரதத்தாசாரியரும், ஸ்ரீஅப்பயதீக்ஷிதரும், ஸ்ரீவேதவியாசரும், சிவபெருமானும் முறையே அருளிய பிரமசூத்திரபாடியங்களும், சதுர்வேததாற்பரியசங்கிரகமும், சிவார்க்கமணிதீபிகையும், சிவபுராணங்களும், சிவாகமங்களும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் திருநாவுக்கரசுநாயனர் ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனர் ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளாகிய வைதிக சைவ சமயஸ்தாபனசாரியர்களும், (மெய்கண்டார் முதலிய சந்தானசாரியர்களும்) அருளிய திராவிடவேத (சித்தாந்த) சாஸ்திரங்களும் பிரமாணமாம் என்றும், அதனல் அவ்வுபநிடத பிரமசூத்திரம் வைதிகசைவர்களுடைய சொந்த ஆஸ்தியாமென்றும் எமது "சிவாத்துவித சைவபாடியத் தமிழ் மொழிபெயர்ப்பு" க்கு முதற்கண்ணே வலிய பெரிய கோபுரமாய் நின்ற உபநிடதவுபக்கிரமணிகை பிரமசூத்திரவுபக்கிரமணிகைகளில் விரித்து உலகினர் நீதிஸ்தலத்திலே திருடீகாரஞ் செய்து நிரூபித்திருக்கின்றேம். ஆண்டுக் காண்க.

க்ஷேத்ரக்ஷேத்ரவிஜ்ஞாதேவதோஸ்ய ஸ்வயம்ஹரம் ।
நகிஞ்சித்பரமார்த்திகம்யம் ஹரிஹரக்ஷிணம் ॥

(இலிங். உத். 15: 13—15)

என்னும் இலிங்கபுராண வசனத்தினுல் அறியப்படுகின்றது. இதனுல் க்ஷேத்திரத்திற் சிறந்தது ஆன்மா எனவும், இதிற் சிறந்தவர் சிவபெருமான் எனவும் பெறப்படுகின்றது.

132. *சங்கராசாரியர் இம்மூன்றனுள் எதனைப் பரமான்மா எனக் கொண்டார்?*

க்ஷேத்திரஞ்ஞனுகிய ஆன்மாவையே பரமான்மா (பரப்பிரமம்) எனக் கொண்டார். (இதற்குப் பிரமசூத்திர சங்கர பாடியமும், ஈசகேனுதி உபநிடத மாயாவாதபாடியமுமே பிரமாணம்)

133. *வைஷ்ணவர் எவரைப் பரமான்மாவாகக் கொண்டார்?*

வாசுதேவராகிய க்ஷேத்திரஞ்ஞனையே பரமான்மாவாகக் கொண்டார். இவ்வுண்மை

ஸ வாஸுதேவோ ஹரிர் க்ஷேத்ரஜ்ஞ: பரமேச்வர: ।

வைணவர் இலட்சுமிதந்திரத்திற் கண்டது.

134. *சிவன், க்ஷேத்திரஞ்ஞன், க்ஷேத்திரம் என்பன வைதிக சைவசித்தாந்தத்தில் எங்ஙனம் உரைக்கப்படும்?*

இவை முறையே பதி, பசு, பாசம் எனப்படும்.

135. *சுருதியுபப்பிருங்கணங்களிற் கண்டவாறு பாசம் எப்பெயர்களினுற் கூறப்படும்?*

தத்துவப்படத்திற் கண்டவாறு பாசம், போக்கியம், அபரப்பிரமம், அசத், க்ஷரம், ஸ்தாவரம் (அசரம்) முதலிய பெயர்களாற் கூறப்படும்.

136. *பசுவாகிய ஆன்மா எப்பெயர்களினுற் கூறப்படுவன்?*

ஆன்மா தத்துவப்படத்தில் D² எழுத்தினுற் குறிக்கப்பட்ட கண்ணுகிருதிக்குட் கண்டவாறு போக்தா, பரப்பிரமம், சத்து, அக்ஷரம், சரமுதலிய பெயர்களினுற் கூறப்படுவன்.

137. *பதி எப்பெயர்களினுற் கூறப்படுவர்?*

தத்துவப்படத்துப் பிரணவாகிருதிக்குட் கண்டவாறு பிரேரிதாரர், மகாதேவப்பிரமம், சதசத்பதி, க்ஷராக்ஷரபரர், தேவதேவர் என்றற்றொடக்கத்த பெயர்களாற் கூறப்படுவர்.

138. *ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் எதனைப் பரமான்மாவாகக் கொண்டு நின்றார்?*

இராமநுஜாசாரியர் சங்கராசாரியர் என்னும் இருவரும் க்ஷேத்திரஞ்ஞர்களாகிய வாசுதேவரையும் ஆன்மாவையும் முடிவாகப் பரமான்மா எனக்கொண்டு நிற்பாராக, ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞன் என்னும் இரண்டையும் உருவமாகக்கொண்டு முப்பத்தாறுந் தத்துவத்தினின்ற தேவதேவராகிய (சிவபெருமானையே) பரமான்மாவாகக் கொண்டு நின்றார்; இவ்வுண்மை சிவாத்துவித சைவபாடியத்து (1. 2. 1.) ற் காணப்படும்.

139. *இராமநுஜாசாரியர் சங்கராசாரியர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் என்னும் மூவரும் எவ்வெப்பாவனைகளில் முற்றிநிற்பர்?*

இராமநுஜாசாரியரும் சங்கராசாரியரும் முறையே பிரகிருதிப்பாற்பட்ட சகுண நிர்க்குணோபாசனைகளினும், ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்களினுயர்ந்த சிவதத்துவத்தின்பாற்பட்ட அத்தியாசிரம சிவபாவனையினும் முற்றிநிற்பர்.

140. *சாண்டில்லியோபநிடதாதிகளிலே சகுணம் நிர்க்குணம் என்னும் இரு பாவனைகள் மாத்திரம் கூறப்படவும், அத்தியாசிரம சிவபாவனை என மற்றொன்று கூட்டிப் பாவனை மூன்றும் எனக் கோடற்கட் பிரமாணம் என்னை?*

(121-ஆம் இலக்கத்திற்) கண்ட ஈசகேநாதியுபநிடதங்கள் அத்தியாசிரம பாசுபதோபநிடதங்களாகும். இவ்வுபநிடதங்களிற் கூறப்பட்ட பாவனை அத்தியாசிரமபாவனை எனப்படும்.

141. *பாசுபதத்தின் பரியாய நாமங்கள் யாவை?*

சிரோவிரதம், அத்தியாசிரமம், சாம்பவமுதலியவாம்.

142. *அத்தியாசிரமம் என்றது பாசுபதத்துக்குப் பெயராதற்கட் பிரமாணம் என்னை?*

வ்ரதம் பாஶுபதம் ப்ரோக்தம் அதர்வஶிரஸி ஸ்ருதம்।
வ்ரதமேதத்வ்ரகுர்வீத ததஸ்தூனைவ நைஷ்டிகஸ்ஸ்ம்ருதஃ।
ஸோऽத்யாஶ்ரமீச விஜ்ஞேயோ மஹாபாஶுபதஸ்ததா॥
(சை. வா. Pt. I. 29: 2, 83)

"வைதிகபாசுபதவிரதம் அதர்வசிரசிற் கூறப்பட்டது; இவ்விரதத்தை அநுஷ்டிப்பவனாகிய நைஷ்டிகன் அத்தியாசிரமி, மகாபாசுபதன் எனப்படுவன்" எனச் சிவபுராணவாயுசங்கிதை கூறுகின்றது.

143. *அத்தியாசிரமம் என்னும் பதம் எவ்வுபநிடதங்களிற் காணப்படுகின்றது?*

அத்யாஶ்ரமிப்ய: பரமம் பவித்ரம் என்று (சுவே. 6. 21) உம்,

அத்யாஶ்ரமஸ்த꞉ ஸகலேந்த்ரியாணி நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்ய

என்று கைவல்லியத்திலும் அத்தியாசிரமபதம் காணப்படுகின்றது.

144. முண்டகோபநிடதத்து முதற்கண்ணே காணப்படும் அபரவித்தையைக் குறிக்குங்கால் அவ்வுபநிடதத்து இறுதிக்கண்ணுள்ள சிரோவிரதம் எதனை உணர்த்தும்?

ஆதர்வணிகர் அத்தியயனஞ் செய்தற்கு அங்கமாயுள்ள அக்கினிதாரணத்தைக் குறிக்கும்.

145. பரவித்தையைக் குறிக்குங்காற் சிரோவிரதம் எப்பொருள் பயக்கும்?

பாசுபதவிரதத்தைக் குறிக்கும்.

146. இதற்குப் பிரமாணம் என்னை?

வேதாந்தசூத்திரத்து மூன்றும் அத்தியாயத்து மூன்றும் பாதத்து மூன்றும் சூத்திரத்துக்கு ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் எழுதிய பாஷ்யத்துக்குத் தீபமாய் நின்ற ஸ்ரீ அப்பயதீக்ஷிதர் கடாவிடைகளோடு முடித்துக் காட்டிய சிவார்க்கமணிதீபிகையும் பஸ்மவாதாவளியுமே பிரமாணம்.

147. சிரோவிரதம் விரஜாதீக்ஷையை உணர்த்து மென்பதற்குப் பிரமாணம் என்னை?

ஶிரோவ்ரதமிதம் ப்ரோக்தம் தேந உபநிஷத்ஸு வைதிகீ விரஜாதீக்ஷா ப்ரோக்தேயம் பாபநாஶிநீ। தந்த்ரே ஸம்ஸ்காரதீக்ஷேதி கத்யதே யஜ்ஞயாஜிநே॥

"உபநிடதங்களிலே இந்தப் பாசுபதவிரதம் சிரோவிரதம் என்று கூறப்படும்; இது பாபத்தைப் போக்கவல்ல வைதிக விரஜாதீக்ஷையாகும்; சிவாகமங்களிலே இது மந்திரசம்ஸ்காரதீக்ஷை எனப்படும்" என்னும் ஸ்காந்தபுராண சனற்குமாரசங்கிதையைச் சார்ந்த காளிகாகண்ட முப்பத்திரண்டாம் அத்தியாய ஐந்தாம் ஆறும் சுலோகங்களே பிரமாணம்.

148. சிவாகமங்களில் யாண்டாயினும் இப்பாசுபதவிரதம் கூறப்படுகின்றதா?

ஆம்.

ஜாதம் விரஜாநலஜம் பஸ்ம।

"பாசவிமோசனஞ் செய்யும் அக்கினியினின்று பெறப்பட்ட விபூதி" என அனலாகமத்திற் கூறப்பட்டது.

149. ஆதலின் ஈசகேநாதி உபநிடதங்களிற் கூறப்படும் பிரமபாவனை எவ்வுபாசனை எனப்படும்?

அத்தியாசிரமபாவனை எனப்படும்.

150. அத்தியாசிரமம் என்றதற்குப் பரமஹம்சசந்நியாசி எனவும், சிரோவிரதம் என்றதற்கு அக்கினிதாரணம் எனவும் சங்கராசாரியர் பொருள்கொண்டவாறு கொண்டால் என்னை?

இதிஹாஸபுராணாப்⁴யாம் வேத³ம் ஸமுபப்³ரும்ஹயேத்।
பி³பே⁴த்யல்பஶ்ருதாத்³வேதோ³ மாமயம் ப்ரஹரிஷ்யதி॥
(மகா. ஆதி. 1. 264, 265)

"வேதத்தை இதிகாசபுராண வாயிலாகப் பொருட்படுத்துக; (அங்ஙனஞ் செய்யாத) சிற்றறிவுடையானொருவன் தன்னைக் கொன்றுவிடுவனென வேதம் அஞ்சுகின்றது" என்று மகாபாரதத்திற் கூறப்பட்டமையான், இதிகாசபுராணத்தைத் தழுவாது அவர் எழுதிய பொருள் ஒவ்வாது.

151. இராமாநுஜாசாரியர் சங்கராசாரியர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் என்னும் மூவருள் எவர் முற்பட்டவர்?

ஸ்ரீநீலகண்டசிவாசாரியரே இம்மூவருள்ளும் முற்பட்டவர், அவர்க்குப் பிற்பட்டவர் சங்கராசாரியர், அவர்க்குப் பிற்பட்டவர் இராமாநுஜாசாரியர் என்க.

152. சங்கராசாரியருக்கு முற்பட்டவர் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் என்பதற்குப் பிரமாணம் என்னை?

சிவாத்துவித சைவபாடியத் தமிழ் மொழிபெயர்ப்பின் முதற்கட் போந்த 12-ஆம் பக்கந்தொடுத்து 16-ஆம் பக்கம் வரையும் எழுதப்பட்ட பிரமாணம் பார்க்க.

153. பாவனை எத்தனை வகைப்படும்?

த்ரிவிதா⁴ம் பா⁴வநாம் ப்³ரஹ்ம ப்ரோச்யமாநாம் நிபோ³த⁴மே।
ஏகா மத்³விஷயா தத்ர த்³விதீயாவ்யக்தஸம்ஶ்ரயா।
அந்யா ச பா⁴வநா ப்³ராஹ்மீ விஜ்ஞேயா ஸா கு³ணாதிகா।
ஆஸாமந்யதமாமாய பா⁴வநாம் பா⁴வயேத்³பு³த⁴:।
அஶக்த: ஸம்ஶ்ரயேதா³த்³யாமித்யேஷா வைதி³கீ ஶ்ருதி:॥

இந்திரத்தியும்நர் கூர்மராம் நாராயணரை நோக்கி, "சுவாமீ! மூவித பாவனையையும் எனக்கு அருளுக" என்று வேண்ட, நாராயணர் "முதலாவது பாவனை என் விஷயம் (சகுணவிஷயம்), இரண்டாவது பாவனை அவ்வியக்தம் (நிர்க்குணம்) பற்றியது, மூன்றாவது பாவனை முக்குணங்களைக் கடந்த பிராமிபாவனை, இம்மூன்று பாவனைகளுள் ஒன்றை அறிஞன் பாவிக்க; அசக்தன் (சகுணபாவனையாகிய) முதலாவது பாவனையையே ஆசிரயிக்க என வைதிகசுருதி கூறிற்று" என்று கூறினர். (கூர். பூர். 1)

154. ஈண்டுக் கூர்மராகிய நாராயணர் சகுணபாவனை யாதென்று கூறினர்?

சகுணபாவனை தமது விஷயம் என்றார்.

155. சகுணபாவனை நாராயணர் ஒழிந்து மற்றியார்பாலதாகும்?

பிரம உருத்திரருடைய வழிபாடும் சகுணத்தின் பாலதாம். "அசக்தன் உருத்திரரையும் நாராயணரையும் பிரமாவையும் வழிபடுக"

அருத்ராப்யர்ச்சேதா3த2வா ஹரம் விஷ்ணும் ப்3ரஹ்மாணமர்ச்சயேத்|

எனக் கூர்மபுராணத்து இறுதி அத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

156. அக்ஷரபாவனை (நிர்க்குணபாவனை) யாது?

பராத்பரதரதத்த்வம் பரம் ப்3ரஹ்மைகமவ்யயம்|
நித்யாநந்த3மயம் ஜ்யோதிரக்ஷரம் தமஸ: பரம் |
ஐஶ்வர்யம் தஸ்ய யந்நித்யம் விபூ4திரிதி கீ3யதே|
கார்யம் ஜக3த3தா2வ்யக்தம் காரணம் ஶுத்3த4மக்ஷரம்|
அஹம் ஹி ஸர்வபூ4தாநாமந்தர்யாமீஶ்வர: பர:|
ஸர்க3ஸ்தி2த்யந்தகர்த்ருத்வம் ப்ரவ்ருத்திர்மம கீ3யதே |
ஏதத்3விஜ்ஞாய பா4வேந யதா2வத3கி2லம் த்3விஜ|
ததஸ்த்வம் கர்மயோகே3ந ஶாஶ்வதம் ஸம்யக3ர்சய||

"மூலப்பிரகிருதிக்கு (தமசுக்கு) மேலாயும், சோதியாயும், அக்ஷரமாயும், சச்சிதாநந்தமாயும், அவ்வியக்தமாயும், பரத்துக்குமேலதிபரமாயும், பரதத்துவமாயுமுள்ளது பிரமம்; அதின் ஐசுவரியம் விபூதி எனப்படும்; காரியம் உலகம்; காரணம் சுத்தமும் அக்ஷரமுமாகிய அவ்வியக்தம்; சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாகிய பரமேசுவரன் நான்; சிருட்டி திதி சங்கார கிருத்தியம் என்னுடையதாகும்; (குருவுபதேசத்தினலே) இவ்வாய்மையை உள்ளவாறு அறிந்து கன்மயோகத்திஞலே எக்காலமும் வழிபடுக" என்று கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில் இரண்டாவதுபாவனையாகிய நிர்க்குணோபாசனை கூறப்பட்டது. (கூர். பூர். 1)

157. இந்நிர்க்குணோபாசனை மற்றெப்பெயர்களாற் கூறப்படும்?

அக்ஷரபாவனையெனவும், நிர்ப்பீஜயோகமெனவும், அபாவயோகமெனவும், சாங்கியயோகமெனவும், அவ்வியக்தபாவனையெனவும், கர்மயோகமெனவும் படும்.

158. இதுதான் மாயாவாதிகளுடைய நிர்க்குணோபாசனை என்று வேறு பிரமாணங்களால் திருஷ்டாந்தஞ் செய்க?

விகல்பரஹிதம் தத்த்வம் பரித்யஜ்ய யதே|

"விகற்பம் ஒழிந்த தத்துவமே பரம் எனப்படும்" எனவும்,

ஸ்ரீவொயஷாநிஜரூஹும் வரமெஸ்வய்ய வஹிவகஷு।

"ஆன்மா பரமைசுவரிய பூருவமாகத் தனது ரூபத்தை" எனவும் சைவ புராண கைலாசசங்கிதையினும்,

வஷ்ஷிவெஷவிதாஸ ஷாக்ஷிணம் வுக்ருகெ: வாஷ ।

ஹொக்தாரக்ஷரம்வுஜும் ஸவதுஸவஷ்யிஷு।

சூதாயம் கெவவு ஷ்வஷுஸஷஷஸநாதந:।

கஷ்ஹி ஸவதாஜுரஷாக்ஷா ஷீநாதுஷஸ: வர:॥

"போக்தாவும் அக்ஷரமும் புத்தமுமாயுள்ள சாட்சியை அறிஞர்கள் பிரகிருதிக்கு மேலுளதாகச் சொல்லுகின்றார்; இவ்வான்மா தனியாயும், சுவச்சமாயும், சுத்தமாயும், சூட்சுமமாயும், சர்வாந்தரியாமியாயும், சின்மாத்திரமாயும், தமசுக்கு மேலாயும் உள்ளது" எனக் கூர்மபுராணத்துச் சாங்கியயோகம் உரைத்த அத்தியாயத்தினும்,

ஸவக்ஷெத்ரஷ்நஷ்யஹெதகெவந யதாவுகாஶதெ சூதா தஷாஜய்யதாீதுஷ்யெத।

"அகம் என்னும் பதத்தினற் குறிக்கப்பட்ட ஆன்மா மணிகளின் நூல் போலத் தொடர்ச்சியாய்ச் சர்வசரீரங்களுக்குள்ளிருந்து நியாமகனைப் பிரகாசிக்குங்கால் அந்தரியாமி எனப்படுவன்" எனச் சர்வசாரோபநிடதத்தினும்,

அஹமெவஹிஶுஜாதா அஹமெவஹுஹமஸதா।

அஹமெவஹிநித்யாதா அஹமெவஹிதஸவர:।

அஹமெவாஜய்யதாீவாஹமெவபரமெஶ்வர:।

ஸவஹுதவுகாரெண ஸாவயிதவா ஸதாஸ்வயஷு॥

"நானே சுத்தாத்துமா, நானே எப்போதும் நான், நான்தான் நித்தியாத்துமா, நான்தான் தற்பரன், நான்தான் அந்தரியாமி, நானே பரமேசுவரன் என இந்தப் பிரகாரம் (நிருபசரிதமாய்) எக்காலமும் பாவிக்க" என ரிபுகீதையினுங் கூறப்படலான், மேலே (156-ஆம்) இலக்கத்துக் குறித்த பாவனை நிர்க்குணோபாசனையே என வலியுறுத்தப்பட்டது. (சிவரகசியம், அம்சம் 6, அத்தியாயம். 46)

159. மூன்றாவது பாவனை யாது?

தீக்ஷாவதாஷிஷஸஹம் நிதயெஷாநிஷஶிரஹ:।

ஸநஸஸவகதாணி வரம் வெராஶ்ய ரஶிக:।

சூதநாதநஙீக்ஷ ஷாதநெ வாவிஷம் ஜஶ:।

ஸம்ஸ்தஸங்கோ வ்ரஜேத் ஹாவநாகோஸ்ரம...

"புத்திராதியரிடத்துள்ள பற்றை அறுத்து நிர்த்துவந்துவனுய், நிஷ்பரிக்கிரகனுய், சர்வகன்மங்களுமொழிந்து மிக்க வைராக்கியமுடையனுய், பரமைசுவரியம் பூண்டவன் பாசுபதயோகநெறியானே, ஆன்மாவிலே (அருட்) பராசத்தியோடு பரமான்மாவாகிய சிவபிரானைக் கண்டு, பின்னர்த் தனக்குப் பரமான்மாவாயுள்ளவரிலே உலகம் எல்லாம் இருப்பனவாகநோக்கி, இங்ஙனம் அக்ஷரபாவனை பூருவமாக (நிர்க்குணோபாசனை வாயிலாக) எய்தும் இந்த இறுதியாகிய பிராமிபாவனையை அடைதலாம் பரமயோகத்தினுலே ஏகராகிய சிவபிரானுரைக் காண்கின்றான்" எனக் கூர்மபுராணம் மூன்றாவது பாவனையை விதந்து கூறிற்று. (கூர். பூர். 1)

160. பராசத்தியோடு கூடிய இப்பாவனை மற்றெவ்வாறு திருடிகாரஞ் செய்யப்படும்?

"சிரௌதஸ்மார்த்தக் கிரியையினுலாவது, புதல்வனையுடைமையினுலாவது, பொருளுடைமையினுலாவது, அப்பிரமவித்தை கிட்டாது; பின் இம்மூன்றையும் பரித்தியாகஞ் செய்தலினுற் சிவத்துவம் அடைந்தார் பெரியோர்"

...

என உமையாரோடு கூடிய சிவனுரது பாவனை உரைக்கும் அத்தியாசிரம கைவல்லியோபநிடதம் கூறுமாற்றானும், "அநேக சென்மங்களிலே முற்றிய வைதிக ஸ்மார்த்த கருமங்களையுடையராய் அதனுற் பற்றற்றவராய் அறிவுடையராய் எய்தினோர்க்கே சிவபிரான் அருள்பாலிக்கின்றார்"

...

எனப் பாசுபதயோகம் கூறுமிடத்து, வாயுசம்மிதை கூறுமாற்றானும் உணர்க. (சை. வா. Pt. II. 8: 29) "ஆன்மாவில் ஆன்மாவை" என்றவிடத்து, ஏழாம் வேற்றுமையில் நின்ற "ஆன்மா" சீவான்மாவின்மேலும், இரண்டாம் வேற்றுமையில் நின்ற ஆன்மா (சிற்சத்தியோடியைந்த) பரமான்மாவின் மேலுமாயிற்று;

ஶிவஶக்தி ஸமாயோகஃ பரமாத்மேதி...

"சிவமும் சத்தியும் இசைந்ததே பரமான்மா என நிச்சயிக்கப்படும்" என்றும், (சை. கை. 10: 134)

...

"சைதன்னியம் என்பது சர்வஞ்ஞத்துவ சர்வகர்த்திருத்துவமாகிய சுவாதந்திரியம்; அதனை எவர் இயல்பாகவுடையரோ அவர் ஆன்மா எனக் கூறப்பட்டனர்" என்றும் கைலாசசங்கிதை கூறுதலானும், (சை. கை. 10: 126)

நாநயோர்ந்தரம் வித்யாத்ஸம்ஸ்ரயசந்த்ரிகயோரிவ|
அபேதாநவபாஸ: ஸ்யாத்ஸ்யந்ஸ்ரயயாவந்த்ரிகயாவிநா|
நஹாதிவித்யா பேதோ நாஸவிதயாஸக்த்யாவிநாஸிவ:|
ரஸ்மியாஹி விநாயத்ர ஸூர்யோநாஸ்தி நவித்யதே|
ஏவம் பரஸ்பராபேக்ஷாஸக்தி ஸக்திமதோ: ஸ்திதி:|
நவமேதஸ்ய பராஸக்தி ஸ்ஸிவஸ்ய ஸமவாயிநீ|
தாதாத்ம்யமநயோர்நித்யம் வஹ்நிதாஹகயோரிவ|
தஸ்மாத்பாதஸ்மிந்யுக்ஸவாஸ பராஸக்தி: பராத்மந:||

"சந்திரனும் சந்திரிகையும் போலச் சிவனுர்க்கும் சத்தியார்க்கும் பேதம் இல்லை; சந்திரிகையின்றிச் சந்திரன் பிரகாசியாததுபோலச் சிவனுர் சத்தியைவிட்டு விளங்கார்; கிரணத்தை விட்டுச் சூரியன் இல்லையாமாறுபோலச் சத்திக்கும் சத்திமாஞகிய சிவபிரானுக்கும் பரஸ்பரம் அபேக்ஷா ஸ்திதி உளது; பராசத்தியார் சிவனுர்க்குச் சமவாயசம்பந்தத்தோடுற்றனர்; அக்கினியும் சூடும்போலப் பராசத்தியும் பரமான்மாவும் குணகுணித்தன்மையினர்" என்று வாயுசங்கிதை கூறலானும் (சை. வா. Pt. II. 5: 9—12); (சி. க. பா. 1. 2. 1),

தமாத்மஸ்தம் யேநுபஸ்யந்தி தீராஸ்தேஷாம் ஸுகம் ஸாஸ்வதம் நேதரேஷாம்|

என்னும் கடவல்லி சுவேதாசுவதர அதர்வசிரோபநிடதங்களிலே காணப்படும் மந்திரத்துக்கு வேதவியாசர் "பராசத்தியோடுகூடச் சிவத்தைச் சிந்தையிற் காண்கின்றவர்க்கு நித்தியமாகிய பேரின்பம், மற்ருேர்க்கின்ரும்" (க. 5: 12, 13; சுவே. 6. 12; சி. 5)

தமாத்மஸ்தம் ஸஹதயாஸக்த்யா ஹ்ருதி பஸ்யந்தியேஸிவம்|
தேஷாம் ஸாஸ்வதிகீஸாந்திர்நேதரேஷாமிதிஸ்ருதி:||

என்று வாயுசங்கிதாவுபப்பிருங்கணம் கூறினமையானும், மூன்ருவது பாவனைப்பொருள் அருட் பராசத்தியோடுகூடிய சிவபாவனையில் முற்றியதெனவலியுறுத்தப்படும். (சை. வா. Pt. II. 8: 20)

161. இம்மூன்று பாவனையும் மற்றெவ்வாறு கூறப்படும்?

அவை முறையே பௌதிகயோகம், சாங்கியயோகம், அத்தியாசிரம யோகம் என்று கூறப்படும்.

162. இங்ஙனம் மூவகைப்படுத்துக் கூறுதற்கட் பிரமாணம் என்னை ?

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

“யோகியாவான் பௌதிகயோகியும், சாங்கியயோகியும், அத்தியாசிரமயோகியும் என மூவகைப்படுவன் என்றும், (கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில் உபதேசிக்கப்பட்ட) நாராயண விஷயமாகிய முதலாவது பாவனை பௌதிகயோகம் என்றும், அவ்வியக்த (அக்ஷர) பாவனை சாங்கியயோகம் (நிர்க்குணயோகம்) என்றும், மூன்ருவதாகிய இறுதிப் பிராமிபாவனை (பரமேசுவரபாவனை) அத்தியாசிரமயோகம்” என்றும் கூறிய கூர்மபுராண இரண்டாம் அத்தியாயசுலோகங்களே பிரமாணம்.

163. சாங்கியம் என்பது நிரீச்சுவரசாங்கியத்தின் மேலதேயாக, நிர்க்குணேபாசனை எனப் பொருள்கோடற்கட் பிரமாணம் என்னை ?

“சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வைதிகம், பாசுபதம் என்பன வெவ்வேறு வகைப்பட்ட மதங்கள்”

[illegible]
[illegible]

(மகாபா. சாந்திபருவம். 349: 63)

என மகாபாரதத்திலே கூறப்பட்ட சாங்கியம் நிரீச்சுவரசாங்கியமேயாக, “சாங்கியம் வேதாந்தவிசாரம், யோகம் நிர்க்குணப் பிரமோபாசனை”

[illegible]
[illegible]

என்று சித்தாந்தலேசசங்கிரகமும்,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(கூர். உத். உ.)

“அஞ்ஞானத்திஞலே உலகம் மூடுண்டது; அதனுல் அறிவுமயங்குகின்றது; இந்த அறிவு நிர்மலமும் சூக்குமமும் நிர்விகற்பமும் அவ்வியயமுமாயுள்ளது, இந்த அறிவை ஒழிந்து மற்றெல்லாம் அஞ்ஞானம்; இவ்வாறு உங்களுக்குக் கூறப்பட்ட நிர்க்குணஞானமே (சாங்கிய ஞானமே) உத்தமமான

ஞானம்" என்று கூர்மபுராணத்து ஈசுரகீதைச்சாங்கியயோகாத்தியாயமும் கூறுதலே சாங்கியயோகம் நிர்க்குணோபாசனையின் மேற்றென்றமைக்குப் பிரமாணம். ஆகவே, மகாபாரதத்திற் கூறப்பட்ட சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வைதிகம், பாசுபதம் என்னும் ஐந்தும் ஒன்றுக்கொன்று உயர்ச்சியுடையனவாம் என்றும், பாஞ்சராத்திரம் சகுணத்தின்பாலும், வைதிகம் நிர்க்குணோபாசனையின்பாலும், பாசுபதம் அத்தியாசிரமபாவனையின்பாலும் நின்றவாறு உணர்க. இதுபற்றியே, இலிங்கபுராணம் பாசுபத யோகத்தை மோக்ஷத்துக்கு வாய்ந்த அத்தியாசிரமம்

வைவ০வாஶுவ௰০யொ௱০ யொ௵ஹ்யுவ நுஉ ஜுவி।
ஸ௲௱ஜிவிஜ০ஜெய০ வுகுமெகெநவஹுெ॥

என்று கூறிற்று (இலிங். உத். 55: 26, 27). கூர்மபுராணத்துப் பதினாறும் அத்தியாயத்திற் காபாலம், லாகுளம், வாமம், பைரவம் என்பவற்றோடு படிக்கப்பட்ட பாசுபதம் வைதிக பாசுபதத்தின் வேறாகிய அவைதிகபாசுபதம் எனவும், "இரகசியத்தினும் இரகசியமாய்ச் சூட்சுமமாய் முக்தியின் பொருட்டு வேதசாரமாயுமுள்ள சிரௌதபாசுபதம் சிவனால் ஆக்கப்பட்டது எனவும், வேதாப்பியாசத்தில் விருப்பமுடைய அறிஞன் பசுபதியாகிய சிவபிரானைத் தியானிக்க எனவும், இந்தப் பாசுபதயோகம் முமூட்சுக்களாற் சேவிக்கற்பாலதொன்றும் எனவும், வேத விருத்தமாய்ச் சிவனால் இயற்றப்பட்ட வாமம், பாசுபதம், சோமம், லாகுளம், பைரவம் என்னும் வேதபாகிய சமயங்கள் முமூட்சுக்களாற் சேவிக்கப்பாலனவன்றும்"

நிஜுவ০ஹியோவவுவ০ ஶ்ரௌ௰০வாஶுவ௰০ ஶுஹு।
நுஹுா ஹுவ০ ஸூக்ஷ்০ வெஜஸார০ விமுக்தயெ।
வெஜாஹுாஸாதொவிஜாநீ ஐயாயெக வஶுவதிஂஶிவ০।
வைஷவாஶுவதொயொ௱ ஸெவநீயொமுமுக்ஷுஹிঃ।
ஸநூாநிசெவ ஶாஸ்ராணிஶொகெஜவஸூநீ ஶோஹநாநிதா।
வெஜவாஜவிருஜாநிமெவகயிதாநிதா।
வா௱০வாஶுவ௰০ ஸொ௱০ லாகுஜ০ஞெவ ஹெரவ০।
அஸெவ்யமெதக கயித০ வெஜவாஹ்য০ தயெதர০॥

எனவும் வைதிகபாசுபதம் அவைதிகபாசுபதம் என்னும் இரண்டும் கூர்மபுராணவுத்தரபாகத்து முப்பத்தெட்டாம் அத்தியாயத்திலே பிரித்து விளக்கப்பட்டன.

164. வைதிக பாசுபத விரதம் எவ்வியல்பிற்று?

அதர்வசிரசிலே கூறப்பட்ட பாசுபதவிரதம் சித்திரா பௌர்ணமி முதலியவாகக் குறிக்கப்பட்ட புண்ணியகாலங்களிலே சிவாலயமுதலிய

புண்ணியஸ்தானங்களிலே செய்யப்படல்வேண்டும். பௌர்ணைக்கு முற்பட்ட திரயோதசியில் முமூட்சுவானவன் ஸ்நானஞ் செய்து நித்தியகருமமுடித்து, குருவை வழிபட்டுப் பூசித்து, வெள்ளைவஸ்திரம் தரித்து, விபூதியிட்டு, தர்ப்பையின்மீது கிழக்கு நோக்கியேனும் வடக்குநோக்கி யேனுமிருந்து, கையிலே தருப்பைகொண்டு பிராணுயாமஞ்செய்து, சிவபிரானையும் சிவபிராட்டியாரையும் மனசினுலே தியானித்து, சீவபரியந்தமேனும், பன்னிரு வருஷமேனும், ஆறு வருஷமேனும், மூன்று வருஷமேனும், ஒரு வருஷமேனும், ஆறு மாசமேனும், மூன்று மாசமேனும், ஒரு மாசமேனும், பன்னிரு தினமேனும், ஆறு தினமேனும், மூன்று தினமேனும், ஒரு தினமேனும் இவ்விரதத்தை அநுட்டிப்பதாகச் சங்கற்பித்து, நெய் சமித்து அன்னம் என்பவைகொண்டு மூலமந்திரமுச்சரித்து ஆகுதி செய்து, அதன்பின்னர்ப் பஞ்சபூத முதல் நாத தத்துவாந்தம் வரையுமுள்ள தத்துவங்கள் என் சரீரத்திலே சுத்தமாகுக என விரஜாமந்திரங்களினுல் ஓமித்து, கையிற் கோமயத்தை எடுத்துப் பிண்டஞ் செய்து, அதனை அபிமந்திரித்து, அக்கினியில் வைத்து, தான் அவிசுண்டு, அதனை ஓர்தினம் காத்து, சதுர்த்தசி காலையின் முதற்றினத்திற் செய்தமை போலச் செய்து, நிராகாரனுய் அத்தினத்தைக் கழித்து, பின்னர்ப் பூரணையிற் கிரியைகளைமுடித்து, ஓமத்தின் இறுதியிலே உருத்திராக்கினியை ஒடுக்கி, விபூதியைச் சாவதானமாயெடுத்து, சடையுடையனுயேனும், முண்டிதனுயேனும், ஏகசடையுடையனுயேனும் ஸ்நானஞ் செய்து, இலச்சை ஒழிந்தவனுயின் திகம்பரனுயேனும், காஷாயவஸ்திரம் தரித்தவனுயேனும், சர்மாம்பரமுடையனுயேனும், கந்தை வஸ்திரமுடையனுயேனும், ஒற்றை வஸ்திரமுடையனுயேனும், வற்கலையுடையனுயேனும், தண்டமுடையனுயேனும், மேகலையுடையனுயேனுமாகி, பாதசுத்திசெய்து, ஆசமித்து, சகளீகரணஞ்செய்து, விரசாக்கினியிலுண்டாகிய விபூதியை "அக்கிரிதி பஸ்ம" என்றற் றொடக்கத்த ஆறு அதர்வண மந்திரங்கொண்டு தன் அங்கங்களிற் பூசி, பின் பாதாதி கேசாந்தம் பூசி, பின்னர்க் கிரமமாக விபூதியை எடுத்துப் பிரணவத்தையேனும் சிவபஞ்சாக்கரத்தையேனும் உரைத்துச் சர்வாங்கோத்தூளனஞ் செய்து, அதன்பின்னர்த் "திரியாயுஷம்" என்றற் றொடக்கத்த மந்திரத்தை உச்சரித்துத் திரிபுண்டரத்தை இட்டு, சிவபாவனையுற்றுச் சிவயோகம் புரிந்து, சிவலிங்கார்ச்சனை செய்க; விதிப்படி அங்ஙனம் மகாதேவரை அர்ச்சித்து, செபித்து, பின்னர்க் குருவையும் விரதிகளையும் பூசித்து, சிவபத்தர்முதலாயினேரையும் தீனர்களையும் போசனுதிகளினுலே திருப்திசெய்வித்து, தான் பலமூலங்களையேனும் பாலையேனும் உண்க; இன்றேல் பிச்சையெடுத்து ஓர் போது நத்தத்திலே போசனஞ் செய்து, எப்பொழுதும் வெறுந்தரையிற் படுக்கப் பயில்க; இன்றேல் விபூதியிற் படுக்க; இன்றேல் திருணத்திலேனும், கந்தைத்துணியிலேனும், மான்

ரேலிலேனும் படிக்க. இவற்றின் விரிவை யெல்லாம் சிவபுராண வாயுசம்மிதை பூர்வபாகத்து இருபத்தொன்பதாம் அத்தியாயத்திற் காண்க.

165. *இந்த விரதம் (தீக்ஷை) யாரால் அநுஷ்டிக்கப்பட்டது?*

"பசுவின் பாசத்தை நீக்கும்பொருட்டு இருடிகளால் (இந்தத் தீக்ஷை) அநுட்டிக்கப்பட்டது; விஷ்ணு, பிரமா, தேவர்கள், மார்க்கண்டேயர், ததீசி, துருவாசர், கௌதமர், ஜாபாலர், ஆதர்வணர், காத்தியாயனர், அகத்தியர், ஸ்கந்தர், கணபதி, பிருங்கி முதலியோராலும் அநுஷ்டிக்கப்பட்டது, தண்டகாரணியத்திலே இராமர் அகத்தியராலும், கிருஷ்ணர் உபமன்னியுவாலும் விரஜாதீக்ஷை எனப்படும் பாசுபததீக்ஷை செயப்பெற்றார்; எவன் பாசுபதவிரதமுற்றுச் சிவபெருமானைப் பூசிக்கின்றானோ, அவன் அந்த ஜன்மத்திற்றானே சிவஞானியாய் முத்தியடைகின்றான்"

பஶுபாஶவிமோக்ஷாய சீர்ணம் தேவைர்முநிபி: புரா|
விஷ்ணுநா ப்ரஹ்மணா சைவ தேவைர்மார்கண்டேயததீசிநா|
துர்வாஸஸா கௌதமேந ஜாபால்யாதர்வணேந ஹி|
காத்யாயநேந முநிநா ததாகஸ்த்யேந ஸத்தம|
ஶ்ரியா ஸ்கந்தேந கணபேநைவ நந்திநா ப்ருங்கிணா ததா|
ராமேண சாப்யகஸ்த்யாச்ச தண்டகாநநே|
உபமந்யோஸ்து க்ருஷ்ணாய தீக்ஷா தத்தாநுகாரஹ|
க்ருத்வா து விரஜாதீக்ஷாம் ய: பூஜயதி ஶங்கரம்|
தேநைவ ஜந்மநா முக்த: ஶிவஜ்ஞாநீ ஶிவம் வ்ரஜேத்||

என ஸ்ரீஸ்காந்தபுராணசனற்குமாரசங்கிதையைச் சார்ந்த காளிகாகண்டம் கூறுகின்றது.

166. *தண்டகாரணியத்தில் அகத்தியர் இராமருக்குத் தீக்ஷை புரிந்தமை எவ்வாறு?*

"அகத்தியர் இராமரை நோக்கி, பிரமவிஷ்ணு இந்திராதியராற் செயிக்கவியலாத மகாவரப்பிரசாதமுடைய இராவணனைச் சிவபெருமானருளின்றி, நீ எவ்வாறு யுத்தத்திற் செயிப்பாய்? ஆகலின், நீ யான் உபதேசிக்கும் விரஜாதீக்ஷைபெற்று, மானிடனாகிய நீ திவ்யதேஜோரூபமடைந்து, பின்னர்ச் சத்துருக்களைச் சங்கரித்துச் சகல போகங்களோடும் பூமண்டலத்திருந்து பரிபாலனஞ் செய்து, சிவசாயுச்சியமடைவை என்று கூற, இராமர் மிகவும் மகிழ்ந்து அகத்தியரைப் பணிந்து துதித்து, அம்முனிவரை நோக்கி "முனிவரே, நான் எண்ணிய எண்ணம் கைகூடப்பெற்றேன்; சமுத்திரநீரையெல்லாம் கையிலடக்கிய நீவிர் அடியேற்கனுக்கிரகஞ் செய்யின், அடியேன் அடைவதற்கு அசாத்தியமாவது யாது? ஆகலின் அன்புகூர்ந்து விரஜா

தீக்ஷையருளுக என வேண்டினர். அகத்தியர் சுக்கிலபக்ஷத்துச் சதுர்த்தசியிலாவது, அட்டமியிலாவது, ஏகாதசியிலாவது, சோமவாரத்திலாவது, திருவாதிரையிலாவது, விரஜாதீக்ஷை ஆரம்பிக்கற்பாற்று; சாசுவதராயும், பராத்பரராயும், பிரமா விஷ்ணு உருத்திரர்களுக்குக் காரணராயுமுள்ள சிவபெருமானை, (பூதசுத்திசெய்த பின்னர்த்) துவாதசாந்தத்திருத்தி, அமிர்தனுப் பாசுபதவிரதம் அநுட்டித்தல் வேண்டும். பிராதக்காலத்தில் இப்பாசுபதவிரதம் அநுட்டிப்பதாகச் சங்கற்பஞ் செய்து, தனது வேதசாகைக்கிசைய அக்கினிப்பிரதிட்டை செய்து, ஆகாரமின்றிச் சுத்தனுய் ஸ்நானஞ் செய்து, வெள்ளைவஸ்திரந் தரித்து, யஞ்ஞசூத்திரம் சுவேதபுட்பம் விபூதி என்பன தரித்து, மனசைப் புறத்துச் செல்லவொட்டாது நிறுத்தி விரஜாமந்திரமுச்சரித்து, சமித்துக்களையும் நெய்யையும் அன்னத்தையும் வெவ்வேருக ஓமஞ்செய்து, "யாதே அக்நே" என்னும் மந்திரத்தால் ஆன்மாவில், அக்கினியை அமைத்து "அக்நிரித்தி" யாதி மந்திரங்களையுச்சரித்து, விபூதியை எடுத்துச் சரீரத்திற்றரித்துக்கொள்க. இங்ஙனம் தரிக்கும் மகாவித்துவானுகிய பிராமணன் மகாபாதகங்களினின்று சந்தேகமின்றி வீடுறுகின்றுன். அக்கினியின் வீரியம் விபூதியாதலான், அதனைத் தரித்தவனும் மகாவீரியவானே; விபூதி ஸ்நானத்திற் பிரியமுள்ளவனும், விபூதியிற் படுப்பவனும், இந்திரியநிக்கிரகமுடையனுயாகிய பிராமணன் பாபங்களினின்று நீங்கிச் சிவசாயுச்சியமடைவான். அரசனே! இவ்வாறிருந்து சிவபெருமானது வேதசாரசகச்சிரநாமத்தையும் செபிக்குதி. அதனுற் சர்வாபீஷ்டம் எய்தும்; அந்நாமங்களை அகோராத்திரம் இடைவிடாது உச்சரிப்பாயானல் உனக்கு மகாபாசுபதாஸ்திரம் கிடைக்கும் என்னும் அவாந்தரப் பயனையும் அகத்தியர் இராமருக்கு உபதேசித்தார்" எனப் பதுமபுராணத்துச் சிவகீதை மூன்றும் அத்தியாயம் கூறுகின்றது. ஆண்டுக் காண்க.

167. கிருஷ்ணர் உபமன்னியுபால் தீக்ஷை பெற்றமை எங்கே கூறப்பட்டிருக்கின்றது?

கிருஷ்ணருக்கு உபமன்னியு தீக்ஷை செய்தமை மகாபாரதம் அநுசாசனிபருவத்துப் பதினன்காம் அத்தியாயத்தினும், வாயுசங்கிதை உத்தரபாகத்து இரண்டாம் அத்தியாயத்தினும், ஸ்காந்தபுராண சங்கரசங்கிதை உபதேசகாண்டத்து எண்பதாம் அத்தியாயத்து அறுபத்துமூன்றும் அறுபத்துநான்காம் சுலோகங்களினும், கூர்மபுராண பூருவபாகத்து இருபத்தைந்தாம் அத்தியாயத்தினும், ஸ்காந்த சம்பவசிதம்பரமான்மியத்து இருபத்துநான்காம் அத்தியாயத்து முப்பத்துநான்காம் முப்பத்தைந்தாம் சுலோகங்களினும் கூறப்பட்டிருக்கின்றது. மேலும், சுவேதாசுவதரோபநிடதத்திற் கூறப்பட்ட மகா பாசுபதோத்தமராகிய சுவேதாசுவதரர்

சுசீலராஜாவுக்குத் தீக்ஷைசெய்தமை கூர்மபுராண பூருவபாகத்துப் பதினான்காம் அத்தியாயத்தினும் சௌரபுராணத்து இருபத்தேழாம் அத்தியாயத்தினும், பிரபாகரன் உபதேசிக்கப்பட்டமை ஸ்காந்தபுராண சனற்குமார சங்கிதை பன்னிரண்டாம் பதின்மூன்றாம் அத்தியாயங்களினும் கூறப்பட்டுள்ளன.

168. *ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் யாரை வழிபட்டுச் சீடராய் ஒழுகிச் சைவ பாஷ்ய மியற்றினர்?*

ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் சிவாம்சாவதார சுவேதாசாரியரை வழிபட்டுச் சீடராய் ஒழுகிப் பாஷ்யமியற்றினர். இவ்வுண்மைக்கு

நமஶ்ஶ்வேதாபிதாநாய நாநாரூபவிதாயிநே।
ஶைவ்யஸ்வதந்த்ரவே ஸர்வாண ப்ரபவே நம:॥

எனவும்,

ஶ்வேதாசார்யவச:ஸம்ஸர்க்கபூஷார்த்ரோதிதாத்மநா।
க்ருதமேதந்மயா பாஷ்யம் ஶைவம் ஸக்திஸ்ரோதஸ:॥

எனவும் சிவாத்துவித சைவ பாடியத்து முதற்கண்ணும், இறுதிக்கண்ணும் அவர் சுவேதாசாரியரைத் துதித்த இரு சுலோகங்களே சான்றாம்.

169. *சுவேதாசாரியர் யாவர்?*

இவர் இருபத்தெட்டு வைதிக பாசுபதயோகாசாரியரினும் தலையாயவர்.

170. *சுவேதர் முதலிய இருபத்தெட்டு யோகாசாரியர்கள் யாவர்?*

ஶ்வேத: ஸுதாரோ மதந: ஸுஹோத்ர: கங்கஶ்சைவ ச।
லௌகாக்ஷிஶ்ச மஹாயோகீ ஜைகீஷவ்யஸ்ததைவ ச।
ததிவாஹஶ்ச ருஷபோ முநிருத்ரோத்ரிரேவ ச।
ஸுபாலகோ கௌதமஶ்ச ததா வேதஶிரா முநி:।
கோகர்ணஶ்ச குஹாவாஸீ ஶிகண்டீ சாபர: ஸ்ம்ருத:।
ஜடாமாலீ சாட்டஹாஸோ தாருகோ லாங்கலீ ததா।
மஹாகாலஶ்ச ஶூலீ ச தண்டீ முண்டீ ததைவ ச।
ஸஹிஷ்ணு: ஸோமஶர்மா ச நகுலீஶ்வர ஏவ ச।
அஷ்டாவிம்ஶதிஸங்க்யாதா யோகாசார்யா யுகக்ரமாத்॥

"சுவேதர், சுதாரர், மதனர், சுகோத்திரர், கங்கர், லௌகாக்ஷி, மகாமாயர், ஜைகிஷவ்யர், ததிவாகர், இருஷபர், உருத்திரர், அத்திரி, சுபாலகர், கௌதமர், வேதசிரர், கோகர்ணர், குகாவாசி, சிகண்டி, ஜடாமாலி, அட்டகாசர், தாருகர், லாங்கலி, மகாகாலர், சூலி, தண்டிமுண்டி, சகிஷ்ணு, சோம

சர்மா, நகுலீசுவரர் என்போர் இருபத்தெட்டு யோகாசாரியர்கள்" (சை. வா. Pt. II. 10: 2—6) என்க.

171. இருபத்தெட்டு யோகாசாரியர்கள் பேர் யாவர்?

𑌦𑍁𑌨𑍍𑌦𑍁𑌭𑌿 𑌶𑍍𑌶𑌤𑌰𑍂𑌪𑌶𑍍𑌚 𑌋𑌚𑍀𑌕𑌃 𑌕𑍇𑌤𑍁𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌵𑌿𑌶𑍋𑌕𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍇𑌶𑌶𑍍𑌚 𑌵𑌿𑌶𑌾𑌖𑌶𑍍𑌶𑌾𑌪𑌨𑌾𑌶𑌨𑌃।
𑌸𑍁𑌮𑍁𑌖𑍋 𑌦𑍁𑌰𑍍𑌮𑍁𑌖𑌶𑍍𑌚𑍈𑌵 𑌦𑍁𑌰𑍍𑌦𑌮𑍋 𑌦𑍁𑌰𑌤𑌿𑌕𑍍𑌰𑌮𑌃।
𑌸𑌨𑌕 𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌶𑍍𑌚𑍈𑌵 𑌤𑌥𑍈𑌵𑌚 𑌸𑌨𑌨𑍍𑌦𑌨𑌃।
𑌦𑌾𑌲𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌯𑍋𑌗𑍀 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌮𑌹𑍌𑌜𑌸𑌃।
𑌸𑍁𑌧𑌾𑌮𑌾 𑌵𑌿𑌰𑌜𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌶𑌙𑍍𑌖𑌪𑌾𑌦𑍍𑌰𑌜 𑌏𑌵𑌚।
𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌸𑍍𑌤𑌥𑌾 𑌮𑍇𑌘𑍋 𑌘𑌨𑌵𑌾𑌹𑌃 𑌸𑍁𑌵𑌾𑌹𑌨𑌃।
𑌕𑌪𑌿𑌲𑌶𑍍𑌚𑌾 𑌸𑍁𑌰𑌿𑌶𑍍𑌚𑍈𑌵 𑌵𑍋𑌢𑍁𑌃 𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌖𑍋 𑌮𑍁𑌨𑌿𑌃।
𑌪𑌰𑌾𑌶𑌰𑌶𑍍𑌚 𑌗𑌰𑍍𑌗𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑌶𑍍𑌚𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌾𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌬𑌲𑌬𑌨𑍍𑌧𑍁𑌰𑍍𑌨𑌿𑌰𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 𑌕𑍇𑌤𑍁𑌶𑍃𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌪𑍋𑌧𑌨𑌃।
𑌲𑌮𑍍𑌬𑍋𑌦𑌰𑌶𑍍𑌚 𑌲𑌮𑍍𑌬𑌶𑍍𑌚 𑌵𑌿𑌕𑍍𑌰𑍋𑌶𑍋𑌲𑌮𑍍𑌬𑌕 𑌶𑍍𑌶𑍁𑌕𑌃।
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞 𑌸𑍍𑌸𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌶𑍍𑌚 𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌸𑌾𑌧𑍍𑌯𑌸𑍍𑌤𑌥𑍈𑌵𑌚।
𑌸𑍁𑌧𑌾𑌮𑌾𑌕𑌾𑌶𑍍𑌯𑌪𑌶𑍍𑌚𑌾𑌥 𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑍋𑌵𑌿𑌰𑌜𑌾𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌅𑌤𑍍𑌰𑌿𑌰𑍁𑌗𑍍𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌚𑍈𑌵 𑌶𑍍𑌰𑌵𑌣𑍋𑌽𑌥 𑌸𑍁𑌵𑍇𑌦𑍍𑌯𑌕𑌃।
𑌕𑍁𑌣𑌿𑌶𑍍𑌚 𑌕𑍁𑌣𑌿𑌬𑌾𑌹𑍁𑌶𑍍𑌚 𑌕𑍁𑌶𑌰𑍀𑌰𑌃 𑌕𑍁𑌨𑍇𑌤𑍍𑌰𑌕𑌃।
𑌕𑌾𑌶𑍍𑌯𑌪𑍋 𑌹𑍍𑌯𑍁𑌶𑌨𑌾𑌶𑍍𑌚𑍈𑌵 𑌚𑍍𑌯𑌵𑌨𑍋𑌽𑌥 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃।
𑌉𑌤𑌥𑍍𑌯𑍋 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌕𑌾𑌯𑍋 𑌮𑌹𑌾𑌨𑌿𑌲𑌃।
𑌵𑌾𑌜𑌶𑍍𑌰𑌵𑌾 𑌸𑍁𑌕𑍇𑌶𑌶𑍍𑌚 𑌶𑍍𑌯𑌾𑌵𑌾𑌶𑍍𑌵𑌃 𑌸𑍁𑌪𑌥𑍀𑌶𑍍𑌵𑌰𑌃।
𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌨𑌾𑌭𑌃 𑌕𑍌𑌶𑌲𑍍𑌯𑍋 𑌽𑌕𑌾𑌕𑍍𑌷𑌿𑌃 𑌕𑍁𑌥𑍁𑌮𑌿𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌸𑍁𑌮𑌨𑍍𑌤𑍁𑌰𑍍𑌬𑌰𑍍𑌬𑌰𑍀𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌬𑌨𑍍𑌧𑌃 𑌕𑍁𑌶𑌿𑌕𑌨𑍍𑌧𑌰𑌃।
𑌪𑍍𑌲𑌕𑍍𑌷𑍋𑌦𑌾𑌰𑍍𑌭𑌾𑌯𑌣𑌿𑌶𑍍𑌚𑍈𑌵 𑌕𑍇𑌤𑍁𑌮𑌾𑌨𑍍 𑌗𑍌𑌤𑌮𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌭𑌲𑍍𑌲𑌾𑌵𑍀 𑌮𑌧𑍁𑌪𑌿𑌙𑍍𑌗𑌶𑍍𑌚 𑌶𑍍𑌵𑍇𑌤𑌕𑍇𑌤𑍁 𑌸𑍍𑌤𑌪𑍋𑌧𑌨𑌃।
𑌉𑌶𑌿𑌜𑍋 𑌬𑍃𑌹𑌦𑍁𑌕𑍍𑌥𑌶𑍍𑌚 𑌦𑍇𑌵𑌲𑌃 𑌕𑌵𑌿𑌰𑍇𑌵𑌚।
𑌶𑌾𑌲𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑍋 𑌽𑌗𑍍𑌨𑌿𑌵𑍇𑌶𑍍𑌯𑌶𑍍𑌚 𑌯𑍁𑌵𑌨𑌾𑌶𑍍𑌵 𑌶𑌰𑌦𑍍𑌵𑌸𑍁𑌃।
𑌕𑍁𑌣𑍍𑌡𑌮𑌃 𑌕𑍁𑌣𑍍𑌡𑌕𑌰𑍍𑌣𑌶𑍍𑌚 𑌕𑍁𑌮𑍍𑌭𑌶𑍍𑌚𑍈𑌵 𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌕𑌃।
𑌉𑌲𑍂𑌕𑍋𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑌶𑍍𑌚𑍈𑌵 𑌶𑌮𑍍𑌬𑍂𑌕𑍋𑌹𑍍𑌯𑌾𑌶𑍍𑌵𑌲𑌾𑌯𑌨𑌃।
𑌅𑌕𑍍𑌷𑌪𑌾𑌦𑌃 𑌕𑍁𑌮𑌾𑌰𑌶𑍍𑌚 𑌉𑌲𑍂𑌕𑍋𑌵𑌸𑍁𑌵𑌾𑌹𑌨𑌃।
𑌕𑍁𑌣𑌿𑌕𑌶𑍍𑌚𑍈𑌵 𑌗𑌰𑍍𑌗𑌶𑍍𑌚 𑌮𑌿𑌤𑍍𑌰𑌕𑍋 𑌰𑍁𑌰𑍁𑌰𑍇𑌵𑌚॥

"துந்துபி, சதரூபர், இருசீகர், கேதுமான், விசோகர், விகேசர், விசாகர், சாபநாசநர், சுமுகர், துர்முகர், துர்த்தமர், துரதிக்கிரமர், சனகர், சனா

